திருச்சிற்றம்பலம்

# ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை

கயிலை மாமுனிவர் காசிவாசி திருவள்திரு முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளியிடப் பெற்றது


தஞ்சைப் பெருவுடையார்

பதிப்பாசிரியர்

...னவர் கோ.ப. நல்லசிவம்



ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாடு

வாரணாசி 2007

1/4

உ

திருச்சிற்றம்பலம்

# ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை

## தொகுதி ஒன்று

கயிலைமாமுனிவர் காசிவாசி திருவள்திரு
முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்
அருளாணையின்வண்ணம் வெளியிடப் பெற்றது.




1/4

பதிப்பாசிரியர்
முனைவர் கோ.ப. நல்லசிவம்


ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாடு
குமாரசாமித் திருமடம் - வாரணாசி
2007

- ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை
  தொகுதி ஒன்று!

- திருப்பனந்தாள் காசித்திருமடமும்,
  பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக்கட்டளையும் இணைந்து நடத்திய ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாட்டின் வெளியீடு

- திருவள்ளுவராண்டு 2038, ஐப்பசி 12, 13, 14
  (29, 30, 31.10.2007)

- முதற்பதிப்பு : 2007 அக்டோபர்

- பக்கங்கள் : 56+512 = 568

- பதிப்பாசிரியர்
  **முனைவர் கோ.ப. நல்லசிவம்,**
  926, மணிகர்ணீசர் கோயில் தெரு,
  கீழராச வீதி,
  தஞ்சாவூர் - 613 001.

- விலை : உருபாய் 350/-

- நூல் கிடைக்குமிடம் : மேலாளர் அவர்கள்,
  காசித்திருமடம்,
  திருப்பனந்தாள் - 612 504,
  தஞ்சை மாவட்டம்.

- Laser Typeset & Printing at : Sabanayagam Printers, 176, East Car Street,
  Chidambaram - 608 001. ✆ : 223040, 223020



கயிலை மாமுனிவர் காசிவாசி

திருவளர்திரு முத்துக்குமார சுவாமித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

# ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை
## ஆய்வு மலர்கள்
## (தொகுதி ஒன்று)

# பதிப்புரை

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியாமாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு கண்டுஉள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை என்னும் இந்நூல் வாரணாசி, குமாரசாமித் திருமடத்தில் நடைபெறும் ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாநாட்டில் ஆய்வு செய்யப்பெறும் ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பாகும். இது இரண்டு தொகுதிகளாக, சுமார் 1500 பக்கங்களுக்கு மேல் தமிழ், இந்தி, ஆங்கிலம் என மூன்று மொழி களாலான கட்டுரைகளைக் கொண்டு அமைந்ததாகும். எனினும் ஒன்பதாம் திருமுறையில் இடம்பெறும் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு எனும் நூல்களும் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரமும் தமிழ்மொழியில் அமைந்திருப்பதாலும், ஆய்வாளர்களுள் பெரும்பாலோர் தமிழகத்தைச் சார்ந்தவராதலாலும் தமிழ்க்கட்டுரைகளே மிகுதியாக இடம் பெற்றிருக்கும் இயல்பைக் கொண்டது. இக்கட்டுரைகள் அனைத்திந்திய ஆய்வு மாநாட்டின் வெளிப்பாடாகத் திகழ்வன.

ஒன்பதாம் திருமுறைக்காகவும், பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத் திற்காகவும் நிகழும் இவ்இலக்கிய ஆய்வு மாநாடு அனைத்திந்திய மாநாடாக அமைந்திருப்பது நம் தமிழ்மொழிக்கும், தமிழருக்கும் பெருமை சேர்ப்பதாகும். பேராளரும் பார்வையாளருமாக 400 பேர்கள் கலந்து கொள்ளும் இப்பெரிய மாநாட்டைத் திருப்பனந்தாள் காசித்திருமடமும், தஞ்சாவூர், பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக்கட்டளையும் இணைந்து ஏற்பாடு செய்துள்ளன. பெரும் ஆய்வறிஞர்களாலும் இளைய தலைமுறையினரான ஆய்வு மாணவர்களாலும் நிகழ்த்தப்பெறும் இக் கருத்தரங்கு, மாநாடு திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம் ஆகிய நூல்களை இன்றைய தலைமுறையினிடையே கொண்டு செல்லவும், நாளைய தலைமுறையினர்க்கு வழிகாட்டவும் துணைசெய்யும் என்னும் நம்பிக்கையுடன் இவ்ஆய்வு மாலையை நூலாக வெளியிடுவதில் நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம்.

வாரணாசியாம் வடபுலத்தில், கங்கைக்கரையில் தமிழே பாடி, தமிழாகவே வாழ்ந்த நம் குமரகுருபர சுவாமிகள் நிறுவிய குமாரசாமித் திருமடத்தில் வரலாறாகத் திகழும் இம்மாநாடு எண்ணி எண்ணிப் பெருமை கொள்வதற்குரியதாம்.

இச்சீர்மிகு விழாவில் ஆய்வு செய்யப்பெறும் ஆய்வுரைகளை முன்கூட்டியே நூலாக வெளியிடுவதில் நாங்கள் பெருமையும் பூரிப்பும் கொள்கிறோம்.

**திருமுறை மாநாடுகள்**

திருப்பனந்தாள் காசித்திருமடமும், தமிழ்ப் பல்கலைக்கழகமும், இணைந்து வாரணாசியில் 1999-ஆம் ஆண்டு குமரகுருபரர் மாநாட்டைப் பெரிய அளவில் நடத்தின. அம்மாநாட்டில் பேராளரும், பார்வையாளருமாக 400 பேர் கலந்துகொண்டனர். மூன்று பெருந்தொகுதிகள் ஆய்வுமாலைகளாக வெளியிடப்பெற்றன. அந்த மாநாடு ஆய்வாளரிடையே சமய இலக்கியத் தாகம் இருப்பதையும் யாத்திரைத் தேவையின் உணர்வு இருப்பதையும் வெளிப்படுத்தியது. ஆதலின் சமய இலக்கியங்களுக்கான மாநாடுகளைத் தொடர்ந்து காசி மாநகரிலேயே நடத்தலாம் என்ற எண்ணத்தை வித்திட்டது. அவ்எண்ணத்தைக் கயிலைமாமுனிவர் காசிவாசி திருவளர்திரு அதிபர் சுவாமிகளிடம் வெளிப்படுத்தியபோது மிக்க ஆர்வத்துடன் வரவேற்றுத் திருமுறை மாநாடுகளையே தொடர்ந்து நடத்தலாமே என அருள்பாலித்தார்கள். அதற்கான திட்டங்களையும் வகுத்தளித்தார்கள்.

அதிபர் சுவாமிகளின் அவ் அருளாணையின் வண்ணம் 2001-ஆம் ஆண்டு முதல் திருமுறை மாநாடுகளைத் தொடங்கினோம். நாயன்மார் வரலாறு பேசும் சேக்கிழார் சுவாமிகளை முதலில் நினைவுகூரும் பொருட்டு, பெரியபுராண ஆய்வு மாநாட்டை 2001-ஆம் ஆண்டில் நம் அதிபர் சுவாமிகள் மிகச் சிறப்பாக நடத்திக் காட்டினார்கள். சென்ற ஆண்டுகளில், 2002-ல் திருஞானசம்பந்தர் இலக்கிய ஆய்வு மாநாட்டையும், 2003-ல் திருநாவுக்கரசர் இலக்கிய ஆய்வு மாநாட்டையும் மிகச் சிறப்பாக நடத்தினார்கள். காசித் திருமடத்தில் திருப்பணிகள் நடைபெற்ற காரணத்தால் ஓராண்டு (2004) இடைவெளிக்குப்பின் சென்ற 2005-ஆம் ஆண்டு சுந்தரர் இலக்கிய ஆய்வு மாநாடு நடைபெற்றது. சென்ற 2005 மே திங்களில் ரிஷிகேசத்தில் பக்தி மாநாட்டை தயானந்த சரஸ்வதி ஆசிரமமும், காசித் திருமடமும், களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையும் இணைந்து நடத்தியமை ஈண்டு குறிப்பிடத்தக்கது. சென்ற 2006-ஆம் ஆண்டு மாணிக்கவாசகர் இலக்கிய ஆய்வு மாநாடு நடைபெற்றது. இம்மாநாடுகளின் நோக்கம் சமய இலக்கியங்களைப் பயின்று சுவைப்பதும், யாத்திரை மேற்கொண்டு, உலக அனுபவமும் மனித நேயமும் பெறுவதும்தான் என்பதை மீண்டும் நினைவுபடுத்துவதில் நாங்கள் நிறைவடைகிறோம்.

**ஆய்வு மாலைகள்**

நூலாக்கங்கள் வழி தமிழ் வளர்த்த முந்தைய நூற்றாண்டுகளில் அதிகம் பயிலாத கருத்தரங்கங்கள் இந்நூற்றாண்டிலும் இனி எதிர்வரும் காலங்களிலும் தமிழ் மொழியை வளப்படுத்தும் என நம்புவதற்குரிய களங்கள் காணப்படுகின்றன. தமிழியல் ஆய்வில் அறிஞர் பெருமக்களின் தனி ஆய்வுகளும் திறனாய்வுகளும் ஒருபுறம் இருக்க, ஆய்வறிஞர்கள், மாணவர்கள் அடங்கிய ஒருமித்த மாநாடுகளும் கருத்தரங்குகளும் நாளுக்குநாள் பெருகி வருவதை நாம் காணலாம். இவ்வகையில் கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் முன்பாகத் தோன்றிய அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் கருத்தரங்குகளும், மாநாடு களும் சிறந்த முன்னோடிகளாகத் திகழ்கின்றன எனலாம். அக்கருத்தரங்கு களில் படிக்கப்பெற்ற, ஆய்வு செய்யப்பெற்ற கட்டுரைகள் முன்னதாகவே அச்சிடப்பெற்று, ஆய்வுக்கோவைகளாக வெளிவந்தன. அவை பலரை எழுதத் தூண்டின. பலரைத் திறனாய்வுக்குள் நுழைத்தன. பலரை ஒப்பீட்டிலும், மீளாய்விலும் புகுத்தின. மேலும் அம்மாநாடுகள் சில எழுத்தாளர்களையும், திறனாய்வாளர்களையும் உருவாக்கின. மொத்தத்தில் அவை தமிழை வளப்படுத்தியதுடன் தமிழ் ஆய்வை மெருகூட்டத் துணை செய்தன எனப் பெருமை கொள்ளலாம். அந்த வகையிலேயே ஆய்வாளர்களையும் ஆர்வலர்களையும் உருவாக்கும் எண்ணத்துடன் உரிய களங்களை அமைத்து வழங்கத்தக்க மாநாடுகளை நடத்த பல்வேறு அமைப்புகளும் முயன்றன. தனிநூலுக்காகவும், தனி ஒரு புலவரின் நூல்களுக்காகவும் காலங்களுக்காகவும், இலக்கிய வகைகளுக்காகவும் என வகைவகையான மாநாடுகள். இம்மாநாடுகளில் எல்லாம் முன்னதாகவே ஆய்வுரைகளைத் தொகுத்து அச்சிட்டு மாநாட்டு விழாவிலேயே வெளியிட்டு மகிழும் நற்செயல்கள் நடந்து வருகின்றன. இம்முறை குறைந்தபட்சம் நம் ஆய்வுரைகளை எழுத்தில் அச்சில் பதிவு செய்த பெருமையைத் தருகின்றமையைக் காணலாம்.

இந்த இனிய முறையில் வெளிவருவதே ஒன்பதாம் திருமுறை, திருமந்திர ஆய்வு மாலை. எக்காலத்துக்கும் பொருந்தும், இலக்கியச் செல்வங்களாக நம் சமய இலக்கியங்கள் திகழ்வதை இந்த ஆய்வு மாலையும் உறுதி செய்கிறது. தமிழரின் அருஞ்செல்வமாகிய பக்தி இலக்கியங்கள் சமுதாய உணர்வுகளோடு எழுந்தவை என்பதை விளக்கு வனவாகவே இவ் ஆய்வு மாலையின் கட்டுரைகளும் காணப்படுதல் சிறப்புக்குரிய செய்தியாம்.

**பதிப்பு முறை**

ஏற்கெனவே வெளிவந்த பெரியபுராண ஆய்வுமாலை, திருஞான சம்பந்தர் ஆய்வுமாலை, திருநாவுக்கரசர் ஆய்வுமாலை, சுந்தரர் ஆய்வு மாலை, மாணிக்கவாசகர் ஆய்வுமாலை ஆகியவற்றில் பின்பற்றப் பெற்ற பதிப்பு முறையே இத்தொகுதி களிலும் காணப்பெறும். கட்டுரைகளின்

கருத்துகளுக்குக் கட்டுரை ஆசிரியர்களே பொறுப்பாவர். சிற்சில மாற்றங்களும், தொடர், சொல், இலக்கணப் பிழைகள், மேற்கோள் பிழைகள் மட்டுமே திருத்தப் பெற்றன. தலைப்புகளில் சிறு மாற்றங்கள் செய்யப் பெற்று ஒருவரியில் அவை இடம்பெறுமாறு திருத்தப் பெற்றன. கூடுமானவரை கட்டுரைகளை ஆசிரியர் அகர வரிசையிலே அச்சிட்டதுடன், முதல் தொகுதியின் இறுதியில் கட்டுரையாளர் முகவரியை அகர வரிசையில் அமைத்துள்ளோம். இக்கட்டுரைகள் பொருள் வாரியாகவோ, அமர்வு வாரியாகவோ, பிரிக்க முடியாத சூழலில் அச்சுப்பணி அமைந்தது.

கட்டுரையாசிரியர்களின் கருத்துகள் மேலாய்வுக்குரியன. தடை விடைகளுடன் விவாதிக்கப் பெற்று முழுமை பெற வேண்டியன. என்றாலும் திறனாய்வாளர்க்கு இது ஒரு அடிக்கல்லாகப் பயன்தரும் எனும் நோக்கில் வந்தவண்ணமே பதிவு செய்யப்பெற்றன. இவை எதிர்கால ஆய்வுக்கும் வழிவகுக்கும் நிலையின எனலாம்.

இம்மாநாடு தொடர்பாக 1000 தமிழ் ஆர்வலர், ஆய்வாளர், மாணவர்களுடன் தொடர்பு கொண்டோம். பேராளரும் பார்வையாளருமாக 500 பேர் பதிவு செய்தனர். அவர்களுள் 400 பேர் மட்டுமே இதில் பங்கு கொள்கின்றனர். நாங்கள் அனுப்பிய அமர்வுத் தலைப்புகளுள் பலரும் பொதுவான த்லைப்புகளையே மீண்டும் மீண்டும் எழுதியுள்ளனர். சில தலைப்புகளைப் பற்றி யாருமே சிந்திக்கவில்லை. எழுதவில்லை. என்றாலும் ஒன்பதாம் திருமுறை, திருமந்திரம் ஆகிய நூல்களை இவ்வளவு பேர் பயின்றார்களே, எழுதினார்களே என்பதில் எங்களுக்கு அடிப்படை மகிழ்ச்சி உண்டு.

இத்தொகுதிகள் முற்றிலுமாக ஒன்பதாம் திருமுறை, திருமந்திரம் ஆகியவற்றைத் தெளிவாகக் கூறவில்லை என்ற குறை இருந்தபோதும் மாநாட்டின் அடிப்படை நோக்கமான சமய இலக்கியங்களைப் படித்தல், யாத்திரை செய்தல் ஆகிய வற்றில் வெற்றி பெற்றுள்ளன என்றால் அது மிகையாகாது. பக்திநெறி தொண்டு நெறியுடன் இணையும்போது முழு வெற்றி பெறுகிறது. தல யாத்திரை மனித நேயத்தை வளர்க்கிறது. மொழி இன வேறுபாட்டை பக்தி தகர்க்கிறது என்னும் சாரத்தை உணர்த்தியிருக் கின்றனர். அந்த வகையில் மாநாட்டின் குறிக்கோளை இம்மாலையும் பதிப்பு முறையும் நிறைவேற்றியுள்ளன என்பதில் நாங்கள் மகிழ்கிறோம்.

**சிவம் பெருக்கித் தமிழ் வளர்க்கும் காசித்திருமடம்**

வாரணாசி என அழைக்கப்பெறும் காசிமாநகரின் கங்கைக் கரையில் பிரபந்த வேந்தராம் ஆதிகுமரகுருபர சுவாமிகள் நிறுவிய தமிழ்மடம் குமாரசாமித் திருமடமாகும். இம்மடத்தின் ஞானப்பரம்பரையில் தோன்றியதே திருப்பனந்தாள் காசித்திருமடம். இம்மடத்திற்கு 'இமசேதுபரியந்தம்' என்னுமாப்போலே தென்குமரி முதல் இமாலயத்தின் திருக்கேதாரம்

வரையான தொடர்புகளுண்டு. நேபாள நாட்டிலும் ஒரு கிளைமடம் இருந்ததாகக் கூறுவர். அந்தளவில் காவிரி முதல் கங்கை வரையான மிக நீண்ட கலாச்சார, பண்பாட்டுப் பாரம்பரியம் உடைய திருமடம் காசித்திருமடமாகும்.

ஆதிகுருமுதல்வராம் குமரகுருபர சுவாமிகள் தமிழோடு சைவம் வளர்த்த தகைமையர் ஆதலின் அவர்தம் வழிவந்த ஞானபரம்பரை யினரும் இவ்விரு பணிகளுக்காக ஏராளமான அறக்கட்டளை நிறுவி திறம்பட செயற்படுத்தி வருகிறார்கள். தமிழ்க் கல்விக்கென தமிழ்க் கல்லூரியும், கலைக் கல்லூரியும் நடத்தி வருவதுடன் பல்வேறு பல்கலைக் கழகங்களில் தமிழ்மொழி பயில்வோர்க்கு ஊக்கத்தொகை, அறக்கட்டளைப் பரிசு போன்ற பல அறக்கொடைகளை இத்திருமடம் நிறுவியுள்ளது. இத்திருமடத்தின் அதிபர்களும் பிறரும் சிறந்த தமிழ்க் கல்வியாளர் களாகவும் ஓதுவா மூர்த்திகளாகவும், சிறந்த தமிழ்ப்பற்றாளர்களாகவும், சொற்பொழிவாளர்களாகவும் விளங்கிச் சைவத்தையும் தமிழையும் ஒருசேர வளர்த்து வருகின்றனர்.

**காசித்திருமடத்தின் திருமுறைப் பணிகள்**

காசித்திருமடம் மூன்று நூற்றாண்டுக்கும் மேற்பட்ட பழமையுடையது. சைவமும் தமிழும் இருகண்களெனப் புரந்து போற்றி வருவது, தமிழகத்தில் மட்டுமேயன்றி பிற மாநிலங்களிலும், அயல்நாடுகளிலும் சைவத் திருமுறைகள் பரவ வேண்டும் எனும் பேரவா கொண்டு முழுவீச்சில் செயல்பட்டு வருவது பலரும் அறிந்ததே.

சைவத்தின் வேத நூல்களாகவும், 'எழுதுமறை' என்று சமய உலகம் போற்றுவதுமாகிய திருமுறைகளையும் அவற்றை அருளிய அருளாளர் களையும் போற்றிப் புரந்திட இத்திருமடம் எடுத்துள்ள முயற்சிகளும், நிலையான செயற்பாட்டுத் திட்டங்களும் விரிக்கின் பெருகும்; மலையும் மலைக்கும். அவற்றுள் பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்போல சில பணிகளைப் பட்டியலிடல் தகுமெனக் கருதுகிறோம்.

திருமுறைகளைப் பாராயண நூல்களாக ஒரு சிலர் மட்டுமே அறிந்திருந்த நிலை மாறி, பல்லாயிரக்கணக்கானோர் வாழ்வில் அவை முதன்மை பெற்ற தெய்வீக அம்சமாக இடம்பெறச் செய்ததில் இத் திருமடத்தின் பணி பெரியது, போற்றற்குரியது.

**1. திருமுறைச் சொற்பொழிவு**

பன்னிரு திருமுறைகளில் உள்ளே அமைந்துள்ள பற்பல அற்புதங் களை அனைவரும் அறியும் வகையில் வல்லார் வாயிலாகச் சொற்பொழிவு ஆற்ற நிலையான அறக்கட்டளைகள் இம்மடத்தால் நிறுவப் பெற்றுள்ளன.

1. சிதம்பரத்தில் பெரியபுராணச் சொற்பொழிவு
2. மதுரையில் பெரியபுராணச் சொற்பொழிவு
3. சிதம்பரத்தில் திருவாசகச் சொற்பொழிவு

இவற்றுக்கான நிலை முதலீடு சுமார் ரூ. 25,000/-

**2. திருமுறை நூல் பதிப்பு நிதி**

திருந்திய வடிவில், எளிய விலையில், திருமுறை நூல்கள் சமய அன்பர்களுக்கு ஒரே இடத்தில் கிடைக்க வேண்டும் எனும் உயர் நோக்குடன் பன்னிரு திருமுறை நூல்களை வெளியிட்டு வழங்கி வருகிறது இம்மடம்.

பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி எனும் பெயரில் ரூ. 50,000/- முதலீட்டில் (1950-ஆம் ஆண்டு) அறக்கட்டளை உண்டாக்கப் பெற்றுப் பரிபாலிக்கப் பெறுகிறது. இவ்அறக்கட்டளையின்வழி தொடர்ச்சியாகத் திருமுறை நூல்கள் பல பதிப்புகளைக் கண்டு வெளிவந்து கொண்டிருக்கின்றன. **"கயிலைமாமுனிவர் தேவாரத்திரட்டு"** என்னும் நூலொன்று பாடல் பெற்ற 275 தலங்கட்கும் தலத்திற்கு ஒரு பாடலாக அமைத்து வெளியிட்டமை குறிப்பிடத்தக்கது.

**3. திருமுறைவாணர் நியமனம்**

தெய்வீகம் பொருந்திய தமிழகத்தில் உள்ள, தேவாரப் பாடல் பெற்ற திருத்தலங்களில் திருமுறைகள் விண்ணப்பம் செய்யப் பெற வேண்டும் எனும் விருப்புடன் தகுதி வாய்ந்த, பயிற்சி பெற்ற திருமுறை வாணர்களை நியமித்து, மாதந்தோறும் அவர்களுக்கு ஊதியம் வழங்க அறக்கட்டளைகள் ஏற்படுத்தப் பெற்றுள்ளன.

திருநாரையூர், சிதம்பரம், மதுரை, பழைய பாபநாசம், திருக்குற்றாலம், ஆச்ராமம், திருவண்ணாமலை, வாரணாசி, இராமேஸ்வரம், திருக்காளத்தி, கும்பகோணம், திருவெண்ணெய்நல்லூர், புதுதில்லி (ஸ்ரீ விநாயக சுப்பிரமணியசுவாமி மந்திர்), வடதிருவாலங்காடு, திருச்சாய்க்காடு, திருப்பாதிரிப்புலியூர், திருமாகறல் ஆகிய தலங்களில் தேவாரம் ஓதத் திருமுறைவாணர்கள் நியமனம் செய்யப்பெற்று, ஊதியம் வழங்கப் பெறுகிறது. இதற்கென தனித்தனியே 17 அறக்கட்டளைகளுள்ளன. இவற்றுக்கான பொருட்கொடை சுமார் 12 இலட்சம் (1972-க்கு முந்தைய மதிப்பில்) நிலைத்த வைப்பில் உள்ளது.

**4. திருமுறை இன்னிசை நிகழ்வுகள்**

ஆண்டுதோறும், சில குறிப்பிட்ட சிறப்பு விழாக்களிலும், நாட்களிலும் திருமுறைவாணர்கள் பலரை அழைத்துப் பண்ணிசைப் பதிகம் பாடச் செய்ய நிலைத்த ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. இதற்கென 9 அறக்கட்டளைகள் உள்ளன. இதற்கென சுமார் நான்கு இலட்சம் ரூபாய்

நிலைத்த வைப்பாகவும், நிலவருவாயிலிருந்து பெறும்படியும் ஒதுக்கப் பெற்றுள்ளது.

1. திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பி நினைவு நாள் (வைகாசி புனர்பூசம்)
2. மதுரையில் குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் (வைகாசி அமரபட்சம் திருதியை)
3. சுசீந்திரத்தில், மார்கழித் திருவிழா, சித்திரைத் திருவிழா நாட்கள்.
4. திருச்சியில் குமரகுருபர சுவாமிகள் நினைவாக ஆவணி மூல நாள்.
5. குடந்தையில் மகாமக விழா நாள்.
6. தில்லையில் ஆடிச்சுவாதி நாள்.
7. திருக்காளத்தியில் மகா சிவராத்திரி நாள்.
8. திருக்கொள்ளம்பூதூரில் ஐப்பசி அமாவாசைக்கு மறுநாள்
9. தஞ்சையில் ஐப்பசிச் சதய நாள்.

**5. சிவசிவ ஒலிமண்டபம்**

சிதம்பரத்தில், ஸ்ரீ நடராஜப் பெருமான் திருக்கோயிலில் நாடோறும் திருமுறை விண்ணப்பம் செய்யப்பெறச் 'சிவ சிவ ஒலி மண்டபம்' ஏற்படுத்த உரிய தொகையுடன், இராஜராஜ அபயகுலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி ஏற்படுத்தப்பட்டுள்ளது.

**6. பள்ளி, கல்லூரி மாணவர்க்குப் பரிசு**

அறிவு பெறக் கல்வி கற்கும் பள்ளி, கல்லூரி மாணவர்கள் சமய அறிவும், ஒழுக்கமும் பெற வேண்டும் எனும் கருத்துடன் பல்வேறு பட்ட ஊர்களிலுள்ள பள்ளி, கல்லூரி மாணவ, மாணவியர்க்குப் போட்டிகள் நடத்திப் பரிசு வழங்க, 11 அறக்கட்டளைகள் உண்டு. நிதி ஒதுக்கீடு : சுமார் எழுபதாயிரம்.

1. திருவாரூர், திருவையாறு, ஆடுதுறை உயர்நிலைப்பள்ளி
2. மாயூரம் உயர்நிலைப்பள்ளிகள்.
3. ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளி
4. மதுரை உயர்நிலைப்பள்ளி
5. ஸ்ரீவில்லிபுத்தூர் உயர்நிலைப்பள்ளி மாணவியர்
6. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு
7. திருச்செந்தூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்
8. தஞ்சாவூர் உயர்நிலைப்பள்ளி மாணவர்
9. மதுரை உயர்நிலைப்பள்ளி மாணவர்

10. சிதம்பரம் உயர்நிலைப்பள்ளி மாணவர்

11. திருவண்ணாமலை உயர்நிலைப்பள்ளி மாணவர்

தமிழகத்தில் மட்டுமன்றி, கர்நாடக மாநிலத்தில் உள்ள மைசூர்ப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த கல்லூரி மாணவர்களுக்குப் பரிசு வழங்க, His Highness the Maharaja of Mysore Thevaram Prize எனும் அறக்கட்டளையை ஏற்படுத்தியுள்ளது ஆக, 12 அறக்கட்டளைகளை ஏறத்தாழ 75,000/- பொருட்கொடையில் நிறுவிப் புரந்து வருகிறது.

## 7. தேவாரம் முதலிய பாடல்களைக் கல்வெட்டில் பொறித்தல்

திருக்கோயிலுக்குச் செல்வோர், இறையுணர்வுடன் வழிபடுவதோடு அருளாளர்தம் வாக்குகளையும் ஓதிப் பயன்பெற வேண்டும். அதற்கு நிலையான ஓரமைப்பு வேண்டும். அதற்கு அப்பதிகங்களைக் கல்வெட்டில் பொறித்து வைப்பதே சாலச் சிறந்தது எனக் கருதிப் பல தலத்துக் கோயில்களில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

1. திருவண்ணாமலை பராசக்தி அம்மன் சன்னதியில் திருவெம்பாவைப் பாடல்கள் (சலவைக் கல்லில்)
2. சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு, சிவபுராணம், திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள்.
3. மதுரை முதலான 35 திருப்பதிகளில் தேவாரப் பாசுரங்களைச் சலவைக்கல்லில் பொறித்தது.

மேற்குறித்த 3 பணிகளுக்கும் எழுபதினாயிரம் ரூபாய் நிதி ஒதுக்கப்பட்டது.

## 8. திருமுறை ஆசிரியர்கள் பெயரில் அன்னம்பாலிப்பு

**'அன்னம்பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்' 'அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்'** எனும் அருளாளர் வாக்குகளை உளங்கொண்டும், திருமுறை ஆசிரியர்களின் நினைவாகவும் சில பதிகளில் அன்னம்பாலிப்புச் செய்ய 6 அறக்கட்டளை ஏற்படுத்தி அதற்கு நிதியாக சுமார் மூன்று இலட்சம் ஒதுக்கப் பெற்றது.

1. வாரணாசியில் ஸ்ரீசுந்தரர் நினைவாக ஆடி மாதத்தில்
2. திருவாதவூரில் ஆனி மக நாளில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம்பாலிப்பு.
3. வாரணாசியில் ஐப்பசி மாதத்தில் திருமூலர் நினைவு அன்னம்பாலிப்பு
4. திருக்கழுக்குன்றத்தில் ஆனி மகத்தன்று ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம்பாலிப்பு
5. வாரணாசியில் ஸ்ரீதிருஞானசம்பந்த தேசிகர் நினைவு அன்னம்பாலிப்பு
6. கன்னியாகுமரி ஆசிரமத்தில் திருமுறை அன்னம்பாலிப்பு நிதி.

**9. தண்ணீர்ப் பந்தல் அறம்**

அறங்களுள் சிறந்தது தண்ணீர்ப் பந்தல் வைப்பது, அதனைச் சமய அருளாளர் தொடர்பில் வைத்துப் பெருமை செய்தது காசிமடம். 2 அறக்கட்டளைகள் சுமார் 7000/- பொருட்செலவில் நிறுவப்பட்டன.

1. தத்துவாஞ்சேரியில் ஸ்ரீ திருநாவுக்கரசர் நினைவு தண்ணீர்ப் பந்தல்
2. சுவாமிமலையில் அப்பர் தண்ணீர்ப் பந்தல் நிதி.

**10. அருளாளரின் மடங்கள் புதுப்பித்தல்**

திருப்பூந்துருத்தியில் உள்ள அப்பர் திருமடத்தைப் புதுப்பிக்க நிதிக்கொடை வழங்கப்பட்டது.

**11. அப்பர் பெயரில் நூலகம்**

அப்பரடிகள் பெயரில், திருப்பூந்துருத்தியில் நூலகம் ஏற்படுத்த நிதி வழங்கப்பட்டது.

**12. ஸ்ரீ குமரகுருபரர் இலவச தேவாரப் பாடசாலை**

பள்ளி, கல்லூரி மாணவ மாணிவியர் சமயக் கல்வியும், தேவார திருவாசகப் பயிற்சியும் பெறுதற்பொருட்டு இப்பாடசாலை திருப்பனந்தாளில் நிறுவப்பெற்றது. தற்போது 200 மாணவர்கள் திருமுறை பயின்று வருகின்றனர்.

**13. காசி குமரகுருபரர் மாநாட்டு நினைவு அறக்கட்டளை**

வாரணாசி குமாரசாமித் திருமடத்தில் 1999-ஆம் ஆண்டு குமரகுருபரர் ஆய்வு மாநாடு நடைபெற்றது. அப்போது செலவுகள் போக ரூ. 50,000/- எஞ்சியிருந்தது. இத்தொகை காசித்திருமடம் மாநாட்டுக்காக வழங்கிய ரூ. 60,000/- தொகையினால் எஞ்சியதாகும். இத்தொகை முழுவதையும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் திருமுறை நிகழ்ச்சிகளுக்காக அறக்கட்டளையாக்கப் பெற்றது.

**காசித்திருமடத்தின் பணிகள் - பட்டியல்**
**(தமிழ், சமயம், சமுதாயம்)**

1. சிவஞானசித்தியார் உபந்நியாசக் கட்டளை அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ரூ. 15,000/-
2. கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த ரூ. 11,500/-
3. திருவாங்கூர் மகாராஜா தேவாரப் பரிசு ரூ. 5,000/-
4. சேரமான் பெருமாள், தேவாரப்பரிசு, கொச்சி ரூ. 5,000/-
5. மூவர் தேவாரப் பரிசு; சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள், ஆடுதுறை ரூ. 10,000/-

6. ஸ்ரீ காசிப் பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்தப் போதகாசிரியர் நியமிக்க ரூ. 60,000/-
7. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க ரூ. 30,000/-
8a. திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவநிலைப் பெறுமானம் ரூ. 1,50,000/-
b. சேமிப்புத் தொகை ரூ. 87,000/-
9. இசைத் தமிழ்க் கல்விக்கு ஷை ரூ. 1,00,000/-
10. திருப்பனந்தாளில் கால்நடை வைத்தியசாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் நிலைப் பெறுமானம் ரூ. 20,000/-
11. ஸ்ரீ காசியில் ஸ்ரீகுமரகுருபர சுவாமகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ரூ. 10,000/-
12. இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ரூ. 10,000/-
13. திருநள்ளாற்றில் ஆவணிமூல அன்னதானம் ரூ. 3,000/-
14. ஸ்ரீ காசியில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் ரூ. 17,000/-
15. திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர் உணவுநிதி நிலப் பெறுமானம் ரூ. 1,00,000/-
16. திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலைப்பெறுமானம் ரூ. 66,000/-
17. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் ரூ. 3,300/-
18. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் ரூ. 3,300/-
19. கும்பகோணத்தில் மணிக்கூண்டு ரூ. 25,000/-
20. தஞ்சையில் காசநோய் வைத்தியசாலை ரூ. 29,500/-
21. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ரூ. 9,000/-
22. மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு ரூ. 5,000/-
23. தருமை ஸ்ரீகுருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, மாயூரம் ரூ. 5,000/-
24. சென்னை விவேகானந்தா கல்லூரியில் ராஜாஜி சைவசித்தாந்தக் கட்டளை ரூ. 10,000/-

25. ஸ்ரீகாசிப் பல்கலைக்கழகத்தில் சர் எஸ். ராதாகிருஷ்ணன் சைவ சித்தாந்தக் கட்டளை ரூ. 20,000/-
26. ஸ்ரீ குமரகுருப சுவாமிகள் நினைவுத் தேவாரப்பரிசு, ஸ்ரீவைகுண்டம் ரூ. 5,000/-
27. மதுரைத் திருமலை நாயக்கர் தேவராப் பரிசு ரூ. 10,000/-
28. ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகளுக்கு நிலைப்பெறுமானம் ரூ. 1,00,000/-
29. ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் (ஜனவரித் திங்கள் 30-ம் நாள்) ரூ. 5,000/-
30. ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீகாசி மதுரை, குடந்தை மாணவிகட்கு நிலைப்பெறுமானம் ரூ. 1,50,000/-
31. டாக்டர் சுவாமிநாத அய்யர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை ரூ. 3,500/-
32. குடந்தையில் காந்தியடிகள் பசுப்பரிசு ரூ. 1,000/-
33. காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகாரநிதி ரூ. 3,000/-
34. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை கட்டிடம் ரூ. 10,000/-
35. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக்கவசம் ரூ. 5,400/-
36. விஷ்ணுபுரத்தில் மகாத்மா காந்தி நினைவு ஹைஸ்கூல் படிப்பக நிதி ரூ. 1,000/-
37. குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு ரூ. 3,500/-
38. திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ரூ. 3,500/-
39. திருப்பனந்தாளில் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர்ப்பந்தல் தர்மம் ரூ. 3,500/-
40. ஸ்ரீவைகுண்டத்தில் படிப்பக நிதி ரூ. 3,500/-
41. சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவு நிதி ரூ. 35,000/-
42. சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை, ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் ரூ. 12,000/-
43. இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் ரூ. 3,500/-
44. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் ரூ. 24,025/-

45. பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை ரூ. 5,000/-
46. அரியநாயகிபுரத்தில் நூல் நிலையநிதி ரூ. 3,500/-
47. ஸ்ரீகாசி கேதாரீசுவரர் கோயிலில் ஸ்ரீ குமாரசாமி அன்னதானம் நவராத்திரி விஜயதசமி நாட்களில் ரூ. 5,000/-
48. ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஸ்ரீ குருஞான சம்பந்தர் நினைவுத் தேவாரப் பரிசு ரூ. 3,500/-
49. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி கோயிலில் மின்சார தீபம்போட ரூ. 7,500/-
50. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு ரூ. 5,000/-
51. திருவஞ்சைக்களத்தில் ஆடிச்சுவாதியில் சேரமான்பெருமாள் நினைவு அன்னதானம் ரூ. 7,000/-
52. 28-வது ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் நான்காண்டு உதவிநிதி ரூ. 45,000/-
53. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்திற்கு ஆறு ஆண்டு மூலதனம் ரூ. 42,000/-
54. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் திருச்செந்தூர் நான்காண்டு உதவி மூலதனம் ரூ. 25,500/-
55. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக் காகக் கட்டிடமும் நிலமும் ரூ. 15,000/-
56. மாளவியாஜி பெயரால் கல்கத்தா, டெல்லி, அலகாபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவசித்தாந்த உபந்நியாசக் கட்டளை ரூ. 5,000/-
57. ஸ்ரீசெந்திலாண்டவன் அன்னதானம் சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் (ஆவணி மூலத்தில்) நிலைப்பெறுமானம் ரூ. 60,000/-
58. திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ ரூ. 2,275/-
59. ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப் பள்ளி நிறுவ ரூ. 45,000/-
60. ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசியாத்திரை நிதி ரூ. 5,000/-
61. பனைசைக்கல்லூரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு ரூ. 5,000/-
62. (6) ஸ்ரீ காசிப் பல்கலைக்கழகத்தில் சைவசித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது ரூ. 16,000/-
63. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் மதுரை மூன்றாண்டு உதவி மூலதனம் ரூ. 21,000/-
64. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக்கிரயம் ரூ. 14,000/- ஹாஸ்டல் கட்டடம் ரூ. 15,000/- ஆக ரூ. 29,000/-

65. 28-வது ஸ்ரீ செந்திலாணடவன் அன்னதானம் - ஸ்ரீவைகுண்டம் வகையறா திருநெல்வேலி நான்காண்டு உதவி மூலதனம் ரூ. 20,000/-
66. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் - ஸ்ரீ காசி வகையறா கும்பகோணம் மூன்றாண்டு உதவி மூலதனம் ரூ. 21,000/-
67. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர் நிலைப் பள்ளிக்கு நன்கொடை ரூ. 45,000/-
68. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை கட்டிடம் உள்பட ரூ. 27,975/-
69. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர் நிலைப் பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம் ரூ. 10,000/-
70. ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை ரூ. 8,000/-
71. ஸ்ரீ காசியில் தை மாதத்தில் இந்தியக் குடியரசு தின அன்னதானம் ரூ. 10,000/-
72. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி நிலப்பெறுமானம் ரூ. 1,50,000/-
73. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலப்பெறுமானம் ரூ. 50,000/-
74. சண்டேசுவர நாயனார் நினைவு தண்ணீர்ப் பந்தல் தருமம் திருவாப்பாடி ரூ. 3,500/-
75. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி ரூ. 7,000/-
76. திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் தேவாரப் பரிசு நிதி ரூ. 5,000/-
77. சென்னையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் திருக்குறள் பதிப்பு நிதி ரூ. 35,000/-
78. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் மங்கையர்க்கரசியார் நினைவுப் பரிசு ரூ. 3,500/-
79. கும்பகோணம் தாலுகா மேலச் சூரியமுலைகண்டியன் பழவாற்றின் மீது பாலம் கட்ட ரூ. 8,390/-
80. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் நிதி ரூ. 3,500/-
81. பழுத்த தமிழ்ப் புலவர் காசியாத்திரை நிதி செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள் ரூ. 5,000/-
82. திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் சித்திரைப் பரணியில் ரூ. 7,000/-

83. திருவஞ்சைக்களத்தில் ஸ்ரீ சேரமான் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் நினைவு வாசகசாலை நிறுவ ரூ. 5,000/-

84. திருநாரையிரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி ரூ. 35,000/-

85. இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சன்மார்க்க சங்க நூல் நிலைய நிதி ரூ. 5,000/-

86. லால்குடியில் ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச் சம்பள நிதி ரூ. 15,000/-

87. அவிநாசியில் முந்நூல் அணியும் கலியாண நிதி திருப்பணந்தாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் நினைவுப் பரிசு ரூ. 5,000/-

88. குடந்தையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு ரூ. 5,000/-

89. திருப்பூந்துருத்தியல் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு - சித்திரைச் சதயத்தில் ரூ. 15,000/-

90. திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவுத் தமிழ்ப்பரிசு ரூ. 5,000/-

91. ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்தர் நினைவுப் பரிசு ஸ்ரீவைகுண்டம் ரூ. 3,500/-

92. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம், இராமேசுவரம் ரூ. 3,500/-

93. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் சென்னபுரி அன்னதான சமாஜம் சென்னை (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ரூ. 5,000/-

94. காசியில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு அன்னதானம் (ஆனி மகத்தில்) ரூ. 5,000/-

95. திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ரூ. 5,000/-

96. திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ தாயுமானவ சுவாமிகள் நினைவுப் பரிசு நிதி ரூ. 5,000/-

97. திருநாரையூரில் ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ ரூ. 7,000/-

98. திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதி நெறி விளக்கப்பரிசு ரூ. 5,000/-

99. தஞ்சை, கலைக்கூடத்திற்கு நன்கொடை ரூ. 5,000/-

100. மணிக்குடியில் கடலூர்க்கலயர் புனற்பந்தர் நிதி ரூ. 3,500/-

101. காசியில் ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞானசம்பந்த சுவாமிகள் நினைவு மாசி மாத அன்னதானம் ரூ. 5,000/-
102. திருவாங்கூர் பல்கலைக்கழகத்தில் திருவள்ளுவர் நினைவுப் பரிசு ரூ. 5,000/-
103. ஸ்ரீகாசியில் பங்குனி மாதத்தில் கமல ஞானப் பிரகாச நினைவு அன்னம் பாலிப்பு ரூ. 5,000/-
104. திருச்செந்தூரில் ஐக்கிய வேளாள சங்கப் படிப்பக நிதி ரூ. 5,000/-
105. காசியில் சித்திரை மாதத்தில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ரூ. 7,000/-
106. ஆடுதுறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி நிதி ரூ. 70,000/-
107. செந்திலாண்டவன் திருவருள் பாலிப்பு நிதி நிலப்பெறுமானம் ரூ. 50,000/-
108. திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவரபூஜை நிதி ரூ. 12,000/-
109. ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு - திருச்செந்தூர், ஸ்ரீ வைகுண்டம் உயர்நிலைப் பள்ளிகளில் ரூ. 7,000/-
110. ஸ்ரீ காசியில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு (கார்த்திகை மாதத்தில்) ரூ. 7,000/-
111. சென்னைக் கல்லூரிகளில் ஸ்ரீகுருஞானசம்பந்த சுவாமிகள் நினைவு சிவபோகசாரம் பரிசு நிதி ரூ. 5,000/-
112. தஞ்சையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு சேமவைப்பு ரூ. 5,000/-
113. மதுரையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு சேமவைப்பு ரூ. 5,000/-
114. திருநாவுக்கரசர் தண்ணீர்ப்பந்தல் தருமநிதி, தத்துவாஞ்சேரி ரூ. 3,500/-
115. காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு - மாசி மிருகசீருஷம் ரூ. 7,000/-
116. திருக்காளத்தியில் கண்ணப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ரூ. 5,000/-
117. ஸ்ரீ காசியில் சுந்தரர் நினைவு ஆடி மாத அன்னம் பாலிப்பு சேம வைப்பு ரூ. 7,000/-
118. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சகலகலாவல்லி மாலைப்பரிசு - அரசினர் பெண்கள் உயர்நிலைப் பள்ளி மாயூரம் ரூ. 1,000/-
119. சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ரூ. 5,000/-

120. வெள்ளியம்பலவாண முனிவர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு - திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் ரூ. 3,500/-
121. காசியில் ஜாபள்ளி ஜமீன்தார் அன்னம் பாலிப்பு சேமவைப்பு ரூ. 6,000/-
122. மதுரையில் கமலை வெள்ளியம்பலவாணர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு ரூ. 5,000/-
123. திருவாதவூரில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5,000/-
124. சீகாழியில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவுப்பால் நிதி ரூ. 3,500/-
125. திருவண்ணாமலையில் ஸ்ரீ மாணிக்கவர்சக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ரூ. 5,000/-
126. கல்கத்தா சர்வகலாசாலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவ்ாமிகள் தமிழ் பரிசு நிதி ரூ. 3,500/-
127. தில்லையில் பல்லாண்டு விளக்கு நிதி (கட்டிடம்) ரூ. 5,000/-
128. ஸ்ரீகாசியில் அரிமர்த்தன பாண்டியன் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு ரூ. 7,000/-
129. ஸ்ரீ காசியில் திருமூலர் நினைவு ஐப்பசித் திங்கள் அன்னம் பாலிப்பு ரூ. 7,000/-
130. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ கமல வெள்ளியம்பலவாண முனிவர் முதுமொழிமேல் வைப்புப் பரிசு சேமவைப்பு ரூ. 5,000/-
131. திருப்பனந்தாள் ஸ்ரீஅருணசடேசுவரர் கொள்ளிடத் தீர்த்த விழா நிதி (கட்டிடம்) ரூ. 12,000/-
132. இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ பொம்மராஜு ஸ்ரீ மகாராஜுலிங்காரு நினைவு அன்னதானம் ரூ. 5,000/-
133. கும்பகோணத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ வெங்கடப்பெருமாள் ராஜுலிங்காரு நினைவு அன்னதானம் (மாசி மகத்தில்) ரூ. 3,500/-
134. திருவண்ணாமலை (பராசக்தியம்மன் சந்நிதியில்) திருவெம்பாவை சலவைக்கல் பதிப்பு ரூ. 2,500/-
135. சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு சிவபுராணம் சலவைக்கல் பதிப்பு, திருவெம்பாவை எழுத்து, சேர்ச்சீலைகள், தேர்க்கொட்டகை, ஒலி பெருக்கி வகையறா ரூ. 14,500/-
136. (கும்பகோணம்) திருப்புறம்பயம் சாட்சிநாத ஸ்வாமி தேவஸ்தானம் திருப்பணி, மின்விளக்கு, தேர்ச்சீலை வகையறா ரூ. 7,700/-
137. சுவாமிமலை, திருச்செந்தூர், மதுரை, திருத்தணிகை, மைலாப்பூர், திருவண்ணாமலை, திருநெல்வேலி, கச்சியேகம்பம், கச்சிக்குமர கோட்டம், திருப்பனந்தாள் அருணசடேசுவரர் தேவஸ்தானம்,

கும்பகோணம், திருப்பரங்குன்றம், திருவேட்டீசுவரன் பேட்டை, தென்காசி, திருவொற்றியூர், திருக்கழுக்குன்றம், வைத்தீஸ்வரன் கோயில், சீகாழி, திருக்கடவூர், திருவையாறு, தருமபுரம், திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருவாதவூர், விருத்தாசலம் ஆகிய தலங்களில் சிவசிவ ஒளிவளர் விளக்கு அமைக்க ரூ. 10,000/-

138. தில்லையில் (சிதம்பரத்தில்) ராஜராஜ அபயகுலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி (கட்டிடங்கள்) ரூ. 16,000/-

139. திருப்பனந்தாளில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபர சுவாமிகள் மகேசுவர பூசை நிதி (வைகாசி அமரபக்ஷம் திருதியை) நிலப் பெறுமானம் ரூ. 1,00,000/-

140. காஞ்சிபுரத்தில் ஸ்கந்த ஷஷ்டி விழாவில் கந்தபுராண பிரசங்க நிதி ரூ. 3,500/-

141. திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூஜை நிதி நிலப் பெறுமானம் ரூ. 2,00,000/-

142. காசியில் காளத்தி ராஜா நினைவு காளஹஸ்தி பதீச்சுர பூசை நிதி ரூ. 5,000/-

143. நாகர்கோவில் ஸ்ரீ தாணுமாலயப்பெருமான் நூல்நிலையப் படிப்பக நிதி ரூ. 3,500/-

144. காசியில் ஞானசம்பந்தர் நினைவு வைகாசித் திங்கள் அன்னம்பாலிப்பு ரூ. 7,000/-

145. திருவாரூரில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பலவாண முனிவர் முதுமாழிமேல் வைப்புப் பரிசு நிதி ரூ. 3,500/-

146. திருப்பனந்தாளில் ஸ்ரீ செந்திலாண்டவன் அருளிப்பாடு நிதி நிலப்பெறுமானம் ரூ. 2,00,000/-

147. திருவிடை மருதூரில் தைப்பூச அன்னம் பாலிப்பு ரூ. 5,000/-

148. தில்லையில் பெரிய புராணப் பிரசங்க நிதி ரூ. 7,000/-

149. ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு (ஆனி மாதத்தில்) ரூ. 7,000/-

150. இராமேஸ்வரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு ரூ. 3,500/-

151. மதுரையில் திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி ரூ. 7,000/-

152. ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு (புரட்டாசி மாதத்தில்) ரூ. 7,000/-

153. ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு சேமவைப்பு ரூ. 3,500/-

154. ஸ்ரீ காசியில் கோச்செங்கட் சோழர் நினைவு மாசி மாச அன்ன மளிப்பு நிதி ரூ. 3,500/-
155. மதுரையில் பெரியபுராணப் பிரசங்க நிதி ரூ. 7,000/-
156. மதுரையில் கந்தபுராணப் பிரசங்க நிதி ரூ. 3,500/-
157. சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் அன்னம் பாலிப்பு நிலப் பெறுமானம் ரூ. 1,50,000/-
158. கல்கத்தா சர்வகலாசாலை ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவு தமிழ்ப் பரிசு நிதி சேமவைப்பு ரூ. 3,500/-
159. சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்க நிதி ரூ. 7,000/-
160. திருக்கழுக்குன்றத்தில் மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு ரூ. 5,000/-
161. சீகாழிச் சட்டைநாதர் புழுகு நெய் சாத்து நிதி ரூ. 3,500/-
162. மதுரையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு பரிசு நிதி ரூ. 3,500/-
163. ஸ்ரீகாசியில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு (பங்குனி மாதத்தில்) ரூ. 5,000/-
164. ஸ்ரீ காசியில் இசை ஞானியார் நினைவு அன்னம் பாலிப்பு (சித்திரை மாதத்தில்) ரூ. 5,000/-
165. ஸ்ரீ காசியில் திருநீலகண்ட நாயனார் நினைவு அன்னம் பாலிப்பு (வைகாசி மாதத்தில்) ரூ. 3,000/-
166. ஸ்ரீ காசியில் நன்பாட்டுப் புலவர் நினைவு ஆனிமாச அன்னம் பாலிப்பு சேமவைப்பு ரூ. 3,000/-
167 இராமேச்சுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு சேமவைப்பு ரூ. 3,500/-
168. ஸ்ரீ காசியில் மும்மையால் உலகாண்டமூர்த்தி நினைவு ஆடிமாச அன்னம் பாலிப்பு சேம வைப்பு ரூ. 3,000/-
169. திருவாரூரில் மனுநீதிச் சோழர் நினைவுப்பரிசு நிதி ரூ. 3,500/-
170. ஸ்ரீ காசியில் குங்குலியக்கலயர் நினைவு ஆவணித் திங்கள் அன்னம்பாலிப்பு ரூ. 3,000/-
171. திருப்பனந்தாளில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு பிரசவ விடுதி கட்டுவதற்கு நன்கொடை ரூ. 5,000/-
172. ஸ்ரீ காசியில் உருத்திர பசுபதியார் நினைவு புரட்டாசி மாத அன்னம்பாலிப்பு முதற்பொருள் ரூ. 3,000/-
173. ஸ்ரீ காசியில் நெடுமாற நாயனார் நினைவு ஐப்பசி மாச அன்னம் பாலிப்பு முதற்பொருள் ரூ. 3,000/-

174. ஸ்ரீ காசியில் ஆனாய நாயனார் கார்த்திகை மாச அன்னம் பாலிப்பு முதற் பொருள் ரூ. 3,000/-
175. இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ஸ்ரீ பொம்மராஜு நினைவு அன்னம்பாலிப்பு முதற் பொருள் ரூ. 6,000/-
176. ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி இராமலிங்க சுவாமிகள் நினைவு மாசி மாத அன்னம் பாலிப்பு ரூ. 3,500/-
177. திருவாலங்காட்டில் காரைக்காலம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு முதற் பொருள் ரூ. 5,000/-
178. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு சேமவைப்பு ரூ. 5,000/-
179. காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியார் நினைவுப் பரிசு நிதி ரூ. 3,500/-
180. காஞ்சிபுரத்தில் திருக்கச்சியேகம்பன் உருத்திராக்கத் தேவார நிதி ரூ. 50,000/-
181. சுவாமிமலை அப்பர் புனற்பந்தர் நிதி ரூ. 3,500/-
182. திருப்பனந்தாள் சிவசிவ கால்நடை வைத்தியசாலைக்குப் புதிய கட்டிடம் கட்டுவதற்கு நன்கொடை ரூ. 3,000/-
183. சிவன் கோயில்களில் தேவாரப் பாசுரங்களைப் பிற தெய்வப் பாடல் களோடு கொண்ட கல்லெழுத்துப் பதிப்பு : மதுரை, திருக்கழுக்குன்றம், மைலாப்பூர், திருச்செந்தூர், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருவாரூர், திருக்குற்றாலம், திருப்பனந்தாள், திருப்புன்கூர், சீகாழி, வேதாரண்யம், திருவையாறு, அவிநாசி, திருவெண்ணெய்நல்லூர், திருவதிகை, திருமருகல், சுவாமிமலை, வைத்தீஸ்வரன் கோவில், திருச்சிராப்பள்ளி, திருவோத்தூர், திருவிடைக்கழி, சிதம்பரம், திருவண்ணாமலை, வடதிருமுல்லைவாயில், பழனி, திருத்தெளிச்சேரி, திருக்கோலக்கா, திருச்சாய்க்காடு, திருக்குடந்தை கும்பேசுவர சுவாமி தேவஸ்தானம் வட திருவாலங்காடு ரூ. 38,000/-
184. மதுரைச் சொக்கலிங்கம் சந்தனம் மெய்ப்பூச்சு நிதி ரூ. 7,000/-
185. சிதம்பரம் நடராச சபைக் கதவு, அருகால் முதலியவற்றிற்கு வெள்ளித் தகடு கூலி வகையறா நன்கொடை ரூ. 11,000/-
186. மதுரையில் தேவார நிதி ரூ. 50,000/-
187. திருச்சிராப்பள்ளியில் தாயுமானவர் காவிரித் திருமஞ்சன நிதி ரூ. 7,000/-
188. திருப்பனந்தாளில் குடிதண்ணீர் வசதிக்கு நான்கு குழாய்கள் நிறுவ அன்பளிப்பு ரூ. 4,500/-

189. இராமேசுவரத்தில் காளத்தி ராஜா ஸ்ரீ வெங்கடப்ப நாயுடு பகதூர்வாரு ராஜா அவர்கள் நினைவு அன்னதானம் ரூ. 10,000/-
190. இராமேச்சுவரத்தில் கார்வேட் நகர ராஜா ஸ்ரீ பொம்மராஜு பகதூர் அவர்களின் நினைவு அன்னதானம் ரூ. 12,000/-
191. ஸ்ரீ காசியில் காளத்தி ராஜா வெங்கடப்ப நாயனம்வாரு நினைவு அன்னம்பாலிப்பு ரூ. 8,500/-
192. ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு சகலகலாவல்லி மாலைப் பரிசு ரூ. 2,000/-
193. கும்பகோணத்தில் கார்வேட் நகர ராஜா வெங்கடப்பெருமாள் ராஜலிங்காரு நினைவு அன்னம்பாலிப்பு ரூ. 12,000/-
194. திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் புனற்பந்தர் நிதி ரூ. 3,500/-
195. இராமேசுவரம் உயர்நிலைப் பள்ளிக்கு நன்கொடை ரூ. 4,200/-
196. திருலோக்கி ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் துவக்கப் பள்ளிக்குப் புதிய கட்டிடம் கட்ட ரூ. 5,900/-
197. சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூசை நிதி நிலப்பெறுமானம் ரூ. 1,00,000/-
198. திருநெல்வேலி ஜில்லா பழைய பாபநாசத்தில் அகத்தியர் கோயிலில் மண்டபம் கட்ட நன்கொடை ரூ. 3,500/-
199. திருவாதவூர் மாணிக்கவாசகர் கோவில் நடராஜப்பெருமான் கர்ப்பக்கிரக விமானம் திருப்பணி செய்ய நன்கொடை ரூ. 3,000/-
200. ஹரத்துவாரில் அடியார்களுக்கு அன்னம்பாலிப்பு நிதி ரூ. 8,000/-
201. கன்னியாகுமரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 7,000/-
202. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தொடக்கப்பள்ளி கட்டடத்துக்கு நன்கொடை ரூ. 4,000/-
203. ஸ்ரீ காசியில் குமரகுருபர சுவாமிகள் நினைவு கேதாரீச்சுவரர் திருக்கோயில் நிதி (கட்டிடங்கள் முதலியன) ரூ. 1,00,000/-
204. இராமேசுவரத்தில் கோச்செங்கட் சோழர் நினைவு மாசி மாச அன்னம்பாலிப்பு நிதி ரூ. 4,000/-
205. மைலாப்பூரிலும் குன்றத்தூரிலும் திருவள்ளுவர் சேக்கிழார் நினைவு அன்னம்பாலிப்பு ரூ. 20,000/-
206. திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு கோ சம்வர்த்தன நிதி ரூ. 35,000/-
207. சிதம்பரத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு ரூ. 20,000/-

208. சுவாமிமலையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு கோ சம்வர்த்தன நிதி ரூ. 30,000/-

209. திருவாரூர் போர்டு உயர்நிலைப் பள்ளியில் கட்டப்பெறும் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் மாணவிகள் விடுதிக்கு நன்கொடை ரூ. 3,000/-

210. திருப்பூந்துருத்தி அப்பர் மடம் திருப்பணிக்கு நன்கொடை ரூ. 10,000/-

211. நாகர்கோவில் இந்து காலேஜ் ஸ்ரீ குமரகுருபரர் வழிபாட்டு மண்டபம் அமைக்க ரூ. 30,000/-

212. ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ திருஞான சம்பந்த தேசிகர் நினைவு அன்னம்பாலிப்பு ரூ. 10,000/-

213. திருப்பூந்துருத்தியில் அப்பர் திருமடத்தில் அப்பர் நினைவு நூல் நிலையம் ரூ. 6,500/-

214. ஸ்ரீ காசியில் மங்கையர்க்கரசியார் நினைவு அன்னம்பாலிப்பு முதற்பொருள் ரூ. 7,000/-

215. ரிஷிகேசத்தில் அடியார்கட்கு அன்னம் பாலிப்பு நிதி ரூ. 7,000/-

216. தஞ்சாவூர் ராஜா சரபோஜி ஆர்ட்ஸ் காலேஜுக்கு நன்கொடை ரூ. 5,000/-

217. திரைலோக்கிய சுந்தரம் மகா சிவராத்திரி நிதி ரூ. 1,000/-

218. டாக்டர் உ.வே. சாமிநாதையர் நினைவு ஹைஸ்கூல் மாணவிகள் திருக்கழுக்குன்ற யாத்திரைப் பரிசு நிதி சென்னை ரூ. 3,000/-

219. மதுரை ஸ்ரீ மூர்த்திநாயனார் நினைவு விழா நிதி ரூ. 2,500/-

220. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு முதற்பொருள் ரூ. 7,000/-

221. அகத்தியர் தேவார நிதி (பாவநாசத்தில்) சேமவைப்பு ரூ. 25,000/-

222. மதுரையில் இன்னிசைத் தேவார நிதி ரூ. 25,500/-

223. வாரணாசியில் சேதுகாவலர்நினைவு அன்னம் பாலிப்பு சேமவைப்பு ரூ. 5,000/-

224. திருக்கேதாரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு சேமவைப்பு ரூ. 7,000/-

225. இராமேச்சுவரத்தில் உமாபதி சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ரூ. 6,500/-

226. திருக்குற்றாலநாதர் தேவார நிதி ரூ. 26,500/-

227. சிதம்பரம் ஸ்ரீ நடராசப்பெருமான் கோயில் ஆயிரக்கால் மண்டபத் திருப்பணிக்கு நன்கொடை ரூ. 5,000/-

228. சிதம்பரம் ஸ்ரீ நடராசப் பெருமானுக்கு உபயம் தங்கத் தாம்பாளம் ரூ. 4,500/-

229. சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழாவை முன்னிட்டு ஸ்ரீ கழகத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவாக ஆராய்ச்சி மாணவர்கள் தங்கம் அறை கட்ட நன்கொடை ரூ. 2,500/-

230. இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூசை நிதி ரூ. 1,00,000/-

231. வாரணாசியில் காவேரி திருவெங்கடநாதராஜு நினைவு அன்னம் பாலிப்பு நிதி ரூ. 6,000/-

232. ஸ்ரீ காசியில் காரி நாயனார் நினைவு மாசிமாச அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5,000/-

233. ஸ்ரீ காசியில் தண்டியடிகள் நினைவு பங்குனி மாச அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5,000/-

234. திருப்பரங்குன்றத்தில் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் தண்ணீர்ப்பந்தல் தருமநிதி ரூ. 4,000/-

235. ஸ்ரீ காசியில் திருக்குறிப்புத் தொண்டர் நினைவு சித்திரை மாச அன்னம்பாலிப்பு நிதி ரூ. 3,000/-

236. ஸ்ரீ காசியில் முருக நாயனார் நினைவு வைகாசி மாச அன்னம் பாலிப்பு ரூ. 5,000/-

237. ஸ்ரீ காசியில் சண்டேசுவர நாயனார் நினைவு தை மாச அன்னம் பாலிப்பு ரூ. 5,000/-

238. திருவாரூரில் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 7,000/-

239. கன்னியாகுமரி ஆச்சிராமம் வகையறா திருமுறை அன்னம் பாலிப்பு வகையறா நிதி நிலப்பெறுமானம் ரூ. 2,50,000/-

240. சீகாழிச் சட்டைநாதர் சித்திரை மாசப் புழுகுநெய் சாத்து நிதி ரூ. 3,500/-

241. பழைய பாபநாசம் அகத்தியர் சுப்பிரமணியர் கோவில் திருப்பணி நிதி ரூ. 10,000/-

242. வாரணாசியில் பூசலார் நாயனார் நினைவு ஐப்பசி மாச அன்னம் பாலிப்பு நிதி ரூ. 6,000/-

243. காசியில் இராமநாதபுரம் ராஜா நினைவு அன்னம்பாலிபப்பு நிதி ரூ. 40,000/-

244. இராமேசுவரத்தில் காளஹஸ்தி ராஜா தை மாச அன்னம்பாலிப்பு நிதி ரூ. 2,500/-

245. திருநெல்வேலி ஜில்லா பழைய பாபநாசத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம் கட்ட ரூ. 10,000/-

246. இராமேசுவரத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு ஐப்பசி மாச அன்னம்பாலிப்பு நிதி ரூ. 5,000/-

247. பழைய பாபநாசத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு (வைகாசி அமரபட்சம் திருதியை) ரூ. 5,000/-
248. திருப்பனந்தாளில் ஸ்ரீ அருணஜடேசுவரர் நெய்விளக்கு நிதி ரூ. 2,500/-
249. சிதம்பரத்தில் திருநீலகண்ட நாயனார் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் நிதி ரூ. 3,500/-
250. வைத்தீஸ்வரன் கோயில் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு (வைகாசி அமரபட்சம் திருதியை) ரூ. 7,000/-
251. பழைய பாபநாசத்தில் கோசம்வர்த்தன நிதி ரூ. 7,000/-
252. திருவண்ணாமலையில் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலலிப்பு (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ரூ. 7,000/-
253. சுவாமிமலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு (வைகாசி அமரபட்சம் திருதியை) ரூ. 7,000/-
254. திருவாப்பாடியில் சிவராத்திரி கட்டளை நிதி ரூ. 1,000/-
255. சிதம்பரத்தில் பொன்னம்பலத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நெய்விளக்கு நிதி ரூ. 30,000/-
256. சிதம்பரத்தில் மார்கழித் திருத்தேர் விழா மகேசுவர பூசை நிதி ரூ. 5,000/-
257. சிதம்பரம் மார்கழித் திருவாதிரைத் திருவிழா தில்லை வாழந்தணர் விசேட அன்னம்பாலிப்பு நிதி ரூ. 10,000/-
258. திருக்குற்றாலத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி (வைகாசி அமரப்க்ஷம் திருதியை) ரூ. 5,000/-
259. திருவண்ணாமலையில் தேவார நிதி ரூ. 24,000/-
260. திருவண்ணாமலையில் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் நினைவுத் திருக்கார்த்திகை நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 12,000/-
261. திருவானைக்காவில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 7,000/-
262. சீகாழியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5,000/-
263. பிரயாகையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5,600/-
264. திருப்புகலூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி ரூ. 5,000/-
265. திருநல்லூர்ப்பெருமணத்தில் (ஆச்சாள்புரத்தில்) ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 5,000/-

266. கும்பகோணத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாசி மக அன்னம்பாலிப்பு நிதி ரூ. 18,700/-
267. ஸ்ரீகாசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு தினசரி அன்னம் பாலிப்பு நிதி ரூ. 15,000/-
268. திருவையாற்றில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 6,000/-
269. வாரணாசியில் குலச்சிறை நாயன்ார் நினைவு ஆவணித் திங்கள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 6,000/-
270. திருத்தணிகையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 7,000/-
271. பழனியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ரூ. 10,000/-
272. வைதீசுவரன் கோயிலில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் தருமம் ரூ. 4,000/-
273. சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சன விழாவில் தில்லை வாழந்தணர் விசேட அன்னம் பாலிப்பு ரூ. 10,000/-
274. திருவண்ணாமலையில் புனற்பந்தர் நிதி ரூ. 3,500/-
275. காவிரிப்பூம்பட்டினத்தில் ஆடி அமாவாசை அன்னம்பாலிப்பு நிதி ரூ. 5,000/-
276. திருவண்ணாமலையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கோசம்வர்த்தன நிதி ரூ. 30,000/-
277. ஸ்ரீகாசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் திருமுறை அன்னம்பாலிப்பு நிதி (நிலப் பெறுமானம்) ரூ. 4,00,000/-
278. திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு ஸ்ரீ தாயுமான ஈசர் தேவார நிதி ரூ. 18,500/-
279. திருக்காளத்தியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 7,000/-
280. இராமேசுவரத்தில் தேவார நிதி (கட்டிடப் பெறுமானம்) ரூ. 51,000/-
281. திருச்செந்தூர் கந்தர்கலிவெண்பா பாராயண நிதி ரூ. 3,000/-

**திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நிறுவிய தருமங்கள் தொகுப்பு**

| எண் | தருமங்கள் | முதற்பொருள் ரூபாய் |
|---|---|---|
| 1. | திருமுறை வளர்ச்சிக்கு ஆக 30 தருமங்கள் | 4,99,500/- |
| 2. | கல்வி அபிவிருத்திக்கு ஆக 48 தருமங்கள் | 7,54,200/- |
| 3. | சைவ சித்தாந்தம் பரப்ப 7 தருமங்கள் | 1,56,000/- |

| | | |
|---|---|---|
| 4. | அன்னதானம் செய்ய 125 தருமங்கள் | 29,92,800/- |
| 5. | வைத்தியம் செய்ய 5 தருமங்கள் | 1,22,500/- |
| 6. | பொது தருமங்கள் - ஸ்நானக்கட்டம் அதிக நன்கொடை, தண்ணீர்ப்பந்தல், ஒளிவளர் விளக்குகள், பசுப் பரிசு, கோ சம்வர்த்தனம், கல்லெழுத்து முதலிய 66 தருமங்கள் | 6,13,745/- |
| | ஆகத் தருமங்கள் 281-க்கு | ரூ. 51,38,745/- |

இப்படி, திருமுறை, சமயம், சமுதாயம், தமிழ் எனப் பல வகைகளிலும் பணிகளைச் செய்து, பக்திப் பயிரைச் செழிக்கச் செய்த பெருமை காசித் திருமடத்திற்கு உண்டு.

சைவத்தோடும் திருமுறைகளோடும் இவ்வளவு நெருங்கிய தொடர்பும், உறவும் கொண்டு விளங்கும் இக்காசித்திருமடம் ஒன்பதாம் திருமுறை, திருமந்திர மாநாடு நடத்துவது என்பது எல்லா வகையிலும் பொருத்த முடையது என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

**பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக்கட்டளை**

இந்த நூற்றாண்டின் மாமனிதராக வாழ்ந்தவர் பேராசிரியர் த.கோ. பரமசிவனார் அவர்கள். அவர் தொடங்கி வைத்ததே திருமுறை மாநாடுகள் எனும் சைவ, இலக்கியப் பணிகளாகும். தமது தந்தையார் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை என்ற பெயரில் காசித் திருமடத்துடன் இணைந்து பல்வேறு திருமுறை மாநாடுக்ளைத் தமிழகம், வாரணாசி, ரிஷிகேசம் முதலிய பல இடங்களில் நடத்தி அழியாப் புகழ் கொண்டவர். அப்பெருந்தகையார் கடந்த வருடம் கார்த்திகை சதய நாளில் சிவபதம் அடைந்தார். அவர்தம் சைவ, தமிழ், இலக்கியப் பணிகளைத் தொடர்ந்து ஆற்ற ஏற்படுத்தப் பெற்றதே இவ் அறக்கட்டளையாகும்.

**பேராசிரியர் முனைவர் த.கோ. பரமசிவம் அவர்களின் வாழ்க்கை வரலாறு**

பேராசிரியர் முனைவர் த.கோ. பரமசிவம் அவர்கள் 11.10.1949-இல் திருவண்ணாமலை மாவட்டம் களம்பூர் எனும் சிற்றூரில் சிவத்திரு. கோவிந்தசாமி அடிகளாருக்கும், திருமதி கன்னியம்மாள் அவர்களுக்கும் நான்காவது திருமகனாக இம்மண்ணில் உதித்தார்.

அன்னாரின் குழந்தைப் பருவமும், பள்ளிப் பருவமும் களம்பூரிலேயே கழிந்தது. 1967-ஆம் ஆண்டு எஸ்.எஸ்.எல்.சி.யைக் களம்பூர் உயர்நிலைப் பள்ளியில் முடித்தார். பள்ளிப் பருவம் நிறைவுற்றதும் வேலூர் ஊரீஸ் கல்லூரியில் PUC சேர்ந்து முதல் மாணவராக 1968-ஆம் ஆண்டு தேர்ச்சி பெற்றார். அதன் பின்னர் சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்

இளங்கலை (1969-1972) மற்றும் முதுகலை (!972-1974) பயின்றதோடு, முதுகலை பயின்ற காலத்தில் கல்லூரித் **தமிழ்மன்றத் தலைவராகவும்** விளங்கினார்.

தமிழ் மன்றத் தலைவராக இருந்த காலத்தில் இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழ் விழாக்களை ஆண்டுதோறும் நடத்தி, திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள், பேரறிஞர் அண்ணா, மக்கள் திலகம் எம்.ஜி.ஆர்., கலைஞர் மு. கருணாநிதி போன்றோரை இயல் தமிழ் விழாவிற்கும், காஞ்சிபுரம் விநாயக முதலியார், தருமபுரம் சுவாமிநாதன் போன்றோரை இசைத்தமிழ் விழாவிற்கும் அழைத்துப் பெருமைப்படுத்தி அனைவரின் பாராட்டுதல்களையும் பெற்றார்.

தமிழ் முதுகலை நிறைவுற்றதும் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையில் அகழ்வாராய்ச்சியில் (1973), தொல்லியல் மற்றும் கல்வெட்டியல் (1975), இந்திய ஹோமியோபதி கழகத்தில் ஹோமியோபதி (1976), தில்லி பல்கலைக்கழகத்தில் இந்தி (1979); மைசூர் பல்கலைக்கழக ஓரியண்டல் ரிசர்ச் இன்ஸ்ட்டிடியூட்டில் (ORI) சுவடியியல் (1983); தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மெழியியல் (1989) போன்ற பட்டயங்களும் (Diploma), INTACHஇல் 'சுவடிகளைப் பாதுகாத்தலும் நன்னிலைப்படுத்தலும்' எனும் சான்றிதழும் (1991) பெற்றுச் சிறந்தார்.

பணிக்கு முயற்சி செய்யும் காலங்களில் வீட்டில் இருந்தபடியே **'அருள் மருத்துவமனை'** என்ற பெயரில் **ஹோமியோபதி மருத்துவம் பார்த்தார்**. சிறிது காலம் ஒரு தனியார் **பேருந்தில் 'நடத்துநராகவும்' பணியாற்றிய** அனுபவமும் பேராசிரியருக்கு உண்டு.

இந்தி மொழியில் தேர்ச்சி பெற்றிருந்த நேரத்தில் 24.11.1975 அன்று தில்லியில் ஜவகர்லால் நேரு பல்கலைக்கழக School of Social Sciencesஇல் ஆய்வு உதவியாளராகப் பணியில் சேர்ந்து 23.11.1976 வரை ஓராண்டு காலம் சிறப்பாகப் பணியாற்றினார்.

அதன்பின்னர், தில்லி பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் பணியாற்றிய கால கட்டத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும், தில்லி பல்கலைக்கழக பாடத்திட்டக்குழு உறுப்பினராகவும், தில்லி பல்கலைக்கழக தேர்வுக்குழு உறுப்பினராகவும், தில்லி மேனிலைப்பள்ளி தேர்வுக்குழு உறுப்பினராகவும், சென்னைப் பல்கலைக்கழகத்தின் பேரவைக்குழு மற்றும் பாடத்திட்டக்குழு உறுப்பினராகவும் இருந்து சிறப்பாகப் பணியாற்றிய பேரா. முனைவர் க. ஆறுமுகனார் அவர்களிடம் முனைவர்பட்ட ஆய்வாளராகச் சேர்ந்தார்.

ஆய்வுக் காலத்தில் ஆய்வு நெறியாளருடன் நட்பு அதிகமாகவே இவரது நன்னடத்தையைப் பாராட்டிய பேராசிரியர் முனைவர் க. ஆறுமுகனார் அவர்கள் 1978-ஆம் ஆண்டு தன்னுடைய மூன்றாவது மகள் நல்லநாயகியை மணம் முடித்து வைத்தார்.

இத்தம்பதியினர்க்கு 1979-ஆம் ஆண்டு ஒரு மகன் பிறந்தார். அவருக்கு தம் மனைவி பெயரில் உள்ள 'நல்ல' என்ற பகுதியையும் தம் பெயரில் உள்ள 'சிவம்' என்ற விகுதியையும் இணைத்துப் புதுமையாக 'நல்லசிவம்' எனப் பெயரிட்டு மகிழ்ந்தார்.

தில்லிப் பல்கலைக்கழகத்தில் மார்ச் 1982-ஆம் ஆண்டு இவரின் "A Study of Placenames in Tamil of Tanjore District between 600 A.D. - 1300 A.D." என்னும் ஆய்வுக்காக முனைவர் பட்டம் பெற்றார்.

1981-ஆம் ஆண்டு தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகம் தொடங்கப் பெற்ற சூழலில் அப்போதை துணைவேந்தர் முதுமுனைவர் மாண்பமை வ.அய். சுப்பிரமணியம் அவர்களின் அழைப்பின் பேரில் பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்கள் ஓலைசுவடித்துறைத் தலைவராக இருந்த காலத்தில் 07.11.1983 முதல் தமிழ்ப் பல்கலைக்கழகச் சுவடிப்புல ஓலைச் சுவடித்துறையில் இணைப்பேராசிரியராகப் பணிநியமனம் செய்யப் பெற்றார். அதுமுதல் தம் கல்விப் பணியைத் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையிலேயே தொடர்ந்தார்.

பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்கள் ஓய்வு பெற்றதும் 19.06.1987 முதல் ஓலைச்சுவடித்துறை இணைப்பேராசிரியர் நிலையிலேயே துறைத்தலைமையையும் பெற்றார். அதுமுதல் சிவபதம் அடையும் நாள் வரை தொடர்ந்து இருபது ஆண்டுகள் துறைத்தலைமை வகித்த சிறப்புக்குரியவர். 01.10.1996 முதல் இணைப்பேராசிரியர் நிலையில் இருந்து பேராசிரியராகப் பதவி உயர்வு பெற்றார்.

பேராசிரியர் என்ற உயரிய நிலையை அடைந்த பிறகு பேராசிரியரை நாடி, தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் பல பொறுப்புகள் வந்தன. புலத்தலைவர், தேர்வுக் கட்டுப்பாட்டாளர், பதிவாளர், பேரவை மற்றும் ஆட்சிக்குழு உறுப்பினர், நிதிக்குழு உறுப்பினர், பாடத்திட்டக்குழு உறுப்பினர், திட்டக்குழு உறுப்பினர் போன்ற பல உயரிய பதவிகள் தேடி வந்தன. தம் விடா முயற்சியாலும், உழைப்பாலும், அறிவாலும், திறமையாலும் அப்பதவிகளில் திறம்படப் பணியாற்றி அனைவரின் ஆதரவுடன் அப்பணிகளுக்கும், பல்கலைக்கழகத்திற்கும் பெருமை தேடித் தந்தார்.

ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டத் தேர்வாளராக இந்தியாவில் உள்ள சென்னை, மதுரை, கோவை, திருச்சி, திருவனந்தபுரம் ஆகிய ஊர்களில் உள்ள பல பல்கலைக்கழகங்களில் இருந்தார்.

தமிழ்ப் பல்கலைக்கழக முதல் துணைவேந்தர் பேராசிரியர் முது முனைவர் வ.அய். சுப்பிரமணியம் அவர்களின் நல்லாசியுடன் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பணிநியமனம் பெற்ற பேராசிரியர் அவர்கள்

பேராசிரியர் முனைவர் ச. அகத்தியலிங்கம், பேராசிரியர் முனைவர் சி. பாலசுப்பிரமணியம், பேராசிரியர் முனைவர் ஔவை து. நடராஜன், பேராசிரியர் முனைவர் க. கருணாகரன், பேராசிரியர் முனைவர் கதிர். மகாதேவன், பேராசிரியர் முனைவர் இ. சுந்தரமூர்த்தி, பேராசிரியர் முனைவர் சி. சுப்பிரமணியம் ஆகிய மாண்பமை துணைவேந்தர்களின் காலத்தில் பணியாற்றி அவர்களின் அன்பையும் நீங்கா ஆதரவையும் பெற்றார்.

தம் இறுதி மூச்சு வரை தில்லி பல்கலைக்கழகப் பணி, தமிழ்ப் பல்கலைக்கழகப் பணி, சமூகப் பணி, ஆன்மீகப் பணி ஆகிய இந் நான்கையும் தம் உயிராகவே எண்ணி வாழ்ந்தவர் பேராசிரியர் முனைவர் த.கோ. பரமசிவம் அவர்கள்.

**பேராசிரியரின் கொள்கைகளுள் சில...**

- திருமுறையே இவ்வுலகில் அனைத்து செல்வங்களையும் வழங்கும்
- நால்வரின் வழியே நலமிகு வழி
- தீதும் நன்றும் பிறர் தர வாரா
- அன்பே சிவம்; அறிவே ஆண்டவன்
- எளிமையாக வாழ வேண்டும்
- கடன் வாங்குதல் கூடாது
- வருமானத்தில் மூன்றில் ஒரு பங்கு திருமுறைக்குச் செலவிடுதல்
- மக்கள் சேவையே மகேசன் சேவை
- தம்மால் இயன்றளவு பிறருக்குத் தம் உடல் பொருள் ஆவி மூன்றாலும் உதவுதல்.
- தம்மை வருத்திப் பிறரை உயர்த்துதல்
- தன்னிலை தாழாமல் வாழ்தல்
- கொள்கைப் பிடிப்புடன் வாழ்தல்
- இன்பமும் துன்பமும் ஒன்றென வாழ்தல்

போன்ற பல கொள்கைகளைத் தமக்குள் வகுத்துக் கொண்டு கடைசி வரை வாழ்ந்து காட்டியவர் பேராசிரியர் த.கோ. பரமசிவம் அவர்கள்.

**பேராசிரியரின் கல்விப் பணிகள்**

**1. நூல் வெளியீடுகள்**

- நற்றிணை எடுத்துக்காட்டுப் படிவம்
- தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 1 (பதி.)

- ✧ தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 2 (பதி.)
- ✧ தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 3 (பதி.)
- ✧ தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 4 (பதி.)
- ✧ தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 5 (பதி.)
- ✧ தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை தொகுதி 6 (பதி.)
- ✧ சுவடிப்பதிப்பு நெறிமுறைகள்
- ✧ இலக்கணச் சூடாமணி (பொ.பதி.)
- ✧ நோயும் மருத்தும்
- ✧ தண்டபாணி சுவாமிகள் ஆய்வு மாலை - இரண்டு தொகுதிகள் (பதி.)
- ✧ குமரகுருபரர் ஆய்வு மாலை - மூன்று தொகுதிகள் (பதி.)
- ✧ பெரியபுராண ஆய்வு மாலை - இரண்டு தொகுதிகள் (பதி.)
- ✧ திருப்போரூர் மற்றும் வடக்குட்பட்டு : 18-ஆம் நூற்றாண்டு ஆவணங்கள்
- ✧ Thirupporur & Vadakkuppattu : The 18th Century Accounts
- ✧ சிவப்பிரகாசர் ஆய்வு மாலை (பதி.)
- ✧ திருஞானசம்பந்தர் ஆய்வு மாலை - இரண்டு தொகுதிகள் (பதி.)
- ✧ சாந்தாதி அசுவமகம் (பதி.)
- ✧ தமிழ் உணர்த்தும் பக்தி - மூன்று தொகுதிகள் (பதி.)
- ✧ மாணிக்கவாசகர் ஆய்வு மாலை - இரண்டு தொகுதிகள் (பதி.)

**2. பணிப்பட்டறைகள்**

- ✧ பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியும், கோவை சக்தி அறக்கட்டளையும், தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச் சுவடித்துறையும் இணைந்து 23.3.1984 - 30.3.1984 வரை ஓலைச்சவடிப் பயிற்சிப் பண்ணை நடத்தினார்.
- ✧ பல்கலைக்கழக நல்கைக்குழு உதவியுடன் 'சுவடிகளைத் தேடித் தொகுத்தல், அறிவியல் முறைப்படி பாதுகாத்தல், பட்டியலிடுதல், பதிப்பித்தல்' என்ற பொருளில் தமிழகம் முழுவதிலிருந்து 50 பள்ளி ஆசிரியர்கள் மற்றும் கல்லூரி மாணவர்களுக்காக 9.5.1998 - 30.5.1988 ஆகிய 21 நாட்கள் 'சுவடியியல் கோடைப் பள்ளி' நடத்தினார்.

**3. நடத்திய அறக்கட்டளை நிகழ்ச்சிகள்**

- ✧ 1989 முதல் தஞ்சாவூர் சீ.நா.மீ. உபயதுல்லா அவர்களின் அறக்கட்டளை மூலம் ஆண்டுதோறும் சொற்பொழிவுகள் நிகழ்த்தச்

செய்தார். இவ்வறக்கட்டளை வழி அன்னாரது கால கட்டத்தில் 19 சொற்பொழிவுகள் நிகழ்த்தச் செய்தார்.

- 2002-ஆம் ஆண்டு காசி குமரகுருபரர் மாநாட்டு நினைவு அறக்கட்டளையின் மூலம் இரண்டு சொற்பொழிவுகளையும், ஐந்து திருமுறை இசை நிகழ்ச்சிகளையும் நடத்தினார்.

**4. நடத்திய கருத்தரங்குகள்**

- சுவடிப்பதிப்பு நெறிமுறைகள் - 1988
- மொழி வளர்ச்சியில் சுவடி பதிப்பித்தலின் தேவை - 1989
- சுவடிப்பதிப்பு வரலாறு 1 - 1900
- வையாபுரிப்பிள்ளை நூற்றாண்டுவிழா - கருத்தரங்கு - 1991
- சுவடிப்பதிப்பு வரலாறு 2 - 1994
- சுவடிப்பதிப்பு வரலாறு 3 - 1996
- நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் - 2002

**5. கட்டுரைகள்**

நூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை எழுதி இதழ்கள், குடமுழுக்கு மலர்கள், கருத்தரங்கு மலர்கள், ஆய்விதழ்கள் போன்றவற்றில் வெளியிட்டுள்ளார்.

**6. ஆய்வு நெறியாளர்**

- ஆய்வியல் நிறைஞர் பட்டம் - 6
- முனைவர் பட்டம் - 4

**பேராசிரியரின் சமயப் பணிகள்**

**1. நடத்திய மாநாடுகள்**

- 1998இல் கோவை கௌமார மடாலயத்துடன் தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித்துறை இணைந்து கோவை கௌமார மடாலயத்தில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் நூற்றாண்டு விழா மாநாடு.
- 1999-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித்துறை இணைந்து வாரணாசியில் ஸ்ரீகுமரகுருபரர் ஆய்வு மாநாடு.
- 2001-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை இணைந்து வாரணாசியில் பெரியபுராண ஆய்வு மாநாடு.

- 2002-இல் பேரூர் (கோவை) ஆதீனத்துடன் தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித்துறை இணைந்து பேரூர் ஆதீனத்தில் சிவப்பிரகாசர் ஆய்வு மாநாடு.
- 2002-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை இணைந்து வாரணாசியில் திருஞான சம்பந்தர் ஆய்வு மாநாடு.
- 2003-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை இணைந்து வாரணாசியில் திருநாவுக்கரசர் ஆய்வு மாநாடு.
- 2005-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை இணைந்து ரிஷிகேசத்தில் தமிழ் உணர்த்தும் பக்தி மாநாடு.
- 2005-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை இணைந்து வாரணாசியில் சுந்தரர் ஆய்வு மாநாடு.
- 2006-இல் திருப்பனந்தாள் காசி மடத்துடன் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளை இணைந்து வாரணாசியில் மாணிக்க வாசகர் ஆய்வு மாநாடு.

**2. தொண்டுகள்**

- ஆண்டுதோறும் தம் இல்லத்தில் சமயக்குரவர் நால்வரின் திருநட்சத்திரங்களில் அவரவர்கள் திருமுறை இசை விழாவும், தம் தமையனார் ஐப்பசி சதயத்தில் திருமுறை விழாவும் தஞ்சையில் விடாது நடத்தி வந்தார்.
- 1999-ஆம் ஆண்டு நடந்த ஸ்ரீகுமரகுருபரர் ஆய்வு மாநாட்டு மீதிப் பணத்தில் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையில் ஸ்ரீகுமரகுருபரர் பெயரில் அறக்கட்டளை ஒன்றை நிறுவி ஆண்டு தோறும் இயல், இசை, நாடக நிகழ்ச்சிகளை நடத்தி வந்தார்.
- தம் தந்தையார் களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் பெயரில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் அறக்கட்டளை ஒன்றை நிறுவி தாமே அவ்வறக்கட்டளை சார்பாக திருமுறை இயல், இசை, நிகழ்ச்சிகளை நடத்தி வந்தார்.
- திருமுறை இசை நிகழ்ச்சிகள், தமிழ் ஆய்வரங்குகள், மாநாடுகள் பலவற்றுக்கும் நிதியும் அறிவுரையும் வழங்கினார்.

✧ ஆண்டுதோறும் வாரணாசியில் திருமுறை மாநாடுகளை நடத்தி 5000க்கும் மேற்பட்டோர் காசி யாத்திரை மேற்கொள்ளத் தூண்டினார்.

✧ திருமுறை மாநாடுகளில் திருஞானசம்பந்தர் நினைவாக 500 பேருக்கு வெண்கலத் தாளமும், திருநாவுக்கரசர் நினைவாக 500 பேருக்கு உழவாரமும், சுந்தரர் நினைவாக 500 பேருக்கு ஊன்றுகோலும், மாணிக்கவாசகர் மற்றும் ஸ்ரீகுமரகுருபரர் நினைவாக இவர்களின் திருவுருவம் பொறித்த செப்பு டாலர் 500 பேருக்கும் தம் சொந்த செலவில் வழங்கியவர்.

✧ திருமுறை அன்பர்கள், அடியார்கள், ஆர்வலர்கள் போன்றோர் எவரும் உருத்திராக்கம், கங்கை சொம்பு, திருமுறை நூல்கள் என எது கேட்டாலும் இலவசமாக வழங்கும் தன்மையுடையவர்.

✧ தம்மால் இயன்ற அளவு அன்னதானம் பல இடங்களில் நடத்தியும், தண்ணீர்ப்பந்தல் முதலான பல அறங்களை நிறுவியும் நிர்வகித்து வந்தவர்.

✧ தம் வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்கு பொது நிகழ்ச்சி களுக்காகவும், சமயப் பணிகளுக்காகவும் தம் வாழ்நாள் முழுவதும் செலவிட்டவர்.

### 3. ஐம்பொன் திருமேனிகள் அன்பளிப்பு

"களம்பூர் கோவிந்தசாமி அடிகளார் அறக்கட்டளையின் காணிக்கை" என்ற பெயரில் கீழ்க்கண்ட இடங்களில் தம் சொந்த செலவில் ஐம்பொன் திருமேனிகளை நிறுவியவர்.

✧ ரூ. 25,000 செலவில் திருநாவுக்கரசர் திருமேனி - களிமேடு அப்பர் திருக்கோயில்.

✧ ரூ. 1,00,000 செலவில் ஸ்ரீகுமரகுருபரர் திருமேனி - காசித் திருமடம், திருப்பனந்தாள்.

✧ திருமுறை அன்பர்களின் பொருளுதவியோடு சொந்தப் பணத்தில் ரூ. 40,000ஐ இணைத்து ஸ்ரீகுமரகுருபரர் திருமேனி - காசி மடம் (3.11.2006 அன்று), வாரணாசி.

### 4. திருமுறை இல்லம்

தஞ்சை, கீழவீதி மணிகர்னீசர் கோயில் தெருவில் கதவிலக்கம் எண் 926-இல் உள்ள தம்முடைய இல்லத்தைத் திருமுறை இல்லமாக மாற்றி வாழ்ந்தவர் பேராசிரியர் முனைவர் த.கோ. பரமசிவம் அவர்கள். தம் இல்லச் சுவர்களில் எல்லாம் (குளியலறை உட்பட) திருமுறைப்

பாடல்களை எழுதி வைத்தவர். மேலும், இல்ல முகப்பிலேயே திருக்கேதார கங்கைநாதர் திருக்கோயிலைத் தாமே (கட்டிட வேலைகள், ஆசாரி வேலைகள், மின்சார, பைப் வேலைகள் அனைத்தும் அறிந்தவர்) கட்டிக் குடமுழுக்கை தமிழ் முறைப்படி செய்து தினசரி வழிபட்டு வந்தவர் பேராசிரியர். எங்கும் திருமுறை, எதிலும் திருமுறை என வாழ்ந்தவர்.

**சிவபதம்**

2006 நவம்பர் 2,3,4,5 ஆகிய நான்கு நாட்களில் காசியில் மாணிக்கவாசகர் திருமுறை மாநாடும், ஸ்ரீ குமரகுருபரர் ஐம்பொன் திருமேனி நிறுவுதலும் ஆகிய இருபெரும் நிகழ்ச்சிகளையும் மிகச் சிறப்பாக நிகழ்த்திவிட்டு 17.11.2006 இரவு தஞ்சை வந்தார். சில தினங்கள் ஓய்வுக்குப் பின்னர் பல்கலைக்கழகம் சென்று திரும்பினார். 28.11.2006 செவ்வாய்க்கிழமை பிற்பகல் 12.30 மணியளவில் உடல் தளர்வு காரணமாக உறக்கத்திற்குச் சென்ற பேராசிரியரின் ஆன்மா உறக்கத்திலேயே பிரிந்தது. பிற்பகல் 3.00 மணிக்கு எழுப்பியபோதுதான் அன்னாரின் குடும்பத்தாருக்கு இது தெரியவந்தது. அன்னார் முக்தி பெற்ற அன்று திருநாவுக்கரசர் முக்தி பெற்ற நட்சத்திரமாகிய சதயம் ஆகும். வாழ்நாள் முழுதும் தொண்டராகவே வாழ்ந்த அவரது ஆன்மாவும் தொண்டிற்கு உதாரண மாகிய திருநாவுக்கரசர் சிவபதம் அடைந்த நட்சத்திரத்திலேயே இறைவனடியை அடைந்தது குறிப்பிடத்தக்கது. ஒருநாள்கூட படுக்கையில் விழாது, உயிர்ச்சித்திரவதை அடையாது, யாருக்கும் எவ்வித துன்பமும் தராது அன்னாரின் ஆன்மா இறைவனை அடைந்தது ஈண்டு எண்ணத்தக்கது.

**நன்றியுரை**

காசியில் குமரகுருபர சுவாமிகள் மடம் நிறுவிய காலம் முதலாக, திருப்பனந்தாளில் கிளைமடம் வளர்ந்த காலம் முதலாக, காசித் திருமடம் தமிழையும், சைவத்தையும் சமூகப் பணிகளுடன் இணைத்து வளர்ப்பதில் தலைநிற்பது என்றால் அது மிகையாகாது. சிறப்பாக, பல்வேறு இன மொழி மக்களை ஒன்றுபடுத்தும் மனிதநேயப் பண்பை ஆன்மநேய ஒருமைப்பாட்டை வளர்ப்பதில் இக்காசித் திருமடம் முன்னிற்பதாம். இத்திருமடத்தின் இன்றைய அதிபர் சுவாமிகள் கயிலை மாமுனிவர் காசிவாசி திருவளர்திரு முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் குமரி முதல் இமயம் வரையுள்ள திருமடங்களிலும் திருக்கோயில்களிலும் மேற்கண்ட பணிகளைச் செம்மையாக நடத்தி வருகின்ற பான்மையை இப்பாரத பூமி நன்கு அறியும். இம்மாநாட்டின் திட்டங்களை வரவேற்று ஊக்கப்படுத்தியதுடன் மாநாட்டின் ஒவ்வொரு பணியிலும் ஆய்வுக்கட்டுரைகளின் ஒவ்வொரு செய்தியிலும் ஈடுபட்டுப் பணி முன்னேற்றங்களைக் கண்காணித்து அருளாணைகள் வழங்கித்

தொடர்ந்து துணைபுரியம் நம் அதிபர் சுவாமிகளே இம்மாநாட்டுக்கும் மூல காரணமும் முதற் காரணமுமாக இருக்கின்றார்கள். எனவே அவர்தம் திருவடி களை வாழ்த்தி முதற்கண் நன்றி பாராட்டுவதில் நாங்கள் நிறைவடைகிறோம்.

பல்வேறு பணிகளுக்கிடையில், தவிர்க்கவியலாத சூழல்களுக்கிடை யிலும் மாநாட்டைத் தொடர்ந்து நடத்துவதில் ஆர்வம் காட்டுகின்ற அவர்களின் திருமுறைப்பற்றை, தமிழ்க் காதலை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பல ஆய்வாளர்களையும், பார்வையாளர்களையும் அழைத்துச் சென்று, இருக்க இடமும் உண்ண உணவும் தந்து கங்கையில் நீராட்டி விசுவநாதரின் தரிசனத்தையும் வழங்கும் நம் அதிபர் சுவாமிகள் தாமே ஒரு ஆய்வாளராகப் பங்கேற்று ஆய்வுக் கட்டுரையும் வழங்கிச் சிறப்பித்திருப்பது இவ் ஆய்வுமாலைக்குப் பெருமை சேர்ப்பதாம். தமக்கிருக்கின்ற பல்வேறு திருப்பணிகளுக்கிடையிலும் நம் எண்ணங்களை, ஆய்வுகளை வெளிப்படுத்துவதற்குக் களம் அமைத்துத் துணைபுரியும் அவர்களுக்கு எவ்வளவு நன்றி பாராட்டினாலும் தகும்.

அதிபர் சுவாமிகளின் அருளாணைகளைச் செவ்வனே செயற்படுத்தும், காசித் திருமடத்தின் அன்பர்கள் அனைவர்க்கும் நாங்கள் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். குறிப்பாக வாரணாசியில் குமாரசாமித் திருமடத்தின் திரு. முத்தையா பிள்ளை, மேலாளர் திரு. ஜெயராமன், உதவியாளர் திரு. பரமசிவம் ஆகியோர்க்குத் தனிப்பட்ட நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மாநாட்டினைக் காசித்திருமடத்துடன் இணைந்து நடத்தும் தஞ்சாவூரிலிருக்கும் பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக் கட்டளைக்கும் இவ்விரு தொகுதிகளையும் அழகுற அச்சிட்டுக் குறித்த நேரத்தில் வடிவமைத்து வழங்கித் துணைபுரிந்த சிதம்பரம் சபாநாயகம் அச்சகத்தார்க்கும் எங்கள் நன்றி உரியது. குறிப்பாக, அச்சக உரிமையார் திரு. இரா. கௌதம சங்கர் அவர்களின் தனிப்பட்ட ஊக்கமும் உழைப்பும் தனிப்பட்ட நன்றிக்குரியன. அவர்களுடன் துணைபுரிந்த அவர்தம் துணைவியார், மேலாளர் திரு. மு. பாஸ்கரன் மற்றும் அச்சகப் பணியாளர் களுக்கும் மாநாட்டினர் சார்பில் நன்றி பாராட்டி மகிழ்கின்றோம்.

இவ் ஆய்வுமாலைக்குரிய ஆய்வு மலர்களை வழங்கிய ஆய்வாளர் அனைவரும் பாராட்டுதலுக்கும் வாழ்த்துக்கும் உரியவராவர். தமக்கிருக் கின்ற கல்விப் பணிகளுக்கிடையில் ஒன்பதாம் திருமுறை, திருமந்திரப் பாசுரங்களைப் பயின்று ஆய்வுக்கட்டுரைகளைப் பொருட் செலவுடன் அனுப்பி வைத்த அவர்களின் ஊக்கமும் ஆக்கமும் தாம் ஆய்வுமாலைக்கு வெற்றியைத் தந்தன. அவர்களின் பேருழைப்பு, தொடக்கநிலை அறிமுகங்கள் இளைய தலைமுறையினர்க்கும் நாளைய சமுதாயத்தினர்க்கும் ஒன்பது,

பத்தாம் திருமுறைகளை அறிவதில், ஆய்வதில், தோய்வதில், நல்ல நுழைவுச் சீட்டுகளாகப் பயன்படும் எனும் நம்பிக்கை எங்களுக்கு உண்டு. எனவே, அவர்கள் அனைவர்க்கும் பாராட்டுதலோடு கூடிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆய்வாளர்களோடு பார்வையாளர்களும் தனிப்பட்ட பாராட்டுதலுக்கும் நன்றிக்கும் உரியவர்கள். அவர்களின் தொடர்ந்த ஊக்கம் மாநாட்டின் வெற்றியில் ஒரு பங்கெனில் அது மிகையன்று.

எல்லாவற்றுக்கும் மேலாகத் தோன்றாத் துணையாக இருந்து திருவருள் பாலித்து, இம்மாநாடும், ஆய்வு மாலைகளும் நிறைவுறத் துணைபுரிந்த திருவருளை நினைந்து நினைந்து வணங்கி வாழ்த்தி நிறைவடைகிறேன்.

***முனைவர் கோ.ப. நல்லசிவம்***
*பதிப்பாசிரியர்*

நையாத மனத்தினனை
நைவிப்பான் இத்தெருவே
ஐயாநீ உலாப்போந்த
அன்றுமுதல் இன்றுவரை
கையாரத் தொழுது அருவி
கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ அருள் கோடைத்
திரைலோக்கிய சுந்தரனே.

# ஒன்பதாம் திருமுறை

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
　　தாம்பலர் ஏம்பலித் திருக்க
என்னெடுங் கோயில்நெஞ்சுவீற் றிருந்த
　　எளிமையை யென்றுநான் மறக்கேன்
மின்னெடும் புருவத் திளமிய லனையார்
　　விலங்கல்செய் நாடகசாலை
இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
　　இராசரா சேச்சரத் திவர்க்கே.

சைவத் திருமுறைகள் பனிரெண்டனுள் ஒன்பதாம் திருமுறையாக வைத்துப் போற்றப்படும் சிறப்பினை உடையன திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் ஆகும். பஞ்சபுராணம் எனத் தனியே வழிபாட்டில் இடம்பெறும் திருமுறைப் பனுவல்கள் ஐந்தில் இரண்டு திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் என்பது இதன் சிறப்பை மேலும் வெளிக்காட்டும்.

திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தமர், சேதிராயர் ஆகிய ஒன்பதின்மரும் திருவிசைப்பா அருளிய பெருமக்களாவர். இவர்களில் திருவாலியமுதர் புருடோத்தமர் இருவரும் வைணவ மரபில் வந்தவர்கள். கண்டராதித்தர், சேதிராயர், வேணாட்டடிகள் மூவரும் அரசமரபைச் சார்ந்தவர்கள். கருவூர்த்தேவர், திருமாளிகைத் தேவர் இருவரும் சித்தர்கள்.

தேவாரம் பாடிய மூவரைப்போல் திருவிசைப்பா அருளியவர்களும் தலங்கள்தோறும் சென்று பாடியுள்ளனர். இவ் ஒன்பதின்மர் பாடிய தலங்கள் மொத்தம் 14 ஆகும். அவை,

1. சிதம்பரம்
2. பூவணம்
3. திருவிடைமருதூர்
4. திருவாரூர்
5. திருவீழிமிழலை
6. திருவாவடுதுறை
7. கங்கைகொண்ட சோழபுரம்

8. திருக்களந்தை ஆதித்தேச்சரம்
9. திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம்
10. திருமுகத்தலை
11. திரைலோக்கிய சுந்தரம்
12. திருச்சாட்டியக்குடி
13. தஞ்சை இராசராசேச்சரம்
14. திருவிடைகழி

என்பனவாகும்.

**பண்கள்**

தேவாரப் பாடல்களைப் போலவே திருவிசைப்பா பாடல்களும் பண்முறை செய்யப்பட்டுள்ளன. திருவிசைப்பாவில் காணப்படும் பண்கள் மொத்தம் ஆறு ஆகும். அவை,

1. இந்தளம்
2. காந்தாரம்
3. சாளரபாணி
4. நட்டராகம்
5. பஞ்சமம்
6. புறநீர்மை

என்பனவாகும். இவற்றுள் சாளரபாணி எனும் பண் பன்னிரு திருமுறையுள் திருவிசைப்பாவில் மட்டுமே காணக்கிடைக்கிறது. பூந்துருத்தி நம்பிகாடநம்பி அருளிய 'முத்துவயிரமணி' எனத்தொடங்கும் பதிகம் இப்பண்ணில் அமைந்ததாகும்.

திருவிசைப்பா 28 பதிகங்களைக் கொண்டதாகும். திருப்பல்லாண்டையும் சேர்த்து 29 பதிகங்களாகும். மொத்தப் பாடல்கள் 301 எனத் தொகுக்கப்பட்டுள்ளது. இதில் 21 பதிகங்கள் பஞ்சமப்பண்ணில் அமைந்த சிறப்பினைக் கொண்டவையாகும்.

மேலும், திருவிசைப்பாத் தலங்களில் சிதம்பரம் மட்டும் பதினாறு பதிகங்களும் மற்ற தலங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பதிகமே பெற்றுள்ளன.

**சிறப்புக் குறிப்புடைய திருப்பதிகங்கள், பாடல்கள்**

| | | எண் |
|---|---|---|
| 1. | இறைவனது காட்டும் உபகாரமேயின்றிக் காணும் உபகாரம் | பதி. 1 |
| 2. | இறைவனது பாதாதிகேச வருணனை | பதி, 2, 22 |

3. இறைவன் மகேந்திர மலையில் உறையும் சிறப்பு பதி., 3
4. அகப்பொருட் பதிகங்கள் பதி. 3, 6, 7, 10, 12, 23, 25, 26, 27, 28
5. இறைவன் பன்றியின்பின் வேடனாய்ச் சென்றது பா. 23, 24, 25, 26, 28, 29, 286
6. தில்லை மூவாயிரவர் பற்றிய குறிப்பு பா. 24, 25, 30, 34, 186, 189, 196, 197
7. திருவீழிமிழலை ஐநூற்றந்தணர் பா. 54
8. இறைவன் அப்பர், சம்பந்தருக்குப் படிக்காசளித்தது பா. 57
9. ஆவடுதுறை ஆயிரம் பூசரர் பா. 58
10. அந்தாதி அமைப்புடைய பதிகங்கள் பதி. 6, 7, 25, 26, 28
11. முருகப்பெருமானைப் போற்றும் பதிகம் பதி. 7
12. ஐந்தெழுத்து ஓதி வழிபடுவார்க்கு இறைவனளிக்கும் பரிசு பா. 135
13. ஆரூர் வீதி விடங்கர்ச் சிறப்பு பா. 183, 184
14. கணம்புல்லர், கண்ணப்பர் குறிப்பு பா. 186
15. திருநாவுக்கரசர் பா. 184
16. திருஞானசம்பந்தர் பா. 188
17. சுந்தரர், சேரமான் பா. 189
18. தில்லைச் சிற்றம்பலத்துக்குச் சோழர் பொன் வேய்ந்தது பா. 202
19. உபமன்யு முனிவர் பா. 297
20. சண்டேசுரர் பா. 298

(நன்றி : ஒன்பதாம் திருமுறை - தருமையாதீனப் பதிப்பு)

**திருப்பல்லாண்டு**

திருவிசைப்பா பாடிய அருளாளர்களில் ஒருவரான சேந்தனார் அருளிய பதிகமே திருப்பல்லாண்டு எனும் தனிநூலாக இத்திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ளது. திருப்பல்லாண்டு இறைவனைப் பல்லாண்டு பாடி வாழ்த்துவதாக அமைந்ததாகும்.

தில்லையில் நகராமல் நின்ற, திருத்தேரை, சேந்தனார் திருப்பல்லாண்டு பாடியருளி நகர்த்தினார் என்பது வரலாறு.

**பல்லாண்டு பாடும் மரபு**

இறைவன் எக்காலமும் ஊண், உறக்கமின்றி விளங்கும் பெற்றியன், அருவம், உருவம், அருவுருவம் என மூன்றாகியும், இவற்றைக் கடந்தும் நிற்பவன், உறக்கமில்லாத இறைவனைப் பள்ளியெழுப்புவதாக ஒரு

புதிய மரபைத் திருப்பள்ளியெழுச்சி எனும் இலக்கிய வடிவில் ஏற்படுத்தியவர் மணிவாசகர். இதைப்போலவே சேந்தனாரும் இறைவனுக்கே திருப்பல்லாண்டு பாடி வாழ்த்துகிறார். இச்சிறப்பு வைணவ மரபிலும் உண்டு. தொண்டர்களன்றி இறைவனை வாழ்த்தும் உரிமையும் தகுதியும் வேறு யாருக்கு உண்டு! சேந்தனார் அருளிய பல்லாண்டில் சில துளிகள்;

''பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே''

''பண்டும் இன்றும் என்றும் உள்ளபொருள் என்றே
பல்லாண்டு கூறுதுமே''

''பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே''

''பரந்தும் நிரந்தும் வரம்பிலாப் பாங்கற்கே
பல்லாண்டு கூறுதுமே''

''பாவிக்கும் பாவகத் தப்புறத் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே''

''பாரும் விசும்பும் அறியும் பரிசுநாம்
பல்லாண்டு கூறுதுமே''

''பாலும் அமுதமும் ஒத்துநின் றானுக்கே
பல்லாண்டு கூறுதுமே''

''பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே''

''பழவடி யாரொடுங் கூடிஎம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே''

''பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும்
பல்லாண்டு கூறுதுமே''

''பந்தம் பிரியப் பரிந்தவ னேஎன்று
பல்லாண்டு கூறுதுமே''

எனவரும் வைர வரிகள் நினைந்து நினைந்து, நெகிழத் தக்கனவாம். இவற்றில் இறைவனின் அருளிச் செயல்கள், அடியார் தன்மைகள் என அனைத்துமே ஒருங்கே காணக்கிடைக்கின்றன.

**திருவிசைப்பா, திருப்பல்லாண்டு சிறப்புகள்**

ஒன்பதாம் திருமுறையாகிய இந்நூல்கள் இரண்டும் தேவாரப் பனுவல்கள் போன்றே 'ஏக தெய்வ வழிபாடு' எனும் ஓரிறைக் கொள்கையை உடையன.

சிவபரம்பொருளின் அருளைப் பெற எளியவழி பாடல்பாடி வழிபடுவது ஒன்றே எனத் தேவார மூவருக்குப் பின்னும் உறுதி செய்த பனுவல்கள் ஒன்பதாம் திருமுறையாகும். தேவாரமூவர் வரலாறுகளில் காணப்படும் அற்புதங்களைப் போலவே, ஒன்பதாம் திருமுறை அருளிய அருளாளர்களின் வரலாற்றிலும் அற்புதங்கள் பல நிகழ்ந்துள்ளன. அவற்றுள் சில வருமாறு :

1. சுடுகாட்டுப் பிண வாடையை நறுமணமாக்கியது (திருமாளிகைத் தேவர்)
2. கொங்கணச் சித்தர் கமண்டல நீரை வற்றச் செய்தது (திருமாளிகைத் தேவர்)
3. வேகவைத்த பயிற்றஞ் சுண்டலை விதைத்துப் பயிராக்கியமை (திருமாளிகைத் தேவர்)
4. திருவீழி மிழலைத் தேரினை ஓடச் செய்தமை (திருமாளிகைத் தேவர்)
5. சேந்தனார் அளித்த களியினை தில்லை நடராசப் பெருமானே உண்டு மகிழ்ந்தது
6. தில்லைத் திருத்தேரினைப் பல்லாண்டு பாடி ஓடச் செய்தது (சேந்தனார்)
7. சிவபெருமான், தவிட்டினை அமுதமாக உண்டது (சேந்தனார்)
8. தஞ்சைப் பெருவுடையார்க்கு அஷ்ட பந்தன மருந்தைச் சாற்றியது (கருவூர்த்தேவர்)
9. நெல்லையப்பர் ஆலயத்தைச் செழிக்கச் செய்தது (கருவூர்த்தேவர்)

என்பனவற்றைச் சுட்டலாம்.

திருமாளிகைத் தேவர், குருவிற்குப் பணிவிடை செய்யவும், அதேசமயம் சிவபூசை இடைவிடாது நிகழ்த்தவும் சிவபிரானை வேண்டித் தம் தவ வலிமையால் வேறு இரண்டு திருக்கரங்களைக் கொண்டார் என்பது அவரது திருவுருவம் தரும் வரலாறாகும்.

திருவாவடுதுறையில் மாசிலாமணி ஈசருக்குப் பூசனைகள் நடந்த பின்னர் (உச்சிக்காலம்) திருமாளிகைத் தேவருக்கும் அதே பூசனைகள் நடத்துவது தொன்றுதொட்ட மரபாயுளது. அதன் பின்னரே திருவாவடுதுறை மடத்தில் மகேசுவர பூசை நடைபெறும். இம்மரபு இன்றும் நடைமுறையில் உள்ளது. இதனை,

**பேசு புகழ்ச்சுப் பிரமணிய தேசிகன்பொன்**
**வீசு கழற்கடியேன் விண்ணப்பம் - நேசம்**
**வருதிரு மாளிகைத்தே வன்பூசை யாயே**
**கருதுபந்தி யாதல்வழக் கம்.**

எனும் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் தனிப்பாடலால் அறியலாம்.

இப்பேர்ப்பட்ட அருட் பனுவல்களையும், அருள் வரலாறுகளையும் தன்னகத்தே கொண்டது ஒன்பதாம் திருமுறை, இதனை நாளும் ஓதி நற்பயன் பெறுவோமாக.

நின்மலனின் அருளாலே நீத்துலக வாழ்க்கையினைச்
சொன்மயனைச் சிவனவனைத் துதித்தினிய சொலின்பல்எம்
புன்மையினைப் போக்கியமா ளிகைத்தேவன் முதற்புலவர்
நன்மலர்த்தாள் இணைபணிந்து மனத்தகத்து நாட்டுவமே

- அருணகிரிபுராணம்

**முனைவர் கோ.ப. நல்லசிவம்**

மன்னுக தில்லை வளர்க நம்பத்தர்கள்
வஞ்சகர் போய் அகலப்
பொன்னின் செய் மண்டபத்து உள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க
அன்ன நடை மடவாள் உமைகோன் அடியோமுக்கு
அருள் புரிந்து
பின்னைப் பிறவி அறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே

# திருமூலர் திருமந்திரம்

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே'

பன்னிரு திருமுறையுள் பத்தாம் திருமுறையாக ஒளிர்வது திருமூலர் அருளிய திருமந்திரமாகும். சைவ சமயத்தில் தோத்திரமாகவும் சாத்திர மாகவும் போற்றப்படும் சிறப்பு திருமந்திரத்திற்கு உண்டு. திருமூலர் 3000 ஆண்டுகள் வாழ்ந்து, ஆண்டுக்கு ஒரு பாடல் வீதம் 3000 பாடல் களைப் பாடினார் என்பது செவி வழிச் செய்தியாகும்.

சிவயோகியாக இம்மண்ணுலகில் அவதரித்தத் திருமூலர் மூலன் என்பவன் உடலில் பரகாயப் பிரவேசம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்) எனும் அட்டமா சித்தி சக்தியால் திருமூலர் எனப் பெயர் பெற்றார் என்பது இவர்தம் அருள் வரலாறு.

**திருமந்திரம் - நூலமைப்பு**

பெயர் திருமந்திரம், பிரிவுகள் தந்திரம், உட்பொருள் எந்திரம் எனும் சிறப்பினை உடையது திருமந்திரமாகும். இந்நூல் பாயிரம் தொடங்கி ஒன்பது தந்திரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை,

**பாயிரம்**

விநாயகர் வணக்கம் பாயிரத்தின் முன் அருளப்பட்டுள்ளது. (இதனை இடைச்செருகல் என்பாருமுளர்) அதனைத் தொடர்ந்து கடவுள் வாழ்த்து, நுதலிய பொருள், நூற்சிறப்பு, குருபாரம்பரியம், தம் வரலாறு, அவை யடக்கம், நூலின் அளவும் பயனும், குருமட வரலாறு எனும் பகுதி களைப் பாயிரம் உள்ளடக்கியுள்ளது.

**முதல் தந்திரம்**

சிவபரத்துவம் (திரிமூர்த்திகளின் சேட்ட கனிட்ட முறைமை), வேதச் சிறப்பு, ஆகமச் சிறப்பு, உபதேசம், யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, உயிர் நிலையாமை, கொல்லாமை, புலால் மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர் இழிவு, நல்குரவு, அக்கினி காரியம், அந்தணர் ஒழுக்கம், அரசாட்சி முறை, வானச் சிறப்பு, தானச் சிறப்பு, அறஞ்செய்வான் திறம், அறஞ்செயான் திறம்,

அன்புடைமை, அன்பு செய்வாரை அறிவன் சிவன், கல்வி, கேள்வி கேட்டமைதல், கல்லாமை, நடுவுநிலைமை, கள்ளுண்ணாமை எனும் இருபத்து ஏழு பகுதிகளைக் கொண்டது.

### இரண்டாம் தந்திரம்

அகத்தியம், பதிவலியில் வீரட்டம் எட்டு, இலிங்கபுராணம், தக்கன் வேள்வி, பிரளயம், சக்கரப் பேறு, எலும்பும் கபாலமும், அடிமுடி தேடல், சருவ சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம், கர்ப்பக்கிரியை, மூவகைச் சீவவர்க்கம், பாத்திரம், அபாத்திரம், தீர்த்த உண்மை, திருக்கோயிற் குற்றம், அதோமுக தரிசனம், சிவநிந்தை கூடாமை, குருநிந்தை கூடாமை, மாகேசுர நிந்தை கூடாமை, பொறையுடைமை, பெரியாரைத் துணைக்கோடல் எனும் இருபத்தைந்து பகுதிகளைக் கொண்டது.

### மூன்றாம் தந்திரம்

அட்டாங்கயோகம், இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, அட்டாங்கயோகப்பேறு, அட்டர்மசித்தி, கலைநிலை, காயசித்தி உபாயம், காலச்சக்கரம், ஆயுள் பரீட்சை, வாரசரம், வாரசூலம், கேசரி யோகம், பரியங்கயோகம், அமுரிதாரணை, சந்திரயோகம் எனும் இருபத்தியொரு பகுதிகளைக் கொண்டது.

### நான்காம் தந்திரம்

அசபை, திருவம்பலச்சக்கரம், அருச்சனை, நவகுண்டம், சத்திபேதம், வயிரவிமந்திரம், பூரணசக்தி, ஆதாரஆதேயம், ஏரொளிச் சக்கரம், வியரவச்சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதிச் சக்கரம், நவாக்கரி சக்கரம் எனும் பதின்மூன்று பகுதிகளை உடையது.

### ஐந்தாம் தந்திரம்

சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம், சரியை, கிரியை, யோகம், ஞானம், சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாசமார்க்கம், சாலோகமாதி சாரூபம், சாயுச்சியம், சத்திநிபாதம், புறச்சமய தூடணம், நிராசாரம், சிவநெறிச் சிறப்பு எனும் பத்தொன்பது பிரிவுகளை உடையது.

### ஆறாம் தந்திரம்

சிவகுருதரிசனம், திருவடிப்பேறு, ஞாதுரு ஞான ஞேயம், துறவு, தவம், தவதூடணம், அருளுடைமையின் ஞானம் வருதல், அவவேடம், தவவேடம், திருநீறு, ஞானவேடம், சிவவேடம், அபக்குவன், பக்குவன் எனும் பதினான்கு உட்பிரிவுகளை உடையது.

**ஏழாம் தந்திரம்**

ஆறாதாரம், அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவ லிங்கம், ஆத்தும லிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம், சம்பரதாயம், திருவருள் வைப்பு, அருள்ஒளி, சிவபூசை, குருபூசை, மாகேசுர பூசை, அடியார் பெருமை, போசன விதி, பிட்சா விதி, முத்திரை பேதம், பூரணக் குகை நெறிச் சமாதி, சமாதிக் கிரியை, விந்துற்பனம், விந்துசமயம், ஆதித்த நிலை, பிண்டாதித்தன், மனவாதித்தன், சிவாதித்தன், ஞானாதித்தன், பசு இலக்கணம், புருடன், சீவன், பசு, போதன், யந்திரியம் அடக்கும் அருமை, ஐந்திரியம் அடக்கும் முறைமை, அசற்குரு நெறி, சற்குரு நெறி, கூடா ஒழுக்கம், கேடுகண்டிரங்கல், இதோபதேசம் எனும் முப்பத்தெட்டு பிரிவு களைக் கொண்டது.

**எட்டாம் தந்திரம்**

உடலில் பஞ்ச பேதம், உடல்விடல், அவத்தைபேதம், மத்திய சாக்கிராவத்தை, அத்துவாக்கள், சுத்தநனவாதி பருவம், கேவல சகல சுத்தம், பராவத்தை, முக்குண நிர்க்குணங்கள், அண்டாதி பேதம், பதினொன்றாந் தானமும் அவத்தை எனக் காணல், கலவு செலவுகள், நின்மலாவத்தை, அறிவுதயம், ஆறந்தம், பதி, பசு, பாசம் வேறின்மை, அடிதலை அறியும் திறம் கூறல், முக்குற்றம், முப்பதம், முப்பரம், பரலக்கணம், முத்துரியம், மும்முத்தி, முச்சொரூபம், முக்கரணம், முச்சூனிய முத்தொந்தத்தசி, முப்பாழ், காரிய காரண உபாதி, உபசாந்தம், புறங் கூறாமை, அட்டதளகமல முக்குண அவத்தை, நவாவத்தை அபிமானி, சுத்தாசுத்தம், மோட்ச நிந்தை, இலக்கணாத்திரயம், தத்துவமசி மகா வாகியம், விசுவக்கிராசம், வாய்மை, ஞானிகள் செயல், அவா அறுத்தல், பத்தியுடைமை, முத்தியுடைமை, சோதனை எனும் நாற்பத்து மூன்று பிரிவுகளை உடையது.

**ஒன்பதாம் தந்திரம்**

குருமடதரிசனம், ஞானகுரு தரிசனம், பிரணவ சமாதி, ஒளிவகை, பஞ்சாக்கரம் - தூலம், பஞ்சாக்கரம் - சூக்குமம், அதிசூக்கும பஞ்சாக்கரம், காரண பஞ்சாக்கரம், மகா காரண பஞ்சாக்கரம், திருக்கூத்து, சிவானந்தக்கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக் கூத்து, ஆகாசப் பேறு, ஞானோதயம், சத்திய ஞானானந்தம், சொரூப உதயம், ஊழ் சிவரூபம், முத்திபேதம்கரும நிருவாணம், சூனிய சம்பாடணை, மோனசமாதி, வரையுரைமாட்சி, அவைஅந்தோர் தன்மை, தோத்திரம், சருவ வியாபகம் எனும் இருபத்தி ஒன்பது பகுதிகளைக் கொண்டது.

இவ் ஒன்பது தந்திரங்களும் காரணாகமம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பரம், மகுடம் என்னும் ஒன்பது ஆகமங்களின் சாரமாகத் திகழ்வதாகும்.

தருமையாதீனம் 26-வது குருமகாசந்நிதானம் அவர்கள் இவ் ஒன்பது தந்திரங்களையும்,

1. முதல் தந்திரம் நிலையாமை கூறுமுகத்தால் ஞானம் பெற அறம் உணர்த்துகிறது.
2. இரண்டாம் தந்திரம் புராணங்களின் வழியே சிவபராக்கிரமங் களையும் அவர்தம் புகழையும் பேசுகிறது.
3. மூன்றாம் தந்திரம் பெருமானை அடையும் யோக சாதனங் களைக் குறிப்பிடுகிறது.
4. நான்காம் தந்திரம் மந்திர யந்திர வழிபாட்டு முறைகளை விளக்குகிறது.
5. ஐந்தாம் தந்திரம் சைவத்தின் பிரிவுகளையும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகளையும் தெளிவிக்கிறது.
6. ஆறாம் தந்திரம் சிவமே குருவாக நின்று அருள் புரிவதையும் சற்குரு கிடைப்பது அவரவர் தவத்தின் பயனாலாகும் என்பதையும் உணர்த்துகிறது.
7. ஏழாம் தந்திரம் அண்டமும், பிண்டமும் இலிங்க உருவாய் உள்ளதையும், சிவபூஜை, குருபூசை ஐய்ய வேண்டிய அவசியத்தையும் அறிவிக்கிறது.
8. எட்டாம் தந்திரம் உயிர் எடுக்கும் உடல் பற்றிய அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் பற்றிய விளக்கங்களை கூறுகிறது.
9. ஒன்பதாம் தந்திரம் அகர, உகர, மகரமாகிய ஓங்காரப் பிரணவமே எல்லாவற்றிற்கும் மூலம் என்பதையும், தூல, சூக்கும பஞ்சாக்கரம் முதலிய ஐந்தெழுத்து உண்மைகளையும், ஐந்தொழில் நடனத்தையும் சிறப்புற விளக்குகிறது.

என இரத்தினச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

திருமூலர் தேவார மூவர் காலத்திற்கும் முந்தியவர் என்பது வரலாற்றாய்வாளர் பெரும்பாலோர் கருத்தாகும். திருமூலரை, அருளாளராகவும், சித்தராகவும், நாயனாராகவும், யோகியாராகவும் சைவ உலகம் போற்றுகிறது.

## திருமந்திர நெறி

திருமந்திரம் யோக, ஞான நெறிகளைப் பெரிதும் போற்றினாலும், அதற்கு அடிப்படையாக விளங்கும் திருக்கோயில் வழிபாட்டையும் சரியை கிரியை நெறிகளையும் விதந்தோதுகின்றது. இக்கருத்தை,

"நாடும் நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாகக் கொள்வானே"

என்ற பாடல் தெளிவுறுத்துகிறது.

அன்பு நெறிப்பட பூசனையே இறைவனை மகிழ்விப்பது என்றும், சிவமே அன்பின் வடிவம் என்றும் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

'அன்பே சிவம்' எனும் மந்திரம் இதற்குச் சான்று.

**அடியார் தொண்டு**

அடியார்க்குச் செய்யும் தொண்டு இறைவனை நேரிடையாகச் சென்றடையும் என்பதால் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என வலியுறுத்துகின்றார். அடியார்களை 'நடமாடும் கோயில்' என்றே அழைக்கிறார் திருமூலர்.

**நிலையாமை**

திருமந்திரத்தில் தொடக்க முதலே நிலையாமை பெரிதும் இடம் பெறுகிறது. நிலையாமையை வலியுறுத்தும் நோக்கம் நல்ல மனம், உடல் இருக்கும்போதே அறங்களைச் செய்து நிலையான சிவானந்தப் பேற்றினை உயிர்கள் அடைய வேண்டும் என்பதற்காகத்தான். உடலை இழுக்கு, சுமை என்றெல்லாம் பேசிய காலத்தில் இவ்வுடம்பில் இறைவன் குடிகொண்டுள்ளான் எனவே அதனைப் பேணுவது அவசியம் என்ற கருத்தில்,

**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே**

என்ற பாடலடி விளங்குகிறது.

நல்ல நிலைமையில் உடல் உள்ளபோதே தானம், தவம் இரண்டையும் செய்துவிட வேண்டும் என்று, பெரிதும் வலியுறுத்தும் திருமூலர் "யாவர்க்குமாம்...." என்ற எளிய நடைமுறை அறம் செயல் வகையையும் அருளுகின்றார்.

**ஒன்றே குலம், ஒருவனே தேவன்**

இறைவன் ஒருவனே என்ற அடிப்படைத் தத்துவத்தையும் மனிதன் மட்டுமல்லாது அனைத்து உயிர்களும் ஒரே குலம் என்ற ஆன்மநேய ஒருமைப்பாட்டையும் உலகில் முதன்முதலில் பதிவு செய்தவர் திருமூலரேயாவார்.

கடவுள் வாழ்த்தைத் தொடங்கும்போதே,

'ஒன்றவன் தானே'....

என்று குறிப்பிடுகின்றார். உயிர்க்குலமனைத்தும் இன்புற்றுவாழ, "நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்றருளுகின்றார்.

**திருமந்திரத்தில் சில துளிகள்**

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

"பதியணுகில் பசு பாசம் நிலாவே"

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே"

'ஆர்க்கும் இடுமின்'

'முப்புரமாவது மும்மல காரியம்'

'.....ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே'

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு"

'நன்றே நினைமின்'

'ஆசை அறுமின்கள்'

'ஆசைவிட விட ஆனந்தம் ஆமே'

'அகத்தில் கண் கொண்டு காண்பதே ஆனந்தம்'

'ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந் தானே'

"முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரிவளங் குன்றும்
கன்னம் களவு மிகுத்திடும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே"

'கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே'

'நல்லாரைக் காலன் நணுகிநில் லானே'

'கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே'

'கல்லாதமூடர் கருத்தறி யாரே'

எனவரும் பாடலடிகளை நாளும் நினைந்து இன்புறலாம்.

**திருமந்திரத்தின் முடிந்த முடிபு**

திருமூலர் திருமந்திரத்தைத் திருக்கோயில் வழிபாட்டில் தொடங்கி ஞான வழிபாட்டில் நிறைவு செய்கிறார். திருமந்திரம் கூறும் அனைத்து தத்துவங்களையும் உள்ளடக்கினால் ஒரே தத்துவமாக; முடிந்த முடியாக ஒன்று வெளிப்படும். அப்பேருண்மையை உணர்ந்தால் அதுவே முத்திக்கு வித்திடும். அவ்வுண்மை,

'சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனொடு ஒப்பார் இங்கும்யாவரும் இல்லை'

என்பதாகும். இதைத்தான் ஒருவனே தேவன் என்று 'தேற்றாகாரம்' இட்டு அருளியுள்ளார்.

திருமந்திரம் ஓதித் திருவருள் பெறுவோமாக.

**முனைவர் கோ.ப. நல்லசிவம்**

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

# 1. திருமந்திரத்தில் வேதாகமச் சிறப்புகள்

கயிலைமாமுனிவர் காசிவாசி
திருவளர்திரு முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள்
அதிபர், காசித்திருமடம், திருப்பனந்தாள்.

வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே — திருமந்திரம் 51

திருமந்திரம் 3000 பாடல்களைக் கொண்டது. திருமூலர் ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து திருமந்திரமாக அருளினார் என்பது வரலாறு.

சைவ சமயத்தில் தோத்திரமாகவும் சாத்திரமாகவும் விளங்கும் சிறப்பினைக் கொண்ட ஒரே நூல் திருமந்திரமாகும். வாழ்க்கையின் நிலையாமையை வலியுறுத்தி ஆன்ம ஈடேற்ற வழிகளை எளிய தமிழ் நடையில் அருளிய சிறப்பு திருமூலருக்கு உண்டு.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்'

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்'

'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்'

'சிவசிவ என்றிடத் தீவினை மாளும்'

'உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே'

'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்

தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே'

எனும் அருள்மொழிகளை உலகுக்கு உணர்த்திய பெருமை திருமூலரையே சாரும்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு நெறிகளை முதன்முதலில் விளக்கிய நூல் திருமந்திரமாகும். இயமம் முதலிய எண்வகை யோக முறைகளையும் விளக்கி ஞான நிலையை அடையும் வழியை தெளிவுபடுத்தியுள்ளார் திருமூலர்.

**வேதம்**

இறைவனே வேதத்தை அருளியவன் எனவும், இறைவனே வேதமாக உள்ளான் எனவும் அருளாளர்கள் பலவிடங்களில் அருளியுள்ளனர். வேதத்தின் உட்பொருளாக, உயிர் நாடியாக விளங்குவது நமசிவாய எனும் ஐந்தெழுத்து மந்திரமேயாகும். இக்கருத்தைத் திருஞானசம்பந்தர்,

**வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது**
**நாதன் நாமம் நமச்சி வாயவே**

என்று அருளியுள்ளார்.

நால்வருக்கும் முன்னோராகிய திருமூலர் வேதத்தில் இல்லாத அறம் வேறு எங்கும் இல்லை என்று உறுதியாகக் குறிப்பிட்டுள்ளார். வேதச் சிறப்பைத் திருமூலர் இறைவனைப் போற்றும் முகத்தான் பாடிய கடவுள் வாழ்த்தை அடுத்து வைத்துள்ளார். இவ்வரிசைமுறையே வேதத்தின் உயர்தன்மையை உரைக்கும். வேதம் இறைவனுக்கு அடுத்த நிலையில் உள்ளதையே இவ்வமைப்பு காட்டுகிறது. வேதத்தின் சிறப்பைத் திருமூலர்

.................. தர்க்க
**வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற**
**வேதத்தை ஓதியே விடுபெற் றார்களே**

என அருளியிருப்பதை நோக்கும்போது, இதில் மாற்றுக் கருத்துக்கே இடமில்லை என்ற உண்மை புலப்படுகிறது.

ஈண்டு திருஞானசம்பந்தரின்,

**'ஏதுக்களானும் எடுத்த மொழியானும் மிக்குச்**
**சோதிக்க வேண்டா'**

என்ற பொன்மொழி ஒப்பு நோக்கத்தக்கது.

எனவே வேதத்தை விமர்சனப்பொருளாக்குவது சைவ சமயத்தில் இருப்போர்க்கு அழகல்ல. நால்வர் அருள்மொழியைப் போற்றவந்த சைவ எல்லப்ப நாவலர், **'நான்மறைச் செம்பொருள் வாய்மை வைத்த சீர்த்திருத் தேவாரமும் திருவாசகமும்'** என்றே பதிவு செய்துள்ளார். சைவமும் தமிழும் எப்படி பிரிக்க இயலாததோ, அதே போல வேதமும் சைவமும் ஆகும்.

**நால் வேதம்**

நால் வேதத்தில் இருக்கு வேதம் தலைமையானது. இவ் இருக்கு வேத உட்பொருளாய் இருப்பவன் சிவபெருமான். இக்கருத்தைத் திருமூலர்,

**இருக்குஉரு வாம்எழில் வேதத்தின் உள்ளே**

என்ற பாடலடியில் விளக்குகிறார். மேலும் இறைவனே நால்வேதத்தின் ஆறு அங்கங்களாகிய சிட்சை, கற்பம், வியாகரணம், சந்தோவிசிதி, சோதிடம், நிருத்தம் என்பனவற்றையும் அருளினான் என்பதையும்,

**'ஆறங்க மாய்வரும் மாமறை ஓதியை'**

என்ற திருமந்திரப் பாடலடி விளக்குகிறது.

சைவம் வேதத்தின் வழி பிறந்த சமயம் ஆதலின், பின்னர் வந்த சேக்கிழார் பெருமான், திருஞானசம்பந்தரின் அவதார நோக்கத்தைப் பாடுங்கால்,

**'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க'**

என்று வேத நெறியை முன்னிறுத்துகிறார் என்பதும் ஈண்டு குறிக்கத்தக்கது.

**ஆகமம்**

ஆகமம் என்ற சொல்லுக்கு மரபாக வருவது என்பது பொருளாகும். சிவபெருமானே ஆகமத்தையும் அருளி, தானே ஆகமமாகவும் உள்ளான் என்பதை மணிவாசகர்,

**'மன்னு மாமலை மகேந்திர மதனில்**
**சொன்ன ஆகமம்......'**

**'ஆகமாகி நின்று அண்ணிப்பான்'**

என்ற திருவாசகத் தொடர்களால் குறிக்கின்றார்.

திருமூலர் வேதச் சிறப்பை அடுத்து ஆகமச் சிறப்புகளை விதந்தோது கின்றார். பொதுவாகச் சைவ ஆகமங்கள் 28 என்பர். அவை, காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சிஷ்மம், புட்கரம், அம்ஸிமான், சுப்பிரபேதம், பஜயம், நிச்வாசம், சுவாயம்புவம், அக்நேயம், வீரம், ரௌரவம், விமலம், சிந்திருளம், பிம்பம், புரோத்சிதம், லசிதம், சித்தம், சந்தானம், சர்மபாத்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம், மகுடம் என்பனவாகும்.

இவற்றைச் சிவபெருமான் தன் ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்னும் ஐந்து முகங்களில் ஈசானம் எனும் முகத்திலிருந்து அறுபத்தாறு பேர்களுக்கு அருளினான் என்பது திருமந்திரம் வாயிலாக அறியமுடிகிறது. எண்ணளவில் 28 ஆகமங்கள் என்று திருமூலர் குறிப்பிட்டாலும், 1. காரணம், 2. காமிகம், 3. சிந்தியம், 4. சுப்பிரம், 5. வீரம், 6. மாதுளம், 7. காலோத்திரம், 8. மகுடம், 9. யாமளம் என்ற ஒன்பதை மட்டுமே பெயர் குறிப்பிட்டு அருளியுள்ளார். மேலும் இவ் ஒன்பது ஆகமங்களைச் சிவபெருமான் நந்தியெம்பெருமானுக்கு உபதேசம் செய்ததாகவும் குறித்துள்ளார். இவ் ஒன்பது ஆகமங்களும் குருபரம்பரையாய் நந்தியெம்பெருமான் தொடங்கிப் பின்னோர்க்கு உபதேசிக்கப்பட்டவை யாகும்.

மேலும் ஆகமங்கள் கணக்கற்ற கோடிகளாய் விரிந்தன என்ற குறிப்பையும் திருமந்திரம் வாயிலாக அறியமுடிகிறது.

ஆகமச் சிறப்பைக் குறிப்பிடும் இடத்தில்தான் திருமூலர் வடமொழி, தமிழ் குறித்த ஒரு பேருண்மையைப் புலப்படுத்துகிறார். அது, சிவபெருமான் வடமொழியையும் தமிழ் மொழியையும் ஏககாலத்தில் தோற்றுவித்தருளினான் என்பதாகும். இதனை,

**'மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்று**
**ஏரியும் நின்றங்கு இளைக்கின்ற காலத்து**
**ஆரிய மும்தமி ழும்உட னேசொலிக்**
**காரிகை யார்க்குக் கருணைசெய் தானே'**

என்ற பாடலின் மூலம் உணரலாம்.

வடமொழியா? தமிழா? என்ற விண் வாதத்திற்கெல்லாம் முற்றுப் புள்ளி வைப்பது போல அமைந்த இப்பாடல் குறிப்பிடத்தக்கதாகும். சிவபெருமானுடைய இரு கண்களெனத் திகழ்வன தமிழும் வடமொழியும் என்ற உண்மையை உணர்ந்தால் மொழிப் பிரச்சனைக்கே இடமில்லை.

எனவே சிவபெருமான் அருளிய வேதாகமத்தை, அதன் பாரம்பரிய மரபைப் போற்றுவதே சைவர்களின் கடமையும் பொறுப்புமாகும். திருமூலர் வழிவந்த சமயாச்சாரியார்கள் நால்வரும் உரைத்த மொழியிலும் இக்கருத்துதான் விளங்குகிறது.

சமயாச்சாரியார்களைப் போற்றி வழிபடும் நாம் அவர்கள் சென்ற வழியில் செல்வதுதான் பெருமையும், சிறப்பும் ஆகும்.

# 2. தில்லையும், திருவீழிமிழலையும்

புலவர் அரு. அப்பாசாமி, பாகூர்.

சைவத் திருமுறைகளான ஒன்பது, பதினொன்று இரண்டும் தொகை நூல்களாகும். அவற்றுள் ஒன்பதாந்திருமுறையானது திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பது ஆசிரியர்கள் பாடிய பதிகங்களின் தொகுப்பு ஆகும். இது திருவிசைப்பாமாலை எனவும் வழங்கப்படும்.

திருவிசைப்பாக் கொண்ட தலங்கள் பதினான்கு. அவற்றுள் ஆறு தலங்கள் தேவாரப் பாடல் பெற்றவை. அவை: கோயில் (சிதம்பரம்) திருவீழிமிழலை, திருஆவடுதுறை, திருப்பூவணம், திருஇடைமருது, திருஆரூர் என்பன. ஏனையவை (பாடல் பெறாதவை) திருவிடைக்கழி, களந்தை ஆதித்தேச்சுரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கியசுந்தரம், கங்கைகொண்ட சோழேச்சுரம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சுரம் என்பன.

மேற்சுட்டிய பாடல் பெற்ற ஆறு தலங்களுள் தில்லைத் திருத்தலமும் திருவீழிமிழலையும் இங்கு கட்டுரைப் பொருளாக அமைகின்றன.

கோயில் என்றாலே சிதம்பரத்தைக் குறிக்கும் என்பர். சிவநெறிச் செல்வர்களால் கோயில் எனச் சிறப்பித்துப் போற்றப் பெறுவது பெரும் பற்றப் புலியூராகிய தில்லைப்பதி. இது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் முத்திறத்தாலும் சிறந்து விளங்குகிறது. இதனை, "தீர்த்த மென்பது சிவகங்கையே, ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே, மூர்த்தியம்பலர் கூத்தன் துருவே" எனவரும் குமரகுருபர அடிகளின் பாடலால் அறியலாம்.

இத்தலத்திற்கு வழங்கும் வேறுபெயர்கள்; பெரும் பற்றப் புலியூர் - பெரும் பற்றினால் புலிப்பாதன் பூசித்த ஊராதலால் இப் பெயர் பெற்றது. சிதம்பரம் (சித்+அம்பரம்) சித் - அறிவு, அம்பரம் - வெட்டவெளி. ஞானாகாசம் ஆதலால் இப் பெயர் பெற்றது. தில்லைவனம் : தில்லை என்னும் மரமடர்ந்த காடாயிருந்ததால் இப்பெயர் பெற்றது.

திருமூலட்டானக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருப்பெயர் - மூலட்டானேசுவரர். இறைவியின் திருப்பெயர் உமையம்மை. சிற்றம்பலத்தில் ஆனந்த தாண்டவம்புரியும் இறைவரின் திருப்பெயர் - நடராசர், கூத்தப்பெருமான். இறைவியின் திருப்பெயர் - சிவகாமசுந்தரியார்.

**தில்லைத்திருத்தலம்**

தமிழகத்தில் தேவார ஆசிரியர்களால் பாடப்பட்ட 276 சிவத் தலங்களுள் தில்லைத் திருத்தலம் தலைமைச் சிறப்பு வாய்ந்தது.

இத்தலத்திற்குத் தேவாரப் பதிகம் பதினொன்றும், திருவாசகப் பதிகம் இருபத்தைந்தும், திருக்கோவையாரும் திருவிசைப்பாப்பதிகம் பதினைந்தும் திருப்பல்லாண்டும், பத்தாந் திருமுறையில் சில மந்திரங் களும் பதினோராம் திருமுறையில் கோயில் நான்மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தங்களும் பெரியபுராணமும் ஆக பல அருட் பனுவல்கள் இத்தலத்திற்கு உள்ளன. தமிழில் கோயிற்புராணம், சிதம்பர புராணம், சபாநடேசபுராணம் என்னும் புராணங்களும் சூதசம்மிதை, சிதம்பரமான்மியம், புண்டரீகபுர மான்மியம், வியாக்கிரபுரமான்மியம் முதலியவை வடமொழியிலும் உள்ளன. குமரகுருபரரின் சிதம்பரம் மும்மணிக்கோவை, சிதம்பரம் செய்யுட்கோவை, சிவகாமி அம்மை, இரட்டைமணிமாலை தில்லைக்கலம்பகம் முதலியவை இத்தலத்திற் குரியனவாகும்.

**தலப்பெருமை**

சிதம்பரம் பஞ்சபூதத் தலங்களுள் ஒன்றான ஆகாயத் தலமாக விளங்குகிறது. இத்தலச் சிறப்பு பின்வருமாறு கூறப்படுகிறது. சித்சபை என்று சொல்லப்படுகிற பொன்னம்பலத்தின்மேல் ஒன்பது தங்கக் கலசங்கள் உள்ளன. இவை ஒன்பது சக்திகளாகும். ஓங்காரம் இதயத் துடிப்பின் ஓசையாகும். ஓங்காரத்திற்கு 64 கலைகள் உண்டென்று திருமந்திரம் கூறுகிறது. அதற்காக 64 கைம்மரங்கள் உள்ளன. 21,000 ஓடுகள் வேயப் பட்டுள்ளன. இவை மனிதனால் ஒவ்வொரு நாளும் விடப்படுகின்ற சுவாசங்களின் எண்ணிக்கையாகும் உடம்பு முழுவதுமான நாடிகளின் தலைமையிடம் இதயமாகையால் 72,000 ஆணிகள் இங்குள என்பர். சிவபஞ்சாட்சரம் ஓங்காரமேயாகையால் 5 படிகள் உள்ளன. சித்சபைத் தூண்கள் ஐந்து பூதங்களுக்கும் எண்ணிக்கையாயின. பஞ்சபிராணன் என்பதாலும் ஐந்து சபைகள் உள்ளன எனக் கூறலாம். பிரம்ம பீடத்தின் பத்துத் தூண்கள் தசநாடிகளை உணர்த்தும். தவிர இவற்றினை மேலே உள்ள ஆறு தூண்கள் ஆறு சாத்திரங்களையும் நான்கு தூண்கள் நான்கு வேதங்களையும் குறிப்பதாகவும் கூறப்படுகிறது. கனகசபையில் உள்ள பதினெட்டுத் தூண்களும் பதினெட்டுப் புராணங்களைக் குவித்தன.

**கோயிலமைப்பு**

இக்கோயில் 51 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. நான்கு பக்கங்களிலும் கம்பீரமான நான்கு இராசகோபுரங்கள் உள்ளன.

இவற்றுள் கிழக்குக் கோபுரம் குலோத்துங்க சோழனாலும், மேற்குக் கோபுரம் விக்கிரம சோழனாலும் தெற்குக் கோபுரம் காடவராயன் கோப்பெருஞ்சிங்கனாலும், வடக்குக் கோபுரம் கிருஷ்ணதேவராயராலும் கட்டப்பட்டன. இராசகோபுரவாயிலின் இரு பக்கங்களிலும் சிவபெருமான் ஆடிய 108 தாண்டவங்கள் சிற்ப வடிவங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. மற்றொரு கோபுரத்தில் மகளிர் ஆடுவது போன்ற 108 கர்ண சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன. ஆடவல்லானது ஆலயமாகையால் எங்கும் ஆடற் கலையின் வடிவங்கள் சிற்பங்களாக மலர்ந்துள்ளன.

**சிதம்பரரகசியம்**

சித்சபையில் சபாநாயகரின் வலப்பக்கத்தில் உள்ளது ஒரு சிறுவாயில். இதில் உள்ள திரை அகற்றப்பட்டதும் கூட ஆரத்தி காட்டப்படும். இதனுள்ளே திருவுருவம் ஏதும் தோன்றாது. தங்கத்தாலான ஒரு வில்வதளம் காட்சி யளிக்கும். மூர்த்தி இல்லாமலேயே வில்வ தளம் தொங்கும் இறைவன் இங்கு ஆகாச உருவில் இருக்கிறான் என்பதுதான் சிதம்பர ரகசியம்.

இப்புனித தலத்தில் பெருஞ்சிறப்புற்று விளங்குவன ஐந்து சபைகள். அவை: சிற்றம்பலம், பொன்னம்பலம், பேரம்பலம், நிருத்தசபை, ராசசபை. **சிற்றம்பலம்** - நடராசப்பெருமான் திருநடம்புரிந்தருளும் இடம் சிற்றம்பலம். இதனையே சித்சபை என்பர். இதற்கு முதலிற் பொன் வேய்ந்தவன் இரண்யவர்மன் என்னும் பல்லவ மன்னன் எனக் கோயில் புராணம் கூறுகிறது. இது "தூயசெம் பொன்னினால் எழுதிமேய்ந்த சிற்றம்பலம்" என்றும், "தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்" என்றும் அப்பர் மூர்த்தி களால் விளக்கப்படுகிறது. **பொன்னம்பலம்:** பெருமான் அபிடேகம் கொண்டருளும் இடம் : சிற்றம்பலத்துக்கு முன் உள்ளது. **பேரம்பலம் :** இதனைத் தேவ சபை என்பர். தேவாரம் முதல் திருமுறையில்,

"நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம்பலம்" (1.80.4)

என்று சம்பந்தமூர்த்திகளாற் கூறப்படுகிறது. **நிருத்தசபை :** பெருமான் ஊர்த்துவ தாண்டவம் புரிந்தருளும் இடம் : கொடிமரத்திற்கருகில் உள்ளது. இராசபை என்பது ஆயிரங்கால் மண்டபத்தைக் குறிக்கும்

**அம்பலத்தில் ஆடும் கூத்தன்**

புகழ்பூத்த சோழர்களின் படைப்புகளில் மகுடமாகத் திகழ்வது ஆட வல்லானின் அழகிய வடிவமாகும். அவற்றில் உயர்ந்தது தில்லைக் கூத்தனின் திருமேனியாகும். அதுவே பொன்னம்பலத்தின் நடுவே நின்றாடுகிறது.

**கல்வெட்டு**

பிற்காலச் சோழர்களில் முதலாம் இராசராசன் உள்ளிட்ட பல சோழ மன்னர்கள் காலங்களிலும், பாண்டியர்களில், சடையவர்மன் திரிபுவன

சக்கரவர்த்தி வீரபாண்டியன் உள்ளிட்ட பல பாண்டிய மன்னர் காலங்களிலும் பல்லவர்களில் பவனியாளப் பிறந்தான் கோப்பெருஞ்சிங்கதேவன் காலங்களிலும் மற்றும் விஜயநகர வேந்தர் காலங்களிலும் பொறிக்கப் பட்ட கல்வெட்டுக்கள் 271 உள்ளன.

**திருவிழாக்கள்**

இத்திருக்கோயிலில் ஆனித் திருநாள், மார்கழித் திருநாள், மாசித் திருநாள் இவைகள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்தன. மாசித் திருநாளில் திருத்தொண்டத் தொகை விண்ணப்பஞ் செய்யப்பெற்று வந்தது. இவைகளின் பொருட்டு முதலாம் இராசேந்திர சோழ தேவரின் அனுக்கி நக்கன் பரவை என்னும் அம்மையார் 44 வேலி நிலங்களை இராசேந்திர சோழ தேவர் வழங்கி அருளின பொன்னைக் கொண்டு வாங்கி அளித்திருந்தனர். தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் ஆனந்த தாண்டவம் செய்தருளும் நடராசப் பெருமான் சோழ மன்னர்களின் குல தெய்வமாவர். இச்செய்தி "தன்குல நாயகம் தாண்டவம் பயிலும் செம்பொன் அம்பலஞ்சூழ் திருமாளிகையும்" என்னும் திருமழபாடி விக்கிரம சோழனின் கல்வெட்டால் அறியலாம். மேலும் சிதம்பரம் சோழ மன்னர்களின் முடிசூட்டு நகரங் களிலும் ஒன்றாகும். இது "தில்லைத் திருநகர் சிறப்புடைத்தாகத் திருமுடி சூடிய" ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு எட்டாவது" எனத் தொடங்கும் திருமாணிக்குழிக் கல்வெட்டால் அறியலாம்.

**திருமாளிகைத் தேவர்**

இவர் பாடிய பதிகங்கள் ஒன்பதாந் திருமுறையின் தொடக்கத்தில் அமைக்கப்பட்டுள்ளன. இவர் தில்லையில் வழிபட்டிருந்து அங்கே தமக்குத் திருமடம் கட்டிக்கொண்டு வாழ்ந்து உரிய காலத்தில் முத்தி பெற்றார் எனக் கருதுவர்.

இவர் பாடிய பதிகங்கள் நான்கு முதற்பதிகம் ஒளிவளர் விளக்கே என்று தொடங்குவது இப்பதிகம் சிறந்த சமயப் பொருளை உள்ளடக்கியது. "ஒளிவளரும் விளக்கே! அழியாத ஒப்பற்ற பொருளே! உணர்வின் சூழ்நிலையைக் கடந்த உணர்வே! தெளிவான பளிங்கின் திரண்ட குன்றமே! சித்தத்துள் தித்திக்கும் தேனே! அன்பு வளரும் உள்ளத்து இன்புறும் கனியே! அம்பலத்தை ஆடும் அரங்கமாகக் கொண்டு, அப்பெரு வெளியிலே தெய்வக் கூத்து உகந்தாடும் பெருமானே! உன்னைத் தொண்டனேன் விளம்புமாறு நீ உண்ணின்று விளம்புவாயாக.

இறைவன் அறிவித்தாலன்றி அறியும் இயல்பு இல்லாதவை உயிர்கள் ஆதலின், யான் விளம்புதற்கும் பணிதற்கும் முதலிய எச்செயற்கும் நீ என்னுள் நின்று கூட்டினாலொழிய யான் செயலற்றவனே என்று திருமாளிகைத் தேவர் கூறும் பொருள் நுட்பம் சாத்திர அடிநிலைக் கொள்கையாக உள்ளது.

இரண்டாம் பதிகம் "உயர்கொடி ஆடை" எனத் தொடங்குவது. பாடல்கள் பாதாதிகேச முறையில் துதிப்பனவாக உள்ளன. சேவடி, சிலம்பு, கணைக்கால், குறங்கு, நிதம்பம், திருவயிற்றுந்தி, உதரம் பவளவாய், மலர்முகம், செஞ்சடை என்ற உறுப்புக்கள் முறையே பாடப்படுகின்றன.

மூன்றாம் பதிகம் "உறவாகிய யோகம்" என்பது. இது அகத்துறையில் அமைந்து தலைவனைப் பிரிந்த தலைவியின் தாய்க் கூற்றாக அமைந்துள்ளது.

நான்காம் பதிகம் "இணங்கிலா ஈசன்" என்ற தொடக்கமுடையது. இப்பதிகப் பாடல்களின் முதல் ஈரடிகளில் தில்லைவாணனைக் கூறி "அவனுடன் இணங்காதவரைக் காணா கண்; வாய் பேசாது அப்பேய் களோடே" என்று கூறுகிறார்.

இதுவரை, தில்லைத் திருத்தலத்தைப் பற்றிச் சில செய்திகளை யறிந்தோம். இனி, திருவீழிமிழலை பற்றிக் காண்போம்.

**திருவீழிமிழலை**

திருவாரூர் மாவட்டம் காவிரித் தென்கரைத் திருமுறைத் தலங்களுள் 61-ஆவது தலமாகத் திகழ்கிறது. மிழலையென்பது ஊர்ப்பெயர்; வீழி என்பது தலத்திற்குரிய கொடியெனவே கொடியின் பெயரால் வீழிமிழலையென வழங்கப்பெறுகிறது.

கல்யாணபுரம், பூ கயிலாயம், பஞ்சாக்கரபுரம், தட்சிணகாசி, ஷண்மங்கலஸ்தலம், சுவேதகானனம், ஆகாச நகரம், பனசாரண்யம்,. நேத்திரார்ப்பணபுரம் நேஜிநீவனம் என்ற பெயர்களாலும் அழைக்கப்படுகிறது. மேலும் பல பெயர்கள் இதற்கு வழங்கப்படுகிறது.

இங்கே சிவபெருமான் வீழியழகர், நேத்திரார்ப்பணேசுவரர் எனவும் இறைவி சுந்தர குஜாம்பிகை, பெருநல மாமுலையம்மை எனவும் திருப்பெயர் கொண்டுள்ளனர்.

சக்கரம் பெறவேண்டித் திருமால் ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு வழிபடும்பொழுது ஒருநாள் ஒரு பூ குறைவுபடத் தமது கண்ணை யிடந்து சாத்திச் சக்கரத்தைப் பெற்ற தலம். இச்செய்தி,

"நீற்றினை நிறையப்பூசி நித்தல் ஆயிரம் பூக்கொண்டு
ஏற்றுழி ஒருநாள் ஒன்று குறையக் கண்ணிறைய விட்ட
ஆற்றலுக்கு ஆழிநல்கி அவன்கொணர்ந்து இழிசுங்கோயில்
வீற்றிருந்தளிப்பர் வீழிமிழலையுள் விகிர்தனாரே"

என்னும் இப்பதிக்குரிய அப்பர் பெருமானின் திருநேரிசைப் பாசுரத்தால் அறியலாகும்.

மணவாளக் கோலத்தோடு எழுந்தருளியிருக்கும் இறைவரின் திருவடியில் திருமால் தமது கண்ணைப் பறித்து அர்ச்சித்த அடையாள மாகக் கண்ணும் கீழே சக்கரமும் இருக்கின்றன.

இறைவன் எழுந்தருளியிருக்கும் விமானத்திற்கு விண்ணிழி விமானம் என்று பெயர். இவ்விமானம் திருமால் விண்ணிலிருந்து கொண்டு வந்து இறக்கியது என்பதை இப்பதிக்குரிய ஞானசம்பந்தர் பாடல் பகர்கிறது.

''தன்றவம் பெரிய சலந்தர னுடலந்
தடிந்தசக் கரமெனக் கருளென்
றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத்
திறையவன் பிறையணி சடையன்'' (3.119.7)

மிழலை அப்பர் பெருமானுக்கும் சம்பந்தப் பெருந்தகை யார்க்கும் இறைவர் படிக்காசு கொடுத்தருளி அவர்களின் மூலம், சூழ்ந்திருந்த அடியார் கூட்டத்திற்குப் பஞ்சமுள்ள காலத்தில் அமுதளித்த பதி.

மேற்சுட்டிய இருவருக்கும் சிவபெருமான் படிக்காசு கொடுத்ததன் காரணம் தமிழோடு இசை கேட்கும் இச்சைப் பற்றியேயாம் என்பதைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள், ''திருமிழலையிலிருந்து நீர் தமிழோடிசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கினீர்'' எனக் குறிப்பிடுகின்றார்.

சிவபெருமான் சம்பந்தர்க்கு வாசியுள்ள காசையும், அப்பர்க்கு வாசியில்லாக் காசையும் கொடுத்ததன் காரணத்தைச் சேக்கிழார் ''திருமாமகனார் ஆதலினால் காசி வாசியுடன் (வட்டம்) பெற்றார். கைத்தொண்டாகும் படியினால் வாசியில்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர்'' என இத்தலத்து நிகழ்ச்சியில் குறிக்கின்றார்.

இக்கோயில் கருவறை 30 அடி சதுரவடிவில் உள்ளது. மூலவர் சுயம்புலிங்கமாகும். மூலவரின் பின்புறச் சுவரில் சிவபெருமானும் பார்வதியும் மணக்கோலத்தில் சிற்பவடிவில் திகழ்கின்றார். வீழிநாதர் கார்த்தியாயினியைத் திருமணம் செய்துகொண்ட தலபுராண நிகழ்ச்சியை இது நினைவூட்டுகிறது. கருவறை மண்டபத்தில் மணக்காட்சியை நினைவுபடுத்தும் வகையில் பந்தக்கால்கள் கற்றூண்களாக உள்ளன.

**வௌவால் நத்திமண்டபம்**

இக்கோயிலின் சிறப்பு அம்சங்களுள் வௌவால் நத்தி மண்டபமும் ஒன்று. இது 175 அடி நீளமும் 75 அடி அகலமும் கொண்டுள்ளது. நடுப் பகுதி 25 அடி அகலமும் 85 அடி நீளமும் கொண்டு தூண்கள் இல்லாமல் அகலமான அமைப்பில் சுண்ணாபினால் ஒட்டிக்கட்டப்பட்டுள்ளது. திருக்கல்யாண உற்சவம் இம்மண்டபத்தில்தான் நடைபெறும். கட்டட வேலைப்பாட்டில் அரிய ஒன்றாக இது கருதப்படுகிறது.

இத்தலத்திற்குச் சம்பந்தர் பதிகம்-15, அப்பர் பதிகம்-8, சுந்தரர் பதிகம்-1; திருவிசைப் பாடல்கள் 12 திருப்பல்லாண்டு-2, திருப்புகழ்-1; வடுகநாத தேசிகரின் 978 செய்யுட்களைக் கொண்ட தலபுராணம் ஆகியவை உள்ளன.

பலராலும் பாவப்பட்ட சிறப்பும் இங்குள்ள கோவிற்பெருமையை நிலைநாட்டும்.

"தோற்றம் கண்டான் சிரமொன்று
கொண்டீர் தூயவெள் ளெருதொன்
றேற்றங் கொண்டீர் எழில்வீதி
மிழலை இருக்கை கொண்டீர்" (96.7)

என்பது நாவுக்கரசர் தேவாரம். மேலும் இவர் பாடல்கள் "திருவீழிமிழலை யானைச் சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே" என்றும் கூறுகின்றார். கல்வெட்டுக்கள் : திருவீழிமிழலைக் கோயிலில், சோழப்பெருவேந்தர்கள், பாண்டியர்கள், விஜயநகரவேந்தர் உள்ளிட்ட பல வேந்தர்களின் காலத்தில் செதுக்கப்பட்ட 101 கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருவீழிமிழலையுடையார் என்னும் பெயரால் குறிக்கப் பெற்றுள்ளார். இவ்வூர் உய்யக்கொண்டார் வளநாட்டு வேணாட்டுக்குட்பட்டது.

### பொன்வேய்ந்தது

திருவீழிமிழலையுடைய மகாதேவர் கோயிலைப் பொன் வேய்ந்தவர் விசயராசேந்திர தேவர் அணுக்கியார் பல்லவன் பாட்டாளி நங்கை ஆவர். மற்றும் பலர் பொன்னையும் அணிகலன்களையும் அளித்ததோடு 7215 கழஞ்சு (4கி.4) பொன்னில் 2961 தகடுகளால் வேயப்பட்ட செய்தியைக் கல்வெட்டில் காணலாம்.

### சேந்தனார்

இவர் திருவீழிமிழலைப் பதிகத்தில் கோயில் "விண்ணிழி செழுங். கோயில்" என்ற வரலாற்றைக் குறிப்பிடுகின்றார். அப்பருக்கும், சம்பந்தருக்கும் படிக்காசு அருளிய செய்தியைப் "பாடலலங்காரப் பரிசில் காசருளிப் பழுத்த செந்தமிழ் மலர்சூடி, நீடலங்காரத் தெம்பெரு மக்கள் நெஞ்சினுள் நிறைந்து நின்றான் என்று இறுதிப்பாடலில் கூறுகிறார்.

திருவீழிமிழலையில் படிக்காசு பெற்ற நிகழ்ச்சி இவர் திருவுள்ளத்தை உருக்குகின்றது. திருஞானசம்பந்தரையும், திருநாவுக்கரசரையும் 'எம்பெரு மக்கள்' என்று பெருமிதத்துடன் போற்றி அவர்கள் நெஞ்சில் நிறைந்து நின்ற அருளிப் பாட்டின் அருமையைக் கனிந்து பாடுகின்றார். இருவர் தேவாரப்பாக்களைப் "பழுத்த செந்தமிழ் மலர்" என்று புகழ்கின்றார். இஃதேபோல், சைவ நன்மக்கள் ஏனைய திருவிசைப்பாத்தலங்களையும் கண்டு அறிவார்களாக.

# 3. திருவிசைப்பாவில் தொன்மச் செய்திகள்

திரு. சாதிக். அப்துல்ஹமீது, சென்னை.

புரைதீர் ஒழுக்க நெறியாம் சைவநெறி நடக்கும் அன்பர்களால் முழுமுதற் கடவுளாகப் போற்றப்படும் சிவனது பொருள்சேர் புகழினை விரித்துக் கூறுவன் பன்னிரு திருமுறைகள். இசையாகவும், இசையின் பயனாகவும் விளங்கும் சிவனது பெருமையை இசைப்பாக்களால் பேசும் திருவிசைப்பா, இப்பன்னிரண்டனுள் ஒன்பதாம் திருமுறையைச் சார்ந்தது. ஒன்பதாம் திருமுறையைப் பாடிய அருளாளர்களும் ஒன்பதின்மரே. 'மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய்' விளங்கும் சிவனது திருவடி போற்றி, சிவபதி அடையுமாற்றைத் தம் இசைப்பாக்களால் கூறும் அருளாளர்கள், தம் கருத்தினை வலியுறுத்த தொன்மச் செய்திகள் பல வற்றைத் தம் பாடல்களில் பொதிந்து வைத்துள்ளனர். இத்தொன்மச் செய்திகள் திருவிசைப்பாவில் இடம் பெற்றுள்ள திறத்தை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம்.

**தொன்மம் - பொருள் விளக்கம்**

'தொன்மம்' என்ற தமிழ்ச்சொல் 'தொன்மை' என்ற சொல்லின் அடியாகப் பிறந்தது. இச்சொல் 'புராணம்' என்பதைக் குறிக்கும். 'புராண' என்ற வடசொல் திரிந்து தமிழில் 'புராணம்' என வழங்குகிறது. இச் சொல்லுக்குப் பழைய வரலாறு என்பது பொருள். எனவே, தொன்மம் என்ற சொல் மிகத் தொன்மையானது எனப் பொருள்பட்டு மிகப் பழமையான வரலாறுகளைக் குறிப்பதாகக் கொள்ளலாம். தொன்மையான வரலாறுகள் என இங்கே குறிப்பிடப்படுவன, புராணங்களில் இடம் பெற்றுள்ள இறைமைத் தொடர் புடைய - குறிப்பாகச் சிவபெருமான் தொடர்புடைய - செய்திகளே!

**திருவிசைப்பாவில் இடம் பெற்றுள்ள தொன்மச் செய்திகளின் வகைபாடு**

தேவார - திருவாசகங்களைப் போலவே திருவிசைப்பாவும் தொன்மச் செய்திகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இதன்கண் இடம் பெற்றுள்ள தொன்மச் செய்திகளை,

1. தேவர்கள் சிவனை வணங்குதல் தொடர்பானவை
2. சிவனது அருளிச்செயல்கள் தொடர்பானவை
3. தேவாசுரர் செருக்கு அடக்குதல் தொடர்பானவை.

என மூன்று பகுப்புகளாகக் கொள்ளலாம்.

**தேவர்கள் சிவனை வணங்குதல் தொடர்பான செய்திகள்**

> "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
> நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
> மாவேறு சோதியும் வானவரும் தாமறியாச்"

சேவேறு சேவடியுடையனாம் சிவனை, இத்தேவர்கள் வணங்குவது தொடர்பான செய்திகள், மாலயன் இருவரும் சிவனை வணங்குதல், இந்திராதி தேவர்கள் அவனை வணங்குதல் எனும் இருதிறத்தனவாக அமைந்துள்ளமையைத் திருவிசைப்பா பாடல்களை நோக்குழி அறியலாம்.

**மாலயன் பணிதல்**

பாம்பணைத் துயின்றோனாகிய பாற்கடல் வாசனும், திசைமுகனாகிய தாமரை வாசனும் சிவ்னைப் பணிந்து வழிபடும் செய்தி, திருவிசைப் பாவில் பெரிதும் பேசப்படுகிறது. திருவிசைப்பா பாடிய அருளாளர்களுள் வைத்துச் சேதிராயர் தவிர்ந்த ஏனைய எண்மரும் சிவனை மாலயன் பணிந்த வரலாற்றினைப் பாடியுள்ளனர். இவ்வரலாறுதானும், தன்னடியார்க்குக் காட்சிக்கு எளியனாய்த் தோன்றும் சிவபிரான், மாலயன் முதலிய தேவாதி தேவர்களும் அவனது அடிமுடி தேடி அலமந்து அலைந்து திரிந்தும், காணற்கு இயலாப் பெற்றியனாய் இருக்கும் தன்மையைப் பேசுவதாக அமைந்துள்ளது.

> "வாளாமால் அயன்வீழ்ந்து காண்பரிய மாண்பிதன்" (9:213)

> "துணக்கென அயுனும் மாலும் தொடர்வரும் சுடர்" (9:38)

என, இங்ஙனம் இருபதுக்கும் மேற்பட்ட இடங்களில் திருவிசைப்பாவில் இவ்வரலாறு பேசப்படுகிறது.

**இந்திராதி தேவர்கள் பணிதல்**

மாலயன் பணிந்த வரலாறு போலவே, இந்திராதி தேவர்கள் சிவனைப் பணிந்த செய்தியும் திருவிசைப்பாவில் ஏறத்தாழ பதின்மூன்று இடங்களில் பேசப்படுகிறது.

> "சிரம்புரை முடிவா னவரடி முறையால் இறைஞ்சுசிற்
> றம்பலக் கூத்தா" (9:14)

> "தேடியிமை யோர்பரவும் தில்லைச் சிற்றம்பலவர்" (9:269)

என, தேவர்கள் சிவனைப் பணியும்திறம் போற்றப்படினும், இந்திரனைத் தொடர்புபடுத்தி வருடமெல்லாம் இந்திரனுடன் திருமாலையும் நான்முகனை யும் இணைத்தே பேசப்படும் போக்கும் காணப்படுகிறது. சான்றாக,

> "மாலொடு அயனும் அமரர் பதியும் வந்து வணங்கிநின்று
> ஆல கண்டா அரனே அருளாய் என்றென்று அவரேத்த"
> (9:244)

"அருள்பெறின் அகலிடத்து இருக்கலாம் என்று
அமரர்கள் த்லைவனும் அயனும் மாலும்
"இருவரும் அறிவுடை யாரின் மிக்கார்
ஏத்துகின் றார்" (9:266)

எனவரும் திருப்பாடல் அடிகளைக் கூறலாம். இங்ஙனம் திருப்பத் திரும்ப இவ்வரலாறு பேசப்படுவதன் நோக்கம்,

"பண்டலர் அயன்மாற்கு அரிதுமாய் அடியார்க்கு
எளியதோர் பவளமால் வரை" (9:48)

எனச் சேந்தனாரும்,

"பாம்பணைத் துயின்றோன் அயன்முதல் தேவர்
பன்னெடும் காலம்நிற் காண்பான்
ஏம்பலித் திருக்க என்னுளம் புகுந்த
எளிமையை என்றும்நான் மறக்கேன்" (9:145)

எனக் கருவூர்த்தேவரும் கூறுமாப் போல தேவர்களாலும் காணுதற்கரிய சிவமூர்த்தி, தன் அடியவர்க்குக் காட்சிக்கு எளியனாய் அருள்பாலிக்கும் திறத்தை எடுத்துக்காட்டுதற்கேயாம்.

**சிவனது அருளிச்செயல்கள் தொடர்பான செய்திகள்**

பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து, பாவிகளாய அடியார்தம் ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்த மாய, தேனினைச் சொரிந்த சிவபெருமான், இங்ஙனம் கருணாமூர்த்தியாய் நின்று, தன்னடியவரை ஆட்கொண்டு அருளாசி வழங்கும் தொன்மைச் செய்திகள் பலவும் திருவிசைப்பாவில் இடம் பெற்றிருக்கக் காணலாம். அவை:

1. திருமாலுக்குச் சக்கரம் அருளுதல், 2. சனகாதி முனிவர்க்கு அருளுதல், 3. விசயற்குப் பாசுபதம் அருளுதல், 4. கருடனுக்கு அருளுதல், 5. உமாதேவிக்குச் சிவகாமப் பொருளை அருளுதல். 6. அகத்தியர்க்குப் பிரணவம் அருளுதல், 7. சிலந்திக்கு அரசு அருளுதல், 8. நாயன்மார் களுக்கு அருளுதல், 9. திரபுராதிகட்கு அருளுதல், 10. மார்க்கண்டேயனுக்கு அருளுதல் என்பனவாம்.

திருமால் தாமரைகொண்டு சிவனைப் பூசிக்கையில் அம்மலரில் ஒன்று குறையத் தமது கண்ணைப் பிடுங்கி அரிச்சித்ததனால் களிப்படைந்து தாமரைக் கண்ணனெனத் திருநாமமும், இஷ்ட சித்தியும், சக்கரப்பேறும் அளித்தவர் சிவன். திருமாலுக்குச் சக்கரம் அளித்த இச்செய்தி, திருமாளிகைத் தேவர், சேந்தனார், புருடோத்தமநம்பி மூவராலும் சுட்டப்படுகிறது. எனினும், திருமால் பூசித்த விதமோ, வரலாறோ கூறப்படவில்லை.

திருமாலுக்குச் சிவன் சக்கரம் அருளிய செய்தியோடு (9:10/46/277), சனகாதி முனிவர்க்கு அருளல் (9:8), வெறியேறு பன்றிப்பின் சென்று விசயற்குப் பாசுபதம் அருளல் (9:26), கருடனுக்கு அருளல் (9:27), உமாதேவிக்குச் சிவகாமப் பொருளை அருளல் (9:32) போலும் பிற அருளிச் செயல்களைத் திருமாளிகைத் தேவர் கூற, சம்பந்தர் - நாவுக்கரசர் இருவர்க்கும் சிவன் பொற்காசு அருளிய செய்தியைச் சேந்தனாரும் (9:57), மார்க்கண்டேயனுக்குச் சிவன் அருளிய செய்தியைப் புருடோத்தம நம்பியும் கூறுகின்றனர்.

ஏனைய அருளிச் செயல்களான கணம்புல்லர், கண்ணப்பர், நாவுக்கரசர், சம்பந்தர், சேரமான், சுந்தரர் ஆகியோர்க்குச் சிவன் அருள் புரிந்த செய்தியைப் பூந்துருத்தி நம்பிகாடநம்பியும் (9:186-189), திரிபுர அரக்கர்கள் மூவர்க்கும் சிவன் அருள்பாலித்தமையைக் கருவூர்த் தேவரும் (9:139), அகத்திய முனிவர்க்குப் பிரணவம் அருளிய செய்தியை (9:210) வேணாட்டடிகளும், சிலந்தியை அரசாளச் செய்த செய்தியை (9:228) திருவாலிய முதனாரும் தங்கள்தங்கள் பாடல்களில் குறிப்பிடுகின்றனர்.

பொதுவாகச் சிவனது அருளிச் செயல்களாகத் திருவிசைப்பா கூறும் இவை அனைத்தும், குறிப்புகளாகச் சுட்டப்படுகின்றனவேயன்றி, அப்புராணச் செய்திகளை விரித்துக்கூறும் போக்கு, இப்பாடல்களில் காணப் படவில்லை. மாறாக, பூந்துருத்தி நம்பிகாடநம்பி சேரமான் பெருமானையும், சுந்தரரையும், பற்றிக் கூறும்,

> "களையா உடலோடு சேரமான் ஆரூரன்
> விளையா மதம்மாறா வெள்ளானை மேல்கொள்ள" (9:189)

எனும் செய்தி, சேரமானும் சுந்தரரும் நீங்காத உடலோடு கைலாயம் சென்றதைக் கூறுவதாக அமைந்துள்ளது. இதுபோன்று புராணச் செய்தியை முழுமையாகக் கூறும் போக்கினைப் புருடோத்தமநம்பியின் பாடல் ஒன்றிலும் காணமுடிகிறது.

தன்னைக் காலனிடமிருந்து காத்துக்கொள்ள சிவபூஜை புரிந்த மிருகண்டு முனிவரின் மகன் மார்க்கண்டேயன் உயிர் பறிக்கப் பாசம் வீசிய காலனைக் காலால் தடிந்து காலசம்காரமூர்த்தி எனப் பெயர் பெற்றவன் சிவன். அவனது இவ்வருளிச் செயலைச் சற்றே விரிவாக,

> "ஆருயிர் காவலிங்கு அருமை யாலே
> அந்தணர் மதலைநின் அடிபணியக்
> கூர்நுனை வேற்படைக் கூற்றம் சாயக்
> குரைகழல் பனிகொள மலைந்தது" (9:263)

எனப் புருடோத்தமநம்பி கூறுவர். இங்ஙனம் ஏறத்தாழப் பதினாறு இடங்களில் சிவனின் அருளிச் செயல்கள் இந்நூலில் சுட்டப்படுகின்றன. எனினும்,

மேற்கூறப்பட்ட இருசெய்திகள் தவிர, பிற அருளிச் செயல்கள் எதுவும் விரிவாகக் கூறப்படவில்லை.

அமிர்தமதன காலத்துத் தோன்றிய நஞ்சினைச் சிவபிரான் உண்டு கண்டத்தே இருத்தி நீலகண்டர் எனப் பெயர் பெற்றார். இப்புராணச் செய்தியை,

"கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோள ரவுசுற் றிக்கடைந் தெழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீலம் ஆர்கடல் விடந்தனை உண்டு
கண்டத் தேவைத்த பித்த"

எனச் சுந்தரர் அழகுபடக் கூறுவர். தேவாரத் திருப்பாடல்களில் சிறப்பித்துக் கூறப்படும் சிவனது இவ்வருளிச் செயல், திருவிசைப்பாவில் பெரிதும் போற்றப்படாதது வியப்பினைத் தருகிறது. திருமாளிகைத் தேவர், கருவூர்த்தேவர், திருவாலியமுதனார் பாடல்களில் (9:5, 10, 19, 102, 215, 214) அடைமொழிகளாகவும், புருடோத்தமநம்பி பாடல்களில், 'உம்பர்கள் வன்பழி யாளர் முன்னே ஊட்டினர் நஞ்சை (9:259) என்றும், வானவர்கள் வேண்ட வளர்நஞ்சை உண்டார் (9:268) என்றும் சற்றே விளக்கமாகவும் கோடிட்டுக் காட்டப்படும் நிலையே காணப்படுகிறது.

### தேவாசுரர் செருக்கு அடக்கியது தொடர்பான செய்திகள்

தேவாரம் பாடிய மூவர்முதலிகளாலும், வாகீசப் பெருமானாலும் அதிகமாகப் பாடப்பட்ட சிறப்பினையுடையவை தேவாசுரர் செருக்கழித்த வரலாறுகள். இப்புராணச் செய்திகள் முற்கூறிய தேவர்கள் சிவனை வணங்குதல், சிவனது அருளிச் செயல்கள் எனும் இரு கூறுகளையும் காண அதிகமாகத் திருவிசைப்பாவில் இடம் பெற்றுள்ளன. தேவாசுரர் செருக்கழித்த வரலாறுகளாக, மாலயன் செருக்கழித்தது, திரிபுரம் எரித்தது, இராவணன் மலை எடுத்தது, ஏனம் பின்சென்றது, தக்கன் - எச்சன் - நான்முகன் - சூரியன் செருக்கழித்தது. கரிப்போர்வை உடுத்தது போலும் செய்திகள் திருவிசைப்பாவில் பேசப்படுகின்றன.

### திருவிசைப்பாவில் தேவாசுரர் செருக்கழித்த வரலாறுகள்

தேவாசுரர் செருக்கழித்த வரலாறுகளாக முற்குறிப்பிட்ட ஆறனுள் இன்றியமையாதனவாய திரிபுரம் எரித்தது, மாலயன் செருக்கழித்தது எனும் இரண்டு மட்டுமே வகைக்கு ஒன்றாக இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் படுகிறது. விரிவஞ்சிப் பிற வரலாறுகள் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

### திரிபுரம் எரித்தது

தேவாசுரர் செருக்கழித்த வரலாறுகளுள் மிக அதிகமாகத் திருவிசைப் பாவில் இடம்பெற்ற செய்தி திரிபுரம் எரித்த வரலாறாகும்.

தாரகாசுரன் குமாரர்களாகிய வித்துர்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் எனும் திரிபுராதிகள் மூவரும் சிவபூஜாபலத்தால் பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைச் செய்வித்து அக்கோட்டையுடன் பறந்து சென்று தேவர்களை வருத்தி வந்தனர். இதனால் தேவர்கள் சிவபிரானிடம் முறையிடச் சிவன், சூரிய சந்திரர்களைத் தேருருளையாகவும், நால்வேதங் களையும் குதிரைகளாகவும் உள்ள தேரில் பிரமனைச் சாரதியாகவும், மேருமலையை வில்லாகவும், வாசுகி என்ற பாம்பை நாணாகவும், திருமாலை எரியும் பாணமாகவும் கொண்டு, திரிபுரத்தை நீராக்கி, தேவர்களைக் காத்தார். இச்செய்தி,

வேந்தன் வளைத்தது மேருவில்
அரவுநாண் வெங்கணை செங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம்
பொடியாட வேதப் புரவித்தேர்ச்
சாந்தை முதல்அயன் சாரதி (9:63)

எனச் சேந்தனாரால் குறிக்கப்படுகிறது. திருவிசைப்பாவில் காணப்படும் முழுமையான தொன்மச் செய்தியாக இதனைக் கொள்ளலாம். இஃதே யன்றித் திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர், கண்டராதித்தர், திருவாலிய முதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் போன்றோரும் இவ்வரலாற்றைப் பாட, ஏறத்தாழ பதின்மூன்று இடங்களில் குறிக்கப்பெற்று, திருவிசைப் பாவில் அதிகமாக எடுத்தாளப்பட்ட தொன்மச் செய்தியாகத் திரிபுரம் எரித்த வரலாறு விளங்குகிறது.

**மாலயன் செருக்கழித்த வரலாறு**

தேவர்களது செருக்கழித்த வரலாறுகளில் மாலயன் செருக்கழித்த வரலாறு மட்டுமே கூறப்படும் தன்மையை உடையதாதலைத் திருவிசைப் பாவில் காணமுடிகிறது.

திருமாலுக்கும் பிரமனுக்கும் யார் பெரியவர் என்பதில் தர்க்கம் எழ, அவ்விருவர் இடையிலும் தாணுமூர்த்தமாகச் சிவன் தோன்றவே, அவ்வுருவில் அடிமுடி காணவல்லாரே பெரியவர் எனக் கொண்டு மாலயன் இருவரும் முறையே பன்றியும், அன்னப்பறவையுமாக மாறிச் சிவனின் அடிமுடி தேடியும் கிடைக்காமல் தம் செருக்கடங்கினர் என்பது வாமனபுராணம். மாலயன் அகந்தையை அடக்கச் சிவபிரான் மண்முதல் விண்ணளவும் அனற்பிழம்பாய் நின்ற வடிவம் லிங்கோற்பவ வடிவம் என்பர். திருமாலும் அயனும் சிவனின் அடிமுடி தேடியும் கிடைக்காத இச்செய்தி,

"அன்னமாய் விசும்பு பறந்தயன் தேட
அங்ஙனே பெரியநீ" (9:133)

என்றும்,

''முன்னம்மால் அறியா ஒருவனாம் இருவா'' (9:133)

என்றும் கருவூர்த்தேவரால் பேசப்படுகிறது. திருவாலியமுதனார் இச் செய்தியை,

''வைத்த பாதங்கள் மாலவன்
காண்கிலன் மலரவன் முடிதேடி
எய்த்து வந்திழிந்து இன்னமும்
துதிக்கின்றார் எழில்மறை அவற்றாலே'' (9:230)

எனக் கூறுவர். அனற்பிழம்பாய்ச் சிவன் நின்ற செய்தி,

''உருவத்து எரியுருவாய் ஊழிதோ றெத்தனையும்
பரவிக் கிடந்தயனும் மாலும் பணிந்தேத்த'' (9:193)

எனப் பூந்துருத்தி நம்பிகாடநம்பியாலும்,

''கள்ளவிழ் தாமரைமேல் கண்டயனொடு மால்பணிய
ஒள்ளெரி யின்நடுவே உருவாய்ப்பரந் தோங்கியசீர்... ஒருவா''
(9:249)

எனத் திருவாலியமுதனாராலும் சிறப்பித்துக் கூறப்படுகிறது.

**தேவாசுரர் வரலாறுகள் திருவிசைப்பாவில் இடம்பெற்றுள்ள திறம்**

மால், அயன், காமன், காலன், சூரியன், சந்திரன், இந்திரன் போன்ற தேவர்கள், தக்கன், எச்சன், இராவணன், சலந்தரன், திரிபுராதிகள், ஏனமாகிய மூகாசுரன், கயாசுரன் போலும் அரக்கர்கள் குறித்த செய்திகள், தேவாசுரர் செருக்கழித்த வரலாறுகளாகத் திருவிசைப்பாவில் இடம்பெற்றுள்ளன. எனினும், சிவமூர்த்தி தேவர்கள் செருக்கினை அழித்த செய்தி தனித்துச் சுட்டப்படாமல்,

''தக்கன்நல் தலையும் எச்சனவன் தலையும்
தாமரை நான்முகன் தலையும்
ஒக்கவிண்டு உருள ஒண்திருப் புருவம்
நெறித்தரு ளியஉருத் திரனே'' (9:9)

''காமனைக் காலன் தக்கன்மிக் கெச்சன்
படக்கடைக் கணித்தவன்'' (9:22)

என அசுரர் வதத்துடன் இணைத்துப் பேசப்படும் தன்மையே காணப்படுகிறது. மாலயன் செருக்கழித்த வரலாறு விதிவிலக்கு. திருமால் தவிர்த்த ஏனைய சிறு தெய்வங்களை அசுரர்களுடன் இணைத்துச் சொல்லியிருப்பது, சிறுதெய்வ வழிபாட்டினால் பயனேதுமில்லை என்பதை வெளிப்படுத் தற்காம். இதனை,

''திறம்பிய பிறவிச் சிலதெய்வ நெறிக்கே
திகைக்கின்றேன் தனைத்திகை யாமே
நிறம்பொன்னும் மின்னும் நிறைந்தசே வடிக்கீழ்
நிகழ்வித்த நிகரிலா மணியே'' (9:8)

எனும் திருமாளிகைத்தேவர் பாடல்வழித் தெளியலாம். மாலயன் செருக்கழித்ததும் கூட, மூவுருவின் முதலாக நிற்கும் முழுமுதற்கடவுள் சிவனே என்பதை நிறுவி, 'அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே' என்பதைக் காட்டுதற்கேயாம்.

இனி, தேவர்களைக் காக்க அசுரர்களை வதித்த சிவனின் செயல்கள், அவன் தன் அடியவர்மீது பேரன்பு பூண்டொழுகும் கருணாமூர்த்தி என்பதை வெளிப்படுத்துவன. திரிபுரத்தை எரித்தபோது, சிவபூசை விடாமல் ஒழுகிய காரணத்தால், திரிபுராதிகளான நிசிரர் இருவரோடு ஒருவர் காதலிற் பட்ட கருணையுடையனாய்ச் சிவன் இருந்தமையும், கயிலையைப் பெயர்க்கத் துணிந்த இராவணன், தன் தவறுணர்ந்து சாமகானம் பாடவே,

"இலையார் கதிர்வேல் இலங்கை வேந்தன்
இருபது தோளும்இற
மலைதான் எடுத்த மற்ற வற்கு
வாளொடு நாள்கொடுத்து" (9:201)

அவ்விராவணனுக்கு அருளியமையும், அசுரர்களேயாயினும், சிவபூஜை செய்பவராயின் உய்திபெற இயலும் எனும் தத்துவத்தின் வெளிப்பாடே!

திருவிசைப்பாவில் இடம்பெற்றுள்ள தொன்மச் செய்திகளுள் தேவாசுரர் செருக்கழித்த வரலாறே மிகுதியும் பேசப்படுதற்குக் காரணம், வாகீசப் பெருமான் கூறுமாப் போல, 'கண்ணார் விசும்பின் விண்ணோர்க் கெல்லாம், மூப்பாய் மூவா முதலாய் நின்ற' சிவபிரானின் முழுமுதல் தன்மையை வெளிப்படுத்தற்கே எனலாம்.

திருவிசைப்பாவில் பலதிறப்பட்ட தொன்மச் செய்திகள் குறிக்கப் படுகின்றன். இக்கட்டுரையில் குறிப்பிட்ட செய்திகளேயன்றி, புலித்தோல் உடுத்தது. சந்திரன் - கங்கையைச் சடையில் தரித்தது, மான்மறி - மழு ஏந்தியது, இடபம் ஊர்ந்தது, அர்த்தநாரீசுரக் கோலம் தாங்கியது போன்ற பல செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. எனினும், அவை அடைமொழிகளாக மட்டுமே சுட்டப்படுகின்றன. அவற்றின் விரிவான விளக்கம் தாங்கிய பாடல்கள் எதுவுமில்லை. இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள தொன்மச் செய்திகளிலும் கூட, ஓரிரு செய்திகளைத் தவிர்த்துப் பிற செய்திகள் அடைமொழிகளாகவோ, குறிப்பாகவோ சுட்டப்படுகின்றனவேயன்றி விரிவாக இடம்பெறவில்லை.

பாற்கடல் நஞ்சினைச் சிவன் உண்ட செய்தி திருவிசைப்பாவில் விரிவாகக் குறிப்பிடப்படாதது போன்றே, காமவேள் தகனமும் விரிவாகக் குறிப்பிடப்படவில்லை. இத்தொன்மச் செய்திகள் அனைத்தும் திருவிசைப்பா பாடிய அருளாளர்களால் தங்கள் பாடல்களில் எடுத்தாளப்பட்டதன் நோக்கம், சிவனே முழுமுதற்கடவுள் சிவநெறியே சிறந்தநெறி என்பதை நிறுவுதற்கே என்பதை இப்பாடல்களை நோக்குழி அறிந்துகொள்ள முடியும்.

# 4. திருமந்திரத்தில் சைவ சித்தாந்தம்

முனைவர் தி. அருட்செல்வி, அண்ணாமலைநகர்.

இன்பப்பொருளாம் இறைவனை அடைவதற்கு உயிர்கள் கடைபிடித்தொழுகும் ஓர் அறவழியே சமயம் எனப்படுவது. அதில் சைவ சமயம் தோற்றமுற்ற காலம் மிகமிகப் பழமையானது. பண்டைய வேதமான இருக்கும் வேதத்திலும், பழந்தமிழ் நூல்களிலும் இச்சமயம் பற்றிக் கூறப்பட்டுள்ளன. அன்பும் அருளும் கெழுமிய சமயமாகப் போற்றப்படும் பெருமையுடையதாக சைவம் திகிழ்கிறது. தொன்மையோடு பொருளுண்மையும், சமரசமும், அன்பும் ஜீவகாருண்யமும் விளங்கும் ஒரு சமயம் சைவ சமயமே ஆகும். உலகத்தில் தோன்றியுள்ள சமயங்கள் யாவும் மெய்ப்பொருளாகிய கடவுள் ஒன்றையே போற்றுகின்றன. சைவ சமயத்தை அன்பு சமயம் என்றும் கூறலாம். திருமூலரின் வாக்கே இதற்கு சான்று.

**'அன்பும் சிவமும் இரண்டெடன்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிந்த பின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே'**

சைவம் அன்பை அறிவுறுத்துவதால், எல்லாவுயிர்களிடத்தும் அன்பு செலுத்துபவரே இன்னார் என்பதைப் புலப்படுத்தும் பொருட்டு சிவனடியார்களுக்கு உருத்திராக்க தாரணம் ஏற்படுத்தப்பட்டது. திருநீறு தூய்மையைக் காட்டுவது. அன்பே சிவமாக இருத்தலால் அடியாரும் சாதிபேதம் பாராட்டாமல் எல்லாவுயிரிடத்தும் அன்புடையவராகத் திகழ்தல் வேண்டும் என்பதன் அடையாளமே திருநீறு, உருத்திராக்கக் கோலம் முதலியன. அன்பராவார் அனைவரும் சிவனடியார்களே ஆவர்.

**வழிபாடு**

சைவ சமயத்தில் இருவித வழிபாடுகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஒன்று ஆலய வழிபாடு; மற்றொன்று உயிர்கள் வழிபாடு. ஆலயமும் உயிர்களும் முறையே படமாடும் கோயில் நடமாடும் கோயில் எனப்படும். இவ்விரண்டனுள் நடமாடுங்கோயில் வழிபாடே சிறப்புடையது என்று திருமந்திரம் கூறுகிறது.

**'படமாடக் கோயில் பகவற் கொன்றீயின்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா**

நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயிற்
படமாடக் கோயில் பகவற் கங்காமே'

உயிர்கள் வழிபாடு என்பதில் மக்கள் முதலிய எல்லா உயிர்களின் வழிபாடும் அடங்கும். சைவ சமயம் ஜீவகாருண்ய சமயம். ஆதலால் கொல்லா விரதம் கொண்டவரே சைவர்.

### சிவம் என்னும் திருநாமம்

சிவம் என்பது செம்மையினடியாகப் பிறந்த தனித் தமிழ்ச்சொல் என்று கூறுவர். வடமொழியில் சிவம் என்னும் சொல்லுக்கு காந்தி, மங்கலம், ஆனந்தம், அறவோர் உள்ளத்து உறைவது, சராசரங்களின் தோற்ற ஒடுக்கத்துக்கு நிலைக்களனாய்க் கிடப்பது, இருளைப் போக்கி அருளைத் தருவது, முற்றறிவுடையது, தூயது, இன்பம் தருவது முதலிய பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன.

சிவம் என்னும் செம்பொருளைச் 'சாந்தம் சிவம் அத்வைதம்' என்று வேதாந்தம் கூறுகிறது. 'சிவமெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்' என்று தமிழ்வேதம் புகழ்ந்துரைக்கிறது. சிவ என்னும் திருநாமத்திலுள்ள தெய்வத்தன்மை நோக்கியே,

'சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்றிடச் சிவகதி தானே'

என்று திருமூலநாயனார் அருளினார்.

திருமூலர் 'அன்பே சிவம்' என்ற உண்மை கண்ட அறிஞர்.

'ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே'

என்று சமரச ஞானத்தை போதிக்கின்றார்.

'தேயமு நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமிந் நாட்டிடைக் கண்டுகொண் டேனே'

என்று பொருள் இடம் காட்டிய பெருந்தகையாக விளங்குகிறார்.

### வேதமும் ஆகமமும்

சைவ உலகத்துக்கு வேதம் பொதுநூல்; ஆகமம் சிறப்பு நூல். வேதத்தை வேறாகவும் ஆகமத்தை வேறாகவும் சைவர் கொள்வதில்லை. இதனால் அவர்க்கு வைதிக சைவர் என்னும் பெயரும் வழங்கி வருகிறது.

'வேதமொடு ஆகமம் மெய்யாம் இறைவனூல்
ஓதும் பொதுவும் சிறப்புமென்று உன்னுக
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்னில் பெரியோர்க்கு அபேதமே'

என்று திருமூலர் உண்மை விளக்குகிறார். இதைப் பின்பற்றியே 'வேதத்திற்கும் ஆகமத்திற்கும் வேற்றுமை கண்டிலேன்' என்று நீலகண்டரும்,

'வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்'

என்று அருணந்தி சிவனாரும் கூறியுள்ளனர்.

### சைவ சிந்தாந்தம்

சைவ சித்தாந்தம் தனித்தும் எல்லாச் சமயங்களிலும் ஊடுருவிப் பாய்ந்தும் நிற்பது. எல்லாச் சமயங்களும் சேர்ந்த ஒன்றே சைவ சித்தாந்தம் என்று கூறலாம். சைவசித்தாந்தக் கடவுள் பிறப்பிறப்பு இல்லாதது; மும்மூர்த்திகளையும் கடந்த முதற்பொருள்; பிறப்பு இயல்புடைய உயிர்களைச் சைவ சமயம் தத்துவம் கடந்த தனிப் பரம்பொருளாகக் கொள்வதில்லை. இஃது சைவத்துக்குள்ள தனிச்சிறப்பாகும். தன்னலம் அறுத்து மற்றவர் பொருட்டுக் கைம்மாறு கருதாது தொண்டு செய்வதே வேட்கையறுத்தல்; வேட்கை தணிந்த இடம் வேதாந்தம்; 'சிவமாதல் வேதாந்த சித்தாந்தமாகும்', 'வேதாந்தம் சித்தாந்தம் வேறிலா முத்திரை' ஆகிய திருமூலரின் வாக்குகள் சித்தாந்தமே வேதாந்தம் என்றும் வேதாந்தமே சித்தாந்தம் என்றும் விளக்குகின்றன.

### திருமந்திரத்தில் சைவம்

சி என்பது சூரியகலை என்றும், வ என்பது சந்திர கலை என்றும் குறிப்பிடப் பெறுகின்றன. சிவம் என்பது கடவுள் இயல்புகள் எல்லா வற்றையும் தன்னகத்தே அடக்கியுள்ள ஒரு பெருஞ்சொல்லாக இருப்பதால், அதுவே சிறப்பாகச் சைவ நன்மக்களாலும் மற்றவர்களாலும் கொள்ளப் பட்டது. இச்சிவத் தொடர்புடைய சமயமும் சைவம் என்னும் பெயர் பெற்றது.

திருமூலர் சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் என்னும் நான்கு வகைகளைக் குறிப்பிடுகிறார்.

### 1. சுத்த சைவம்

சுத்த சைவமாவது, சடங்குகளில் நில்லாது தலைவனையும் தன்னையும் தளையையும் அறிந்து, தளையிலிருந்து விடுபட்டு தலைவனின் திருவடிச் சார்பு பெறுதல். இறைவனது பெருமை அளத்தற்கு அருமையானது. தான் என்ற ஒரு பொருள் இல்லாது சிவத்தை அறிந்து சிவத்தைத் தியானித்துச் சிவமேயாதல் சுத்தசைவம் எனப்படும்.

பதினாறு கலைகளையுடைய சந்திரகலைகளை அறிந்து சிவயோகம் பயின்று, அதில் முன்னதாக விளங்கும் அகர உகர மகர விந்து நாதங் களின் அறிவை முறையாக அறிந்து, பிரணவ பதம் உணர்த்தும் சாந்தியதீதை கலையைப் பொருந்தி உயிரின் மாயாசார்பான குற்றத்தை விட்டு, மேலான சிவத்தைக் கண்டுறைபவர் சைவ சித்தாந்தர் ஆவார்.

வேதாந்தமாவது சுத்த சைவ சித்தாந்தமே ஆகும். இந்நெறி நிற்போரே நாத முடிவாகிய சிவத்தைத் தரிசித்த சலனமற்றவர் ஆவர்.

**2. அசுத்த சைவம்**

அசுத்த சைவமாவது, திருவேடம் தரித்துச் சரியை கிரியை யாகிய இருநெறியில் நிற்பார் நிலையைக் கூறுவது. அசுத்த சைவர் இயல்புகளாவன:

இறைவனது இரு திருவடிகளையும் புகழ்பவரது பெருமையுடைய உடலில், இரு காதணிகளும், திருநீறும் தலைமாலையுமாகிய (உருத்திராக்க மாலை) இரு அடையாளங்களும், நிறம் பொருந்திய இரு கண்டமாலை களும் பொருந்தியிருக்கும். சரியை கிரியை ஆகிய உடம்பினாலும் மனத்தினாலும் வழிபடும் முறையில் நிற்பவரே அசுத்த சைவர். இவரில் மற்றொரு வகையினர் சைவாகமங்களைப் பாடம் சொல்லிக் கொண்டிருப்பவர்.

பிரணவமானது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், அக்கினி, தாரகை என்று உடலில் விளங்குகிறது என்பதை அறிந்தவர் அறிந்தவராவர். இவ்வாறு அறிந்தவர் பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவன் என்ற ஒன்பது வகையாக விளங்கும் அரும்பொருளான சிவத்தை அறிவர். இவ்விதமாக ஒன்பது பேதங்களாக விளங்கும் சிவத்தைத் தம்முள் கண்டோர் பகுப்புடைய இப்பிரபஞ்சமெல்லாம் அறிந்தோராவர்.

பூமியில் தோன்றுகின்ற ஞானநூல்களுடன், மௌனநிலையையும், முழுமையாக எண்ணப்பட்ட அஷ்டமாசித்திகளையும், பிற உலகங்களின் அறிவையும், உபநிடத அறிவையும், சிவத்தையும் தன்னையும் உணர்ந்து நிற்கும் ஆற்றலையும் பெற்றவராக ஞானி என்பவர் விளங்குவர்.

**3. மார்க்க சைவம்**

மார்க்க சைவமாவது, சைவ மார்க்கத்தில் நின்று, வேதாந்த சித்தாந்த நுண்பொருளை உணர்ந்து, ஆன்ம போதம் கெட்டுச் சிவபோதத்தில் திளைத்திருப்பவர் நிலையை விளக்குகிறது.

இதில் சுத்த சைவநெறி பற்றியவர்க்குரிய சாதனங்களாக பொன்னால் செய்யப்பட்ட உருத்திராக்கமான சிவசாதனம், திருநீற்றுப் பூச்சு, ஐந்து

எழுத்து ஓதுதலாகிய ஞானசாதனம், துன்மார்க்கரோடு சேராமல் நல்லடியாரோடு சேர்ந்திருத்தலாகிய சாதனம் ஆகியவை குறிப்பிடப் பெற்றுள்ளன. இவை சுத்த சைவநெறி பற்றியவர்க்குச் சன்மார்க்க ஒழுக்கமாகும். சுத்த சைவன் வேதாந்த சித்தாந்த நுண்பொருளை அபேதமாக உணர்ந்தவன் அழிவில்லாதவனாவான்; காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், யாமளம், காலோத்தரம், சுப்பிரபேதம், மகுடம் ஆகிய ஒன்பது ஆகமங்கள் விரிந்து 28 ஆகமங்கள் ஆயின; மேலும் சைவம், ரௌத்திரம், ஆரிடம் என்ற மூவகையாகி வேகமில்லாத வேதாந்த சித்தாந்த உண்மை ஒன்றான நிலை ஆகிய கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. அருட்சக்தியாக பராபரை எங்கும் நிறைந்து எவற்றையும் இயக்குவாள். சக்தியே தானாக வுள்ள ஞானிகள் எல்லாம் வல்ல சித்தராவார். வேதாந்தம் உணர்ந்தவர் பிரம வித்தையை அறிந்தவர். நாத தரிசனம் செய்தவர் நன்மைகளில் மகிழாமலும் தீமைகளில் சோர்வுறாமலும் நிற்கும் பரமஹம்ச யோகியர்கள் ஆவர். அதாவது வைராக்கியத்தால் பிரமத்தை அடையலாம் என்று வேதாந்தமும், அன்பினால் சிவத்தை அடையலாம் என்று சித்தாந்தமும் கூறும். இறைவனது உண்மை நிலையை உணர்ந்து சமய நிந்தனை விட்டு நிற்றலே சித்தாந்த சித்தி என்பதாகும்.

**4. கடுஞ்சுத்த சைவம்**

ஞானநிலையில் ஆடம்பரமின்றித் தான் அவனாய் நிற்கும் நிலையை எடுத்துக் கூறுவது இவ்வகை சைவம். கடுஞ்சுத்த சைவர் உபாயமான கிரியைகளை விட்டு ஞானமே பெரிதெனக் கருதி சாயுச்சியம் பெறுவர்.

புறவேடங்களில் விருப்பமின்றி ஆசாபாசம் அற்றுச் சிவஞானம் பெற்றோர் சுத்த சைவர் ஆவர். கோசங்கள் முதலிய யாவற்றையும் நீக்கித் தன்னை அறிதலே சித்தாந்த நெறியாகும். கடுஞ்சுத்த சைவர் சீவன் வேறு, சிவன் வேறு என்றில்லாது சிவனோடு உடனாய் நிற்பர்.

இவ்வாறு இந்நால்வகைச் சைவ நெறிமுறைகளும் திருமந்திரத்தில் கூறப்பெற்றுள்ளன.

சைவ சித்தாந்தம் மிகப் பழமையானது. சைவ சமயத்துக்கு அடிப்படை அன்பே ஆகும். அவ்வன்பை ஒழித்து, சிவ சின்னங்களைப் பூண்டு, உயிர்களுக்குத் தீங்கு நினைப்பவர்கள் சைவர்கள் ஆக மாட்டார்கள். எல்லாச் சமயங்களுக்கும் தாயகமாக உள்ள சைவ சமயத்தைக் கடை பிடித்து ஒழுகுவோர் மற்றவரையும் சமயநூல்களை வழிபட்டு, கொல்லாமை முதலிய விரதங்களை மேற்கொள்ளும்படிச் செய்ய வேண்டும். பிறர் அறியாமை கண்டு, இரக்கமுற்று, அவர் அறியாமையை ஒழிக்க முயல்வதும் ஜீவகாருண்யமே. தாகமுடையார்க்குத் தண்ணீர் உதவவேண்டுதல் போல ஞானதாகமுடையோருக்கு சைவசமயக் கொள்கைகளைப் பரப்ப முயல வேண்டுவது ஒவ்வோர் உண்மைச் சைவரின் கடமையாகும்.




# 5. திருமூலரின் கல்விச் சிந்தனைகள்

முனைவர் நயம்பு, அறிவுடைநம்பி, சென்னை.

திருமூலரும், திருவள்ளுவரும் தமிழ்நாட்டின் இரு கண்களாவார். அவர்களின் பெயர்களுக்கு முன்னால் ''திரு'' என்னும் சிறப்பொட்டு இயல்பாக அமைந்துள்ளது போலவே அவர்களியற்றிய திருமந்திரம், திருக்குறள் ஆகிய நூல்களில் ''திரு'' என்னும் சிறப்பொட்டு இயல் பாகவே அமைந்துள்ளது. நூலுக்கும், நூலாசிரியர்க்கும் இங்ஙனம் ஒரே சிறப்பொட்டு அமைவது அரிதினும் அரிது. இதுவே அவரையும், அந் நூல்களின் பெருமையும் பறைசாற்றும். திருமந்திரம் சைவ சமய நூலாகப் போற்றப்படுகிறது. அதே சமயம் அது ஒரு சமுதாய நூல் என்பதை மறந்துவிடக் கூடாது. ''நிறைமொழிமாந்தர் ஆணையிற் கிளந்த மறை மொழி தானே மந்திரம்'' (தொல்:செய்:176) என்ற தமிழ் இலக்கணத்திற்குத் திருமந்திரம் பொருத்தமான இலக்கியமாகும். ''ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்று முழங்கிய புரட்சியாளர் திருமூலர். தீர்க்கதரிசியாகவும், சிந்தனைக் கருவூலமாகவும், சீர்த்திருத்தச் செம்மலாகவும் விளங்குபவர். ஆவினங்களுக்காகக் கூடு விட்டுக் கூடு பாய்ந்த அவரது செயல் உயிரிரக்கத்தின் வெளிப்பாடாகும். உலக உயிர்களில் மனித இனம் மேம் பட்டது. இம்மனிதஇனம் செம்மைப்படவும், மேம்படவும் திருமந்திரத்தைப் படைத்தார். தன்னை இறைவன் படைத்ததே தமிழ் மந்திரத்தைத் தரணியில் பரப்பவே என்றார். திருமந்திரத்தில் முதல் தந்திரத்தில் கல்வி அதிகாரத்தில் பத்துப் பாடல்களும், கேள்வி அதிகாரத்தில் பத்துப் பாடல் களும், கல்லாமை அதிகாரத்தில் பத்துப் பாடல்களும் அமைந்துள்ளன. இம்முப்பது பாடல்களின் கருத்துக்கள் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன. இரண்டாம் மந்திரத்தை குருநிந்தை, ஆறாம் அதிகாரத்தில் அபவேடம், ஏழாம் அதிகாரத்தில் அசற்குரு, குருபூசை, சற்குருநெறி, எட்டாம் மந்திரத்தில் ஞானிசெயல், ஒன்பதாம் மந்திரத்தில் குருமடதரிசனம், ஞானகுரு தரிசனம் ஆகிய அதிகாரங்கள் அமைந்துள்ளன. இவற்றிலிருந்து சில கருத்துக்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. இங்கே கல்வி என்பது தற்போதைய ஏட்டுக்கல்வியைக் குறிக்காது. ஞானக்கல்வியே கல்வியாகும். இக்கட்டுரை யில் கல்வி, கேள்வி, கல்லாமை, குரு ஆகிய நான்கு தலைப்புக்கள் அமைந்துள்ளன. ஆன்மாவின் ஈடேற்றமான ஞானக்கல்வி பற்றிய ''திருமூலரின் கல்விச் சிந்தனைகள்'' இக்கட்டுரையில் சுருக்கமான முறையில் அமைந்துள்ளன.

**திருமூலர் காட்டும் ஞானக் கல்வி**

தற்கால உலகியல் கல்வி ஏட்டுக் கல்வியாகும். இது உண்மையான கல்வியாகாது. இறைவனை நினைப்பதும், அவனைப் பற்றிப் பேசுவதும், அவனின் பெருமையைப் பிறர் சொல்லக் கேட்பதும், அவனை அடைய வழி தேடுவதுமான கல்வியே உண்மையான கல்வி என்கிறார் திருமூலர். திருவள்ளுவரும் கற்றலின் பயன் இறைவனின் இணையடிகளை வணங்கு வதேயாகும் என்கிறார். உடலில் உயிர் நிலைத்திருக்கும்போதே, கடவுளைப் பற்றும் ஞானத்தைக் கற்று கொள்ளவேண்டும். அதனால் பாவங்கள் தொலையும். இதனை ''நிற்கின்றபோதே நிலையுடையான் கழல், கற்கின்ற செய்மின், கழிந்தரும் பாவங்கள்'' (279) என்கிறார்.

இறைவன் அருளையளிக்கும் திருவைந்தெழுத்தை நெஞ்சுருகப் பயின்றேன். அவனருளால் அக்கல்வியைக் கற்றேன். இம்மெய்யுணர்வுக் கல்வியை "கறிப்பறியாகும் கல்வி கற்றேனே" (277) என்று தம் அனுபவத்தைக் கூறுகிறார்.

பொதுவாகக் கல்வி என்பதே உள்ளத்திலிருந்து புறப்பட வேண்டும். புறத்திலிருந்து தோன்றுவதன்று, மெய்ம்மைக் கல்வி தரும் பயன்பற்றி ''கற்றறிவாளர் கருதிய காலத்து, கற்றறிவாளர் கருத்திலோர் கண்ணுண்டு'' (278) என்கிறார். ஞானக்கல்வி கற்றோரின் அருளால், அறிவெண்ணத்தில் அகக்கண் உண்டாகும். அவர்தம் மெய்யறிவு இறைவனைக் காட்டும் கண்ணாடியாகும். அந்த அகக்கண்ணைத் தாமும் பெற்றதாகக் கூறுகிறார். அதனைப் பிறரும் அடையவேண்டும்.

இறைவனின் திருவடியுணர்வு பெற்றவரே உண்மைக் கல்வியுடையார். அவனைக் காலையும், மாலையும் வணங்குவோர் உடம்பு, குளிகையால் செம்பு பொன்னாவதுபோல அவருடலும் பொன்னிறமாகும். ஞானக் கல்வியால் உடலும், உள்ளமும் ஒளிபெறும் என்பதாம். (280)

அருட்பெருஞ்சோதி வடிவான ஈசனின் திருவடிகளை அடைய ஆன்மாவிற்குத் துணையாய் அமைவது பதிஞானக் கல்வியாகும். அடுத்தடுத்து வருகின்ற பிறவிகளுக்கெல்லாம் துணையாகும். இக்கல்வியை ''துணைஅது வாய்வரும் தூயநற்சோதி, ...துணை அது வாய்வரும் தூயநற் கல்வியே'' (281) என்கிறார். அந்த ஞானக் கல்விக்கு தூய, நல்ல என்ற இரண்டு அடைமொழிகளைத் தருகிறார். ஆகவே பிற உலகியல் கல்விகளெல்லாம் தூய்மையற்றவை, நன்மையற்றவை என்றறிய வேண்டும்.

ஞான நூல்களாம் ஏணியைப் பற்றிக்கொண்டு வீடு என்னும் உச்சி அடைய வேண்டும். அங்ஙனம் ஞானநூல்களைத் துணையாகக் கொள்ளாதவர்

பிறருடன் பிணங்கி, பல கொள்கைகளைப் பின்பற்றி, பிறருடன் போரிடுவர். ஐந்தெழுத்தான செங்கோலைப் பற்றிக்கொண்டால் ஐம்புலப் பறவைகள் அடங்கும். அவை அடங்க, அவை அவர் தம்மைப் பின் செல்லும். இந்த மெய்யறிவுக் கல்வி அறியாதார், உலக இன்பங்களில் மயக்குற்றுப் பிறப்பு, இறப்பு என்னும் தடுமாற்றத்தில் மயங்கி இடர்ப்படுவர். "நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்" என்றும், "கோலொன்று பற்றினாற் கூடா பறவைகள்" (282) என்றும் திருமந்திரம் எது ஞானக்கல்வி என்பதைத் தெளிவுபடுத்துகிறது. ஞான நூல்களாம் ஏணி, வீடென்னும் உச்சி, ஐந்தெழுத்து மந்திரம் செங்கோல், ஐம்புலன்களாகிய பறவைகள் என்று உருவகப்படுத்திப் பாடியுள்ள நயம் படித்து இன்புறத்தக்கதாகும்.

இறைவன் திருவடியை எப்போதும் அகத்தே பிணைத்துக் கொண்டோரின் உள்ளத்தில் இறைவன் தோன்றுவான். ஞான நூல்கள் மனம் மேலோங்கிப் போவதற்கான ஏணியாகும். "ஏய்ந்த இளமதி எட்ட வல்லார்க்கு வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே" (283) என்பதால் அறியமுடியும். மேலும் நூலேணி என்பது இரு பொருள்படும். ஒன்று பஞ்சு நூலால் ஆன ஏணி என்றும், மொழியாலான நூலென்றும் நயம்பட உரைத்துள்ளார். இதிலிருந்து ஞானக்கல்வி பெறாதவர் இறைவனை அடையாமல் கீழ்நோக்கிச் செல்வார்கள் என்ற கருத்தும் மறைமுகமாக உணர்த்தப்படுகிறது.

இறைவன் திருவடி அடைவதற்கான ஞானக்கல்வி கற்றவர் இறையடி யாவார். மற்றவர்க்கு வழித்துணையாவார். மயக்கம் போக்கும் மருந்து மாவார். ஞானக்கல்வி கல்லாதவர் பழிக்குத் துணையாவர். எனவே ஞானக் கல்வியால் இறைவனை வழித்துணையாகக் கொண்டு, இம்மை, மறுமை, அம்மை (பிறவாச்சிறப்பு) என்ற மும்மை நலம் எய்துக (284) என்று திருமூலர் ஓர் அறிவிப்புச் செய்கிறார்.

இவ்வுலகப் பற்றுக்களை விட்டு, ஈசனைப் பற்றவேண்டும். பதிஞானக் கல்வி கற்றவர்கள் பேரின்பம் அடைவார்கள். இக்கருத்தை "பற்றது பற்றில் பரமனைப் பற்றுமின்... கற்றவர் பேரின்பம் உற்று நின்றாரே" (285) என்ற பாடலில் கூறப்பட்டுள்ளது. "பற்றுக பற்றற்றான் பற்றினை" என்ற குறளுடன் ஒப்பிட்டுச் சிந்திக்க வேண்டிய ஒன்றாகும். இறைவனைப் பற்றுவதே பேரின்பம் என்றும் மற்ற பற்றுக்கள் சிற்றின்பம் என்றும் உணர வேண்டும்.

இறைவன் கடல், மலை, ஆறு, தாவரங்கள், விலங்குகள் என்று உலகில் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் எங்கும் இருக்கும் இறைவன், குறிப்பாக ஞானக்கல்வி கற்றோரின் உள்ளத்திலே நிலைத்திருப்பான். "அமரர்கள் நாதன் இடமுடையார் நெஞ்சத்தில் இருந்தானே" (286) என்று இறைவன் இருக்குமிடத்தைத் தெளிவுபடுத்துகிறார். இறைவனைப்

பற்றி நினைப்பதும், அறிவதும், அடைவதுமே உண்மையான கல்வி என்பதைத் திருமூலர் வரையறை செய்கிறார்.

## திருமந்திரத்தில் கேள்வியின் மாண்பு

நூல்களை ஓதுவது கற்றலாகும். தானே கற்பதை விட கேட்பது சிறந்ததாகும். கல்வியுடன் மிகவும் தொடர்புடையது கேள்வியாகும். ''கற்றிலன் ஆயினும் கேட்க'' என்பார் திருவள்ளுவர். கற்றலைவிட கேள்வியே சிறந்தது. எதைக் கேட்க வேண்டுமென்று திருமூலர் பட்டிய லிடுகின்றார். அறத்தை கேட்டும், அந்தணர் மந்திரம் கேட்டும், பிற சமயங்கள் பற்றிக் கேட்டும், இறைவனின் திறம் கூறும் நூல்கள் கேட்டும் நடப்போர்கள் சிவபதி அடைவர். இதனை ''ஈசன் திறன்கேட்டும் பெற்ற சிவகதி தானே'' (287) என்கிறார். மேலும் ''ஓதுமின், கேண்மின், உணர்மின், உணர்ந்தபின் ஓதி உணர்ந்தவர் ஓங்கி நின்றாரே'' (288) என்பதனால் ஓதியும், கேட்டும் நடப்போர் வாழ்க்கையில் சிறந்தோங்கி விளங்குவார்கள் என்பது புலனாகிறது.

புகழ்நூல், பொருள் நூல்கள் எல்லாம் நிறைமொழி மாந்தரால் செய்யப்பட்டவை. மாநந்தி ஓதுகின்ற பொருள்நூலை நுட்பத்துடன் கேளுங்கள். கேட்டால் இறையுலகக் கடவுளாவர். அக்கேள்வி ஞானம் திருவடிகளை அடைய பெரும்பற்றுக் கோடாகுமென்று கேள்வியின் பயன் விளக்கப்பட்டது. (289)

எங்கள் ஆதிபிரானே எங்கள் பிரானே என்று பிறர் புகழ்ந்துபேசும் பேச்சைக்கேட்டால் நல்வினை, தீவினை என்னும் இருவினை நீங்கி மறுமைக்கண் தேவராவர். இதனை ''பெருமான் இவனென்று பேசி யாருக்கும், திருமானிடர் பின்னைத் தேவருமாவார்'' (290) என்று கூறுகிறார். ஆகவே சிறிதளவு கேட்பினும் பெரும் பயன்கிட்டும்.

செம்பொருள் உணர்ந்தவர்கள் இறைவன் திருவருளையும், ஆருயிர்கள் தாம் செய்யும் வினைகளுக்கேற்ப வருகின்ற பிறப்பு இறப்பையும் கூறுவார்கள். அவற்றைக் கேட்பதனால், அறிவுக்கறிவாய் விளங்கும் இறைவனை அடையலாம். (291) இறைவன் அறிவு வடிவானவன் என்பதைத் திருவள்ளுவரும் வாலறிவன் என்பார்.

இறைவன் மீது கொண்ட விழுப்பம் சிறந்தது. அவனது பொருள் மொழிகளைக் கேட்பதும் சிறந்தது. மெய்ஞான ஒழுக்கம் சிறந்தது. இவற்றில் சோர்வும், வழுக்குதலும் இன்றி இருக்க வேண்டும். அவ்வாறு இடையூறின்றி நினைந்தும், கற்றும், கேட்டும் ஒழுகுவார் விண்ணுலகில் சேர்வர். இறைவனும் அவரை அங்கே நிலைப்பித்து அருளுவான். ஆகவே வீடுபேறு அடைய கற்றலும் கேட்டலும் சிறந்தனவாகும். ''வானவர்

கோனும் இழுக்கின்றி எண்ணிலிகாலம்தாமே" (292) என்ற மந்திரம் கேட்டலின் பெருமை கூறுகிறது.

சிறுவர் சிறுவீடு கட்டி மணற்சோறு சமைத்து தாமும் உண்டு பிறர்க்கும் இடுவர். முதியோரும் அதனை அன்றென்னாமல் ஆமென்பார். ஐம்பொறி உணர்வால் சிலர் இறைவனை இம்மையில் காணலாமென்றும், அது கைகூடுமென்றும் கூறுவர். அவர்கள் சிறுவர்களை ஒப்பர். இறைவன் சுட்டுணர்வாலும், சிற்றுணர்வாலும் அறியப்படாதவன். இறைவனை அவனருளால் அகக்கண்கொண்டு உணரவேணடும். அதனை உணர்த்த வல்லார் வாய் செம்பொருள் உண்மையினைக் கேட்டறிதல் வேண்டும். "அறியார் மணற்சோற்றில் தேக்கிடுமா போல்" (293) என்ற எளிய உவமை வாயிலாக விளக்கப்பட்டுள்ளது.

"உறுதுணை யாவது உலகுறு கேள்வி", (294) என்ற பாடல் கேள்வியின் சிறப்பை விளக்குகிறது. மக்களுடம்பே உய்வதற்கு வழி யாகும். ஊற்றாந் துணையாகிய நற்கேள்வியே உயிர்க்குத் துணையாகும். இறைவனடி மறவா சிந்தையே செறிதுணையாகும். "பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே" (294) என்பதால் கேள்வி ஞானம் நம் பிறவியை ஒழிக்கும். தம்மைப் புகழ்ந்தவர்க்குத் திருவடி அன்பிற்கலப் பித்தும், தம்மை இகழநின்றார்க்கும் அவரை நல்வழிப்படுத்த இடர்களை அவரோடு பிணைப்பித்தும் நன்மை செய்பவன் இறைவன். அவன் புகழை ஓதாமல், அவன் புகழைக் கேளாமல் நெறிதவறிச் செல்வோர்க்குத் துன்பமின்றி இன்பமில்லை. அவர்களுக்கு இன்பவடிவான இறைவன் கல்பசுபோல உருவும், பெயரும் மடியும் பிறவும் கொண்டு உண்மைப் பசுபோல தோற்றமளித்தாலும் பாலுக்கு வழியொன்றுமில்லை. அதுபோல இறைவனால் அடையப்பெறும் பயன் ஒன்றுமில்லை "கதி உணராக் கழிய நின்றார்க்கு ஒரு கற்பசு ஆமே" (295) என்ற உவமை வாயிலாக திருமூலர் ஞானச் செவிச் செல்வத்தின் பயனை விளக்குகிறார்.

ஈருடைலை, ஒருடலாகி விளங்குபவன் இறைவன். அவனை மனதால் எண்ணி, வாயால் புகழ்ந்து, நன்னெறி நடப்பவர்கள் உள்ளத்தில் இறைவன் உறைவான். உடம்பிற்கு அச்சாக இருக்கும் மனம் கலங்கிய இடத்தும், ஆதியான இறைவனை உள்ளன்புடன் உணர்ந்தால், அவரை நெருங்கி அஞ்சற்க என்று கூறி அருள் செய்வான். எனவே அவன் புகழ் பாடுக! அவன் புகழ் கேட்க என்கிறார். "அச்சு சுழன்று ஆணி கலங்கினும், ஆதியை நச்சுணர்ந்தார்க்கே நணுகலுமாமே" (296) என்று வண்டின் அச்சை உவமையாகக் கூறி கருத்தை எளிமையாக்கினார். ஆணும், பெண்ணுமாகிய ஒன்றோடொன்று ஒவ்வாக் கோலம் வாழ்வு வரும் போக வடிவாகும். கோரவடிவம் தாழ்வு தரும். "யோக வடிவம் தவம் தரும்" இதனை "ஒன்றோடொன்று ஒவ்வா வேடம் ஒருவனே தரித்துக் கொண்டு, ...............கொன்றது வினையைக் கொன்று நின்றவக்

குணம் ஒன்று ஓரார்'' (சிவஞான சித்தியார் 1:2:23) என்று சிவஞான சித்தியார் பாடல் இங்கே ஒருங்கெண்ணி உணரத்தக்கதாகும்'' ஒருடம்பு இருவராகி என்றதனால் ஒருபால் பெண்ணும், ஒருபால் ஆணும் ஆனதினால் ஒவ்வாக்கோலம் என்றார்.

**ஞானக்கல்வி கல்லாமையின் சிறுமை**

ஞானக்கல்வி, ஞானக்கேள்வி ஆகியவற்றின் சிறப்பைக் கூறிய திருமூலர் ஞானக்கல்வி கல்லாமையின் இழிவைப் புலப்படுத்துகிறார். ஒன்றை உடன்பாட்டிலும், எதிர்மறையிலும் கூறுவது அக்கருத்தைத் தெளிவுபடுத்துவதற்கேயாகும்.

எழுதப்படிக்கத் தெரியாத கல்லாதவர், விருப்பத்தோடு முயன்றால் அவர்களுக்கு அறியப்படும் காட்சித் தன்மையுடையவன் இறைவன். இறைவன் இங்ஙனம் எளிமையாய் இருப்பவன். இறைஞானக்கல்வி அறியாமல், உலகில் பிறவற்றைக் கற்றவராயினும், அவர் கல்லாதவரே. ''கல்லாதவரும் கருத்தறி காட்சியை வல்லார் எனில் உண்மை பற்றா நிற்பார்'' (297) என்கிறார் திருமூலர். கல்லாதோர் திருவடியின்பம் காணாதவர். ஆகவே கல்லாமை இழிவு கூறப்பட்டது.

ஞானக்கல்வி கற்றோர் இறைவனோடு ஒன்றி வாழ்வர். அக்கல்வி கல்லாதவர் அறிவு பலவகைப்படும் என்பார்கள். அவர் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைத்தன்மையை அறியமாட்டார்கள். அவரியல்பை ''அல்லாதவர்கள் அறிவு பல என்பார், கல்லாதவர்கள் கலப்பறியாரே'' (298) என்று அவர்களின் சிறுமையை வெளிப்படுத்தினார்.

ஞானக்கல்வி கற்றவர் நெஞ்சில் இறைவன் உறைவான். இறைவன் பொதுக்காட்சியாக எங்கும் நிறைந்திருப்பினும், கல்லாதார் நெஞ்சில் அவரைக் காணமுடியாது. இதனை ''எல்லா உயிர்க்கும் இறைவனே ஆயினும், கல்லாதார் நெஞ்சத்து காண நண்ணாதே'' (299) என்று திருமூலர் கல்லாதவன் இழிவைப் புலப்படுத்தினார். இக்கருத்தையொட்டியே ''கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்'' என்ற பழமொழி உண்டாயிற்று.

திருவடி உணரும் கல்வியைக் கற்றிலேன். நன்னெறி நிற்கும் பற்றில் ஆற்றல் இல்லேன். பிறப்பிற்கு வித்தாகும் இருவினைத் துயராகிய இருள் மயக்கத்திற்கு உட்பட்டேன். திருவடி சேர்ப்பிக்கும் கல்வியைப் புண்ணியப் பேரின்மையால் கல்லாமல் போனேன். ஐம்புல நுகர்வில் அடங்கா ஆசையும், பொருளீட்டும் முயற்சியில் நாட்டமும், மனதுள் அடைபட்டுக்கிடக்கின்றன. இவற்றை ஒழித்து நன்னெறி ஒழுகக் கற்க வில்லை. இங்ஙனம் கல்லாத உலக மக்களுக்காகத் தாம் வருந்திப் பாடுகிறார். ''மனத்துனுள் கல்லேன் கழிய நின்றாட வல்லானே'' (300) என்ற பாடலில் அவரது வருத்தம் புலப்படுகிறது.

கற்றறிந்த அறவோர் இவ்வுலகம் நிலையில்லாதது. உடல் நிலை யில்லாததது. உயிர் நிலையில்லாதது என்ற உண்மையை உணர்வர். அதனால் இம்மை மறுமைக்குத் துணையாக அறத்தினையும், அம்மை வாழ்விற்கு இறைவன் துணையையும் கொண்டு வாழ்வர். இவ் வுண்மையைக் கல்லாதவர் கயவராவர். அவர்கள் பிறந்திறந்து இரு வினைக்கேற்ப வருகின்ற வினைத்துயரில் ஆட்படுவர். "கல்லா மனித்தர் கயவர் உலகினில் பொல்லா வினைத்துயர் போகம் செய்வாரே" (301) என்பதால் கல்லாதாதர் சிறுமையும், இழிவும் புலப்படுகின்றன. வினைத் துயர்களைக் கல்லாதவர் போகமாகக் கருதுவர் என்ற வரியின் நயம் சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

இறைவன் அருள்வெளியில் விளைந்த விளாம்பழம் போன்றவன். புறக்கண்ணிற்குப் பொதுக்காட்சியாகவும், அகக்கண்ணிற்குச் சிறப்புக் காட்சியாகவும் தோன்றுவான். இவ்வுண்மையை உணர்ந்தோர் கற்றோர். இதை உணராத கல்லாதவர் அனைத்தும் நிலையானவையென்றும் அறிவு போனவாறு நூல்பல செய்து, செய்து கையும், கண்ணும், கருத்தும் இளைத்து, தமக்கு ஏமம் காணாது வீணராயினர். விளாம்பழம் பித்தம் அகற்றும். பித்தம் அகன்றால் தெளிவு பிறக்கும். ஆகவேதான் சிவனை விளங்கனி என்று ஒப்பிடப்பட்டது. இது பண்பு உவமையாகும். கல்லாதாரின் அவலத்தை "எண்ணி, எழுதி இளைத்து விட்டாரே" (302) என்று ஏளனம் செய்கிறார். உணவின்றி இளைப்பார். கவலையால் இளைப்பார். ஆனால் கல்லாதார் மனம்போன போக்கில் எழுதி, எழுதி இளைத்துவிட்டார் என்பது அவர்களின் சிறுமை எள்ளி நகையாடப் படுகிறது.

ஞான நூல்களைக் கற்று, மெய்யறிவு பெற்றவர் கணக்கறிந்த வராவார். இவர்கள் இறையை உணர்ந்தவர். அவர்க்குக் கடவுட்காட்சி கிடைக்கும். கல்லாத கணக்கற்றவர்க்கு எப்போதும் கடவுட்காட்சி கிட்டாது. "கணக்கறிந்தார் கல்வி கற்றறிந்தாரே" (303) என்று கற்றோரைப் போற்றுவதால், கல்லாதாரை மறைமுகமாகத் தூற்றுகிறார்.

இறைஞானக் கல்வி பெறாதவர் அறிவிலிகள், அவர்கள் நன்னெறி விட்டுத் தீநெறிச் செல்வதால் அவர்களைக் காணக்கூடாது. அவர்கள் சொல்வதைக் கேட்கக்கூடாது. கல்லாதவர்க்கு அவரைப் போன்ற அறிவிலிகள் நல்லவர்கள். நல்லோரின் கருத்தை அவர்கள் அறிவதுமில்லை "கல்லாத மூடரைக் காணவும் ஆகாது. கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன் அன்று, கல்லாத மூடர்க்குக் கல்லாதவர் நல்லவராம், கல்லாத மூடர்க்கத் தெளியாரே" (304) என்று இப்பாடலில் கல்லாதவரை மூடர், மூடர் என்று நான்கு இடங்களில் திரும்பத் திரும்பக் கூறியமைக்கு அவர் களின் இழிவை உலகோர் அறியவேண்டும் என்பதற்கேயாகும்.

பல நூற்களைக் கற்றாலும் இறைஞானம் பெறாதோர் மூடர்களே! அவர்கள் சுற்றம், மற்றும் பிற பற்றுக்களைத் துறக்கமாட்டார். தம் மனக்குற்றங்களைக் களையமாட்டார். ஞானிகளை அறியார். மதி யில்லாதவர்கள், இறைஞான நூற்களைக் கற்று, இறை அனுபூதியில் திளைத்தவர்கள் கணக்கறிந்தவராவர். கல்லாரை மூடரென்றும், மதியிலார் என்றும் பழித்த திருமூலர் ''கற்றபின் நிற்போர் கணக்கறித்தார்'' (305) என்று கற்றோரைப் பாராட்டுகிறார். ஒரே பாடலில் அவ்விருவரின் வேறுபாட்டை விளக்கியிருக்கும் நுட்பம் அறியத்தக்கதாகும்.

இறைவன் சோதி வடிவானன். அவனை ஓதி உணரமுடியும் என்பார் உள்ளத்தில் இறைவன் அமர்ந்து இயக்குகிறான். இறைவனுக்கும், கற்றவர் ஆன்மாவிற்கும் உள்ள இத்தொடர்பை கல்லாத பிறர் அறிய மாட்டார். ஞானக்கல்வி பெற்றோர் இறைவனால் ஆட்கொள்ளப்படுதலும், கல்லாதவர் அவனை விட்டு விலகியே இருத்தலும் கண்கூடாகும்''. ''ஓதி உணர வல்லோர் என்பர் உள்நின்ற சோதி நடத்தும் தொடர் வறியாரே'' (306) என்பது திருமூலரின் அனுபவமாகும்.

**குருவின் வாயிலாகக் கல்வி**

மாதா, பிதா, குரு, தெய்வம் என்பது நம்நாட்டுப் பழமொழி. நம் வாழ்க்கையில் தாய் தந்தைக்கு அடுத்த நிலையில் குருவிற்கு முக்கிய இடமுண்டு. அக்காலத்தில் குருகுலக் கல்விமுறை இருந்தது. ஆண்டி முதல் அரசன் வரை குருவைத் தேடிச் சென்று கல்வி கற்கவேண்டும். குருகுலக் கல்வியில் எவ்வித வேறுபாடும் காட்டப்படவில்லை. குருவின் வாயிலாக இம்மைக்கல்வியும், மறுமைக்கல்வியும் கிடைக்கும். நமக்கு இறைவனை அறிமுகப்படுத்துவதே குருதான். உடலையும், உயிரையும், புலன்களையும், மனத்தையும் நெறிப்படுத்தவும், அவற்றைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கவும், ஆண்டவனை அடையாளம் காட்டவும் குரு வேண்டும். ஆறாம் அறிவு என்பது பகுத்தறிவு என்பது மட்டுமன்று. அது ஆன்மாவை அறிகின்ற அறிவாகவேண்டும். ஆன்ம அறிவை அறியாதோர் விலங்காவர். ஆன்மஞானத்தை உணர்த்துபவன் குரு ஆவார். அஞ்ஞான இருளில் உள்ள அகக் கண்ணன், ஞானமென்னும் கருவியால் யாரால் திறக்கப்படுகிறதோ, அவரே குரு ஆவார். இலக்கியம், இலக்கணம், ஓவியம், சிற்பம், கணக்கு ஆகியவற்றைக் கற்பிப்பவர் வித்யா குரு. நம் இருவினைகளைத் தீர்க்கவும், ஆன்ம அறிவை விளக்கவும் வந்தவர் ஞானகுரு. தன் மாணவனின் உடல், உயிர், மனம், ஆன்மா ஆகியவற்றைத் தூய்மையாக்கி, அவனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துவதே குருவின் கடமை. தாய்ப்பறவை அடைகாத்து, குஞ்சு வெளிவந்ததும் அலகால் கொத்திப்பேணி, இரையைத் தேடிவந்து ஊட்டி, நடக்கத், தாவ, பறக்கக் கற்றுக்கொடுக்கிறது. அதைப் போன்றது

குருவின் பணி. குருவைப் போற்ற வேண்டுமென்பதை "சற்குருவைப் போற்றி, மனம், வாக்கு, காயம் மூன்றும் பொருத்தப் புகழ்ந்து நின்றாடு பாம்பே" என்பார் பாம்பாட்டிச் சித்தர். "உற்றுழி உதவியும்" என்கிறது புறநானூறு. திருமந்திரத்தின் ஒன்பதாவது மந்திரத்தில் குரு, குருமடம், குருதரிசனம் போன்ற செய்திகள் பல உள்ளன.

குருவின் திருமேனி காண்டல், குருவின் திருமேனி தீண்டல், குருவின் திருவார்த்தை கேட்டல், குரு உருவைச் சிந்தித்தல் ஆகியன ஒரு மாணவனின் தவறாத கடமைகள் (183) என்று திருமூலர் கூறுகிறார். அவர் தம் குருநாதரான நந்தியடிகளை "புந்திக்குள் நிற்பது நந்தி பொற்பாதமே" (185) என்று போற்றுகிறார். கீழான, தவறிய ஒருவனும் குருவின் திருவருளால் மாசுகள் அகன்று ஒளிபெறலாம்.

பரிசனவேதி என்னும் மூலிகை தொட்ட எதனையும் பொன்னாக்கும். அதுபோல குருவின் எண்ணமும், சொல்லும், அருளும் ஒருவர்க்கு கிடைக்க அவர் மேன்மையடைவார்" "பரிசனவேதி பரிசித்ததெல்லாம், வரிசை தரும் பொன் வகையாகு மாபோல், குரு பரிசித்த குவலய மெல்லாம் திரிமலம் தீர்ந்து திருவருளாமே" (2016) என்பது அவரின் வாக்கு. நம் ஆணவம், கன்மம் மாயை என்ற மும்மலங்களும் குருவின் அருளால் நம்மை விட்டு நீங்கும்.

உடல் கெட்டால் நோய், உயிர் கெட்டால் பிணம். மனம் கெட்டால் பைத்தியம். குருவானவர் உடல், உயிர், மனம் இம்மூன்றையும் செம்மைப் படுத்தி, மேம்படுத்தி பிறவித் துயரையும் தீர்ப்பார் என்பதை "தவிர வைத்தான் பிறவித்துயர் தானே" (2012) என்ற பாடலால் தெளிவு படுத்துகிறார். இவையெல்லாம் குரு தந்த ஞானக் கல்வியால் விளைந்த மேம்பாடுகளாகும். தன் மாணவனை முக்தியடைய வழிகாட்டுவது குருவின் தலையாயபணி (2023) என்று மேலும் கூறுகிறார். "ஞானி எல்லாக் கருமங்களையும் தானும் ஆற்றிக்கொண்டு, மற்றவர்களையும் அதில் ஈடுபடுத்த வேண்டும்" (கீதை.3:26) என்று பகவத்கீதை கூறுவது திருமூலர் கருத்திற்கு ஒத்திசைவாக அமைந்துள்ளது.

இறைவனை அடைய சாதி, மதம் தடையில்லை, நால்வருணத்தாரும் குருவின் தயவால் இறைவனை அடையலாம். "சிந்தை திருத்தலும், சேர்ந்தார் அச்சோதனை சந்திக்க தற்பரமாகும் சதுரர்க்கே" (2600) என்பது திருமூலரின் புரட்சிக் கருத்தாகும். யாரையும் குருவானவர் தம் மாணவரை நல்வழிப்படுத்தி யோக நெறியில் புகச்செய்து, தற்பரமாகிய முக்தி பெறச் செய்வார் என்பதில் ஐயமில்லை. மேலும் உடலால், உயிரால், மனதால் நேர்கின்ற வினைப்பயன்களைக் களைவார். "மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும், மனவாக்கு நேர் நிற்கில் வல்வினை மன்னா, மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னால், தளை மாற்றியாற்ற

தருஞானி தானே'' (2566) என்று குருவின் சிறப்புக்களை அறியச் செய்கிறார்.

தன்னை அறிவது அறிவாகும். ''தன்னை அறியும் அறிவை அறிந்தபின் தன்னையே அர்ச்சிக்கத் தானிருந்தானே'', (2315) என்றும் ''அறிவு வடிவென்று அறியாத என்னை, அறிவு வடிவென்றருள் செய்தான் நந்தி'' (2317) என்று தன் குரு தன்னை அறியச்செய்த செய்தியை நமக்கு அறிமுகம் செய்துள்ளார்.

அஞ்ஞானமாகிய குருட்டினை நீக்கி, ஞானமாகிய ஒளியினை யேற்றும் நல்ல குருவை நாடாமல், அஞ்ஞானகுருவை நாடிச் சென்றால் இவ்விரு குருடர்களும் அஞ்ஞானத்திலே மூழ்குவர் என்பதை ''குருடும் குருடும் குழிவீழுமாறே'' (1652) என்று நமக்கு எச்சரிக்கை செய்கிறார். எனவே நற்குருவை நாடிச் செல்ல வேண்டும். தவறான வழிகாட்டுதலால் அரசு, நாடு, தனக்கும் கேடு என்பதை ''அரசுக்கும், நாட்டுக்கும் தனக்கும் கேடென்றே முற்பாலே நந்தி மொழிந்து வைத்தனனே'' (2009) என்கிறார். மேலும் இல்லறத்தார், துறவறத்தார் எவராயினும் நற்குருவின் போதனையால் வீடுபேறு அடையலாம் என்கிறார். ''நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்''. நந்தி அருளால் மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்'' (த.சி.பாயிரம்:22) என்று நன்றிப் பெருக்கோடு தம் ஆசிரியரைப் போற்றுகிறார். நற்குருவை அடைதலும், ஞானம் பெறலும், நன்றி மறவாமையும் மாணவர் கடமைகளாகும்.

''தாய்க்கு நிகரான எம்குரு நந்தியடிகளின் திருவடியை சுமக்கவே தலையைப் பெற்றேன். (அவர் அருளால் தலை தமக்குக் கொடுக்கப் பட்ட இரவல் கருவி என்று கூறுகிறார்) அவிச்சுவையை விட செவிச் சுவை சிறந்தது. நற்சுவை சேர்ந்த வாயைப் போன்ற நந்தியடிகளை வாழ்த்தவே வாயைப் பெற்றேன். இயற்கைப் பேரறிவைத் திருமேனி யாகக் கொண்டு திகழும் அவரை அகத்தும் புறத்தும் காணவே கண் பெற்றேன். நேரில் காணாதவிடத்தும் சிந்தனை என்னும் ஆற்றலால் காண சிந்தனை பெற்றேன்'' என்று தனக்காக எதனையும் பெறாமல் தன் குருவிற்கே தாம் அனைத்தையும் பெற்றதாகத் திருமூலர் பாடி யிருப்பது அவரது தன்னடக்கத்தையும், குருவை எங்ஙனம் ஒவ்வொருவரும் போற்ற வேண்டும் என்பதற்கும் பொருத்தமான பாட்டாகும்.

**''ஆயன நந்தி அடிக்கென் தலைபெற்றேன்**
**வாயன நந்தியை வாழ்த்தவென் வாய் பெற்றேன்**
**காயன நந்தியை காணவென் கண் பெற்றேன்**
**சேயன நந்திக்கு என் சிந்தைபெற்றேனன்றே''** **(2610)**

என்ற பாடல் ஒவ்வொரு மாணவரும் பின்பற்ற வேண்டிய மந்திரமாகும்.

- தற்காலக் கல்வி உண்மையான கல்வியாகாது.
- மனிதனின் உடல், உயிர், மனம் இவற்றைச் செம்மைப்படுத்துவதும், மேம்படுத்துவதும் உண்மையான கல்வியாகும்.
- தன்னை அறிவதே ஞானக்கல்வி
- ஞானக்கல்வியால் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள் நீங்கவேண்டும்.
- நல்வினை, தீவினை என்ற இருவினைகள் ஒழிய வேண்டும்.
- ஞானக்கல்வியால் இறைவன் நற்றாள் தொழுது, வீடுபேறு அடைய வேண்டும்.
- ஞானக்கல்வி பெற்ற அறவாணரின் வாய் மந்திரங்களைச் செவி மடுக்க வேண்டும்.
- கேள்வி ஞானம் ஒருவரைத் தீநெறியிலிருந்து விலக்கி நன்னெறிப் படுத்தும்.
- கேள்விஞானம் ஒழுக்கத்தின் ஊன்றுகோலாகும்.
- கற்றிலன் ஆயினும் ஞானக்கேள்வி நலம் பயக்கும்.
- ஞானக்கல்வி கல்லார் நெஞ்சில் ஈசன் நில்லான், கல்லார் வீடு பெற இயலாது.
- இருவினைத் துன்பங்களையே போகமென வாழ நேரிடும்.
- மனம் மயங்கி, மனமும், கண்ணும், கருத்தும் இளைத்துப் போகும்.
- உண்மையான ஞானக்கல்வியை நற்குருவின் வாயிலாகப் பெற வேண்டும்.
- தவறான குருவிடம் சேர்ந்தால் குருவுடன் அறியாமை பள்ளத்தில் விழ நேரிடும்.
- உண்மையான குரு, தம் மாணவனை இறைநெறியில் செலுத்தி, வீடுபேறு அடைய வழிகாட்ட வேண்டும்.
- குருநிந்தனை கூடாது, குருவை உரிய முறையில் வழிபட்டுக் கற்க வேண்டும்.
- திருமூலர் கூறும் ஞானக்கல்வி பெற்று, நாதனை அடைய வேண்டும்.
- "திருமந்திரமே சிவகதிக்கு வித்தாகும், திருமந்திரமே சிவமாம்" என்ற உண்மையை உணர்ந்து திருமந்திரத்தை நாளும் ஓதி, இறையருள் பெறுதல் வேண்டும்.

# 6. ஒன்பதாம் திருமுறையில் அகச்சுவை

பேராசிரியர் அ. ஆத்தீஸ்வரி, மதுரை.

சிவபெருமானின் புகழ்ப்பரப்பும் தெய்வப்பாமாலைகளின் தொகுப்புத் திருமுறைகளாகும். திருமுறைகள் ஆன்மாக்கள் இறைவனை அடைந்து இன்புறுதலை நோக்கமாகக் கொள்ள வேண்டும் என விழைபவை. இவற்றைச் சீரோடு அருளிச் செய்த திருமுறையாசிரியர்கள், தமிழின் செம்மை இசைமை, இனிமை, அருமை, வளமை, முதலிய பல்வகைப் பண்பு நயங்களையும் பாங்குறத் தெளிந்தவர்கள். இவ்வகையில் அருளாசிரியர்கள் ஒன்பதின்மரால் பாடப்பெற்றவை ஒன்பதாந்திருமுறையாகும். இவ்வொன்பதாந் திருமுறையில் அகச்சுவையானது பொருள்பட பொதிந்துள்ளது.

## அகப்பொருளும் பக்தி இலக்கியமும்

சங்கச்சான்றோர்கள் தலைவன் தலைவி இவர்களது காதல் வாழ்வினை அகப்பாடல்களில் சித்தரிக்கின்றனர். இவ்வாறு அகப்பாக்களில் சிறப்பிக்கப்பட்ட மானிடக்காதல், பக்திப் பனுவல்களில் மானிடர் இறைவனைக் காதலிக்கும் காதலாக மலர்ந்தது. அது தெய்வீகக் காதலாக ஒளி வீசியது. ஆடவர் - பெண்டிர் அதாவது தலைவன் தலைவி என்ற நிலைமாறி, இறைவன் ஒருவனே தலைவன் அவனைப் பாடும் அடியார்கள். அஃதாவது பால் வேறுபாடு கருதாது அனைவரும் தலைவியராக மாறும் நிலையினைப் பக்திப்பனுவல்களில் காணமுடிகின்றது. இதனை நாயக நாயகி பாவம் என்று குறிப்பிடுவர். இப்பாவத்தினால் இறைவனை வழிபடும் முறை பண்டுதொட்டு அடியார்களால் போற்றப்பட்டு வந்துள்ளது.

## ஆன்மாவின் பெண்மை குணங்கள்

இறைவனுக்கு ஆண்மையின் சிறப்பியல்புகள் கூறப்படுதல் போல, ஆன்மாவுக்கும் பெண்மையின் சிறப்பியல்புகள் கூறப்படுகின்றன. ஆண்மையின் இயல்பு செயல்படு திறனுடையது. ஆணையிடும் தன்மையினைக் கொண்டது. பெண்மையியல்போ அதற்கு நேர்மாறானது. ஆட்படு பான்மையும் ஏற்புப் பான்மையும் பணிவுப்பான்மையும் உடையது. இறைநிலை இணைவில் ஆன்மா தன்னுடைய விருப்பிற்கேற்ப செயல் படுவதில்லை. இறைவனின் செயலுக்குத் தன்னை முழுமையாக ஆட்படுத்திக் கொள்கிறது. எனவே தலைவன் தலைவி அகக்கற்பிதம்

என்பது பெண்மையின் இயல்புகளாகிய ஏற்றுக்கொள்ளல் பண்பு, ஒத்துணர்வுப் பண்பு என்ற அடிப்படையிலே இடம்பெற்றுள்ளன. மேலும் சமூகவியல் அடிப்படையில் ஆண்புற வாழ்க்கைக்கும் பெண் அக வாழ்க்கைக்கும் உரியவர்களாகக் காணப்படுகிறார்கள். எனவே பெண்ணின் தன்மைகள் கடவுட்காதலுக்கு உகந்தனவாக அமைகிறது.

## இறைநிலை இணைவிற்கு அகம் அடிப்படையாதல்

அக உணர்வின் மூலம் ஆன்மாவிற்குத் தூய்மையுறல்; இறைவனை அடைதல் போன்ற பல பேறுகள் கிட்டுகின்றன. எனவே அகம் என்பது இறைநிலை இணைவுத் தன்மையை நோக்கி உயருகிறது. சிற்றின்ப மாய்த் தொடங்கிய அகமானது பேரின்பக் குறிக்கோளாய் அமைகிறது. மனிதக் காதலுக்குச் சொல்லப்பட்டன எல்லாம் ஆன்மாவுக்கும் பரம்பொருளுக்கும் சொல்லப்பட்டன ஆகின்றன. இதனால் அகம் என்ற சொல் இறைநிலை இணைவெனும் உச்சியில் நின்று பேரின்பம் பயக்கிறது.

## ஒன்பதாந் திருமுறையில் அகப்பொருள் பதிவுகள்

திருமுறைப்பனுவல்கள் மனித உறவினையும், இறைவனையும் இணைக்கின்றன. இன்பம் பேரின்பமாகின்ற காட்சியினைத் திருமுறை களில் அகக்கோட்பாடு உணர்த்துகிறது. சைவ சமய வளர்ச்சிக்கு உதவிய ஒன்பதாந் திருமுறையாசிரியர்கள் பக்தி நெறியில் ஆழமும் நுட்பமும் நிறைந்த காதல் உணர்ச்சிகளை வெளியிட்டனர். சங்க இலக்கியப் பாடல்களில் தலைவியின் நெஞ்சம் முழுவதையும் தமக்கே பெற்ற தலைமகன் இடத்தைச் சமயப் பனுவலில் இறைவன் பெற்றுவிடுகிறான். தலைவன் அருளையே நோக்கி நிற்கும் தலைவியின் இடத்தினைச் சமயச் சான்றோர்களும் ஆன்மாக்களும் பெற்றுவிடுகின்றனர். எனவே ஒன்பதாந்திருமுறையாசிரியர்கள் அருளிய பாடல்கள் பலவற்றில் மானிடக் காதலைப் போற்றும் அகமரபுகள் விரவி நிற்கின்றன.

### கூற்றுமுறைகள்

உணர்ச்சிகள் வாழ்வின் இயக்கமாகவும் இலக்கியத்தின் உயிர் நாடியாகவும் விளங்குகின்றன. இவை மனித வாழ்வில் பெரும்பங்கு வகிக்கின்றன. வாழ்க்கையை ஒழுங்குப்படுத்துவதும், குறிக்கோளுடன் செயல்படுத்துவதும் உணர்ச்சி வழிச்செயல்களாகும். மனித உள்ளத்து உணர்வுகளைப் பண்பு கெடாது எடுத்துச் சொல்வதற்கேற்ற வழிமுறைகள் கூற்றுக்கள் எனப்படுகின்றன. அவ்வகையில் அகப்பொருள் இலக்கியங் களில் கூற்றுக்கள் சிறப்பிடம் பெறுகின்றன. ஒன்பதாந்திருமுறையில் இக்கூற்று முறையானது பரம்பொருளை தலைவனைப் பெறவிரும்பும் தலைவியின் மன உணர்ச்சியின் இயல்புகளைக் குறிப்பதாக உள்ளது.

## தலைவியின் கூற்றுக்கள்

ஒன்பதாந் திருமுறையில் கருவூர்த்தேவர், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி இவர்கள் அகப்பொருட்சுவையின் அடிப்படையில் சில பாடல்களை இயற்றியுள்ளனர். பதிகங்களாகவும், அகப்பொருட்சுவை தாங்கிய தனிப்பாடல்களாகவும் அமைந்த இவர்களின் பாடல்கள் தமிழ் மொழியின் அகப்பொருள் இலக்கணத்தை ஒட்டியவை. எனவே தலைவி என்னும் பகுதியில் தலைவனைக் கண்ட தலைவியின் பல்வேறு நிலைகள் விளக்கப்படுகின்றன.

## தலைவனைப் பெறாது வருந்துதல்

கருவூர்த்தேவர் பாடிய பாடல்களில் 'திருக்கீழ்க்கோட்டூர்' இறைவன் மீது பாடப்பெற்றப் பதிகம் தலைவி கூற்றாக அமைந்துள்ளது. அத் திருத்தலத்தில் திருநடனம் செய்யும் கூத்தப்பெருமானைக் காதலித்த தலைவி, அப்பெருமான் தன்னுடைய மனத்திற் கலந்து தன்னை வருந்திய திறத்தையும், அப்பெருமானை அடையப்பெறாது வருந்துகின்ற வருத்தத்தையும் குறிப்பிடுகிறார்.

தளிரொளி மணிப்பூம் பதம்சிலம் பலம்பச்
சடைவரித் தலையேறி கங்கைத்
தெளிரொளி மணிநீர்த் திவலைமுத் தரும்பித்
திருமுகம் மலர்ந்துசொட் டட்டக்
கிளரொளி மணிவண்டறை பொழிற் பழனங்
கெடுளம் மலைசெய்கீழ்க் கோட்டூர்
வளரொளி மணியம் பலத்துள் நின்றாடும்
மைந்தன் என் மனங்கலந்தானே (9:10:1)

என மணியம் பலத்து நின்றாடும் மைந்தன் தன் உள்ளத்தை வருத்தும் நிலையினைக் குறிப்பிடுகிறார்.

## உள்ளங்கவர்ந்த இயல்பு கூறல்

கல்வி கேள்விகளில் சிறந்த பெரியோர்கள் தன் திருவடிகளைத் தொழுது ஏத்த அவர்களுக்கு அருளும் நிலையில் உள்ள இறைவனாம் தலைவன் தலைவியின் உள்ளத்தினைக் கவர்ந்துவிட்டான். இதனைத் தலைவி,

துண்டவெண் பிறையும் படர்சடை மொழுப்பும்
அழியமும் சூலமும் நீல
கண்டமும் குழையும் பவளவாய் இதழும்
கண்ணுதல் திலகமும் காட்டிக்
கொண்டையுங் கயலும் உள்ளுநீர்ப் பழனங்
கெழுவுகம் பலைசெய்க்கீழ்க் கோட்டூர்

வண்டறை மணியம் பலத்துள் நின்றாடும்
மைந்தன்என் மனங் கலந் தோனே (9:10:2)

என்கிறாள். அதாவது தலைவன் பிறைசூடிய சடை பரந்த தலை, கையில் கொண்ட சூலம், விடம் பொருந்திய கண்டம், காதில் குழை, சிவந்த வாய், நெற்றிக் கண்டம், இவற்றைக் காட்டித் தன்னுடைய உள்ளத்தைக் கவர்ந்தான் என்கிறார்.

யாதுநீ நினைவ தெவரையா முடைய
தேவர்களும் யாவையும் தானுய்ப்
பாதுகை மிழலைச் சிலம்பொடு புகுந்தென்
பணிமலர்க் கண்ணுள்நின் றகலான் (9:10:9)

என 'உள்ளங் கவர்ந்த தலைவன் தன் கண்ணுள்ளே இருக்கிறான்' என்றும் கூறுகிறாள்.

**காதல் உற்றநிலை**

திருவாலியமுதனார் தம்முடைய பதிகத்தில் தலைவன் மீது காதல்கொண்ட தலைவி தன்னுடைய காதல் வேட்கையில் வெய்துயிர் கின்ற தன்மையினைச் சுட்டுகின்றார்.

தேய்ந்து மெய்வளத் தகம்வளைந் தரவினை
அஞ்சித்தான் இருந்தேயும்
காப்பறிந்து வந்துவந் தென்றனை வலிசெய்து
கதிர்நிலா எரிதூவும்
ஆய்ந்த நான்மறை அந்தணர் தில்லையுள்
அம்பலத் தரன்ஆடல்
வாய்ந்த மாமலர்ப் பாதங்கள் காண்பதோர்
மனத்தினையுடையோற்கே (9:23:6)

எனத் தலைவி, 'அரவினை இடைய்யில் கட்டி தில்லையில் கூத்தினை நிகழ்த்தும் தல்வனைக் கண்டு காதல் உற்றதால் தண்மதியமானது, எரியினைத் தூவுவதாய் அமைந்தது' என்கிறாள்.

அறிவும் மிக்கநன் னாணமும் நிறைமையும்
ஆசையும் இங்குள்ள
உறவும் பெற்றநற் றாயோடு தந்தையும்
உடன்பிறந்த தவரோடும்
பிரிய விட்டுனை யடைந்தனன் என்றுகொல்
பெரும்பற்றப் புலியூரின்
மறைகள் நான்முகங்கொண்டந்தனர் ஏத்தநன்
மாநட மகிழ்வானே (9:23:8)

இவ்வாறு காதல் பெற்ற நிலையில் தலைவியானவள், உற்றாரை வேண்டாது, ஊரினை வேண்டாது தலைவனையே நினைந்து உருகுகிறாள்.

**காதல் வேட்கையினை மொழிதல்**

தலைவி தன்னுடைய காதல் வேட்கையால் தன் வாய்நலன் தலைவன் திருநாமத்தை உச்சரிக்கிறது என்றும், தன் கண்கள் அவன் திருக்கோலத்தைக் கண்டு வருந்துகிறது என்கிறாள். மேலும் தலைவன் அணிந்துள்ள அழகுப் பொருள்கள் அனைத்தும் தம்மை வருத்துவதாகக் குறிப்பிடுகிறாள்.

**வாரணி நறுமலர் வண்டுகொண்டு**
**பஞ்சமம் செண்பகமாலை மாலை**
**வாரணி வனமுலை மெலியும் வண்ணம்**
**வந்திவந் திவைநம்மை மயக்குமாலோ** (9:26:1)

எனத் தலைவி தனக்கு வருத்தம் தருவனவற்றை வருந்திக் கூறுகிறாள்.

ஒன்பதாந் திருமுறையாசிரியர்கள் தம்மைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் புனைந்து, ஒப்பற்ற காதல்வாழ்வினைச் சமயம் சார்ந்த தத்துவக் கருத்துக்களைக் கூறுவதற்கு ஒரு நெறியாகக் கையாண்டனர்.

# 7. திருமந்திரத்தில் விளக்க உத்தி

முனைவர் அ. ஆலிஸ், திருச்சிராப்பள்ளி.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பத்தாம் திருமுறையாக அமையும் திருமூலரின் திருமந்திரம் சைவக் கோட்பாடுகளை எடுத்துரைக்கின்ற நூலாகும். "திருமந்திரத்தைத் திருமுறைகளில் ஒன்றாகச் சேர்த்துள்ள நிலையில் தோத்திரமாகச் சிலர் கூறக் கருதினாலும் அதன் அமைப்பு, 'சாத்திரம்' என்றும் கருதுமாறுள்ளது என்பர். 'திருக்களிற்றுப்படியார்', 'திருவுந்தியார்' போன்ற மெய்கண்ட நூற்களுக்கும் திருமந்திரத்துக்கும் சிவானுபவத்தைக் கூறிச் செல்லும் போக்கில் ஒற்றுமை இல்லை எனக் கூறமுடியாது. எனவே திருமந்திரத்தைச் சாத்திரம் எனக்கூறி விழைதல் இயல்பே" (ப. அருணாசலம், 1982, ப.6) என்ற கருத்து குறிப்பிடத் தக்கது. ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டைத் தெளிவாக விளக்கிச் செல்லும் இச்சாத்திர நூலில் திருமூலர் தனது கருத்தைப் புலப்படுத்த என்னென்ன வெளிப்பாட்டு முறைகளை உத்திகளாகக் கையாளுகின்றார் என்று காண்பது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். சுப. அண்ணாமலையின் திருமந்திரம் மூலபாட ஆய்வுப்பதிப்பின் முதற்பகுதியில் அமையும் வேதச்சிறப்பு, ஆகமச்சிறப்பு திரிமூர்த்தி ஆகிய பகுதிகளில் அடங்கும் பாடல்கள் மட்டும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

திருமூலர் கயிலை மலையில் நந்தியம்பெருமானிடம் உபதேசம் பெற்ற நான்மறை யோகிகளுள் ஒருவர். திருவாவடுதுறையில் சிவபோதி மரத்தின்கீழ் யோகம் இருந்த பெருமையும் தாம் படைக்கப்பெற்றமை இறையியலைப் பற்றித் தமிழ் நூல் செய்வதற்காகவே என்பதை உணரும் ஆற்றலும் கொண்டிருந்த சிறப்பு திருமூலருக்கு உண்டு. இவர் நூல் பாடிய காலம் கி.பி. 5ஆம் நூற்றாண்டினையொட்டிச் சற்று முன்பின்னாகக் கொள்ளப்படலாம் என்று பல காரணங்களைக் கொண்டு சு.ப. அண்ணாமலை விளக்குகிறார். (சு.ப. அண்ணாமலை, 1997, ப. XXXV). சைவ நெறியின் உருவாக்கக் காலத்தைச் (Formative Stage) சேர்ந்தவர் ஆகையால் திருமூலர் தம் காலத்தில் சைவ நெறியின் முக்கியக் கொள்கைகளாக அறியப்பட்டிருந்தவற்றைத் தொகுத்துச் சுருக்கமாக விளக்குகிறார் என்பதும் சு.ப. அண்ணாமலையின் கருத்தாகும். (சுப. அண்ணாமலை, 1997, ப. XXXVII) சைவநெறியின் முக்கியக் கொள்கைகளை விளக்கும் அவர்,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

என்று தன் வாழ்க்கையின் நோக்கத்தைத் தெளிவாக உணர்ந்து சுட்டும் வரிகள் குறிப்பிடத்தக்கன. திருமந்திரம் நூலில் தன் கருத்துக்களை விளக்க அவர் கையாளும் கருத்துப்புலப்பட்டு உத்திகளுள் குறிப்பிடத் தக்கது விளக்க உத்தியாகும். ஒன்றை விளக்கிச் சொல்வதன் மூலம் கேட்போரின் அய்யங்களைப் போக்கலாம். கேட்போரும் கருத்தை விளங்கிக்கொண்டு பயனடைவர். இவ்வகையில் திருமூலர் கையாளும் விளக்க உத்தி பின்வரும் நெறிமுறைகளில் அமைகிறது.

1. ஒப்பிட்டு விளக்குதல்
2. எதிர்மறையாகச் சொல்லி விளக்குதல்
3. உலக நிலையைச் சொல்லி விளக்குதல்
4. எண் அடிப்படையில் விளக்குதல்
5. உவமை வழி விளக்குதல்
6. இயற்கையை இணைத்து விளக்குதல்
7. வருத்தம் மேலிட (உணர்வுபட) விளக்குதல்
8. இறைவனின் தொடர் செயல் சொல்லி விளக்குதல்
9. செயலைச் சொல்லி விளக்குதல்
10. பயனைச் சொல்லி விளக்குதல்

இறைவனின் தோற்றமோ, செயல்களோ; அருளும் திறமோ, பிற இயல்பு களே கேட்போருக்குப் புரியும்படி சொல்லப்படுவதற்குத் திருமூலர் விளக்க நடையைப் பயன்படுத்துவதைக் காண முடிகிறது. 1. வேதத்தின் சிறப்பினைக் கூறவரும் திருமூலர் வேதத்தைத் தவிர வேறு அறம் எதுவும் இல்லை என்று பிறவற்றோடு வேதத்தை ஒப்பிட்டுப் பேசுகிறார்.

"வேதத்தை விட்ட அறமில்லை; வேதத்தின்
ஓதத்தகும் அறம் எல்லாம் உள" (தி.ம. பாடல் 85, வரிகள்1-2)

என்பது சான்று.

2. எதிர்மறைத் தொடரைக் கையாண்டு எதிர்மறையாகச் சொல்லி உடன் பட்ட ஒரு கருத்தினை விளக்கினால் அது கேட்போர் மனதில் நன்கு பதியும். வேதம் உரைப்பவன் ஆகிய பிரமன். அவ்வேதத்தின் ஆசிரியனோ தலைவனோ அல்லன். சிவபரம் பொருளே இவ் விருவராகவும் உளன் என்ற கருத்தை,

"வேதம் உரைத்தானும் வேதியன் ஆகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட

..........................................
.... மெய்ப்பொருள் காட்டவே" (தி.ம. பாடல் 86: வரிகள் 1,2,4)

என்று எதிர்மறையாக விளக்குகிறார். ஒவ்வொரு மூர்த்தத்தினுடைய பயனையும் சிந்திப்பின், பிரமனும் திருமாலும் நமக்கு அன்னியம் அல்லர். அவர்களும் நந்தியின் அடியார்களே. அவர்களையும் வழிபட்டு வரம் பெறுக என்னும் பொருளை விளக்கும்போது,

"பயனறிந் தவ்வழி யெண்ணு மளவி
லயனொடு மானமக் கன்னிய மில்லை
நயனங்கண் மூன்றுடை நந்தி தமராம்
வயனம் பெறுவீரவ் வானவ ராலே" (தி.ம. பாடல்:105)

என்று எதிர்மறைத் தொடரைக் கையாளுவதைக் காணலாம்.

3. இவ்வுலகில் மனிதனை மயக்கும் சக்திகள் பல உண்டு. அவற்றில் சிக்காது மனிதன் வாழ்ந்து இறைவனடிகளைப் பற்றல் வேண்டும் என்பர். இத்தகைய சூழலைச் சொல்ல வரும்போது உலகியல் நிலையை பின்வருமாறு விளக்கிச் சொல்கிறார்... பலராய் மிகுந்த கணிகையரின் பாட்டும் கூத்தும் நீங்காத இவ்வுலகில் சில அந்தணர் வேத நெறியில் ஒழுகுதலை விட்டு, தாம் பெறவியலாதவற்றை விரும்பி, விரதம் ஒன்றும் இன்றி வாழ்கின்றனர். இவர்கள் வேள்வி செய்தும் பிறரை யாசிக்கின்றனர் என்று உலகியல்பைப் பேசுகிறார்.

"பாட்டும் ஒலியும் பரக்கும் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியில் மாட்டாதார்
வேட்டு விருப்பார், விரதம் இல்லாதவர்
ஈட்டும் இடம் சென்று இரத்தல் உள்ளாரே" (தி.ம. பாடல்:90)

என்பது சான்றாகும்.

4. எண்ணிட்டுச் சொல்லி விளக்கி விளங்க வைக்கும் உத்தியைச் சிறப்பாகத் திருமூலர் கையாளுகிறார்.

"அண்ணல் அருளால் அருளும் சிவகாமம்
எண்ணில், இருபத்தெண்கோடி நூறாயிரம்"
(தி.ம. பாடல்:92 வரிகள்1-2)

"பண்டித நாவார் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர்" (தி.ம. பாடல்:93, வரிகள் 1-2)

என்ற வரிகள் சான்றாவன.

5. வேத தத்துவங்களை விளக்கும்போது உவமை வழியாக விளக்கிச் சொல்லுதல் மக்களிடம் செய்தியைச் சென்று சேர்ப்பிக்கும் ஒரு

எளியதும் மிகச் சிறந்ததுமான உத்தியாகும். இதனைத் திருமூலர் பாடல்களில் பரக்கக் காணலாம்.

ஞானாசிரியனின் உபதேசத்தை உணர்ந்து அனுபவம் பெறுவோர் இறந்தால் அவரது உயிர் இறைவனுடன் வேற்றுமை இன்றிக் கலக்கும், எவ்வாறு எனின் பாலில் நெய் வேற்றுமை இன்றிக் கலந்திருப்பது போல் என்று சிறந்த உவமை வழி விளக்குகிறார்.

"புரையற்ற பாலினு ணெய்கலந் தாற்போற்
நிரையற்ற சிந்தையு ளாரியன் செப்பு
முரையற் றுணர்வோ ருடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே" (தி.ம. பாடல்:132)

நீரில் உள்ள உவர்ப்புத் தன்மை சூரியனின் வெம்மையால் பிரிந்து வேறு வடிவமான உப்பு ஆகும். பின் நீரில் கலந்தால் அதனோடு வேறுபாடு இன்றி ஒன்றாகும். அதுபோல ஆன்மா ஆணவமலத்தினால் சிவத்தின் வேறுவடிவாய் வினைகளை ஈட்டி அனுபவித்து உழலும். பின்னர் குருவருளால் ஆணவமலத்தடை நீங்கப்பெற்றது சிவத்தோடு ஒன்றி அதனின் வேறு அல்லாதது ஆகும் (தி.ம. பாடல்:134).

சித்தர்கள் மாசற்ற மனத்துடன் ஐம்புலன்களையும் ஒருமையுள் ஆமைபோல் அடக்குவர் (தி.ம. பாடல்:131). உயிரின் அறிவு பொறி புலன்களில் கட்டுண்டு அவற்றின் மயக்கிலிருந்து விடுபடும் வழியறியாது துன்புறும். எது போல? ஆழமான குளத்தில் மூழ்கிக் கரையேற அறியாமல் இருப்பவனைப் போல. (தி.ம. பாடல்:117) பால், நீர் இரண்டையும் அன்னம் தனித்தனியே பிரிப்பது போல அடியார்களுக்கு இறைவனது திருவருள் ஐந்தொழிற் கூத்தின் மூலமாக அடியார்களின் வினைகளைப் பிரித்து அழிக்கும் (தி.ம. பாடல்:118). உயிரும் மலங்களும் முறையே சூரியகாந்தக் கல்லும் அதனைச் சூழ்ந்துள்ள பஞ்சும் போன்றவை. பஞ்சைச் சூரியகாந்தம் எரிக்காது. ஆனால் சூரியன் இருந்தால் அதன் ஒளியைச் சூரியகாந்தம் வாங்கிப் பஞ்சைச் சுடும். அதுபோல குரு அருளினால் உயிர் தன்னைப் பிணித்த மலங்களை நீக்கும் (தி.ம. பாடல்:115). சிவபிரான் அருளினால் நல்கிய ஆகமங்கள் எண்ணிலாத அறிவுச் செய்திகள் உடையனவே. ஆயினும் பதிஞானம் பெறாவிடின் அவை நிலையற்று நீங்கும் (தி.ம. பாடல்:98). இத்தகைய உவமைகள் வேதக்கருத்துக்களை எளிதில் விளக்குகின்றன.

6. மாரிக்காலத்தும் கோடைக்காலத்தும் பனிநீளும் காலத்தும் எனக் காலவேறுபாட்டால் இளைக்கும் உயிர்க்கு உய்தி கிடைக்குமாறு ஆகமங்களை இறைவன் அருளினான் (தி.ம. பாடல்:99) என்று பருவம் குறித்த இயற்கை தொடர்பான செய்திகள் மூலமாக விளக்குவதும் ஓர் உத்தியாக அமைகிறது.

7. சிவனும், திருமாலும், பிரமனும் ஒருமையுடையவரே என அறியாமல் மக்கள் இவர்களுள் வேறுபாடு செய்து தம்முள் மாறுபடுகின்றனர் என்ற கருத்தை விளக்கும்போது மக்கள் இவ்வாறு வேறுபடுகின்றனரே என்ற வருத்த உணர்வு மேலிடுவதைக் காணலாம்.

"ஆதிப் பிரானும் அணி மணிவண்ணனும்
ஆதிக் கமலத்து அலர்மிசை ஆயனும்
சோதிக்கின் மூன்றும் தொடர்ச்சியில் ஒன்று எனார்
பேதித்து உலகம் பிணங்குகின்றார்களே" (தி.ம. பாடல்:102)

என்ற பாடலில் பிணங்குகின்றார்களே என்ற சொல் திருமூலரின் ஆழ்ந்த வருத்தத்தைப் புலப்படுத்துகிறது.

8. இறைவன் தனக்குச் செய்யும் நன்மைகளை விளக்கி எழுதினால் கேட்போர் இறைவனின் ஆற்றலை விளக்கிக்கொள்ளக்கூடும் எனக் கருதியதாலோ என்னவோ இறைவனின் தொடர்செயலைச் சொல்லி விளக்கும் முறை திருமூலரால் கையாளப்படுகிறது.

"களிம்பு அறுத்தான் எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பு அறுத்தான் அருட்கண் விழிப்பித்து
களிம்பு அணுகாத கதிர்-ஒளி காட்டிப்
பளிங்கில் பவளம் பதித்தான் பதியே" (தி.ம. பாடல்:112)

இறைவன் சிவபெருமானே எனக்கு அருள்தந்து ஆணவ மலத்தைப் போக்கினான், மீண்டும் என் அறிவை அம்மலம் சாரந்து மறைக்காதவாறு என் உணர்விற்குத் தனது பேரொளியைக் காட்டிப் பளிங்கில் பவளம் பதித்தாற் போல என்னுடன் கலந்தான் என்று இறைவன் தொடர்ந்து மீண்டும் ஆணவமலத்தை நீக்கியமை சுட்டப்படுகிறது.

9. சிவயோகியர் பற்றி விளக்கிச் சொல்லவரும் திருமூலர் அவர்களது செயல்கள் பலவற்றைச் சொல்லி அவர்தம் இயல்புகளை விளக்கு கிறார், சிவயோகியர் தம்பிறப்புக்குரிய விதைகள் ஆகிய சஞ்சித வினைகளைத் திருவருளால் நீக்கப்பெற்று சுத்ததுரிய அவத்தை என்னும் உணர்வு நிலையை எய்தி உலக பந்தம் இன்றி, ஐம் புலன்களும் உயிருணர்வுடன் ஒத்து இயங்க அவ்வுயிருணர்வும் சிதாகாசத்தில் நிற்க, செத்தார் போலே இருப்பர்.

"வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து தொடக்கற்று
வொத்துப் புலனுயி ரொன்றா யுடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யர்களே" (தி.ம. பாடல்:119)

10. சிவயோகியர் பெற்ற பயன்களைச் சொல்லி இறைவனின் அருளை விளக்குதல் ஒரு சிறந்த உத்தியாகத் திருமந்திரத்தில் அமைகிறது.

"பெற்றா ருலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றா ருலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றாரம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றா ருலகுடன் பேசாப் பெருமையே" (தி.ம. பாடல்:130)

சிவசித்தர் உலகியலிடையே வாழ்ந்தவாறே சிவமுதல்வனைப் பிரியாத நிலை பெற்றார். இதன் பயனாக மீண்டும் பிறவாமையைப் பெற்றார். உடம்பு நீங்கியபின் பெருஞ்சுக வெளியில் சிவத்தை விட்டுப் பிரியாமல் பேரின்ப வாழ்வு வாழ்வர் என்ற உறுதியைப் பெற்றார். உலகில் பிறருடன் ஒப்பவைத்துப் பேசுமாறு அன்றி யாவரினும் உயர்ந்தார் என்று இறைவனை வணங்குவதன் பயனைச் சொல்லி இறைவனைக் குறித்து விளக்கும் முறை குறிப்பிடத்தக்கது.

திருமூலர் இறைவன் தொடர்பான செய்திகளை ஒன்றனுடன் ஒப்பிட்டுக் காட்டியோ, எதிர்மறையாக 'இப்படி இல்லை' என்று சொல்வதன் மூலமோ, உலகில் விளங்கும் பக்தர்களின் நிலையைச் சொல்லியோ, எண்மூலர் குறித்தோ, உவமை வழியோ, இயற்கை வழியாகவோ, வருத்த உணர்வு மேலிடவோ, இறைவனின் தொடர் செயல்கள் வழியாகவோ, இறைவன் அல்லது பக்தர்களின் செயல்களைச் சொல்லியோ, இறைவனை வணங்குவதன் பயன்களைச் சொல்லியோ விளக்கும் விளக்க உத்தி மிகவும் குறிப்பிடத்தக்க ஓர் உத்தியாகத் திருமந்திரத்தில் காணப்படுகிறது. இவ்வுத்தி பல செய்திகளை விளக்கிச் சொல்ல உதவுவதனால் ஆசிரியர் சொல்லவரும் கருத்து எளிதில் கேட்போரைச் சென்றடைந்து பல பயன்களை விளைவிக்கிறது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# 8. திருமந்திரம் காட்டும் அரசாட்சி முறை

முனைவர் இசக்கியம்மாள் ஆறுமுகம், குற்றாலம்.

பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம் பக்தி இலக்கியம் மட்டுமல்ல அற இலக்கியமும் ஆகும். திருமூலர்தான் திருமந்திரத்தின் படைப்புக் கடவுள்; இவர் ஒரு சித்தர்; மாபெரும் சமூக விழிப்புணர்வு சிந்தனை யாளர்; நாட்டு நலனுக்கும் வீட்டு நலனுக்கும் அற வழிகாட்டி நாடாளும் அரசன் முதல் வீடாளும் குடும்பத் தலைவன் ஈறாக உள்ள அனைவருக்கும் விதிமுறைகளை வகுத்த வித்தகர். திருமூலரின் திருமந்திரம் ஒவ்வொரு மனிதனையும் தன்னை ஒத்த பிறிதொரு மனிதனின் இன்பத்திலும் துன்பத் திலும் பங்கு கொள்ள வைக்கிறது. மனிதனை ஒழுக்க நெறியில் நிற்க வைக்கிறது. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பச் செய்கிறது. ஆரவாரமும் வேறு பாடுகளும் நிறைந்த சாதிகளை மதங்களை; சடங்குகளை மூடநம்பிக்கை களைச் சாடுகின்றது. மனிதனை அன்பும் அறிவும் மிக்கவனாக வாழ வழி வகுக்கிறது. இப்படித் தனிமனிதனுக்கு பெண்ணுக்கு, சமூகத்திற்கு என்று தனித்தனியே வாழ வழி வகுத்த திருமந்திரம் அரசனுக்கும் அரசாட்சி முறை குறித்து வழிவகுத்துள்ளது.

திருமந்திரத்தின் கரணாகம்தி எனப்படும் 13-வது அத்தியாயம் 'இராசதோடம்' ஆகும். இராசதோடத்தின் முந்தைய அத்தியாயம் 'வேதியர் சீலம்' என்பதாகும். 'இராசதோடம்' என்னும் அத்தியாயத்திற்கு சைவ சித்தாந்த பதிப்பகம் 'அரசாட்சி முறை' என்று தலைப்பிட்டுள்ளது. பிற பதிப்புக்கள் 'மன்னர்க்குரிய குற்றங்கள்' என்று தலைப்பிட்டு விளக்கி உள்ளது. வேதியர் சீலம் என்னும் பகுதி வேதியர்கள் தாம் ஒரு நாட்டின் உயிர்மூச்சு என்கிறது. வேதியர்கள் என்போர் வேதம் ஓதுவோர். வேதம் என்பது இறைமையை உணர்த்துவதாகும். இதனை நோக்க ஆன்மீகம் தான் ஒரு நாட்டின் உயிர் மூச்சாகிறது. ஆன்மீகம் சிறக்க ஆட்சி சிறக்க வேண்டும்; ஆட்சி சிறக்க ஆளுகின்ற அரசன் சிறப்புடன் விளங்க வேண்டும். எனவே ஆளுகின்ற அரசன் நாட்டையும் ஆன்மீகத்தையும் தம் இரு கண்களாகப் போற்றிப் பாதுகாத்தல் வேண்டும் என்பது அறிவுறுத்தப்படுகின்றது. அதனால் அன்றோ திருக்குறள் அரசனை 'இறை' என்றழைக்கிறது. அரசர்கள் எல்லோரும் இறையாகி விடமாட்டார்கள்.

"முறை செய்து காப்பாற்றும் மன்னவன்மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும்" (குறள். 388)

என்று திருக்குறள் குறிப்பிடுகின்றது. இக்குறள் அரசனுக்கு அவன் காத்தல் தொழிலின் உயர்வை அறிவுறுத்துகிறது எனலாம். அவ்வகையில் திருமந்திரத்தின் 'அரசாட்சிமுறை' என்னும் இப்பகுப்பு முதல் பாடலில் அரசனின் தகுதிப்பாடாக கல்வியறிவு பெறுதலை வலியுறுத்துகிறது. பிறபாடல்கள் முறையே 'வீரம் பேணல்', 'துறவோர் பேணல்' தனிமனித அறம் பேணல்; சமயம் பேணல் என்ற நால்வகை போற்றிப் பாதுகாக்க வேண்டிய அற முறைகளைப் பேசுகிறது. ஒரே ஒரு பாடலில் 'கள்ளுண்ணலைத் தடுத்தல்' என்று மதுவிலக்கை திருமந்திரம் கி.மு.க்களிலேயே கொண்டு வந்துள்ளமையைப் புலப்படுத்துகின்றது.

**கல்வியறிவு பேணல்**

அரசனுக்குரிய தகுதிப்பாடுகளை அறநூல்கள் பல பேசுகின்றன. திருமந்திரம் அரசனுக்குரிய முதல் மிக அடிப்படையான தகுதிப்பாடாகா கல்வியறிவைப் பெறலையும்; அதனைப் பேணிப் பெருக்கிக் கொள்ளு தலையும் வலியுறுத்துகின்றது. இங்கு கல்வியறிவு என்பது எல்லோரும் கற்கும் ஏட்டுக்கல்வி - அல்ல; 'அரசு கல்வி' அதாவது நாட்டை ஆளும் அரசு முறைமை பற்றிய கல்வியாகும். அரசன் காடு கொன்று நாடாக்க வேண்டாம்; குளம் வெட்டி வளம் பெருக்க வேண்டாம் ஆனால் தன் கையில் ஒப்படைக்கப்பட்ட நாட்டை, நாட்டு மக்களை; உயிரினங்களை, நாட்டு வளத்தைப் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்பதனை,

**"ஆவையும் பாவையும் மற்றற வோரையும்**
**தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்**
**காவலன் காப்பவன்.........."** (243)

என்று அரசன் செயல்பாடுகளுக்கு விதிமுறை வகுக்கிறது. அரசன் காத்தல் தொழிலால் 'காவலன்' 'காப்பவன்' 'கடவுள்' நிலைக்கு உயர்த்திப் பேசப் படுகின்றான். காத்தல் தொழிலில் தவறும் மன்னனுக்கு இறைத் தண்டனையும் உண்டு. அவன் எளிதில் தப்பிக்க முடியாது என்பதனையும்,

**"........... காவா தொழிவானேல்**
**மேவும் மறுமைக்கு மீளா நரகமே"**

என்றும் எச்சரிக்கிறது.

அரசனுக்கு கல்வியை வலியுறுத்துவதன் நோக்கம் என்ன? கல்வி அறிவில்லாதவன் களர்நிலம் ஆவான், கற்றோருக்கு சிந்தனை பெருகும்; அனுபவ அறிவு கிட்டும். அருள் வழி நிற்றல் அறமுறை நடத்தல் ஆகிய பண்புகள் வளரும் என்பதனாலேயே திருமந்திரம் அரசனுக்கு கல்வியை வலியுறுத்துகின்றது.

**"கற்றறிவாளர் கருத்திலோர் கண்ணுண்டு"** (291)

என்பதனையும் தெளிவுப்படுத்துகின்றது. இத்தகு கல்வியறிவு பெறாதவன் கல்லா-அரசன் என்றழைக்கப்படுகின்றான். அவன் கூற்றுவனைக் காட்டிலும் கொடியன் என்று கருதப்படுகின்றான். கூற்றுவன் காலக்கணக்கை முறை யாகக் கொண்டு நடப்பவன். காலம் பார்த்தே உயிர்களை அழிப்பான். அது பற்றியே 'காலனும் காலம் பார்க்கும்' என்பர் ஆன்றோர். கல்லா அரசன் அறநூலினைக் கற்ற ஆன்றோருடன் ஆய்ந்து ஒழுகான். நினைத்ததை நினைத்தபடி நடத்த முயல்வான். அதனால் நல்லவர்கள் பாதிப்புக்கு உள்ளாவர் என்பதனாலேயே 'கல்வியறிவு' அரசனுக்கு முதல் தகுதியாகப் பேசப்படுகிறது.

## வீரம் பேணல்

மன்னனின் அடுத்த தகுதிப்பாடு வீரம் ஆகும். வீரம் என்பது விவேகமான வீரம்; தர்மத்தைப் பேணும் வீரம் என்பதாகும். திருமந்திரம் அறத்தையும் அறவோரையும் காக்கும்/பேணும் வீரத்தையே வீரமாக கருதுகிறது. காத்தல் தொழிலில் மன்னன் மேற்கொள்ள வேண்டிய அடிப்படை தர்மம் 'வந்த சண்டையை விடாதே; வம்புச் சண்டைக்குப் போகாதே' என்பதாகும். அரசன் தன் ஆட்சிக்கு உட்பட்ட நாட்டை பிறர்கொள்ள வந்தபோது காக்கவேண்டும். அப்படிக் காவாத அரசனும், தன் மாட்சிமை பொருந்திய படைகளின் ஆற்றல் செருக்கால் பகைவனுக்கு கேட்டினை அழிவை உண்டாக்குபவனும் பாய்ந்து கொல்லும் புலியைக் காட்டிலும் கொடியவன்' என்று குறிப்பிடுகின்றது. இதனைப்,

"பாய்ந்த புலியன்ன பாவகத் தானே"

என்ற வரிகளால் அறியமுடிகிறது.

பாவகம் என்றால் நினைப்பு - பாவகத்தான் - பாவமே எண்ணும் தீய உள்ளத்தான் கொடியன் என்று எல்லோரும் எண்ணி அஞ்சும் நினைப்பிற்கு உரியவன் என்று பொருள்படுகின்றது.

## தர்மம் பேணல்

தர்மநெறியைப் பின்பற்றுவது மன்னனுக்கு சுவாசம் போன்றது. அதுவே மன்னனுக்குத் தவநெறியாகும். நன்னெறி பின்பற்றல் என்பது நாட்டு மக்களுக்கு மட்டும் உரியதன்று அதுவே மன்னனுக்குத் தலையாயதாகும்.

"தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என் குற்றமாகும் இறைக்கு"

என்பது வாயுறை வாழ்த்தாகும். திருமந்திரம் அரசனின் காக்கும் தொழில் பற்றிய சிந்தனையை மட்டும் குறிப்பிடவில்லை. அதனை மேற்கொள்ளா விடில் நாடும் அரசனும் அடையும் கேட்டினையும் விளக்குகிறது.

''நாள்தோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாள்தோறும் நாடியவன்நெறி நாடானேல்
நாள்தோறும் நாடு கெடுமூடம் நண்ணுமால்
நாள்தோறும் செல்வம் நரபதி குன்றுமே'' (239)

என்பது திருமந்திரமாகும்.

**தனிமனித அறம் பேணல்**

தனிமனித அறம் பேணினால் குடும்பம் அறத்தை மேற்கொள்ளும்; குடும்பம் அறத்தைப் பேணும் போது சமூகம் அறத்தை மேற்கொள்ளும் பல சமூகங்கள் அறத்தை மேற்கொள்ளும்போது சமுதாயம் நலம் பெறும்.

சமுதாயம் நலம் பெறும்போது நாடு நலம் பெறும். நாடு நலம் பெறும்போது அரசன் நலம் பெறுவான். இது ஒரு சங்கிலிப் பிணைப் பாகும். எனவே அரசன் நாட்டு மக்களுக்கு ஒவ்வொருவரும் அறத்தைப் பேண வலியுறுத்த வேண்டும். அப்போதுதான் இம்மைக்குரிய செல்வமும் மறுமைக்குரிய முக்தியும் அனைவருக்கும் கிட்டும். திருமூலர் 'மறந்தும் அறநெறி ஆற்றல் வேண்டும்' என்கிறார். 'மறந்தும் புரிதல்' என்பது பழக்கத்தால் நம்மையறியாமல் செயல்படுதலாகும்.

'நற்றவா உன்னை நான் மறக்கினும்
சொல்லு நா நமச்சிவாயமே'

என்பதுபோல் மனிதனும் எள்ளளவிலாவது மறந்தும் அறம் புரிய வேண்டும் என்பதாகும். தனிமனித அறம் மன்னனுக்கு யாது பலன் கருதி என்று நோக்கினால் 'மக்கள் வருவாயில் ஆறில் ஒரு பங்கு மன்னனுக்குச் சேர்வதுபோல் தனிமனித பாவ புண்ணியமும் ஆறில் ஒரு பங்கு மன்னனைச் சேரும்' என்பதாகும்.

**துறவோர் பேணல்**

அறவோரைக் காத்தலும், அந்தணர் ஓம்பலும், துறவோர்ப் பேணலும் அரசனின் தலையாய கடமையாகும். இம்மூவரும் அவரவர் நெறியில் ஒழுகுதல் நாட்டிற்கு நலத்தைத் தரும். திருமந்திரம் துறவோரைப் பேணுதல் அரசனுக்குரிய மிகப்பெரிய கடமையாகக் குறிப்பிடுகின்றது. திருமூலர் சித்தர்; சிவனைச் சித்தத்தில் கொண்டவர். ஆதலின் சிவக்கோலத் தவசிகள் தம்தம் நெறியில் ஒழுக மன்னன் வழிவகை செய்ய வற்புறுத்து கின்றார். உண்மைத் தவக்கோலமும் உண்மைத் தவமும் மட்டுமே நாட்டையும், நாட்டு மக்களையும், நாட்டு மன்னனையும் காப்பாற்றும் என்கிறார். திருமூலர் 'உண்மைத்துறவு' என்று பிரித்து உரைப்பதன் நோக்கம் யான்; எனது என்னும் செருக்கை அறுக்கும் போது ஆணவம் அழியும்; ஆணவம் அழித்தோரே உண்மைத் துறவி ஆவார். உச்சிக்

குடுமியும் பூணூலும் காவியாடையும் மட்டும் உண்மைத் துறவாகாது என்கிறார். திருமூலர் போலித்துறவைப் பற்றிப் பேசக் காரணம் வேட தாரிகளால் உலகும் உயிர்களும் வாடி வதங்கும். பெருவாழ்வினை உடைய மன்னனும் பெருமை குன்றுவான்.

ஆதலால்,

**"ஞானிகள் போல் நடிக்கின்றவர் தம்மை**
**ஞானிக ளாலே நரபதி சோதித்து**
**ஞானம் உண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே"** (242)

என்று வலியுறுத்துகின்றார். போலித் துறவிகளைக் கண்டித்தல் அரசனுக்குத் தனிப்பெரும் உரிமையாகும். போலித் துறவிகளை நாட்டவர் மெய்த்தவசி என்று நம்பித் தானம் செய்கின்றனர். அவர் ஈந்த பொருள் தீய வழிகளில் செலவிடப்படுவதனால் தானம் செய்தவருக்குப் பாவத்தையே தருகிறது. ஆதலின் போலித் துறவிகளின்,

**"ஆடம்பர நூற்சிகை அறுத்தால் நன்றே"** (243)

என்று திருமூலர் தெளிவுறுத்துகின்றார். போலித் துறவிகளிடம் 'வேட நெறி செய்தல்', 'ஞானம் உண்டாக்குதல்' என்பது எளிமையான செயலல்ல. அதற்கு அரசன் 'அபராதம்', 'தண்டனை விதித்தல்' போன்ற உபாயங் களை மேற்கொள்ளலாம் என்று அறிவுரையும் கூறுகின்றார்.

**சமயம் பேணல்**

சமயம் என்பது மக்கள் மேற்கொண்டுள்ள உயிர்க்கொள்கையாகும். உலகியற்கொள்கை அனைவருக்கும் பொதுவான கொள்கையாகும். அதில் வேறுபாடில்லை. ஆனால் சமயக்கொள்கையை அவரவர் மேற்கொண்ட வரம்பின்படி ஒழுகுதல் வேண்டும். ஒருவரோடு ஒருவர் பிணங்கி வாழ்வது அறமாகாது. இணங்கி வாழ்வதே அறமாகும். அத்தகைய இணக்கத்தை உண்டுபண்ணுவது அரசனின் கடமையாகும். தம்தம் சமயத்தைப் பின்பற்றாது. கலகம் விளைவிப்பவனா இறைவன் மறுமையில் தண்டிப்பான். ஆனால் இம்மையில் தண்டித்து திருத்துபவன் அரசனே ஆவான்.

**"இம்மைக்கே மெய்த்தண்டம் செய்வது அவ்வேந்தன் கடனே"** (247)

என அறிவுறுத்துகின்றார்.

**கள்ளுண்ணலைத் தடுத்தல்**

தனிமனித வாழ்க்கையைச் சீர்படுத்த மன்னன் கள்ளுண்ணாமையை. வலியுறுத்துகின்றார். அகத்தவப் பயிற்சியினால் இறை ஒளியாம் திங்கள் மண்டிலத்தைத் தம்முள் காணாவிட்டாலும் கள்ளுண்டு பிதற்றலைத்

தவிர்க்க வேண்டும். கள்ளுண்ணல் நாட்டு நலனைச் சிதைக்கும். கள்ளுண்போர் தமக்கு மட்டுமின்றி நாட்டுக்கும் கேடு விளைப்பர். ஆதலின்,

**"மால்கொண்டு தேறலை உண்ணும் மருளறை**
**மேல்கொண்டு தண்டம்செய் வேந்தன் கடனே"** (248)

என்று வலியுறுத்துகின்றார்.

இவ்வாறு திருமூலர் மன்னனுக்கு 'அரசாட்சி முறை'யைத் தெளிவுறுத்துகின்றார். 'இராசதோடம்' என்னும் இப்பகுதி கழகப் பகுதியில் பொதுப்பாயிரத்தில் அமைந்துள்ளது. திருமூலர் காலத்துச் சமுதாயம் ஆன்மீகச் சமுதாயம் ஆகும். இறை நம்பிக்கையை உயிர் மூச்சாகக் கொண்ட சமுதாயம். இங்கு 'இறை' எனப்படுவோன் சிவபெருமானே ஆவான். சிவநெறிச் சிந்தையை வளர்க்க அரசன் பாடுபடுதல் வேண்டும். ஆன்மீக வளர்ச்சியே அரசுக்குத் தூணாகும் என்பதே புலனாகிறது.

# 9. திருமந்திரத்தில் இயற்கை

முனைவர் கோ. இந்திரா தேவி, திருநெல்வேலி.

இயற்கை என்பது பஞ்ச பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பவை ஆகும். இவற்றைச் சார்ந்தே மனிதனின் வாழ்வியல் அமைகிறது. இயற்கை வழிபாடே இறை வழிபாட்டின் தொடக்கம் எனலாம். இறைவனைப் புகழ்ந்து பாடுவதற்காகப் பின்னாளில் எழுந்த சாத்திர, தோத்திரப் பாடல்களும் இயற்கையைப் புகழ்ந்துப் பாடின. அவ்வகையில், திருமூலரின் திருமந்திரம் என்ற நூலில் கூறப்பட்டுள்ள இயற்கையினை இக்கட்டுரையில் காண்போம்.

**இயற்கையும் மனிதனும்**

இயற்கையோடு இயைந்து வாழ்பவன் மனிதன். பக்திப் பாடல் களும், தத்துவப் பாடல்களும் மனிதனை, "மண்ணால் செய்யப்பட்டவன்" என்கின்றன. நிலையாமை தத்துவத்தை உள்ளடக்கியே இவ்வாறு கூறப் படுகின்றன.

திருமூலரும் தம் திருமந்திரத்தில் மனிதனை, மத்தளி, மண்குடம், பசியமட்கலம், வேயின் எழும்கனல் என்று குறிப்பிட்டுள்ளார்.

மண்ணால் செய்யப்பட்ட உடலானாலும் இறைவன் அங்கும் வாழ்கிறான் என்கிறார் திருமூலர்,

"மத்தளி ஒன்றுள தாளம் இரண்டுஉள
அத்துளே வாழும் அரசனும் அங்குஉளன்"

இங்கு மனித உடலை மத்தளி என்றும், அங்கு வாழும் இறைவனை அரசன் என்றும் குறிப்பிட்டுள்ளார். தன்னுள் குடிகொண்டுள்ள இறைவனை மனிதன் உணர்ந்து போற்றவேண்டும்.

மூங்கில் உராயும்போது எழும் நெருப்புபோல நொடியில் தோன்றி மறையும் உடலை இறைவன் கோயிலாகக் கொண்டுள்ளான் என்கிறார் திருமூலர்,

"வேயின் எழும் கனல்போலேஇம் மெய் எனும்
கோயில் இருந்து குடிகொண்ட கோன்...."

நிலையற்ற பொருட்களிலும் இறைவன் நிலையாகக் குடிக்கொண்டுள்ள இயற்கை வடிவானவன் இறைவன்.

இறைவனைப் புகழ்ந்தேத்தும் பாடல்கள் இயற்கையுடன் இறைவனை இணைத்து வருணித்தும், இறைவனை இயற்கையாகப் பாவித்தும் பாடப் பட்டுள்ளன.

**வர்ணனை**

இறைவனின் திருவுருவையும், அவனது அழகையும், குணத்தையும் வருணிக்கும்போது இயற்கையுடன் ஒப்பிட்டுப் பாடுவர். திருமூலர் சிவபெருமானை வருணிக்கும்போது,

**''கோது குலவிய கொன்றை குழல் சடை''**

**''தேன் அலர் கொன்றைச் சிவன்''**

**''கொன்றை யினான் அடி''**

என்கிறார். இங்கு இறைவன் கொன்றை மலர் சூடியுள்ள அழகையும், இறைவனின் எளிமையையும் உடையவன் என்று புகழப்படுகிறான். இறைவனின் திருமேனியினை வருணிக்கும்போது,

**''தழல்தான் ஒக்கும் மேனியன்''**

**''பால்ஒத்த மேனி பணிந்து''**

**''தோயம தாய்எழும் சூரியனாமே''**

என்கிறார். இறைவன் தூய வெண்ணிறமும் மாசற்ற ஒளியும் நிறைந்த வனாகத் திகழ்கிறான்.

இறைவனின் திருமுகத்தையும், திருவடியையும் வருணிக்கும்போது,

**''தாமரை வாள்முகத்து அந்தமில் ஈசன்''**

**''எண்ணீர் குரவன் இணையடித் தாமரை''**

என்கிறார். தாமரை மலரைப்போல ஒளியும், மென்மையும் கொண்ட வனாக இறைவன் விளங்குகிறான்.

இறைவனின் குணத்தைப் பற்றிக் கூறும்போது,

**''வான்நின்று அழைக்கும் மழைபோல்''**

கருணை மிக்கவன் என்றும்,

**''வான்பற்றி என்ற மறைபொருள்''**

**''களிம்பு அணுகாத கதிர்ஒளி''**

என்றும் கூறியுள்ளார். ஆகாயத்தைப் போல புதிராகவும், குற்றமற்ற ஒளியாகவும் திகழ்பவன் இறைவன். எனவே, அவனைப் புரிந்து கொள்வதைவிட உணர்ந்துகொள்வது எளிது.

**இயற்கையுள் இறைவன்**

இறைவனையே இயற்கையாகப் பாவித்துக் கூறும்போது, இறைவனின் தன்மைகள் விளக்கப்படுகின்றன. இறைவன்,

**"தீயினும் வெய்யன் புனலினும் தண்ணியன்**
**சேயினும் நல்லன் தாயினும் நல்லன்"**

என்கிறார். குளிர்ச்சியான கருணை கொண்ட இறைவன் தன் மெய்யன்பர் களுக்குத் தாயைப் போன்றவன்; தீயவர்களுக்கு தீயைப் போன்று கொடுமைகளைத் தருபவன்.

மூவகை ஒளியாகவும் இறைவன் விளங்குகிறான்.

**"செழுஞ்சுடர் மூன்றொளி ஆகிய தேவன்"**

**"...........மூன்றுஒளி**
**கண்புறம் நின்ற......"**

உலக இருளைப் போக்குகின்ற சூரியன், நிலவு, அக்கினி ஆகிய மூன்றனுக்குள் இருக்கும் ஒளியாகத் திகழ்கிறான். மேலும் இறைவன்,

**"ஒண் சுடரானாகவும்"**

**"செவ்வானில் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்"**

போன்றும்,

**"மாணிக்கத்துள்ளே மரகதச் சோதியாகவும்"**

விளங்குகிறான். சுடரொளி போன்ற இறைவன் எவ்விதத் தூண்டுதலும் இன்றி இயற்கையாகவே ஒளிருகின்றான். இவ்வாறு இயற்கைப் பொருள்களின் இயல்பான தன்மையும், இறைவனும் ஒன்று என்று கூறப்பட்டுள்ளது.

**எங்கும் நிறைந்து நிற்பவன்**

இயற்கையாகவும், இயற்கையின் ஒளியாகவும் விளங்கும் இறைவன் இவ்வுலகெங்கும் நீக்கமற நிறைந்து நிற்கிறான். இதனை திருமூலர்,

**"சென்றுஉணர் வான்திசை பத்தும் திவாகரன்"**

**"ஆலிங்கனம் செய்து எழுந்த பரஞ்சுடர்"**

**"நின்றான் நிலமுழுது அண்டத்துள் நீளியன்"**

என்கிறார். இறைவன் எங்கும் பரந்து நிறைந்துள்ளான் என்பதை "அண்டத்துள் நீளியன்" என்று குறிப்பிடுவதன் மூலம் உணர்த்தியுள்ளார்.

சிவபெருமானே இவ்வுலகைப் படைத்தவன் என்கிறார் திருமூலர்.

"பண்டு இவ்வுலகம் படைக்கும் பொருளே"

என்றும்,

"ஒருவனுமே உலகு ஏழும் படைத்தான்"

என்றும், கூறியுள்ளார். ஆதியாகவும், அந்தமாகவும், தொடக்கமாகவும், முடிவாகவும் இறைவனே விளங்குகிறான்.

**யாவுமாகி நிற்பவன்**

எங்கும் நிறைந்து நிற்கும் இறைவனே யாவுமாகித் திகழ்கிறான் இதனைத் திருமூலர்.

"தானே இருநிலம் தாங்கி விண்ணாய் நிற்கும்
..................................................
தானே தடவரை தண்கடல் ஆமே"

என்றும்,

"உடலாய் உயிராய் உலகம்அது ஆகி
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வான்ஆய்
இடையாய் உலப்புஇலி எங்கும்தான் ஆகி
அடையார் பெருவழி அண்ணல் நின்றானே"

என்றும் கூறியுள்ளார். இவ்வாறு உயிருள்ள, உயிரற்ற என்ற வேறுபாடு கருதாமல் இறைவன் எங்கும் நிறைந்து, யாவுமாகி நிற்கும் தன்மை உடையவன். ஆதலால் எல்லாவற்றுக்கும் முதன்மையாக வைத்துப் போற்றப்படுகிறான்.

இயற்கையுள் கலந்து நிற்கும் இறைவனை உணர்ந்து நாம் போற்றி வழிபட வேண்டும். இதற்கு இயற்கை வளங்களை அழிக்காமல் பாதுகாப்பதே சிறந்த வழிபாடாகக் கருதப்படும்.

# 10. திருமந்திரத்தில் யோகம்

முனைவர் சு. இரவிச்சந்திரன், திருவையாறு.

திருமந்திரம் தனிச்சிறப்புடைய நூலாகும். இந்நூலைத் தமிழ்வேதம், தமிழாகமம், தமிழிலக்கியம், தமிழ்த்தோத்திரம், தமிழ்ச்சாத்திரம் எனச் சான்றோர் பலரும் கூறுகின்றார். இது உலகப் பொதுநூலாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்ட தமிழ் நூலாகும். விஞ்ஞானத்தையும், மெய்ஞ்ஞானத்தை யும் இணைத்துக்காட்டி வாழ்க்கைப்பயனை இந்நூல் அறிவுறுத்துகிறது எனலாம். அறிஞர்கள் இதனை ஒரு யோகநூல் என்றே அழைக்கின்றனர்.

நீதி நூல்போலவே இந்நூலும் யாக்கைநிலையாமை, முதலான நிலையாமை பற்றியும் கொல்லாமை முதலான நல்லொழுக்கங்கள் பற்றியும் அன்புடைமை. நடுவுநிலைமை முதலான பண்புடைமைகளைப் பற்றியும் வான்சிறப்பு முதலான பொருளாதார அடிப்படைகள் பற்றியும் கல்வி, கேள்வி, கள்ளுண்ணாமை முதலானவை பற்றியும் விளக்கி உரைத் துள்ளது எனலாம். வாய்மை, நாணிசெயல், அவாஅறுத்தல், பத்தியுடமை, ஊழ், தவம், முத்தியுடைமை முதலான துறவற நெறிக்குரிய செய்தி களையும் எடுத்துக்கூறுவது இந்நூலாகும். இதனைப்பற்றி,

"எல்லாப் பொருளும் இதன்பால் உள
இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை"

என்பது அறிஞர்கள் கூற்றாகும். மூன்றாந் தந்திரம் முழுவதும் யோகம் பற்றிப் பேசுகிறது. உடம்பானது திடம்பட்டு நீண்ட காலம் வாழ்வதற்கும், மனமானது ஒன்றுபட்டு ஒருமைப்பாட்டு அடைவதற்கும், அறிவியல் விளக்கம் ஏற்படுவதற்கும் யோகமுறையானது பெரியோர்களால் ஏற்படுத்தப் பட்டது எனலாம். யோகம் எனும் சொல்லுக்கு தொடர்புடையது எனப் பொருள்படுவதாகும்.

மனத்தினுடைய மாறுதலை அடக்குதல் அதாவது மாறுதலில்லாது செய்தல் என்பது யோகத்தின் பொருளாகும். மாணிக்கவாசகர் இறைவனை 'யோகமே' என்று அழைத்துள்ளார். இவர் யோகத்திற்கு 'ஒழிவற நிறைதல்' என்று பொருள் கூறியுள்ளார். இதன்படி எல்லா உயிர்களிலும், பொருள்களிலும் இறைவன் அந்தரங்கமாகவும், பகிரங்கமாகவும் கலந்து நிறைந்துள்ளான் என்பதும் இறைவனே யோகம் புரிபவன் என்று திருமந்திரத்தில் கூறப்படுகின்றன.

**யோகம்**

'மனிதப்பிறவியும் வேண்டுவதே' என்று ஞானிகள் உரைப்பர். மனித்தப்பிறவியைக் கொண்டே இனிப்பிறவியே ஏற்படாதபடி நீக்கிக் கொள்ளுதல் வேண்டும். நோய் முதலியவற்றாலும், ஊழ்வினையால் மரணம் ஏற்டாதவாறும், மரணத்தை ஒத்திப்போடுவதற்கு உரிய வழியினையும் அறிந்துகொள்ள வேண்டும். உடம்பை மாத்திரம் உறுதி யாக்கிக் கொண்டு அதன் அழிவினை ஒத்திப்போடுவதால் எப்பயனும் இல்லை. இவ்வுடம்பு முத்தியடையச் சாதகமான வழியை ஏற்று நடக்கும் படிச் செய்வதுடன் அதற்கான வழிவகையையும் தெரிந்திடுதல் வேண்டும், எனத் திருநாவுக்கரசர் கூறுகின்றார். இதனையே

**"வாய்த்தது நந்தமக்கு ஈது ஓர் பிறவி மதித்திடுமின்**
**கன்றிய காலனைக் காலாற் கடிந்தவன் அவற்கு**
**ஆட்பட்டிருத்தல் நம் கூழைமை**
**படைக்கலமாக அஞ்செழுத்து நாவிற்கொள்க**
**ஒன்றியிருந்து நினைமின்கள்**
**அத்தன் ஆடல் கண்டு இன்புறுக"**

என்று தம் பாடலில் யோகக் குறிப்புகளைக் கூறியுள்ளமையை அறியலாம்.

**அசைவு**

நாம் உள்ளத்தைக் குவிப்பதற்கு உடம்பை அசைவறச் செய்ய வேண்டியுள்ளது. அசைவு என்பது வாழ்க்கைக்கு எவ்வளவு அவசிய மாயினும் அசைவு இன்மையே நம் வாழ்க்கையை உயர்நிலைக்குக் கொண்டு செலுத்தக்கூடியதாகும் எனத் திருமூலர் கூறுகின்றார். உடலின் அசைவின்மையும் உள்ளத்தின் சலனமின்மையும் ஆகிய இவ்விரண்டும் கூடியே ஆன்மீக விளக்கத்திற்கும், அறிவின் உயர்விற்கும் வழிவகுக்கின்றன என்பது அறிஞர்களின் கருத்தாக அமைந்துள்ளது.

அலைந்து திரியும் பூனையானது அசைவின்மையின் காரணமாகத் தன் உணவுக்கான எலியைத் தவறாமல் பற்றுகின்றது. அச்சத்தினால் எலியோ அங்கும் இங்குமாக ஓடிப் பூனைக்கு உணவாகின்றது. வனத்தில் ஓடித்திரியும் வேடன் அசைவற்று ஓரிடத்தில் நின்றவாறு தன் மனதை ஒருமுகப்படுத்தித்தான் தன் இலக்கான பறவையை அடித்திடுகின்றான். அசைவின்மையிலேதான் மனிதனுக்கு ஆற்றல் விளைவு உள்ளதென்று தெளிதல் வேண்டும். முத்திநிலையை அடைவார்க்கும் இதுவே முதன்மை யானதாகும். உடல், உள்ளம், ஆன்மஅறிவு இவை மூன்றையும் அடைய உள்ளத்தை அசைவறச்செய்து ஒருமுகப்படுத்திட வேண்டியுள்ளதாக அறிஞர்கள் கூறுகின்றனர்.

இம்மூன்றும் முக்தியினைத்தராது என்பதைத் திருவாசகத்தில்

"பப்பற வீட்டிருந்துணரும் நின்னடியார்"

என்ற அடியின்மூலம் எடுத்துரைத்துள்ளமையை அறியமுடிகின்றது.

**அட்டாங்க யோகம்**

உடம்பை வலிமையாக்குவதற்கு அட்டாங்கயோகம் கிரியாநெறியில் பின்பற்றப்படுவனவாகும். உள்ளத்தை ஒருங்குவதற்கு அட்டாங்கயோகம் ஆதாரமானதாக அமைந்திருக்கின்றன. சுந்தரர் மேற்கொண்ட தோழமை நெறி யோகநெறியின் அடிப்படையில் அமைந்துள்ளது எனப் பெரியோர்கள் கூறுவர். ஏனையோரும் யோகநெறியின் மேல்நிலையை எய்துவதற்கு என்ன வழிமுறை எனத் தெரிந்து அதன்வழிப் பின்பற்றிட வேண்டும் எனத் திருமூலர் இத்தந்திரத்தில் எடுத்துக்காட்டியுள்ளார். இம்மூன்றாம் தந்திரமானது இருப்பதோரு அதிகாரங்களைக் கொண்ட தாகும். இவற்றில் முகம் இயலாக அட்டாங்கயோகம் அமைந்துள்ளது. சிவத்தோடு சாயுச்சியப்பேறு பெறுவதே யோகம் எனப்படுகின்றது. இப்பேற்றினை அடைய இயலாதபடிச் செய்யும் தடைகளை நீக்கு வதற்கான வழிமுறைகள் எட்டு எனக் கூறப்பட்டுள்ளன. இறைவன் பஞ்சபூதங்களாகவும், சூரியனாகவும், சந்திரனாகவும், ஆன்மாவாகவும் இருக்கின்றனர். தடைகளை நீக்கும் வழிமுறையான எட்டுப் பொருள் களையும் கடந்தவர்கள் மட்டுமே இறைநிலையை எய்தப்பெற்றவர்கள் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார்.

மனிதனிடத்தில் எட்டு தீயபண்புகள் உள்ளன என்றும் அவை சுதந்திரவீனம், அழுக்குடம்பு, அறியாமை, குறையறிவு, பாசபந்தம், கல்நெஞ்சம், வன்மையின்மை, துன்பம் என்றும் கூறப்படுகின்றன. இவையாவும் அறவே ஒழிந்து இவற்றிற்கு மாறான எட்டு குணங் களைப் பெற்றால் நம்மிடம் உள்ள எட்டு நற்பண்புகளும் இறைவன் பால் இயல்பாக உள்ள எட்டு குணங்களும் ஒன்றுபடும். அங்ஙனம் ஒன்றுபட்டால் அதுவே 'சிவசாயுச்சியம்' என்று திருமந்திரத்தில் வலியுறுத்தப் பட்டுள்ளது.

வைராக்கியம் என்பது அபரம், பரம் எனப் பிரித்துக் கூறப்படு கின்றது. இவற்றுள் பரவைராக்கியமே ஞானம் பெறுவதற்கு அடிப்படையாக உள்ளது என்றும் பாவமான குணங்களில் இருந்து விடுபட்டு தெளிவை அடையச்செய்வதோடு யோகத்துக்கான சகல முயற்சிகளைத் தாங்கும் வன்மையை இது அளித்திடுவதாக உள்ளது. உண்மையான வைராக்கியம் கொண்டால் யோகத்துக்கான வாயில் திறக்கபடும் எனக் கூறப்பட்டுள்ளது. எவற்றோடு தொடர்புகொள்ள வேண்டுமோ அவற்றுடன் அழுத்தமான தொடர்பு கொண்டு அலையில்லாத கடல்போலவும், சலனமில்லாமல்

எரிகின்ற தீபம் போலவும் சுவற்றில் வரையப்பெற்ற சித்திரம் போலவும் நடுதறிபோலவும் அசைவற்று இருத்தற்கு உரிய பயிற்சிகளே அட்டாங்கம் என்று திருமூலர் கூறப்பட்டுள்ளது.

அட்டாங்க யோகநெறியில் திளைக்க முயல்வோர் அதன் படிமுறைகளை நன்றாக அறிந்து கொண்டு இயம, நியமங்களை நிறைவேற்றல் வேண்டும் எனவும் ஆதன வகைகளைத் தெரிந்தும், மூச்சுக் காற்றை அடக்கல் மூலமாக மனதை அடக்கும் கலையை கற்றல் வேண்டும் என்றும் மனதை அடக்குவதே உண்மையான வெற்றி என்றும் திருமூலர் கூறுகின்றார். இவ்வகையான வெற்றியைப் பெற்ற பிறகு மனதை அசையாநிலையில் படிப்படியாக உயர்த்தி நிறுத்திடல் வேண்டும் என்றும் அப்போதுதான் உள்ளமானது முடிவில் ஆடாமல் ஓய்ந்து நின்றுவிட்ட பம்பரம் போல நிலைபெற்றுவிடும் என்றும் திருமூலர் கூறுகின்றார். அனைத்து காரியங்களிலும் மேன்மை பெறுவது என்பது அவரவரின் நல்வினைப்பயன் என்றும் அவரவர்க்கு விதிக்கப்பட்ட விதிவழியே முயற்சிக்கான பயனை இறைவன் தருவான் என்பதும் பெரியோர்துணை, நல்வினைத்துணை, சமுதாயத்துணை, திருவருள் துணை இவற்றுடன் இறைவன் அருளிச் செய்த முறைப்பிறழாமனும் அட்டாங்க யோகநெறியைப் பின்பற்றினால் தான் ஞானவாயிலைக் கடந்து சிவனருளைப் பெறமுடியும் என்று மந்திரம் சொன்ன திருமூலர் கருத்தை அறியமுடிகின்றது.

# 11. திருமந்திரத்தில் பொருண்மை மாற்றம்

முனைவர் முகிலை இராசபாண்டியன், சென்னை.

தமிழ் மொழியில் சொற்கள் காலந்தோறும் பல பொருண்மை மாற்றங்களைப் பெற்று வருகின்றன. அவ்வாறு பொருண்மை மாற்றம் பெற்று வரும் சொற்களில் திருமந்திரத்தில் பொருண்மை மாற்றம் பெற்ற சொற்களை இந்தக் கட்டுரை விளக்குகிறது. திருமூலர் காலத்திற்கு முன்பிருந்தே பயன்பாட்டில் இருக்கும் ஒரு சொல் திருமூலரின் காலத்தில் அந்தச் சொல்லுக்குரிய பொருளைக் குறிக்காமல் வேறு பொருளைக் குறிப்பதையும் அவர் காலத்தில் ஒரு குறிப்பிட்ட பொருளில் பயன் படுத்தப்பட்ட சொல் தற்போது வேறு பொருளில் பயன்படுத்தப்படுவதையும் இந்த ஆய்வில் காண்போம்.

திருமூலர் யோக நெறியில் வல்லமை பெற்றவர் என்பதால் யோகம் தொடர்பான குறியீட்டுப் பொருள்களில் ஒரு சொல்லை வேறுபொருள் குறிக்கும் சொல்லாக அவர் குறிப்பிட்டுள்ளதை இந்த ஆய்விற்கு எடுத்துக் கொள்ளவில்லை. அவ்வாறு வெளிப்படையில் ஒரு பொருளையும் குறிப்பாக வேறு பொருளையும் உணர்த்தும் சொற்கள் திருமந்திரத்தில் மொழிவழக்கில் பொருண்மை மாற்றம் பெற்ற சொற்களை மட்டுமே இந்த ஆய்வு வெளிப்படுத்துகிறது.

**கை கலப்பு**

'கைகலப்பு' என்னும் சொல் இருவருக்கு இடையே நிகழும் சண்டையைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. இந்தச் சண்டையில் ஆயுதப் பயன்பாடு இல்லை என்பதும் இருவரும் தங்கள் கைகளால் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டார்கள் என்பதும் தெளிவாகின்றது. ஆனால் திருமந்திரத்தில் கைகலப்பு என்னும் சொல்லைத் திருமூலர் 'இறைவனுடன் கலத்தல்' என்னும் பொருளில் பயன்படுத்தியுள்ளார்.

**உடல் வைத்த வாறும் உயிர் வைத்த வாறும்**
**மடை வைத்த ஒன்பது வாய்தலும் வைத்துத்**
**திடம் வைத்த தாமரைச் சென்னியுள் அங்கிக்**
**கடை வைத்த ஈசனைக் கை கலந்தேனே (464)**

கலத்தல் என்னும் சொல்லுக்கு ஒரு பொருள் இன்னொரு பொருளுடன் கலத்தல் என்பது பொருள். இறைவனின் அடியார் ஒருவன் இறைவனுடன்

கலத்தலை உணர்த்தும் பொருளாக இங்கே கொள்ள முடியும். திருமூலர், கலப்பு என்று மட்டும் குறிக்காமல் 'கைகலந்தேன்' என்று குறிப்பிட் டுள்ளதால் அது சண்டையைக் குறிக்கும் சொல்லாகக் கருத இடம் தருகிறது எனலாம். ஆனால் இறைவனிடம் கலத்தலைக் குறிக்கவே இந்தச் சொல்லைத் திருமூலர் பயன்படுத்தியுள்ளார் என்பதைப் பாடலைப் படிப்பவர்கள் எளிதில் புரிந்து கொள்ள முடியும். எனவே மக்களின் பயன்பாட்டில் இருக்கும் கைகலப்பு என்னும் சொல்லுக்கு இறைவனுடன் கலத்தல் என்னும் பொருளையும் திருமந்திரத்தின் வாயிலாகக் கொள்ள முடிகிறது.

**பாலம்**

இரண்டு காரைகளை இணைத்துப் போடப்படுவது 'பாலம்' எனப்படுகிறது. இது சிமிட்டியால் மரத்தால் இரும்பால் எனப் பல பொருள்களில் உருவாக்கப்படுகிறது. இந்தப் பாலம் என்னும் சொல் திருமந்திரத்தில் மேற்குறிப்பிட்ட பொருளில் பயன்படுத்தப்படாமல் 'பாலன்' என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**நாலும் கடந்தது நால்வரும் நால்ஐந்தும்**
**பாலங் கடந்தது பத்துப் பதினைந்து**
**கோலங் கடந்த குணத்தாண்டு மூவிரண்டு**
**ஆலங் கடந்தது ஒன்று ஆர் அறிவாரே** (729)

பிறந்த ஒரு குழந்தை முதலில் நான்கு ஆண்டுகளைக் கழிக்க வேண்டும். அவ்வாறு நான்கு ஆண்டுகள் கழியும்போது குழந்தைப் பருவம் முடிகிறது. அதன் பின்னர் நான்கு நான்காக இரண்டு நான்கு ஆண்டுகளைக் கழிக்க வேண்டும். அவ்வாறு எட்டு ஆண்டுகள் கழியும் போது சிறுவன்/சிறுமி என்னும் பருவம் கழிகிறது. அதற்கு அடுத்து ஐந்து ஆண்டுகள் கழிந்தால் 'பாலன்' என்னும் பருவம் கழிகிறது என்று திருமூலர் இந்தப் பாடலில் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பாலப் பருவத்தைக் குறிப்பதற்கு உரிய பாடல் என்ற சொல்லுக்குப் பதிலாகப் பாலம் என்று குறிப்பிட்டுள்ளார். எனவே இந்தப் பாடலில் பாலம் என்னும் சொல் இணைப்பு என்னும் பொருளைத் தராமல் பாலப் பருவம் என்னும் பொருளைத் தருவதால் பொருண்மை மாற்றம் பெற்றுள்ளது எனலாம்.

**கண்ணி**

'கண்ணி' என்னும் சொல்லுக்குப் பூமாலை, பூங்கொத்து, சூடும் பூமாலை, தலைமாலை, போர்ப்பூ, புட்படுக்கும் முடிப்புக் கயிறு, பூட்டாங்கயிறு, இசைப்பாட்டு, கரிசலாங்கண்ணி முதலான பொருள்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தப் பொருள்களில் கண்ணி என்னும் சொல்லைப் பயன்படுத்தாமல் திருமூலர் 'காட்சி' என்னும் பொருளில் பயன் படுத்தியுள்ளார்.

**உயருறுவார் உலகத்தொடும் கூடி**
**பயனுறுவார் பலர் தாம் அறியாமல்**
**செயலுறுவார் சிலர் சிந்தையிலாமல்**
**கயலுறு கண்ணியைக் காணகிலாரே** (744)

என்னும் பாடலில் 'கண்ணி' என்னும் சொல்லைக் காட்சி என்னும் பொருளில் திருமூலர் பயன்படுத்தியுள்ளார்.

இந்த உலகில் மனித உடலைப் பெற்றவர்கள் அந்த உடலின் துணைகொண்டு இறைவனின் திருவருட்காட்சியைப் பெற வேண்டும். ஆனால் அவ்வாறு இறைக் காட்சியைப் பெறாமல் அறியாமையில் மூழ்கியிருப்பவர்களைக் 'கயலுறு கண்ணியைக் காணகிலாரே' என்று குறிப்பிட்டுள்ளார். இந்தப் பாடலில் இடம்பெற்றுள்ள கண்ணி என்னும் சொல் கண்ணின் தன்மையாகிய காட்சியைக் குறிக்கும் பொருளில் பொருண்மை மாற்றம் பெற்று வந்துள்ளது.

இந்தப் பாடலில் 'கயல்' என்னும் சொல்லையும் திருமூலர் பயன்படுத்தியுள்ளார். கயல் என்னும் சொல்லுக்குக் கெண்டை மீன் என்பது பொருள். இந்தப் பாடலில் கயன் என்னும் சொல்லினைக் கெண்டை மீன் என்னும் பொருளில் பயன்படுத்தாமல் கண்ணைக் குறிப்பதற்குத் திருமூலர் பயன்படுத்தியுள்ளதையும் காணமுடிகிறது. கெண்டை மீனைப் பெண்ணின் கண்ணுக்கு உவமிப்பது மரபு என்றாலும் இங்கு அவ்வாறு உவமையாகப் பயன்படுத்தாமல் மீனைக் குறிக்கவும் பயன்படுத்தாமல் கண்ணைப் பொதுவாகக் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது. எனவே, கயல் என்னும் இச் சொல் பொருண்மை மாற்றம் பெறாமல் அதே பொருளில் உவமையாகு பெயராக வந்துள்ளது எனலாம்.

### சிட்டன்

'சிட்டன்' என்னும் சொல்லுக்கு 'மாணாக்கன்' என்பது பொருள். இது சமஸ்கிருத மூலமாகிய 'சிஷ்யன்' என்னும் சொல்லின் தமிழ் வடிவம் ஆகும். இந்தச் சொல்லை மாணாக்கன் என்னும் பொருளில் பயன்படுத்தாமல் சிவபெருமானைக் குறிப்பதற்குத் திருமூலர் பயன்படுத்தியுள்ளார்.

**வட்டங்கள் ஏழும் மலர்ந்திடும் உம்முளே**
**சிட்டன் இருப்பிடஞ் சேர அறிகிலீர்**
**ஒட்டி இருந்துள் உபாயம் உணர்ந்திடக்**
**கட்டி இருப்பிடம் காணலும் ஆகுமே** (752)

என்னும் பாடலில் 'சிட்டன் இருப்பிடம்' என்று சிவனது இருப்பிடம் குறிக்கப்பட்டுள்ளது. சிட்டன் என்னும் சொல்லை அதற்குரிய மாணாக்கன்

என்னும் பொருளில் பயன்படுத்தாமல் திருமூலர் சிவனைக் குறிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளமையால் இது பொருண்மை மாற்றம் பெற்றுள்ளது. சிவனுக்கு முருகன் பிரணவத்தை உபதேசிக்கும்போது சிவன் மாணாக்கனாக இருந்தான். எனவே, சிட்டன் என்னும் சொல்லை மாணாக்கன் என்னும் பொருளிலேயே சிவனுக்குப் பயன்படுத்தலாம் என்று கருதவும் இடம் உண்டு. ஆனால் இந்தப் பாடலில் அந்த 'சிஷ்ய உறவு' குறிப்பிடப் படாமல் மேலான கடவுள்நிலையே உணர்த்தப்பட்டுள்ளது தெளிவாக உள்ளது. எனவே இது பொருண்மை மாற்றத்தினைப் பெற்றுள்ளது எனலாம்.

**துதிக்கை**

'துதிக்கை' என்னும் சொல் தும்பிக்கையைக் குறிப்பாக யானையின் தும்பிக்கையைக் குறிக்கும் சொல் ஆகும். இச்சொல்லைத் திருமூலர் தும்பிக்கையைக் குறிப்பதற்குப் பயன்படுத்தாமல் சுழுமுனையைக் குறிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளார்.

சுழுமுனை என்பது ஒரு நாடியைக் குறிக்கும். இந்த நாடியானது இடகலை, பிங்கலை ஆகியவற்றிற்கு நடுவில் ஓடும் நாடியாகும். இது மூலாதாரத்திலிருந்து உச்சித் துளைவரை செல்லும் நாடி என்று யோக வல்லுநர் குறிப்பிடுவர்.

**இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றித்**
**துதிக்கையால் உண்பார்க்குச் சோரவும் வேண்டா**
**உறக்கத்தை நீக்கி உணரவல்லார்கட்கு**
**இறக்கவும் வேண்டா இருக்கலுமாமே** (785)

என்னும் பாடலில் துதிக்கை என்னும் சொல்லைச் சுழுமுனையைக் குறிக்கப் பயன்படுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது. துதிக்கை என்பது நடுவில் இருக்கும் ஒரு கை என்றாலும் அதனை நமது உடலின் நடுப்பாகத்தில் செல்லும் சுழுமுனை என்னும் நாடிக்குக் குறிப்பது பொருண்மை மாற்றத்திற்கு உட்பட்டே அமைந்துள்ளது எனலாம்.

இவ்வாறு கைகலப்பு, பாலம், கண்ணி, சிட்டன், துதிக்கை ஆகிய சொற்களைத் திருமூலர் அந்தச் சொற்களின் இயல்பான பொருள்களில் பயன்படுத்தாமல் அவற்றைப் பொருண்மை மாற்றத்திற்கு ஏற்ப வேறு பொருள்களில் பயன்படுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது.

# 12. திருமந்திரத்தில் திருக்கோயில் வழிபாடு

முனைவர் இ.மா. இராமச்சந்திரன், அம்பாசமுத்திரம்.

திருக்கோயில்களின் அமைப்பு வியக்கத்தக்கது. ஆலயத்தில் முதலில் நம் கண்ணுக்குத் தோன்றுவது கோபுரம். திருக்கோயிலில் உறையும் இறைவனை சிவலிங்கப் பெருமானைக் காண அடுத்து பல பிரகாரங்கள் பலவகை மண்டபங்களைக் கடந்து செல்ல வேண்டும் அப்போது தான் இறைவன் உறையும் இடத்தை அடைய முடியும். சிவபெருமானை ஆலயத்தில் தரிசனம் செய்துவிட்டு வந்தால் போதாது இறைவனைக் கண்களால் கண்டு உருகி அவனுடைய ஆனந்த கோலத்தை நமது உள்ளத்திலே படம் பிடித்து எப்போதும் கண்டு மகிழ வேண்டும்.

"என்னால் அறியாப் பதம் தந்தாய்
யானது அறியாதே கெட்டேன்"

என்பது மாணிக்கவாசகரின் உருக்கம். மனிதன் உண்பதுவும், உறங்குவதும் வாழ்க்கையின் தொகுப்பு அது மனித பிறப்பின் நோக்கமன்று. ஆன்மாவை உடல் ஆதிக்கம் செலுத்துமேயானால் அது அசுரத்தனமாகும். அதே நேரத்தில் உடலை ஆன்மா ஆதிக்கம் செலுத்தினால் மானிடம் மலரும், வெல்லும் அது தேவகுணம். வழிபாடு என்பது உயிர் சிவத்தோடு ஒன்றுதற்குச் செய்யும் முயற்சி. சிவத்தின் தன்மைகளை வழிபாடுகளால் ஈர்த்துத் தன்னுரிமையாக்கிக் கொண்டு ஆவியோடு ஆக்கை புரைபுரைகனியச் செய்யும் செயற்பாடே ஆகும்.

ஒன்று கண்டீர் உலகுக்கு ஒரு தெய்வமும்
ஒன்று கண்டீர் உலகுக்கு உயிராவது
நன்று கண்டீர் இனி நமச்சிவாயப் பழந்
தின்று கண்டேற்கு இது தித்தித்தவாறே - திருமூலர்

**திருக்கோயில் வழிபாட்டு நோக்கம்**

வழிபாடுகள் கடவுளுக்காகச் செய்யப்படுவதன்று கடவுளை முன்னிட்டுச் செய்யப்படுவது. ஓர் உயிர், தன் உயர்வுக்காக, உய்தி பெறுதற்காக தானே செய்யும் ஒருவகை அறிவுப் பயிற்சி. அது அருளார்ந்த உயிர்க்கு உதவும் உணர்வுப்பயிற்சி. கடவுள் உண்மையில் உறுதி உடையவர் பலர். அவ்வுண்மையை உணர்ந்தவர்கள் சிலர். அவ்வுண்மையை உணரும் வழியைத் தேடி செல்பவர்கள் மிகச்சிலர்.

அவர்களே பிறவியினாற் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாக்களை அக்கட்டினின்றும் நீங்கி வீடுபெற முயல்பவர்கள் "ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்" மணிவாசகர்.

மனிதன் விலங்குத் தன்மையிலிருந்து விலகி, மனிதத் தன்மையை அடைந்து இறை நிலையோடு ஒன்ற முயல்வதே மனிதப் பிறப்பின் நோக்கமாகும். இயல்பாக மனித வாழ்க்கை குறையுடையது. குறையினின்று நீங்கி நிறைவு பெறுதலே மனித வாழ்க்கையின் நோக்கம். ஒவ்வொரு மனிதனும் எத்தனையோ எதிர்ப்பார்ப்புக்கள் என்ற நோயுடன் விடிவு காலத்தை எதிர் நோக்கி பேதலித்து தடுமாறுகின்றான். அவன் வாழ்வாங்கு வாழ்வதாக எண்ணிக் கொண்டு வாழ்கின்றான். தன்னிடமுள்ள ஆறா புண்ணின் தீரா வேதனை மாறா திருப்பத்திற்குரிய காரணங்களை கண்டு கொள்ளவோ அதை, நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தீர்க்கும் வழி காணாது அங்குமிங்கும் திரிந்து அலை பாய்ந்து கொண்டிருக்கிறான்.

''புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோறு ஒன்பதும் வாயிற்குடிலை''

மணிவாசகர் கூற்றுப்படி இந்த உடம்பை ஞானிகளோ சில காலம் குடியிருக்க வந்த ஓட்டைக்குடில் என்று அருவருக்கின்றார்கள் நாமோ இதனையே பெருவாழ்வு வந்ததென்று பிதற்றுகின்றோம்.

**திருக்கோயில் வழிபாட்டின் அவசியம்**

மானிடம் வெல்ல வேண்டுமானால் தன்னுடைய பிறவி நோய் அறிந்து, அந்த பிறவி நோய்க்குரிய காரணங்களை ஆய்ந்து, அதை தீர்த்து வைக்கும் மருத்துவனாகிய கடவுளை ''ஒன்றியிருந்து நினைமின்காள் உந்தமக்கு ஊனமில்லை'' என்ற திருநாவுக்கரசர் கூற்றுப்படியும், ''ஒருமை யுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்'' என்ற வள்ளலார் கூற்றுப்படியும் ''அவனருளாலே அவன்தாள் வணங்கி'' என்ற மணிவாசக பெருமான் கூற்றுப்படியும் ஐந்தெழுத்து நாமத்தை சொல்லச் சொல்ல அது நமக்கு இன்ப உணர்வு நல்கும் திருமூலர் காட்டும் திருக்கோயில் வழிபாடு, வாழ்க்கையின் நிறைவான இன்ப வாழ்வை நல்கும். வழிபாடு ஒரு சடங்கு மட்டுமன்று, அவை புலன்களைத் தூய்மை செய்வது, பொறிகளை இன்ப மயமாக்குவது. திருக்கோயில் வழிபாடு திருத்தொண்டிற்கு ஒரு ஊற்று தொண்டு அதனால் விளையும் விளைவு, இத்தகைய பண்புகள் தொடர்ந்து வளர்வதற்கு நாள்தோறும் திருக்கோயில் வழிபாடு மிகவும் அவசியம். திருக்கோயில் வழிப்பாட்டை வணிக முறையில் செய்தல் மிகப்பெரும் தவறு. இன்று கடவுள் வழிபாடு வணிக முறையிலேயே நடைபெறுகின்றது.

**உயிர்களின் தன்மை**

எந்த ஒரு தத்துவத்தில் ஈடுபாடு கொண்டு, எந்த ஒரு மூர்த்தியை நாம் மிக்க ஈடுபாட்டுடன் வழிபட தோன்றுகின்றதோ? அந்த மூர்த்தியையே உயிர்க்கு நாயகனாகக் கொண்டு உள்ளம் நினைந்து, நினைந்து, உணர்ந்து, உணர்ந்து, நெகிழ்ந்து, நெகிழ்ந்து காதலாகி, கசிந்து கண்ணீர் மல்க வழி

படுதல் வேண்டும். அப்போது தான் வழிபாட்டின் பயனாகிய இன்ப அன்பு நிலையை எய்த முடியும். உயிர்கள் உய்வு பெற கடவுளை நாடுகின்றது. இங்கு உயிரும் உருவமற்றது. உயிர்கள் அடையத் துடிக்கின்ற கடவுளும் உருவமற்றதே! இங்கு கலத்தல் உருவங்கள் அல்ல. உணர்வுகளேயாகும். உயிர்கள், ஒவ்வொன்றும் தங்களுடைய உணர்வினால் அவாவி, அவாவி பேரறிவாகவும் பேராற்றலாகவும். எங்கும் நிறைந்து விளங்கும் எல்லையற்ற கடவுளை நினைத்தல் மூலம் அந்த அறிவையும் ஆற்றலையும் தன்பால் ஈர்த்துத் தன்னை உணர்தல் மூலம்; நிறைவுபடுத்திக் கொள்ளும் சாதனையேயே வழிபாடு இது உணர்வுபூர்வமான பழக்கத்தால், அறிவு பூர்வமாக செய்யும் பயிற்சியாகும்.

ஒரு அடியவர் இறைவனிடம் பேசுகின்றார். இறைவனே! நீ எங்கு இருக்கின்றாய் என் முன் வந்து நிற்கமாட்டாயா? என்கின்றார். இறைவன் அடியவரிடம் அப்பனே நான் இல்லாத இடம் ஒன்றும் இல்லையே? உன் முன்னால் புதிதாக வந்து நிற்க வேண்டுமா? என்றார்.

இறைவனே நீ எங்கும் பரந்து நிற்கிறாய் என்பது உண்மை, ஆனால் அடியேன் காணும்படி நிற்கவில்லையே அதனால் என்முன் காட்சி அளிக்கமாட்டாயா? என்று வேண்டுகின்றார். என்னைக் காண்பதால் உனக்கு என் பயன் உண்டாகப் போகிறது? என்றான் இறைவன்.

எனக்கு எல்லாப் பயனும் உன்னாலே தான் கிடைக்க வேண்டும் என்றார் அடியவர். அதை வேறு யாரிடமேனும் முயன்று பெற்றுக் கொள்ளலாமே? என்றான் இறைவன். உன்னையன்றி வேறு யாராலும் எனக்கு நன்மை செய்ய இயலாது. எனக்கு அப்பன் நீ, அம்மை நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ, ஒப்புடைய மாதரும் நீ, எல்லா உறவுகளுமே நீ தான் வேறு உற்றார் யாருளர் உயிர்கொண்டுபோம் பொழுது குத்தலநாதனாகிய உனையன்றி உறவுகளில்லை அடியவர். வேண்டதக்கது அறிவோனும் நீ, வேண்ட முழுதும் தருபவனும் நீயே. நீ என்னைக் கண்டால் என்ன செய்வாய்? இறைவன் உடனே உள்ளமுருகி ஓடிவந்து உன்னை இறுகத்தழுவிக் கொள்வேன் - அடியவர்.

உனக்கு நாணம் ஏற்படாதா? என்றார் இறைவன் அடியேன் நாணி நிற்கமாட்டேன். உன்னை கண்ணாற கண்டு உள்ளம் உருக தழுவிக்கொள்ளும் ஆசையின் வேகம் அத்தகையது. உன்னைத் தழுவும் பொழுது உன்னையன்றி வேறு ஏதேனும் பொருள்கள் அயலில் இருப்பதாக என் கண்களுக்குத் தோன்றினால் தானே? நாணம் உண்டாகும். தாயை ஓடிச்சென்று கட்டிக் கொள்ளும் குழந்தைக்கு நாணம் உண்டாகுமா? நீ தாயினும் மிக்க தயாபரி அல்லவா! அதனால் உன்னைத் தழுவிக் கொள்வேன் - அடியவர்.

நான் பிறர் தழுவ நிற்பவன் என்று எவ்வாறு அறிந்தாய் - இறைவன், நீ சாமானியனல்லன் - எல்லா உயிர்களையும் தென்றிசைக் கோமானாகிய

கூற்றுவன் அழிப்பான். அப்படிப்பட்ட கூற்றுவனைக் காலால் உதைத்த நித்தியன் - பிறப்பு இறப்பற்ற பெரியசாமி. நாற்றிசையுலகிற்கும் நல்ல தாயாகிய பராசக்தியின் நாதன். கணக்கற்ற தேவர்கள் உன்னைச் சிவசிவ என்று ஏத்துவதை அறிவேன். எல்லா ஆறுகளுக்கும் கடல் பொதுவான புகலிடமாயிருப்பதுபோல் எல்லாச் சமயத்தவருக்கும் பொதுவானவன் நீயே அனைவருக்கும் இறைவன். தனக்கிணையில்லாத தலைவன் நீயோ கோணல் இல்லாத மனத்தை உடைய அடியவர்களின் உள்ளத்தில் இணைந்து அமர்ந்து இன்பமூட்டி நல்வழி காட்டும் உரையாணியாகவும் நிற்பதை அறிவேன் என்றார் அடியவர்.

இதையே திருமூலர்

**காண நில்லாய் : அடியேற்கு உறவு ஆர்வலர்?**
**நாண நில்லேன் உன்னை நான் தழுவிக்கொளக்**
**கோணல் நில்லாத குணத்து அடியார் மனத்து**
**ஆணியன் ஆகி அமர்ந்து நின்றானே! என்பார்**

**திருக்கோயில் வழிபாட்டு நெறிமுறைகள்**

இறைவனை வழிபடுவது செந்தமிழனாலேயே தான் என்பதும் அதுவே மாதவம் செய்த தென்றிசைப் பிறந்தார் பெறும் பயன் என்பதும் சிவபெருமானின் திருஉள்ளக் குறிப்பாகும்.

ஒரு உயிர் தன் வினைப்பயனிலிருந்து உய்வு பெறுவதற்காகதானே செய்யும் பயிற்சிதான் வழிபாடு. பிறருக்காகச் செய்வது வழிபாடு ஆகாது. இன்று உலகில் மனிதர்களிடம் ஞானத்தில் நாட்டம் இல்லை, அன்பில் ஆர்வமில்லை, மனிதர்களிடம் தொண்டு நெறி தூய நெறியாக மலர வில்லை. வழிபாடு என்பதற்கு வழி நிற்றல் என்பதாகும். நன்றுடையான் தன் நற்றாளினை நன்னெறியில் நின்று வழிபடுதலே வழிபாடாகும்.

தூய்மையான உணவு, நல்ல உடல் நலத்தை கொடுப்பதுபோல் ஒன்றை நம்புகின்ற தூய்மையான சிந்தனையானது உயிர்களுக்கு எழுச்சியை தரும். இறைவழிபாடு கடவுளை புகழ்ந்து பாடுவதற்காக ஏற்பட்டதல்ல அவை மனிதனின் புகழை வளர்க்கத் தோன்றிய கருவியே இறைவழிபாடு ஆகும். அவை சிவத்தோடு ஒன்றுவதற்கு செய்யும் முயற்சியாகும். நாம் தீவிரமான அன்புடன் வழிபட்டால் நாம் எப்படி வழிபடுகின்றோமோ அவ்வடிவிலேயே இறைவன் நமக்கு அருள்வான் என்பதனை,

**எப்பரிசாயினும் ஏத்துமின், ஏத்தினால்**
**அப்பரி சீசன் அருள் புரிவானே**

என்பது திருமந்திரம்.

**பிறவா வழி பெறுதற்கு சாதனம்**

இறைவனுடைய அருள் பெற்று பிறவாநிலையினை அடையும் வழி அவனை அறிகின்ற கல்வியைக் கற்க வேண்டும். அக்கல்வியைக் கற்றால் இறைவனுடைய திருவுள்ளக் குறிப்பை உணரலாம். அவனுடைய பெருமைகளை உணர்ந்து அன்பு செய்யலாம். அருள் இன்பத்தில் திளைக்கலாம். ஆண்டவன் நம் உள்ளத்தே அனுபவ பொருளாக எழுந்தருளி நமக்கு மரணமில்லா பெரு வாழ்வை அளித்து அருள் பாலிப்பான்.

**குறிப்பு அறிந்தேன் உடல் உயிரது கூடிச்**
**செறிப்பு அறிந்தேன் மிகுதேவர் பிரானை**
**மறிப்பு அறியாது வந்து உள்ளம் புகுந்தான்**
**கறிப்பு அறியாமிகும் கல்வி கற்றேனே** - திருமூலர்

**வழிபடுவோரின் நிலை**

''உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால் முறுக வாங்கி கடைய முன்னிற்குமே'' என்ற அப்பர் வாக்கின்படி தேவர்களுக்கு இறைவன் அருளிய மெய் நெறியினை, அவனது நாமரூபத்தை உள்ளுணர்வுடன் நாம் சொல்லி வழிபட வேண்டும். அப்படி நான் வழிபட்டதால் கவரிமானின் இயல்பான கஸ்தூரி மணம் வீசுவது போல், இறைவனின் மணம் என் உள்ளே கலந்து துவங்குகின்றது. அதனால் எப்போதும் இருந்தும், நடந்தும், நிறைந்த சுடர் போன்ற அந்த இறைவனின் நாமத்தை நான் புகழ்ந்து எப்போதும் நினைந்து வழிபாடு செய்கின்றேன் என்கின்றார் திருமூலர்.

**ஆர்ந்த சுடர் அன்ன ஆயிர நாமமும்**
**போந்தும் இருந்தும் புகழுகின்றேனே** - திருமந்திரம்

திருமூலர் நாள்தோறும் இறைவனுடைய திருவடியில் நின்று இறைவனை ஏத்தி வழிபட்டதால், செந்தழல் மேனிச் சிவனும் அவருடைய வழி பாட்டை ஏற்று. ஊனில்லாமல் அவருடைய உள்ளுடலுள் நிறைந்து நின்றார். அப்படி நின்று என்ன செய்தான் என்பதை அவரே தன்னுடைய திருவாக்கால் கூறுகின்றார். ''இறைவனே என்னுடைய உயிராய் உயிர்கின்றார். வான்மதி மேலிருந்து உலகுடன் பற்றாமல் சாட்சியாயிருந்து ஒளி வீசுவது போன்று இறைவனே பற்றற்ற காட்சியாய்ப் பரமன் என்னுள் நிறைந்து உள்ளார்''

**வானில் நின்று ஆர்மதி போல் உடல் உள் உவந்து**
**ஊனில் நின்று ஆங்கே உயிர்கின்ற வாறே** - திருமந்திரம்

**வழிபாட்டின் பயன்கள்**

அவனுடைய அருளைப் பெற வேண்டுமானால் உலக மாந்தர்களே வாருங்கள். அவனை போற்றுங்கள் மனதார வாழ்த்துங்கள்.

**வாழ்த்த வல்லார் மனத்துள்ளூறு சோதியைத்**
**தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை**
**ஏத்தியும் எம்பெருமான் என்றிறைஞ்சியும்**
**ஆத்தஞ்செய் தீசன் அருள் பெறலாகும்**

வாழ்த்த வாயும், நினைக்க மடநெஞ்சம், தாழ்த்த சென்னியும் தந்த இறைவனை, ''வாயே வாழ்த்து, நெஞ்சே நினை, கைகாள் தொழுமின்'' காலே அவனுறையும் திருக்கோயில் சென்று வலம் வாருங்கள் என்ற அப்பர் வாக்குபடி இறைவனை வாழ்த்தி, ஏத்தி ''எம்பெருமானே'' என்றிறைஞ்சி நட்புறவோடு பேணினால் அவனருளை எளிதாக பெறலாம். அவனை தலை தாழ்ந்து வணங்கினால், அவனை அடையலாம் அவன் கழலே நாடு மின் அவன் நிறைந்து அடர்ந்த செம்போன் சோதியான். அருட்பெருஞ்சோதியாக விளங்குபவன். அவன் ''சிவனென்றும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்'' அவனை வெளிப்படையாக வாழ்த்துங்கள். ஒளிந்து மறைந்து அடஞ்செய்யாது வாழ்த்துங்கள். அவனை ஏத்தி வணங்கி வழிபடுவதற்கு வேறு சாதனங்கள் எதுவும் வேண்டாம்.

''காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின்'' நம்மை இயல்பாக அன்போடு பண்பட்ட நெஞ்சினால் போற்றி வழிபட வல்லாருடன் இறைவன் இணங்கிக் கலந்து இருப்பார். நம்மை எவ்வளவு துன்பம் சூழ்ந்தாலும் அத்தனை துன்பங்களையும் பொருட்படுத்தாமல் இறைவனை சித்த சுத்தியுடன் போற்றி துதித்து வழிபடுவோருக்கு தன் சக்தியோடு இணைந்து வந்து அருள் புரிவான்.

சிவ வழிபாட்டில் நம்முடையதென நம்மால் ஒப்புவிக்கத் தக்கது செந்தமிழ்த் திருமுறைத் திருப்பாட்டு ஒன்றேயாகும். அத்தகைய சிவ புண்ணியம் செய்தவர்கள் பூவும், புனலும், எளிமையும் இனிமையும் சிறப்பும் அடைவார்கள்.

தன்னுடைய பிழைகளை உள்ளம் நெகிழ்ந்து நினைத்து வருந்தி எவன் ஒருவன் இறைவனிடம் முறையிட்டு கூவி அருள் வேண்டி அழுகின்றானோ! எவனொருவன் பிரமனடியையே நாடி, அவனையே நெஞ்சில் பாவனை செய்து, பணிகின்றானோ! எவனொருவன் தன்னுடைய மார்பை இறைவன் உறைவதற்கு இடமாகச் செய்யும்படி வணங்கி வேண்டி வழிபடுகின்றானோ! எவன் ஒருவன் இறைவன் திருவடி நிழலில் எப்போதும் ஒதுங்கி இருக்கின்றானோ! அப்படி வழிபடுகின்றவர்கள் உள்ளத்தில் இறைவன் தன் திருவடியை இருத்தி, உள்ளம் நிறைந்து ஒளிவிளக்காக விளங்குவான்.

**முத்தி நெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனைப்**
**பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்**

**சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
**அத்தனெனக் கருளியவா் ஆர் பெறுவார் அச்சோவே**

**மணிவாசகர் அச்சோபதிகம்**

**மானிட வாழ்க்கையின் மாண்பு**

இந்த மானிட வாழ்க்கையில் விதி வழியே துய்க்கும் இன்பம் அதற்கு இயல்பானதாகும். இவ்விதி வழிநீங்கி என்றும் நித்திய, இன்பந்திளைக்க வேண்டுமானால் இறைவன் துதி வழி நிற்க வேண்டும். அப்படி நின்றால் நாம் விதி வழி நீக்கி பதி வழி துலங்கும். பகவான் அருள் வழிகாட்டும் சுடர்போல் நம்முன் ஒளிர்வான். அதற்கு நாம் அந்தி வண்ணா, அரனே, சிவனே என்று சிந்தை செய்தவண்ணம் தொழுதல் வேண்டும். இன்னும் அனைத்திற்கும் முன் இருந்த ஆதியழகா, முதல்வா, பரனே, என தொழ வேண்டும். அப்படி தொழுது வழிபட்டால் இறைவனாகிய அறிவழகன் என் மனம் புகுந்து நிற்பான். அப்போது நான் அவனுடைய திருவடியையே மனையாகக் கொண்டு அதனுள் இருக்கலாம். அத்தகையோர் மாதவர் போன்று வீட்டின்பம் எய்துவர். நினைவை அவனுக்கே உறையுளாக செய்திருப்பவர்கள் அவனடைய பிரியா நேசத்துள்ளிருந்து சிவ சாயுஜ்ய மெய்துவார்கள் என்பதை உணர முடியும்.

சிவநாமத்தை எவனொருவன் தன் உள்ளத்தே கொண்டு மற்ற ஆசைகளை விலக்கி, அதையே சிந்தை செய்து எப்போதும் நினைத்து வழிபடுகின்றானோ? அப்படி வழிபடுவோருக்கே பேரின்ப மெய்தும். அவனை பணிந்து வழிபடுவோருக்கு அவன் தந்தை போல் அருள் புரிவான்.

இறைவனுடைய தந்தை சூரியன் கூடத் தோன்றி மறைகின்றான். நம்முடைய அறிவை துலக்கி ஒளி வெள்ளம் பாய்ச்சுகின்ற என்னப்பனாகிய இறைவனோ! விடியா விளக்கு அவ்விளக்கிற்கு உதயமும் இல்லை, அத்தமனமும் இல்லை. அது தான் தூண்டா மணி விளக்காய் துளங்கிடும் அருட்பெருஞ்சோதி, அந்த சோதியினையே நாம் வழிபட்டு மேவி நிற்க வேண்டும். அங்ஙனம் மேவி நின்றால் பதி, பசு, பாச உண்மைகளைக் கண்டு அவற்றை நீக்கும் உபாயம் பெற முடியும்.

பசுவாகிய உயிர்கள் செய்கின்ற பாவம் வற்றா கடல் போன்றது. அத்தகைய கடலிலிருந்து பாசவினை கடந்து கரை ஏறுவதற்குரிய வழி ஒன்றே ஒன்று தான் உண்டு. உயிர், உறை, அன்பு இவைகள் ஒன்றி நின்று பசு-பாசம் இவைகளுக்கு எல்லாம் நாதனாக விளங்கிடும். இறைவனை நினைத்து வழிப்டுவதேயாகும்.

ஆதலால் அவனை சூடி, நெஞ்சில் வைத்து, பாடி மலர் தூவி, பணிந்து வணங்கி நின்று, ஆனந்தக் கூத்தாடி, எம்பிரானே, அமரர்க்கிறையே! என்று அவனையே ஆர்வமுடன் வணங்கி வழிபடுவதே இன்றைக்கு உயிர்கள் அறிந்து வழிபட வேண்டுவது ஆகும்.

**சூடுவன்! நெஞ்சிடை வைப்பன் பிரான் என்று**
**பாடுவன்! பன்மலர் தூவிப் பணிந்து நின்று**
**ஆடுவன்! ஆடி, அமரர்பிரான் என்று**
**நாடுவன்! நானின்றறிவது தானே!**

அன்பு முற்றி புந்தியில் அவனையே நினைத்து "தலைவா! உன்னைத் தழுவிக் கொள்ள நான் நாணேன். உன்னினும் அறிய உறவு எனக்கில்லை, என் கண்காண நின்றருள் வேண்டுவனே? என இறைஞ்சி வழிபடும் நேர்மையான நல்லடியார்களுக்கு அவன் அவர்களின் வாழ்விற்கே ஆதாரமாய் அமர்ந்திருப்பான். இது மானிட வாழ்வின் நிறைவைக் கொடுக்கும்.

ஆனால் கேவலம் உலக சுகபோகாதி வரங்களுக்காக வேண்டி அவனை வழிபடாதீர்கள். கன்றைத் தாய் அழைப்பது போல ஞானம் கருதியே அழையுங்கள். அவனிடம் வழிபட்டு வேண்டத்தக்கது. "பொருட் செல்வமன்று அருட் செல்வமே, ஊனச் செல்வமன்று, ஞானம் செல்வமே, புவிச் செல்வமன்று, தவச் செல்வமே, என்பதை நினைந்து வழிபடுங்கள். நாம் வேண்டத்தக்கது அறிவோன் அவன் வேண்ட முழுதும் தருபவன். அத்தகைய அண்ணலின் பெருமைகளை அறியவல்லார் ஆவீர்கள்.

**ஆர் அறிவார் எங்கள் அண்ணலின் பெருமையை**
**ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்**
**பேர் அறியாத பெருஞ்சுடர் ஒன்று அதின்**
**வேர் அறியாமை விளம்புகின்றேனே!**

இதுவரை திருமூலர் காட்டும் ஒரு சில திருக்கோயில் வழிபாட்டு முறை களை "அவனருளாலே அவன் தாள் வ்ணங்கி", பூசனை உகந்தென் உளந்தனிற் புகுந்து பூங்கழல் காட்டிய பொருளே" என்கின்ற மணிவாசகர் கருத்தோடு ஒன்றி இறைவனை வழிபாடு செய்து "எல்லில் கங்குல் பொழுதறு காலத்து என்றும் பூசனை விடாது செய்து" என்ற பரஞ்சோதியின் வாக்கின்படி, திருமூலர் வழி சிவானந்த இறைவழிபாடு செய்து இன்பத்தை நாமும் பெறுவோமோக.

**நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்**
**வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்**
**ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்**
**தான்பற்றப் பற்றத் தலைப் படுந்தானே - திருமூலர்**
**மின்னுகின்ற பேரொளியாக, காலங்**
**கொன்ற விருந்தாக கடவுளுக்கோர் வெற்றியாக**
**திருமந்திரம் வாழ்ந்து கொண்டிருக்கும் என்பதில்**
**எள்ளளவிலும் ஐயமில்லை**

எனலாம்.

# 13. ஒன்பதாம் திருமுறை உயர்தனிச் சிறப்புகள்

திரு. முருகு. இராமலிங்கம், சென்னை.

பன்னிரு திருமுறை. நூல்களுள் ஒன்பதாம் திருமுறைக்குப் பல சிறப்புகள் உண்டு. அவற்றுள் சிலவற்றை எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

1. முதல் எட்டுத்திருமுறைகள் தனித்தனியாசிரியர்கள் பாடியவை; ஒன்பதாம் திருமுறையோ ஒன்பது கவிஞர்களின் பாடல்களைக் கொண்ட ஒரு தொகுப்புநூலாகும். கவிஞர் பலரின் பாடல்களைத் தொகுத்து ஒரு நூலாக வழங்கும் முறை தமிழ் இலக்கிய உலகில் புதுமையானது அன்று. நமது பழந்தமிழ் இலக்கியங்களின் வரிசையில் அமைந்த எட்டுத்தொகை நூல்கள் யாவும் பலரது பாடல்களைக் கொண்ட தொகுப்பு நூல்களே. ஆயின் திருமுறை நூல்களுள் - பக்தி நூல்களுள் ஒன்பது மற்றும் பதினோராம் திருமுறைகள் மட்டுமே பலரது பாடல்களால் உருவான தொகுப்புகளாகும். இது ஒன்பதாம் திருமுறையின் சிறப்புகளுள் ஒன்று. அதிலும் ஒன்பதின்மர் பாடிய பாடல்களைச் சேர்த்திருப்பது புதுமையாகத் தோன்றுகிறது.

2. ஒன்பதாம் திருமுறையைத் 'திருவிசைப்பா' என்றும், 'திருவிசைப்பா மாலை' என்றும் பெயரிட்டு வழங்குகின்றனர். இப்பெயருக்கேற்ப, இத்திருமுறையில் உள்ள பாடல்கள் இசையமைதியுடன் படைக்கப் பட்டுள்ளன. மூவர் தேவாரத்தில் அமைந்துள்ள பண்களின் எண்ணிக்கை இருபத்திரண்டு (22) என்று கூறுவர். அவற்றில் இடம்பெறாத புதிய பண்ணாக, 'சாளரபாணி' என்னும் பண் ஒன்பதாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது. இசைத்தமிழ் இடையறவின்றித் தொடர்ந்து வளர்ந்து வந்த நிலை ஒன்பதாம் திருமுறை வாயிலாக உறுதிப் படுகின்றது. இந்தத்திருமுறையின் 19-ஆம் பதிகமாக அமையும், 'முத்துவயிரமணி மாணிக்கமாலை' என்று தொடங்கும் தில்லைப் பதிகப் பாடல்கள் 'சாளரபாணி' பண்ணில் அமைந்துள்ளமை காணலாம். இப்பதிகத்தை அருளியவர் பூந்துருத்தி நம்பி காடநம்பி ஆவார்.

3. இத்திருமுறையில் நாட்டையாளும் காவலரும் பாவலராய் விளங்கிப் பதிகம் பாடியுள்ளனர். இது முதல் எட்டுத்திருமுறைகளில் காண வியலாத ஒன்றாகும். கண்டராதித்தர் என்னும் சோழமன்னர் தில்லைப்

பெருமான் மீது ஒரு பதிகம் பாடியுள்ளார். அடுத்து இத் திருமுறையில் வேணாட்டடிகள் என்னும் குறுநில மன்னர் தில்லைப்பதி இறைவன்மீது பாடிய பதிகம் ஒன்று இடம்பெற்றுள்ளது. இதே திருமுறையில் விறகு வெட்டியாக வாழ்க்கை நடத்தி இறைவனின் பெருங்கருணைத் திறத்திற்குரியவரான சேந்தனார் என்பவர் நான்கு பதிகங்கள் பாடியருளியுள்ளார். அரசரும் ஆண்டியும் சரிசமமாகப் போற்றப்பட்டு அவர்தம் பாடல்கள் இணைக்கப்பட்டுள்ள திறம் பாராட்டிற்குரியதாகும்.

4. வைணவ மரபில் திருமாலுக்குப் பல்லாண்டு கூறிப்போற்றும் பாசுரங்கள் உண்டு. சைவத்திருமுறைகளில் பல்லாண்டு கூறும் பதிகம் இவ்வொன்பதாம் திருமுறையில் மட்டுமே உள்ளது. பிற திருமுறைக்குக் கிட்டாத பெரிய சிறப்பென்று இதனைக் கருதலாம். சிவபெருமானுக்குப் பல்லாண்டிசைத்த பெருமையைப் பெற்றவர் சேந்தனார் என்னும் அருளாளர்.

3. மூவர் பெருமக்களின் பாடலைப் பெற்ற தலங்களைத் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் என்பர். இத்தகு தலங்க்ள் 276 உள்ளன. இவற்றுடன் திருவிசைப்பாத் தலங்களும் தனியே உள்ளன என்பது பலருக்குத் தெரிந்திராத செய்தியாகும். திருவிசைப்பாவில் 29 பதிகங்கள் உள்ளன. இப்பதிகங்கள் 14 தலங்களைப் பற்றியனவாக உள்ளன. இப்பதினான்கனுள் தேவாரப்பாடல் பெற்ற தலங்கள் ஆறு. அவை, 1. தில்லை. 2. திருவீழிமிழலை 3. திருவாவடுதுறை 4. திருப்பூவணம் 5. திருஇடைமருது 6. திருஆரூர் மீதமுள்ள 8 (எட்டு) தலங்கள் தேவாரப் பாடலைப் பெறாத தலங்கள். திருவிசைப்பாவை மட்டும் பெற்ற தலங்கள் ஆகும். அவை 1. திருவிடைக்கழி 2. களந்தை ஆதித்தேச்சுரம் 3. கீழ்க்கோட்டூர் மணியம்பலம் 4. திருமுகத்தலை 5. திரைலோக்கிய சுந்தரம் 6. கங்கை கொண்ட சோழபுரம் 7. திருச்சாட்டியக்குடி 8. தஞ்சை இராசராசேச்சுரம் இந்த எட்டுத் தலங்க்ள் பாடல்பெற்ற தலங்களின் எண்ணிக்கையோடு சேர்க்கப்படுவதன் மூலம் தமிழ்நாட்டுப் பக்தி இயக்கமானது கோயிலை மையமிட்டு - வழிபாட்டை மையமிட்டு - பக்தியுணர்வை மையமிட்டு வளர்ச்சி பெற்றது என்னும் கருத்து மேலும் வலுப்பெறுகின்றது. இவ்வகையிலும் ஒன்பதாம் திருமுறை உதவியுள்ளது. சைவத்தின் மறுமலர்ச்சியைத் தமது ஆட்சி அதிகாரத் திற்குப் பயன்படுத்திக்கொள்ள நினைத்த பிற்காலச் சோழப் பேரரசர்கள் பல கோயில்களைப் புதுப்பித்தனர்; விரிவுபடுத்தினர். அத்துடன் நில்லாது புதிய கோயில்களையும் கட்டினர். அப்படிக் கட்டப்பட்ட கோயில்கள்தாம் களந்தை ஆதித்தேச்சுரம். கங்கை

கொண்ட சோழபுரம், தஞ்சை இராசராசேச்சுரம் முதலியவை. இக் கோயில்களின் உருவாக்கத்திற்கு அரசியல் நிர்ப்பந்தம் மட்டுமல்லாது சோழர்களின் இறையுணர்வும் பக்தியுணர்வும் மிகப்பெரிய பின்னணியாக உள்ளன. இத்தகு சமூகவியல் சார்ந்த செய்திகளை அறிந்துகொள்ள ஒன்பதாம் திருமுறை உதவுகின்றது.

6. சிவபெருமானை முழுமுதற்கடவுளாக கருதிப் போற்றிப் பாடப்பட்ட பதிகங்கள் தாம் எட்டுத்திருமுறைகளிலும் காணப்பெறுகின்றன. இத்திருமுறைகளில் ஓரிரு இடங்களில் விநாயகரையும், முருக வேளையும் குறித்த சில பாடல்கள் இடம் பெற்றிருந்தாலும் சிவபரத்தை முதன்மையாகக் கொண்டே இவையும் பாடப்பட்டுள்ளன. இம் மரபிலிருந்து சற்று விலகி முருகப்பெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு பாடப்பட்ட பதிகமொன்று ஒன்பதாம் திருமுறையில் உள்ளது. அது திருவிடைக்கழித் தலப்பதிகம் ஆகும். இதனை, சேந்தனார் பாடியுள்ளார். முதன் முதலில் முருகப்பெருமான் மீது பதிகம் பாடி வழிபாடு செய்த பாங்கினை வெளிப்படுத்துவதால் ஒன்பதாம் திருமுறை தனிச்சிறப்புடையது. இனி இப்பதிகத்தில் முருகனின் பல திருநாமங்கள் சுட்டப்படுகின்றன. அவற்றுள் சுப்பிரமணியன் என்பதும் ஒன்று. தமிழ் இலக்கியங்களுள் இப்பெயரை முதன் முதலில் கையாண்ட நூல் ஒன்பதாம் திருமுறையே. மேலும் வடமொழியின் செல்வாக்கு, தமிழ்ப்பரப்பில் மெல்ல மெல்லப் பரவி ஊடுருவத் தொடங்கியதன் அடையாளமாக இப்பெயரைக் கருத இடமுண்டு.

7. ஒன்பதாம் திருமுறையின் மற்றுமொரு இன்றியமையாச்சிறப்பு, அதன்கண் அடியார் வரலாறு சுட்டப்படுதலாகும். நாயன்மார்கள் தாம் வாழ்ந்த காலத்திலும் அதற்கு முற்காலத்திலும் வாழ்ந்த அடியார் களின் அரும்பணிகளையும், அற்புத ஆற்றல்களையும் கண்டும் கேள்விப்பட்டும் அவர்களின் சிறப்புகளைத் தமது பாடல்களில் ஏற்ற இடங்களில் எடுத்து மொழிந்துள்ளனர். சான்றாக, சண்டேசர் வரலாற்றைச் சம்பந்தரும், அப்பரும் தம் பதிகங்களில் சுட்டுதலைக் கூறலாம். இதுபோல், பல அடியார்களின் வரலாறு தேவாரப் பாடல் களில் உள்ளது. அவ்வாறே ஒன்பதாம் திருமுறையில் கணம்புல்லர், கண்ணப்பர், ஆரூர் நாவுக்கரசர், சம்பந்தர், சுந்தரர், சேரமான் பெருமாள் முதலியோர்களின் வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் காரணத்தை அறிந்துகொள்ள வேண்டியது ஒவ்வொரு சைவரின் கடமையாகும். முன்னோர்கள் வழங்கிச் சென்றுள்ள, ஓர் உயர்ந்த கொள்கையை, அல்லது விழுமியமுடைய கருத்தைக் காலந்தோறும் வரக்கூடிய மக்கள் அறிந்துகொள்ளவும், தேவைப்படுமிடங்களில் அவற்றைப் பின்பற்றி வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொள்ளவும்

ஏற்றவாறு எடுத்துரைக்க வேண்டும். கடந்த கால வரலாற்றைத் திரும்பத்திரும்பச் சொல்வதன் வாயிலாக மக்கள் வரலாற்றுணர்வு பெற்றுச் சிறப்புற முடியும். இவ்வாறு கூறுவதால் பழைய வரலாறு புகட்டப்படுவதுடன் முன்னோர் காட்டிச் சென்ற மரபுகள் இடையீடின்றிப் பின்பற்றப்படுவதற்கு வழி ஏற்படும். இவ்வுண்மையை உணர்ந்ததால் பூந்துருத்தி நம்பி காடவநம்பி தமது பதிகத்தில் மேலே சுட்டிய அருளாளர்களின் திறத்தைப் புகழ்ந்துள்ளார். இவ்வாறு அடியார் பலரின் அரும்பணிகளை ஓரிடத்தில் ஒருங்கே தொகுத்துக் கூறுகின்ற நூல் ஒன்பதாம் திருமுறை ஒன்றே.

இவையாவும் ஒன்பதாம் திருமுறையின் உயர்தனிச் சிறப்புகளுள் இன்றியமையாதவையாகும். மேலும் பல சிறப்புகளின் இருப்பிடமாய் அமையும் ஒன்பதாம் திருமுறையை ஆழ்ந்தும் நுணுகியும் கற்க வேண்டியது நம் அனைவரின் கடமையாகும்.

# 14. திருமூலநாயனார் புராணத்தின் உட்கிடை

முனைவர் அரங்க. இராமலிங்கம், சென்னை.

தெய்வச் சேக்கிழார் தாம் எழுதிய திருத்தொண்டர் புராணத்தில் திருமூல நாயனார் வரலாற்றை 28 பாடல்களில் பாடியருளியுள்ளார். இன்றளவும் திருமூலரின் வரலாறு பல வினாக்களை எழுப்புவதாக அமைந்துள்ளது. அவ்வருளாளரின் வரலாற்றில் பொதிந்துள்ள உண்மைப் பொருளைக் காண்பதுவே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வரலாறு**

சிவபெருமான் வீற்றிருக்கும் கயிலை மலையின் காவலராக விளங்கும் நந்தியம்பெருமானின் திருவருள் உபதேசத்தைப் பெற்ற சிவயோகி ஒருவர் இருந்தார். இவர் அணிமா முதலான எட்டுவகை சித்திகளுள் கைவரப் பெற்றவர். தமிழ்வல்ல அகத்திய முனிவரிடம் நட்புமிக உடையவராயிருந்ததனால் சிலநாள் தங்கி இருப்பதற்காகப் பொதிகைமலை சேர்தற்பொருட்டுத் தமிழ்நாட்டிற்கு வருகிறார். கயிலை மலையில் இருந்து புறப்பட்ட இவர் 1. கேதாரம், 2. பசுபதி, நேபாளம், 3. காசி (வாரணாசி), 4. திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்), 5. திருக்காளத்தி, 6. திருவாலங்காடு, 7. காஞ்சிபுரம், 8. திருவதிகை வீரட்டானம் (கடலூர் மாவட்டம் பண்ருட்டிக்கருகில் உள்ளது), 9. பெரும்பற்றப் புலியூர் என்றும் தில்லை என்றும் வழங்கப்படும் சிதம்பரம். 10, திருவாவடுதுறை ஆகிய தலங்களில் தங்கி வழிபாடு செய்தார்.

திருவாவடுதுறைக்கு அருகிலுள்ள அந்தணர்கள் மிகுதியாக உள்ள சாத்தனூரில் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த மூலன் எனும் இடையன் வினைப்பயனால் இறந்துபட அவனுடலைச் சுற்றிப் பசுக்கள் கதறிக் கொண்டு நிற்கின்றன. இதனைக் கண்டு இரக்கப்பட்ட சிவயோகி மூலன் உடம்பில் தம் உயிர்ப்பைப் பாய்ச்சினார். உயிர்த்தெழுந்த மூலன் திருமூலராக நிலைபெறுகிறார். மூலன் தம் மனைவிக்கும் சுற்றத்தாருக்கும் உண்மையை உணர்த்திவிட்டு, திருவாவடுதுறை செல்கிறார்.

முற்றுணர்வு கூடிய இந்த மெய்ஞ்ஞானம் தமக்குக் கிடைத்ததை ஆராய்ந்தார். சிவபிரானின் அருளாலே தோன்றிய சிவாகமங்களின் பொருளை மண் உலகில் தம் திருவாக்கினால் தமிழில் எழுதுவதற்காகத் திருவருளே இச்செயலை செய்தது உணர்கிறார். இதனை,

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே**

எனத் திருமூலரே திருமந்திரத்தில் கூறியிருப்பதை உணர்வுடையார் உணர்க.

திருவாவடுதுறை கோயிலின் மேற்குப் பக்கத்தில் அமைந்திருந்த உயர்ந்த அரசமரத்தின் கீழ் சிவராச யோகத்தில் தம்முடைய உள்ளக் கமலத்தில் உறைந்தொளிரும் பொருளோடு உணர்ந்து ஒன்றினார். தாமரைப் பூவைப் போல மலர்ந்து அறிவு மணம் வீசும் இதய கமலத்தில் உறைந் திருக்கும் மெய்ப்பொருளோடு இணைந்து உலகம் உய்வதற்காகச் சரியை - கிரியை - யோகம் - ஞானம் ஆகிய நான்கு நெறிகளையும் விரித்து ஆண்டொன்றுக்கு ஒன்றாய் ஒரு பாடல் என 3000 பாடல்களைப் பாடி முடித்தார். 'ஒன்று அவன் தானே' என முதல் பாட்டை எடுத்துப் பாடினார். இந்த வகையில் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருந்து மூவாயிரம் பாடல்களை மண்மீது பாடி அருளினார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளையும் விரிவாகப் பேசிய திருமூல நாயனாரின் திருவடிகளை வணங்கி, திருமூல நாயனார புராணத்தை நிறைவு செய்கிறார் சேக்கிழார் - இனி இவ்வரலாற்றுக்குள்ளே பொதிந்துள்ள உண்மைப் பொருளைக் காண்போம்.

**உட்கிடை (உண்மைப்பொருள்)**

'சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லும் ஞானச்செல்வர் களே சிவபுரம் சென்று சேர முடியும்' என்கிறார் மாணிக்கவாசகர். இதற்கேற்ப, தெய்வச் சேக்கிழார் அருளிய உள்ள திருமூல நாயனார் புராணத்தில் இருந்து பின்வரும் உண்மைகளை உய்த்துணரலாம்.

1. ஞானம் என்பது குருபிரான் அருளால் வழி வழியாக வழங்கப் பெறுவது. திடீரென்று நடைபெறும் அதிசயக் காட்சிகளினாலோ அற்புதங்களினாலோ தம்முடைய முயற்சிகளினாலோ அடையக் கூடியதன்று. எல்லாம் வல்ல சித்தராகிய சிவபெருமான் தொடங்கி முருகப்பெருமான், நந்தியம்பெருமான், அகத்தியர் என வாழையடி வாழையாக ஞானம் குரு பரம்பரையாக வந்து கொண்டிருக்கிறது. அந்த வகையில் சிவபெருமானிடமிருந்து சகல ஞானங்களையும் பெற்றவர் நந்தியம் பெருமான். அவரிடமிருந்து திருவருளுபதேசம் பெற்றவர் சிவயோகி. சிவயோகியிடமிருந்து பெற்றவர் மூலர். 'குருவே சிவம் எனக் கூறினான், நந்தி' எனத் திருமந்திரத்தில் திருமூலர் குறிப்பிடுவதால், மெய்ப்பொருளை மெய்யாகவே காட்டிக்கொடுத்த குருக் கொண்டல்கள் எல்லாம் சிவமே. அச்சிவத்தின் திருவடி பற்றி வரும் நந்தியம் மரபே; ஒவ்வொருவரிடம் இருக்கும் அறிவாகிய

ஜோதித்தீயைப் பற்றித் தொடர்ந்து கொள்ளும் ஞானமரபு என உணர்தல் வேண்டும். 'தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது' என்பதற்கு இணங்க சிவயோகி தொட்டுக் காட்ட மூலனாக இருந்தவர் திருமூலராக உயர்ந்தார்.

2. அறிவாகிய பொருளைத் தெரிந்து கொள்வது, உணர்ந்து கொள்வது, கண்டுகொள்வது, கேட்டுக் கொள்வது மட்டும் போதாது. பொருளைத் தெரிந்து கொண்டவர்கள் மெய்ப்பொருளைத் தெரிந்தவர்களோடு அடிக்கடிச் சந்தித்து, சந்தித்து மெய்ப்பொருளைச் செம்பொருளோடு ஒன்றச் செய்யும் சிவபோகத்திலும் சிவயோகத்திலும் திளைத்தல் வேண்டும். அந்த வகையில் கயிலை மலையிலிருந்து வந்த சிவயோகி அணிமா முதலான அரிய எட்டு வகைச் சித்திகளும் கைவரப் பெற்ற நிலையில், நந்திதேவரின் நேரடிச் சீடராக இருந்தும் தன்னை ஒத்த ஞானிகளிடம் தொடர்புகொள்ள வேண்டும் என்னும் நோக்கோடு திருக்கயிலாயத்திலிருந்து புறப்பட்டு வருகிறார். கௌதம புத்தர் சங்கம் என்று அமைத்ததும், மணிவாசகர் 'அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என்று சொன்னதும், திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் உள்ள அடியாரோடு சுந்தரரை இறைவன் கூட்டுவித்ததும், மெய்கண்டார் 'அன்பரொடு மரீஇ' என்று சொன்னதும், ஔவையார் 'தொண்டர்தம் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ' என்று சொன்னதும், அபிராமி பட்டர் 'தொண்டரொடு கூட்டு கண்டாய்' என்று சொன்னதும், அருட்பிரகாச வள்ளலார் 'ஒருமையுடன் நினது மலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவு வேண்டும்' என்று சொன்னதும், இந்நுட்பம் பற்றியே ஆகும். அருளாளர்கள் அனைவரும் தொண்டர் குழாத்தோடு மடங்களில் தங்கி அறிவாகாரப் பொருளை உணர்ந்து உணர்ந்து அதனோடு ஒன்றிணைவார்கள். இந்த நுட்பத்தை உணர்வுடையார் உணர்வார்.

மேற்சுட்டிய மெய்ம்மையின் அடிப்படையில் சிவயோகியார் தென் பொதிகையில் உள்ள அகத்தியனாரைச் சந்திக்க விழைந்து - விரைந்து புறப்பட்டு வருகிறார். 1. கேதாரம், 2. பசுபதி நேபாளம், 3. காசி, 4. திருப்பருப்பதம், 5. திருக்காளத்தி, 6. திருவாலங்காடு, 7. காஞ்சிபுரம், 8. திருவதிகை வீரட்டானம், 9. சிதம்பரம், 10. திருவாவடுதுறை ஆகிய இடங்களுக்குச் சென்று வழிபாடு செய்தார் என்பது உலகியலாகக் கொள்ளப்படுகிற பொருள். ஆனால் உண்மையில் நடந்தது மேற்சுட்டிய பத்து இடங்களிலும் வாழ்ந்துவந்த ஞானாசிரியர்களோடும் அவர்தம் சீடர்களோடும் ஞானப்பரிமாற்றம் செவிச் செல்வமாக நிகழ்ந்தது என்பதே உண்மை. கொண்டும் கொடுத்தும் பேரின்பச் சிவபோகம் நிகழ்ந்து - சிவயோகம் கூடியது - சிவஞானம் மலர்ந்து மணம் வீசியது அங்கே.

3. 'தில்லை' எனப்படும் சிதம்பரத்தில் மட்டும் சிவயோகியார் உருகி, உருகி நிற்கிறார். பேரின்பப் பெரும்பொருள் அந்த இடத்தில் தான் ஆனந்தத் தாண்டவம் ஆடுகிறது. உலகமும் உலக உயிர்களும் உய்யும்படியாகத் தன்னுடைய ஞானமாகிய தூக்கிய திருவடியை உடைய சிவபெருமான் முன், சிவயோகியார் மிக்க அன்போடும் மிக்கெழும் மகிழ்ச்சியோடும் நின்று உருகி வழிபட்டார். மெய்யுணர்வு மிக்குச் சிவபோக நிலையில் திளைத்துச் சிவானந்த அருட்கூத்தை முழுதும் கண்டு பதி ஞானத்தில் ஒன்றினார். உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து ஆராக் காதலுடன் தில்லையில் வழிபட்டார். இதனை,

**எவ் உலகும் உய்ய எடுத்து அருளிய சேவடியாரைச்**
**செவ்வியஅன்பு உறவணங்கிச் சிந்தை களிவரத் திளைத்து**
**வவ்விய மெய் உணர்வின்கண் வரும் ஆனந்தக் கூத்தை**
**அவ் இயல்பில் கும்பிட்டு அங்கு ஆராமை அமர்ந்திருந்தார்**

**(திருமூல நாயனார் புராணம் பா.7)**

எனத் தெய்வச் சேக்கிழார் குறிப்பிடுவதிலிருந்து மேற்சுட்டிய உண்மையை உணரலாம். நந்தியம்பெருமானுக்கு உபதேசம் செய்தருளிய பெரிய மெய்ஞ்ஞானக் கூத்தர் திருச்சிற்றம் பலத்தில் ஞானக்கூத்து ஆடிக் கொண்டே இருப்பதால், சிவயோகியார் தன்னை மறந்து தன் நாமம் கெட்டு நின்றார் என்பதே உண்மை.

4. அந்தணர்கள் நிறைந்த சாத்தனூரில் விட்ட குறை தொட்ட குறை காரணமாகத் தம்முடைய முற்பிறப்பின் வாசனை அறியாது பசுக்களை மேய்க்கும் இடையனாக மூலன் என்கிற பெயரில் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரை அறியாமை என்கிற பாம்பு இப்பிறப்பில் மிகுதியாகத் தீண்டியிருந்ததால், இப்பிறப்பினில் அவர் மனிதராக இருந்தாலும் மரம் போலும் கல் போலும் வாழ்ந்து வந்தார். நல்வினை விளையும் காலம் ஆதலின், கயிலையிலிருந்து வந்த சிவயோகி அந்த இடம் அடைகிறார். முன்வினைப் பயனை இறையருள் கூட்டுவிக்க சிவயோகி தன் முழு ஆற்றலையும் நயனம், ஸ்பரிசம், திருவடி ஆகிய மூன்றின் வழி ஒருசேர ஒரே நிமிடத்தில் வழங்கி மூலனைத் திருமூலராக உயிர்த்தெழ வைக்கிறார். கயிலையில் இருந்து வந்த சிவயோகிக்கு வந்த பணி முடிந்தது. நேராகத் தம் சொந்த பணியைப் பார்க்கவும், அகத்தியரைக் காணவும் பொதிகை மலை நோக்கினார். சிவபோகமும் அதனால் சிவயோகமும் அதன் விளைவால் சிவஞானமும் முழுமையாகப் பெற்று எழுந்த மூலன் திருமூலராகிறார்.

5. அந்தணர்கள் நிறைந்த சாத்தனூரில் இருந்து திருமூலர், திருவா வடுதுறைக்குச் செல்கிறார். அங்குத் திருவாவடுதுறை கோயிலின் மேற்குப் பக்கத்தில் இருந்த மிக உயர்ந்த அரச மரத்தின் கீழ் (புத்தரை போல)ச் சிவராச யோகத்தில் அமர்ந்து தன் உடம்பிற்குள்ளே உள்ள இருதய கமலத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் அரிய பொருளான மெய்ப்பொருளோடு இரண்டறக் கலந்து ஒன்றி உருகுகிறார். ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைகிறார். அந்த ஒன்றிய யோகத்தில் அவர் உரைத்த ஞானத்தை அவரின் சீடர்கள் எழுதி வைத்தனர். பசுக்கள் என்பது பக்குவம் பெற்ற சீவான்மாக்களைக் (சீடர்கள்) குறிக்கும். பின்னால் பெருகி வரும் சீடர் கூட்டத்தைக் கட்டிக் காக்கும் நல்ல மேய்ப்பராகத் திருமூலர் விளங்கப்போகிறார் என்பதைக் குறியீடாகச் சேக்கிழார் முன்னரே குறிப்பிடுகிறார். பூ அலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார் (பா. 25) எனத் தெய்வச் சேக்கிழாரும் உரைப்பதை உணர்வுடையார் உணர்ந்து தெளிக.

6. பிறவித் தொடர்பை நச்சுத் தொடர்பு (விஷத் தொடர்பு) எனக் கூறுகிறார் தெய்வச் சேக்கிழார். இந்தப் பிறவி வேரை அறுப்பதற்காகச் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கையும் ஆண்டுக்கு ஒன்றாக இறையருளால் வழங்கினார். இதனை,

ஊன் உடம்பில் பிறவிவிடம்
        தீர்ந்து உலகத்தோர் உய்ய
ஞானம் முதல் நான்கும் அலர்
        நல் திரு மந்திர மாலை
பான்மை முறை ஓராண்டுக்கு
        ஒன்று ஆகப் பரம்பொருள் ஆம்
ஏன எயிறு அணிந்தாரை
        ஒன்று 'அவன் தான்' என எடுத்து

(திருமூல நாயனார் புராணம் பா.26)

என்னும் பாடல் வழி மேற்சுட்டிய உண்மைகளைக் கூறுகிறார். இப் பாடலில் நான்கு உண்மைகள் பொதிந்துள்ளன.

அ. பிறவிப் பிணியாகிய பிறவித் தொடரை நச்சுத் தொடர், விஷத் தொடர் எனக் குறிப்பிடுகிறார். இதனால்தான் இந்த விஷத் தொடர்புள்ள மூலனை அந்த விஷத் தொடர்பை அறுத்துப் பிறவா யாக்கைப் பெரியோனாக, கயிலையில் இருந்து வந்த சிவயோகி மாற்றினார். இரசவாதம் எனும் கூடு விட்டுக் கூடு பாய்தல் நிகழ்ந்த பின்னர் மூலன் திருமூலர் ஆகிறார்.

ஆ. உலகில் தோன்றிய எல்லாச் சமயங்களும் தங்களுடைய ஞானம் முழுமையையும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பிரிவுகளுக்குள் அடக்கிவிடும். இஸ்லாம் இதனை ஷரீகத், தரீக்கத், ஹரீக்கத், மஃரிபத் எனக் கூறும். திருமூலர்பிரான் அருளிய திருமந்திர மாலையில் உள்ள மூவாயிரம் பாடல்களும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளுக்குள் அடங்கிவிடும்.

இ. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற இந்த நான்கையும் ஆண்டுக்கு ஒன்றாகப் பாடினார் என்று தெய்வச் சேக்கிழார் குறிப்பிடுவதால், நான்காண்டுகளில் திருமந்திர மாலை முழுமையும் பாடி முடித்துவிட்டார் எனலாம். எனவே, முதலாமாண்டு சரியை, இரண்டாமாண்டு கிரியை, மூன்றாமாண்டு யோகம், நான்காமாண்டு ஞானம் என்று நான்கு ஆண்டுகளில் திருமந்திர மாலை என்ற நூலின் மூவாயிரம் பாடல்களையும் திருமூலர் பாடி முடித்துவிட்டார் என்றே தெய்வச் சேக்கிழாரின் திருப்பாடல் உணர்த்துகிறது. ஓராண்டிற்கு ஒரு பாடல் என மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து மூவாயிரம் பாடல்களைப் பாடினார் எனக் கூறுதல் பொருந்தாமை என்பதை அறிவுடையோர் அறிவர்.

ஈ. 'ஒன்று அவன் தான்' என்ற பாடல் திருமந்திரத்தில் முதல் பாடல் என்றும் தெய்வச் சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

7. உயிர்களுக்கு நன்மையளிக்கக் கூடிய ஞானம், யோகம், கிரியை, சரியை என்ற நான்கையும் திருமூலர்பிரான் வழங்கினார் என மீண்டும் ஒருமுறை நிறைவாகச் (இறுதிப் பாடல் எண் : 28) சொல்லுகிறார் தெய்வச் சேக்கிழார்.

8. மூவாயிரம் ஆண்டுகள் திருமூலர்பிரான் இம்மண்மேல் வாழ்ந்திருந்தார் என்கிறார் தெய்வச் சேக்கிழார். இதன் பொருள் திருமூலரின் பாடல்கள் மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேலும் இம்மண்ணுலகில் நிலைத்து வாழும் என்பதே. இப்படிப் பொருள் கொள்வதே அறிவுடைமை. பொருள் உணர்ந்தவர்களுக்குப் பொருளின் பொருள் தெரியும்.

**இறுதியாக ஒரு சொல்**

கயிலையிலிருந்து வந்த சிவயோகியாரின் பெயரை ஓரிடத்திலேனும் தெய்வச் சேக்கிழார் குறிப்பிடவில்லை. பசுக்களை மேய்த்த மூலனின் உடம்பில் சிவயோகியார் தன் உயிராற்றலைச் செலுத்திய பிறகு மூலனே திருமூலராக மாறுகிறார். மூலனாக இருந்து திருமூலராக

ஆனவர்தான் திருமந்திர மாலையை அருளியவர். கயிலையில் இருந்து வந்த சிவயோகி அல்லர். திருமந்திரத்தை அருளியவர் திருவாவடு துறைக்கு அருகிலுள்ள சாத்தனூரில் பிறந்தவர். சிவயோகியார் அருளால் ஞானம் பெற்றவர்.

1. தெய்வச் சேக்கிழார் சொல்லாத ஒரு செய்தி திருமூலர் பிரான் எங்கே அடக்கமாகி (ஜீவ சமாதி) இருக்கிறார் என்பது. சைவ மரபில் வரும் சான்றோர்கள் திருமூலர் திருவாவடுதுறை கோயிலுக் குள்ளே அடக்கமாகி இருக்கிறார் எனக் கருதி அங்குள்ள அவரது திருக்கோயிலில் வழிபாடு செய்து வருகின்றனர்.
2. சித்தர் மரபில் வருகிறவர்களும் மெய்ப்பொருளைக் காண்பதற்கு முயல்பவர்களும் திருமூலர் பிரான் தில்லை என்று வழங்குகிற சிதம்பரத்தில் நடராசர் சந்நிதி இருக்கிற உள்பிரகாரத்தில் ஆதி மூல நாதர் என்று வழங்குகிற லிங்கத் திருமேனிக்குக் கீழே அடக்கமாகி இருக்கிறார் என உணர்ந்துரைக்கிறார்கள். இன்றும் நிறைமதி நாளில் (பௌர்ணமி) சித்தர் நெறியில் வாழ்கின்றவர்களும் மெய்ஞ்ஞானத் தோட்டம் உள்ளவர்களும் சிதம்பரத்தில் உள்ள ஆதி மூல நாதர் சந்நிதியில் தியானம் செய்வதைக் காணலாம்.
3. அவரவர் விதிவழி அடைய நின்றனரே என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கேற்ப அவரவர்க்குரிய இடத்திற்குச் சென்று திருமூல நாயனாரின் திருவருளைப் பெற்று உய்தி பெறுக! உணர்வு பெறுக!! உயிர்ப்பு எய்துக!!!

**அடிக்குறிப்பு**

1. தம் உடம்பைப் பாதுகாப்பாக வைத்துவிட்டு உயிரைப் பாய்ச்சினார் எனத் தெய்வச் சேக்கிழார் கூறுகிறார். ஞானோபதேசம் செய்யும் போது தன் உடலையும் உயிரையும் பாதுகாப்பாக (வேறு வினைகள் வந்து தாக்கிவிடாமல்) வைத்துக் கொண்டுதான் வழங்குவார்கள். இந்த ஞானச் செயலே உலகியலாகக் கூறப்பட்டுள்ளது.
2. அறிவாகிய திருவடியினைக் கண்டுகொள்ள பேராசிரியர் அரங்க. இராமலிங்கம் எழுதிய திருவடி என்ற நூலினைக் கண்டு தெளிக.

3.1 இருபுறமும் சேனைகள் போருக்குத் தயாராக நிற்கும் நிலையில், மரண பயத்தில் மனம் வெறுமையாக இருந்த நிலையில், அர்ச்சுனனுக்கு ஒரு நிமிட நேரத்தில் மெய்ப்பொருளை (நேர்முகத்தில்) கண்ணாரக் காட்டியவர் கண்ணபிரான். பகவத் கீதையைக் குழலோசை வழி அருளிய கண்ணபிரானின் திருவாய் அமிழ்தத்தைச் செவியாரச் சுவைத்துக் காண்டீபனாக நிலை பெற்றான் அருச்சுனன். மூலனுக்குச் சிவயோகியும்

அருச்சுனனுக்குக் கண்ணபிரானும் ஒரு நிமிடத்தில் மெய்ப் பொருளை உணர்த்திக் காட்டினர். உணர்வுடையார் உண்மையை உணர்வர்.

3.2. நல்ல மேய்ப்போனாக ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த காளிதாசனுக்கு ஒரு நொடியில் உஜ்ஜயினியில் உள்ள உச்சி மாகாளிதேவி மெய்ப்பொருளைக் காட்டி, நாவுக்கரசாக - கவியரசாக மாற்றியதை உணர்வுடையார் உணர்வர்.

4. இரசவாதம், கூடுவிட்டுக்கூடு பாய்தல் இரண்டும் ஒன்றே. இதன் உண்மை விளக்கத்தைப் பேராசிரியர் அரங்க. இராமலிங்கம் அவர்கள் எழுதிய சித்தர் வழி என்ற நூலில் கண்டு தெளிக.

5.1 மூலன் மடவரை தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம் - பா-101

5.2 மூலன் உரை செய்த மூவாயிரந் தமிழ் - பா-99

5.3 முத்தி முடிவிது மூவாயிரத்திலே - பா-100

5.4 மூலன் உரை செய்த மூவாயிரந் தமிழ் - பா-3046.

**இக்கட்டுரை வழி அறியலாகும் செய்திகள் : சுருக்க வடிவில்**

1. திருக்கயிலையிலிருந்து பொதிகை வரும் சிவயோகியின் நோக்கம் தமிழ் முனியைச் சந்தித்துத் தெய்வத்தமிழின் நலனை நுகர்ந்து இன்புறுவதற்காகவே.

2. வரும் வழியில் பத்துத் தலங்களைத் தரிசித்து - அங்கிருக்கும் ஞானியரோடு - ஞானப் பரிமாற்றம் செய்து கொண்டார்.

3. மெய்ஞ்ஞானம் மெய்க்குருபிரானின் கருணையினால், தயவால் அடையக்கூடியது.

4. அடியார்களை அடிக்கடிச் சந்தித்துச் சந்தித்துச் செவிச்செல்வம் பெறவேண்டும்.

5. தில்லையெனும் திருச்சிற்றம்பலத்தில் எல்லாம்வல்ல ஞானச்சித்தர் ஆனந்தத் தாண்டவம் ஆடிக் கொண்டிருப்பதால் அனைத்து அருளாளரும் அங்கு அடைக்கலமாயினார்.

6. சிவயோகி ஒரே நொடியில் மூலனுக்குச் சிவதீட்சை அளித்து விட்டுப் பொதிகை ஏகினார்.

7. இடையனாகிய மூலன் திருமூலராக உயிர்த்தெழுந்தார்.

8. தமிழ்நாட்டில் உள்ள சாத்தனூரில் பிறந்த மூலனாகிய திருமூலரே திருமந்திர மாலை பாடியவர். கயிலையிலிருந்து வருகைபுரிந்த சிவயோகி அல்லர்.

9. அவர் பாடியது மூவாயிரம் பாடல்கள் மட்டுமே. ஏனையவை இடைச்செருகல்.

10. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளை மூவாயிரம் பாடல்களில் பாடியுள்ளார்.

11. மூவாயிரம் பாடல்களையும் நான்கு ஆண்டுகளில் நான்கு நெறி களில் ஒன்பது தந்திரங்களில் பாடி முடித்துவிட்டார். மூவாயிரம் ஆண்டுகள் இருந்து ஆண்டுக்கு ஒன்றாகப் பாடவில்லை.

12. மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார் என்பது நீண்ட நாள் வாழ்ந்தார் என்பதற்காகச் சொல்லப்பெற்றது.

13. பசுக்களை மேய்த்தார் என்பது பக்குவம் பெற்ற சீவன்களை - சீடர்களைக் கட்டிக் காத்தார் என்பதற்குக் குறியீடு.

14. 'ஒன்று அவன் தான்' என்பது திருமந்திர மாலையின் முதல் பாடல்.

15. 'திருமந்திர மாலை' என்பதே அவர் பாடிய நூலின் பெயர். திருமந்திரம் எனப் பின்னாளில் சுருங்கிவிட்டது.

16. திருமூலரின் அடக்கம் (ஒடுக்கம்) தில்லையம்பதியாகிய சிதம்பரம்.

# 15. திருமந்திரத்தில் அறக்கருத்துக்கள்

முனைவர் வே.சு. இராமலிங்கம், திருநெல்வேலி.

மனிதனை நெறிப்படுத்துவதற்காக எழுந்தவை சமயங்கள் ஆகும். அந்த சமயங்கள் கூறும் ஒழுக்கங்கள் அறம் எனப்படும். அவ்அறத்தை எவ்வாறு கடைபிடிக்க வேண்டும். அறச் செயல்களினால் விளையும் பயன்கள் போன்றவற்றைப் பற்றி விளக்கிக் கூறுவது அறக்கருத்துகள் ஆகும். திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள அறக்கருத்துக்கள் பற்றி இக் கட்டுரையில் காண்போம்.

**அறக்கருத்துக்கள்**

மனிதன் வாழ்வில் செய்யும் நற்செயல்களும், நல்ஒழுக்கங்களும் அறம் எனப்படும். அறக்கருத்துக்களை எடுத்துரைப்பதில் சமயங்கள் பெரும் பங்காற்றுகின்றன.

அறம் என்பதற்கு க்ரியாவின் தற்காலத் தமிழகராதி,

> ''குடும்ப வாழ்வும் பொது வாழ்வும் சீராக இயங்க ஒருவர் கடைபிடிக்கும் சமயச்சார்பான அல்லது ஒழுக்கக் கண்ணோட்டத் துடன் கூடிய நெறிமுறைகள் அல்லது கடமைகள்''

என்று விளக்கம் அளிக்கிறது.

தமிழில் தலைசிறந்த அறநூலாகத் திகழ்வது திருக்குறள் ஆகும். அதில் கூறப்படாத அறங்களே இல்லை எனலாம். அதேபோன்று, இறைவனின் பெருமைகளையும், பதி, பசு, பாசம் கொள்கையைப் பற்றியும் பேசுகின்ற திருமந்திரத்திலும் அறக்கருத்துக்கள் கூறப்பட்டு உள்ளன.

**திருமந்திரத்தில் அறக்கருத்துக்கள்**

திருமந்திரத்தில் திருக்குறளைப் போல எல்லா அறக்கருத்துக்களும் எடுத்துரைக்கப்படவில்லை. எனினும், மனிதன் தன் வாழ்வில் செயல்முறைப் படுத்த வேண்டிய அறக்கருத்துக்கள் தெளிவாகக் கூறப்பட்டு உள்ளன.

இந்நூலில் அந்தணர்க்கு உரிய அறக்கருத்துக்கள், அரசனுக்கு உரிய அறக்கருத்துகள், பொதுவான அறக்கருத்துகள் போன்றவை கூறப் பட்டுள்ளன. இவற்றுள் பொதுவான அறக்கருத்துக்கள் மட்டும் இங்கு எடுத்தாளப்பட்டு உள்ளன.

**கொல்லாமை**

ஒருவர் தம்முடைய தேவைக்காக பிற உயிர்களைக் கொல்வதைத் தவிர்ப்பது ஆகும். திருமூலர் சிவபூசைக்கு ஏற்ற சிறந்த மலர் கொல்லாமையே ஆகும் என்கிறார்.

"பற்றுஆய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை"

இறைவனை பூஜிக்க மலர்களைப் பயன்படுத்துவர். ஆனால் இங்கு மனிதனின் நல் ஒழுக்கங்கள் ஒவ்வொன்றும் ஒரு மலராகக் கொள்ளப் படுகிறது. எனவே, கொல்லாமையாகிய ஒழுக்கமே சிறந்த மலராகக் கருதப்படுகிறது.

கொல்லாமையைக் கடைபிடிக்காதவர்கள் நரகத்தைச் சென்றடை வார்கள் இதனைத் திருமூலர்,

"செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை நில்லிடும்"

என்கிறார். திருமூலர் பிற உயிர்களைக் கொல்பவர்களை "மாக்கள்" என்று சாடுகிறார்.

**புலால் மறுத்தல்**

ஊன் உண்ணாதிருத்தல், புலால் மறுத்தல் ஆகும். ஊன் உண்பவர் களைத் திருமூலர் கீழ்மக்கள் என்று கடிந்துரைக்கிறார்.

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை"

ஓர் உயிரைக் கொன்று அதன் சதையை உண்பவர்களுக்கு நல்லெண்ணங்கள் ஏற்படாது என்பதாலேயே திருமூலர் அவர்களை புலையர் என்கிறார்.

புலால் உண்பவர்களுக்கு ஏற்படும் நிலைமையினை திருமூலர்,

"...............................இமயன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே"

என்கிறார். ஊன் உண்பவர்களை எமதூதர்கள் கூட சிறு பூச்சியைப் போல அற்பமாகவே நடத்துவர்.

**பிறன்மனை நயவாமை**

அயலார் மனைவியை விரும்பாமலிருத்தல், பிறர் மனைவியை நாடுபவரின் தன்மையினை திருமூலர்,

"காய்ச்ச பலாவின் கனிஉண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக்கு இடர்உற்ற வாறே"

என்கிறார். பிறர் மனைவியை நாடுவது அறியாமையும், மூடத்தனமும் ஆன செயலாகும்.

பிறர் மனைவியை விரும்புவரது நிலைமை என்னவாகும் என்பதை திருமூலர்,

**"பொருத்தம் இலாத புளிமாங்கொம்பு ஏறிக்**
**கருத்து அறியாதவர் கால்அற்ற வாறே"**

என்கிறார். நன்றாக வளர்க்கப்பட்ட மாங்கனியை விட்டுவிட்டு பொருத்தம் இல்லாத புளிய மரத்தின் மீதேறி துன்பப்படுவது போலாகும்.

**கள்ளுண்ணாமை**

கள் குடிக்காதிருத்தல், கள் குடிப்பவர்களை திருமூலர் ஒழுக்கத் திலிருந்து விலகியவர்கள் என்கிறார்.

**"முழுநீர்க் கள்உண்போர் முறைமை அகன்றோர்"**

அவ்வாறு நல் ஒழுக்கத்திலிருந்து விலகியவர்கள் இறைச்சிந்தனை இன்றி கெட்டு அழிவர்.

கள்ளுண்பவர்கள் செய்கின்ற எந்தச் செயலும் கீழான செயலே என்கிறார் திருமூலர்,

**"நித்தல் இருத்தல் கிடத்தல் கீழ்க்காலே"**

மது உண்டு தன்னிலை மறந்தவர்களின் ஒவ்வொரு செயலும் அருவருக்கத் தக்கதாக அமைந்துவிடுகிறது.

கள் உண்பவர்களை திருமூலர் கீழ்மக்கள், கலக்கம் உடையோர், மூடர்கள் என்று கடிந்துரைக்கிறார். கள் அருந்துபவரிடத்து உள்ள வாய்மையை அழித்துவிடும் இதைத் திருமூலர்,

**"..................கள்வாய்மை அழிக்கும்**
**இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி முயங்கும்"**

இவ்வாறு கள் மனிதரிடத்துள்ள நல் ஒழுக்கங்களை மாற்றி அவரைத் தீய வழியில் செலுத்திவிடும் என்கிறார்.

**அன்புடைமை**

பிற உயிர்களையும் நேசிப்பது. அன்பேசிவம் சிவமே அன்பு என்கிறார் திருமூலர். தன் எலும்பை விறகாக்கித் தன் தசையை தீயிலிட்டு வறுத்தாலும் அன்புடன் உள்ளம் உருகுபவரால் மட்டுமே இறைவனை அடையமுடியும் என்கிறார். மேலும், "ஈரம் உடையவர் காண்பர் இணையடி" என்கிறார். அன்பு செலுத்துபவரை இறைவன் அறிவான் என்கிறார் திருமூலர்,

"இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்"

அன்புடையவர்களால் மட்டுமே பிறவிப் பெருங்கடலைக் கடந்து இறைவனின் திருவடிகளை அடையமுடியும்.

**நடுவுநிலைமை**

ஒருவருக்கும் சார்பாகப் பேசாமல் நடுவாய் நிற்கும் இயல்பு. நடுவு நிலைமையில் நிற்பவரே ஞானம் பெற்று உயர்வர் என்கிறார் திருமூலர்,

"நடுவுநின்றார்க்கு அன்றி ஞானமும் இல்லை
நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை
நடுவு நின்றார் நல்தேவரும் ஆவார்"

நடுவு நிலைமையில் நிற்பவர்கள் என்றும் துன்பங்களின்றி உயர்ந்த பேற்றைப்பெறுவர்.

நடுவு நிலையில் நிற்பவர்களின் தன்மையைப் பற்றி திருமூலர் கூறும்போது,

"நடுவு நின்றார் சிலர் ஞானிகள் ஆவார்
நடுவு நின்றார் சிலர் தேவரும் ஆவார்"

ஞானிகள், தேவர்கள் போன்ற உயர்ந்தவர்கள் சென்ற வழியான நடுவு நிலையில் நாமும் சென்றால் உயர்ந்த இறைநிலையை அடையலாகாது.

**ஈகை**

எவ்வித எதிர்பார்ப்பும் இன்றி பிறருக்குக் கொடுப்பது. ஈகையைப் பற்றித் திருமூலர் கூறும்போது, காக்கையைப் போல் பகிர்ந்து கொள்ளுங்கள் என்கிறார்.

"ஆர்க்கும் இடுமின் அவர்இவர் என்னன்மின்
காக்கை கரைந்து உண்ணும்காலம் அறிமின்"

வேறுபாடின்றி நம்மைச் சுற்றி இருப்பவர் அனைவருக்கும் கொடுப்பதே சிறந்த ஈகை ஆகும்.

**அறத்தின் பயன்**

அறச்செயல்களினால் விளையும் நன்மையினைத் திருமூலர்,

"விளைக்கும்தவம் அறம் மேல்துணை ஆமே"

என்றும்,

"அறநெறிக்கு அல்லது உற்றுங்களால் ஒன்று மீந்ததுவே துணை"

என்றும் கூறியுள்ளார். அறம் இம்மை மட்டுமின்றி மறுமையிலும் நமக்கு துணையாய் வரும். அறத்தின் நற்பயனை திருமூலர்,

"..............வினை ஆசுஅற ஓடிட்டு
ஒழி நடப்பார் வினை ஓங்கி நின்றாரே"

என்கிறார்.

அறச்செயல் புரிபவர்கள் மட்டுமே நல்வினை, தீவினைகளைக் கடந்து எளிதில் இறைவன் திருவடியைச் சென்றடையமுடியும்.

அறச்செயல்களை நம் வாழ்வில் எப்பொழுதும் கடைபிடிக்க வேண்டும். வாழ்வில் ஏற்படும் துன்பங்களாலோ, இடையூறுகளாலோ தேங்கிவிடாமல் அறச்செயல்களைச் செய்யவேண்டும். எவ்விதத் தடைகள் வந்தாலும் அவற்றைத் தாண்டி நாம் இறைவழிபாட்டைச் செய்கிறோம். அதுபோல அறங்களைச் செய்யவேண்டும். இக்கருத்தை நினைவில் இருத்தியே சமய இலக்கியங்கள் அறக்கருத்துக்களை வலியுறுத்திக் கூறுகின்றன.

# 16. ஒன்பதாம் திருமுறை அமைப்பும் சிறப்பும்

தவத்திரு. ஊரன் அடிகளார், வடலூர்.

**ஒன்பதாம் திருமுறையின் அமைப்பு**

சம்பந்தர், அப்பர் (திருநாவுக்கரசர்), சுந்தரர் இம்மூவரும் பாடியருளியவை தேவாரம்.

சம்பந்தர் பாடியது முதல் மூன்று திருமுறைகள்.

அப்பர் பாடியது நான்கு ஐந்து ஆறாம் திருமுறைகள்.

சுந்தரர் பாடியது ஏழாம் திருமுறை.

இவ்வேழு திருமுறைகளும் சேர்ந்ததே தேவாரம். இவ்வேழு திருமுறைகளும் சேர்ந்த தேவாரத்திற்கு அடங்கன்முறை என்றொரு பெயரும் உண்டு.

மாணிக்கவாசகர் பாடியது திருவாசகம். இது எட்டாம் திருமுறை. மாணிக்கவாசகர் பாடிய திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையில் சேரும்.

இவ்வெட்டு திருமுறைக்குப்பின் வரும் ஒன்பதாம் திருமுறை திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டுமாகும்.

திருமூலர் திருமந்திரம் பத்தாம் திருமுறை.

நாற்பது அருளாளர்கள் பாடிய பல்வேறு பிரபந்தங்கள் பதினோராம் திருமுறையாயின.

சேக்கிழார் அருளிய பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறை.

பன்னிரண்டு திருமுறைகளில் பதினோராம் திருமுறை மட்டும் அதன் வரிசை எண்ணாற் பெயர் பெற்றது.

ஒன்பதாம் திருமுறையைப் பாடியவர்களும் ஒன்பதின்மர்.

1. திருமாளிகைத்தேவர்
2. சேந்தனார்

3. கருவூர்த்தேவர்
4. பூந்துருத்தி காடநம்பி
5. கண்டராதித்தர்
6. வேணாட்டடிகள்
7. திருவாலி அமுதனார்
8. புருடோத்தமநம்பி
9. சேதிராயர்

இவ்வொன்பதின்மரின் பாடலுக்கும் திருவிசைப்பா என்று பெயர். திருவிசைப்பாப் பாடப்பெற்ற தலங்கள் பதினான்கு. இப்பதினான்கில் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் ஆறு. தேவாரப் பாடல் பெறாத தலங்கள் எட்டு.

**திருவிசைப்பாத் தலங்கள் (14)**

**தேவாரப் பாடல் பெற்ற தலங்கள்**

1. கோயில் (சிதம்பரம்)
2. திருவீழிமிழலை
3. திருஆவடுதுறை
4. திருப்பூவணம்
5. திருஇடைமருது
6. திருஆரூர்

**தேவாரப் பாடல் பெறாத தலங்கள்**

1. திருவிடைக்கழி
2. களந்தை ஆதித்தேச்சுரம்
3. கீழ்க்கோட்டூர் மணியம்பலம்
4. திருமுகத்தலை
5. திரைலோக்கியசுந்தரம்
6. கங்கைகொண்டசோழேச்சுரம்
7. திருச்சாட்டியக்குடி
8. தஞ்சாவூர் இராசராசேச்சுரம்

தேவாரப் பாடல்பெறாத இவ்வெட்டுத் தலங்களும் வேறு எந்தத் திருமுறையிலும் குறிப்பிடப் பெறவில்லை. இவற்றிற் சில பெயர்கள் புதுமையானவை. கங்கைகொண்ட சோழேசுவரமும் தஞ்சை இராசராசேசு வரமும் வரலாற்றுப் புகழ்பெற்றவை. இன்று தொல்லியல் துறையின் நிர்வாகத்திலுள்ள பெரிய தலங்கள்.

திருவிசைப்பாப் பாடிய ஒன்பதின்மரில் திருமாளிகைத்தேவர், கருவூர்த் தேவர் ஆகிய இருவரும் புகழ் பெற்றவர்கள். இவர்கள் சித்தராகவும் கருதப் பெறுகின்றனர். திருமாளிகைத் தேவருக்குத் திருவாவடுதுறை ஆதீன வளாகத்துக்குள் கோயில் உண்டு. திருமாளிகைத் தேவருக்கு வழிபாடு செய்யப்பெற்ற பின்பே, ஆதீன முதற்குரவராகிய நமச்சிவாய மூர்த்தி களுக்கு வழிபாடாவதும் ஆதீனத்தில் உணவுப் பந்தி நடைபெறுவதும் வழக்கம். கருவூர்த் தேவருக்கு, தஞ்சை இராசராசேச்சுரம் கோயில் வளாகத்தில் தனிச்சந்நிதி (சிறுகோயில்) உண்டு.

திருமுறைகள் பன்னிரண்டிலும் இவ்வொன்பதாம் திருமுறையே அளவால் மிகவும் சிறியது. 365 பாடல்கள், வருடத்தின் நாள்கள் 365

என்பதைக் கொண்டு திருவிசைப்பாப் பாடல் தொகையை நினைவிற் கொள்ளலாம். ஆனால் இன்று கிடைக்கும் பாடல்கள் 301தான். ஏனைய பாடல்கள் கிடைக்கப்பெறாது போயின.

## ஒன்பதாம் திருமுறையின் சிறப்பு

### திருவிசைப்பா என்னும் பெயர்

முதல் ஏழு திருமுறைகள் தேவாரம் எனப் பெயர் பெற்றன. எட்டாம் திருமுறை திருவாசகம் எனப் பெயர் பெற்றது. ஒன்பதாம் திருமுறைக்குத் திருவிசைப்பா என்று பெயர். திருவிசைப்பா என்ற பெயரே ஒரு தனித்தன்மை (தனிச்சிறப்பு) உடையது.

பன்னிரண்டு திருமுறைகளில் முதல் ஒன்பது திருமுறைகளும் இசை. பத்து, பதினொன்று, பன்னிரண்டு ஆகிய மூன்று திருமுறைகளும் இயல். 12-ல் 9 இசை. 3 இயல். முக்கால் பங்கு இசை. கால் பங்கு இயல். வைணவத்திலும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் மூவாயிரம் இசை. ஒரு ஆயிரம் இயல். முக்கால் பங்கு இசை. கால் பங்கு இயல். பூமிப்பரப்பில் நீர் முக்கால் பங்கு; நிலம் கா்றபங்கு:

நிலம் கால் - நீர் முக்கால்

இயல் கால் - இசை முக்கால்

இயல், நிலத்தின் தன்மைத்து. இசை, நீரின் தன்மைத்து. நீர்மை மிக்கது இசை.

தேவார திருவாசகங்கள் இசைப் பாக்களே ஆயினும் திருவிசைப்பாவே இசைப்பா எனப் பெயர் பெறுவதாயிற்று.

### திருவிசைப்பாவில் அரியதொரு பண்

இசைப்பாடல்கள் பண்ணோடு பாடப்பெறுபவை. தேவாரத்தில் பல்வேறு பண்கள் உண்டு. திருவாசகத்துக்கு ஒரே பண் - மோகனம். திருவிசைப்பாவும் பல பண்களையுடையது. சாளரபாணி என்று ஒரு பண். இப்பண் திருவிசைப்பாவைத்தவிர வேறு திருமுறைகளில் இல்லை. தேவாரத்தில் காணப்படாத சாளரபாணிப் பண் திருவிசைப்பாவில் பயின்று வருவது திருவிசைப்பாவுக்கு ஒரு தனிச்சிறப்பு.

### திருவிசைப்பாவின் அருந்தொடர்கள்

"ஒளிவளர் விளக்கு"

"கற்றவர் விழுங்கும் கற்பகக்கனி"

"நீறணி பவளக்குன்றம்"

"திருவளர் திருச்சிற்றம்பலம்"

"சைவம் விட்டிட்ட சடைகள்"

"மழலைச் சிலம்பு"

என்பன போன்ற செந்தொடர்கள், சொல்லச்சொல்ல இனிக்கும் அருந் தொடர்கள் திருவிசைப்பாவில் நிரம்ப உண்டு.

## திருவிசைப்பாவில் அருஞ்சொற்கள்

அருந்தொடர்களைப் போன்றே அருஞ்சொற்களும் திருவிசைப்பாவில் பல. அமரித்து (பொருந்தி), அலச (வருந்த), கவந்திகை (போர்வை), கித்துதல் (விளையாட்டு), எம்பலித்தல் (விரும்புதல்) முதலியன சில; சினுக்கர், சிதம்பர், பிணுக்கர், பிசுக்கர், பிட்டர் (பிரஷ்டர்) என்பன போன்றனவும் உண்டு.

குறைந்த எண்ணிக்கையிலான பாடல்களை உடையதும் அளவால் சிறியதுமான இத்திருமுறையில் உள்ள அளவுக்கு அருந்தொடர்களும் அருஞ்சொற்களும் பெருநூல்களான திருமுறைகளிற் காணப்படவில்லை; இதுவும் ஒன்பதாம் திருமுறைக்கு உரிய தனித்தன்மை தனிச்சிறப்புகளில் ஒன்று.

திருவிசைப்பாவைப் பற்றிய செய்திகளை இவ்வளவில் நிறுத்தி, இனித் திருப்பல்லாண்டைப் பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

## திருப்பல்லாண்டு

திருப்பல்லாண்டு வாழ்த்திப் பாடுவது. ஏனையவை எல்லாம் வணங்கிப் பாடுபவை.

வைணவ உலகில் திருப்பல்லாண்டுக்கு மிகப்பெரிய சிறப்புண்டு. பெரியாழ்வார் பாடிய பல்லாண்டு நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் முதலில் வைக்கப் பெற்றுள்ளது. திவ்வியப் பிரபந்தத்தின் தொடக்கமே திருப்பல்லாண்டுதான். வைணவர்கள் நாள்தோறும் பாராயணம் செய் வதற்காகத் தொகுக்கப்பெற்ற திவ்வியப் பிரபந்தப் பாடல் திரட்டு ஒன்று உண்டு. அதற்கு "நித்தியானுசந்தானம்" என்று பெயர். நித்தியம் (தினசரி, தினந்தோறும்) அநுசந்திக்கப் பெறுவது (பாராயணம் செய்யப்பெறுவது) என்பதால் நித்திய அனுசந்தானம் - நித்யானுசந்தானம் எனப் பெயர் பெற்றது. திவ்வியப் பிரபந்தத்தில் முதலில் வைக்கப்பெற்ற திருப்பல்லாண்டே நித்தியானுசந்தானத்திலும் முதலில் வைக்கப் பெற்றுள்ளது திருப் பல்லாண்டுக்கு வைணவ உலகில் அவ்வளவு சிறப்பு.

சைவத்தில் சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டு ஒரே பதிகம்; பதின்மூன்று பாடல்களைக் கொண்டது. திருவிசைப்பாவுக்குப் பின்னர் வைக்கப் பெற்றுள்ளது.

வைணவ உலகில் திருப்பல்லாண்டுக்குக் கொடுக்கப்பெற்றுள்ள முதன்மை சைவத்தில் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். காரணம் பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானை வணங்கிப் பாட வேண்டுமே தவிர, வாழ்த்திப் பாடுவது மிகை என்று பெரியோர்கள் அஞ்சினார்கள்போலும். ஏனைய தெய்வங்களின் மீதெல்லாம் பிள்ளைத் தமிழ் பாடும் மரபுண்டு. சிவபெருமான்மீது பிள்ளைத் தமிழ் பாடும் மரபு இல்லை. பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானை, விளையாட்டுக்கேனும் பிள்ளையாகக் கருதிப் பார்க்க அஞ்சினார்கள் போலும். பல்லாண்டு பாடுவதைப் பற்றி எண்ணும்போது இதுவும் கருதத்தக்கது.

## பஞ்சபுராணத்தில் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு

சைவத்திருக்கோயில்களில் வழிபாட்டு நிறைவில் திருமுறை ஓதப்பெறும். ஒவ்வொரு திருமுறைக்கும் ஒரு பாடலாகப் பன்னிரண்டு திருமுறைகளிலிருந்து பன்னிரண்டு பாடல்களை ஓதுவதுண்டு. தலப் பதிகத்தை முழுமையாக ஓதுவதும் உண்டு. பன்னிரண்டு திருமுறைகளி லிருந்தும் பன்னிரண்டு பாடல்களை ஓதுவதற்குக் கால அவகாசம் நேரிடாத சமயங்களில் சுருக்கமாக ஐந்தே ஐந்து பாடல்களை மட்டும் ஓதி நிறைவு செய்வதுண்டு. இதற்குப் பஞ்சபுராணம் பாடுதல் என்று பெயர். இங்கு, புராணம் என்பதற்குப் பாட்டு என்றே பொருள். வரலாற்றுப் புராணம் அன்று.

தேவாரப் பாடல் ஒன்று, திருவாசகப் பாடல் ஒன்று, திருவிசைப்பா ஒன்று, திருப்பல்லாண்டு ஒன்று, பெரிய புராணத்திலிருந்து ஒன்று ஆக ஐந்து பாடல்களைப் பாடி முடிப்பதே பஞ்சபுராணம் பாடுவதாகும்.

மூவர் தேவாரம் ஏழு திருமுறைகள் ஏறத்தாழ 8000 பாடல்கள் கொண்ட தேவாரத்துக்கும் ஒரு பாடல், 656 பாடல்கள் கொண்ட திருவாசகத்துக்கும் ஒரு பாடல், 301 பாடல்களைக் கொண்ட திருவிசைப் பாவுக்கும் ஒரு பாடல், பதினெட்டே பாடல்களைக் கொண்ட திருப் பல்லாண்டிற்கும் ஒரு பாடல், 4286 பாடல்களைக் கொண்ட பெரிய புராணத்திற்கும் ஒரு பாடல் என்ற கணக்கு எப்படி உள்ளது! ஒன்பதாம் திருமுறைக்கு மட்டும் இரண்டு பாடல்களாகி விடுகிறது. பஞ்சபுராணம் பாடுவதில் ஒன்பதாம் திருமுறை அதிகப் பிரதிநிதித்துவம் பெறுகிறது. இது இத்திருமுறைக்குரிய ஒரு தனிச்சிறப்பு. பல்லாண்டை விட்டுவிட்டுத் திருவிசைப்பா மட்டும் பாடினால் நிறைவுபெறாது. சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டு ஒன்பதாம் திருமுறையின் இறுதிப் பகுதியாக அமைந் துள்ளது. சிவபெருமானுக்கு வேறு யாரும் திருப்பல்லாண்டு பாடவில்லை. பாடியவர் ஒருவரே ஒருவர். பாடியதும் ஒரே ஒரு பதிகம். அது பஞ்சபுராணம் ஐந்தில் ஒன்றாக இன்றியமையா இடம்பெற்றுவிட்டது.

திருவிசைப்பாப் பாடல் ஒன்றையும் திருப்பல்லாண்டிலிருந்து ஒரு பாடலையும் ஈண்டெடுத்துக் காட்டி இக்கட்டுரையை நிறைவு செய்வோம். இரண்டும் மணியான பாடல்கள்.

ஒளிவளர் விளக்கே, உலப்பிலா ஒன்றே,
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே,
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே,
சித்தத்துள் தித்திக்கும் தேனே,
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே,
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

- திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா

ஆரார் வந்தார் அமரர் குழாத்தில்,
அணியுடை ஆதிரைநாள்
நாராயணனொடு, நான்முகன், அங்கி,
இரவியும், இந்திரனும்,
தேரார் வீதியில் தேவர் குழாங்கள்
திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும்
பல்லாண்டு கூறுதுமே.

- சேந்தனார் திருப்பல்லாண்டு

திருவிசைப்பாவைப் பற்றிய சிறந்த ஆராய்ச்சி நூல், முழுமையான ஆராய்ச்சி நூல் அறிஞர் திருச்சிற்றம்பலம் மு. அருணாசலம் அவர்களது "ஒன்பதாம் திருமுறை - திருவிசைப்பா, திருப்பல்லாண்டு - பாவும் பயின்ற நிலையும்" என்ற நூலாகும். சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆற்றப்பெற்ற சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவான அது பல்கலைக்கழகத்தால் வெளியிடப் பெற்றுள்ளது (1974). ஒன்பதாம் திருமுறை ஆர்வலர்கள் ஆய்வாளர்கள் இந்நூலைப் படிப்பது இன்றியமையாததாகும்.

"திருமுறை ஆய்வு மாநாடுகளை காசியம்பதியில் தொடர்ந்து நடத்தி வரும் திருப்பனந்தாள் காசித் திருமடத்திற்கும் பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக்கட்டளைக்கும் பல்லாண்டு! பல்லாண்டு!!

# 17. திருமூலரும் வள்ளலாரும்

தவத்திரு. ஊரன் அடிகளார், வடலூர்.

**வள்ளலாரின் வழிகாட்டி நூல்கள்**

"தோத்திரத்துக்குத் திருவாசகம், சாத்திரத்திற்குத் திருமந்திரம்" என்றொரு பழமொழி உண்டு. இப்பழமொழியை வள்ளலார் தமது உபதேச மொன்றிற் குறிப்பிடுகிறார். இப்பழமொழியை உண்டாக்கியவர், முதன் முதலிற் கூறியவர், வள்ளலாராகவே இருக்கலாம். வள்ளலாருக்குமுன் இப்பழமொழி வழக்கிலிருந்ததா? யாராவது குறிப்பிட்டுள்ளார்களா? ஏட்டில் வந்துள்ளதா? அச்சில் வந்துள்ளதா? என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

தமிழ் நூற்பரப்பை நன்குணர்ந்த வள்ளலார் தமக்கு வழிகாட்டி நூல்களாகத் திருக்குறள் திருமந்திரம் திருவாசகம் ஆகிய மூன்று நூல்களையும் தேர்ந்தெடுத்துக் கொண்டார்.

அறத்துக்கு(நீதிக்கு)த் திருக்குறள்.
சாத்திரத்துக்குத் திருமந்திரம்.
தோத்திரத்துக்குத் திருவாசகம்.

என்று தேர்வு செய்து கொண்டார். திருக்குறள், திருமந்திரம், திருவாசகம் ஆகிய மூன்றும் வள்ளலாருக்குப் பிரதான நூல்கள், பிரமாண நூல்கள்.

**வள்ளலார் கண்ட பிரஸ்தானத் திரயங்கள்**

இம்மூன்றையும் வள்ளலார் கண்ட பிரஸ்தானத் திரயங்கள் என்று யாம் சொல்லுவதுண்டு. உபநிடதங்கள், பிரம்மசூத்திரம், பகவத்கீதை ஆகிய மூன்றும் வேதாந்த உலகில் பிரஸ்தானத் திரயங்கள் என வழங்கும்.

வள்ளலாருக்கு உபநிடதம் திருக்குறள்.
வள்ளலாருக்குப் பிரம்மசூத்திரம் திருமந்திரம்.
வள்ளலாருக்குப் பகவத்கீதை திருவாசகம்.

வள்ளலாரின் தேர்வு எப்பேர்ப்பட்ட தேர்வு. தமது சமரச சுத்த சன்மார்க்கத் திற்குப் பிரமாண நூலாகத் திருமந்திரத்தை வள்ளலார் கூறுகிறார். "இந்த மார்க்கத்தின் உண்மை தெரிய வேண்டுமாகில் திருமந்திரத்தைக் கவனித்தல் விளங்கும்" என்று வள்ளற்பெருமான் உபதேசித்திருக்கிறார். வள்ளலாரின்

சமரச சுத்த சன்மார்க்கத்திற்கு மூலமும் முதலும் கருவும் ஆகிய நுண் பொருள்கள் திருக்குறள் திருமந்திரம் திருவாசகம் ஆகிய மூன்றிலும் உண்டு.

பொதுமக்களுக்காக முதன்முதலில் திருக்குறள் வகுப்பு நடத்தச் செய்தவர் வள்ளலார். முழு முழுக் குறட்பாக்களாகத் திருக்குறளை வள்ளலார் தமது திருவருட்பாவில் எடுத்தாண்டிருக்கிறார். திருவாசகம் வள்ளலாரின் வழிபடு நூல்.

**வள்ளலாருக்கு இறைவன் திருமந்திரத்தால் உணர்த்துதல்**

திருமந்திரம் வள்ளலாருக்கு இறைவனால் உபதேசிக்கப்பெற்ற நூல். திருமந்திரத்திலிருந்து சில நுண்மையான உண்மைகளை இறைவன் வள்ளலாருக்கு உணர்த்தியிருக்கிறான்.

திருவளர் திருஅம் பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந்திரத்திரு முறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று
காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவிஎன் உளத்தே நம்பிநான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும் - 3527

இத்திருவருட்பாப் பாடலில் ''திருமந்திரத் திருமுறையால் உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்'' என்ற தொடரைக் காண்க.

**ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்ற முதல் முழக்கம் திருமூலரால் செய்யப்பெற்றது. திருமந்திர நூலுக்குள்ளேயே முடங்கிக் கிடந்த, இம்முதல் முழக்கத்தை, சைவருள்ளும் கற்ற சிலரே அறிந்திருந்த இம்முதல் முழக்கத்தை, மேடைதோறும் எடுத்து முழங்கத் தொடங்கியவர் அறிஞர் அண்ணாதுரை. ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்ற ஒரு வரி அனேகமாக அனைவருக்கும் தெரிந்ததாகிவிட்டது. இதற்கு அடுத்த அடி, இரண்டாவது அடி என்ன என்றால் ஒருவருக்கும் தெரியாது. சைவ அறிஞர் சிலரே பாடல் முழுவதையும் அறிந்திருப்பர். ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்பது அண்ணாவின் பொன்மொழி என்று இன்றைய இளைஞர் உலகம் எண்ணுமளவுக்கு ஆகிவிட்டது. அண்ணா ''நோட்ஸ்'' போட்டார். திருமூலர் பாடப்புத்தகம் (டெக்ஸ்புக்) எழுதினார். நோட்ஸ் போட்டவரை எல்லாருக்கும் தெரியும். ''டெக்ஸ்புக்'' எழுதியவரைப் பண்டிதரே அறிவர்.

**படமாடு கோயிலும் நடமாடும் கோயிலும்**

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்பது போன்ற முத்திரைப் பாடல்கள் திருமந்திரத்தில் இன்னும் சில உண்டு. "அன்பே சிவம்" என்பது அப்படிப்பட்டது. "படமாடுங்கோயில், நடமாடுங்கோயில்" என்பது அப்படிப்பட்டது.

படமாடக் கோயில் பகவற் கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடக் கோயில் பகவற்க தாமே - 1857

'படமாடக் கோயில்', 'நடமாடக் கோயில்' என்பதற்குப் 'படமாடுங்கோயில்', 'நடமாடுங்கோயில்' என்ற பாடபேதங்கள் திருப்பனந்தாள் பதிப்பில் அடிக்குறிப்பாகக் காட்டப்பெற்றுள்ளன. படமாட நடமாட என்பதிலும் படமாடும் நடமாடும் என்பதே எளிதில் விளங்கக்கூடியது. நிரம்பப் படித்தவர்களை நடமாடும் பல்கலைக்கழகம் என்று கூறுவது இன்று வழக்கமாகிவிட்டதன்றோ!

படமாடும் கோயில் என்பது இறைவன் எழுந்தருளி விளங்கும் கற்கோயில். படம் - சித்திரப்படம்; கொடியில் எழுதியுள்ள படம். நடமாடும் கோயில் - யாத்திரை செய்யும் சிவனடியார்கள். படமாடுங் கோயிலுக்குக் கொடுப்பது நடமாடுங் கோயிலுக்குச் சென்று சேராது. நடமாடுங் கோயிலுக்குக் கொடுத்தால் அது படமாடுங் கோயிலுக்கும் போய்ச் சேரும். ஆண்டவனுக்குக் கொடுப்பது அடியார்களுக்குச் சென்று சேராது. அடியார் களுக்குக் கொடுப்பது அவ்அடியார்கள் மூலம் ஆண்டவனுக்கும் சென்று சேரும். மனிதநேயம் பெரிதாகப் பேசப்படும் இக்காலத்தில் திருமூலரின் இந்த அடியார் நேயம் அறிந்து போற்றத்தக்கது. "யாவர்க்குமாம் உண்ணும் போது ஒருகைப்பிடி" (258) என்ற மந்திரம் இன்றைய பிடி அரிசித் திட்டத்திற்கு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகாலத்திற்கு முன்னோடி.

**அன்பே சிவம்**

"அன்பே சிவம்" என்பதும் அப்படி ஒரு முத்திரைப் பாடல்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே - 270

இதை அடியொற்றி வள்ளலார் பாடியுள்ள ஒரு திருவட்பாப் பாடல் பின்வருமாறு

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே

அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் ளமைந்தபேர் ஒளியே
அன்புரு வாம்பர சிவமே - 3269

அன்பே சிவம் என்பதுதான் சைவம். அதுதான் வள்ளலாரின் சமரச சன்மார்க்கமும்.

### ஆறு அந்தங்களும் நான்கு மார்க்கங்களும்

தத்துவ உலகில் ஆறு வகையான முடிவுகளை நம் பெரியோர்கள் கண்டனர். அவை ஆறந்தம் எனப்படும். வடமொழியில் ஷடாந்தம். ஷட் - ஆறு. அந்தம் - முடிவு. (1) கலாந்தம், (2) நாதாந்தம், (3) யோகாந்தம், (4) போதாந்தம் (5) வேதாந்தம், (6) சித்தாந்தம் என்பனவே ஆறு அந்தங்கள். இவ் ஆறு அந்தங்களையும் முதன்முதலிற் கூறும் தமிழ்நூல் திருமூலரின் திருமந்திரமே.

தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நான்கு மார்க்கங்கள் சைவத்தில் உண்டு. இந்நான்கையும் சரியை கிரியை யோகம் ஞானம் என்றும் சொல்வதுண்டு இந்நான்காலும் அடையப்பெறும் முத்திகள் சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என நான்காகும்.

| மார்க்கம் 4 | சாதனம் (பாதம்)4 | முத்தி 4 |
|---|---|---|
| தாசமார்க்கம் | சரியை | சாலோகம் |
| சற்புத்திரமார்க்கம் | கிரியை | சாமீபம் |
| சகமார்க்கம் | யோகம் | சாரூபம் |
| சன்மார்க்கம் | ஞானம் | சாயுச்சியம் |

இவற்றையெல்லாம் முதன்முதலிற் கூறும் தமிழ்நூல் திருமந்திரமே. திருமந்திரத்தில் 4+4+4 இப்பன்னிரண்டும் பன்னிரண்டு அதிகாரங்களில் மிக அழகாகக் கூறப்பெறுகின்றன. பின்னாளில் சிவஞான சித்தியார் இப்பன்னிரண்டையும் விரித்துக் கூறுவதாயிற்று.

வள்ளலார் இவற்றையெல்லாம் அடிப்படையாக் கொண்டுதான், தமது சடாந்த சமரச சுத்த சன்மார்க்க நெறியைக் கட்டமைக்கிறார்.

முற்காலத்தில் வேதாந்திகளுக்கும் சித்தாந்திகளுக்கும் இடையே வாக்குவாதங்களும், ஒருவருக்கொருவர் மறுப்புகளும் மிகுந்திருந்தன. திருமூலரே முதன்முதலில் வேதாந்த சித்தாந்த சமரசம் பேசியவர். பின்னே, தாயுமானவர் வேதாந்த சித்தாந்த சமரசம் பேசினார். வள்ளலார் சடாந்த சமரசம் பேசினார்.

**உடம்பின் அருமை**

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே. - 724

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான் என்று
உடம்பினை யான்இருந் தோம்புகின் றேனே - 725

என்ற திருமந்திரங்கள் உடம்பின் அருமையை, முக்கியத்துவத்தைக் கூறும் மந்திரங்கள். "சுவரை வைத்துத்தான் சித்திரத்தை எழுத வேண்டும்" என்பது ஒரு பழமொழி. அதுபோல உடம்பை வைத்துத்தான் முத்தி சித்திகளைப் பெறவேண்டும். இப்பேருண்மையைக் காட்டுவதுதான் மேற்கண்ட திருமந்திரங்கள். உடம்பையும் உயிரையும் "உடம்பார்" "உயிரார்" என்று "ஆர்" விகுதி கொடுத்து அழகாகத் திருமூலர் கூறியிருப்பது தமிழ்தென்றல் திரு.வி.க.வின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது போலும். நம் நாட்டவர்கள் காலையும் மாலையும் காப்பி சாப்பிடுவது வேண்டாத ஒன்று என்று கூறப்புகுந்த திரு.வி.க. "கள்ளார் அண்ணனார் காப்பியார் தம்பியார்" என்று சொன்னார். கள்ளார் காப்பியார் என்றது, உடம்பார் உயிரார் என்ற திருமந்திரத்தின் தாக்கமன்றோ!

**திருமந்திர நூலின் தனிச்சிறப்பு**

திருமந்திர நூலின் அமைப்பே ஒரு தனிவகையான, தனிச்சிறப்பான அமைப்பு. நூலின் பெயரே திருமந்திரம். நூலில் பகுதிகளுக்குப் பெயர் தந்திரங்கள். முதல் தந்திரம் இரண்டாம் தந்திரம் மூன்றாம் தந்திரம் எனத் தொடர்ந்து ஒன்பது தந்திரங்கள். நூல் 3000 பாடல்கள் (செய்யுள்கள்). ஒவ்வொன்றும் ஒரு மந்திரம். திருமந்திரம் 9 தந்திரங்களையும் 3000 மந்திரங்களையும் கொண்ட நூல். ஒன்பது தந்திரங்களில், நான்காம் தந்திரத்தின் பெரும்பகுதி சக்கரங்களைக் கூறுவது. திருவம்பலச் சக்கரம் முதலாகப் பல்வேறு சக்கரங்கள் கூறப்பெறுகின்றன. சக்கரங்களைப் பற்றிய ஆராய்ச்சி பெரிய ஆராய்ச்சி. அதற்கு இங்கே இடம் போதாது. சக்கரங் களுக்கு யந்திரங்கள் என்றும் ஒரு பெயருண்டு. மந்திரம் தந்திரம் யந்திரம் என்று ஒரு மும்மை தத்துவ உலகில் உண்டு. "மந்திரமும் தந்திரமும் ஆனார் தரமே" என்பது தேவாரம். "மந்திர தந்திர யந்திர பாதா" என்பது வள்ளலார் திருவருட்பா. "மணி, மந்திரம், மருந்து" என்று ஒரு மும்மை திருமுறை நூல்களிற் கூறப்பெறும். வள்ளலாரும் கூறுவர். யந்திரம் திருமந்திரத்தின் தனிச்சிறப்புகளில் ஒன்று.

தமிழிலுள்ள ஒரே மந்திர சாத்திரம் திருமந்திரம்.

திருமந்திரத்திற்கு முன்னும் பின்னும் அதைப்போன்ற ஒருநூல் தோன்றவில்லை.

திருமந்திரம் வேறு எதனோடும் ஒப்பிட இயலாத ஒரு தனிவகை நூல்.

வேறு எதனாலும் அறியப் பெறாத செய்திகள் திருமந்திரத்தில் உள.

தமிழ்த் தத்துவ உலகில் திருமந்திரம் முதல் நூல். முழுத் தமிழ் முதல் நூல்.

இதற்கு ஒப்பாக வேறு எதனையும் சொல்லுவதற்கில்லை.

பின்வந்த சாத்திர நூல்களுக்கெல்லாம் முன்னோடியானது திருமந்திரமே.

**திருமூலர் மரபு : திருமூலர் - மௌனகுரு - தாயுமானவர் - வள்ளலார்**

திருமூலர் சைவ சித்தாந்தியாக மட்டுமன்றிச் சித்தர் கூட்டத்திலும் ஒருவராகத் திகழ்கிறார்.

திருமூலரைத் தவராசயோகி என்றும் யோகியருள் அவர் சக்கர வர்த்தி என்றும் தாயுமானவர் போற்றுகிறார்.

"சக்கரவர்த்தி தவராச யோகிஎனும்
மிக்கதிருமூலன் அருள்மேவுநாள் எந்நாளோ"

என்பது தாயுமானவர் பாடல் (எந்நாட் கண்ணி).

தாயுமானவரின் குரு திருமூலர் மரபில் வரும் மௌனகுரு ஆவார். திருச்சிராப்பள்ளி மலைமீது அவரது மடம் இன்றும் உள்ளது. மௌன மடம் என்று பெயர்.

"மந்த்ரகுருவே யோகதந்த்ர குருவே மூலன்
மரபில் வரு மௌனகுருவே"

என்று தாயுமானவர் தம் குருவைப் பாராட்டிப் பாடுகின்றார். மந்திரமும் தந்திரமும் வல்லவர் திருமூலர். அவரது மரபில் வரும் மௌனகுரு, மந்திரகுரு, தந்திரகுரு, மௌனகுரு நூல் எதுவும் செய்யவில்லை.

திருமூலர், அவர் மரபில் வரும் மௌனகுரு, மௌனகுருவின் சீடர் தாயுமானவர் ஆகிய மூவருமே வேதாந்த சித்தாந்த சமரசவாதிகள்.

வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன

நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே - 2397

என்று, வேதாந்த சித்தாந்த பேதம் காணாதவர், வேதாந்த சித்தாந்த சமரசம் கண்டவர் திருமூலர்.

''வேதாந்த சித்தாந்த சமரச நிர்வாக நிலை'', வேதாந்த சித்தாந்த சமரச சிவானுபூதி, ''வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை வகுத்த வித்தகச் சித்தர்கனமே'' என்றெல்லாம் தாயுமானவர் பாடுகிறார்.

வள்ளலார் ஷடாந்த சமரசம் காண்கிறார். திருமந்திரம், தாயுமானவர் பாடல், திருவருட்பா இம்மூன்றையும் நன்கு ஆராய்ந்தால், திருமூலர் - மௌனகுரு - தாயுமானவர் - வள்ளலார் என்ற ஒரு மரபுண்மை தெரிகிறது.

தாயுமானவர் விட்ட இடத்தில் தொடுவது போன்று வள்ளலார் பேசுகிறார். தாயுமானவரே மறுபிறப்பில் வள்ளலாராக வந்தார் என்ற கருத்தும் உண்டு.

திருமூலரும் தாயுமானவரும் யோக சித்தர்கள். வள்ளலார் ஞான சித்தர். இம்மூவரும் தமிழ்த் தத்துவஞான உலகில் தனிச்சிறப்புப் பெற்ற மும்மூர்த்திகள். இவர்களைக் கற்றலும் கற்றவழி ஒழுகலும் தமிழ்மக்கள் கடனாம்.

(மேலும் விரிவாக அறிய வேண்டுவோர் "திருமூலரும் வள்ளலாரும்'' என்ற எமது நூலிற் காண்க.)

# 18. திருமந்திரத்தில் மந்திரக் குறிப்புகள்

முனைவர் கடவூர் மணிமாறன், கரூர்.

மந்திரம் என்பது தொல்காப்பியம் கூறும் எழுவகைச் செய்யுள்களுள் ஒன்று. ஆதலின் இதன் தொன்மையும் தமிழ்த் தோற்றமும் பரந்த வழக்கும் புலனாகும். மந்திரம் என்பதன் பொருளை

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப (1422)

என்னும் நூற்பாவால் தொல்காப்பியம் விரித்துரைக்கின்றது. மந்திரத்தை மொழிவார் நிறைமொழி மாந்தர் எனத் தகுதி சுட்டுவது எண்ணத்தக்கது. இதனை ஒட்டியே திருவள்ளுவரும் நிறைமொழி மாந்தர் பெருமை எனக் கூறலாயினர். பண்டைக் காலத்து மந்திரம் எழுதாக் கிளவியாக இருந்தது. வழி வழி குரு, மாணாக்கன் முறையில் கற்பிக்கப் பெற்று வந்தது. மந்திரத்தை வாய்மொழி என்றும் தொல்காப்பியம் சுட்டுகின்றது. அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பொருளைத் தரும் தப்பாத மொழி மந்திரம் என்பர் பரிமேலழகர்.

நினைப்பவரைக் காப்பதே மந்திரம் எனப் பொருள் கூறுவர். தொல்காப்பியரும் திருவள்ளுவரும் 'மறைமொழி' என்று இதனைக் குறிக்கின்றனர். மறை என்னும் சொல் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்தல் என்ற பொருளோடு இடையூறு நீக்கிக் காத்தல் என்ற பொருளையும் தரும். இதற்கு 'மறைக்குவன் பெரும' என்ற (புறம் 290) தொடரும், 'குற்றம் மறைப்பான் உடம்பு' (குறள் 1029) என்று தொடரும் சான்றுகளாம். பேராசிரியர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் மந்திரத்தின் தன்மையை எழுதாமல் இவற்றை 'வல்லார் வாய்க் கேட்டுணர்க' என ஒருமுகமாகக் கூறியிருப்பதால் மந்திரத்தின் மேன்மை அறியப் பெறும்.

தமிழ்க் காப்பியங்களில் மந்திரம் பற்றிய குறிப்புகளும், அவற்றின் வியத்தகு பயன்களும் ஆங்காங்கு இடம்பெற்றுள்ளன. கோவலன் பாய்கலைப் பாவை மந்திரம் அறிந்தவன் எனச் சிலப்பதிகாரமும், மணிமேகலை மூன்று மந்திரங்களை அறிந்தவள் என்று மணிமேகலைக் காப்பியமும் கூறுகின்றன. தொல்காப்பியத்துக்கு முன்னரே எழுதாக்கிளவி யாகவும், வாய்மொழி இலக்கியமாகவும் இருந்த தமிழ் மந்திரத்தை முதலில் கலிவிருத்தத்தால் எழுதித் தமிழ் உலகுக்கு நிலையாக வழங்கிய அருளாளர் திருமூலரே ஆவர்.

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே**

என்னும் திருமந்திரத்தால் இவ்வுண்மையை அறியலாம். கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் திருமூலர், திருமந்திரங்களைச் செய்யுள் வடிவில் எழுதியமையாலேயே இடைக்காலத்தில் தோத்திர, சாத்திர நூல்கள் பல்வேறு வளம் பெற்றன என்ற இலக்கிய வரலாற்றை உணரவேண்டும்.

**மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்**
**மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்**
**மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்**
**மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றுமே** **(திருமந்திரம். 3046)**

என்னும் திருமந்திரப் பாடலால் திருமூலர் 3000,300,30 என்று மூன்று நூல்கள் செய்தார் எனவும், அவை எண்ணிக்கையில் மூன்றாயினும் பொருளால் ஒன்றெனவும் அறியலாம்.

திருமந்திரம் முந்நூறு என்னும் நூல் தந்திரக்கலை, மந்திரக்கலை, உபதேசக்கலை என்ற முப்பிரிவில் தந்திரக் கலையைச் சார்ந்தது. இதை வழிபாட்டுக்குரிய ஆன்மங்களையும் நான்கு நெறிகளுள் சரியை, கிரியை என்ற இரண்டையும் கூறுவது தந்திரக் கலையாகும். இக்கலை மந்திரம், இயந்திரம், தந்திரம் என மூவகைப்படும். 372 செய்யுட்களும் மூன்று தந்திரங்களும் (உட்பிரிவு) உடையது.

**எண் வகை வினையேவல்**

வசிப்பு வினை, மயக்க வினை, கட்டுவினை, போக்கு வினை, அழைப்பு வினை, பகைப்புவினை, மாற்று வினை, கொல்லுதல் வினை என அட்டகன்மம் எனப்படும் எட்டு வகை வினையேவல்களையும் அவற்றிற்குரிய சக்கரங்களை வரையும் முறையினையும் துருவ அறைகளையும் தெய்வங்களையும், நாள்கோள்களையும் எழுத்துகள் உடலில் உறுப்புகளாகப் பொருந்தியிருக்கும் முறையினையும் விரிவாக விளம்புகின்றன.

**அகராம் திருமுடி ஆகாரம் நெற்றி**
**இகராம் வலக்கண் ஈகாரம் இடக்கண்**
**உகாரம் வலச்செவி ஊகாரம் வாமம்**
**ருகாரம் வலமூக்கு ரூகாரம் வாமமே!**

என்பது 51-ஆம் திருமந்திரம், 51 எழுத்துகள் உறுப்புகளில் இடம் பெற்றிருக்கும் முறையைக் கூறத்தொடங்கும் திருமந்திரச் செய்யுளின் எண்ணும் 51-ஆக இருப்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் தந்திரம் 63-332 செய்யுட்களைக் கொண்டது. இதில் எட்டு ஏவல் வினையின் 45 வகைகளும், 323 விரிவுகளும் அவற்றின் இலக்க எண்களும் இயந்திரம் வரைதற்குரிய பொருள்களும் பொது மந்திரங்களும் சிறப்பு மந்திரங்களும் விரிவாக இடம்பெற்றுள்ளன.

மூன்றாம் தந்திரம் 333-373 செய்யுள்கள் உடையது. எட்டுவகைக் கன்மங்கட்கு உரிய இறைவியின் மேனி நிறங்களும் தியானத்துக்கு உரிய சிவபெருமானின் திருவுருவமும் எட்டுச் சக்திகளின் தியானத் திருஉருவங்களும் அவர்களின் செயல்களும் இறைவி இறைவனின் சக்கரத் தன்மைகளும் இயந்திரங்களைத் தியானிக்கும் முறைகளும் பூசைப் பொருள்களும் இயந்திரத்தைச் சுற்றிப் பிணிக்கும் நூலிழைகளின் எண்ணிக்கையும் முத்து அளிக்கும் மந்திரத்தின் பயனும் வகுத்துரைக்கப் பெற்றுள்ளன.

**மந்திரம்**

அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வச் சொற்களின் பொருண்மை யாண்டும் என்றும் குறைவின்றி நின்று அவ்வப் பயன்களை அவ்வப்பொழுதே பயக்கத்தக்க சொல்லாற்றலையுடைய தோலாநாவின் மேலோராகி அறிவர் தம் ஆணையினாலே கிளக்கப்பட்டுச் சொல் விளங்கிப் பொருள் புறத்தார்க்கு எளிதில் புலனாகாமல் அரிதில் உணருமாறு மறைத்துக் கூறப்படும் சொற்றொடரால் இயன்ற செய்யுள் என்பதே மந்திரமாம்.

மந்திரம் என்பது நினைப்பவனைக் காப்பது எனப் பொருள்படும். மந் - நினைத்தல், திரம் - காத்தல், இறைவனுக்குரிய வடிவம் மூன்று. அவை தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என்பன. அவற்றுள் தூல வடிவம் - மந்திர வடிவமாகும். சூக்கும வடிவம் - உயிருக்கு உயிரா யிருத்தல். அதிசூக்கும வடிவம் - உண்மை அறிவானந்தமயமான சிற்சத்தி வடிவமாகும். இம்மூன்றனுள் முன்னைய இரண்டும் இறைவனுக் குரிய தடத்த இலக்கணம் எனப்படும் பொது இயல்பாகும். பின்னையது சொரூப இலக்கணம் எனப்படும் சிறப்பியல்பாம்.

பொதுவாக மூல மந்திரம், பீசமந்திரம், பஞ்ச மந்திரம், சடங்க மந்திரம் உள்ளிட்ட 71 மந்திரங்களும் இன்ன பிறவும் உள்ளதெனக் கூறுவர். அன்றியும் உலகில் உள்ள இயங்கு திணையும் நிலைத் திணையுமான சராசரிப் பொருள்கள் அனைத்திற்கும் அவற்றை அதிட்டித்து நின்று இயக்கும் அதிதேவதை மந்திரங்கள் உள்ளன என்றும் மந்திரங்களால் அதிட்டிக்கப்படாத பொருள்கள் ஒன்றும் இல்லை என்றும் சர்வ ஞானோத்தரத்திலும் பிற ஆகமங்களிலும் கூறப்பெற்றுள்ளன.

இவ்வாறு பலதிறத்தினவாயும் எண்ணிறந்தனவாயும் உள்ள மந்திரங்கள் யாவும் ஏழு கோடி மந்திரங்களில் அடங்கும். இதனை வடநூலார் சப்தகோடி மகா மந்திரம் என்பர். ஏழுவகையான முடிபினை உடைய மந்திரமே ஏழுகோடி மந்திரமாய் (கோடி - முடிவு) அவையாவன : நம, சுவதா, சுவாகா, வௌஷடு, வஷடு, உம், படு என்பனவாம். இவை ஏழுகோடியான எண்களைக் கொண்ட மந்திரங்கள் என்றும் அவை இன்னவென்றும் சில வடநூல்களில் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது. மந்திரம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது ஈண்டு உபதேசிக்கப்படும் மகாமந்திரமாகிய ஸ்ரீ வித்தையேயாகும். இதனை லலிதா சகஸ்ரநாமம் என்பர்.

### மந்திரான்மா

சுரர், நரர், விலங்கு, பறவை, தாவரம் எல்லாவற்றிற்கும் அதிதெய்வ மந்திரங்கள் உள. தாவர சங்கமங்களுள் மந்திரங்களால் அதிட்டிக்கப் படாத உயிர்கள் இல்லை. மந்திரங்களை உச்சரிக்கும் முறைமை இவ்வாறு என மந்திரங்களின் இயல்பும் அவ்வம்மந்திரங்களைக் கணிப்புழி ஆன்மாப் படிகம் போல அவ்வம்மந்திர மயமேயாய் மந்திரான்மா நிற்குமாறு சிவஞான பாடியம் குறிப்பிடுகின்றது. பறவை, விலங்கு, மரம் முதலியவற்றிற்கெல்லாம் அதிதெய்வ மந்திரம் உள என்பதூஉம் மந்திரங்களைக் கணிப்போன் படிகம் போல மந்திர சொரூபியா வான் என்பதூஉம் சிவஞான போதத்தில் கூறப்பெற்றுள்ளது.

### மந்திரத்தின் பெருமை

மந்திரத்தின் பெருமையாவராலும் அறியவொண்ணாது. மூலநாதத்தைச் செபித்துப் பிரமன் விஷ்ணுவாதிகளும் பஞ்சகிருத்தியமும் பூமியில் எத்தனை காலமிருக்கவும் பரகாயப் பிரவேசமாகவும் நீரில் முழுகியிருக்கவும் மண்ணிலே புதைந்திருக்கவும் நினைத்த இடத்திற்கு போகவும், உயித்தியம் வெல்லவும், தேவலோகங்களிலே போகவும், காமரூவு கொள்ளவும் இப்படிப்பேராற்றல் உண்டாகவும் கொல்ல, பிழைப்பிக்கச் சாபானு கிரக சாமர்த்தியங்களும் இப்படிச் செய்விக்கிறது மந்திரம் ஆதலின் மந்திரமே பிரமம் என்பர். இம்மந்திரங்களை விதிப்படி செபித்துத் தேவத்துவம் அடைவதை முத்திநிலை என்பர்.

**மந்திரத்தால் அழைத்திடவே வானவரும் வந்திடுவர்**
**மந்திரத்தால் வசிகரனை முதல்வலிகள் வந்தெய்தம்**
**மந்திரத்தால் ஆக்கியளித் தமிழ்த்திடலும் ஆக்கியிடும்**
**மந்திரத்தின் வலியவர்காண் வானவரும் மானவர்தாம்**

என்று தத்துவ நிசாநு போக சாரம் குறிப்பிடுகின்றது.

**மந்திரமும் இயந்திரமும்**

மந்திரம், தந்திரம் என்பன இரண்டும் சேர்த்துச் சொல்லப்படுதல் பெரு வழக்காதல் போன்று மந்திரம், இயந்திரம் ஆகிய இவை இரண்டும் இணைத்துக் கூறப்படுதலும் பெரு வழக்காகும். மந்திரம் உயிரைப் போன்றது. இயந்திரம் உயிர்வளியைப் போன்றது. உருவம் உடம்பைப் போன்றது. இயந்திரம் எனினும் சக்கரம் எனினும் ஒக்கும்.

**மந்திரமும் தேவும் மருந்தும் குருவருளும்**
**தந்திரமும் ஞானந் தருமுறையும் - யந்திரமும்**
**மெய்யென்னில் மெய்யாய் விளங்குமே மேதினியின்**
**பொய் யென்னிற் பொய்யாகிப் போம்**

என்று நீதி வெண்பா எடுத்தியம்புகிறது.

**திருமந்திரயாப்பு**

திருமூலர் திருமந்திர யாப்புகள் யாவும் ஒரே வகையில் அமைந்தன. அவை பெரும்பாலும் 12 எழுத்தானியன்ற நாற்சீராலான முதல் மூன்று அடிகளை உடையனவாயும், நான்காம் அடி நேர் முதலாயின் ஒன்று குறைந்து 11 எழுத்துகள் உடையனவாயும் நிரை முதலாயின் ஒன்றுகூடி 12 எழுத்துகளை உடையனவாயும் நிற்கும்.

**திருச்சிற்றம்பலம்**

தில்லைப் பெருங்கோயிலில் கூத்தப்பெருமான் வீற்றிருக்கும் இடமாகிய அம்பலம் ஆகும். இது பிரணவப் பொருள் என்றும் ஓங்கார சொரூபம் என்றும், சுத்தமயா சொரூபம் என்றும் பராசக்தி சொரூபம் என்றும் பரஞான சொரூபம் என்றும் சொல்லும் பொருளுமாயுள்ள உலகுகள் யாவும் தோன்றி நின்று ஒடுங்குதற்கு இடமாயுள்ளதென்றும் முத்தான்மாக்களின் உறைவிடம் என்றும் இவ்வுலகிற்கு நடுவிடம் என்றும் இறைவன் இடையறாமல் ஆடம் புரியும் உள்ளக்கமலம் என்றும் யோகஞான தியானஸ்தானம் என்றும் கூறப்படும். திருச்சிற்றம்பலம் என்பது ஒப்புயர்வில்லாத சிறந்த செந்தமிழ் தெய்வத் திருமந்திரம் ஆகும். சைவத் திருமுறைகளாகிய தமிழ் மறைமந்திரங்களை ஓதுங்கால் அவற்றின் முதலிலும் முடிவிலும் பிரணவ ஓங்கார மூலமந்திரப் பொருளாயுள்ள திருச்சிற்றம்பலம் என்னும் இம்மூலமந்திரத்தை முதலில் ஓதியே தொடங்குதலும் முடித்தலும் தொன்றுதொட்டே வரும் தொல்லாணை நல்லாசிரியரின் மரபாம்.

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம்பலம் என்று தேர்ந்துகொண்டேனே (2770)

என்னும் பாடலில் திருச்சிற்றம்பலப் பெருமையைத் திருமூலர் குறிப்பிடுகின்றார்.

மந்திரம் ஆவது மாமருந்து ஆவதும் தந்திம் ஆவதும் தானங்கள் ஆவதும் சுந்தரம் ஆவதும் தூநெறி ஆவதும் எந்தை பிரானின் இணை யடிகளே என்பதில் உறுதியான கருத்தைக் கொண்டவர் திருமூலர். ஒருவன் தன் தாயின் கூடா ஒழுக்கத்தை எங்ஙனம் வெளிப்படுத்தாமல் மறைத்து வைத்திருப்பானோ அங்கனமே இந்த ஸ்ரீவித்தையையும் வெளிப்படுத்தாமல் பெரிதும் மறைவாகப் போற்றி வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆகமங்களில் கூறுப்பட்டுள்ளது என்பர்.

மன ஒருமையுடன் மந்திரங்களைக் கூறும் பொழுது அதற்கேற்ற பயன் உண்டாகும் என்னும் கருத்தை அந்நாளில் கொண்டிருந்தனர் என்பதைத் திருமந்திரப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. உலகியல் அறிவும், சித்தாந்த, சாத்திரங்களில் தோய்ந்த ஈடுபாடும் முதிர்ந்த புலமைச் செறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற திருமூலர், அவர் காலத்திய புலவர்களும் அவருக்குப் பின்னால் வந்த அறிஞர்களும் போற்றிப் பாராட்டும் பெருந்திறம் வாய்ந்தவராகத் திகழ்கின்றார். திருமந்திரத்தில் உள்ள மந்திரக் குறிப்புகள் படிப்பார்க்குப் பெரும் வியப்பை அளிப்பனவாய் விதந்துரைக்கப் பெற்றுள்ளன.

# 19. திருமூலரின் திருக்கூத்துத் தரிசனம்

திரு. கந்தசாமி, மதுரை.

பன்னிரு திருமுறையின் வரிசையில் பத்தாம் திருமுறை என்ற இடத்தில் விளங்கும் திருமூலரின் திருமந்திரம் மூவாயிரம் பாடல்களைக் கொண்டது. இத் திருமந்திரம் ஒன்பது ஆகமங்களை ஒன்பது தந்திரமாகக் கொண்டுள்ளது. சுந்தரர் என்பதே திருமூலரின் மூலப்பெயர். தாய் தந்தையாரால் வழங்கப் பெற்றப் பெயர். அகத்தியரின் மாணக்கராய்த் தென் தமிழ்ப் பொதியமலையில் தமிழ் நூல்களைக் கற்றார். வட கயிலையில் நடைபெற்ற குருகுலத்தில் நந்தியெம் பெருமானிடம் அறிவு நூல்களைக் கற்பதற்காகச் சென்றார். அறிவு நூல்களாம் வேத ஆகமங் களைக் கற்றுத் தேர்ந்து நந்தியெம் பெருமான் வழங்கிய ''நாதர்'' என்ற பட்டத்தினைப் பெற்றுச் ''சுந்தரநாதர்'' ஆனார். இவருடன் பயின்ற ஒரு சாலை மாணாக்கர்கள்.

**சனகர் சனாதனர் பதஞ்சலி சிவயோக மாமுனிவர்**
**சனந்தர் சனற்குமாரர் வியாக்ரபாதர்**

ஆகியோர் ஆவர். சுந்தர நாதர் பதஞ்சலி வியாக்பரதருடன் ஒருமுறை திருத்தில்லை வந்து திருநடன தரிசனம் கண்டு வணங்கி மீண்டும் திருக்கயிலைச் சென்றார்.

சுந்தரநாதர் அகத்தியரைக் காணும் விருப்பால் திருக்கேதாரம், பசுபதி நாதம், காசி, விந்தியமலை, திருக்காளத்தி, திருவாலாங்காடு, காஞ்சிபுரம், தில்லை ஆகிய தலங்களைத் தரிசித்துத் திருவாவடுதுறை சேர்ந்தார். ஈசனைத் தரிசித்தார். பொதியமலைக்குச் செல்ல புறப்பட்டார். காவிரிக் கரையில் சாத்தனூர் அந்தணர்களின் பசுக்கள் வினைமாள இறந்த ''மூலன்'' என்ற இடையன் உடலைச் சுற்றி நின்று அழுதன. இக்காட்சியைக் கண்ட சுந்தரநாதர் பசுக்களின் துயர் போக்க எண்ணினார்.

தன் உயிரைப் ''பிராகாமியம்'' என்ற சித்தியினால் அவ்விடையனின் உயிரில் பாய்ச்சிவிட்டுத் தன் உடலை ஓரிடத்தில் பாதுகாப்பாக வைத்தார். மூலன் உயிர் பெற்று எழுந்தான். பசுக்கள் மகிழ்ந்தன. மாலையில் வீடு சேர்ந்தன இவர் ஊர்ப் பொது மடத்தில் தங்கினார். மனைவியுடன் தொடர்பில்லை என்பதை மக்கட்குக் கூறினார். தாம் சேமித்து வைத்த

உடலைக் காணாது திருவருள் திருவாவடுதுறையில் தங்கித் தவமியற்றப் பணித்திருப்பதை அறிந்து, திருக்கோயிலின் மேற்கில் படர் அரசின் கீழிருந்து ஆண்டுக்கு ஒரு பாடல் எனத் தவம் செய்து மூவாயிரம் பாடல்களைப் பாடினார்.

சுந்தரநாதர் ஆவின் அழுத கண்ணீருக்காகத் தன்னுயிரை வழங்கி "மூலன்" வடிவில் வாழ்ந்தார். எவ்வுயிரும் தன்னுயிர் போல் எண்ணினார். எனவே தான் இறைவடிவத்தை, இறையருளை, இறைத்தலத்தை என்று அருளாளர்கள் அனைவரும் நினைந்து நினைந்து திருப்பாசுரம் பாடிய நெறியில் செல்லாது "மூலர்" தனக்கெனத் தனிநெறியில் திருப்பாசுரங் களைக் குறிப்பாக எல்லாவுயிரும் இறையுயிர் என்று எடுத்துரைத்தார். அவ்வுயிரை அவ்வுயிர் தங்கிய உடலைப் போற்றிக் காப்பது ஒவ்வொரு வரின் தலையாய கடமை என்று அறிவுறுத்தினார்.

உடம்பை வளர்த்தேனே உயிர் வளர்த்தேனே
உடம்பார் அழியின் உயிரார் அழிவர்

என்றார். போசன முறையினையும் எடுத்துரைக்கிறார்.

மிகுதியான திருத்தலங்களுக்குச் சென்றவர் அல்லர் திருமூலர். ஆனால் தில்லைக்கூத்தனின் தரிசனத்தைத் தனது திருப்பாசுரங்கள் மூலம் பாடியுள்ளார். இது ஒன்பதாம் தந்திரத்தில் இடம் பெற்றுள்ளது. திருமூலரின் திருமந்திரம் "யோக நூல்" என்றும் "நேந்திர மந்திரம்" (கண்) என்றும் கூறுவர்.

மந்திரங்கள் பதினொன்று என்று கூறும் பொழுது அவையாவன:-

**ஈசானம்**
**தத்புருஷம்**
**அகோரம்**
**வாமதேவர்**
**சக்தி யோஜாதம்**

} என்ற பிரம்ம மந்திரங்களும்

**இருதயம்**
**சிரசு**
**சிகை**
**கவசம்**
**நேத்திரம்**
**அஸ்திரம்**

} என்பன அங்கமந்திரங்களும்

உடையதாகும். இதில் பத்தாவது மந்திரமாக இருப்பது ''நேத்திரம்'' அதைப் போன்று விளங்கும் திருமந்திரமும் திருமுறையின் நேத்திர மந்திரம் என்று உரையாசிரியர்கள் விளக்கவுரை வழங்குகின்றனர். முக்கண்ணனின் மூன்றாம் கண் ''நெற்றிக்கண்''.

**ஆக்கல் (முருகவேளைப் படைத்தது)**

**அழித்தல் (மன்மதனை அழித்தது)**

என்ற வினைக்குரியது. ''இக்கண் யோக முயற்சியால் திறக்கப்படத் தக்கது என்பதும் இது பிராணாயாமப் பயிற்சியால் அடையத்தக்கது என்பதும் பன்னிரு திருமுறை விளக்கம்'' என்ற நூல்(ப.80) கூறுவது குறிப்பிடத்தக்கது.

''அருள் என்னும் அன்பீன் குழவியைக்'' கொண்ட திருமூலர் சைவ சமயத்தை மக்கட் சமயமாக மாற்றினார். மகேசன் தொண்டினை மக்கட் தொண்டாக மாற்றினார். எனவே தான் நடமாடுங் கோயிலுக்கு வழங்க வேண்டும் என்று வகுத்தார். பதினெண் சித்தர்களில் முதலிடம் பெறுபவர் திருமூலர் ஆவார். மக்களை விடுத்த சமயமும் இலக்கியமும் வாழும் தகுதியை இழந்து விடும் என்ற உண்மையை உணர்ந்த திருமூலர் போன்ற பெருமக்கள் ''மக்கள் வாயில் வழங்கும்படியான சொற்கள், தொடர்கள், வடிவங்கள் ஆகியவற்றினால் அரிய, சமய, தத்துவக் கருத்துக்களை எளிய பாடல்கள் வழி எடுத்துச் சொன்னார்கள் என்று ''தமிழர் இலக்கிய வரலாறு'' என்ற நூல் (ப.164) கூறும் வரிகள் இவண் இடம் பெற்றத் தக்கவைகளாகும்.

எங்ஙனம், எவ்வுயிரிலும் இறைவனைக் கண்டு திருஉள்ளம் நெகிழ்ந்து வாழ்ந்தாரோ அங்ஙனமே அவர் பாடிய திருமூலநூலும் பாயிரம் என்றும் ஒன்பது தந்திரங்கள் என்றும் ஏனைய திருமுறைகளின் அமைப்பினின்று வேறுபட்டு விளங்குவது இம் மந்திர நூலின் தனித்தன்மையாகும்.

பாயிரம், பொது, சிறப்பு என்ற பிரிவுகளுடன் ஐவகை வாழ்த்து களுடன் உள்ளது.

முதல் தந்திரம் - அறத்தின் இயல்பினைக் கூறுவது. பதினேழு விரிவுகளை 166 திருப்பாடல்களைக் கொண்டது.

இரண்டாம் தந்திரம் - சிவனே மெய்ப்பொருள் என்று விளக்குவது இருபத்தைந்து பிரிவுகளில் 208 திருப்பாடல்களைக் கொண்டது.

மூன்றாம் தந்திரம் - இன்பநிலையாம் இல்வாழ் தவநிலையை விளக்குவது இருபத்தொரு பிரிவுகளில் 333 பாடல்களைக் கொண்டது.

நான்காம் தந்திரம் - தன்னை இறைவனுக்கு அடிமையாக்குதல் குறித்து பதிமூன்று பிரிவுகளில் 530 திருப்பாடல்களில் அமைந்தது.

ஐந்தாம் தந்திரம் - அறம், பொருள், இன்பம் வீடு என்ற நான்கும் அறம் என்பதை இருபது பிரிவுகளில் 54 திருப் பாடல்கள் அமைந்துள்ளது.

ஆறாம் தந்திரம் - சிவ குரு தெரிசனத்தைப் பதினான்கு பகுப்பு களில் 128 திருப்பாட்டுகளில் அமைந்தது.

ஏழாம் தந்திரம் - சிவலிங்க வழிபாடு - உடம் பக்கத்து என்பதை முப்பது பகுதிகளில் 407 திருப்பாடல்களில் எடுத்துரைக்கிறது.

எட்டாம் தந்திரம் - பேற்று உறுதியினை முப்பது மூன்று பிரிவுகளில் 518 திருப்பாடல்களில் விளக்குகிறது.

ஒன்பதாந் தந்திரம் - பேற்று உறுதியால் கிடைத்தப் பெரும்பயனை இருபத்திரண்டு பிரிவில் 400 திருப்பாட்டில் எடுத்தியம்புகிறது. இதில் எட்டாவது பிரிவில் உள்ளது திருக்கூத்துத் தரிசனம் என்பதாகும்.

சைவ அடியார்கள் திருத்தலங்கள் தோறும் சென்று இறைத் திருமேனியைப் பாடிப்பரவுவார்கள். இதில் திருத்தில்லைக்குச் செல்லாத திருவடியார்கள் இல்லை எனலாம். திருமூலரும் எங்ஙனம் இதினின்று விலகுவார். திருமூலர் திருக்கயிலை, திருத்தில்லை என்ற இரு திருத்தலங்களில் விரும்பி வாழ்ந்தவர் என்பதால் தில்லைக் கூத்தனின் தரிசனத்தை ஏறத்தாழ 84 திருப்பாடல்களைப் பாடிப் பணிகிறார். பிறக்க முக்தி தரும் தலம் திருவாரூர். நினைக்க முக்தி தரும் தலம் தில்லை இறக்க முக்தி தரும் தலம் வாரணாசி (காசி) ஆகும்.

ஐம்பெரும் சபைகள், இறைவனது திருக்கூத்தினைக் கண்ட பெருமைக்குரியவை.

**பொற்சபை - தில்லை**

**சிற்சபை - கூடல்**

**இரத்தினசபை - ஆலங்காடு**

**தாமிரசபை - நெல்லை**

**சித்திரசபை - குற்றாலம்**

இறைவனது திருக்கூத்துத் தரிசனத்தின் வழி திருமூலர் கூறும் கருத்தியல்களாவன

1. தில்லை 'நடுநாடி' என்ற விளக்கம்
2. தில்லைக்கூத்தில் உள்ள ஐம்பெரும் கூத்துக்கள்
3. இறைவனின் பிரமாண்டம்
4. இறையடியாரின் மெய்ப்பாடு
5. இறைப் பேறும் இறை இன்பம்

என்பவைகளாகும்.

**தில்லை - நடுநாடி**

திருமூலர், உலகமெல்லாம் சிவனின் திருக்கூத்து என்றும் எல்லாத் தலமும் சிதம்பரம் என்றும் திருக்கூத்துத் தரிசனப்பாடலின் (2674. பக். 1102) குறிப்பிடுகின்றார்.

"எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்கும் சிவமாயிருத்தலால் எங்கெங்குந்
தங்குங் சிவனருள் தன் விளையாட்டதே"

என்பதே அப்பாடல்.

இத்திருத்தில்லை தென்னாட்டுச் சிவ பூமியாகும். இது சிறப்பு நோக்குமுறை என்றால், பொது நோக்கு முறையில் இலங்கைக்கும் பொதியமலைக்கும் நடுவின் கண் உள்ளது தில்லை. இலங்கைக் கோட்டுடன் தில்லைச் சிற்றம்பலக் கோடும் பொருந்தி உள்ளமையால், பொதியில் மலைக்கு ஊடாகச் செல்லும் நடுநாடியில் அமைந்துள்ளது என்று புவியியல் வல்லுநர் எனத் திருமூலர் விளக்குகிறார். (பாடல் 2710... பக். 1115)

"பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடையில் கலை யொண்சுழுனையாம்
பாதிமதியோன் பயில் திரு வம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையின் நீறன்றே" (பாடல். 2702)

எனவே "பூமி நடுரேகை (equtor) அயனரேகைகள் (tropic of cancer and tropic of capricorn) இவற்றைக்கு இடைநிலையே மூன்றாம் பிறையை அணிந்த சிவபெருமான் ஆகும். எல்லைகளாகும் என்று இம்மந்திரம் குறிக்கின்றது." (மேலது பக்.1117) என்ற குறிப்பு இவண் கவனிக்கத்தக்கது.

உடம்பின் உயிர்நாடி போன்று திருத்தலங்களின் நடுநாடியாக விளங்கும் திருத்தில்லையின் புவியியல் அமைப்பினை உணர்ந்து உணர்த்தியுள்ளத் தனித்துவம் திருமூலரிடம் மட்டுமே காணப்பெறும் தன்மையாகும்.

**ஐம்பெரும் கூத்துக்கள்**

தன் கூத்துத் திறத்தாலே இவ்வுலகைப் பாலிடத்த வந்த திருக்கூத்தன் ஐம்பெரும் கூத்துக்களை அறிவு, ஆற்றல், அன்பு இவற்றின் கூடுதல் என்ற முறைமையால் திருநடனம் செய்விப்பது நுண்மாண் நுழை புலம்மிக்கத்திருக் காட்சிகளாகும்.

"சிற்பரச் சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பத மாம் அந்தச் சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தினை யாரறிவார் அன்றே"

என்ற திருமந்திரப் பாடல் வழி,

1. சிவானந்தக் கூத்து - அறிவு
2. சுந்தரக் கூத்து - ஆற்றல்
3. பொற்பாதக் கூத்து - அன்பு
4. போற்தில்லைக் கூத்து - ஆற்றல் கூடுதல்
5. அற்புதக் கூத்து - அறிவு கூடுதல்

என்பதை உணரும் காலத்து இக்கூத்துக்களின் தரிசன மேன்மையினை அறியலாம்.

**இறைவனின் பிரமாண்டம்**

இத்தகு ஆனந்தக் கூத்து உகந்தானுக்கும் அவன் படைத்த அண்டங்கள் அனைத்திற்கும் ஆனந்தம் கிடைக்கப்பெரும் என்பதோடு அனைத்து அண்டங்களையும் ஆண்டு உயிர்களைத் தன் திருவடிக் கண் வேற ஒன்றித்து நிற்கும் 'பிரமாண்டம்' என்னும் பேருலகமும் அருளால் கிடைக்கப் பெறும் என்பதும் திருமூலரின் திருவாக்கு ஆகும். (பாடல். 2682)

இப்பிரமாண்ட நாயகன் கொடுகொட்டி, பாண்டம், கோடு, சங்காரம், நடம் எட்டு, ஐந்து, ஆறு என்று பல்வேறு கூத்துக்களை நிகழ்த்தினாலும் உறுதியின் விழைவு பொருந்த எழுந்த தெய்வத்தன்மை வாய்ந்த தில்லை வனக்காட்டில் ஆடிய கூத்து உலக நிகழ்வாம் அன்பியற் கூத்தாகும். மற்றொரு கூத்து திருவாலவனத்தில் திருவடி நிகழ்வாக நிகழ்த்திய அருளியற் கூத்தாகும். இவை இன்பியல் கூத்து என்று உரையாசிரி யர்கள் குறிப்பிடுகின்றனர். (ப.1108)

**இறையடியார்களின் மெய்ப்பாடு**

தேன்மொழி பாகன் திருநடனத்தைக் காணும் அடியாரின் வகைப் பாட்டினைத் திருமூலர் வழி விளக்குதல் பொருத்தமுடைத்து.

"அடியார் அரனடி ஆனந்தங் கண்டோர்
அடியார் அவர் ஆவர் அவ்வருள் உற்றோர்
அடியார் பலரே அடியவர் மால்
அடியார் பொன்னம் பலத்து ஆடல் கண்டாரே" (பாடல் 2694)

எனவே இறைவனின்

| | | |
|---|---|---|
| திருவடியின்பத்தைக் கண்டோர் | - | மெய்யடியார் |
| திருவருளைப் பெற்றோர் | - | அருளடியார் |
| சிவகுருவின் அருளால் நுகர்பவர் | - | திருவடியார் |
| திருக்கூத்தினைக் கண்டவர் | - | சிவனடியார் |

என்ற விளக்கத்தினை அறிய முடிகின்றது. மேலும் இவ்விறைவனின் திருக்கூத்தினைக் காணப்பெறாத காலத்து அச்சந் தோன்றும். தானே எழுந்துவிடும் - பின்னும் மெய்சோரும் என்கிறார் திருமூலர்.

திருக்கூத்தினைக் காணுங்காலத்து - திரும்பலக்கூத்தனின் பொற் பாதத்திற்கு அன்பு வைப்பவர்களுக்கு உயிர்ப்புப் புலனாக துன்பம் கெடும் என்று திருமந்திரம் எடுத்துரைக்கின்றது.

**இறைப்பேறாம் இறையின்பம்**

தில்லைக் கூத்தன் திருநடனம் செய்யுங்காலத்து அவனது திருமேனியிலுள்ள அனைத்தும் ஆடின என்கிறார் திருமூலர்,

"அதிபரன் ஆட அங்கைக் கனலாட
ஓதுந் சடையாட உன்மத்த முற்றாடப்
பாதி மதியாப் பாரண்ட மீதாட
நாத மோடு ஆடினான் நாதாந்த நட்டமே" (பாடல். 2705)

மேலும் இறைவனின் திருக்கூத்துடன் கோல்வளையாளும் ஆட கோதிலா ஆனந்தம், கோதிலா ஞானம் கைவரப்பெறும் என்பதையும் திருவாக்கால் அறியமுடிகின்றது. பற்றுக்குப் பற்றாய் உள்ள பரமனின் இடம் திருச்சிற்றம்பலம், அவனது ஒளிவிடு மந்திரமாம் 'சிவயசிவ' 'சிவசிவ" என்பதை நெற்றிக்கு நேரே புருவத்து இடைவெளியில் உற்றுஉற்றுப் பார்க்க அறிதற்கு இயலும் என்றும் (பாடல். 2724) அற்புதத் திருக்கூத்துப்பாடலால் உணரமுடியும்.

மானுட உயிர்கள் பத்தி என்னும் விதையால் அன்பு என்னும் நீரைப்பாய்ச்சி சித்தி என்னும் வயிராக்கியத்தால் நாணல்களை நீக்கிக் காத்தல் என்ற சிவபோகப் பயிரைக் கைக்கூடிடத் திருவடிப் பேறு பெறலாகும் என்ற மந்திர நெறியினை,

"பத்தி விதையிற் பயிரொன்று நாணத்தைச்
சித்தி தரு வயிராக்கத்தாற் செய்தறத்து

உய்த்த சமாதி சிவனாந்த முண்டிடச்
சித்தி திகழ் முத்தியானந்தற் சித்தியே" (பாடல். 2758)

என்ற திருபாசுரத்தால் அறியலாம்.

"மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திர்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றாமே".

என்னும் கருத்தால் மூலன் உரைசெய்த ஒவ்வொரு தமிழ் சொல்லும் மானுட இனத்திற்கு வழிகாட்டியப் பேறுமிக்கது. சித்தம் அழகியராகத் திருக்காட்சி அளித்தத் திருக்கூத்தனின் திருநடனத்தில் தரிசனம் பெற்றத் திருமூலர் தனித்துவம் மிக்க சித்த நாயனார் ஆவார். இவர்,

1. பசுவின் பொருட்டுத் தன் உயிரையே கொடையாக வழங்கிய அருளாளர்.
2. உடம்பு, உயிர் இரண்டன் உயர்வினை உணர்த்தியவர்.
3. உடம்பின் ஓம்பலை அறிவுறுத்திய அறிஞர்.
4. எண் கணிதக் கலையில் புலமை மிக்கவர். எண்ணும் எழுத்தும் இவர் தம் எழுத்து தோறும் இடம்பெற்றன.
5. சித்தாந்தக் கருத்துக்களை நடப்பியல் வழி விளக்கியவர்.
6. அறிவியலின் நுண்மைகளை அணுக்கமாகச் சிந்தித்தவர். சான்று - கரு உற்பத்தி. அண்டம் போன்றவை
7. மூர்த்தி, தீர்த்தம் என்று பாடாது தலத்தில் திருத்தில்லையை மட்டுமே பாடியுள்ளார்.
8. தன்னை இறைவன் நன்றாகப் படைத்ததன் காரணம் தான் நன்றாகத் தமிழ்ச் செய்தல் வேண்டி என்று தன் பிறப்பின் காரணத்தைக் கூறியவர்.

திருமூலரின் வாழ்த்துப்பாடல் எல்லோராலும் பாடவேண்டிய திருப்பாசுரமாகும்.

"வாழ்கவே வாழ்க என் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான் பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ் ஞானத் தவன் தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே"

திருச்சிற்றம்பலம்

# 20. திருமூலர் வரலாறு

புலவர் முத்து. கந்தசாமி, வேலம்பாளையம்.

'திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' என்று உரையாசிரியராகிய பேராசிரியர் திருக்கோவையாருக்கு உரை எழுதி உள்ளார். எனவே இலக்குமி, செல்வம், சிறப்பு, அழகு, ஒளி, தெய்வத் தன்மை என இவ்வாறு பல பொருள்தரும் சொல்லானாலும் 'தெய்வத் தன்மை வாய்ந்த' என்பது இங்கே பொருந்துவதாகக் கூறலாம்.

பிறந்த நட்சத்திரங்களின் பெயரைச் சூட்டிக்கொள்ளும் மரபு இன்றும் இருந்து வருகிறது. பரணியில் பிறந்தவர் பரணர் என்றும், உத்திரத்தில் பிறந்தவர் உருத்திரனார் என்றும் பெயர் கொண்டனர். மூலத்தில் தோன்றிய வர்களே மாமூலர். ஆவூர் மூலங்கிழார், ஐயூர், மூலங்கிழார், மூலங்கீரனார் முதலானோர் திருமூலரும் இவ்வகையில் பெயர் பெற்றிருக்கலாம்.

ஆனால் பெரிய புராணத்தின் மூலம் கிடைக்கின்ற செய்தியால் கயிலாயத்திலிருந்து வந்த சிவயோகியார் ஒருவர் திருவாவடுதுறையில் மூலன் என்னும் உயிர் இழந்த இடையனது உடலில் புகுந்தார் என்பதை அறிகிறோம். எனவே இப்பெயர் இவருக்கு உரிய பெயரன்று என்பது தெளிவாகிறது.

'நந்தி அருளாலே மூலனை நாடினேர்ம்' - 130 திருமந்திரம்; என வரும் சான்று கொண்டு இக்கருத்தினைச் சரியே எனக்கொள்வர். அந்தந்தக் காலத்தில் அந்தந்த இடத்திலே இருப்பவர்கள் தரும் பெயரோடு விளங்கி வருவத்தை இன்றும் காணலாம். திருக்கயிலை மரபில் வந்தவர் எனப் பொருள் கொள்வதே பொருந்தும்.

கிடைக்கின்ற சான்றுகளைக் கொண்டு ஆராயின் இவர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தவராய் இருத்தல் கூடும் என்பது புலனாகிறது.

புராண இதிகாசக் கதைகளைக் கொண்ட இலக்கியங்களின் குறிப்பு களைக் கொண்டு ஆராயின் இவரது காலம் மிகத் தொன்மையானது என்னும் எண்ணத்தைத் தரும்.

# 21. சேந்தனார் வாழ்வும் வாக்கும்

முனைவர் கமலா முருகன், சென்னை.

திருமாளிகைத் தேவர் முதற்கொண்டு சேதிராயர் ஈறாக உள்ள அருளாளர்கள் ஒன்பதின்மரும் ''தாம் பெற்ற பேரின்பம் இவ்வுலகம் பெற்று உய்வடையும் வண்ணம்'' பாடித் தந்த 29 பதிகங்களில் 28 திருப்பதிகங்களைத் திருவிசைப்பா என்றும், சேந்தனார் பாடித்தந்த பல்லாண்டிசையினைத் திருப்பல்லாண்டு என்றும் வழங்குகின்றது பக்தி உலகம். பன்னிரு திருமுறைகளில் மேற்சொன்ன இரண்டினையும் ஒன்பதாம் திருமுறைகளாக வைத்துப் போற்றுகின்றனர் சைவ உலகினர். இதன் காலம் கி.பி. 9.10.11-ஆம் நூற்றாண்டுகளாகும்.

**சேந்தனார் - அறிமுகம்**

ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியைச் சேர்ந்தவர். திருவெண்காட்டின் அருகில் உள்ள நாங்கூர் என்றத் தலத்தில் பிறந்தவர். இவர் இறை யருளைப் பெற்ற நிகழ்வுகள் அற்புதங்களாகவே நினைந்து போற்றத் தக்கவையாகும். அவ்வருளின் துணைகொண்டு திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி, தில்லை ஆகிய தலங்களுக்குச் சென்று அங்குள்ள இறைவனைத் தரிசித்துப் பாடல்களைப் பாடியுள்ளார்.

**சேந்தனார் செய்த அற்புதங்கள்**

இவர்தம் வாழ்வின் அற்புதங்களான நிகழ்வுகள் உள்ளன. இறைவனுக்கு நாம் பால் அமுது, தேன் அமுது, அன்னமுது, கனியமுது, வெல்லமுது, என்றவகையான உணவுகளைப் படைத்து வழிப்பட்டோம் என்று சொன்னால் தவிட்டினையே ஒரு சூழலில் அமுதாகப்படைத்து வழிப்பட்டார். நடராஜ பெருமானுக்கு இறைவனும் அதனை விரும்பி ஏற்றுக்கொண்டுள்ளார்.

மற்றொரு நிகழ்வு இவர் தில்லையில் தன் குடும்பத்துடன் விறகு விற்று வாழும் வாழ்க்கை நடத்தி வந்த காலத்திலும் தினமும் சிவனடியார் ஒருவர்க்கு அமுது படைக்கும் வழக்கம் கொண்டவர். ஒருநாள் மழையின் காரணமாக குறைந்த பணமே கிடைத்தது. எனவே அதன்மூலம் வாங்கிய மாவினைக் கொண்டு களியமுது செய்து, அன்று வந்த அடியார்க்கு வழங்கினார். அன்று வந்த அவ்வடியார் உண்டு எஞ்சியதைக் கந்தையில் முடிந்தும் சென்றார். அதே நாளில் தம் சிவ பூசையின் போது சிலம் பொலி கேட்டு மகிழ்வதனை வழக்கமாகக் கொண்டிருந்த மன்னவன் அன்று

சிலம்பொலி கேட்காமல் வருந்தினான். அன்று இரவு அவன் கனவில் தோன்றி இறைவன் சேந்தன் அளித்த களியமுது பற்றிக் கூறுகிறார்.

உடன் அம்மன்னன் தில்லையையும், கூத்தனையும், சேந்தனையும் காணவேண்டும் என்று விரும்பி பொன்னம்பலம் சென்றபோது அங்கேக் களியமுது சிந்தியிருந்தது. இறைவன் மகிழ்ந்து வந்து சேந்தன் தந்த எளிய உணவினை ஏற்ற நிகழ்வு ''நாகரீகம் தெரிந்தவர்கள் நஞ்சினையேக் கொடுத்தாலும் விரும்பி உண்பார்கள்'' என்ற வள்ளுவரின் வாக்கினை உலகியலார்க்கு உணர்த்தும் உண்மைநிகழ்வாக சேந்தனாரின் வாழ்வு அமைந்துள்ளது. மேலும் மிகுந்த உயர்ந்த அன்புடையார் தாமே இறைவனேத் தேடிவந்தடைவான் என்பது உணர்த்தப்படுகின்றது. மேலும் இந்நிகழ்வினை ஒட்டியே இன்றும் மார்கழிவிழாவில் ''திருவாதிரைக் களி'' படைத்து வழிபடுகின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்க நிகழ்வாகும்.

மற்றுமொரு நிகழ்வாக தில்லையால் மார்கழியால் நடைபெறும் திருவாதிரைத் திருவிழாவில் ஓடாமல் மண்ணில் அழுத்தி நின்றிருந்த தேரினை திருப்பல்லாண்டு பாடித் தம்முடைய தவ வலிமையினால் தானே ஓடி நிலையினை அடைந்திடச் செய்த பெருமையும் இவருக்கு உண்டு என்பதனையும் வரலாறு பேசுகின்றது. அந்நிகழ்வின் அடையாளமாக இன்று சிதம்பரத்தில் தேர்திருவிழாவின் போது திருத்தேர்க்கு முன்னே இத்திருப் பல்லாண்டு ஓதப்பெறுகின்றது. அவ்வாறே சேந்தனாரின் வாக்கும் மற்றவர் வாழ்வில் உய்வுடைவதற்கான வழிகாட்டி நிற்கின்றது.

**பிறவிநீத்தல்**

உயர்ந்த பிறவியான மனிதப் பிறவியின் நோக்கம் ஆறறிவினைக் கொண்டு சிந்தித்து பிறவிகளைக் களைந்து கடந்து வாழும் நிலையே ஆகும்.

**''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவனடி சேரா தார்''**

என்ற வள்ளுவரின் வாக்கினை ஒட்டி சேந்தனார் தம் பாடலில்

**''அன்னநடை மடவாள் உமைகோன்**
**பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்த**
**அடியோமுக் கருள் புரிந்து**
**பித்தற்குப் பல்லாண்டு கூறுவதுமே''**

என்று செய்தியின் மூலம் இறைவனைப் பணிந்தால் பிறவி அறுத்திடலாம் என்பதனை உணர்த்துகின்றார்.

**வினைகளையும் வழி**

பிறவியை அறுத்திட வேண்டும் என்று விரும்பினால் முதலில் தம் வினைகளைக் களைந்தால்தான் அது முடியும். வினை களைய என்ன செய்வது? சேந்தனார்,

"ஏகநாயகனை இமையவர்க்கு அரசை
எதிரிலாப் போக நாயகனை வீழிமிழலையில்
வீற்றிருக்கும் வீழிநாயகனை வணங்கிடக்
கொடிய வினைகள் நம்மை அணுகமாட்டா"

என்று திருவீழிமிழலையில் கோலத்தில் காட்சிதரும் இறைவனை வணங்குவது ஒன்றையே வழியாகக் கூறுகின்றார்.

### தம்மை தகுதி படைத்தவராக்குதல்

இறைவனை வணங்குதல் என்பதும், அவனது அருளை அடைதல் என்பதும், அதன்மூலம் தம்முடைய வினையைக் களைந்து பிறவியை அறுத்தல் என்பதும் மிகவும் எளிய செயல் அன்று. எத்தகைய செயலுக்கும், அடைய நினைக்கும் ஆசைக்கும் நாம் தகுதி உடையவர்களா? என்பதனை முதலில் உணரவேண்டும். அப்படி இல்லையென்றால் அதற்குரிய தகுதியை வளர்த்துக்கொள்ளவேண்டும். இதனை உணர்ந்த சேந்தனார்.

"வேடலங் காரக் கோலத்தி னமுதைத்
திருவீழி மிழலையூ ராஜங்
கேடிலாங் கீழ்த்திக் கணககற் பகத்தைக்
கெழு முதற் செவ்விடத்தானே!"

என்று பாடுவதன் மூலம் "இறைவன் தன்னை ஆட்கொள்ள எனக்கு என்ன தகுதி உள்ளது? என்று கேட்டுக் கொள்வதன் மூலம் நம்மையும் தகுதி உடையவர்களாக மாற வேண்டும் என்பதனை வலியுறுத்துகின்றார்.

### பொய் மனத்தவரை விலக்கிடுதல்

இறைவனை வணங்கி அருள்பெற்று உய்யும் நிலையினை மட்டுமின்றி இறைவனை வணங்காதவர்களின் தன்மையும், அவரிடம் நாம் பழக வேண்டிய முறைகளையும் பட்டியலிட்டு,

**இறைநிலையை உணராதவர்கள் பொய்மை நிலை உடையவர்கள் அவர்கள் வாழ்வை உணராத அறிவற்றவர்கள் வஞ்சகர்கள் அவர்கள் அடியவர்களாக மாறத் தகுதியற்ற கர்வம் படைத்தவர்கள். அவர்கள், அருகிலும் நாம் செல்லக் கூடாது, என்பதனை**

"சில்லாண்டிற் சிறையும் சிவதேவர்
சிறுநெறி சேராமே"

என்று விளக்குகின்ற உண்மையை நாமும் உணர்ந்தால் நலம் விளையும்.

### திருப்பல்லாண்டும் பயனும்

"வாழ்ந்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்த சென்னியும் தந்த தலைவன்" என்றுப் பாடுகின்றபோது மனிதனாகப் படைக்கப்படுவதன்

நோக்கமும் உறுப்புகளின் பயன்பாடும் பட்டியலிட விரும்பியபோது "வாய் பேச" என்றோ "வாய் உண்பதற்கு" என்றோ கூறாமல் வாழ்த்து வதற்குத் தான் என்று கூறியதன் அவசியம் உணர்ந்தே சேந்தனாரின் திருப்பல்லாண்டு அமைந்துள்ளது. வாழ்த்தல் என்பது ஒரு நல்ல நிகழ்வு என்றாலும் இங்கு இறைவனையே வாழ்த்துவது என்பது சிறப்பு. பிறவியில் உயர்ந்த பிறவியைத் தந்த தலைவனை வாழ்த்தல் எளிமையான ஏழையேன் தன்னை ஆட்கொண்டவனை வாழ்த்தல் என்பதாக "திருப்பல்லாண்டு" அமைந்திருந்தாலும் அதன்மூலம் உலகம் உணர வேண்டிய உண்மையும் உ...ளது.

"வாழ்த்தல்" என்பது நம்முடைய நல்ல எண்ணங்களால் செய்ய வேண்டிய ஒன்று. எனவே அப்போது நம்மிடம் இருந்து பரவிய எண்ண அலைகளில் உள்ள எண்ணங்கள் கேட்டவரை அத்தன்மையை அடைந்திடச் செய்திடும் அது மீண்டும் மீண்டும் பரவி உலகம் முழுவதும் பரவும். எனவே அனைவரும் நல்ல எண்ணங்களுடன் மற்றவர்களை வாழ்த்திட முன்வருகின்ற போது உலகம் முழுவதும் நன்மை அடையும் என்பது அறிவியல் உண்மை. இதனை உணர்ந்து மற்றவர்க்கு உணர்த்திடவே சேந்தனார் "பல்லாண்டு" பாடியுள்ளார் என்பதில் ஐயமில்லை.

சேர்ந்தனாரின் அற்புதங்கள் நிறைந்த வாழ்வு நமக்கு உணர்த்தியது உண்மை அன்பிற்கு இறைவனே அடிமையாக நின்று அருள் செய்வான் என்பதனை அறியமுடிந்தது. அவ்வாறே அவருடைய வாக்காக அமைந்த "வாழ்த்தல்" மரபு அலைவடிவாக உலகத்தவர் அனைவரும் செயல்படுத்த ஆரம்பித்தால் உலகம் முழுவதும் அமைதியும் அன்பும் தவழ்ந்திடும். அத்தகைய நல்ல நிலைக்கு வழிகாட்டிய சேந்தனாரின் வாழ்வினையும் வாக்கினையும் நாமும் என்றும் வாழ்த்துவோமாக!

# 22. திருமந்திரம் - பன்முகப் பார்வை

முனைவர் கே. கலாரமணி, திருச்சிராப்பள்ளி.

சித்தர்கள் மண்ணாகிப் போகும் தேகத்தை கைலாய தேகமாக மாற்றுதல் என்பதுதான் வாத நிலைகளின் குறிப்புப் பொருளாகும். வாதம் செய்ய உதவும் பொருள்களே உடலில் ஏற்படும் நோய்களையும் போக்க உதவுவதால் வாதத்திற்கு உதவாதது வைத்தியத்திற்கு உதவும் என்ற பழமொழியும் எழுந்திருக்கலாம்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராக அறியப் பெறுபவர் திருமூலவர். "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பதுதான் இவரது வேத வாக்கு. மக்களை நடமாடுங்கோயில் என்றும் இறைவன் வாழும் ஆலயம் என்றும் குறிப்பிடுவர். திருமந்திரம் மக்கள் சேவையே மகேசன் சேவை என்று குறிப்பிடுகின்றது. மக்களுக்குத் தொண்டு செய்வது இறைவனுக்குத் தொண்டு செய்வதாகும் என்ற உயர்ந்த பண்பினை உணர்த்துகிறது.

**சிவசக்தி**

சிவசக்தி விளையாட்டால் சூரியன் இயக்கத்தில் மாறுபாடு ஏற்படுகிறது. இதனடிப்படையில்தான் பருவ காலங்கள் தோன்றுகின்றன. மூன்று தொழில் களையும் உலகில் சிவசக்தி கூட்டாக செய்து வருகிறது. இக் கருத்தை,

**"ஓராய மேஉல கேழும் படைப்பதும்**
**ஓராய மேஉல கேழும் அளிப்பதும்**
**ஓராய மேஉல கேழும் துடைப்பதும்**
**ஓராய மேஉல கோடுயிர் தானே"** **(திருமந். 407)**

எனும் பாடல் உணர்த்துகின்றது.

அன்பு செய்வார் உள்ளம், கோயிலாகக் கொண்டு எழுந்தருளியுள்ள அந்தப் பரம்பொருளே அன்பு செய்பவர்களுக்கு வரும் துன்பத்தைப் போக்கி அருளுவான் என்பதை,

**"அன்பின் உள்ளான் புறத்தான் உடலாயுள்ளான்**
**முன்பின் உள்ளான் முனிவர்க்கும் பிரான் அவன்**
**அன்பின் உள்ளாகி அமரும் அரும்பொருள்**
**அன்பின் உள்ளோர்க்கே அணை துணையாமே"**

என்ற பாடலடிகள் வெளிப்படுத்துகின்றது.

அருவ வழிபாட்டின் மூலம் முக்தி எய்த முடியும் என்பதை,

"கட்டக் கழற் கன்று நீர் நான்று வீழாமல்
அட்டத்தைக் கட்டி அடுப்பை அணை கோலி
விட்டத்தைப் பூட்டி வெறும்பாழைத் தாழ் கோத்து
நட்டம் இருக்க நமன் இல்லை தானே" - (திருமந். 792)

என்று திருமந்திரம் நிரூபிக்கின்றது.

நிலையற்ற வாழ்க்கையில், நிலையான இன்பம் பெற அறம் செய்ய வேண்டும் என்பதை,

"ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம் அறியாரே"

என இப்பாடலில் திருமூலர் குறிப்பிடுகிறார்.

சிவாகமங்களில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று நால்வகை நெறிகள் கூறப்படுகின்றன. இந்நால்வகை நெறிகளும் உடலையும், மனத்தையும் ஒன்று சேர்த்து நெறிப்படுத்த முனையும் முயற்சியைக் குறிப்பனவாகும். இந்நெறியில் நின்று அவன் அருளால் மண்ணுலக வாழ்வும், விண்ணுலக வாழ்வும் கிடைக்கும். இதனை,

"புண்ணியம் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவராவதும் வானவராவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே" (திருமந். 1650)

என்ற பாடல் உணர்த்துகிறது.

## அன்பே சிவம்

அன்புதான் சிவம், அன்பும் சிவமும் இரண்டு என்று அறிவில்லாத வர்கள் சொல்வார்கள், இதனையே,

"அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" - (திருமந். 270)

என்று திருமூலர் இறைவனைத் தேடி எங்கும் செல்ல வேண்டாம் என்கின்றார். பக்தி என்பது இறைவழிபாடு மட்டுமன்று, மக்களுக்குச் செய்யும் தொண்டு என்பதை,

"படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஆங்கு ஆகா

நடமாடக் கேயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்
படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே"

என்பர் திருமூலர்.

செய்யும் தொழிலும் குலமும் வேறாக இருந்தாலும் நாம் வழிபடும் இறைவன் ஒன்றே என்ற கருத்தை,

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாமே" (திருமந். 2104)

இப்பாடல் உணர்த்துகிறது.

சீவனும் சிவனும் தனித்து நின்றால் சிவனை உணர்தல் இல்லை. சிவனை அறிந்த போது அங்கு சீவன் என்று ஏதும் இல்லை.

"அவனும் அவனும் அவனை யறிவார்
அவனை யறியின் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை யறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே" (- திருமந். 1789)

என்று எல்லாம் சிவம் என்கிறார்.

சிவபெருமான் கதிருக்கும் திங்களுக்கு அப்பாற்பட்டவன என்பதை,

"தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்து
ஆண்முழு தண்டமு மாகிநின் றானே"

என்கின்றார்.

**கழுமணியாறு**

சிவபெருமானின் திருவடியின்பத்தை ஆறெனக் கூறுகிறார். கழுமணியாறு எனக் குறிப்பிடுகிறார். இல்பொருள் உவமையாக கூறப் பெற்றுள்ளது. ஆற்றிக்கண் காணப்பெறும் நுனா, மாசு, தோன்றுமிடம், புகுமிடம், கரை முதலியன இல்லாதது என

"நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை எந்தை கழுமணி யாறே" - (திருமந்.106)

இவ்வாற்றின் தன்மையைச் சுட்டுகின்றார்.

பொதுவுடைமையக் கொள்க : தமிழ் மக்களின் உயரிய பரந்த மனப்பான்மைக்கு

"யான்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்
வான் பர்றி நின்ற மறைபொருள் சொல்லிடில்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றப் பற்றத் தலைப்படுந் தானே"

என காரல் மார்க்ஸின் பொதுவுடைமையைக் கொள்கையைப் பல ஆண்டுகளுக்கு முன்பே திருமூலர் கூறியிருப்பதை அறியலாம்.

**கடல் உப்பு**

கடலின் கரை ஓரிடத்தில் இறைவன் திருவடியாக உருவகப்படுத்தப் பெற்றுள்ளது. கடல் உப்பு உயிர் சிவத்துள் அடங்கும் உண்மையை உணர்ந்த உவமையாயிற்று. மதியின் வலியால் அமையும் மானுடர் வாழ்க்கைக்கும் ஓரிடத்தில் உவமையாகக் காட்டப்பெற்றுள்ளது.

''மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை
நதியின் பெருவலி நீர்வலி தானே'' (திருமந். 1992)

கடலில் அகப்பட்ட கட்டை கடலலையில் அலைவது உடலை உண்மை யென உணர்வோரின் நிலைக்கு உவமையாக கூறப்பெற்றுள்ளது.

''உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள்ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே'' (திருமந். 649)

என்பது கயல்மீன். கயல்மீன் மாறிமாறிப் பிறமுள் தன்மையை உலகம் மாறி மாறி பிறர்க்குத் தன்மைக்கு

''கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்'' (திருமந். 2869)

என இவர் காட்டும் உவமை புதிய ஒன்றாகும்.

**நெருஞ்சி**

நெருஞ்சில் உடலைக்குத்தித் துன்புறுத்தும் இயல்பை

''நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெருஞ்சில் முட்பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாயகி லாவே'' (திருமந். 1591)

எனும் பாடல், நெருஞ்சிலைத் துன்பநெறிக்கு உவமையாக இவர் சுட்டுவது புதிய செய்தியாகும்.

''இரவலர்க் கீத்தலை யாயினும் ஈயா'' - (திருமந். 2765 - 1139)

என அளவிற்கரிய தன்மைக்கு ஈயின்றலை உவமிக்கப்பட்டுள்ளமை புதியதாகும்.

**பசிப்பிணி**

பசிப்பிணி போக்கல் என்பது ஓர் உயிர் பிரிதொரு உயிர்க்குச் செய்யும் உதவி ஆகும். ஓர் உயிர் தனது உயிரிருக்கு உணர்வை வெளிக்

காட்டுவதற்கு மற்றொரு உயிரின் பசி மூலகாரணமாக அமைகிறது. பசிப்பிணி போக்கலைத் திருமூலர்.

"யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே"

என்றும்

"ஆர்க்கும் இருமின் அவரிவர் என்னன்மின்"

என்று கூறியுள்ளார்.

**பிறவிச் சுழி**

"மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போல் சுழித்துடன் வாங்கும்
கனவது போலக் கசிந்தெழும் இன்பம்
நனவது போலவும் நாடவொன் ணாதே" - (திருமந். 248)

எனும் இப்பாடல் பிறவியைச் சுழியாக உருவகப்படுத்தியுள்ளார்.

நீரில் தோன்றி நீரில் அழியும் நீர்க்குமிழி நிலையாமைக்கே உவமையாகக் கூறப்பெறுகின்றது. இவர் மட்டும் நீரில் தோன்றி நீரில் மறையும் தன்மையை,

"அழிகின்ற சாய புருடனைப் போலக்
கழிகின்ற நீரில் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே" - (திருமந். 2542)

என ஒப்பிடுகிறார். இவர் பாடல்களுள் இரு இடங்களில் 'நீரில் எழுத்து' உவமையாக வந்துள்ளன.

வளி, மேகம், மின்னல், வானவில், இசை முதலியன வானத்தில் தோன்றுகின்றன. இவற்றிற்கெல்லாம் வானம் இடம் கொடுக்கிறது. இருப்பினும் அவற்றைத் தொடாது தனித்தே நிற்கிறது. இவ்வுவமையை இறைவன் உயிர்களில் கலந்திருப்பினும் அவற்றின் வேராய் நின்று பேரொளியாய் விளங்குகிறான் எனும் தன்மையை,

"வளிமேக மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பல் திகழ்தரு லாறுபோல்
களியொளி யாறுங் கலந்துடன் வேறாய்
ஒளியுருவாகி ஒளித்துநின் றானே" (திருமந். 2719)

இப்பாடல் உணர்த்துகின்றது.

**வினைப்பயன்**

ஆறிட்ட நுண்மணலை ஆறே சுமக்கும் இதனை இவர் வினைப் பயன்களை அவரவர்களே நுகர்வர் என்பதை,

"ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை" - (திருமந். 2805)

என்றும், கடல் மணலை ஓரிடத்தில் அண்டங்கள் அளவில்லாதன என்றும் அளவிடற்கரிய எண்ணிக்கையை சுட்ட உவமையாக,

"பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகடல் ஏழின் மணல் அளவாக" - (திருமந். 2258)

என்று, மண்ணின் கரையும் இயல்பும், மணல் அளவிற்கரிய தன்மையும் இங்கு உவமையாக்கப் பெற்றுள்ளன.

உலகமான குடும்பத்தையும் ஓரிடத்தில் கடலாக உருவகப்படுத்தி யுள்ளார். பிறவியைக் கடலாக மட்டுமில்லாமல் கடலலையாகவும் உருவகப்படுத்தியுள்ளார். மீண்டும், மீண்டும் தோன்றும் அலைகள் மீண்டும் மீண்டும் தோன்றும் பிறவிக்கு ஒப்புமையானது.

**பொதுவுடைமைக் கொள்கை**

தமிழ் மக்களின் உயரிய பரந்த மனப்பான்மைக்கு,

"யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்
வான் பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடில்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றப் பற்றத் தலைப்படுந் தானே"

என "காரல் மார்க்ஸின்" பொதுவுடைமைக் கொள்கையைப் பல ஆண்டுகளுக்கு முன்பே திருமூலர் கூறியிருப்பதை அறியலாம்.

பேரின்பம் சிந்திக்கப் பெற்றவர்கள், கர்ம வினையைத் தடுத்து நிறுத்துவோர், சித்தனாம் சிவனைச் சமயச் சார்பற்று வணங்கியவர்கள், சாயுச்சிய நிலையை அடைந்தவர்கள். உலகியலில் இருந்துகொண்டு இறைவனை எண்ணி அறம் செய்வோர். இவர்கள் மதவெறிகளைக் கண்டித்தும், சாதி சமயச் சண்டைகளை ஏளனித்தும், பொருளற்ற வெறும் சடங்குகளைக் கடிந்துரைத்தும் துணிச்சல் மிக புரட்சியாளர்களாக விளங்கியவர்கள். இயற்கைப் பொருள்களில் எல்லாம் இறைவனைக் கண்டார்கள்.

# 23. திருமந்திரத்தில் புராணங்களும் தத்துவங்களும்

முனைவர் மு. களஞ்சியம்மாள், மேலகரம்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாம் திருமுறையாகப் போற்றப்படுவது திருமந்திரம். இதில் உலகியல் வாழ்க்கைக்கு இன்றி யமையாத அறங்கள் எடுத்துரைக்கப்படுவதால் அது வாழ்க்கை நூல் என்று கருதப்படுகிறது. பதி, பசு, பாசம் பற்றிப் பேசுவதால் சாந்திரநூல் என்று சாற்றப்படுகிறது. உள்ளத்தை உருகச்செய்யும் பாடல்கள் இடம் பெற்றிருப்பதால் தோத்திரநூல் என்றும் பேசப்படுகிறது. இவை தவிர இதில் புராணக் கூறுகளும் அவற்றில் பொதிந்துள்ள தத்துவங்களும் இயம்பப்படுவதால் அது தனிச்சிறப்போடு திகழ்கிறது. இம்மந்திரம் 9 தந்திரங்களாகவும், 232 அதிகாரங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் இரண்டாம் தந்திரத்தில் கூறப்பட்டுள்ள புராணச் செய்திகளும், அவற்றின் மூலம் உணர்த்தப்படும் தத்துவங்களும் குறித்த ஆய்வாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

**அகத்தியர் தென்னாடு வந்தது**

சிவனுக்கும் பார்வதி தேவிக்கும் திருமணம் நடந்தபொழுது தேவர் முதலியோர் திருமணத்தைக் காண்பதற்கு வடக்கே சென்றனர். இதனால் உலகின் வடதிசை பாரம் தாங்காமல் தாழ்ந்தது. தென்திசை உயர்ந்தது. பூமி நடுவிழுந்து நின்றது. இதனால் அச்சம் கொண்ட தேவர்கள் இறைவனிடம் தங்களைக் காக்குமாறு வேண்டினர். சிவனும்ங அவர்களின் வேண்டு கோளை ஏற்று, அகத்திய முனிவரைத் தென்னாடு சென்று பொதிய மலையில் தங்கியிருந்து பூமியைச் சமன் செய்ய வேண்டும் என்று பணித்தருளினார். இறைவனின் ஆணைப்படி அகத்தியர் தென்னாடு வந்ததால் பூமி சமன் செய்யப்பட்டது. இப்புராணக்கதையின் வழி சீவர்கள் காக்கப்படுகின்ற தத்துவக் கருத்து எடுத்துக்காட்டப்படுகிறது.

உடம்பினுள் ஆறு ஆதாரங்கள் உள்ளன என்று யோகநூல் கூறுகின்றது. அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பனவாகும். ஆக்ஞைக்கு மேலிடம் பிரமரந்திரம் எனப்படும். மூலாதாரம் என்பது குதத்திற்குப் பக்கத்திலுள்ளது. குதத்திற்கு மேலும் நாபிக்குக் கீழும் உள்ளது சுவாதிட்டானம். நாபித்தானம் என்பது மணிபூரகம். நெஞ்சு என்பது அநாகதம். கண்டம் என்பது விசுத்தி. புருவ நடு என்பது

ஆக்ஞை. சிரசின் உச்சி பிரமரந்திரம். இவை இடங்கள் எனப்படும். இவற்றைச் சக்கரங்கள் என்றும் கூறுவர்.

சக்கரங்கள் ஆறினையும் நடுநாடி என்று சுட்டப்படும் சுழுமுனை இணைக்கிறது. இது மூலதாரத்திலிருந்து தொடங்கிப் பிரமரந்திரம் வரையிலும் ஊடுருவி அதற்கப்பாலும் செல்லக்கூடியது. இதன் அடிப்பாகம் அக்னிமண்டலம் என்றும், நடுப்பாகம் சூரிய மண்டலம் என்றும், புருவ நடுவுக்கு மேற்பகுதி சந்திரமண்டலம் என்றும் குறிக்கப்படுகின்றது. மனிதனிடம் உள்ள அறிவு அக்னி சத்தி என்று கூறப்படும். அவன் அறிவு போகப் பொருளின்மீது செல்லும்பொழுது உடம்பின் கீழ்ப்பகுதிகள் உணர்ச்சி மிகுந்து காமாக்கினியை எழுப்பி, வெப்பத்தைத் தூண்டி நிற்கும். இவ்வறிவு உலகியல் வழி செல்லாத பொழுது கருவி கரணங்களின் தொழில் ஆற்றல் இழந்து, உடம்பில் அக்னியின் கூறுகெடும். அதே அக்னி ஒளிமயமாக மேலே சென்று பிரகாசிக்கும். கீழேயுள்ள சத்தி எண்ணத்தால் தூண்டப்படுவது, மேலேயுள்ள சத்தி எண்ணமற்ற அகண்ட சத்தியாகும். இதனால் ஆன்மாவின் திறன் அகன்றுவிரியும். இதனைத் திருமந்திரம் 'எண்ணமிலா அன்பு' என்று கூறுகிறது.

அகத்தியம் என்பது உடம்பில் விளங்கும் நாதமாகும். உலகில் வாழ்கின்ற சீவர்கள் சுழுமுனை மார்க்கத்தில் பொருத்தி நில்லாது உலகியல் இச்சை கொண்டு கீழ்நிலைப்பாட்டு பிராண சத்தியை இழக்கின்றனர். மூல நடுவிலுள்ள சொரூபமான நாதத்தை, கெடுகின்ற சீவர்களின் சிரசின் முன்பக்கமாகப் பொருத்திக் காக்கின்றான் அகத்தியன். அவனே அந்த நாதத்தைப் பின்புறம் உள்ள பிடரிப்பக்கம் விளங்கச் செய்கிறான். அது பரவி சிரசு எங்கும் விளங்குகின்ற வளப்பம் மிக்க ஒளியாகிறது. அகத்தியம் தென்னாடு சென்று உலகைச் சரி செய்த புராணத்தின் மூலம் அகத்தியம் என்று கூறப்படும் நாதம் சுழுவினை மார்க்கமாக மேல் நோக்கிச் சென்று புருவநடுவில் பொருத்தியிருத்தலால் சீவர்கள் காக்கப்படுவர் என்ற தத்துவம் விளக்கப்படுகிறது.

**அந்தகாசுரசங்காரம்**

அந்தகாசுரன் என்பவன் இரணியாக்ஷனின் குமாரன். இவன் பிரமனை எண்ணித் தவமிருந்து பலவரங்கள் பெற்று உலக உயிர்களைத் துன்புறுத்தி வந்தான். வானவர்கள் அக்கொடுமைகளைப் பொறுக்காமல் இறைவனிடம் முறையிட்டனர். சிவபெருமானும் வடுகக் கடவுளை ஏவினார். வடுகநாதர் சூலத்தால் அவனைக் குத்தி சிவசன்னிதானத்திற்குக் கொண்டு சென்ற போது அந்தகன் வேண்டிக் கொண்டதற்கு ஏற்ப சிவமூர்த்தி கருணை செய்து அவனுக்குப் பூதகணத் தலைமையினை அருளினார். அந்தகன் அறியாமையாகிய இருளுக்குக் குறியீடாவான். சூலன் என்பது ஞானம்.

இறைவன் ஞானமாகிய சூலம் கொண்டு அறியாமையாகிய அசுரனை அழித்தான் என்ற தத்துவம் அந்தகாசுரன் சங்காரத்தின் வழி புலப்படுகிறது.

'பதிவலியில் வீரட்டம் எட்டு' என்பது இறைவன் வீரத்தால் அட்ட இடம் எட்டு எனப்படும். அதாவது சிவன் மறக்கருணை காட்டி ஆட்கொண்ட இடங்கள் எட்டு என்பதாகும். இவற்றை 'அட்டவீரஸ்தானம்' என்பர். அவை திருவதிகை, திருக்கடவூர், திருக்கொறுக்கை, வழுவூர், திருக்கோவிலூர், திருப்பறியலூர், திருக்கண்டியூர், திருவிற்குடி. அந்தகாசுரன் சங்காரம் நிகழ்ந்தது இவற்றில் ஒன்றாகும்.

**சலந்தராசுரன் சங்காரம்**

சலந்தராசுரன் பிரமனை எண்ணித் தவஞ்செய்து பல வரங்களைப் பெற்றுத் தேவர் முதலியோரை வருத்திப் பலரையும் வெற்றி கொண்டு சிவமூர்த்தியிடம் போருக்குச் சென்றான். சிவமூர்த்தி ஒரு கிழவேதியராய் எதிர்தோன்றி ஆசிர்வதித்து எங்கு செல்கின்றாய் என்று வினவினார். கைலைக்கு யுத்தஞ் செய்யப் போவதாக அவன் பதிலுரைக்க. வேதியர் அவனைத் தடுத்து, பூமியில் ஒரு வட்டம் கிழித்து அதனுள் அமைந் துள்ள நிலத்தைப் பேர்த்தெடுக்குமாறு கூறினார். அவனும் அதற்கு உடன்பட்டு, நிலத்தைப் பேர்த்துத் தன் தலையில் இட்டான். அதுவே சக்கரமாக அவன் தலையைக் கிழித்துக் கொன்றது. இதனை,

'எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன அருமறை யோதிபாற்
பொங்குஞ் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித் தாழி செய்தானே' (பா.342)

என்ற மந்திரம் எடுத்துரைக்கிறது.

போர் செய்தல் என்பது அபானன் கீழ்நோக்கு தலைத் தடுத்து மேல் நோக்கிப் பிராணனோடு கலக்குமாறு அருளுதலாகும். விரற்குறித்து ஆழி செய்தல் என்பது சண்முகி முத்திரையைக் குறிக்கும் ஞானம் விரும்பும் சீவனுக்குக் குருவினால் காட்டியருளப்பெறும் ஒரு முத்திரையாகும்.

நீரை முகமாகவுடைய அபானையாகிய சலந்தராசுரன் கீழ்நோக்கு தலாகிய போரினைச் செய்ய, அவ்வாறு அது கீழ்நோக்காது யோக சாதனையால் மேற்சென்று கலந்து சகஸ்ரதளம் வட்டமாக விரியுமாறு சீவனுக்குப் பெருமான் அருள் புரிந்தான் என்ற தத்துவப் பொருள் இப்புராணத்தில் எடுத்துக்காட்டப்படுகிறது.

**திரிபுரசங்காரம்**

தாரகாசுரன் குமாரர்களாகிய வித்யுன்மாலி தாரகாக்ஷன், கமலாக்ஷன் மூவரும் சிவபூசை பலத்தால் இரும்பு, பொன், வெள்ளிக் கோட்டைகளைப்

பெற்று அக்கோட்டைகளுடன் பறந்து சென்று தேவர்களை வருத்தி வந்தனர். தேவர்களையும் உயிரினங்களையும் காப்பதற்காக ஆதீபுராதனாகிய சிவன் மூன்று கோட்டைகளையும் அழித்தான் என்பது புராணம். ஆனால் திருமூலர்,

**'முப்புரஞ் செற்றனண் என்பார்கள் மூடர்கள்**
**முப்புரமாவது மும்மலகாரியம்'**

என்று கூறுகின்றார்.

முப்புரம் அழித்தல் என்பது மும்மலங்களின் வலிமை அழித்தலே யாகும் என்று விளக்கம் தருகின்றார்.

**இரும்புக்கோட்டை - ஆணவ காரியம்**
**வெள்ளிக்கோட்டை - மாயா காரியம்**
**பொன்கோட்டை - வினையின் காரியம்**

எனவே திரிபுரசங்காரம் என்பது ஆணவம், கன்மம், மாயையாகிய மூன்று மலங்களை அழித்தலாகும். இவ்வுண்மையே இப்புராணத்தின் மூலம் உணர்த்தப்படும் தத்துவமாகும்.

**கயமுகாசுரன் சங்காரம்**

முத்தீ எழுப்பி முனிவர்கள் செய்த வேள்வியில் யானை ஒன்று வெளிப்பட்டது. அந்த யானையைக் கண்டு உமையவள் நடுங்கினாள். சிவன் தனது நகத்தால் யானையை உரித்துப் போர்த்தினான். இருளைக் கிழித்து ஒளியைத் தந்தருளினான்.

முத்தீ என்பது காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி என்பன வாகும். அக்னியைப் புறத்தே வளர்த்து வேள்வி செய்வதுபோல அகத்தே யுள்ள அக்னியைச் சிரசின்மேல் வளர்த்துச் செய்வதே அக்னி காரிய மாகும். கண்டமாகிய தேவர் அகண்டமாகிய சிவன் வெளிப்பட்ட போது ஒழித்து விடுவர் என்ற உண்மை கயமுகாசுரன் சங்காரத்தின் மூலம் எடுத்துரைக்கப்படுகிறது.

**எமசங்காரதத்துவம்**

திருக்கடவூர் எமசங்காரத்தின் மூலமாக, மூலாதாரத்திலிருந்து சுழுமுனை நாடி வழியாகக் கிளம்பி மேலெழுகின்ற மூர்த்தியை பிரமரந்திரமாகிய மேல் துவாரத்தில் பொருத்தி அக்னி காரியம் செய்தால் உடம்பாகிய உலகைக் கடந்து சகஸ்ரதனமாகிய ஊரில் அழியாதிருக்கலாம் என்ற தத்துவம் எடுத்தியம்பப்படுகிறது. மூலாதாரத்தில் மூண்டெழும்பும் மூர்த்தியை சுழுமுனை உச்சியில் தியானித்திருப்போர்க்கு இறப்பு இல்லை என்று அறிவுறுத்துகிறார் திருமூலர்.

### தக்கன் வேள்வியின் தத்துவம்

தக்கன் சிவபெருமானை எண்ணிப் பார்க்காமல் தானே ஒரு வேள்வியை நடத்தத் துணிந்தான். அதனால் சிவன் வெகுண்டான். தக்கன் நினைத்தபடி அவ்யாகம் வெற்றிபெறாமல் காரியச் சிதைவு ஏற்பட்டது. தக்கன் மேற்கொண்ட வேள்வி என்பது ஆண் பெண் கூட்டுற வினைக் குறிக்கும். அதற்குச் சிவனது அருள் கிடைக்கவில்லையென்றால் விந்து செயம் பெறமுடியாது என்ற தத்துவம் இந்நிகழ்வினால் சுட்டிக் காட்டப்படுகிறது.

### இராவணன் கைலைமலையைப் பெயர்த்தெடுத்த தத்துவம்

இராவணன் பத்துத் தலைகளும் இருபது கைகளும் உடையவன் என்று இராமாயணம் கூறுகிறது. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சாரியம், டம்பம், தர்ப்பம், ஞானேந்திரியம், கன்னேந்திரியம் என்ற பத்தும் அவற்றால் பற்றப்படுகின்ற புலன்கள் பத்தும் ஆக இருபது அவனுடைய தோள்களாகக் குறிக்கப்படுகின்றன. அவன் சிவன் தங்கி யிருக்கும் விசாலமான மலையைத் தன் முயற்சியால் பெயர்த்தெடுக்க முயன்று ஒப்பில்லாத தன்னுடைய ஆற்றலை இழந்து சிறுமை உணர்ந்து தேவா காப்பாற்று என்று வேண்டியபின் நின்மலனாகிய பெருமான் அவனுக்கு நீங்காத பக்தியை நிலைபெறுமாறு செய்தருளினான். சீவனது குணங்கள் கீழ்ப்படுத்தப்பட்டபோது சிவபெருமான் வெளிப்பட்டு அருளுவான் என்பதே இங்கு அறியப்படும் தத்துவமாக விளங்குகிறது.

சிவபெருமான் அடைவதற்கு அருமையுடையவனல்லன். அன்புடைய வர்களுக்குப் பொய்யானவனல்லன். சீவகர்களிடம் கருணையொடு பொருத்தி அவர்களின் தகுதி நோக்கி அருள்புரிவான் என்னும் இறைத்தத்துவம் இதனால் இயம்பப்படுகிறது. முப்புரம் சென்றபோது மூவருக்கும் அருளிய தன்மையும் இக்கருத்திற்கு வலுவூட்டுகிறது.

பன்னிரு திருமுறைகளில் ஒன்றான திருமந்திரம் தோத்திர நூலாகவும், சாத்திர நூலாகவும் விளங்குவதோடு சரித்திர நூலாகவும் அதனுடைய தத்துவ விளக்கமாகவும் அமைந்து ஈடு இணையில்லாத தனிப்பெருஞ் சிறப்போடு திகழ்கிறது. தமிழ் செம்மொழி என்று போற்றப்படும் தகுதிக்குத் திருமந்திரமும் ஒன்று என்று கூறினால் அது மிகையாகாது.

# 24. அன்பே சிவம்

திருமதி ந. கிருத்திகா, அம்மையப்பன்.

எங்கும் சிவம்; எதிலும் சிவம் என்பதே இறைக்கோட்பாடாகும். சிவம் என்றாலே அன்பு; அன்பு என்றாலே சிவம் என்பதே வழி வழியாய் வந்த தத்துவம். திருமூலரும் இதனையே வலியுறுத்தி,

**அன்புசிவம் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.**

கூறுவதை நாம் காணலாம். மணிவாசகப் பெருமானும் ''அன்பினில் விளைந்த ஆரமுதே'' என்றே சிவத்தைப் போற்றுகின்றார். அன்பு தம்மையும் கனிய வைத்து இறைவனையும் கனியவைப்பது, அன்பின் தன்மையை கண்ணப்பனில் காணலாம். கடுந்தவங்கள் இயற்றி, உண்ணா நோன்பிருந்து, உற்ற தர்மங்கள் பல செய்தும் அன்பெனும் சிவத்தைக் காண இயலாத வராய் ஏங்கித் தவிப்பர். ஆனால் கண்ணப்பனோ அன்பு மிகுதியால் சிவனுக்கே கண்ணை அப்பி அக்கணமே கண்டார் சிவத்தை. இதையே மணிவாசகர் ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்'' என்று பாடுகிறார். சாத்திரம் அறியார் தோத்திரம் அறியார் ஆனால் அன்பினில் யாவரையும் மிஞ்சிவிட்டார். இதைத்தான் திருமூலர் அன்புடைமையிலும், அன்பு செய்வாரை அறிவன் சிவன்'' என்னும் தலைப்பிலுள்ள முதல் தந்திரத்தில் எடுத்தியம்புகின்றார்.

**அன்பின் தன்மை**

அன்பு எத்தன்மையதாய் இருத்தல் வேண்டும் என்பதனைத் தெளிவுப் படுத்துகிறார் திருமூலர். ஆர்வம் உடையதாய், மனதில் ஈரம் உடையதாய், இளகும் தன்மையுடையதாய் இருத்தலே அன்பெனப்பட்டது என்கிறார். திருநாவுக்கரசு நாயனாரையே பார்த்திராத அப்பூதியடிகள் கொண்டிருந்த அன்பின் திறத்தை ஈண்டு நோக்கத்தக்கது. அடியாரிடம் கொண்ட அன்பின் தன்மையே அத்தகையது எனில் இறைவன்பால் கொள்ளும் அன்பின் தன்மை எத்தகையதாய் இருத்தல் வேண்டும் என்பதை உணர வேண்டும். பலன் கருதாது காட்டும் அன்பே சிவமாகும்.

**''என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்**
**முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்**

பின்னை புருக்கி பெருந்தகை நந்தியும்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே''

எனது அன்பு போன்று உள்ளமும் ஊனும் உருகுமாறு அன்பு செலுத்தி இறைவனைத் தொழுதேத்துங்கள், முன்னே அதனைச் செய்யுங்கள் பின்னே உங்கட்கு அவ்வன்பு பெருகுமாறு வெளிப்பட்டு அவனது அருள் எனக்குக் கைவந்தது போல உங்களுக்கும் வரும் என்று அறிவுறுத்துகிறார்.

இறைவன் அன்பையே வாயிலாகக் கொண்டவன் அன்பிருக்கு மிடத்தில் நீக்கமற நிறைந்திருக்கும் தன்மையன்.

அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பின்உள் ளான்முனி வர்க்கும் பிரானலன்
அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்
அன்பிள் ளார்க்கே அணை துணையாமே

யாவர்க்கும் முதல்வனாய் ஞானிகளுக்கு முழுமுதற் குருவாகவும், உயிர்களின் அகத்தே அன்பின் உருவமாகவும், புறத்தே பலவிதத் தோற்றங் களாகவும் இறைவன் இருக்கின்றான். அன்பின் தன்மையால் மட்டுமே அறியப்படுபவன் அவன் பிறவற்றால் அறிய முடியாதவன். அன்பராய்த் திகழ்பவர்க்கே உறுதுணையும் ஆவான் அவன் என்று திருமூலர் அன்பின் தன்மையை மிக அழகாகத் தெளிவுபடுத்துகிறார்.

**அன்பின் வழி இறைவனை அடைதல்**

தூய்மையான, நிலையான அன்பை உடைய தொண்டர்க்கே தொண்டனாவான் இறைவன் என்பதை பல்லாற்றானும் நாம் உணரலாம்

உற்றுநின்றா ரொடும் அத்தகு சோதியைச்
சித்தர்கள் என்றுந் தெரிந்தறி லார் இல்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுத்தவர் முன்பு நின்றானே

அன்பின் மிகுதியால் அடியவர்கள் நிலத்தில் வீழ்ந்து பணிந்தும், கைகூப்பிக் கும்பிட்டும் இறைவனை ஏத்துகின்றனர். அப்படிப்பட்ட அடியவர்க்கு அவர் மனமுவந்து முத்தியைக் கொடுப்பதோடு நில்லாமல் அடியவர் செயல்கள் யாவினும் அவனே துணையாக முன்னின்று நிற்கிறான். இப்படி தன்னை சார்ந்து நிற்கும் அடியவர்களுக்கு இறைவனும் அவர் களையே சார்ந்து நிற்கும் தன்மையனை காணலாம்.

தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றும்
குளியறி லாளர்க்குக் கூடவும் ஒண்ணான்
வளியறி வாளர்க்கு வாய்க்கினும் வாய்க்கும்
தெளியறி வாளர்தஞ் சிந்தையு ளானே.

அன்பின் மிகுதியால் கண்ணீர் மல்கி இறைஞ்சும் மனத்தகத்தான் இறைவன். அங்ஙனமில்லாது புண்ணிய தீர்த்தங்கள் தோறும் மூழ்கிக் குளித்து கைகூப்பித் தொழுதாலும் அன்பில்லையேல் அவன்பால் இறைவனும் உறையான் என்று தெளிவுபடுத்துகிறார் திருமூலர். இதையே அப்பர் பெருமானும்,

கோடி தீர்த்தம் கலந்து குறித்தலை
ஆடினாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே

என்று அழகாக எடுத்தியம்புகிறார்.

மானுட வாழ்வு நிலையில்லாதது. ஆனால் அன்போ நிலையானது. குறுகிய வாழ்வில் அன்பையே உயிர்ப்பொருளாகப் போற்றித் தொழுதால் பெறலாமே ஈசனருள் என்பதே சித்தர் வாக்கு.

ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்
பேசியிருந்து பிதற்றி மகிழ்வெய்தின்
நேசமு மாகும் நிகழொளி யாய் நின்று
வாச மலர்க்கந்தம் மன்னிநின் றானே

இறைவனின் அருளையே போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்து தானும் பேசி பிறரையும் அவன் புகழ்பாடுமாறு செய்வித்தும் வருபவன் அன்பு மேன்மை யுடையது. அத்தகைய அன்பை உணரும் ஈசன் தானே பேரொளியாய் அவன் முன்னே எதிர்ப்பட்டு மலரின் நல் மணம் போல் நிலைபெற்று இன்பம் நல்குவான் என்று உணர்த்துகிறார் திருமூலர்,

**அன்பை அறிவன் சிவன்**

வாழ்நாள் முழுதும் அன்பு காட்டினும் உண்மை அன்பை உணர்ந்து அருள்பவன் இறைவன் ஒருவனே. அன்பின் தன்மையை அளவிட்டு உணர்த்துபவனும் அவனே.

இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்தருள் செய்திடும் உத்தமநாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மிகிழ்ந்தன்பு செய்யும் மருளது லாமே

எது இகழ்ச்சி, எது புகழ்ச்சி என்பதை அறிவான் ஈசன். இகழ்வது போல் போற்றுவதும், போற்றுவதுபோல் இகழ்வதும் மானிட இயல்பு. அவ்வியல்பின் தன்மையை மிகத் தெளிவாக உணர்ந்து உணர்த்துபவன் இறைவன். அன்புடையோர்க்கே ஓடோடி வந்து அருளுபவன். ஏனென்றால் அவன் அன்பின் பித்தன். அன்புடையோரை அவ்ன் அறிந்து கொள்வதுபோல அவனையும அன்புடையாரே நன்கறிவர்.

நம்பனை நானாவிதப்பொரு ளாகுமென்
றும்பரில் வானலர் ஓதுந் தலைவனை
இன்பனை இன்பத்திடைநின் றிரதிக்கும்
அன்பனை யாரும் அறியகி லாரே

அனைத்து உயிர்களாலும், தேவர்களாலும் போற்றப்படுபவனும் இன்பப் பொருளாய், அனுபவ ஊற்றாய் உள்ளவனும் அன்பின் உறைவிடமாய் இருப்பவனும் ஈசன் ஒருவனே அவனை அன்பின் மனத்தினதாய் இருந்தால் மட்டுமே உணரமுடியும் என்பதை விளக்குகிறார் திருமூலர். பிறிதோரிடத்தும் இதனை மிக அழகாகத் தெளிவுபடுத்துகிறார்.

ஈசன் அறியும் இராப்பகலுந் தன்னைப்
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் லார்களைத்
தேசற்றிந்து செயலற் றிருந்திட
ஈசன்வந் தெம்மிடை ஈட்டி நின்றானே

இரவும் பகலும் இடைவிடாது தன்னையே அன்பின் மிகுதிகொண்டு தொழும் அடியவர்களை ஈசன் நன்கறிவான். ஆதலால் அவனே மனமுவந்து வந்து அவர்களை ஆட்கொள்ளுவான் என்று இயம்புகின்றார்.

உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறியாதே

உள்ளத்திலேயே சோதியாய் குடி கொண்டிருப்பவனை, உள்ளத்தைவிட்டு ஓரடி கூட நீங்காதவனை, உள்ளமும் அவனும் ஒன்றே என்றிருப்பவனை அறிவது என்பது எவ்வாறு? அன்பின் வழிநின்று அவனை அறிந்து அருள்பெறுவது எளிது.

இறைவன் எல்லாப் பொருளிலும் நிக்கமற நிறைந்துள்ளான் என்பது உண்மை. ஞானத்தால், சாத்திரத்தால், கல்வியால், நீண்ட தலத்தால், உண்ணா நோன்பால், வேள்விகளால், சரியை, கிரியைகளால் இறைவனைக் காண்பதென்பது அரிது. அவன் எளியன். அடியவர்க்கு அடியவன். அன்பின் வயப்பட்டவன் எனவே, அவனருளாலே அவன்தாள் வணங்கி என்னும் திருவாசகம் போல அன்பே அவன் அவனே சிவம் என்றுணர்ந்தாலே அவனருள் எளிது என்கிறார் திருமூலர்.

அன்பின்வழி வேண்டுவார்க்கு வேண்டியபடி அளித்தருள்பவன் ஈசன். ஞானம் வேண்டுவார்க்கு ஞானத்தையும், சித்திகள் பல வேண்டு வார்க்கு சித்திகளையும், பற்றும், பாசமும் வேண்டுவார்க்கு அதனையும் கொடுப்பவன். அதனையே அடியவர்க்கு தந்தருளுபவன். இறைநிலை யிலிருந்து தொண்டர்க்கு தொண்டு செய்து மகிழும் எளியவனை அன்பால் நம்மை ஆட்கொள்ள வைப்போம்.

# 25. திருமந்திரத்தில் சைவ சித்தாந்தம்

முனைவர் சி.பி. கோபால், உடுமலை.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் பத்தாவது திருமுறையாகக் கருதப்படுகிறது. இந்த நூலுக்குத் 'திருமந்திரமாலை', 'தமிழ் மூவாயிரம்' என்னும் பெயர்களும் உள்ளன. தமிழரின் தலையாயக் கொள்கை நூல், மெய்ப்பொருள் கூறுகளைத் திருமூலரின் பாடல்வழி எடுத்துரைப்பதே இவ்வுரையின் நோக்கமாகும். 'சைவசித்தாந்தம்' என்ற தொடர் முதன் முதலில் இந்நூலில்தான் எடுத்தாளப்பட்டுள்ளது. திருமந்திரத்தின் மூவாயிரம் பாடல்களும் 9 தந்திரங்களாகப் பகுக்கப்பட்டு 232 அதிகாரங்களாக வகை தொகையாக அமைக்கப்பெற்றுள்ளது.

முதல் தந்திரம் வாழ்க்கைக்குரிய **அறத்தை** ஞானோபதேசம் என விளக்குகிறது.

இரண்டாம் தந்திரம் **காமியம்** என்னும் இறையருள், ஐந்தொழில் புராணக் கதைகளைக் கூறுகின்றது.

மூன்றாம் தந்திரம் **வீரம்** என்னும் அட்டமாசித்தி, அட்டாங்க யோகம், சோதிடம், யோகப்பயிற்சிகளைப் பாங்குறப் புகல்கின்றது.

நான்காம் தந்திரம் **சித்தம்** என்னும் மந்திர நூல் கருத்துக்கள், சக்கரங்கள் சிவசக்தி வழிபாடு ஆகியனவற்றை எடுத்துரைக்கின்றது.

ஐந்தாம் தந்திரம் **வாதுளம்** என்னும் சரியை, கிரியை, யோக, ஞானமார்க்கங்களை மயக்கற மொழிகிறது.

ஆறாம் தந்திரம் **வியாமளம்** என்னும் சிவகுருதரிசனம், திருவடிப் பேறு, துறவு, தவம், நீறு ஆகியனவற்றைப் பகர்கின்றது.

ஏழாம் தந்திரம் **காலோத்தரம்** என்னும் பூசை வகைகள், அடியார் சிறப்பு, இந்திரியம், சமாதி, சற்குருவைச் சாற்றுகிறது.

எட்டாம் தந்திரம் **சுப்பிரம்** என்னும் மும்மலம் பக்தியைக் கூறுகின்றது.

ஒன்பதாம் தந்திரம் **மகுடம்** என்னும் ஐந்தெழுத்து சிவதரிசனம், சித்தி மார்க்கம் முக்தி மார்க்கம் ஆகியனவற்றை விளக்கியுரைக்கின்றது.

**முப்பொருள்**

திருமந்திரத்தில் நுவலப்படும் பொருட்கள் பலவாயினும், அவை இறை, உயிர், தளை ஆகிய முக்கூற்றில் அடங்கும். இம்மூன்று கூறுகளை ஆசிரியர் விவரித்துள்ளார்.

இந்நூல் நில்லாமையே நிலையாகவுடைய இவ்வுலக இயல்பைக் காட்டி அதனை உணர்த்த உயிர் கொளத்தகும் நல்லியல்பு சிலவற்றைக் காட்டுகின்றது. ஒழுக்கநெறி நின்றார்க்கு இறைவன் செய்துவரும் அருளிப்பாடுகளை விவரிக்கின்றது. மேலும் பரம்பொருள் மீது பற்றுக் கொள்ளுமாறு அருளுகின்றது. பற்றுக்கொண்ட பரம்பொருளை உள்முகப் படுத்தி அதனுடன் ஒன்றுபடுவதற்குரிய வழிமுறைகளைக் கூறுகின்றது. இறைவனை உள்முகப்படுத்தி உணரத்தக்க உயிர் மென்மேலும் ஒளிவரவான மந்திரங்களை உணர்ந்தும், தெளிந்தும் எண்ணற்கரிய வாயில்களை விவரிக்கின்றது.

நல்லாறு தெரிந்துணர்ந்த நலத்தகு அடியவர்கட்குச் சைவ சித்தாந்த மெய்ப்பொருள் நுவலும் பிற முறைகளையும் நெறிமுறைகளையும் விவரிக்கின்றது. உயிர்கள் குருவருளால் பற்றற முயலுவதற்குரிய தவநெறிச்சார்பை விளக்குகின்றது. படிப்படியாக உயிர்கள் உயர்ந்து நிற்கும். அருட்பழக்கம் உடையார்க்கு அகத்தும் புறத்தும் வழிபடுவதற் குரிய நெறிமுறைகளையும் அவற்றொடு இயைபுடைய பிறவும் அறிவுறுத்தப்படுகின்றது. உயிர்நிலை பெற்ற உயிர்கள் இறையருளை அணுகக்கிடைக்கும் அருள் நலன்களை விவரிக்கின்றது. இறைவனின் இன்னருள் பெறுவதற்கு இலக்காகி நிற்கும் இயல்பையும் எண்ணியவாறு வீட்டின்பம் பெறும் மாட்சியையும் எடுத்துரைக்கின்றது. ஏனைய திருமுறைகள் தோத்திர நோக்கில் அமைந்துள்ளன; இந்நூல் மட்டும் பெரிதும் தத்துவ நோக்கில் அமைந்துள்ளது.

**முப்பொருள்கூறும் முதல்நூல்**

சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் இதுவென்பதையும், அவற்றுள் உயிர் கொள்ளத்தக்கது இது என்பதையும் முதன்முதலில் கூறிய பெருமை திருமூலருக்கே உரியதாகும்.

"பதி, பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு, பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாச நில்லாவே"

(1-ஆம் தந்திரம், உபதேசம். பா. 3)

என்ற பாடலில் முப்பொருள் உண்மையை விளக்கியுள்ளார்.

**இந்திரியங்கள்**

உடலில் ஐந்து இந்திரியங்கள் உள்ளன. அவை உலகில் உழல்கின்றன. அவ்வாறு போகவொட்டாமல் இருக்க ஞானாசிரியன் வந்து உபதேசித்தால் ஆனந்தம் பிறக்கும்.

பார்ப்பான் - பிரமன், அகம் - சரீரம், ஐந்து பசுக்கள் - ஐந்து இந்திரியங்கள், பாலாய்ச் சொரிதல் - ஆனந்தம் விளைத்தல் என்ற நிலையைத் திருமூலர் எடுத்துக்கூறுகிறார்.

"பார்ப்பான் அகத்திலே பற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெளியும் அடங்கினால்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே"

(சூனிய சம்பாசனை பா. 18)

**உலக வாழ்க்கை நிலையாமை**

இவ்வுலக வாழ்வில் யாக்கை நிலையானது, செல்வம் நிலை யானது, இளமை நிலையானது என்பன அனைத்தும் பொய்யே என்பதை மெய்ம்மையாய் திருமந்திரம் உரைத்துள்ளது.

**உடல் நிலையாமை**

இந்த உடலானது நிலையாமை உடையது என்பதை,

"ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடை கொண்டு போய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே"

(1-ஆம் தந்திரம் யாக்கை நிலையாமை, பா. 3)

என்று வரும் திருமந்திரப் பாடலால் அறியலாம். அதேபோல் செல்வம், இளமை ஆகியனவும் நிலையில்லாதன என்பதையும் கூறுகின்றன.

**பதி நிலையானது**

"மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ் செல்வமாமே"

(செல்வம் நிலையாமை - பா. 2)

என்ற பாடலின் மூலம் திருஞான சம்பந்தர் பதி, பசு, பாசம், இவற்றின் இயல்புகளை இறைத்தத்துவம், பசுத்தத்துவம், பாசத்தத்துவம், இறைவனின் திருவடிப்பெருமை, சிவயோகியரது இயல்பு, திருநடனச் சிறப்பு, முதலாயின விளக்கிக் கூறப்படுகின்றன.

**முப்பொருள்**

சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்கள் பற்றிக் கூறுகின்றது. பதி இறைவன், பசு என்பது உயிர். பாசம் என்பது ஆன்மாவை கட்டிவைக்கும் தளை, இவை மூன்றும் நித்தியமானவை. இறைவனும் ஆன்மாவும் ஒன்று. பூவும் மனமும் போன்று ஆன்மாவிடத்தில் கலந்

திருக்கின்றான். இப்படியிருந்தும் இறைவனை அறியமுடியாததற்குக் காரணம் பாசஞானத்தால் உயிர் பிணிக்கப்பட்டு இருக்கிறது. உயிர் முற்றறிவு உடையதன்று என்பதனை,

பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு
அறிவு என்ற பேர் நன்று

என்ற பாடலால் அறியலாம்.

அறிவுடைய பொருளாகிய உயிர் சார்ந்ததன் தன்மையுடையது. மலத்தால் பற்றின் அறியாமை நிறைந்தும், இறைவன் திருவருள் பற்றின் அறிவாக விளங்கியும் இருப்பது; உணர்த்த உணர்வது உயிரின் இயல்பு. இதனைத் திருமூலர் மூன்றாம் தந்திரம் உபதேசப் பகுதியில்,

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல் பசு, பாசம் அனாதி (பா. 3)

என்ற பாடலில் கூறுகின்றார். பதியைப் போலவே பசுவும் பாசமும் அனாதி, பாசம் என்பது ஆணவம், கன்மம், மாயை என்ற மலங்கள். இம்மும்மலத்தின் கட்டுண்டு நிற்கிறது பசு. உயிரைப் பற்றியுள்ள பாசம் இறைவனைச் சென்று அணுகாது.

"பதியினைச் சென்றணுகா பதிபாசம்"

என்று பசுவின் இயல்பினைத் திருமூலர் கூறுகின்றார்.

பதியானவன் கருணையோடு பசுவை அணுகும்போது அதைப் பிணித்துள்ள தளை தானாகவே நீங்கிடும். பசுவும் மயங்கி நிற்காமல், மயக்கம் நீங்கி இறைவனைச் சென்றடையும் இதனை,

"பதியணுலகில் பசுபாவம் நில்லாவே"

என்று பதியின் கருணை நிலையைக் கூறுகிறார் திருமூலர்.

## இறை தத்துவம்

ஆன்மாக்கள் உடலை மேற்கொள்வது தாமாக அன்று. இறைவன் அந்தந்த ஆன்மாக்கள் செய்த நன்மை தீமைகளுக்கீடாக உடலொடு சுட்டுகின்றார் என்பதை,

"விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு"

என்னும் பாடலின் அடியால் அறியலாம்.

கன்மம், மாயை என்ற இரண்டு மாசுக்களும் களையப்பெற்று ஆணவம் மட்டுமே பற்றியிருக்க இறைவன் ஞானமாக உள்ளத்திலே நின்று ஆணவமலத்தினை நீக்கித் திருவருள் புரிகிறான். மேற்கூறிய ஆன்மாக்களின் மூன்று நிலைகளிலுமே இறைவன் திருவருள் துணைகொண்டே ஆணவமாகிய களிம்பு நீங்குகிறது. இதனை,

**களிம்பறுத்தான் எங்கள் கண்ணுதல் நந்தி**
**களிம்பறுத்தான் அருட் கண்விழிப் பித்துக்**
**களிம்பணு காத கதிரொளி காட்டிப்**
**பளிங்கின் பவழம் பதித்தான் பதியே**

**(3-ஆம் தந்திரம், உபதேசம் பா. 2)**

என்ற திருமந்திரப் பாடல் வழி அறியலாம்.

**ஆன்ம தத்துவம்**

பேரொளிப் பிழம்பாகிய இறைவனின் துணைகொண்டே சிற்றறி வுடைய உயிர் பிறவிப் பிணியை நீக்கமுடியும். குருவாகிய சூரியன் அருளாகிய கதிரை ஆன்மாவாகிய சூரிய காந்தக் கல்லின் வழிச் செலுத்த மலங்களாகிய பஞ்சு சுட்டெரிக்கப்படும் என்பதை,

**சூரிய காந்தமும் சூழ் பஞ்சும் போலவே**
**சூரிய காந்தம் சூழ் பஞ்சைச் சுடமாட்டா**
**சூரியன் சந்நிதி யின்சுடு மாறுபோல்**
**சூரியன் தோற்ற முன்னற்ற மலங்களே** **(மேலது. பா. 5)**

என்ற பாடல்வழி அறியலாம்.

**பாசதத்துவம்**

பிறப்பு இறப்பிற்குக் காரணமாக இருப்பது கன்ம மலங்களே என்பதை மாணிக்கவாசகர்

**''மலங்கள் ஐந்தால் சூழல்வன் தயிரில் பொருமத்து எனவே''**

என்கிறார். ஆணவம், கன்மம், மாயை, என்பனவும் திரோதி, மாமேயம் என்பனவும் உயிரைப் பற்றியிருக்கும் ஐந்து மலங்களைச் சிவன் தன் அருள்வழிக்கழுவி மாற்றுவான். இதனை,

**'மலங்கள் தாமென மாற்றி அருளி'**

என்ற திருமந்திரப்பாடலடியால் அறியலாம்.

**திருவடிப்பெருமை**

இறைவன் அணுவிற்கணுவாய் அப்பாலுக் கப்பாலாய் விளங்குபவன் அவன் திருவடியை அடைவதே முக்தி என்பது,

..................................................................

**திருவடி யேயெசல் கதியது செப்பில்**
**திருவடியே தஞ்சம் உள்தெளி வார்க்கே** **(திருமந்திரம் மேலது. 26.)**

என்னும் பாடலடி மூலம் இறைவனின் திருவடிப் பெருமை கூறப்படு கிறது. மும்மலகாரியம் பற்றித் திருமந்திரம் இரண்டாம் தந்திரத்தில் பதிவலியில் 'வீரட்டமெட்டு' என்னும் பகுதியில் 5-ஆம் பாடலில்,

**அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்**
**முப்புரம் என்பர்கள் மூடர்கள்**
**முப்புரமாவது மும்மல காரயம்**
**அப்புரம் என்தமை யாரறிவரே** (பா. 5)

இறைவன் முப்புரத்தை எரித்தான் மும்மலங்கள் முப்புரமாக நிற்க இறைவன் அவற்றை அழிக்கின்றான் என்பதே தத்துவ நோக்கம் போக்குமாகும்.

**இறைவன் முதல்வன்**

இறைவன் முதல்வன் அவனைத் தவிர மற்றொரு தெய்வம் தேடினும் இல்லை. அவனுக்கு ஒப்பவர் யாரும் இல்லை. புவனத்தைக் கடந்ததன்று பொன்னொளி பின்னும் தவளச்சுடரே. தாமரையால் போன்று இறைவன் தன்மைகளை சிறப்புப்பாயிரம்

**சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை"** (பா. 5)

என்று இறையிருப்புக் கூறுகிறது. மேலும்,

**தேறுமின், தேறித்தெளிமின் தெரிந்தபின்**
**மாறுதல் இன்றி மனைபுகலாமே"**

என்ற பாடல் வழி தெளிவு (இறை) மட்டுமே வீட்டின்பத்திற்கு வழி வகுக்கும் என்று கூறுகிறார்.

**சரியை நெறி**

திருமூலர் மக்கள் பணியே மகேசன் பணி என்பதை எடுத்துக் கூறி சரியை வழிபாட்டைப் பற்றிக் கூறுகின்றார்.

**"படமாடக் கோயில பகவற் கொன்றீயில்**
**நடமாடக் கோயில் நம்பற் கங்காகா**
**நடமாடக் கோயில் நம்பற் கொன்றீயில்**
**படமாடக் கோயில் பகவற்க தாமே"**

**(7-ஆம் தந்திரம், மகேசுர பூசை பா. 1)**

**ஞானநெறி**

சரியை, கிரியை, யோகம் இவற்றால் சிறிது சிறிதாகச் சிவானந்தத் தேறலை நுகர்ந்த ஆன்மா, பேரின்பமாகிய இறையின்பத்தில் திளைக்கும் நெறி ஞானநெறியாகும். இத்தகு நிறையின்பம் மட்டுமின்றிப் பேரறிவுப் பொருள் பயப்பதும் ஞானமே. சரியை வழி ஞானம், கிரியை வழி ஞானம், யோகம் வழி ஞானம் என்று அந்தந்த நெறிகளின் வாயிலாக மெய்ப்பொருளுணர்வு கைவரப்பெறுவதும் ஞானமே. இதைத் திருமூலர்,

"ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன் றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே"

(7-ஆம் தந்திரம் ஞானம் பா. 1)

என்று மெய்ஞ்ஞானத்தின் சிறப்பைப் போற்றிப் பாடியுள்ளார்.

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமல நீக்கும்
திருவடி ஞானமே திண் சித்தி முக்தியே

(6-ஆம் தந்திரம் திருவடிப்பேறு பா. 9)

உயிர்ஞான நிலையை அடையும் என்பதைப் பின்வரும் பாடல் மூலம் எடுத்துக்காட்டுகிறார்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானாற்கு வாய்க்கே புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ள புலனைந்தும் காளாமணி விளக்கே

(6-ஆம் தந்திரம் சிவபூசை, பா. 1)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

திருமூலர் ஆறங்கம் பற்றிக் கூறுகிறார். அவை வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம் ஆகியனவாகும்.

அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆத்துமலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் என இலிங்கங்களைக் குறிப்பிடுகின்றார். அண்டலிங்கம் என்பது பிண்டத்தில் காணப்படும் உளக்கோயில் (உள்ளம்...)

### திருமூலரின் சித்தாந்த விளக்கம்

சித்தாந்தம் என்பதற்குத் திருமூலர் சித்தர் கண்டநெறி அல்லது முடிவு அல்லது ஆன்ம அனுபவம் என்று சமயத்தையும், தத்துவத்தையும் குறிப்பிட்டுரைக்கிறார். 'சைவ சித்தாந்தம்', என்ற சொற்றொடரால் சமயத்தையும் தத்துவத்தையும் இணைத்துக்காட்டும் முதல் நூல் திருமந்திரமாகும்.

### அசுத்த சைவர்கள்

அசுத்த சைவர் என்பவர்கள் - முப்பொருள்களையும் (பதி. பசு. பாசம்) இறைவனையும் ஜடப்பொருளான பாசத்தையும் சார்ந்ததன் தன்மையாக இருக்கும் பசுவையும் அறிந்து தெளிவுபெற்று இவற்றில்

ஒன்றி நிற்பவர்கள். இவர்கள் சிவவேடம் தரித்துக்கொண்டு சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் எல்லாக் கோயில்களையும் வலம்வந்து பக்தி நிலையில் ஈடுபட்டு பதி, பசு, பாசம் பற்றிய இயல்புகளை அறிவதாகிய ஞானம் பெற்றவர்கள். இறைஞானத்தால் இறை இயல்புகளை அறிவோராவர்.

**மார்க்க சைவர்கள்**

சிவ வேடம் பூண்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு மார்க்கங்களின் வழி நடப்பவர்கள் இவர்கள் மார்க்கசைவர்கள். பாசம் அற்று துன்பம் தரும் பாசத்தை நீக்கி பசுத்தன்மை கெட நிற்கும் மெய்யுணர்வாளர்கள்.

நான்கு நெறிகளை முதன்முதலில் கூறியவர் திருமூலர் என்பதைக் கீழ்வரும் பாடல் எடுத்துரைக்கிறது.

சரியாதி நான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்தம் மாறும்
பொருளா னதுநந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் பொன்னகர் போந்து

(5 - ஆம் தந்திரம் சரியை பா. 7)

இவ்வுரையில் திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ள முப்பொருள், இந்திரியங்கள், உலக வாழ்க்கை நிலையாமை, உடல் நிலையாமை, பதியின் நிலைத்தன்மை, இறைத்தத்துவம், ஆன்ம தத்துவம், பாசத்தத்துவம், திருவடிப் பெருமை, சரியை நெறி, சித்தாந்த விளக்கம், அசுத்த சைவம், மார்க்க சைவம், என்னும் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அறியாமை அகன்ற மெய்யறிவு நெறியே அறநெறியாய், இறையறிவு சித்திக்கவும் இறையுணர்வும், இறையிணைவிற்கும் ஆக்கமுறும், சைவசித்தாந்தக் கருத்துக்களைப் பாங்குறப் பகர்ந்துள்ளார் திருமூலர்.

நிலையானதும் என்றும் மாறாததும் நன்மையைத் தருவதுமாகிய சைவசித்தாந்தக் கொள்கைகளும் அதனை அடைதற்குரிய திருமூலரின் நெறிகளும் ஆன்ம முன்னேற்றங் கருதி எத்தனை யுகங்கள் கடந்தாலும் நின்று நிலைத்து வழிகாட்டி வயப்படுவோரை,

"வானுறையும் தெய்வமாக்குவதால்"

திருமூலரின் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் யாவும் இறையறம் காப்பதாய், காட்டுவதாய்ப் போற்றுதற்குரியதாய்ப் பொலிகின்றன. வெண்பாவுக்கும் விருத்தத்திற்கும் இடைப்பட்டதாகிய வெள்ளைக் கொச்சகத்தால் உளம் கொள்ளுமாறு இந்நூல் எடுத்துரைத்துள்ளது என்னும் மெய்ம்மையையும் உய்த்துணரலாம்.

# 26. திருமூலர் கூறும் சீடன்

முனைவர் கோமதி சூரியமூர்த்தி, மதுரை.

சைவத் திருமுறைகளில் பத்தாம் திருமுறையாக விளங்குவது திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் ஆகும். இந்நூல் ஒன்பது ஆகமங்களின் கருத்துக்களை ஒன்பது தந்திரங்களில் விளக்குகிறது. இந்நூலில் இக்காலத்திற்கும் பயன்படும் விதமாக அறக்கருத்துக்கள், யோகக் கருத்துக்கள், விஞ்ஞானக் கருத்துக்கள், தத்துவக் கருத்துக்கள் முதலியன காணப்படுகின்றன. திருமூலர் கூறும் சீடன், சீடன் ஏற்க வேண்டிய் குரு, சீடனுக்குரிய இலக்கணங்கள், சீடனுக்குரிய பண்புகள், அவன் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள் முதலியன இக்கட்டுரையில் எடுத்துக் காட்டப்படுகின்றன. திருமூலரின் கருத்துக்கட்கு அரணாக ஒப்புமையான கருத்துக்கள் சில, திருக்குறள், நன்னூல் சைவசாத்திரநூல் முதலியவற்றில் இருந்து ஆங்காங்கே மேற்கோள்களாகத் தரப்பட்டுள்ளன.

**திருமூலர் கூறும் சீடன்**

வித்தியாகுரு, கிரியாகுரு, ஞானகுரு என குரு பலவகைப்பட்டாலும், குரு என்ற சொல் சைவசித்தாந்தத்தில் சிவஞானத்தை உபதேசிக்கும் ஞானகுருவையே குறிக்கும். அதுபோல சீடன் என்ற சொல் ஞானம் பெறும் வேட்கையுடைய பக்குவமான மாணாக்களையே குறிக்கும்.

**சீடன் கொள்ளவேண்டிய குரு**

"கொள்ளினும் நல்ல குருவைக் கொள்ளுக" (திருமந்திரம், 1693)

என்கிறார் திருமூலர். நல்ல குரு என்பவர் யார்? அதற்கும் திருமூலரே விடை கூறுகிறார். ஞான வேட்கை கொண்ட சீடனுக்குச் சிவஞானத்தைப் போதிக்கும் குரு சிவஞானப் புலமை வாய்ந்தவராய் இருக்கவேண்டும். ஞானகுரு சைவசித்தாந்தம் கூறும் முப்பொருள் உண்மைகளையும், இயல்புகளையும் ஐயம் திரிபறப் போதிக்கும் வல்லமை உடையவராய் விளங்கவேண்டும்.

"சத்தும் அசத்தும் சதசத்தும் தான் காட்டிச்
சித்தம் அசித்தும் சிவபரத்தே சேர்த்துச்
சுத்தம் அசுத்தம் அறச் சுகமான சொல்
அத்தன் அருட்குரவாம் அவன் கூறிலே" (திருமந்திரம். 2058)

சுத்தாகிய சிவத்தை உணர்ந்து அழுந்தி அனுபவிக்க வழிகாட்டும் குருவே சற்குரு ஆவார் என்கிறார்.

சீடனின் ஆன்ம அறிவை சிவ அறிவுடன் ஒன்றுபடுத்தும் நெறியை அறிவிப்பவனே சன்மார்க்க உபதேசகுரு என மற்றொரு பாடலிலும் (திருமந்திரம் 1701) திருமூலர் தெரிவிக்கின்றார். இத்தகைய குருவை ஏற்க வேண்டும். வழிபாடு செய்யும் பக்குவமுள்ள சீடர் வேதாகம முறை உணர்ந்து குற்றமே அறியாத மேலான குருவை நாடி அறிவர் (திருமந்திரம் 1690)

"பாசத்தை நீக்கிப் பாரனோடு தன்னையும்
நேசத்து நாடி மலமற நீக்குவோர்
ஆசற்ற சற்குரு ஆவோன்..." (திருமந்திரம். 2052)

என்கிறார் திருமூலர்.

**சற்சீடனுக்குரிய இலக்கணங்கள்**

உலகில் நித்தமாய் அழியாத பொருட்கள் (சத்து) எவை, அழியும் பொருட்கள் (அசத்து) எவை, என்பதைச் சிந்தித்து உணர்ந்து, மாறுதலில்லாத என்றும் உளதாகிய சிவசத்தின்பால் சித்தத்தை வைத்து, மனம் உருகி, பக்தியுடன் சிவஞானத்தைப் பெறப்பணிந்து ஆனந்தமே வடிவான சிவசக்தியின் இச்சைக்குத் தக்கவாறு தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்பவனே சற்சீடன் (திருமந்திரம். 1697).

உயிர்களின் துன்பத்திற்குப் பொறிவழி அனுபவிக்கும் புலன்களின் மீதுள்ள ஆசையே காரணமாகும். அந்த ஆசையை அடக்கப் புலனடக்கம் வேண்டும் என்பர். மெய்யுணர்வு இல்லாதவர்கட்குப் புலனடக்கத்தால் பலனில்லை என்பது வள்ளுவர் வாக்கு.

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு" (குறள். 354)

என்கிறார் வள்ளுவர். எனவே புலன்வழிச் செல்லுகின்ற பொறிகளைச் சிவத்தின் வழிச்செல்ல மனமாற்றம் செய்யவேண்டும். ஆசையை விடுகின்ற நெறியே வேதாந்தம். ஆதலால் உலக வாழ்விற்குத் துணைபுரிகின்ற புலன்வழிச் செல்லுகின்ற பொறிகளை மாற்றிச் சித்தாந்தச் செந்நெறியில் சென்று சிவனிடத்து பக்தி மிக்க சிறந்த வேதாந்தியான குருவின் திருவடி களில் தலை தாழ்த்தி வணங்கும் சீடனே சற்சீடனாவான் என்கிறார் திருமூலர் (திருமந்திரம். 1702). தக்க காலத்தில் ஆசிரியனிடம் சென்று, முதலில் வழிபாடு செய்தல் வேண்டும் என்பதை

"கோடன் மரபே கூறுங்காலை
பொழுதொடு சென்று வழிபடல்" (நன்னூல், சூத். 40)

என்று பவணந்தி முனிவர் கூறுவதும் இங்கு நினைவு கூரத்தக்கது. சற்சீடனுக்கு குருபக்தி இன்றியமையாதது. சைவசித்தாந்த அடிப்படைக் கோட்பாடுகளுள் ஒன்று குருவருள் மூலம் திருவருளைப் பெறவேண்டும். குருவருளைப் பெற இறைவனின் திருவருள் துணை செய்யவேண்டும் என்பதாகும்.

குருவிடம் திருவடி தீக்கை அருள வேண்டி, குருவின் வடிவைத் தன் சிரசின் மேல் தியானிக்க அருட்சக்தியால் அருளப்பெற்ற சிவஞான உடையவனே குற்றம் நீங்கிய சீடன் ஆவான் என்கிறார் திருமூலர், (திருமந்திரம், 1698)

சற்சீடன் சாத்வீக குணம் உடையவனாய் இருத்தல் வேண்டும்.

**சென்ற இடத்தால் செலவிடாது தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு''** **(குறள். 442)**

என்று வள்ளுவர் கூறுவது போன்று மனத்தைச் சென்ற இடத்தில் செல்ல விடாமல், தீமையிலிருந்து நீக்கிக் காத்து நன்மையானதில் செல்லவிடும் அறிவுடையவனாய்த் திகழ வேண்டும்.

**''மோனம் என்பது ஞான வரம்பு''** **(கொன்றைவேந்தன். 80)**

என்று ஔவையார் கூறியபடி தவஞானத்தின் எல்லை அமைதியாக நாவடங்கி இருக்கவேண்டும்.

இன்றைய சற்சீடன் நாளைய சற்குரு. எனவே தலைமைக் குணம் உடையவனாய்த் திகழல் வேண்டும். மெய்கண்டாரின் மாணாக்கர்கள் 49 பேர் ஆயினும் தலை மாணாக்கனாக விளங்கியது அருணந்தி சிவாசாரியாரே. இக்காலத்திலும் பள்ளியில் வகுப்பில் நற்பண்புகளை உடைய மாணவனைத் தலைவனாக்குவதைக் (Class Pupil Leader) காண்கிறோம். கல்லூரி மாணவர்கட்கு ஆளுமைப் பண்பைப் போதிப்பதையும், அதுபற்றிக் கருத்தரங்குகள் நடத்துவதையும் காண்கிறோம்.

**''இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க''**
**(சிவபுராணம் வரி 2)**

என்று மாணிக்கவாசகர் கூறுவது போன்று உண்மைப் பொருளான சிவனடியை மறவாத சிந்தை சற்சீடனிடம் இருத்தல் வேண்டும். பல்வேறு ஆத்திக சமயங்களை ஆராய்ந்து பேதம் உணர்ந்து நல்லாறு இது என தேர்ந்து நம்பர் அருளால் சித்தாந்தச் செந்நெறியாகிய அறநெறியின்கண் உறைந்து நிற்க வல்லானே நன் மாணாக்கன் ஆவான். இதனை

**''சாத்திகனாய்ப் பரத்துவம் தான் உன்னி**
**ஆத்திக பேதநெறி தோற்றமாகியே**

ஆர்த்த பிறவியின் அஞ்சி அறநெறி
சாத்தவல்லான் அவன் சற்சீடனாமே'' (திருமந்திரம். 1696)

என்று திருமூலர் கூறுகின்றார்.

**சற்சீடனுக்குரிய பண்புகள்**

''சற்குணன் வாய்மை தயா விவேகம் தண்மை
சற்குரு பாதமே சாயை போல் நீங்காமே
சிற்பர ஞானம் தெளியத் தெளிவு ஓர்தல்
அற்புதமே தோன்றல் ஆகும் சற்சீடனே'' (திருமந்திரம். 1703)

என்று திருமூலர் சற்சீடனுக்குரிய பண்புகளைத் தொகுத்துக் கூறுகிறார். சற்குணம் - நற்பண்பு. மனம், மொழி, மெய் என்னும் மூன்றனுள் யாதொன்றானும் பிற உயிர்க்குத் தீங்கு செய்யாது இயன்ற அளவு நன்மை செய்தலாகும்.

**சற்சீடன் வாய்மையே பேச வேண்டும்**

''வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்'' (குறள். 291)

''புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப்படும்'' (குறள். 298)

என்ற வள்ளுவர் வாய்மொழிகளை இங்கு நினைவு கூர்க. மற்றொரு பாடலில் திருமூலர் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் நீங்காதவனை, பொய்பேசுபவனை தீட்சைக்குரிய சீடன் அல்லன் என தள்ளல் வேண்டும் என்கிறார். (திருமந்திரம், 1689), ''காசி, சினத்தன், படிறன் முதலியோருக்கு ஆசிரியர் நூலைக் கற்பியார்' (நன்னூல், சூத். 39) தயா -இரக்கம்

''எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்க
நின் தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே''

என்ற தாயுமானவர் வாக்கை நினைவு கூர்க.

விவேகம் - நன்மை, தீமைகளைப் பகுத்துணர்ந்து தீமையை விலக்கி நன்மையைக் கொள்ளும் நல்லறிவு. தண்மை - பொறுமை, இரக்கம், ''சற்குரு பாதமே சாயை போல் நீங்காமை'' - சாயை என்றால் நிழல். நிழல் ஒருவனை விட்டு நீங்காதது போல் குருவின் அடி நீங்காமை. ''நிழலின் நீங்கான்''. (நன்னூல், சூத். 46) நிழல்போல் நீங்காமல் ஆசிரியரைப் பிரியாமல் இருக்க வேண்டும் என்று நன்னூல் ஆசிரியர் கூறுவதையும், பண்டைக்கால குருகுல கல்வி முறையையும் இங்கு நினைவு கூர்க. சிற்பரஞானம் - பேரறிவாகிய பரம்பொருள் உணரும்

அறிவு. தெளிவு - தெய்வம் ஒன்று உண்டு என்ற தெளிவு. "தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி" (போற்றித் திருஅகவல், வரி 42) என்று மாணிக்கவாசகர் கூறுவதை நினைவு கூர்க. தெளிய ஓர்தல் - ஆசிரியரிடம் கேட்ட சிவஞான உபதேசத்தைச் சிந்தித்துத் தெளிதல் ஆகும். நன்னூல் ஆசிரியர்,

"பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்" (நன்னூல் சூத். 41)

என்று கூறுவதை இங்கு நினைவுகூர்க. நினைத்தல் - சிந்தித்தல்

"பருகுவன் அன்ன ஆர்வத்தனாகிச்
சித்திரப்பாவையின் அத்தக அடங்கிச்
செவி வாயிலாக நெஞ்சு களனாகக்
கேட்டவை விடாது உளத்து அமைத்து" (நன்னூல் சூத். 40)

என்று பாடம் கேட்கும் முறையை நன்னூல் ஆசிரியர் விவரிக்கின்றார். பசித்து உண்பவனுக்கு உணவினடத்து உள்ள விருப்பம்போல, மிக்க நீர் வேட்கை உடையவன் நீரின் மேல் விருப்பம் கொள்வது போல பாடம் கேட்பதில் விருப்பம் உள்ளவனாய் இருக்கல் வேண்டும். சித்திரத்தில் எழுதிய பாவையைப் போல மனம், மொழி, மெய்கள் அடங்கிக் கேட்டல் வேண்டும். செவிகளே கல்வியாகிய நீரைப்பருகும் வாயாகவும், மனம் அந்நீரைக் கொள்ளும் வயிறாகவும் அமைந்து ஆசிரியரிடத்துக் கேட்ட நூற் பொருட்களை மறந்துவிடாமல் தன் மனத்தில் பதிய வைத்துக் கொள்ளவேண்டும். சாதாரண கல்வியைக் கேட்கும் முறையே இதுவே யாகில் சிவஞான உபதேசம் பெறும் மாணவன் மிகுந்த ஞானவேட்கை யுடன், பரபரப்பின்றி, மனம், மொழி, மெய் அடங்கி குருவின் உபதேசத்தைப் பலகாலும் கேட்டுச் சிந்தித்துத் தெளிவு பெறவேணடும் என்பது தெற்றென விளங்கும் அன்றோ.

"கேட்டதுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தல் என ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்"

(சிவஞானசித்தியார் சபக்கம்)

என்ற அருணந்தி சிவாசாரியாரின் அருள்வாக்கை இங்கு நினைவு கூர்க. செல்வந்தர் முன் வறியவன் வணங்கிப் பணிந்து தாழ்ந்து நிற்பது போல வணங்கித் தாழ்ந்து கல்வி கற்றவரே உயர்ந்தவர் என்கிறார் வள்ளுவர் (குறள். 395)

அற்புதம் தோன்றலாவது அருள் நிகழ்ச்சியால் சிவஞானம் சித்தித்த லாகும். அற்புதம் என்றது ஈண்டு யாவராலும் வியந்து போற்றுதற்குரிய சிவஞானம் என்ற பொருளைத் தரும். அற்புதமூர்த்தி என்ற தொடருக்கு ஞானமே திருமேனியாக உடையவன் என்று சங்கர நமச்சிவாயர் கூறும்பொருள் இதற்கு அரணாகும்.

முற்கூறிய பண்புகள் அனைத்தும் முற்றறிவு உடைய மெய்யுணர்வு உடையவனே சற்சீடன் (நன்மாணாக்கன்) ஆவான், எள்ளளவு காலமும் இடைவிடாமல் குரு காட்டிய வழியில் நின்று தெளிந்து உணர சிவபோகம் தானே விளையும். கணித வகுப்பில் ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அனைவரும் ஆரவத்துடன் பாடம் கேட்க, ஒரு மாணவன் மட்டும் விட்டத்தில் உள்ள ஓட்டையில் எலி ஒன்று நுழைவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஆசிரியர் வகுப்பில் பொதுவாக, என்ன நுழைந்ததா? (நான் சொல்லிய பாடம் உங்கள் தலையில் நுழைந்ததா என்ற பொருளில்) எனக் கேட்டார். விட்டத்தை வேடிக்கைப் பார்த்த மாணவன், "இன்னும் வால் மட்டும் நுழையவில்லை" என்றானாம். பாடத்தைக் கவனியாத மாணவனை ஆசிரியர் "ஏறுடா பெஞ்சு மேலே" என்றார். அவனே "சார் நான் கீழே விழுந்து அடிபட்டால் நீங்கள் போலிஸ், கோர்ட், கேஸ் என அலைய வேண்டியிருக்கும் சார்" என்றானாம். இன்றைய மாணவர்கள் நன்னூல் ஆசிரியரும், திருமூலரும் கூறும் மாணாக்கர் பற்றிய செய்திகளை நினைவிலிறுத்தி அதன்படி ஒழுகி நன்மாணாக்கர்களாக அனைவரும் திகழ வேண்டும்.

**கடைப்பிடிக்க வேண்டிய சில நெறிகள்**

குரு வழிபாடு செய்தல்வேண்டும். வழிபடுத்தல் என்றால் கைகளைக் கூப்பித் தலை தாழ்த்தி வணங்குவதை மட்டுமே குறிக்கவில்லை. குரு உபதேசித்த சிவஞானத்தைச் சிந்தித்து அருள்வழியில் நிற்றல் வேண்டும் என்பதை உணர்த்தும்.

"அறத்தில் திரியாப் படர்ச்சி வழிபாடே" (நன்னூல், சூத். 46)

என்று பவணந்தி முனிவர் கூறுவதையும்,

"கற்க கசடறக் கற்பவை கற்ற பின்
நிற்க அதற்குத் தக" (குறள். 391)

என்ற வள்ளுவர் வாக்கையும் இங்கு நினைவு கூர்க. சீடன் தான் பெற்ற சிவஞானத்திலிருந்து பிறழ்ந்து விடாமல் பேணி ஒழுக வேண்டும். சீடன் தன் உடமையாகக் கருதப்பட்ட பொருளையும், உடலையும், உயிரையும் குருவிற்குக் காணிக்கையாகக் கொடுக்க தயாராய் இருக்க வேண்டும். "உள்ள பொருள் உடல் ஆவி உடன் ஈக" (திருமந்திரம். 1693) என்கின்றார் திருமூலர். பண்டைக்காலத்தில் கல்வி கற்கும்பொழுது குருவின் இல்லத்திலேயே தங்கி அவருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து கல்வி கற்கும் முறை இருந்தது. கற்று முடிந்ததும் இல்லம் திரும்புமுன் குரு தட்சணையாகக் காணிக்கை கொடுக்கும் வழக்கமும் இருந்தது துரோணாச்சாரியரை மானசீகக் குருவாகக் கொண்டு, தானாகவே வில்வித்தை பயின்ற ஏகலைவன், பின்னால் குரு கேட்டதற்கிணங்க

தன் கட்டை விரலை வெட்டி அவருக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்தது பலரும் அறிந்த ஒன்று.

குருவை அவமரியாதை செய்தால் செல்வம் நீங்கும். கிலேதர யுகத்தில் தேவர்கோனாகிய இந்திரன் அரம்பையர்களின் ஆடல், பாடல் களில் தன்னையே மறந்திருந்தபோது, தேவகுருவாகிய வியாழபகவான் அங்கு வர, மதிமயக்கத்திலிருந்து இந்திரன் தன் சிங்காதனத்தை விட்டு எழுந்து வரவேற்று உபசாரம் செய்யாது வாளா இருந்ததால், அவனுடைய செல்வம் மங்கிக் குறையத் தொடங்கியது என்று திருவிளையாடல் புராணம் கூறுகின்றது. (இந்திரன் பழி தீர்ந்தது).

வந்தனை செய்ய வேண்டிய குருவைச் சீடன் நிந்தனை செய்தல் கூடாது. அவ்வாறு நிந்தித்தால் தீராத துன்பம் வரும். குருவை மனம் நோகும்படி செய்தவர் ஊர் சுற்றித் திரியும் நாயாகப் பிறந்து, பிறகு ஒரு யுகம் பூமியில் புழுவாய்க் கிடப்பர். (திருமந்திரம், 531). ஓரெழுத்து ஒரு மொழியாகிய பிரணவத்தை உபதேசித்த தவசீலரான குரு மனம் வருந்தும் வண்ணம் தீசை புரிந்தவர் இழிந்து ஒதுக்கப்பட்ட நாயாய் நூறு பிறவிகள் எடுப்பர். பின்பு தாழ்ந்த பிறப்பெடுத்து மண்ணிலே மடிவர் என்கிறார் திருமூலர். (திருமந்திரம். 533). எந்தப் பாவத்திற்கும் பரிகாரம் உண்டு, ஆனால் குருவைப் பழித்த பாவத்திற்குப் பரிகாரமே கிடையாது என்பர்.

சிவஞானத்தைப் போதித்த சற்குருவின் முன்னிலையில் பொய் சொல்லக் கூடாது. பொய் கூறினால் முன்பு பெற்ற தவம் கெடும். ஞானாசிரியரிடம் பெற்ற ஞானோபதேசம் தங்காது. பழமையாக உபதேசிக்கப் பட்ட நெறியையும் மறந்து ஆன்ம வளர்ச்சிக்குரிய பிற நெறியும் போய் வறுமை வந்தடையும் (திருமந்திரம். 535).

இவ்வாறு திருமூலர் கூறும் நன்மாணாக்கன் பற்றிய செய்திகள் எக்காலத்திலும் மாணவர்கட்கு மிகவும் பயன்படும்.

1. சற்சீடன் என்பவன் ஞானம் பெறும் பக்குவ நிலையிலுள்ள மாணவன்
2. சற்சீடனானவன், சிவஞானத்தை பற்றிய தெளிந்த அறிவுடைய ஒருவரையே குருவாக ஏற்றுக் கொள்ளவேண்டும்.
3. சற்சீடனானவன் புலன்வழிச் செல்லுகின்ற பொறிகளைச் சிவத்தின் வழிச்செல்ல மனமாற்றம் செய்யவேண்டும்.
4. சற்சீடன் அறவழியில் நடத்தல் வேண்டும்.
5. சற்சீடன் சித்தத்தைச் சிவன்பால் வைக்க வேண்டும்.
6. சற்சீடன் நற்பண்புகளை உடையவனாயிருத்தல் வேண்டும்.

7. சற்சீடன் எப்போழுதும் உண்மையே பேச வேண்டும்.
8. சற்சீடன் சிவன்மீது கொண்டிருக்கும் பற்றைப்போல எல்லா உயிர்களிடத்தும் பற்றும். இரக்கமும் கொள்ள வேண்டும்.
9. சைவ சாதன நெறிகளை பின்பற்றியும், குவை வழிபடல் வேண்டும்.
10. குருவிடம் அர்ப்பணிப்பு உணர்வு வேண்டும்.
11. சாத்வீக குணம் உடையவனாயிருத்தல் வேண்டும்.
12. இன்றைய சற்சீடன் நாளைய சற்குரு. எனவே தலைமைக் குணம் உடையவனாய்த் திகழல் வேண்டும்.
13. சீற்சீடன் தன்னுடைய நிழல் தன்னை விட்டு நீங்காமல் இருப்பது போல, குருவை விட்டு நீங்காமல் இருத்தல் வேண்டும்.
14. ஆசிரியரிடம் சிவஞானத்தை பலமுறை கேட்டு, சிந்தித்து தெளிதல் வேண்டும்.
15. குரு கற்பித்த சிவஞானத்தைச் சிந்தித்து, அருள் வழியில் நிற்றல் வேண்டும்.
16. தன்னுடைய உடல், பொருள், ஆன்மாவை குருவுக்காக அர்ப்பணிக்கவும் தயாராய் இருத்தல் வேண்டும்.
17. வந்தனை செய்யவேண்டிய குருவைச் சீடன் நிந்தனை செய்தல் கூடாது. அவ்வாறு நிந்தித்தால் தீராத துன்பம் வரும். குருவை யழித்த பாவத்திற்கு பரிகாரமே கிடையாது.

# 27. திருமந்திரம் காட்டும் புறங்கூறாமை

முனைவர் மு. கோவிந்தராசன், சென்னை.

**புறங்கூறாமை - விளக்கம்**

புறங்கூறாமை என்பது ஒருவர் இல்லாத பொழுது ஒருவரைப் பழித்துக் கூறுதல் என்கிறார் திருவள்ளுவர். புறங்கூறாமையாவது புறத்தில் சென்று கூறாமையாகும். அதாவது புறத்தில் பெருமையைக் கூறாமல் அகத்தில் அருமையைக் காணவேண்டும். உபசாந்தம் பெற்றபின் புறம் சொல்லக் கூடாது என்பது திருமூலரின் கருத்தாகும். இவ்இருவரின் கருத்துக்கள் அடிப்படையில் இக்கட்டுரை அமையப் பெற்றுள்ளது.

**புறங்கூறாமை - திருவள்ளுவர்**

திருவள்ளுவர் 'புறங்கூறாமை' என்ற அதிகாரமே படைத்துள்ளார். அறநெறி பற்றி வாயினால் சொல்லாதவனாய், பாவங்களைச் செய்பவ னானாலும் புறம் பேசமாட்டான் என்று பெயரெடுத்தல் இனியதாகும். அறத்தை அழித்துப் பாவங்களைச் செய்வதைவிட ஒருவனைக் காணாத போது இழிவாகப் பேசிக் கண்டபோது பொய்யாகச் சிரித்து முகம் மலர்தல் தீமையாகும் என்பது திருவள்ளுவரின் கருத்தாகும். இதனை,

அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை (குறள் 182)

என்கிறார். அவர் மேலும் கூறுகையில், ஒருவனைக் காணாதபோது இழிவாகப் பேசி, கண்டபோது பொய்யாக மகிழ்ந்து பேசி உயிர் வாழ்வதை விடச் சாதல் அறநூலில் சொல்லப்பட்ட பயனைத்தரும்.

ஒருவன் எதிரில் நின்று இரக்கமில்லாமல் கடுஞ்சொற்களைக் கூறினாலும் கூறலாம். ஆனால் எதிரில் இல்லாதபோது பின் விளைவை நோக்காமல், பழிச் சொற்களைச் சொல்லாதிருக்க வேண்டும்.

ஒருவன் அறம் சிறந்தது என்னும் அன்புள்ளம் வாய்க்கப் பெறாதவன் என்பதை, அவன் புறம் பேசும் அற்பச் செயலால் தெரிந்து கொள்ளலாம். பிறரைப் பழித்துப் புறம் பேசுபவன், பிறராலும் குற்றங்களைக் கண்டு தன் பிறர் இழித்துக் கூறும் இழிநிலையை அடைவான். மனமகிழ்வோடுப் பேசி, நட்புடன் இருத்தலின் பெருமை அறியாதவர்கள் பிளவு உண்டாகுமாறு பேசி உறவினையும் பிரித்து விடுவார்கள்.

நெருங்கிப் பழகும் நண்பர்களையே குற்றம் கூறித் திரிகின்ற புறங் கூறும் தன்மையுள்ளவர் முன்பின் அறியாதவர்களை என்ன செய்ய மாட்டார்கள்? இல்லாத நேரத்தில் புறங்கூறுபவனுடைய உடல் பாரத்தை உலகமானது, இவனையும் பொறுத்தல் அறம் என்று தாங்குகிறதோ?

இவ்அதிகாரத்தின் இறுதியில்,

**ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்**
**தீதுண்டோ மன்னும் உயிர்க்கு** (குறள் 190)

எனக் குறிக்கப் பெற்றுள்ளது. அதாவது, மற்றவரிடம் குற்றம் காண்பது போலத் தன் குற்றத்தையும் காணுகின்ற பண்பு இருந்தால், நிலைபெற்ற உயிருக்குத் தீமை உண்டாகுமோ? என்பது திருவள்ளுவரின் கருத்தாகும்.

### புறங்கூறாமை - திருமூலர்

திருமூலர் இயற்றிய திருமந்திரத்தில், எட்டாம் தந்திரத்தில், நாற்பத்து மூன்று தலைப்புகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள், 'புறங்கூறாமை' என்பது முப்பதாவது தலைப்பில் காணப்பெறுகின்றது. இதில் பதினைந்து பாடல்கள் உள்ளன. (2512-2526) (பன்னிரு திருமுறைகள், நராயண வேலுப்பிள்ளை, பக். 337-343).

உலக வாழ்வில், ஒருவரின் உழைப்பையும் வளர்ச்சியையும் கண்டு பாராட்டவில்லை என்றாலும், பொறாமை உள்ளத்துடன் புறங்கூறுதல் தகாது என்பது அறிஞர் பெருமக்களின் கருத்தாகும். தானும் வளர்ச்சி அடைய மாட்டான்; வளர்ச்சி அடைபவர்களைக் கண்டாலும் பிடிக்காது. அதற்குக் காரணம் அறியாமை; பொறாமை; உண்மையின்மை. இவை யாவும் நீங்க வேண்டுமானால், புறத்தைத் (உடம்பு) தூய்மை செய்து பயனில்லை; பிறர் பாராட்டுவதற்காகப் போலி வார்த்தைகளைப் பேசிப் பயனில்லை; அகத்தைத் (மனத்தை) தூய்மையாய் வைத்துக்கொள்ள வேண்டும்.

அகத்தைப் பெனாயில் (Phenol) போட்டுக் கழுவ வேண்டாம்; நல்ல எண்ணங்களை எண்ண வேண்டும்; தியானம், யோகப் பயிற்சி செய்தல் நன்று; இரண்டு நிமிடம் நினைத்தாலும் இறைவனை முழுமையாக நினைக்க வேண்டும்; வழிபட வேண்டும்; வழிபட்ட உடனே பலனை எதிர்பார்க்கக் கூடாது (Fast Food மாதிரி) என்பது திருமூலரின் கருத்தாகும்.

இக்கருத்துகளின் அடிப்படையில் திருமூலர், 'புறங்கூறாமை' என்னும் தலைப்பில் புறங்கூறுவாரின் தன்மையினையும், சிவபெருமானின் உயர் வினையும் எடுத்துக்காட்டியுள்ளார். அவற்றை இனிக் காண்போம்.

### புறங்கூறுவார் தன்மைகள்

சந்திரனில் காணப்பெறும் கறையை நீக்குவதற்காக, மணிகட்டிய வாளைக் கொண்டு செல்பவர் போன்று திருநீலகண்டனைக் காணமாட்டாதவர்

உபசாந்த நிலையை அறிவோம் என்று கூறித் திரிவர். இவர் வீண் ஆரவாரம் செய்பவரே அன்றி அகத்தில் அறியாதவராவர் என்பது திருமூலர் சொல்ல விழையும் கருத்தாகும். இதனையடுத்து வரும் பாடலில்,

**கருந்தாள் கருடன் விசும்பூடு இறப்பக்**
**கருந்தாள் கயத்தில் கரும்பாம்பு நீங்க**
**பெருந்தன்மை பேசுதி நீஒழி நெஞ்சே**
**அருந்தா அலைகடல் ஆறுசென் றாலே** (2513)

எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

வலிமைமிக்கக் கருடன் விசும்பில் (விண்வெளி) ஆறாகப் பறந்து கொண்டிருக்கிறது. ஆனால் மிகவும் ஆழமுள்ள புற்றில் வாழும் பாம்பு மூச்சடக்கி, மடங்கி, ஒடுங்கிக் கிடக்கின்றது. அதுபோன்று நெஞ்சமே! நீயும் அடங்கி நிற்கும் வழியை அருளால் அறிந்து அடங்குதல் வேண்டும். அம்முறையினைச் சிறிதும் உணராமல் உணர்ந்தாரைப் போன்று நெஞ்சமே! வீண்பெருமை பேசுகின்றாய். அதனால் பயன் ஒன்றுமில்லை. ஆறு அலைகடலில் சென்று பிரித்தறிய வாராமல் அடங்கியிருப்பது போன்று அடங்கியிருப்பாயாக! எனப் பாடல்வழி, புறங்கூறுவாரின் தன்மையினைக் கூறியுள்ளார் திருமூலர்.

**புறங்கூறாமை - இறைவனை நாடல்**

சிவபெருமானே முழு முதற் கடவுள்; அம்மை அப்பனாக இருந்து உலகைக் காக்க இரண்டாய் நின்றவன்; முக்குணங்கள் நிறைந்தவன்; நான்மறைகளாக விளங்குபவன்; ஐம்பொறிகளை அடக்கி உலகிற்கு ஆதாரமாக இருப்பவன்; அனைத்து உயிர்களிலும் கலந்திருப்பவன். அத்தகையவனைத் தொழுதால் (வணங்கினால்) மனம் தூய்மை அடையும்.

போர்முனைக்குச் சென்று பகைவர்களை அழித்து வெற்றி பெறுவது உண்மையான அறிவன்று. தாம் எண்ணியதை அடைவதற்காக, இறைவனின் திருவருள், சிறப்புகள் நினைத்து, அடக்கத்துடன் இருந்தாலே போதுமான தாகும். எல்லாச் செயல்களும் கைக்கூடும். தீய எண்ணங்கள் அகலும்; நன்மைகள் பெருகும். இதனை,

**கருதலர் மாளக் கருவாயில் நின்ற**
**பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை**
**மருவலர் செய்கின்ற மாதவம் ஒத்தால்**
**தருவலர் கேட்ட தனியும்ப ராமே** (2514)

என்கிறார் திருமூலர்.

என்னைக் காட்டிலும் எனக்கு இனிமை தரும் இறைவனை, பொன்னைக் காட்டிலும் பிரகாசமுடைய தூய்மை நிறைந்தவன் சிவபெருமான். எல்லா

உயிர்களுக்கும் உயிராய் விளங்கும் இறைவன் மீது மனத்தைத் திருவடியில் பதித்து நினையுங்கள் அவர் மேலும் கூறுகையில்,

**நின்றும் இருந்தும் கிடந்தும் நிமலனை**
**ஒன்றும் பொருள்கள் உரைப்பல ராகிலும்**
**வென்றுஐம் புலனும் விரைந்து பிணக்கறுவத்து**
**ஒன்றாய் உணரும் ஒருவனும் ஆமே** (2517)

என்கிறார்.

நிற்கும்போதும் உட்கார்ந்திருக்கும் போதும் படுத்துள்ளபோதும் சிவபெருமானைப் பொருந்தும் நிலைகளில் எல்லாம் வாயால் கூறுவ ராகிலும், ஐம்புல ஆசைகளைக் கெடுத்து அவற்றினை ஒவ்வொன்றாய் அறியும் தன்மையைப் போக்கி, சிவத்தோடு உண்மையாகப் பொருந்த வேண்டும். அவ்வாறு இருந்தால், ஐம்புல அறிவையும் ஒரு சேரப் பெறும் தன்மையைப் பெறலாம்.

**ஒன்றே குலம் – ஒருவனே தேவன்**

சிவபெருமான் தான் முழு முதற்கடவுள். திருமூலர் காலத்தில் தமிழ்நாட்டில் சைவசமயமும் சிவவழிபாடும் நிலைபெற்றிருந்தன என்பதை,

**"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின் நமனில்லை நாணாமே**
**சென்றே புகுங்கதி இல்லைநும் சித்தத்து**
**நின்றே நிலைபெற நீர்நினைந்து உய்மினே"** (2104)

என்னும் பாடல்வரிகள் உணர்த்துகின்றன. இச்செய்தி ஏழாம் தந்திரம் இதோபதேசத்திலும் இடம்பெற்றுள்ளது.

முன்னாளில், செந்தமிழ்நாட்டு மக்கள் அனைவரும் சிவனை வழிபட்டனர்; வணங்கி வந்தனர். அதனால் சைவர்கள் ஒரு குலமாக இருந்து வந்தனர். பாகுபாடில்லை. தொழில் பற்றிய குலம் வெவ்வேறாக இருந்தாலும் வழிபாட்டுக் குலம் ஒன்றாக இருந்தது. அனைவரும் ஒற்றுமையாக, இணக்கமாக வாழ்ந்தனர். அதனால் 'ஒன்றே குலம்' என்னும் மறைமொழி எழுந்தது. அதுபோல, செந்தமிழர் அனைவரும் சிவபெருமானை முழுமுதற் தெய்வமாக வணங்கினர். அதனால் 'ஒருவனே தேவன்' என்னும் மறைமொழி உருவாயிற்று.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்னும் கருத்தின் அடிப்படையில், கம்பர், யுத்த காண்டத்தில் கூறுகையில்,

**"ஒன்றே யென்னின் ஒன்றே யாம்**
**பலவென்று உரைக்கிற் பலவே யாம்**

அன்றே யென்னின் அன்றே யாம்
ஆமே யென்னின் ஆமே யாம்
இன்றே யென்னின் இன்றே யாம்
உளது என்றுரைக்கிற் உளதே யாம்
நன்றே நம்பி குடிவாழ்க்கை
நமக்கு இங்கு என்ன பிழைப் பம்மா"

என்கிறார்.

இப்பாடல், இறைவனைப் பற்றிப் பல்வேறு சிந்தனைகள் கொண்டமைந்தவையாகும். இச்சிந்தனைகளை விலக்கி, சிவபெருமான் தான் முழுமுதற் கடவுள் என்றும், புறங்கூறாமல் இருக்க உதவுபவரும் அவரே தான் என்றும் திருமூலர் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**அவரவர் மனத்துள் உறைபவர்**

சிவபெருமானை இரவு பகல் எனப்பாராமல் வணங்குபவர், தேவர்கள் மட்டுமே காணமுடியும். சிற்றறிவாளர்களரல் அறியமுடியாது. புற இடங்களில் இறைவனைத் தேடாமல், நம்மிடத்தில் உறைந்துள்ள இறைவனை, அகத்தில் வீற்றிருப்பவனை, தொழ வேண்டும். நாளும் அவன் திருவடிகளை வணங்க வேண்டும். அவ்வாறு வணங்கி வந்தால் நம்மில் இரண்டறக் கலந்து காணப்பெறும் அறியாமையாகிய இருள் விலகும். ஒளிவிளக்கு தோன்றும். நம் மனத்தினுள் அமர்ந்திருப்பான். நம்முடைய எண்ணங்களை நாமே அறிந்துகொள்ள முடியும். இதனைத் திருமூலர் கூறுகையில்,

விண்ணவ ராலும் அறிவுஅறி யான்தன்னைக்
கண்ணற வுள்ளே கருதிடின் காலையில்
என்உற வாகமுப் போதும் இயற்றிநீ
பண்ணிடில் தன்மை பராபர னாமே (2519)

என்கிறார். இக்கருத்திற்கு அரண்சேர்க்கும் வகையில் திருவள்ளுவர், 'துறவு' என்னும் அதிகாரத்தில்,

வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல (குறள் 342)

எனக் குறிப்பிட்டுள்ளார். துன்பமற்ற நிலையை அடைய விரும்பினால், செல்வம் உள்ள பொழுதே பற்றைத் துறந்து விடவேண்டும். துறந்த பிறகு இன்பங்கள் பல உண்டாகும் என்பது திருவள்ளுவரின் கருத்தாகும்.

சிவபெருமானுக்கு, செங்கற்களால் கோவில் கட்டி வழிபடாமல், மனத்தினுள் கட்டடம் எழுப்பி வழிபட்டவர் பூசலார் நாயனார். "உள்ளம் பெருங்கோவில்; ஊன் உடம்பே ஆலயம்" எனக் கூறியவர். இறைவனைப் புறத்தில் தேடாமல், அகத்தில் தேடிக் கண்டுபிடித்து வழிபட்டவர் என்னும்

கருத்தும் நினைக்கத் தக்கது. அதனால் அவர் யாரையும் புறங்கூறாமல் வாழ்ந்து வந்தார்.

**இறைவன் திருவடிப் பெருமை**

சிவபெருமான் தன்னை ஒப்பாரின்றி ஏழ் உலகங்களிலும் நிறைந் துள்ளான். அவனுடைய திருவடியைத் தஞ்சமாகக் கொண்ட பின்பு பேரருளை அளித்த பெருமை மிக்க வள்ளலுமாவான். மாறுபாடில்லாத மனத்தை உடையவரின் அறிவினுள் விளங்குபவன். வாடாத சகஸ்ரதள மலரைப் பொருந்தி நிற்கும் புகழை உடையவன். அத்தகையவனை நாளும் வழிபட்டால் புறங்கூற வேண்டும் என்ற எண்ணமே எழாது என்பது திருமூலரின் கருத்தாகும். இதனைப் பின்வரும் பாடல் விளக்குகின்றது.

ஒன்றாய் உலகுடன் ஏழும் பரந்தவன்
பின்தான் அருள்செய்த பேரருள் ஆளவன்
கன்றா மனத்தார்தம் கல்வியுள் நல்லவன்
பொன்றாத போது புனைபுக ழானே (2520)

என்பன பாடல் வரிகளாகும்.

**திருமூலர் இறைவனைக் கண்ட விதம்**

என் தந்தையாகிய சிவபெருமானின் பொன்போன்ற திருவடியைப் போற்றினேன். பின்பு திருவடியினை ஏற்றுதலாகிய பரவுதலைச் செய்தேன். செய்த பிறகு அகத்தினுள் ஓர் ஓசை உண்டாயிற்று. அவ் ஓசை உயிர்ப்புப் பயிற்சியால் அகத்தினில் தொடர்ந்து அடிக்கும் மணியோசையாகும்.

அகவிளக்காய்த் தோன்றும் அவ்ஓசை உடம்பு எங்கும் கலந்து நிற்கும். அத்தன்மையினையும் அதனால் விளங்கும் அருளாற்றலையும் அந்நாளில் கண்டேன் என்கிறார் திருமூலர்.

என்னுடைய அகத்தாமரையில் நான் இறைவனைத் தேடி அவன் அங்கு எழுந்தருளியிருப்பதைக் கண்டு கொண்டேன். அவ்விதம் உடலில் விளங்கும் அவனை உட்புகுந்து காண்பார் இல்லை. எலும்புக் கூட்டைத் தாங்கி நிற்கும் பிரம தண்டத்தின் வழியாக உச்சித் தொளையை அடைந்தேன். அவனது கோலத்தைக் கண்ணை மூடிக் கண்டேன். அப்பொழுது உலகப் பொருள்கள் யாவும் கண்டேன்.

இந்த அளவிற்கு இறைவனை வழிபட முடியவில்லை என்றாலும் முடிந்த அளவில் இறைவனை வழிபட்டு வந்தால் பகை உணர்வோ, புறங்கூற வேண்டும் என்ற சிந்தனையோ எழாது என்ற கருத்து உய்த்துணர முடிகிறது.

இறைவனின் தாட்சியைத் திருமூலர் பின்வரும் இரண்டு பாடலில் வெளிப்படுத்தியுள்ளார். அவை வருமாறு:

"போற்றியென் றேன் எந்தை பொன்னான சேவடி
ஏற்றியே தென்றும் எறிமணி தான் அகக்
காற்றின் விளக்கது காயம் மயக்குறும்
ஆற்றலும் கேட்டது மன்றுகள் டேனே" (2521)

எனவரும் பாடலும்,

தேடிக்கொண்டு என்உள்ளே நேர்தரு நந்தியை
ஊடுபுக்கு ஆரும் உணர்ந்தறி வார் இல்லை
கூடுபுக்கு ஏறலுற் றேன் அவன் கோலம்கண்டு
மூடிக்கண் டேன்உலகு ஏழும்கண் டேனே (2522)

எனவரும் பாடலும் நயமிக்கவையாகும்.

## புறங்கூறாமலிருக்க உதவுவது நமச்சிவாயம்

ஒருவனுக்கு மனைவி, மக்கள், உடன் பிறந்தவர்கள் ஆகியோர் அனைவரும் வாழ்கின்ற சில ஆண்டுகள் தான் உடனிருப்பர். ஆனால் இறப்பின் முன்னும் பின்னும் நம்முடன், நம் செயலில் ஒன்றாய் கலந் திருப்பவன் ஐந்து எழுத்து மந்திரத்தை உடைய நமச்சிவாயனே. அவனே பிறரைப் புறங் கூறாமலிருக்க உதவுவான் என்கிறார் திருமூலர்.

வாழ்வும் மனைவியும் மக்கள் உடன் பிறந்
தாரும் உளவேது எமக்கு என்பர் ஒண்பொருள்
மேவும் அதனை விரிவு செய்வார்கட்குக்
கூவுஞ் துணைஒன்று கூடலும் ஆமே

என்பன பாடல் வரிகளாகும்.

## தொகுப்புரை

இக்கட்டுரையில் புறங்கூறாமை பற்றிய விளக்கம், புறங்கூறாமை குறித்து திருவள்ளுவர், திருமூலர் கருத்துக்கள், புறங்கூறுவார் தன்மைகள், இறைவனை நாடும் விதம், ஒன்றே குலம் ஒருவனே தேவன், அவரவர் மனத்துள் உறைபவர், இறைவன் திருவடிப் பெருமை, திருமூலர் இறைவனைக் கண்ட விதம், புறங்கூறாமலிருக்க உதவுவது நமச்சிவாயம் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

# 28. திருமந்திரத்தில் பிறப்பியல்

முனைவர் மோ.கோ. கோவைமணி, தஞ்சாவூர்.

தொல்காப்பியரின் பிறப்பியலிலிருந்து திருமூலரின் பிறப்பியல் முற்றிலும் வேறானது. தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தில் மூன்றாவது இயலான பிறப்பியல் எழுத்துக்களின் பிறப்பினை உணர்த்துவதாகும். திருமூலரின் திருமந்திரத்தில் 477-486 வரையுள்ள பத்துப் பாடல்களும் உயிர்களின் பிறப்பியலையும், அவற்றின் தன்மைகளையும் இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

**சுவாசம்**

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என வாயுக்கள் பத்து வகைப்படும். இதில் முதலாவதாக இடம்பெறும் பிராண வாயுவே சுவாசம் நடைபெறு வதற்கு மூலகாரணமாக அமைகின்றது. இது நெற்றியின் நடுப்பகுதியில் பிறக்கின்றது. இப்பிராண வாயு நடுமுதுகில் ஓடும் சித்திரநாடி எனப்படும் சுழிமுனை நாடியில் விழுந்து மூலாதாரத்தில் ''ஓம்'' என்று உதித்துப் பின் தொப்புளின் வளையத்திலே ''ரீம்'' என்று முட்டி நின்று இடகலை, பிங்கலை என்னும் நாடிகளில் ஓடி, கபாலத்தைச் சுற்றி பின் மூக்கின் வழியாய் மூச்சு விடுவதனால் பன்னிரண்டு அங்குலம் சென்று, மீண்டும் எட்டங்குலம் உட்புறம் பாய்ந்து செயல்படும். இச்செயலே சுவாசம் எனப்படும்.

இச்சுவாசம், எந்தவித நோய்த் தன்மைகளும் இல்லாதவருடைய உடலில் ஒரு நாழிகைக்கு முன்னூற்றறுபது சுவாசமும்; ஒரு நாளைக்கு, அதாவது ஓரிரவும் பகலும் சேர்ந்த அறுபது நாழிகைக்கு (360 x 60 = 21,600) இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசமும் உள்வாங்குகின்றது. இதில் மூன்றில் ஒரு பங்கான ஏழாயிரத்து இருநூறு (7,200) சுவாசம் வெளிப்பட்டு விடுகின்றது. மற்ற இரண்டு பங்கான பதினான்காயிரத்து நானூறு (14,400) சுவாசம் உள்ளடங்குகின்றது.

**நாடி**

நாடி, இதயத்தின் இடது சடரம் (Left Ventricle) குவியும்போது இதயத்தில் இருந்து வெளிப்படும் இரத்தம் உடலிலுள்ள நரம்புகளின் வழியோடி இங்கும் அங்கும் பரவும். அப்போது நாடிகள் விரியும்.

மீண்டுமது விரிகையில் நாடிகளில் இரத்தம் குறைந்து நாடி சுருங்கும். இவ்வாறு விரிந்தும் குவிந்தும் வருவதனால் அதனுடன் இணைந்த நாடி களும் விரிதலையும் குவிதலையும் மேற்கொள்ளும் இச்செய்கையே நாடி எனப்படும். இவ்வாறு உண்டாகும் நாடி உடல் முழுவதும் உரிபோல் பின்னி நிற்கின்றது. இந்நாடி எழுபத்தீராயிரம் வகைப்படும்.

இவ்எழுபத்தீராயிரம் நாடிகளுள் பத்து நாடிகள் சிறப்பிடம் பெறுகின்றன. அவை, இடகலை, பிங்கலை, சுழிமுனை, சிங்குவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குரு எனப்படும்.

| | | |
|---|---|---|
| இடகலை | - | வலக்கால் பெருவிரலில் இருந்து கத்திரிக்கோல் போல் இடது மூக்கைப் பற்றி நிற்கும். |
| பிங்கலை | - | இடக்கால் பெருவிரலில் இருந்து கத்தரிக்கோல் போல் வலது மூக்கைப் பற்றி நிற்கும். |
| சுழிமுனை | - | மூலாதாரத்தைத் தொடர்ந்து எல்லா நாடிகளுக்கும் ஆதாரமாக நடுநாடியாகச் சிரசளவும் முட்டி நிற்கும். |
| சிங்குவை | - | உள் நாக்கில் நிற்கும். |
| புருடன் | - | வலக்கண்ணளவாய் நிற்கும். |
| காந்தாரி | - | இடக்கண்ணளவாய் நிற்கும். |
| அத்தி | - | வலக்காதளவாய் நிற்கும். |
| அலம்புடை | - | இடக்காதளவாய் நிற்கும். |
| சங்கிலி | - | குறியளவாய் நிற்கும். |
| குரு | - | அபானத்தளவாய் நிற்கும். |

மேலே குறிப்பிட்ட பத்து வகை நாடிகளுள் முதல் மூன்று நாடிகளான இடகலை, பிங்கலை சுழிமுனை என்னும் மூன்று நாடிகள் மிகவும் சிறப்பிடம் பெறுகின்றன. உடலில் காணப்படும் எழுபத்தீராயிரம் நாடிகளுள் இருநூற்று நாற்பத்தைந்து நாடிகளே உணரவும் உணர்த்தவும் கூடியனவாக உள்ளன. இந்த இருநூற்று நாற்பத்தைந்து நாடிகளில் இடகலை, பிங்கலை, சுழிமுனை என்னும் மூன்று நாடிகளும் அடங்கும். இம்மூன்று நாடிகளில், இடகலை நாடியினை வாத நாடியாகவும், பிங்கலை நாடியினைப் பித்த நாடியாகவும், சுழிமுனை நாடியினைச் சிலேத்தும நாடியாகவும் கருதப் படுகின்றது.

வாத பித்த சிலேத்தும நாடிகள் ஒரே நரம்பில் கைநாடியில் காணப்படும். இதனை, நோயாளியை உட்கார வைத்து அவரின் கையைப் பிடிக்க வேண்டும். நோயாளி ஆணாக இருந்தால் வலது கையையும், பெண்ணாக இருந்தால் இடது கையையும், அலியாக இருந்தால் இரண்டு கைகளையும் பிடிக்க வேண்டும். கையைப் பிடிக்கும் போது முதல் பணியாக விரல்களின்

மூட்டுகளில் தங்கியிருக்கும் வாயுவை அகற்றுவதற்காக விரல்களைச் சுடக்கி விட வேண்டும். பின், உள்ளங்கையில் சூடு உண்டாகும் அளவிற்குத் தேய்த்துவிட வேண்டும். முன்கையின் ஆரையெலும்பின் மேற்புறமுள்ள பெருநாடியை மணிக்கட்டுக்கு ஒரு அங்குலம் கீழாக நோக்கி சுட்டுவிரல், நடுவிரல், மோதிவிரல் ஆகிய மூன்று விரல்களால் ஒருவிரல் விட்டு மற்றொரு விரலால் அழுத்தியும், தளர்த்தியும் பார்க்க வேண்டும். அவ்வாறு பார்க்கும் போது சுட்டு விரலில் உணர்வது வாதம் என்றும், நடு விரலில் உணர்வது பித்தம் என்றும், மோதிர விரலில் உணர்வது சிலேத்துமம் என்றும் இம் மூன்று வகை நாடிகளையும் அறியலாம்.

சுவாசத்தை அடிப்படையாகக் கொண்டெழும் நாடி, போக காலத்தில் இருக்கும் தன்மையைக் கொண்டு உயிரின் பிறப்பியல் உணர்த்தப்படுகிறது. தமிழர்கள் அறிவியலைத் தம் மூச்சை விட்டும் இழுத்தும் பயிலும் முறையில் கண்டுள்ளனர். இதனைப் 'பிராணாயாம முறை' என்பர். நாசியின் வழிகளில் வரும் மூச்சினை நம் விருப்பத்தின்படி நடக்க அமைப்பதே பிராணாயாமப் பயிற்சியாகும். இந்தப் பயிற்சியினால் ஆண்பிள்ளைகளை வேண்டின் ஆண் பிள்ளையையும், பெண்பிள்ளை வேண்டின் பெண் பிள்ளையையும் பெறலாம். ஏன், அலிப்பிள்ளைகள் பிறப்பதற்கும் காரணம் இந்தப் பிராணாயாமப் பயிற்சியே என்பர். இக்கருத்தின் அடிப்படையில் திருமூலரின் திருமந்திரம் அமைந்திருப்பதைப் பின்வருமாறு காணலாம்.

## மூவகைப் பிறப்பியல்

உயிரை ஆணாகவும், பெண்ணாகவும், அலியாகவும் பார்த்தல் கூடாது. அவ்வுயிர் உடலோடு சேர்ந்த பிறகுதான் ஆணாகவும், பெண்ணாகவும், அலியாகவும் மாறுகிறது. உயிருக்கு இம்முத்திறத் தன்மை இல்லை. உடம்புக்கே இம்முத்திரத்தன்மை உண்டு என்பர். இம்முத்திறத் தன்மையை உண்டாக்குபவர்கள் தாய் தந்தையரே ஆவர். தாய் தந்தையரின் தன்மையைத் திருமூலர்,

"மாண்பது வாக வளர்கின்ற வன்னியைக்
காண்பது ஆண்பெண் அலியெனும் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தான் அச்சோதிதன் ஆண்மையே" (திருமந். 477)

என்கிறார். மேலும், ஆண் குழந்தை பிறப்பதும், பெண் குழந்தை பிறப்பதும் தாய் தந்தையரின் தன்மையைக் கொண்டேயாகும். கூட்டுறவின்போது ஆண் தன்மை மிகுந்திருந்தால் ஆண் குழந்தை உண்டாகும் என்றும், பெண் தன்மை மிகுந்திருந்தால் பெண் குழந்தை உண்டாகும் என்றும், ஆண் தன்மையும் பெண் தன்மையும் சமமாக இருந்தால் அலிக்குழந்தை உண்டாகும் என்றும் கூறுவர். இதனைத் திருமூலர்,

"ஆண்மிகில் ஆண்ஆகும் பெண்மிகில் பெண்ஆகும்
பூண்இரண் டொத்துப் பொருந்தில் அலிஆகும்" (திருமந். 478)

என்கின்றார். ஆண், பெண், அலி ஆகிய உயிர்கள் பிறப்பதற்குப் போக காலத்தில் ஏற்படக்கூடிய சுவாச அமைப்பே காரணம் என்பர் அறிவியலார். அதாவது, போக காலத்தில் ஆண் மகனின் சுவாசம் வலது நாசி (சூரிய கலை)யில் இருக்கும்போது ஆண் குழந்தை உண்டாகும் என்றும், இடது நாசி (சந்திர கலை)யில் இருக்கும்போது பெண் குழந்தை உண்டாகும், என்றும், வலது நாசி (சூரிய கலை)யும், இடது நாசி (சந்திர கலை)யும் ஒத்து இயங்கினால் அலிக்குழந்தை உண்டாகும் என்றும், சுக்கிலத்தைச் செலுத்தும் பிராண வாயுவோடு அபானன் என்னும் மலக்காற்று எதிர்த்தால் சுக்கிலம் சிதைந்து இரட்டைக் குழந்தை உண்டாகும் என்றும் கூறுவர். இதனைத் திருமூலர்,

"குழவியும் ஆணாம் வலத்தது ஆகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது ஆகில்
குழவியும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவி அலியாகும் கொண்டகால் ஒக்கிலே" (திருமந். 482)

என்கிறார்.

### தோற்ற ஆயுள்

ஆணாகவும், பெண்ணாகவும், அலியாகவும் பிறக்கும் குழந்தை எவ்வளவு காலம் வாழும் என்பதைக் கருத்தரிக்கும் விதங்கொண்டே கணக்கிடுவர். சுக்கிலமானது ஆணிடமிருந்து பிரிந்து ஐந்து விரற்கடை ஓடி விழுந்தால் பிறக்கும் குழந்தை நூறாண்டு வாழும் என்றும், நான்கு விரற்கடை ஓடி விழுந்தால் பிறக்கும் குழந்தை எண்பதாண்டு வாழும் என்றும் கூறுவர். இதனைத் திருமூலர்,

"பாய்ந்தபின் அஞ்சோடில் ஆயுளும் நூறாகும்
பாய்ந்தபின் நாலோடில் பாரினில் எண்பதாம்" (திருமந். 479)

என்கிறார்.

### பிறப்பும் பிறப்பின்மையும்

புணரும்போது, சுவாசமானது ஆணுக்கும் பெண்ணுக்கும் வலது நாசி அல்லது இடது நாசியில் ஒத்து இருக்குமாயின் உண்டாகும் குழந்தை அழகாக இருக்கும் என்றும், சுவாசமானது ஆணுக்கும் பெண்ணுக்கும் வலது நாசி அல்லது இடது நாசியில் ஒவ்வாமை இருக்குமாயின் அப்போது குழந்தை உண்டாகாது என்றும் கூறுவர். இதனைத் திருமூலர்,

கொண்டநல் வாயு இருவர்க்கும் ஒத்தெழில்
கொண்ட குழவியும் கோமளம் ஆயிடும்

கொண்டநல் வாயு இருவர்க்கும் குழறிடில்
கொண்டதும் இல்லையாம் கோல்வளை யாட்கே" (திருமந். 483)

என்கிறார்.

**கருப்பாசய நிலை**

கருப்பையில் வளரும் குழந்தையும் அண்ணாக்கினுள்ளே விளங்கும் சோதியும் ஒன்றாகும். அது ஆணாகவோ பெண்ணாகவோ வளர்ந்து சூரியனது பொன்னுருவைப் போன்று வளர்ச்சியுற்றுப் பூரணமான உருவத்தைப் பெறும் என்பதைத் திருமூலர்,

"கோல்வளை உந்தியில் கொண்ட குழவியும்
தால்வலை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே" (திருமந். 484)

என்கிறார். கருவானது கருப்பையில் பத்து மாதங்கள் வளர்ந்து பக்குவம் உண்டான பிறகே பூமியில் பிறந்து வளரும் தன்மையைப் பெறும். இதனைத் திருமூலர்,

"உருவம் வளர்ந்திடும் ஒண்திங்கள் பத்தில்
பருவமது ஆகவே பாரினில் வந்திடும்" (திருமந். 485)

என்கிறார். பிறக்கப் போகும் குழந்தை ஆணா? பெண்ணா? என்பதை வித்திட்ட தந்தையும், ஏற்றுக்கொண்ட தாயும் அறியமுடிவதில்லை. இதனைத் திருமூலர்,

"இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்" (திருமந். 486)

என்கிறார். ஆனால் இன்று அறிவியல் வளர்ச்சியின் காரணமாக பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்பதை முன்கூட்டியே அறிந்து கொள்ளும் நிலை ஏற்பட்டுள்ளதைக் காலவோட்டத்தில் ஏற்றுக்கொள்ளத் தான் வேண்டும்.

**உடல் குறைப்பாடு**

குட்டையாகவும், கூனாகவும், முடமாகவும், ஊமையாகவும், குருடாகவும், மந்தமாகவும் குழந்தை பிறப்பதைக் காண்கிறோம். இக் குறைபாட்டிற்குப் பல்வேறு காரணங்களைக் கூறினாலும், இவற்றிற்கெல்லாம் சுக்கிலத்தைச் செலுத்துகின்ற வாயுவே மூலகாரணமாக அமைகின்றது என்பர். சுவாசத்தின் மாறுபட்ட செயற்பாட்டால் விந்துவின் வேகத்தன்மை மாறுபடும். இதற்கேற்ப குழந்தை குட்டையாகவோ, முடமாகவோ, கூனாகவோ பிறக்கும். அதாவது, சுக்கிலத்தைச் செலுத்துகின்ற வாயு குறையுமானால் குழந்தை குட்டையாகவும், அவ்வாறு செலுத்துகின்ற

வாயு மெலிந்திருக்குமானால் குழந்தை முடமாகவும், அவ்வாயு தடைப்படுமானால் குழந்தை கூனாகவும் பிறக்கும் என்பர். இதனைத் திருமூலர்,

''பாய்கின்ற வாயு குறையின் குறள்ஆகும்
பாய்கின்ற வாயு இளைக்கின் முடம்ஆகும்
பாய்கின்ற வாயு நடுப்படின் கூன்ஆகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லை பார்க்கிலே'' (திருமந். 480)

என்கிறார். பெண்ணின் உடல் நிலையினாலும் குழந்தைகள் மந்தமாகவும், ஊமையாகவும், குருடாகவும் பிறக்கும் என்பதைத் திருமூலர்,

''மாதா உதரம் மலம்மிகின் மந்தனாம்
மாதா உதரம் சலம்மிகின் மூங்கையாம்
மாதா உதரம் இரண்டொக்கில் கண்இல்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே'' (திருமந். 481)

என்கிறார்.

ஆணாகவோ, பெண்ணாகவோ, அலியாகவோ பிறக்கும் குழந்தையின் தன்மையையும், அக்குழந்தை பிறந்தபின் அவற்றின் ஆயுள் காலத்தையும், அக்குழந்தை குறைப் பிறப்புடன் பிறப்பதற்கான காரணத்தையும் மேற் சுட்டிய திருமூலரின் திருமந்திரப் பாடல்களால் உணரமுடிகிறது. இவற்றைப் பார்க்கும்போது திருமூலர் ஒரு குழந்தைப்பேறு மருத்துவராக விளங்கி யுள்ளார் என்பது வெள்ளிடைமலை.

# 29. திருமந்திரம் உணர்த்தும் அறம்

செல்வி ச. சகுந்தலை, கோவை.

சைவம், தமிழ் ஆகிய இரு பெருந்துறைகளில் தலைசிறந்த நூல்களாகக் கருதப்படுபவை மூன்று. திருக்குறள், திருவாசகம், திருமந்திரம் ஆகியன மும்மணிகளாக ஒளிரும் தன்மையுடையன. இம்முத்தமிழ் நூல்கள் இம்மைக்கும், மறுமைக்கும் பயன்படுத்தும் தத்துவங்களையும், விழுமியங்களையும் கொண்டு விளங்குவன. 'உலகமே மாயம், காயமே பொய்' என்ற வாதம் வலுப்பட்டிருந்த காலத்தில் பாவச்சுமை 'மானிடப் பிறவி' என்று பாடிய பக்தர் கூட்டத்தை விட்டு விலகி 'உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்று பாடிய அருட்கவி 'திருமூலர்' தமிழர்க்கு, முத்தன பொதுமறை பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம். மானுடச் சிறப்புக்கு மகத்துவம் சேர்த்த மாமனிதன். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று புறம் பாடிய புலவனைப் போல 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று பாடிய ஆன்மநேய அருட்கவி திருமூலர். தமிழ் இமயம் திருமூலர் என்றால், இமயப்பரப்பின் நெடுவரை உச்சி திருமந்திரச் சிந்தைக்கும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

**சீலம் மிக்க நெறி சிவநெறி**

உலகில் நூறு வகையான சமயப்பிரிவுகள் இருக்கின்றன. இவ்வகைச் சமய நெறிகளையெல்லாம் கடந்து அவற்றின் வழிச்செல்லாத தனிப்பெருமை உடைய நெறியாகத் திகழ்வது 'சிவநெறி' ஒன்றே என்று திருமூலர் போற்றுகின்றார்.

"நூறு சமயம் உள்ளவா நுவலுங்கால்
ஆறு சமயம் அவ்வாறுள் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறியில்லா
வீறு பரநெறி இல்லா நெறியன்றே" (திருமந்திரம் 1537)

என்கின்றார். இச்சிவநெறியை அடைவதற்கானத் திருநெறிகளை 'இறையடியார்கள்', இறையருளைக் கொண்டு மக்கள் சமுதாயத்திற்கு எடுத்துக் காட்டியுள்ளனர். ஜி.யூ. போப் அவர்கள் தம் சமயமான கிறித்துவத்தைப் பரப்புவதற்கு நம் பாரத நாட்டிற்கு வந்தார். தமிழ்நாட்டில் சீர்மிகு தமிழைக் கற்றுக் கொண்டு திருவாசகத்தைப் படித்து அதில் உருகி, சைவசமயம் போன்று சிறந்த சமயம் வேறில்லை என்று கூறுவதிலிருந்தும், திருமூலர் தம் திருமந்திரத்திலிருந்தும் தெள்ளத் தெளிவாக உணர முடிகின்றது.

**அன்பு நெறி**

''அன்பின் வழியது உயிர்நிலை, அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு'' (கு. 80)

அன்போடு பொருந்தி நின்ற உடலே உயிர் நிலைபெறும் உடம்பாகக் கருதப்படும் என்ற வாய்மொழிக் கேற்ப, 'அன்பே சிவம்' என்பதையும், 'ஞானம்' 'ஈசன்பால் அன்பே' என்பதையும் அருளாளர்களின் வழி அறியலாம்.

'இறைவன்' 'அன்பு' வடிவானவன்; எனவே தான் 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை போன்றவனே' என்று பாடுவர். உலகில் மக்கள், 'அன்பு வேறு'; இறைவேறு என்று பாகுபடுத்துகின்றனர். மலரும் மணமும் போல 'அன்பே - சிவம்; சிவமே அன்பு', இந்நிலையைத் திருமூலர்,

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்த பின்
அன்பே சிவமாய் அமர்ந்து இருப்பாரே'' (திருமந்திரம் - 257)

என்று. அருளுகின்றார். உலகில் உள்ள உயிர்கள் மேல் அன்பு செலுத்துதல் ஒவ்வொருவருக்கும் தலையாய கடமையாகும். ஆண்பால் அகம் குழைந்து நிற்பார்க்கு சிவபெருமான் காட்சி தருவார்.

''என் அன்பு உருக்கி இறைவனை ஏத்துமின்
முன் அன்பு உருக்கி முதல்வனை நாடுமின்
பின் அன்பு உருக்கி பெருந்தகை நந்தியும்
தன் அன்பு எனக்கே தலை நின்றவாறே'' (திருமந்திரம்-274)

என்று தமக்கு அருள் கிட்டியதைக் காட்சியாக்குகின்றார். இதனையே திருஞானசம்பந்தரும்,

''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே!'' (3:49:1)

என்று உருகுகின்றார். மாணிக்கவாசகப் பெருந்தகையும்,

''பால் நினைத்து ஊட்டும் தாயினும்
சாலப் பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து''

என்பதில் இறைவன், தாயைக் காட்டிலும் பரிவு கொண்டு உயிர்களுக்கு அருள் புரிவதையே கருத்தாகக் கொண்டவன் என்பதை வலியுறுத்துகிறான்.

பக்தர்கட்கு அருள் செய்து பயின்றவன் என்று திருஞான சம்பந்தர் கூறுகின்றார். அன்புடைய மெய் அடியார்களுக்கு அருள் செய்ய இறைவன் பயிற்சி கொண்டுள்ளார் என்று கூறுவது சிறப்பிற்குரியது.

**கொல்லாமை நெறியும் புலால் உண்ணா நெறியும்**

மானுடம் உலகில் உள்ள உயிர்கள் மீது இரக்கம் காட்ட வேண்டும். வாடிய பயிரைக் கண்டபோது எல்லாம் வாடும் மனநிலை மனிதனுக்கு வேண்டும். உயிர் வாழப் பிற உயிர்களைக் கொன்று திண்கின்ற நிலை மாறவேண்டும். உணவுக்காகப் பிற உயிர்களைக் கொன்று திண்பது மிருகக்குணம். சமயச் சான்றோர்கள் பிற உயிர்களுக்கு எத்தீங்கும் செய்தல் கூடாது என்கின்ற அருள் உள்ளம் கொண்டவர்கள். ஓரறிவுயிர் முதல் அனைத்துயிர்களிலும் இறைவனைக் காண்பவர்களாக வாழ்ந்தனர். அவ்வகையில் திருமூலர் கொல்லாமை, புலால் உண்ணாமை ஆகியன வற்றை வலியுறுத்துகின்றார்.

**''கொன்றிலாரைக் கொலச் சொலிக் கூறினார்**<br>
**தின்றிலாரைத் தினச் சொலித் தெண்டித்தார்**<br>
**பன்றியாய்ப் படியில் பிறந்து ஏழ் நரகு**<br>
**ஒன்றுவார் அரன் ஆணையிது உண்மையே''** (திருமந்திரம்)

என்ற திரும்ந்திரத்தில் ஓர் உயிரைக் கொல்லுதல் குற்றமாகும். அதற்குத் துணை நின்றவரும் குற்றம் புரிந்தவராவார். இந்நிலையில் புலால் உண்பவன் மற்றும் இச்செயலுக்குக் காரணமாயிருப்பவர்கள் அனைவரும் நரகம் எய்துவர். அவர்கள் கேவலமான பன்றியாய்ப் பிறப்பர் 'இறைவனது ஆணை' என்று உறுதியிட்டுக் குறிப்பிடுவது இங்கு குறிப்பிடத்தக்கது.

மேலும், எவ்விலங்கின் தசையை ஒருவன் உண்ணுகின்றானோ அந்த விலங்குக் குணமே உண்பவனுக்கு வந்து சேரும். அறிவியல் அடிப்படையிலும் புலால் உணவு மறுப்பே போற்றப்படுகின்றது.

அனைத்துயிரும் தம்முயிர் என எண்ணி அருள் உள்ளம் கொண்ட கருணையாளர்களுக்கு இறைவனது காட்சி கிட்டும்; என்பது திருமந்திரத் திருநெறியாகும்.

**''பொல்லாப் புலாலை நுகரும் புலையரை**<br>
**எல்லாரும் காண இயமன் தன் தூதுவர்**<br>
**செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தின்**<br>
**மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே''** (திருமந்திரம்-199)

உயிருக்குத் துன்பம் தரும்; உடலுக்குத் தீமை விளைவிக்கும்; எனவே இதனைப் பொல்லாப் புலால் என்றார். தீயதான இப்புலால் உண்பவர் களை எமதூதர்கள் பல்லாரும் காண பற்றி இழுத்துக் கொண்டு போய்

அவர்கள் உடலைக் கரையான் போல அரித்துக் கொல்ல, பற்றி எரியும் நரக நெருப்பில் மல்லாந்து தள்ளிப் புரட்டி எடுப்பார்கள் என்று குறிப்பிடு கின்றார். எனவே புலால் உணவைத் தவிர்த்து வாழ்ந்து இறையருளை ஒவ்வொருவரும் மனங்கொள்ள வேண்டும்.

**அடியார்களுக்கு அமுதளித்தல்**

அறம், புண்ணியம், தவம் என்றால் இதையெல்லாம் செய்ய நிறையப் பொருள் வேண்டும். காட்டுக்குப் போய் கண்ணை மூடிக் கொண்டு நிட்டையிலிருந்து கடும் தவம் செய்ய வேண்டும்; என்று யாரும் நினைக்கத் தேவையில்லை; இறைவன் பூசைக்குப் பாலும், தேனும் பல வண்ண மலர்களும் வேண்டும் என்பதில்லை பச்சிலையே போதும் என்கின்றார் திருமூலர்.

''யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போது ஒரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே'' (திருமந்திரம் -252)

பசுவிற்கு ஒருவாய் உணவு கொடுத்தால் சிறந்த அறம். நாம் உண்ணும் போது ஒரு கைப்பிடி ஈவது இதுவே உயர்ந்த தானம். எல்லோரிடமும் அன்பாயிருத்தல்; இதுவே உன்னதமான வாழ்க்கை எனக் கூறும் திருமந்திரத் தமிழ் ஞானம் தமிழ் உலகுக்கு உதவிய மணிமகுடச் சிந்தனை.

பசிக்குச் சோறு கொடுத்தல் பல கோடி புண்ணியம். மணிமேகலையில்,

''உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தாரே''

என்று குறிப்பிடுவது இவண் நோக்கத்தக்கது. திருமூலர் உயிர்க்கு உணவளித்தல் மிகச் சிறந்த திருநெறியாகப் போற்றுகின்றார்.

''அகரம் ஆயிரம் அந்தணர்க்கு ஈயில் என்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கில் என்
பகரு ஞானி பகல் ஊண் பலத்துக்கு
நிகரில்லை என்பது நிச்சயம் தானே'' (திருமந்திரம் - 1860)

இம்மந்திரத்தில் வேதம் ஓதும் மறையவர்க்கு ஆயிரக்கணக்கான குடி யிருப்புகளை அவர்கள் வாழத்தந்து என்ன பயன்? இவைகளால் எல்லாம் எந்த புண்ணியப் பயனும் எய்திவிட முடியாது. போற்றப்படும் பரமனடியார் களான தவசீலர்களுக்கு, ஒருநாள் பகல்பொழுதில் படைத்த உணவுக்கு அதனால் அடையப் பெற்றப் புண்ணியப் பலனுக்கு இவையெல்லாம் ஈடாகாது. இது உண்மை என்று உறுதியிட்டுக் கூறுகின்றார். அதனால் தான் செய்வதற்கரிய செயல்களைச் செய்த சிவனடியார்களான அறுபத்து மூவர்களில் பெரும்பாலோனோர் உணவிடுதல் தொண்டு நெறியையே

முதன்மைக் குறிக்கோளாகக் கொண்டு எந்நிலையிலும், தம் குறிக்கோளுக்கு இடையூறு ஏற்பட்ட போதிலும் தளராது உணவிட்டுச் சிவநெறியை அடைந்தார்கள் என்பது வரலாறு. திருஞான சம்பந்தப்பெருமான் கபாலீச்சரத்தில் பூம்பாவைப் பதிகம் பாடி பூம்பாவையை எழுப்பும்போது சேக்கிழார் பெருமான்.

"மண்ணினிற் பிறந்தார் பெரும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் நல்விழாப் பொலிவு கண்டார்தல்
உண்மையாம் எனில் உலகர் முன் வருக" (பெரிய புராணம் - 2290)

என்று போற்றுகின்றார். சிவனடியார்க்கு உணவிடுதல் என்று நினைப்பதே பெரும் புண்ணியம் என்பதனைத் திருமூலர்,

"ஆறிலும் வேள்வி அருமறை நூலவர்
கூறிடும் அந்தணர் கோடிபேர் உண்பதில்
நீறிடும் தொண்டாட் நினைவின் பயனிலை
பேறெனில் ஓர் பிடி பேறது ஆகுமே" (திருமந்திரம் - 1861)

ஆறு அங்கங்களாக உள்ள வேதவிதிப்படி வேள்விகள் செய்து வேதம் ஓதுகின்ற முப்புரநூல் அணிந்துள்ள மறையவர் எனப்படும் மேலோர் ஒரு கோடிப்பேர்கள் உண்பதால் கிடைக்கும் புண்ணியம், திருநீறணிந்த சிவனடியார் ஒருவருக்கு ஒருவேளை உணவு படைக்க வேண்டும் என்று நினைத்த மாத்திரத்தில் அடையும் புண்ணியப் பலனுக்கு மிகவும் குறைவானதேயாகும் என்று சிறப்பித்துக் காட்டியுள்ளார். அண்ணாமலை யாரை நினைத்தாலே முக்தி பெறலாம் என்பது போல ஈண்டு சிவனடியார்க்கு உணவிட வேண்டும் என்று நினைத்தலுக்கே இவ்வளவு புண்ணியமா? என்று வியக்க வைக்கின்றது. எனவே முடிந்தளவு பசித் தோர்க்கு உணவிடுதலை மானுடம் மனதிற்கொண்டு செயல்பட வேண்டும்.

## தொகுப்புரை

திருமந்திரம் தமிழ் தேன்குடம்; தொட்டஇடமெல்லாம் உள்ளில், உணர்வில், உயிரில் தித்திக்கும் தன்மையுடையது. பிறவிவரம் வேண்டிப் பாடுவ்தே பக்தி இலக்கியமாக இருந்த அடியார்கள் நடுவில் 'ஊனுடம்பு ஆலயம்' என்று பாடிய திருமூலர் திருமந்திரம் தமிழ்ப்பண்பாட்டுப் பல கனியாகவும், தமிழ்ஞானத் திறவுகோலாகவும், தமிழ்ச் சமயத்தின் - சமுதாயத்தின் தலைவாசலாகவும் திகழ்கின்றது. இஃது அனைவருக்கும் பயன்படக் கூடிய அரிய கருத்துக் கருவூலமாகும்.

இத்திருமந்திரம் வாழ்வுக்கு வழிகாட்டியாகச் சடங்குகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காது 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்னும் மெய்யான பக்திக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளது தனிச்சிறப்பாகும்.

தமிழில் இப்பாடல்கள் இருப்பதாலே இவை மந்திரம் அல்ல என்று யாரும் சொல்லிவிடக் கூடாது. என்பதற்காகவே மந்திரத்தின் முத்தாய்பான ஈற்றுப் பாடலில் ''மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ் மூந்நூறு மந்திரம்'' என்று பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. திருமூலரே இதனைத் தெளிவுபடுத்தும் விதமாக 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' ஊன் பற்றி நின்ற உணர்வுறு மந்திரம் எனத்தாம் அருளியவை இறைவன் அருளால் செய்த தமிழ் மந்திரங்கள்; எல்லோரும் இன்புற என்பதன் மூலம் திருமூலரின் ஆன்மநேயம் ஆருயிர்கள் அனைத்தினிடத்திலும் வைத்த பேரன்பு, மெய்பக்தி. திருமூலரை அருட் கவியாக, ஞானியாகக் கொள்வதை விட அன்பே சிவமாக, அறிவே தவமாகக் கொண்டு வாழ்ந்த ஞானத் தவயோகி திருமூலர். அவரருளிய திருமந்திரம் தமிழ் செய்த தவம், தமிழர் செல்வம் என்றும் கொள்வதே ஏற்புடையதாகும். மானுடச் சிறப்புக்கு மகத்துவம் சேர்த்த மாமனிதர் திருமூலர் என்பதனை உணர்ந்து, இந்நெறிகளைக் கடைபிடித்து இறை யருளைப் பெறுவோம்.

# 30. திருவிசைப்பா பாடிய அருளாளர்கள் வரலாறு

முனைவர் சு. சண்முக சுந்தரம், மதுரை.

ஒன்பதாம் திருமுறையைப் பாடியருளிய ஆசிரியர்கள் ஒன்பதின்மர் ஆவர். அவர்கள் திருமாளிகைத்தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் எனப்பெறுவார்.

"செம்பொன்மணி அம்பலத்து நிருத்தனார்க்குத்
திருவிசைப்பா உரைத்தவர்தம் திருப்பேர் சொல்லின்
பம்புபுகழ் செறித்திருமாளிகை மெய்த்தேவர்
பரிவுடைய சேந்தனார் கருவூர்த்தேவர்
நம்பி காடவர்கோன் நற்கண்ட ராதித்தர்
நன்குயர் வேணாட்டடிகள் திருவாலியமுதனார்
அம்பிவியோர் புகழ் புருடோத்தமர் சேதிராடர்
ஆக இவர் ஒன்பதின்மர் தாமுறை கண்டடைவே"

- தனிப்பாடல்

என்ற பாடலால் இவர்கள் வரலாற்றை தொகுத்துக் காண்போம்.

**1. வைணவ அடியவர் இருவர்**

திருவிசைப்பா பாடிய ஒன்பதின்மரில் வைணவ அடியவர் இருவர். ஒருவர் திருவாலியமுதனார், மற்றொருவர் புருடோத்தமநம்பி.

வைணவ அந்தணர் குடியில் தோன்றிய திருவாலியமுதனார் சிவபக்தியில் ஈடுபட்டுத் தமது சைவ அடியாராக மாறினார். தில்லை நடராசப் பெருமானைத் தமது உயிர் நாயகனாகக் கொண்டு போற்றினார். "மயிலைமன்னன்" என்றும், அந்தணன் என்றும் தாம் பாடிய திருவிசைப்பா இரண்டாம் பதிகத்தின் திருக்கடைக்காப்பில் இவர் தம்மைக் குறிப்பிட்டுள்ளார். இவர் திருவிசைப்பாப் பதிகம் நான்கு பாடியுள்ளார். நான்கும் தில்லைப் பெருமானைப் பற்றியதே.

**2. இரண்டாமவர் புருடோத்தமநம்பி**

திருவிசைப்பா ஆசிரியர் ஒன்பதின்மருள் எட்டாமவராகப் புருடோத்தம நம்பி. இவரும் வைணவ அடியவரே.

புருடோத்தமர் என்பது திருமால் பெயர்களில் ஒன்று. இவர் தம்மை "மாசிலா மறைபல ஓதுநாவன் வண்புருடோத்தமன்" என்ற திருவிசைப்பாப்

பதிக இறுதிப் பாடலில் குறிப்பிடுதலால் இவர் அந்தணர் என்பதை நன்கு அறியலாம்.

இவர் இரண்டு திருவிசைப்பாப் பதிகங்கள் பாடிப் பரவியுள்ளார். இப்பதிகம் இரண்டும் சிதம்பரத்தைப் பற்றியதே.

**3. ஆதித்திராவிடரில் ஒருவர்**

ஆதித்திராவிடரில் ஒருசாராரைப் பறையர் என்பர். பறை கொட்டும் தொழிலால் வந்த பெயர் இது.

திருவிசைப்பா பாடிய ஒன்பதின்மருள் இரண்டாமவராக வைத்து எண்ணப்படும் சேந்தனார் இம்மரபினராவர்.

தில்லையில் சேந்தனார் வசித்த காலத்து திருவாதிரைப் பெருவிழாவில் ஓடாதிருந்த திருத்தேரைத் "திருப்பல்லாண்டு" என்னும் பதிகம் பாடி ஓடச் செய்தவர் என்பது இவருக்குத் தனிச்சிறப்பைத் தருவது.

**4,5,6. அரசர் மூவர்**

திருவிசைப்பா அருளிய ஆசிரியர்களுள் மூவர் அரசர்கண்டராதித்தர் சோழப்பேரரசர். கி.பி. 950 முதல் 957 வரை சோழமண்டலத்தை ஆட்சி புரிந்தவர். இவர் ஐந்தாமவர்.

கண்டராதித்தர் தில்லைப்பெருமானைப் பாடிய திருவிசைப்பாப் பதிகம் ஒன்றேயாகும். அப்பதிகத்தின் எட்டாம் திருப்பாடலில் திருக்கடைக் காப்புச் செய்யுளில் தம்மைக் கோழிவேந்தன் (கோழி-உறையூர்) தஞ்சை யார்கோன் என்றும் கூறிக்கொள்கின்றார். வேணாட்டடிகள் என்பார் அரசருள் துறவு மேற்கொண்டவர். இவர் ஆறாமவராக விளங்குபவர். இவர் பாடிய திருவிசைப்பாப்பதிகம் ஒன்றே உள்ளது. அப்பதிகம் (கோயில்) சிதம்பரத்தில் எழுந்தருளிய இறைவன் மீது பாடியது.

சேதிராயர் சேதி என்பவர் ஒன்பதாமவராகத் திகழ்பவர். இவர் பாடியருளிய திருவிசைப்பாப் பதிகம் ஒன்றேயாகும். இப்பதிகம் சிதம்பரத்தைப் பாடியது.

**7. திருமாளிகைத்தேவர்**

தில்லைச்சிற்றம்பலத்துப் பெருமானைப் பாடியனவாகக் காணப்படும் திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கு ஆகும். சிவஞானபோதப் பதினொன்றாம் சூத்திர உரையுள் இப்பொருட்டு இத்திருப்பதிகமே எடுத்துக்காட்டப் பட்டிருத்தல் காணப்படுகிறது.

**8. சேந்தனார்**

சேந்தனார் திருவெண்காட்டிற்கு அருகில் தோன்றியவர். இவர் பட்டினத்து அடிகளின் தலைமைக் கணக்கராக விளங்கியவர். நடராசப்

பெருமானே சிவனடியாராக அவர் வீட்டிற்கு எழுந்தருளினார். சேந்தனார் அளித்த களியாகிய உணவினை ஏற்று அதன் ஒரு பகுதியை திருமேனியில் காட்டிச் சேந்தனாரின் சிறந்த சிவபக்தியை உலகம் உணரும்படி செய் தருளினார். இதனை, "செம்பொன் அம்பலத்து வேந்தன் தனக்கு" ஆகியதே எனவரும் கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தால் நாம் அறியலாம்.

**9. கருவூர்த்தேவர்**

இவர் பத்து சிவத்தலங்கட்கு ஒவ்வொரு பதிகங்கள் வீதம் பத்துத் திருவிசைப்பாப் பதிகங்கள் பாடியுள்ளார். உலக வாழ்வில் புளியம்பழமும் ஓடும் போல ஒட்டியும் ஒட்டாமலும் விளங்கியவர். இவர் செய்த அற்புதங்கள் பலவாகும். இவரது செயல்கள் இவரைப் பித்தர் என்று கருதும்படி செய்தன.

இறைவனை நினைந்து மனம் கனிய, அமுது உருக, கருவூர்த்தேவர் கூறுவது போன்று 'அழுவது நின்திறம் நினைந்தே அதுவன்றோ பெறும் பேறு" என்று இறுமாக்கத் திருவிசைப்பாக் கவிதைகள் துணைபுரியும் என்பது உறுதி. அவ்வுறுதி சமய உலகில் நிலைக்க வேண்டும் என்பதே.

**பஞ்சபுராணம்**

மற்றைய திருமுறைகட்கு இல்லாத தனிச்சிறப்பொன்று ஒன்பதாம் திருமுறைக்கு உண்டு. பஞ்சபுராணம் பாடித் தோத்திரம் செய்யும் ஐந்து பாடல்களுள் இத்திருமுறையிலிருந்து மட்டும் இரண்டு பாடல்கள் பாடப்பட்டு வருகின்றன. திருவிசைப்பாவில் ஒரு பாடலும், திருப்பல்லாண்டில் ஒரு பாடலும் இன்றும் பாடப்பட்டு வருகின்றன.

ஐந்து பாடல்களைப் பாடுவதாலும் கடைசியில் பெரியபுராணம் பாடப்பெறுவதாலும் இது பஞ்சபுராணம் எனப்பெற்றது.

இத்திருப்பதிகங்கள் தேவாரத் திருமுறைகளைப் போலவே பண்ணமைப்புடன் கூடியனவாய் இசை நயம் வாய்ந்தன ஆதலின் திருஇசைப்பா என வழங்கப்பெறுவன.

இத்திருமுறையின் இறுதியில் உள்ள திருப்பதிகம் இறைவனுக்குப் பல்லாண்டிசை கூறி வாழ்த்துவது ஆதலின் திருப்பல்லாண்டு என்றும் சிறப்புப் பெயருடன் விளங்குவதாயிற்று.

பக்தி அமுதை இலக்கியச் சுவையோடு தரும் அரிய திருமுறை இது என்பதில் எந்த ஐயமும் இல்லை. தொட்டவிடமெல்லாம் இனிக்கும் தேனூற்றாகத் திகழ்கிறது ஒன்பதாம் திருமுறை. இது சிந்திக்க இனியது. வந்திக்க நல்வழி காட்டுவது உறுதி.

வாழ்க திருமுறைகள்!

வளர்க திருமுறைத் தொண்டு!!

# 31. திருமூலரின் தமிழ் உணர்வு

முனைவர் ஜெ. சந்திரசேகரன், சிதம்பரம்.

திருமூலர் நிலவுலகில் வேதத்தின் கருத்தையும் ஆகமத்தின் கருத்தையும் தமிழ் மொழியில் ஆக்கவே படைக்கப் பெற்றவர்.

'என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யும் ஆறே'

என்பது திருமூலர் வாக்கு இதனைக்

'குறுமுனிபால் உற்றதொரு கேண்மை யினால்
உடன்சில நாள்உறை வதற்கு நற்றமிழின்
பொதியமலை நண்ணுதற்கு வழிக் கொண்டவர்'

திருமூலர் என்கிறார் சேக்கிழார்.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் பாயிரப் பகுதிகளும் 'தந்திரம்' என்னும் நூற்பிரிவுகள் ஒன்பதும் உடையது. மூவாயிரம் தமிழ்ப்பாக்களால் இயன்றது. 'தந்திரம் ஒன்பது சார்பு மூவாயிரம்' என்கிறது சிறப்புப் பாயிரம்.

நூலின் ஒன்பது தந்திரங்களும் முறையே நல்லொழுக்கம், அற வாழ்க்கை, யோகப் பழக்கம், மந்திர நுட்பம், சமயஒழுக்கம், குருநெறி நிற்றல், அகப்புற உணர்வு, அருள் நுகர்வு, பேராப் பெருவாழ்வு என்னும் பொருள்களை அழகிய தமிழில் விளக்குகின்றன.

திருமந்திரத்தின் பெருமை நோக்கியே சைவத்திருமுறைகளில் ஒன்றாக வைக்கப் பெற்றது.

'அன்பே சிவம்' என்பது திருமந்திரத்தின் ஞானஉரை. சைவ ஆகமங்கள் பற்றி மிகுதிப் பேசும் திருமூலர் அன்பின் பெருமையையும் ஐந்தெழுத்தின் பெருமையையும் எளிய தமிழ் நடையில் பாமரரும் புரிந்து கொள்ளும் வண்ணம் புலப்படுத்தியுள்ளார்.

அன்பின் பெருமையை

'அன்பும் சிவமும் இரண்டென்பன் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்'

என்று எளிய தமிழில் உணர்த்தியுள்ளார்.

ஐந்தெழுத்தின் பெருமையைத் திருமூலர் கூறும் பாங்கும் எளிமை யானது.

**'சிவசிவ என்கிலர் தீவினையாளர்**
**சிவசிவ என்றிடத் தீவினை மாளும்'**

என்னும் திருமூலர் வாக்கும்

**'சிவனோ டொக்கும் தெய்வம் தேடினும் இல்லை'**

என்றும்

**'பிறப்பிலி, பிஞ்சகன் பேரருளான்'**

என்றும் திருமூலர் கூறுவது சிவனின் தன்மையை எளிய தமிழ்ச் சொற்களால் படிப்போர்க்குப் புரிய வைக்கிறது.

**மூவாயிரந்தமிழ்**

திருமூலர் சிவபரம்பொருளை ஏற்றுக் கொண்டவர் சைவ ஆகமங்கள் பற்றி மிகுதியாகப் பேசியவர்.

''மூவர் காலத்தில் வழக்கில் அதிகம் இல்லாத ஆகமங்கட்கு இவர் தரும் இடம் மிக அதிகமானதாகும''

**'மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்**
**ஞாலம் அறியவே நந்தி அருளது**
**காலை எழுந்து கருத்தறித் தோதிடின்**
**ஞாலத் தலைவனை நண்ணுவ நன்றே'**

திருமூலர் மூவாயிரம் பாடல்களைப் பாடினார் என்றும் அவர் பாடிய ஒவ்வொரு பாடலும் தமிழ் என்றே கருதப்பட்டு அவை மூவாயிரந் தமிழாக விளங்கின என்ற செய்தியும் நமக்குத் தெரிகின்றது.

'மகாவாக்கியம்' என்ற வடமொழிச் சொல்லைப் பேருரை என்று தமிழாலேயே கூறுகின்றனர்'' இதனை 'நீ அது ஆனாய் எனநின்ற பேருரை' என்ற பாடலால் அறியலாம். இப்பாட்டில் பேருரை என்பது துவம் தத் அசி என்னும் மகா வாக்கியத்தைக் குறிக்கிறது. இவ்விளக்கத்தைத் 'திருமூலரும் பேருரையும்' என்னும் நூலில் பேராசிரியர் அடிகளாசிரியர் அவர்கள் மிகச் சிறப்பாக விளக்கியுள்ளார்கள்.

**இலக்கணை**

இலக்கணை மூன்று வகைப்படும். அவையாவன 1. விட்ட இலக்கணை 2. விடாத இலக்கணை 3. விட்டுவிடாத இலக்கணை. விட்ட இலக்கணையைச் சம்சர்க்க வாக்கியம் என்றும் விடாத இலக்கணையை அகண்ட வாக்கியம் என்றும் வடமொழி அறிஞர் வழங்குவர். தமிழ் அறிஞர் இலக்கணையை ஆகுபெயர் என்பர்.

விட்ட இலக்கணையைத் துவம்பத ஆராய்ச்சிக்கு உரியதாகக் கருதலாம். "அரண்மனை ஆணையிட்டுள்ளது", என்னும் சொற்றொடர் அரசன் உணர்த்துவது போல துவம்பதப் பொருளில் உடம்பு முதலியனவற்றை விட்டு அவ்வுடம்பிற்குள் இருந்து வாழ்ந்து வரும் சீவனாகிய நீயே எல்லாச் செயல்களையும் செய்து வருகிறாய் என உணர்ந்து, உடம்பிலிருந்து நீக்கிச் சீவனைத் தனித்து உணர்ந்து கொள்வதே சீவதுரிய நிலை எனப்படும். "துரியம் என்பது வடசொல் இதற்குப் பொருத்தமான தமிழ்ச் சொல்லைத் திருமூலர் "தூயம்" என்று கூறுகிறார். தற்கண்ட தூயமும்" (2451) எனத் திருமூலர் குறிப்பிடுவது அவரின் தமிழ் உணர்ச்சியைக் காட்டுகிறது.

**பொருள் அமைப்பு**

திருமந்திரம் ஒரு வாழ்க்கைநூல் இதில் மழை, செல்வம், ஆட்சி, கல்வி, கேள்வி, ஒழுக்கம், கருவுறல், உடலோம்பல், காலநிலை, வானிலை, ஆயுள்வகை, மருத்துவமுறை, மனவொருமை, உணர்வு மாட்சி, அறிதுயில், அருள்வீறு முதலிய நல்வாழ்க்கைக் குறிப்புகள் நுட்பமான அழகான தமிழில் விளக்கம் பெற்றுள்ளன.

சிவநிலை என்னும் தூய உணர்வு நிலை அடைய அன்பு அடிப்படையானது. அவாவைக் கெடுப்பது அன்புதான். 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்பது திருக்குறள்.

இதனை நன்குணர்ந்த திருமூலர் 'அன்பே சிவமாய் ஆரும் அறிந்த பின் அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே' என எளிமையாய் அதே சமயம் எல்லோரும் உணர்ந்து கொள்ளும் வகையில் உணர்த்தியுள்ளார்.

இறைவன் திருமூலரை வேதாகமங்களைத் தமிழில் விளக்கவே வந்து அவதரிக்கச் செய்தார் என்பதைச் சேக்கிழார்,

**தண்ணிலவார் சடையார்தாம் தந்த ஆகமப்பொருளை**
**மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ்வகுப்ப**

என்பர்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால் நெறிகளைத் தெளிந்த தமிழ் மொழியால் மொழிந்தவர் திருமூலர்.

**'உள்உணர்வை ஞானம் முதலிய ஒருநான்குண்மை**
**தெள்ளு தீந்தமிழால் கூறும் திருமூலர்'**

என்று சேக்கிழார் பாராட்டுவது திருமூலரின் தமிழ் உணர்வை நோக்கியே என்று அறிதல் வேண்டும்.

மந்திரம் என்பதற்கு ஏற்பப் பல மந்திரங்கள் மறை பொருள்களை உள்ளடக்கியது திருமந்திரம்.

"இரண்டு கடாஉண்டு இவ்வூரின் உள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இழுத்துப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா ஆகுமே"

இந்த மந்திரம் அடிதோறும் முதல்சீரில் இரண்டு என்னும் சொல் வரப் பெற்றுள்ளது.

அழகான உள்ளுரை அமைந்தது.

**இந்த மந்திரத்தின் மேற்பொருள்**

இவ்வூரில் இரண்டு காளை மாடுகள் உள்ளன, காளைகளை மேய்ப்பவன் ஒருவனே. இரண்டு காளைகளையும் இழுத்துப் பிடித்தால் அவ்விரண்டு காளைகளும் ஒரு காளையாக மாறும்.

**இந்த மந்திரத்தின் உட்பொருள் (உள்ளுரை)**

இவ்வுடம்பில் இரேசக, பூரகம் என்னும் இரண்டு கலைகள் உள, இக்கலைகளை நடத்துவது சீவான்மா. இச் சீவான்மா இருகலைகளைத் தம்போக்கில் போகவிடாமல், தடுத்து கும்பகத்தில் அமைதல் வேண்டும் என்பது. இதனை மேலும் விளக்கப் புகுந்தால் இடகலை பிங்கலை வழியே வரும் காற்றை அடக்கி யோகம் புரிதல் வேண்டும் என்பது தெளிவாகும்.

எளிய தமிழ்ச் சொல்லாட்சியைப் பயன்படுத்தி அரிய கருத்தைத் திருமூலர் உணர்த்தியுள்ளதை இதனால் உணரமுடிகிறது.

"திருமூலர் தம்கருத்தை வெளியிட ஒரே வகையான யாப்பு முறையினைப் பின்பற்றியுள்ளார். இம்முறை கடைச் சங்கப் புலவர்களின் பால் அமைந்த யாப்பு முறையாகும். கலிப்பாவின் ஒரு பிரிவினை எடுத்துக் கொண்டு அப்பிரிவின் யாப்பினையே தம் நூலில் தொடக்கம் முதல் இறுதிவரையில் கையாண்டுள்ளார். இது நான்கடியும் ஓர் அடிக்கு நான்கு சீரும் பெற்றுவரக்கூடிய பாட்டாகும்.

இறைவனை ஆதிபகவான், கமலமலர் உறைவான் அடி, தன்னை ஒப்பார் ஒன்றும் இல்லாத் தலைமகன், அறஆழி அந்தணன் பொருள் அதுவாய் நின்ற புண்ணியன் என்று அழகிய தமிழ்ச் சொற்களைக் கொண்டு குறிப்பிட்டுள்ளார். வள்ளுவர் மீது அளவற்ற பற்றுடையவர் திருமூலர் என்பதனை இதனால் உணரமுடிகிறது. "ஆமேவு பாலைப் பிரிக்கின்ற அன்னம் போல்" போன்று எளிய பல உவமைகளையும் படைத்துள்ளார்.

# 32. கண்டராதித்தர் திருவிசைப்பாவில் தொன்மங்கள்

முனைவர் சு. சந்திரா, மதுரை.

பன்னிரு திருமுறைகளுள் கண்டராதித்தர் பாடிய திருவிசைப் பாடல்கள் ஒன்பதாம் திருமுறையில் இடம்பெறுகின்றன. இத்திருவிசைப்பா ஒன்றே அவரது படைப்பாக நமக்குத் தெரியவருகிறது. அந்த ஒரு பதிகத்துள் இடம்பெறும் தில்லைப்பதி பற்றிய தொன்மங்களை இவ்வரைவு காண முற்படுகிறது.

## ஒன்பதாம் திருமுறையில் கண்டராதித்தர்

திருமாளிகைத் தேவர் முதல் சேதிராயர் ஈறாக அருளாசிரியர் ஒன்பதின்மர் அருளிச்செய்த இருபத்தெட்டுத் திருப்பதிகங்களைத் திருவிசைப் பா என்றும், சேந்தனார் அருளிய பல்லாண்டிசையினைத் திருப்பல்லாண்டு என்றும் வழங்குதல் மரபு (ஒன்பதாம் திருமுறை, ப.31, தருமையாதீன வெளியீடு) என்பர். அவ்வருளாளர் ஒன்பதின்மருள் கண்டராதித்தர் ஐந்தாமவர் ஆவார்.

கண்டராதித்தர் தில்லைச் சிற்றம்பலத்திற்குப் பொன்வேய்ந்து புதுப்பித்த முதற் பராந்தக சோழன் (கி.பி. 907 - 953) என்ற அரசனின் இரண்டாவது திருமகனாவார். சிறந்த சிவபக்தர். இவரைச் சிவஞான கண்டராதித்தர் எனக் கல்வெட்டுக் கூறுகிறது. செந்தமிழ்ப் புலமைசான்ற இம்மன்னர் பல சிவாலயத் திருப்பணிகளைப் புரிந்துள்ளார். (மேலது. ப.183) அவரது தில்லை பற்றிய திருவிசைப்பாவும் ஒன்பதாம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது.

இவரது மனைவியான செம்பியன் மாதேவியார் சிறந்த சிவபக்தை ஆவார். கணவரான கண்டராதித்தர் இறந்தபிறகு, தங்களது புதல்வனுக்காக உயிர்வாழ்ந்தார் என்பர். பல கோவில்த் திருப்பணிகளை முன்னின்று நடத்திவர் இவர் என்பது தனிச்சிறப்பு.

## ஒன்பதாம் திருமுறையில் தில்லை

ஒன்பதாம் திருமுறையில் பதினான்கு திருத்தலங்கள் இடம்பெறுகின்றன. அவை தில்லை, திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி, திருக்களந்தை, கீழ்க்கோட்டூர், மணியம்பலம், திருமுகத்தலை, திரை லோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோழேச்சரம், திருப்பூவணம், திருச்

சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சரம், திருவிடைமருதூர், திருவாரூர் என்பன ஆகும். இவற்றுள் தில்லைப் பதிக்கு மட்டும் பதினாறு திருப் பதிகங்கள் அமைந்துள்ளன. ஏனைய தலங்கள் ஒவ்வொரு பதிகம் மட்டும் பெற்று பதின்மூன்று பதிகங்கள் அமைகின்றன.

### கண்டராதித்தர் திருவிசைப்பாவில் தில்லை

கண்டராதித்தர் பாடிய பதிகம் ஒன்று மட்டுமே திருவிசைப்பாவாகத் திருமுறையில் இடம்பெறுகிறது. அந்த ஒரு பதிகமும் தில்லைத் திருப்பதியைச் சுட்டுவதாக அமைகிறது. தில்லைப் பதி சைவர்களால் போற்றப்படும் தலமாகும். இத்தலத்தினைச் சைவர்கள் 'கோவில்' என்றே போற்றி வணங்கும் முறைமையினைக் காணலாம். இதனை, 'கோயில்' என்பது எல்லா ஆலயத்திற்கும் பொதுப்பெயர். அதுவே சிறப்புப் பெயராகக் குறிப்பிட்ட ஒரு தலத்தைக் குறிக்குமானால் அது அதனுடைய மிக்க உயர்வைக் குறிக்கும். அங்ஙனம் உயர்வுபற்றிய காரணத்தால் இத்தலம் கோயில் என்னும் பெயர் பெற்றது' என்ற கருத்து (மேலது, ப. 143) அரண் செய்கிறது.

### தில்லைப்பதி பற்றிய தொன்மக் கதை

சைவ, வைணவ பக்தி இலக்கியங்கள் பாடப்பட்ட தலங்கள் மட்டு மல்லாது, ஒவ்வொரு தலமும் தோன்றியதாகத் தொன்மங்கள் நிலவுகின்றன.

உலகத் தோற்றம் பற்றிய தொன்மங்களின் வகைகளுள் ஒன்றாக நகரத் தொன்மங்கள் (Myths of Places) விளங்குகின்றன. 'இவை குறிப்பிட்ட ஓரிடத்தின் ஆற்றலை வெளிப்படுத்துவனவாகவும் நிலையான மானுட வாழ்வினை வெளிப்படுத்துவனவாகவும் அமைகின்றன. மேலும் ஏதேனும் நிறுவனம் பற்றியனவாகவோ, மீவியல் கூறுகளின் தியாகத்தால் கண்டறியப் பட்டனவாகவோ நகரத் தொன்மங்கள் கதைக்கூறுகளைப் பெற்றுள்ளன. (Encyclopedia of Britanica, Vol. 24, P.719) எனக் குறிப்பிடப்படுகின்றன. அவ்வகையில், தில்லைப்பதி பற்றிய தொன்மங்கள் அமைகின்றன.

'இரணியவர்மன் என்ற மன்னன், வியாக்கிரபாத முனிவருடைய கட்டளையின்படியே, 'கங்கை, யமுனை' என்றும் இருநதிகளின் இடையே யிருந்த முனிவர் மூவாயிரவரைத் தில்லைக்கு அழைத்துவந்து எண்ணிக் காட்டிய பொழுது, ஒருவர் குறைய, அவன் திகைத்து வருந்துதலும், தில்லைக் கூத்தப் பெருமான், 'இவர்கள் எம்மையொப்பார்கள்; நாமும் அவர்களையொப்போம்; நாம் அவர்களில் ஒருவரானோம்; வருத்தற்க' என்று அருளிச்செய்தார் என்பது தில்லை மூவாயிரவர் பற்றிய வரலாறு' ஆகும்.

இந்த இரணியவர்மன் கௌட தேசத்து அரசன் மகனாயினும் உடற்குற்றத்தால் அரசனாகத் தகுதியற்றவனாய் யாத்திரை செய்து

வந்த பொழுது தில்லைப் பெருமானது திருவருளால் அவ்விடத்திலே உடற்குற்றம் நீங்கப் பெற்ற காரணத்தால் வியாக்கிரபாத முனிவர் 'இவனே இந்நாட்டிற்கு அரசனாவான்; கௌட தேசத்தை அவன் தம்பியர் ஆள்க' என்று சொல்லித் தில்லைப் பதியிலே, தில்லை மூவாயிரவரும் பிறரும் சூழ அவனுக்கு முடிசூட்டி, புலியூர் அரசனாகிய இவருக்குப் புலிக்கொடியே உரியது என்று கொடுத்தார் என்பதும் அப்புராண வரலாறு ஆகும்.

**திருவிசைப்பாவில் தில்லை**

கண்டராதித்தர் அருளிச் செய்த திருவிசைப்பாவிற்கு 'தில்லைப் பெருமானைக் காணும் வேட்கை மிகுதியை எடுத்தோதி அருளியது' என்பது குறிப்பாகும்.

இரண்டாம் பாடலில், 'மூவாயிரவர் தங்களோடு முன் அரங்கேறி நின்ற கோவே உன்றன் கூத்து' எனப் பேசுகிறார். அடுத்த பாடலில், 'முத்தீயாளர் நான்மறையர் மூவாயிரவர் நின்னோடு ஒத்தே வாழும் தன்மையாளர்' எனச் சுட்டுவார்.

இத்தொடர்கள் கங்கை யமுனைக்கு இடையேயிருந்து அழைத்து வந்த மூவாயிரவருள் தன்னையும் ஒருவனாகச் சுட்டிய எம்பெருமானது உளப்பாடு புலப்படுமாறு அமைந்துள்ளன எனலாம்.

கண்டராதித்தர் தமது பதிகத்தின், எட்டாம் பாடலில் 'செங்கோற் சோழன் கோழிவேந்தன் செம்பியன்' என்று குறிப்பிடுகிறார். இதற்கு உரை செய்வோர் இரணியவர்மன் வழி வந்தவர்களாகச் சோழன் உள்ளமையைக் குறிப்பிடுகின்றனர். (மேலது. ப.382)

**தில்லைத் தொன்மங்கள்**

நகரம் அல்லது இடம் சார்ந்த தொன்மக் கதைகள் இலக்கியத்தின் பாடுபொருளாக அமைகின்றன. தொன்மம், இலக்கியத்தின் அடிப்படைப் பொருளாகி அமைகின்றது' (Norturop Frye, 1983, P. 24) என்ற நார்த்தாப் பிரையின் கருத்தின்வழி தில்லைப்பதி பற்றி இத்தொன்மங்கள் கண்டராதித்தர் திருவிசைப்பாவில் பாடுபொருளாகின்றன.

இயற்கையின் தோற்றம், முறையான நிகழ்வுகள், இன்னபிற படைப்புகள் பற்றிய ஆதிமனிதனின் வினாக்களுக்குக் கிடைத்த விடை களாகத் தொன்மங்கள் அமைகின்றன என்பர். கால வாளர்ச்சியில் இத்தொன்மங்கள் சமுதாயத்தில் பரவலாகச் செல்வாக்குப் பெற்றன; மனிதனது எண்ண வரலாற்றிற்கு ஏற்பப் புதிய போக்கில் விரிவு பெற்றன; அஃதாவது தொல்பழங்கால மனிதனது (Primitive Period Man) சிந்தனை யின் வெளிப்பாடாகவும் அனுபவபூர்வமான அறிவியல் கருத்துக்களாகவும்

இத்தொன்மங்கள் திகழ்கின்றன எனலாம். (சந்திரா. சு., பல்பெயர்ப்பத்தும் சீர்காழித் தலத் தொன்மங்களும், ப.215) அவ்வகையில் தில்லைநகரம் பற்றிய மக்களது எண்ண வரலாறாகத் தில்லைப்பதி பற்றிய தொன்மங்கள் ஆக்கப்பட்டுள்ளன. இத்தொன்மங்கள் இலக்கியத்தில் இடம்பெற்று அமைவதைக் கண்டராதித்தர் திருவிசைப்பாவழி அறியமுடிகிறது.

**தில்லை - கோவில்**

சைவ மரபில் 'தில்லை' என்பது கோவில் என்று போற்றப்படுகிறது. பன்னிரு திருமுறைகளுள் சம்பந்தர், அப்பர் பாடல்களிலும், மணிவாசகரது திருவாசகத்திலும் தில்லை பாடல்பெற்று சிறப்புறச் செழித்தோங்குகிறது.

ஆயின், 'கோவில்' என்ற பெற்றி பிற்காலத் திருமுறையாகிய ஒன்பது, பதினொன்றாம் திருமுறையிலும், சேக்கிழாரது திருத்தொண்டர் புராணத்திலும் இடம்பெறுகின்றது என்பதனைக் காணமுடிகின்றது.

'பழந்தமிழ் இலக்கியத்தில், மூலக்கூறு நிலையில் இருந்த நகரத் தொன்மக் குறிப்புக்கள், பக்தி இலக்கியத்தில் தலமுறைப் பதிகமாக வளர்நிலை அடைந்தன' (சந்திரா. சு., 'இலக்கிய வகைமை வளர்ச்சியில் நகரத் தொன்மம்', தமிழ்மாருதம், மார்ச்சு, 1996) என்பதற்கேற்ப, தில்லைப்பதி பற்றிய தொன்மங்கள் ஒன்பதாம் திருமுறையில், தலைமுறைப் பதிகங் களாக வளர்நிலை அடைந்துள்ளன என்பதனைக் கண்டராதித்தர் திருவிசைப்பா காட்டுகிறது. மேலும், அத்தில்லைத் திருத்தலத் தொன்மங்கள் தனியொரு தலபுராணத்திற்கு வித்தானமையினைக் கோயிற்புராணம் காட்டுகின்றது.

திருமுறைகளிலும், அதற்கு முந்தைய இலக்கியங்களிலும் தில்லைப்பதி பற்றிய குறிப்புகள், ஒன்பதாம் திருமுறையில் 'கோயில்' பற்றிய இலக்கியத் திற்கு அடிப்பொருளாகின்றது. இந்தத் தொன்ம அடிப்பொருள், தனியொரு புராணமாக உயர்ந்தமையினைக் கோயிற்புராணத்தை ஆய்வு செய்தால் கிடைக்கப்பெறலாம்.

# 33. திருவிசைப்பா பாடிய அருளாளர்கள் வரலாறு

செல்வி எஸ். சாந்தி, சிதம்பரம்.

"சைவத்தின் மேல் சமயம் வேறில்லை அதில்சார் சிவமாம்
தெய்தின் மேல் தெய்வம் இல்லை எனும் நான்மறை செம்பொருள்
வாய்மை வைத்த சீர் திரு தேவாரமும் திராவாசகமும்
உய்வைத்தர செய்த நால்வர் பெற்றுளர் எம் உயிர் துணையே"

எல்லாம் வல்ல ஆடல்வல்லான் திருவருள் இன்பத்தை, இவ்வையகம் பெறும்படி இறைவன் அருள் பெற்ற அருளாளர்கள் பாடி இசைத்த தெய்வத் தமிழ் பாடல்கள் திருமுறை ஆகும். 27 அருள் பெற்ற அடியார்கள் எழுதியது திருமுறை. நம் சைவ திருமுறைகளை தோத்தரம், சாத்திரம், பிரபந்தம், புராணம் என்று நான்கு வகைகளாக பிரித்துள்ளனர். ஒன்று முதல் ஒன்பது வரையான திருமுறைகள் தோத்திரம், பத்தாம் திருமுறை சாத்திரம், பதினொன்றாம் திருமுறை பிரபந்தம் ஆகும். பன்னிரன்டாம் திருமுறை புராணம் ஆகும்.

முதல் மூன்று திருமுறைகள் சம்மந்தர் பாடியது. 4, 5, 6-ம் திருமுறைகள் அப்பரால் அருளப்பெற்றது. 7-ம் திருமுறை சுந்தரமூர்த்தி அவர்கள் அருளியது. இந்த ஏழு திருமுறைகளும் தேவாரம் அதாவது தெய்வத்தை இசைப்பாடல் பாடுவது தே-வாரம் எனப்படும். எட்டாம் திருமுறை மாணிக்கவாசுகர் அருளிய திருவாசகமும், ஒன்பதாம் திருமுறை திருமாளிகைத் தேவர், சேந்தனர், கரூர்தேவர், பூந்துருத்தி நம்பி கடாநம்பி, கண்டராத்தர், வேணாட்டிகள், திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர் இவர்கள் எழுதிய பாடல்கள். ஒன்பதாம் திருமுறை. திருமூலர் அருளியது 10-ம் திருமுறை திருவால வாயுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகடவர் கோன் நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், நக்கீரத்தேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர், இளம் பெருமான் அடிகள், அதிராவடிகள், பட்டிணத்தார், நம்பியாண்டர் நம்பி ஆகிய 12 பேர் எழுதிய அருள்பா. பதினோராம் திருமுறை திருத்தொண்டர் புராணம் சேக்கிழார் அருளியது 12-ம் திருமுறையாகும்.

மேற்படியார் அருளிய அருள் பாக்களில் ஒன்பதாம் திருமுறை தோத்திர வகையில் கடைசி ஆகும். இவற்றை செவி வழியாக இறைவன் முன் ஓதி வந்தனர். ராஜராஜ சோழனும் நம்பியாண்டார் நம்பியும் எடுத்த

முயற்சியின் விளைவே நம் கையில் இன்று இருக்கும் 12 திருமுறைகள் ஆகும். கோயில் என்ற சிற் அம்பரத்தில் கிடைக்கப்பெற்ற தேவாரப் பதிகங்களை பலர் பல பதிப்புகளாக வெளியிட்டுள்ளனர். அவற்றுள் மிக முக்கிய பங்காற்றியவர்கள் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம், மற்றும் தருமை ஆதீனம் ஆகும். முதலில் யாழ்ப்பாணம் சாமிநாத பண்டிதர் பதிப்பு, நாகலிங்க முதலியார் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் பதிப்பு சமாஜம், கழகபதிப்பு ஆகியவை பின்னிட்டு திருமுறைகளை பதிப்பு செய்தவர்களில் முக்கியஸ்தர்கள்.

## 1. திருமாளிகை தேவர்

இவற்றுள் நாம் தற்போது கருத்தில் எடுத்துக்கொண்டு திருவிசைப்பா பாடிய அருளாளர்கள் வரலாறு குறித்து நம் ஆய்வைத் தொடர்வோம். முதலாவதாக நம் கவனத்தை ஈர்த்தவர் திருமாளிகைத் தேவர். இவர் சைவ வேளாளர், பூர்விகம் திருவிடைமருதூர். அங்கு சைவராயர் மரபில் தோன்றியவர் திருவிடை மருதூரில் ஐந்து கொத்தர்கள் அவர்கள் பரியேறும் பெரியோர், தெய்வப்படிம பாதம் வைத்ததோர், மாணிக்கக்கூத்தர், குருராயர், சைவராயர். இவர்கள் வாழ்ந்த மடம் பெரிய மடம். மாளிகை மடம். அவர் பெரிய மாளிகையில் தோன்றிய்வர் என்பதால் திருமாளிகைத்தேவர் என்று பெயர் பெற்றார். திருமாளிகை தேவர் திருவாவடுதுறை போக நாதறிடம் ஞான உபதேசம் பெற்றார். சிவதொண்டு மற்றும் சிவ நாம உச்சரிப்பின் தவப்பயனாக அழகிய ஒளித் திருமேனி கொண்டவர். இவர் அழகில் மயங்கிய மாதர்கள் திருமாளிகை தேவர் அழகிய உருவை தம் மனதில் கொண்டு தம் கணவருடன் வாழ்ந்துவந்தனர். அதன் திருப்பயனாக திருமாளிகை தேவர் உருவிலேயே குழந்தைகளை ஈன்றனர். இதனால் அந்த மாதர் சிகாமணிகளின் கணவன்மார்கள் தம் மனைவி களையும் திருமாளிகை தேவரையும் இணைத்து சந்தேகப்பட்டு அரசனிடம் முறையிட்டனர். காடவர்கோன் கழற்சிங்கன், பல்லவமன்னன் நரசிங்கன் அரசனிடம் முறையிட்டனர். அரசன் "ஓர்ந்து கண் ஓடாது" அடிகளாரை கட்டி இழுத்துவர சொன்னான். கொண்டுவர சென்ற காவலாளிகள் தங்களையே கட்டிப்பிடித்து வந்தனர். சினமுற்ற மன்னன் சிந்தை மறந்தான். தானே படைநடத்தி கைது செய்ய வந்தான். படைநடுங்கும்படி திருவாவடு துறை கோமுத்தீஸ்வரர் ஆலயம் நந்திகள் அனைத்தையும் உயிர் ஊட்டினார் திருமாளிகைத்தேவர். அவைகளைக் கொண்டு நரசிங்க மன்னன் படைகளை முறியடித்தார். மன்னன் உணர்ந்தார் மகானின் மகிமைகள்.

மேலும் இவர் சித்து விளையாட்டுகள் தொடர்ந்தன. நம் தேவர் எப்போதும் திருவாவடுதுறையில் உள்ள வீர சோழனார் ஆற்றில் குளிக்காமல் காவிரியில் குளித்து குடத்தில் சிவபூஜைக்கு நீர் சுமந்து கொண்டு பூவும் பூக்குடலையும் சுமந்து வருகின்றார். எதிரில் இறுதி

யாத்திரையில் பிணம் சுமந்து வருகின்றனர். பிணத்தீட்டு தன் சிவபூஜைக்கும், பூவுக்கும், அபிசேக, நீருக்கும் வரக்கூடாது என நினைத்து குடம், பூக் குடலையை, வானைநோக்கி வீசி எறிந்தார் தேவர், அதை அங்கேயே நிறுத்தி வைத்தார். பின் இறந்து போனவரை சுடுகாடு வரை நடக்க செய்தார். பின் அபிஷேககுட நீரையும், பூக்குடலையும் பெற்று தன் சிவபூஜையை தீட்டுபடாமல் முடித்தார்.

தன் சித்து விளையாட்டை இறைவன் திருமாளிகை தேவர் மூலம் இன்னமும் விளையாட செய்தார். சிவபூஜைக்கு வந்த வேகவைத்த பயிறு சுண்டலை தமது மடத்தின் தோட்டத்தில் வீசினார். பாத்தி கட்டி பயிர் செய்தார். மகசூலையும் பெற்றார். கொங்கணவர் முனிவர் கமண்டலத்தில் நீர்வற்றாமல் இருக்க செய்தார். பின் நாற்றம் மாற்றி சுகநாற்றம் ஆக்கினார். தற்போது உள்ள திருவாவடுதுறை ஆதின கட்டிடம் கோமூத்தீஸ்வரர் ஆலயத்திற்கு தென்புறத்தில் உள்ளது. இது நம் தருமாளிகைதேவரின் மாளிகைதான். திருவாவடுதுறை கோமுத்தீஸ்வரர் (மாசிலாமணி ஈஸ்வரன்) ஆலயத்தில் சுற்றுச்சுவர் மீது நந்திகள் கிடையாது. நந்திகள் அனைத்தும் நரசிங்கன் உடன் சண்டையிட உயிர்பிக்கப்பட்டன என்ற வரலாறு சம்பவத்தின் நம்பகத்தன்மையை நமக்கு வலுவூட்டி மெய்பிக்கிறது. தற்போதும் மாசிலாமணி ஈஸ்வர் சமேத அத்துள்ளகுஜாம்பாள் பூஜை முடிந்த உடன் நம் திருமாளிகை தேவர் பூஜை நடக்கும். பின்னர் தான் திருவாவடுதுறை மடத்தில் திருவமுது நடைபெறும். திருமாளிகை தேவர் காலம் 10-ம் நூற்றாண்டு இடைப்பகுதி ஆகும். ஆடல் வல்லான் அருளினால் அவர் மீது இவர் பாடிய பதிகங்கள் 4.

**2. சேந்தனார்**

இவர் இரண்டாம் நபர் சேந்தனார். சேந்தனார் சொந்த ஊர் திருவெண் காட்டுக்கு அண்மையில் உள்ள நாங்கூர். சேந்தனார் திருவெண்காடார் என்ற பட்டினத்து அடிகளாரின் திரண்ட சொத்தின் தலைமை கணக்கர் அவரது சொத்துக்கள் அனைத்தையும் திருவெண்காட்டார் உத்தரவுக் கிணங்க ஏழை மக்களுக்கும், எளிய மக்களுக்கும் வாரி வழங்கிவிட்டார். சொத்து கிடைக்காமல் அதன் மூலம் சுகப்பட எண்ணி, பட்டினத்தார் உறவினர்கள் அப்போதைய சோழனிடம் தவறான தகவல் கொடுத்து முறையிட்டனர். திருவெண்காட்டார் திரு அருளினாலும் சிறை மீண்டார். சேந்தனார் காலம் 9-ம் நூற்றாண்டின் முடிவும் 10-ம் நூற்றாண்டின் ஆதியிலும் ஆகும்.

சிறை மீண்ட சேந்தன் தன் மனைவி மக்கள் உடன் தில்லையம்பதி வந்து சேர்கின்றார். இங்குதான் இறைவன் தன் திருவிளையாடலைக் காண்பிக்க திரு உள்ளம் கொண்டார். தினம் ஒரு சிவனடியார்க்கு

அமுதிடாமல் மொத்த குடும்பமும் உணவருந்தாது விரதம் மேற்கொண்டிருந்தனர். விறகு பொறுக்கி விற்று அதன் மூலம் மிக சொற்பமாக பொருள் ஈட்டினார். கணக்கராக இருந்தபோது எவ்வளவு சந்தோஷமாக குடும்பம் நடத்தினார்களோ அதே சந்தோஷத்துடன் விறகு வெட்டியும் குடும்பம் நடத்தினார்கள். இவர்களின் விரத மகிமையை இறைவன் உலகுக்கு உணர்த்த திரு உள்ளம் கொண்டார். தானே சிவதொண்டராக வேடம் ஏற்று "பறைசேந்தனார்" வீட்டுக்கு அமுது செய்ய வருகின்றார். சேந்தனார் களிதான் படைக்கின்றார். இறைவன் தான் உண்டு, தன் மீது விழுந்த மிகுந்த களியை ஆடல் வல்லான் பொன்னம்பலத்தில் தன் திரு உருமீது காண்பிக்கின்றார். இத்திருவிளையாட்டிலும் தில்லைவாழ் அந்தணர்கள் திருப்தி அடையவில்லை. "சிற்றம்பலம் மேய சிவன்" மேலும் சேந்தனார் பெருமையை உலகுக்கு உணர்த்த மேலும் ஒரு திருவிளையாடல் நடத்தினார். மார்கழி மகா உற்சவத்தின் 9-ம் நாள் தேர் மீது எம்பெருமான் வீதி உலாவிற்கு வந்து அமர்ந்துவிட்டார். நாதஸ்வர இன்னிசையுடன் யானை முதல் சிவசிந்தனையாளர்கள் வரை அனைவரும் தேரின் வடகயிரை இழுக்கின்றனர். தேர் நகரவில்லை. நகரா தேரினால் நகர மக்கள் வேதனையுற்றனர். தீட்சதர்களோ செய்வதறியாமல் திகைத்து நின்றனர். அப்போது தாழ்ந்த குலத்தில் பிறந்தவரும், பட்டினத்து அடிகள் கணக்கரும் ஆகிய "பறை சேந்தனார்" 13 பாடல் "மன்னுக தில்லை" என ஆரம்பித்து "பந்தம் பிரிய பரிந்தவனே என்று பல்லாண்ட கூறுதுமே" என 13 பாடல்கள் பாடினார். நின்ற தேர் நில்லாமல் ஓடி நிலை நின்றது. இறை அருளையும், நம்சேந்தனார் அருளையும், உணர்ந்த அடியார்கள் அவர் அடிதொழுதனர்.

சேந்தனார் காலம் 9-ம் நூற்றாண்டின் இறுதியும் 10-ம் நூற்றாண்டின் ஆதியும். தருவிழி விழலை இறைவன் மீது 12 பாடல்கள், திருவாவடுதுறை மாசிலாமணி ஈஸ்வரன் மீது 11 பாடல்கள், திருவிடை கழி இறைவன் மீது 11 பாடல்களும், சிதம்பரம் தில்லை கூத்தன் மீது திருப்பல்லாண்டு 13 பாடல்களும் பாடி இறை அருள் பெற்றார்.

அடிதொழுதவர்கள் அன்பை ஒதுக்கி சேந்தனார் திருவிடைக்கழி அடைந்து அங்கு ஒரு மடம் ஸ்தாபித்தார். சிவன் அருள் பெற்ற அவர் திருமுருகன் அருள்பெற வேண்டி அங்கேயே வசித்தார். தை திங்களில், பூச நட்சத்திரத்தில் சிவனுக்கு மிகவும் உகந்தவரான சேந்தனார் சிவனடி சேர்ந்தார்.

### 3. கருவூர் தேவர்

அடுத்து நாம் காண இருப்பது கருவூர் தேவர், இவர் 3-வது திருவிசைப்பா ஆசிரியர். இவர் பிறப்பில் அந்தணர், சித்தர் சித்து

விளையாடல் பல கைவரப் பெற்றவர் இவரும் போகநாதரிடம் குரு உபதேசம் பெற்றவர். நாம் முன்பு பார்த்த திருமாளிகை தேவர் போக நாதரிடம்தான் சீடராகச் சேர்ந்தார். ஆக திருமாளிகைதேவரும் கரூர் தேவரும் சம காலத்தவர் என நாம் எடுத்துக்கொள்ளலாம். பிற்காலத்தில் கடை மருது ஆகிய திருப்புடைமருதூர் என்ற ஊரில் தாமிரபரணி ஆற்றின் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. ஆதலால் நம் தேவர் கரை கடக்க முடியாமல் சுவாமியை நோக்கி ''நாறும் பூ நாதா'' என்று அழைக்கிறார் உடனே இறைவன் திரும்பி பார்த்து ''வாரும்'' என அழைக்கின்றார் வெள்ளம் வடிய கரூர் தேவர் இறைவனை தரிசிக்கின்றார். பின் திருநெல்வேலி அடைந்து நெல்லையப்பரை அழைக்கின்றார். இறைவனோ யாதும் சுவடு காண்பிக்காமல் இருக்க கோபம் உற்ற நம்தேவர் ''ஈசன் அங்கு எருக்கு இங்கு'' என சாபம் இட்டார். உடனே கோவில் பாழானது. ஊர் மக்கள் அரண்டனர். கரூர் தேவரை மானூரில் சந்தித்து இறைஞ்சினர். நெல்லையப்பர் இறை அருள் புரிந்தார். பின் கரூர் தேவர் ''செந்நெல் இங்கு எருக்கு அங்கு'' என்று சாபவிமோசம் அளித்தார். உடனே நெல்லையப்பர் ஆலயம் சுபிட்ஷம் ஆனது. தஞ்சை பெருஉடையார் மருந்து நிற்காமல் இளகியது. சுமார் 25 ஆண்டுகள் ராஜராஜன் கட்டிய தஞ்சை பிரகதீஸ்வரர் மருந்து நிற்காததால் போகநாதருக்கு தாக்கீது அனுப்பினார் ராஜராஜன். போகநாதர் தம் சிஷ்யர் கரூர் தேவருக்கு பொதிகமலைக்கு தகவல் அனுப்பினார். கரூர் தேவர் வந்து அஷ்டபந்தன மகாமருந்து வைக்க அது இருகிவிட்டது பின்னர் திருவரங்கம் சென்று விட்டு கரூர் அடைந்தார். தன் ஊர் மக்களால் தூற்றப்பட்டு அவர்களால் விரட்டப்பட்டு பசுபதிஸ்வரை தழுவி அவருடன் கலந்துவிட்டார் என்பது வரலாறு. இவர் தான் திருவிசைப்பாவில் மிக அதிகபாடல் பாடியவர். சிதம்பரம் நடராஜர் மீது 11 பாடல்களும், திருக்களந்தை யாதித்தேச்சுரம், இறைவன்மீது 10-ம், திருகிழ்க்கோட்டூர் மணியம்பலம் இறைவன் மீது 11-ம், திருமுகந்தலை இறைவன் மீது 10-ம், திரைலோக்கிய சுந்தரம் மீது 11-ம், கங்கைகொண்ட சோழீஸ்வரர் மீது 11, திருபுவனம் இறைவன் மீது 8-ம், தஞ்சை பிரகதீஸ்வரர் மீது 11-ம் திருவிடைமருதூர் இறைவன் மீது 10 பாடல்களும் பாடி இறைவன் அடி சேர்ந்தார்.

### 4. பூந்துருத்தி நம்பி காட நம்பி

அடுத்து திருவிசைப்பாவை பாடியவருள் நான்கமவர் பூந்துருத்தி நம்பிகடாநம்பி ஆவார். சோழநாட்டு 11-வது சிவஸ்தலம் பூந்துருத்தி. இவர் பிராமணர். நம்பி என்பது மருவி தற்போது அம்பி என்று அழைக்கப்படுகிறது. இவர் தம் பாடல்களில் கணம்புல்லர், கண்ணப்பர், சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் சேரமான் ஆகியோரை பற்றி பல பாடல்கள் பாடி உள்ளார். திருவாரூர் வன்மீகநாதன் மீது 2 பாடல்களும் தில்லை

கூத்தன் மீது 10 பாடல்களும் பாடி உள்ளார். இவர் காலம் 11-ம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகும். இவர் மூவர் பாடாத சாளரபாணி என்ற பண்ணில் சிதம்பரம் பதிகம் பாடியுள்ளார்.

### 5. கண்டராதித்தர்

திருவிசைப்பாவின் ஐந்தாம் ஆசிரியர் கண்டராதித்தர். இவர் சோழமன்னன். பொன் வேய்ந்த பராந்தகன் என்ற சோழனின் 2வது மகன். இவர் பழுத்த சிவபக்தர். கி.பி. 950-ல் பட்டம் பெற்றார். இவர் ஆட்சிக்காலம் 950-957 இவர் காலத்தவர் தான் சேந்தனார். இவர் தன் பாடலில் ''காரார் சோலைக் கோழி வேந்தன்தஞ்சையர்கோன் கலந்த ஆரா இன்சொல் கண்டராதித்தன்'' என்ற தம்மை பற்றி பாடி உள்ளார். ஆகவே உறையூரிலும், தஞ்சையிலும் இருந்து ஆட்சி செய்தார் என்றும் அறிய முடிகிறது. இவர் தன் ஆட்சி காலத்தில் காவேரியின் வடக்கே கண்டராதித்த சதுர்வேதி மங்களம் என்ற ஊரை அமைத்தார். அதுதான் இன்றைய உடையார்பாளையம் தாலுக்கா, கண்டராச்சியம் என்ற ஊர் ஆகும். இவர் மனைவி சிவ பக்தை சிவனருள் செல்வி மழவர்குல மாணிக்கம், செம்பியன்மாதேவி ஆகும். மூவர் பாடிய பாடல்களை இசையுடன் பாடியவர். இவரை ''சிவஞான கண்டராதித்தன'' என்று கல்வெட்டுகள் அழைக்கின்றன. இவர் தில்லை பொன்னம்பலவாணர் மீது ஒரே ஒரு பதிகம் பாடி உள்ளார். தில்லையம்பதியிடமும் தியாகேசரிடமும் நீங்கா பற்றுடன் ஆட்சி செய்தார். தன் ஆயுட்காலத்தில் பல சிவாலயங்களை புனரமைத்தவர். இவர் 10-ம் நூற்றாண்டின் நடுப் பகுதியில் ஆட்சி செய்தார்.

### 6. வேணாட்டடிகள்

திருவிசைப்பாவின் ஆறாம் ஆசிரியர் வேணாட்டடிகள். இது கேரளா மாநிலம் திருவாங்கூர்க்கு அருகில் உள்ளது. சிவயோகியாகிய இவர் துறவி ஆதலால் அடிகள் என்ற பெயரோடு சார்த்தி வழங்கினார். இவர் காலம் 10-ம் நூற்றாண்டு. இவர் அரசர் பரம்பரை என்றும், வேணாடு திருவாங்கூர் சீமை என்றும், 12-ம் நூற்றாண்டு கல்வெட்டு கூறுகிறது. இவர் ஒரே ஒரு பதிகம் தில்லையம்பதி மீது பாடி உள்ளார்.

> **"நின்று நினைந்திருந்து கிடந்து எழுந்து தொழும் தொழும்பனேன்**
> **ஒன்றி ஒருகால் நினையாத இருந்தாலும் இருக்க வெட்டாய்"**

என்று தில்லையம்பதி மீது ஈடுபாடு கொண்டு இவர் பாடிய பாடல் மூலம் தனக்குள்ள பக்தியை பரவசத்துடன் எடுத்துரைக்கின்றார்.

### 7. திருவாலியமுதனார்

இவர் திருவிசைப்பாவின் 7-ம் ஆசிரியர். இவர் பிராமணர். இவரது இயற்பெயர் அமுதன் ஆகும். இவர் ராஜராஜனுக்கு முற்காலத்தவர். சொந்த ஊர் சீர்காழிக்கு கிழக்கே உள்ள திருவாலி என்ற ஊர். அங்குள்ள

திருவாலியமுதனாரின் பெயரே அன்பின் மிகுதியால் இவருக்கு சூட்டப் பட்டது. தன்னை திருமயிலை மன்னன் எனும் கூறிக்கொள்கிறார்.

**"அறைசெந் நெல்வான் கரும்பின் அணியாலைகள் சூழ் மயிலை**
**மறைவல வாலி"**

என்றும் "வரைசெய் மாமதில் மயிலையர் மன்னவன்மறைவலதிருவால்" என்றும் தன்னைப்பற்றி பாடி உள்ளத்தால் திருமயிலையில் வளர்ந்தவர் என்றும் மயிலாடுதுறையில் பிறந்தவர் என்றும் நாம் கொள்ளலாம் வைணவத்தில் பிறந்து சைவ தொண்டாற்றியவர் நம் திருவாலியமுதனார். மொத்தம் 4 பதிகம் தில்லையம்பதி மீது பாடி உள்ளார்.

### 8. புருடோத்தமநம்பி

திருவிசைப்பாவின் எட்டாம் ஆசிரியர் புருஷோத்தம நம்பி. இவர் எழுதிய பாடல்களில் நமக்கு கிடைத்துள்ளது 22. இருபத்தி இரண்டுமே தில்லை கூத்தன் மீது பாடப்பட்டவை. இவர் ஐயங்கார் குலத்தில் தோன்றியவர். பின் சைவம் தழுவினார். ஆடல் வல்லான் மீது அழியாத காதல் கொண்டவர். சிதம்பரத்திலேயே தங்கி பாடல்கள் இயற்றினார். நம்பி என்ற சிறப்பு பட்டம் பெற்றவர்,

**"மாசிலா மறை பல ஓதுநாவன்**
**வண் புருடோத்துமன் கண்டுரைத்த வாசமலர்கள் கொண்டேத்த வல்லார்**
**மலைமகள் கணவனை அனைவார் தாமே"**

என்று பாடுவதால் இவர் அந்தணர் என்று அறியலாம்.

### 9. சேதிராயர்

திருவிசைப்பா ஆசிரியரின் இறுதியானவர். இவர் மன்னர் மரபினர். திருக்கோயிலூரை தலைமையிடமாக கொண்டு சேதிநாடு இவர் நாடு என்றும், தற்போது உள்ள கடலூர் மாவட்டம் கிளியூரை தலைமையிடமாக கொண்டு ஆண்டவர் என்றும் கூற்று உண்டு. சேதிராயர் என்ற பட்டபெயர் அநபாயன் காலத்து கல்வெட்டுகளில் முதன் முதலில் காணப்படுகின்றது. ஆகவே இவர் முதலாம் குலோத்துங்கன் காலத்தவர் அல்லது அதற்கு பிற்பட்டவர். ஆதலால் இவர் காலத்தை அறுதியிட்டு கூற இயலாது. இவர் அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவரான நரசிங்க முனையாரின் வழிதோன்றல் ஆவார். இவர் தில்லை கூத்தன் மீது "சேலுலாம் வயல" எனத் தொடங்கும் 10 பாடல்கள் பாடி உள்ளார். இது பஞ்சமம் என்ற பண்ணில் அமைந்துள்ளது.

மேற்சொன்ன 9 ஆசிரியர்களுள் சைவ வேளாளர் குலத்தவர் திருமாளிகை தேவர். பிராமண குலத்தவர் கருர் தேவர், பூந்துருத்தி

நம்பி காடாநம்பி, திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி ஆகிய 4 பேர். மன்னர் குலத்தவர் கண்டிராதித்தர், வேணாட்டடிகள், சேதிராயர் ஆகிய 3 பேர், தாழ்த்தப்பட்ட ஹரிஜன் வகுப்பை சேர்ந்தவர் சேந்தனார். இதில் அந்தணருக்கும், மன்னர்களுக்கும் ஓடாத தேர் திருமாளிகை தேவருக்கும், சேர்ந்தனாருக்கும் ஓடியது. ஆக கூத்தபிரான் இனத்தையும் குலத்தையும் பார்ப்பதில்லை. உள் இருக்கும் அன்பையும் பக்தியையும் பார்க்கிறார் என்பது தெள்ள தெளிவாக விளங்குகின்றது.

திருமாளிகை தேவர், சேந்தனார் 9-ம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் ஆரம்பமும் ஆகும். கரூர் தேவர் ராஜராஜன் மற்றும் ராஜேந்திரன் இரண்டு பேர் காலத்திலும் வாழ்ந்தவர். ஆக இவர் காலம் 10-ம் நூற்றாண்டின் கடையும், 11-ம் நூற்றாண்டின் முதற்பகுதியும் ஆகும். இவர் காலத்தவரே பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர் காலம் 10-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி. திருவாலியமுதனார் ராஜராஜனுக்கு முன்பு இருந்தவர். புருடோத்தமநம்பி காலம் தெரியவில்லை. சேதிராயர் முதலாம் குலோத்துங்கன் அல்லது அவர் காலத்திற்கு பிற்பட்டவர்.

திருச்சிற்றம்பலம்

# 34. திருமந்திரத்தில் சத்தி வழிபாடு

புலவர் சு. சாவித்திரி, புதுவை.

**சத்தி வணக்கம்**

**ஈசன் அருள் இச்சை அறிவு இயற்றல் இன்பம்**
**இலயமொடு போகம் அதிகாரம் ஆகித்**
**தேசு அருவம் அருவுருவம் உருவமாகித்**
**தேவியுமாய்த் தேசமொடு செல்வமாகிப்**
**பேசரிய உயிரையெலாம் பெற்று நோக்கிப்**
**பெரும்போகம் அவையளித்துப் பிறப்பினையும் ஒழித்திட்டு**
**ஆசு அகலும் அடியர் உளத்துஅப்பனுடன் இருக்கும்**
**அன்னை அருட் பாதமலர் சென்னி வைப்பாம்**

நான் ஆர்? என் உள்ளம் ஆர்? ஞானங்களார் என மாணிக்கவாசகர் போன்ற சான்றோர்களுக்கும் ஐயங்கள் எழுந்தன. நமக்கும் அத்தகைய பல ஐயங்கள் தோன்றுதல் நலமே பயக்கும். ஏனெனில் சமயப் பொருள்கள் நம் அறிவுக்கும் அனுபவத்திற்கும் அப்பாற்பட்டு மேலோங்கி நிற்கின்றன. இறையருள் பெற்ற ஞானிகள் அல்லாத எளிய நமக்கு, அவைகள் பெரும்பாலும் ஊகம் (Speculation) என்ற அளவில் தான் எட்டுகின்றன. நாம் அறிந்தது அணுவினும் சிறியது; அறியாதனவோ கடலினும் பெரியன!

''சும்மா இரு சொல்லற என்றலுமே, அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே'' என்கின்றார் அருணகிரிநாதர். ''ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள'' எனத் தொடங்கும் பெரியபுராணப் பாடலுக்கு அனுபவப் பொருள் யாது? எனக் குருஞான சம்பந்தர் வினவிய வினாவுக்கு விடை கூற மாட்டாமல், குமரகுருபரசுவாமிகள் தாமும் தயங்கினார் என்பது வரலாறு.

தாகம் தணித்துக் கொள்ளக் கருதிக் கடல் நீரைப்பருகினால் தாகம் தணியாமல் மேலும் மேலும் வளர்ந்து பெருகும். அது போன்றே நூலறி வினால் நம் ஐயங்கள் ஒருபோதும் தீராமல், மேலும் ''வளர்ந்து மிகுதிப்படும்.

**சாத்திரங்கள் ஓதினார்க்குச் சற்குருவின் தன்வசன**
**மாத்திரத்தே வாய்க்கும் நலம் வந்துறுமோ? - ஆர்த்தகடல்**
**தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ?**
**தெண்ணீர்மையாய்! இதனைச் செப்பு!''** - திருக்களிற்றுப்படியார்

சமயத்துறையில் நிகழும் ஐயங்களை நம் குருவருளும் திருவருளும் கொண்டே தெளிந்து கொள்ளுதல் வேண்டும். "அதுவானால் அதுவாவர்; அதுவே சொல்லும்"; என்று தாயுமானவர் கூறியுள்ளார்.

'திருமந்திரத்தில் சக்தி வழிபாடு' என்பதனைத் திருமந்திரம் துணை கொண்டு சுருங்கக் கூறுகின்றேன் இறையருளும் குருவருளும் துணை நிற்பதாக!

சிவபெருமானின் பல்வேறு நிலைகளிலும் இயைந்து நிற்பவள் அவனது சத்தி. சத்தியை வழிபட்டுச் சிவனை அடையலாம். சிவனது சத்தியே பிற பொருள்களில் கலப்பினால் ஒன்றாயும் பொருள் தன்மையால் வேறாயும் நிற்கும் என்பதைப் "பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை" (தி.5:47 பா.8) நாவுக்கரசர் பெருமான் திருவாக்கால் உணரலாம். சிவனது வடிவங்கள் யாவும் சத்தியே.

"தான் எங்குளன் அங்குளல் தையல் மாதேவி
..................................................
கோன் எங்கும் நின்ற குறிபல பாரே" - தி.10.பா. 1038.

உடம்புகள் எங்குளவோ அங்கெல்லாம் உள்ள உயிர்களைக் காப்பவனாகிய சிவபெருமான், தான் எங்கு இருப்பவனாக அறியப்படுகின்றானோ அங்கெல்லாம் சத்தியும் உடன் இருக்கின்றாள்.

"தானும் தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்"
- தி.:8, திருக்கோத்தும்பி. 15

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீ இருத்தி" (தி.8, கோயில் மூத்தபா:1)

"எத்திறம் நின்றானீசன்
அத்திறம் அவளும் நிற்பாள்"
(எனச் சத்தி பேதத்தைச் சிவஞான சித்தியார் (சூ:2. பா:75) கூறும்.

"மா மாயை மாயை.......சத்தி தன் மூர்த்திகள் ஆமாய்
அலவாம் திரிபுரை ஆங்கே" (தி:10. பா.1028)

அன்னை சிவசத்தியே பிறபொருள்களில் கலப்பினால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும் நிற்கும் தன்மை கூறினார். பிரம்மலோகம், விட்டுணுலோகம், உருத்திரலோகம் என்னும் மூவுலகங்களுக்கும் தலைவி யாதலால் 'திரிபுரை' என்று குறிக்கப்பெறுகின்றாள்.

"இல்லாமை சொல்லி ஒருவர் தம்பாற்சென்று....
செல்லாமைவைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே"

அபிராமி அந்தாதி (பா.54)யில் அபிராமி பட்டர் 'திரிபுரை' என்று குறிப்பிடுகின்றார்.

பராசக்தியை அனுபவமாக உணர்ந்தவர்கள் அறிவுருவினனாகிய சிவனும் அவள் வழியாகவே தோன்றுவான் என்பதறிவார். ''பரனும் அவளிடத்தானே'' (தி.:10. பா. 1037). அடியார்கள் நாள்தோறும் தங்கள் உள்ளத்தில் தியானிக்குந்தோறும், அவர்கள் உள்ளத்தைப் பக்கவப்படுத்தி உண்மை ஞானத்தை அருளவல்லவள். (தி:10 பா. 1040) ''அம்மை செம்பவளத்திருமேனிச் சிறுமி'' (1041). ..... ''மென்கடிக் குங்கும தோயம் என்ன விதிக்கின்ற மேனி அபிராமி'' - அபிராமி அந்தாதி1.

அபிராமி பட்டரும் செம்மைநிற முடையவள் என்று கூறியுள்ளார். திரிபுரையே வழிபாடுகள் பலவற்றிலும் விளங்கிப் பல பயன்களையும் தருவாள் என ''வைத்த பொருளும்....சத்தி வித்தைத் தலைவியளாமே'' (தி:10. பா.1042) என்று கூறியுள்ளார். அவள் வழிபாடுகளின் தலைவியும் ஆவாள். ''கலை பல ஏன்றிடும் கன்னி என் உள்ளம் நிலை பெற இங்கே நிறைந்து நின்றாளே'' என்று திருமூலர் கூறுகிறார்.

"ஏழுலகும் தொழ மன்றது ஒன்றி மனோன்மணி மங்கலி ஒன்றெனொடு ஒன்றி நின்று ஒத்தடைந்தாளே". (தி.10. பா. 1044) உலகெலாம் வணங்கும் படி (மன்றது) அம்பலத்தில் நின்றும், அவளையே பற்றி நிற்கின்ற என்னிடத்தில் அவள்வேறு நான் வேறு அலாது என்னுள் ஒன்றி நின்றாள் என்று திருமூலநாயனார் கூறுகின்றார். அதனால் ஓயாதே உள்குவார் உள்ளத்துள் பிரிப்பின்றி ஒன்றி நின்றருள் புரிவாள். தீர்ந்த அன்பாய அன்பர் உள்ளத்துள் ஒன்றியிருக்கும்மவள் அத்தன்மையையே உடைய பெரும்பதி (பெரிய தலைவன்) சிவனோடு நின்றே எதனையும் செய்வாள் எனத் திருமூலர் கூறுகின்றார்.

''மங்கையுந்தானும் புணர்ந்துடனே நிற்கும் போதருங்காலைக் கணித்தெழுவார்க்குக் கதி அளிப்பாளே''. (தி:10. பா.1046) சிவத்தோடு நின்றே அன்பருக்கு அருளுவாள்.

''உமையும் உமையொருபாகனும் ஏக உருவில் வந்திங்கு எமையும் தமக்கு அன்பு செய்ய வைத்தார்''. (அபிராமி அந்தாதி : 31) சத்தியினது திருவடியையே தஞ்சமாகக் கருதிப் போற்றுபவர்க்கே அருள் புரியும் இறைவியவள். திரிபுரையே நாமகளாகி கையில் புத்தகத்தை ஏந்தி நிற்பவள். அவளைப் பிற தெய்வம் என்றெண்ணாது திரிபுரையாகவே எண்ணி மலர்த்தாள்களைச் சென்னியில் சூடுமின் என்று கூறிய திருமூலர், அங்குச பாசாங்குசம், கரும்புவில் முதலியனவுடைய திரிபுரையை அறிந்து அவளது இரு பாதாம் புயங்களும் உங்கட்குக் கிடைத்தற் பொருட்டு அவளை ஏத்தி வழிபடுதற்கே உலகில் வாழ்வீராக எனக் கூறுகின்றார்.

''தோத்திரம் செய்து தொழுது துணையடி வாய்த்திட ஏத்தி வழி படுமாறிரும்''... (தி.10. பா.1051) ஆதி சத்தியின் பேதங்கள் அனைத்துமாய்

உலகத்தைச் சார்ந்திருப்பவளும், திருமாலின் தங்கை எனப் படுபவளும் நீதியாளர்கள் நெஞ்சத் தாமரையில் விளங்குபவளுமாகிய திரிபுரையின் மந்திரத்தை நெஞ்சில் இருத்திப் பன்முறைப் பயில் வீராயின் சோதி மிகுத்து முக்கால நிகழ்ச்சிகளும் விளங்கும். "ஆதி விதம் மிகுத்தண்டந்த மால் தங்கை"..... சோதி மிகுத்து முக்காலமும் தோன்றுமே" தி:10. பா:1052. திரிபுரை மந்திரம், "ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் த்ரி புராயை நம" என்பது.

"அருள் பெற்றவர் சொல்ல வாரீர்மனிதர்
பொருள் பெற்ற சிந்தைப் புவனா பதியார்...." தி:10. பா. 1054

என்ற மந்திரத்தில் புவனாபதி = புவனேஸ்வரி என்னும் திரிபுரையின் தலைவனாகிய சிவனது திருவடிகளையே போற்றுவேன்; அருள் பெற்றவர் என்னுடன் வாரீர்; அனைவரும் ஒருங்கு கூடிப் போற்றுவோம் - இம் மந்திரத்தில் 'சத்தி வழிபாடு சிவனை நீக்கிச் செய்யப்படுவதன்று என்பதையும், "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதுபோல் அம்மையப்பன் திருவடிகளை யான் போற்றுவது அன்றியும் உங்களில் அருள் பெற்றவராய் உள்ளோர் என்னுடன் ஒருங்குக்கூடிப் போற்றுவோம்" என்பது கூட்டு வழிபாடு சிறந்தது என்பதையும் நமக்குத் திருமூல நாயனார் உணர்த்துகின்றார்.

"அந்தம் நடுவிரல் ஆதி சிறுவிரல்.......... செந்தமிழாதி தெளிந்து வழிபடும், நந்தி இதனை நவம் உரைத்தானே". தி:10. பா:1072. தமிழ் மொழியிலும் மந்திரம் உண்மையை திருமூலநாயனார் 'செந்தமிழாதி' என வலியுறுத்தி உள்ளார். தொல்காப்பியனாரும்

"நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த
மறை மொழி தானே மந்திரம் என்ப"
(தொல்-பொருள், செய்யுளியல் நூற்பா. 176)

மந்திரம் என்பது தமிழ்மொழி மந்திரம் என உரையாளர் பலர் கூறியுள்ளனர்.

சத்தியினது திருவடியையே தஞ்சமாகக் கருதிப் போற்றுபவர்க்கே அருள்புரியும் இறைவியாவாள். "அஞ்சொல் மடமொழியாள்..... தஞ்சம் என்றெண்ணித் தன் சேவடி போற்றுவார்க்கின் சொல்லளிக்கும் இறைவி என்றாரே (தி:10. பா:1092) என்று திருமூலர் சக்தி வழிபாட்டினைப் போற்றுகின்றார்.

"மாது நல்லாளும் மணாளன் இருந்திடப்
பாதி நல்லாளும் பகவனும் ஆனது
சோதி நல்லாளைத் துணைப் பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடையாமே" - தி.10. பா: 1140.

சத்தி தன் மணாளனாகிய சிவனை ஒருபோதும் நீங்காது ஒருபாதி தானும் மற்றொருபாதி சிவனுமாய் (இந்நிலை எக்காலத்தும் வேறுபடுதல்

இல்லை) உள்ள ஒளிவடிவினளாகிய அன்னையை வழிபட்டால் அனைத்துத் துன்பங்களும் நீங்கி உயிர் தூய்மை அடைதலைப் பெறும் என்கின்றார் திருமூலர்.

''மள்ளடையானும் வகைத்திறமாய் நின்ற
பெண்ணொரு பாகன் பிறவி பெண்ணாமே'' (தி:10. பா.1141)

எனவே சிவனது ஆண்தோற்றம் ஒன்றே அவனது உண்மை இயல்பு என்றோ, பெண் தோற்றம் ஒன்றே அவனது உண்மையியல்பு'' என்றோ. இரண்டும் கூடியுள்ளதே அவன் தன் உண்மையியல்பு என்றோ வழக்கிடுதல் சரியன்று - உயிர்கள் பொருட்டு, சிவன் ஏற்ற தோற்றங்களாகும் என்று அருளாளர் உணர்ந்து கூறியுள்ளனர்.

''சத்தி தான் நாதம் ஆதி தானாகும், சிவமும் அந்தச் சத்தி தான் ஆதியாகும்; தரும் வடிவானவெல்லாம் சத்தியும் சிவமும் ஆகும்'' (சிவஞானசித்தி. சூ:76)

எம் பெருமான் இமவான் மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்
(தி:8. திருபொற்சுண்ணம் 13)

என்பதும், ''சிவம் சத்தி தன்னை ஈன்றும் சத்தி தான் சிவத்தை ஈன்று உவந்து இருவரும் புணர்ந்திங்குலகு உயிரெலாம் ஈன்றும் பவன் பிரம சாரியாகும், பால் மொழி கன்னியாகும் தவத்திரு ஞானத்தோர்க்கு இத்தன்மை தான் தெரியும் அன்றே'' - சிவஞானசித்தி சூ.277)

சிவமும் சத்தியும் ஒரு பொருளே ஆயினும் உயிர்களுடன் தொடர்புகொள்ளும் நிலையில் 'சத்தி' எனப்படுகின்றது.

''காச்சற்ற சோதி கடவுளுடன் புணர்ந்து
ஆச்சற்றெனுட் புகுந்தாலிக்குந்தானே'' (தி:10. பா.1143)

என்று திருமூலர் கூறுகின்றார்.

''துரியம் கடந்த சுடர்த் தோகையுடன் என்றும் பிரியாதே நிற்கின்ற பெம்மான்'' என்று திருக்களிற்றுப்படியார் (பா:69) கூறுகின்றது.

மேற்கூறியவற்றினால் சத்தியை ஒன்றி வழிபட்டால் சிவனின் திருவடியை அடைந்து முத்திப் பேறு பெறலாம் என்பதை உணரலாம்.

''தானானவாறு எட்டதாம் பரைக்குள் மிசை.....தி: 10. பா.:1157. இப்பாடலில் திருமூல நாயனார் 'ஸ்ரீசக்கரம்' எனப்படும் சத்திக்குரிய சக்கரத்தைப் பற்றிக் கூறியுள்ளார். இதன் விளக்கங்கள் அதிகமாகும். ஸ்ரீ சக்கரத்தில் சத்தியை வழிபட்டு அவளுக்கு உரிய மந்திரங்களில்

எந்த ஒரு மந்திரத்தை யேனும் திரும்பத் திரும்பச் சொல்லி உருவேற்றினால் மலரில் மணம் போல் சிவத்தில் வேறாகாது நிற்பவளாகிய சத்தி

"ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத் தாயும்
மகளும் நல்தாரமும் ஆமே" - தி:10. பா : 1161.

என்ற திருமூலர் வாக்குப்படி சத்தி சிவனுடன் பல்வேறு வகையில் இயைந்து நின்று செயலாற்றுவாள் என்பது பெறப்பட்டது.

சிவத்தோடு வேற்றுமையின்றி உள்ள சத்தி அடியவரது தியானத்தில் விளங்கித் தன்வசப்படுத்தி அவர்களை மலத்தின் வழிச் செல்லாது தடுத்துத் தவநெறியை அடையச் செய்வாள். "புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி".... (தி:10. பா: 1167) என்ற மந்திரத்தில் உயிர்களுக்கு வீட்டின்பம் நல்குதலே சத்தியது குறிக்கோளாகும் என்று திருமூலர் கூறுகின்றார். அவளிடத்தில் அது வேண்டும், இது வேண்டும் என்று அவாவி வேண்டுதல் கூடாது. "அது இது என்னும் அவாவினை நீக்கித் துதியது செய்து சுழியுற நோக்கில், விதியது தன்னையும் வென்றிடலாகும்"... (தி:10. பா:1169) சூரிய சந்திர அக்கினி வடிவாயமும் மண்டலங்களில் உள்ள சூரியன், நிலவோன், அக்கினி தேவன் இவர்களைச் சத்தியின் வடிவாகக் கண்டு வழிபடுதலும் உள்ளொளி பெறும் வழி என்கின்றார். (தி:10. பா.1178).

"சத்தி என்பாள் ஒரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்பதறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்த அப்பாவிகள்
கத்திய நாய்போல் கதறுகின்றாரே" (தி:10. பா:1182)

வீடு பேற்றினை நல்கும் முதல்வி அவளே என்பதை அறியாதார் அவளிடம் தாம் செய்கின்ற பத்திக்கு உலக வாழ்வே பயனாக எண்ணிப் பாழ்படு கின்றனர். பிற பயன்களைக் கருதாது அன்னையை அடைதலே பயன் எனக் கருதி மந்திரங்களைச் சொல்லி மறவாது அவளை நினைப்பவர்க்கே அம்மை தனது தாமரை மலர் போன்ற "சீரேயுஞ் சேவடி (சிவந்த திருவடிகளை) சிந்தை வைத்தாளே". அவர்களது உள்ளக் கமலங்களில் பதிய வைத்துக் காட்சி வழங்குகின்றாள். (தி:10.பா:1183)

அம்மையை முதலில் நம் உடலில் சிரம் முதலிய இடங்களில் வைத்தும், பின் இதயத்தில் வைத்தும், அதன் பின் நம்முள் உள்ள திருஉருவத்தில் வைத்தும், அதன்பின் மூலம் முதலிய ஆதாரங்களில் வைத்தும் ஒன்றி நின்று வழிபடுதல் வேண்டும். அவ்வாறு வழிபடுங்கால் பிறவற்றை நினைத்தலாகிய குற்றத்தில் அகப்படாது மனத்தைக் கட்டுப் படுத்தி அவ்வற்றிற்கு ஏற்ற மந்திரங்களில் அவளை எண்ணுதல் முக்கிய மானது ஆகும். உறைபதி தோறும் உறைமுறை மேவி அவளுக்குரிய மந்திரத்தோடு நீங்காது நிற்கின்ற பிரணவம், பீஜம், சத்தி, கீலகம்

என்னும் நான்கினையும் இறையருள் மிகுமாறு ஒன்றி ஓதி வழிபடின் பயன்கள் பல அடையலாம். உறைமுறையாவன: அம்மைக்குச் சத்தி பீடங்களாயுள்ள காமாட்சி, விசாலாட்சி, அன்னபூரணி, அபிராமி இதுபோன்ற மற்றயாவுமாம்.

''உறைபதி தோறும் உறைமுறை மேவி'' (தி:10. பா:1186)

என்ற மந்திரத்தில் கூறுகின்றார்.

''கருத்துறுங்காலம் கருது மனமும்....
ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மேன்மேல்
இருத்திடும் எண்குணம் எய்தலும் ஆமே'' (தி:10. பா:1188)

சத்தியை ஒன்றி இருந்து நினைந்து வழிபடின் அன்னை பராசக்தி அவ்வுயிர் களை மேன்மேலும் உயர்த்திச் சிவமாகச் செய்வாள் எனக் கூறியுள்ளார்.

ஆமைபோல் ஐம்புலன்களையும் திருவருளுக்குள் அடக்கிப் பிரணவ யோகம் செயின் அம்மையைத் தரிசித்தல் பெறலாம். ''ஆமை ஒன்றேறி அகம் படியான் என.... (தி:10. பா:1189) என்று மந்திரம் கூறுகின்றது.

''புலனடக்கித் தம்முதற்கண் புக்குறுவார், போதார்
தலன் நடக்கும் ஆமைதக'' - திருவருட்பயன் 94

என்று திருவருட்பயன் கூறுகின்றது.

சத்தி உலக முதல்வியாயினும், சிவத்தோடு கூடிநின்றே முதற் பொருளாவாள் என்று ''அண்ட முதலா அவனி பரியந்தம்....'' (தி:10. பா:1193) இம்மந்திரம் மூலம் கூறுகின்றார். இக்கருத்தினையே அதாவது; அம்பிகையைத் தனித்த ஒருத்தியாக எண்ணுதல் கூடாது. சிவனது பண்பாகவே அவளை எண்ணுதல் வேண்டும் ''கலந்து நின்றாள் கன்னி காதலனோடும்...'' (தி:10 பா:1198) என்று இம்மந்திரத்திலும் கூறியுள்ளார்.

''பாகம் பராசத்தி பைம்பொற் சடைமுடி
ஏக இருதயம் ஈரைந்து திண்புயம்
மோக முகம் ஐந்து முக்கண் முகந்தொறும்
நாகம் உரித்து நடம் செய்யும் நாதற்கே'' (தி:10 பா: 1200)

இம்மந்திரத்தில் சிவபெருமானின் பல்வகை உருவகமும், குணமும், செயலும் அனைத்தும் சத்தியால் அமைவனவே என்பதை விளக்க அவன் உருவம் முதலியவற்றை விளக்கிக்கூறியுள்ளார். பல்வேறு நிலைகளில் நின்று உயிர்களுக்கு அருள் புரிகின்ற சத்தியைச் சிவனின் வேறாகாதவளாக ஒன்றி நினைந்து வழிபடுபவரே அம்மையப்பராகிய இருவரிடையே அழுந்தி உண்மை ஞானியாகும் பேறுபெறுவர்.

"நவிற்று நன் மந்திரம் நன்மலர் தூபம்
.......................பார்ப்பதி பூசை
அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனையாமே"
(தி:10. பா:1226)

சத்தியைச் சிவனது ஆற்றலாக அறியும் அறிவில்லாதவர் சத்தியை வேறாகவும், சிவனில் பெரியவளாகவும் எண்ணி வழிபடினும், அவ் வழிபாடு தூய முறையில் அமைந்திருப்பின் சத்தியை அல்லாது சிவனையும் மகிழ்விக்கும்.

தூய வழிபாடு எனின்: கள், ஊன் இவற்றைக் கொண்டு செய்யும் வழிபாடு சத்தி சிவன் இருவரையுமே மகிழ்விக்காது. தூயதாயச் சிவ வழிபாடே பயன் தரும் என்பதாயிற்று. சிவனை நீக்கிச் சத்தியை மட்டும் சிலர் வழிபடுவர். அது ஏற்படையதன்று என்று கூறுகின்றார் திருமூல நாயனார். சிவனைச் சத்தியோடு உடனாகக் கண்டு வழிபடுபவர் அடையாத பலனில்லை என்று கூறுகின்றார்.

அம்மை ஒப்பற்ற தலைவனாகிய சிவனோடே என் நெஞ்சத்தை விரும்பி இனியவளாய் இருக்கும் சத்தி ஏழுலகத்திலும் நிறைந்திருப்பவள் எனினும் தாயாகிய அவளைப் பனியான் மலர்ந்த பைம் போதுகை ஏந்தி (அன்றலர்ந்த புதுமலர்களை) வழிபடுவோர்க்கு எளியள் ஆவாள் எனக் கூறுகின்றார் திருமூல நாயனார்.

அம்மையும் அப்பனும் (சத்தியும் சிவமும்) அவருடன் ஒன்றி இருந்தாரை மகனாகப்பாவித்து அன்பு செய்வர் என்பதனைத் திருமூலர் "அம்மையோடு அத்தனும் யானும் உடனிருந்து அம்மையோடத்தனை யான் புரிந்தேனே" (பா : 1237) உண்மைத்தாயாகிய சத்தியும், தந்தை யாகிய சிவனும், மகனாகிய யானும் (உலகில் பெற்ற தாய் தந்தையர் அன்பு காட்டுவதல்லது என்ன செய்வர் என்பது) மட்டும் ஒன்றி இருந்த போது அவ்விருவர்மாட்டும் அயரா அன்புடையன் ஆயினேன். "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லைக் கன்றிய காலனைக் காலால் கடிந்தான் அடியவர்க்கா...." என்ற திருநாவுக்கரசர் பெருமான் பாடலும் நினைவுறத் தக்கது.

"அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அம்மையும் அத்தனும் ஆரறிவார் என்னை
அம்மை யோடத்தனும் யானும் உடனிருந்து
அம்மை யோடத்தனை யான் புரிந்தேனே" (தி:10. பா:1237)

அம்மையப்பனின் அன்பின்றி உயிர்களே தம்மில் ஒன்றற்கு ஒன்று ஏதும் செய்து கொள்ளல் இயலாது. முத்திக்கு வித்தாகும் அம்மையும்

அப்பனுமே சத்தியும் சிவனுமே முத்திக்குப்பரம் ஆதாரமாதலை இம் மந்திரத்தால் நமக்குப் புலப்படுத்துகின்றார்.

உயிர்களுக்குப் பெத்தம், முத்தி எக்காலத்தும் சத்தியும் சிவனுமே பரம ஆதார மாயிருத்தலைக் கூறுகின்றார்.

சத்தியும் சிவனும் ஒன்றேயாதலால் சிவனை நீக்கிச் சத்தியை மட்டும் வழிபடுதலும் சரியன்று. சத்தியை எண்ணாது சிவனை மட்டும் வழிபடுதலும் பொருந்தாது.

உயிர்களுக்கு வீட்டின்பம் நல்குதலே சத்தியின் குறிக்கோளாகும். சத்தியிடம் வேண்டும் போது அது வேண்டும் இதுவேண்டும் என்று கேட்காமல் வழிபாடு செய்தலே பயனுடைத்து என்று திருமூலர் கூறுகிறார்.

"அம்மையப்பனே உலகுக்கு அம்மையப்பன்" என்று திருமூலர் காட்டும் சத்திவழிபாடு நமக்கு உணர்த்துகின்றது.

சிவசிவ

# 35. திருமந்திரத்தில் பல்வகைச் செய்திகள்

திரு. வி.ஏ. சிங்காரவடிவேல், சிதம்பரம்.

திருகைலாயத்தில் இறைவன் உடன் இருந்தார் ஒரு முனிவர். அவர் பெயர் சுந்தரநாதன். அந்த முனிவர் குருமுனி அகத்தியரைக்காண திராவிட நாடு நாடி வந்தார். நந்திதேவர் அருள் பெற்றவர். வரும் வழியில் உள்ள சிவஸ்தலங்கள் அனைத்தையும் தரிசித்தபின் காஞ்சிபுரம் வருகிறார். எண்வகை சித்தியை பெற்ற அவர் யோகியர் வசம் காஞ்சியில் பலகற்றார். பின் தில்லை வனம் அடைந்து தில்லையம்பதியை தரிசித்தார். சில காலம் தங்கி இருந்தார். பின் திருவாவடுதுறை அடைந்தார். காவிரிக் கரை ஓரம் பசு கூட்டம் நின்று அழுது கொண்டிருந்தன. சாத்தனூர் பிரமணர் விட்டு மாடு மேய்க்கும் மூலன் மாடுமேய்க்கும் போதே இறந்து மூலன் உடலில் சுந்தரநாதன் தன் சித்தியால் கூடுவிட்டு கூடு பாய்ந்தார். மூலன் உடலில் முனிவர் வந்தார். பசுக்கள் ஆனந்த கூத்தாடின மாலையில் பசுக்களை சாத்தனூர் அந்தணர் வீட்டில் சேர்த்தார். மூலன் மனைவி தொட்டு அழைக்க எண்ணினாள். எனவே தன்நிலை விளக்கி தன் உடலை தேடி செல்கிறார். கணாது திகைக்கிறார். இறைவன் திருஉள்ளத்தை உணர்கின்றார். தமிழ் உடம்பில் தமிழ் பாடல் பாட இறைவன் உத்தரவு செய்ய, திருவாவடுதுறையில் தங்கி ஆண்டுக்கு ஒரு பாடல் வீதம் மூவாயிரம் பாடல் பாடுகிறார். திருமூலர் ஸ்தூல சரீரம் திருவாவடுதுறையில் சமாதியில் வைக்கப்பட்டது சூட்சுமசாரீரம் இறைவன் அடி அடைந்தது.

திருமூலர் தொடாத தலைப்புகளே இல்லை எனலாம். ஆன்மீகம், வேதம், விஞ்ஞானம், தமிழ் செல்லாட்சி, பசு, பதி, பாசம் என திருமூலர் 3000 பாடல்களில் புகுந்து விளையாடி உள்ளார்.

தன் காப்பு செய்யுளில் வினைதீர்க்கும் விநாயகனை ஐந்து கைகளும், யான முகமும், இளம்பிறை சந்திரன் போன்ற வளைந்த வெண்கொப்பு உடையவனும், நந்தி மகன் எனவும், ஞானகொழுந்து எனவும் பக்தி பரவசத்துடன் பாடி மகிழ்கின்றார். சிவனை 'நந்தி' என்று பல இடங்களில் அழைக்கின்றார். முதல் பாடலில் "ஒன்றவன்தானே" என ஆரம்பிக்கின்றார். ஒளியாக இருந்து உமையொடு பாகனக இரண்டாக இருந்து படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில் செய்த மூன்று நிலையாகவும், தானே முழு உலகம் ஆக பரந்த, உலகம்

முழுவதையும் தனக்குள்ளே அடக்கி, உலகில் உள்ள உயிர்களுக்கு எல்லாம் உள்ளே உறைந்து, உலகின் வடிவம் தனது வடிவமாக ஆகி நான் உணர்வுகளை நான் ஆகி ஐம்புலன்களை அடக்கி ஐந்துவென்றான் ஆகி ஆறு ஆதாரங்கள் மனித உடம்பில் உள்ளதை அவற்றின் ஆற்றல் மனித உடம்பில் பரவி நிற்பதை ''ஆறவிரிந்தனன்'' ஆகக்கூறி, ஆறு ஆதார நிலைக்கு அப்பால் ஞான பெருநில, ஏழாவது உம்பர் (உம்பர் = ஆகாசம்) சென்று நின்று இறைவனை ''எழும்பர்ச் சென்றனன்'' ஆக்கி, நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், சூரியன், சந்திரன், உயிர் ஆகிய எட்டு பொது நிலையில் அஷ்டமூர்த்தி சொரூபமாக ''எட்டுணர்ந்தாள்'' என்று முடிக்கின்றார். இறைவன் அனைத்துமாக உள்ளான் என்னும் கருத்தினை இதைவிட யாராலும் எப்போதும் வழங்கிட முடியாது.

சிவன், பிரும்மா, விஷ்ணு இந்த மூன்று தெய்வங்களையும் ஒரே நிலையாக்கி ஈசன் ஒருவனே என்றார் திருமூலர்.

**''நின்றனன் மாலொடு நான்முகன் தானகி''** (3038)

என்று பாடுகிறார். இந்த திருமந்திரம் ஸ்ரீமூலநாதரின் அனுபவ ஞானம் நிரம்பிய யோக நூல் இந்தயோக அனுபவத்தை தன் எளிய தமிழில் ஆனந்தத்துடன் பாடுகின்றார். உடம்பை பாதுகாக்க வேண்டிய அவசியத்தை ஸ்ரீமூலர் விரித்து உறைக்கின்றார்.

**''உடம்பார் அழியில் உயிரார் அழிவர்''** (724)

உடம்பு அழிந்து பட்டால் உயிர் அழிந்துவிடும் உயிர் அழிந்துவிட்டால் ஆண்மாவானது தான் அடையவேண்டிய பயனை அடையாமல் நஷ்டமடைகிறது.

**''உடம்பு அழிந்த உடன் அந்த வாய்ப்பு கிடைக்காத அந்த
உடம்பை பாதுகாக்கும் வழி''**

**''உடம்பை வளர்க்கம் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே''**

என்றும்

**''உடம்புள்ளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பின் யானிருந்த ஓம்புகின்றேனே''** (725)

திருமூலர் இத்தகைய அறிய பல தத்துவங்களை உதிக்கின்றார். இதை நம்பியாண்டார் நம்பி தம் திருத்தொண்டர் தொகையில்

**''நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்''**

என்று இயம்புகின்றார். இறைவனையும் அவன் குணதிசயங்களையும் பாடுகின்றார் திருமூலர். ஈசன் நம் பாவங்களை எறிப்பதில் தீயைவிட வெண்மையானவன். அருள் வழங்குவதில் தண்ணீரைவிட குளிர்மை

யானவன் ஸ்ரீமூலருக்குத் திருப்தி ஏற்படவில்லை. குழந்தையைவிட நல்லவன் தாயைவிட நல்லவன் என்றும் பாடி பரவசம் அடைகின்றார் ''தீயினும் வெய்யள்'' (8) என்ற பாடல் இறைவன் குணாதிசியத்தை விளக்குகின்றார்.

வேதத்தையும், அதன் சிறப்பையும் திருமூலர் அற்புதமாக பாடுகின்றார்.

''வேதத்தை விட்ட அறம் இல்லை வேதத்தில்
ஓதத்தகும் அறம் எல்லாம் உள'' (51)

இப்படி ஆகம சிறப்புகளை கூறி மொழியை, எடுத்துக் கொள்கிறார். திருமூலர் காலத்தில் மொத்த 18 மொழிகள் இருந்தன. திருமூலர் 18 மொழியும் கற்று தேர்ந்தார் இது அவர் வாக்கு

''பண்டிதர் ஆவார் பதினெட்டு பாஷையும்
கண்டு அவர் கூறும் கருத்து அறிவார் என்க'' (59)

விஞ்ஞானத்தையும் நம் திருமூலர் விட்டுவைக்கவில்லை திருமூலர் கலைகளை எல்லாம் கற்று தேர்ந்தவர். வைத்தியம், ரசாயணம், பௌதிகம், வானசாஸ்திரம் முதலிய அனைத்து துறைகளிலும் வல்லவர் அறிவுக்க அப்பால்பட்ட தத்துவங்களை விளக்க அறிவுக்கு புலன் ஆகின்ற உண்மைகளை உதாரணம் காட்டுவர் நம் முனிவர். சூரியகாந்தக்கல் என்ற ஒரு வகை குவி ஆடி உண்டு அதன்கிழ் பஞ்ச வைகத்தால் திப்பற்றி எறியும். சூரியனிடம் இருந்து ஒளியை வாங்கி குவித்து பஞ்சின் மீது பாச்சுகிறது சூரியகாந்தகல். அதுபோல் ஆன்மாவாகிய சூரியகாந்தக்கல்லுக்கு பாசமாகிய பஞ்சை சுட்டு எரிக்க முடியாது. ஆனால் இறைவன் குருவாக வந்து ஞான ஒளி இந்த ஆன்ம கண்ணாடிக்குள் செலுத்தினால் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று பாச மலங்களும் எரியும் இதை

''சூரிய காந்தமும் சூழ் பஞ்சும்'' போலவே (117)

என்ற பாடல் மூலம் தெளிவுறுத்தி உள்ளார்.

தர்மம் எப்படி செய்ய வேண்டும் என்றும் அதன் முறைகளையும் திருமூலர் உபதேசிக்கின்றார். அன்பையும் சிவத்தையும் இரண்டாகப் பிரிப்பது தவறு. இரண்டும் ஒன்றே, இந்த அன்பு கனிந்து பூரணம் பெற்று சிவம் ஆகிறது. அன்பு என்ற ஒரு பண்பு சிவம் ஆகிறது என்று உணர்ந்து விட்டால் சிவானந்த பேறு பெறுவார்கள். இதை தன் தெள்ளு தமிழில்

''அன்பும் சிவமும் இரண்டென்பரறிலிலார்'' (270)

என்ற பாடலில் உணர்த்துகின்றார்.

புராண கதைகளை எடுத்துக்கொண்டு அவற்றின் உட்கருத்தை விளக்கும் பல பாடல்களைப்பாடி உள்ளார். திரிபுரம் எரித்த வரலாறு திருமூலர் பாடலில்

"அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
மூப்புரம் சென்றனன் என்பார்கள் மூடர்கள்" (343)

மும்மலங்கள் அளைவன் அம்பு எய்தி அழிப்பதை யாரும் உணர்வ தில்லை. இறைதிரு அருள் நாடி பக்தி செய்தால் ஆணவம், கன்மம், மாயை என்ற 3 கோட்டைகளையும் இறைவன் அழிப்பான் என்கிறார் திருமூலர் கீழ்கண்ட பாடலில்

"அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்,
முப்புரம் சென்றனன் என்பார்கள் மூடர்கள்
முப்புரமாவத மூலகாரியம் அப்புரம் எய்தாமை யாரணிவாரோ"
(343)

திருமூலர் காலத்தில் 6 சமயங்கள் இருந்தன என்பது அவர் வாக்கு. அவர் கூறுவது சைவம், பாசபதம், மாலிரதம், காளாமுகம், வாமம், வைரவம். இந்த ஆறு சமையங்களும் இறைவனை அடைய 6 வழிகள் என்று ஞானியர்கள் அனுபவத்தில் கூறுகின்றனர். இந்த சமையங்கள் லட்சியம் பரம்பொருளை அடைவது இந்த மறந்துவிட்டு சண்டை சச்சரவு இடுவது தவறு என மத ஒற்றுமையை போற்றுகிறார். ஆறு பலவாக இருந்தாலும் கடலில் சேர்வதுபோல், போய்சேரவேண்டிய ஊருக்கு 6 வழிகள் இருக்கின்றன. சேரவேண்டிய ஊரை மறந்து வழிகளைப் பற்றி சண்டை செய்யாதீர்கள் என்று சமூக நோக்கோடு பாடல் பாடுகிறார்.

"ஒன்றது பேரூர் வழிஆறு அதற்குள்
என்றது போல இடுமூச்சமயமும்
நன்றிது தீதிது என்றுரையாளர்கள்
குன்ற குரைத்தெழு நாயை ஒத்தார்களே" (1558)

மாயையின் தன்மையை மிக விரிவாக விளக்குகின்றார் திருமூலர். ஆன்மாவாக நிற்பது பரம்பொருள் தன் அனுபவம் மூலம் ஒரு உதாரணம் சொல்கிறார்.

"மண்ணொன்று தான் பல நற்கலம் ஆயிடும்
உண்ணின்று யோனிகள் எல்லாம் இறைவனே
கண்ணொன்று தான் பல காணும் தனைக்கான
அண்ணலும் அவ்வண்ணம் ஆகி நின்றானே" (440)

மனித சொரூபம் எடுத்துக்கொண்ட பரம்பெருள் பிற பொருள்களை உணரும். தன் உண்மை சொரூபத்தை உணராது. இந்த அறிய தத்துவத்தை தனக்கே உரிய எதுகை மோனை வைத்த கவிதை அழகை நமக்கு தருகின்றார்.

பரம்பொருள் உலகையும், உயிர் நிலயமாக உடம்பையும் படைத்தான். எல்லாம் அவன் உவப்பில் பிறந்தவை. இந்த படைப்பு அழிப்பு ஆகிய

அவன் விளையாட்டை மனித பிறவி எடுத்த நாம் ஏற்றுக்கொள்ளதான் வேண்டும். இதுதான் சுவாமி.

"உகந்து நின் றேபடைத் தான் உலகேயும்
உகந்து நின்றே படைத் தான் பல ஊழி
உகந்து நின்றே படைத் தான் ஐந்து பூதம்
உகந்து நின்றே உயிர் உன்படைத்தானே" (445)

என்று களித்து பாடுகின்றார்.

திருகையிலையில் இருந்து புறப்பட்ட நம் திருமூலர் தம் நண்பரை (அகத்திய மாமுனியை) காணப் புறப்பட்டார். புறப்பட்ட அவர் திருவாவடு துறையில் 3000 வருடம் தங்கி வருடத்திற்கு ஒரு பாடல் வீதம் பாடுகிறார். சிலர் கருத்து இதில் இடைச்சொருகல் உண்டு என்பது இந்த கருத்தை உண்மையாக்குவதுபோல் "ஐந்துகரத்தனை யானை முகந்தனை என்றும்" ஒன்றவள் தானே இரண்டவன் இன்னருள் என்ற பாடலிலும் உருவ வழிபாட்டையும், பலதெய்வ வழிபாட்டையும் பாடுகின்றார். பின்னிட்டு இறுதியில் ஒன்றே குலம் ஒருவனே தேவன்" (2104) என்று பாடுகின்றார். இந்த மாறுபட்ட கருத்து ஏன் என்பது அறிஞர் மத்தியில் ஒரு பெரிய கேள்விக்குறி. இருந்தாலும் நாம் அவ்வளவு ஆழமாக செல்லாமல் மேம்போக்காக இந்த ஆய்வில் மேற்கொள்வோம்.

குரு உபதேசத்தை பற்றி திருமூலர் மிக அழகாக குறிப்பிடுகின்றார். இறைவன் குரு உருவத்தில் வந்து நமக்கு திருவருள் புரிகின்றார். குருவைத் தருசிப்பது என்பது அறிவு பெறும் வழி. அவர் பெயர் சொல்வது அவர் சொல்லும் வார்த்தைகளை கேட்பது. அவர் திரு உருவத்தை தியானிப்பது என்பது எல்லாம் அறிவைப் பெறும் வழி என்று நம்மை வழி நடத்துகிறார், கீழ்வரும் பாடலில்,

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்,
தெளிவு குருவின் தெளிவு குருவின்
திருநாமம் செப்பல் தெளிவு குருவின்
திருவார்த்தை கேட்டல் தெளிவு குரு உரு
சிந்தித்தல் தானே" (139)

சமுதாயத்தை திருத்தும் நோக்கில் பல பாடல்கள் பாடி உள்ளார். பிறன்மனை நோக்காமை குறித்தும், தீய செயல்களில் 5 குற்றங்களில் மிகவும் கொடியது என்கிறார் திருமூலர். நம் பெரியவர்கள் இதை பஞ்சமா பாதகம் என்று பெயரிட்டனர். அவை கொலை, களவு, கள் உண்டல், காமம், பொய் ஆகும். இத்தகைய செயல்களை செய்யாதீர்கள். செய்து அழியாதீர்கள் என்கிறார்.

"கொலையே களவு கள் காமம், பொய் கூறல்
மறைவான பாதகமாம்" (200)

வீட்டில் இருக்கும் மனைவியை விட்டு பிறர் காவலில் இருந்து காப்பாற்றப்பட்ட மனைவியை காமுருபவர்கள். நல்ல பலாப்பழத்தை விட்டு அதை சாப்பிடாமல் ஈசம் பழத்துக்கு ஆசைப்படுவதாகும். அது எவ்வளவு மதியினம்?

''ஆத்த மணையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமமும் களையர்
காச்ச பலாவின் கனியுண்ணமாட்டாமல்
ஈச்சம் பழத்துக்கு இடருற்ற வாறே'' (201)

கல்வியையும் விட்டுவிட வில்லை. கல்வியின் சிறப்பை

''கற்கின்ற செய்யின் கழிந்தரும் பாவங்கள்'' (292)

என்றும்

''துணையது வாய்வரும் தூயநற் கல்லியே'' (294)

என்றும் அற்புதமாக பாடுகின்றார்.

இதுபோல் இன்னும் ஏராளமான சமய கருத்துகளையும், தத்துவங் களையும், சமூக சிந்தனைகளையும், திருமூலர் நமக்கு 3047 பாடல்களில் வாரி வழங்குகின்றார். அனைத்தையும் அள்ளி பருகிட ஆடல்வல்லான் பிரிதொரு சமயம் அருள்புரிவானாக.

திருச்சிற்றம்பலம்

# 36. திருமந்திரத்தில் தொன்மம்

செல்வி சு. சிவப்பிரியா, தஞ்சாவூர்.

திருமந்திரம் சிவாகமங்களின் சாரமாக விளங்கும் பெருமைக்குரியது. தேவாரத் திருமுறைகளில் வேதப்பொருள் மிகுந்தும் ஆகமப் பொருள் குறைந்தும் காணப்படும். ஆனால் திருமந்திரத் திருமுறைகளில் ஆகமப் பொருள் மிகுந்தும் வேதப்பொருள் குறைந்தும் காணப்படும். உயிர் அறிவுப்பொருள். ஆனால் அது தன் நிலை உணராமல் அறியாமையில் அழுந்திக் கிடக்கிறது. இவ்வாறு தன் உண்மை இயல்பை அறியாமல் மயங்கிக்கிடக்கும் உயிரை மறுபடியும் அதன் நிலைக்கு மீட்பது இறைவனின் திருவருள். இந்தத் திருவருள் எல்லோருக்கும் கிடைக்க திருமூலர் தொன்மங்களின் துணையோடு பல்வேறு சைவ நீதிகளைத் திருமந்திரத்தின் வழியாக எவ்வாறு முன்வைக்கிறார் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## தொன்மம்

இலக்கியக் கருத்துக்கள் அனைத்தும் தொன்மத்திலிருந்தே தோற்றம் பெற்றன என்பர். தொன்மங்களை உயர்ந்த இலக்கியங்களில் மட்டு மல்லாமல் பாமர இலக்கியங்களிலும் காணலாம். தொன்மங்கள் சமூகக் கட்டுப்பாடுகளையும் பழக்க வழக்கங்களையும் காக்க எழுந்தவை. அவை நிகழ் காலத்தையும் எதிர்க்காலத்தையும் கருத்தில் கொண்டவை. ஆன்மீக உலகில் குறிப்பிடத்தக்க உண்மைகளையும் நுண்மைகளையும் தன்னுள் தேக்கி வைத்துள்ளது. சமயத்தில் ஆழ்ந்த நுண்ணிய நோக்கு அடிப்படைக் கருத்துக்கள் யாவும் தொன்மத்தில் தோய்ந்து கிடக்கிறது எனவே தொன்மம் சமயப் படிமத்திற்குத் தேவையான வடிவங்களைத் தருகிறது. மேலும் சமயங்களின் படிமங்கள் தொன்மம் எனும் மொழி வாயிலாகவே கருத்துக்களைப் புலப்படுத்துகின்றது.

## நான்முகன் எனும் தொன்மம்

பிரம்மனுக்கு ஐந்து தலைகள் இருந்தன. ஒருமுறை பிரம்மன் சிவனை அவமதிக்க சினமுற்ற சிவன் வயிரவரை உருவாக்கி பிரம்மனின் ஊர்த்துவ தலையை வெட்டிவிடும்படி ஆணையிட்டார். வெட்டிய இடத்திலிருந்து பெருகி ஓடிய குருதியை பிரம்மனின் கபாலத்திலேயே தாங்கினார். இவ்வாறு நான்முகனின் தலைகளில் ஒன்றை அறுத்து

அவனது அகந்தையை அடக்கியதால் பிரம்மன் சிவனின் மேலாண்மையை ஏற்றார் என்பது தொன்று தொட்டு வழங்கிவரும் செவிவழிச்செய்தி. இந்த தொன்மக் கதையை பின்வரும் திருமந்திரத் திருப்பாட்டு பேசுகிறது.

**எங்கும் பரந்தும் இருநிலம் தாங்கியும்**
**தங்கும் படித்து அவன் தமாள்உணர் தேவர்கள்**
**பொங்கும் சினத்துள் அயன்தலை முன்அற**
**அங்குஅச் சுதனை உதிரம் கொண்டானே**

இப்பாடல் பிரம்மனின் உச்சந்தலையை வெட்டி அதனை ஓடாகக் கொண்டு அச்சுதனாகிய திருமாலின் நெற்றி பிளந்து அவனுடைய இரத்தத்தை பிச்சை கொண்டான், என்பதைத் தெளிவாகக் காட்டி நிற்கிறது.

### முப்புறம் எரித்தல் தொன்மம்

சிவன் முப்புறம் எரித்த கதை தமிழ் இலக்கிய உலகில் தொன்றுதொட்டு பதிவெய்தி வருகிறது. சங்க இலக்கியங்களிலும் காப்பிய இலக்கியங் களிலும் இக்கதை கூறப்பட்டுள்ளதைப் போலவே பக்தி இலக்கியங்களிலும் பரவலாகச் சுட்டப்பட்டுள்ளது. தாரகனின் மூன்று மகன்களும் தங்கள் தவ வலிமையால் பிரம்மனிடமிருந்து மூன்று பறக்கும் கோட்டைகளைப் பெற்று யாராலும் வீழ்த்த முடியாதவர்களாக வாழ்ந்து வந்தனர். அவர் களை ஒரே அம்பால் அழிக்கவேண்டும் என்ற சூழலில் மேரு மலையை வில்லாகக் கொண்டும் வாசுகிப் பாம்பை நாணாகக் கொண்டும் நாராயணனை அம்பாகக் கொண்டும் சிவன் அழித்தார். சிவபிரானின் இச்செயலால் விண்ணில் உலவிய கோட்டைகள் தகர்ந்தன. இந்த பழமை வாய்ந்த தொன்மக் கதையை திருமூலர் கீழ்க்காணுமாறு பாடியுள்ளார்.

அப்புஅணி செஞ்சடை ஆதிபு ராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரம் ஆவது மும்மல காரிவம்
அப்புரம் எய்தமை யார்அறி வாரே

இப்பாடலில் முப்புரம் என்பது குறியீடாக நின்று ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களை அழித்தலை உணர்த்தி நிற்கிறது.

### சலந்தரன் எனும் தொன்மம்

சிவன் முப்புரங்களை எரித்ததன் தொடர்ச்சியாக ஒரு புராணக்கதை நிலவி வருகிறது. முப்புரங்களை சிவன் எரித்தபொழுது வெளியான நெற்றிக்கண் நெருப்பு சிந்து நதியில் விழுகிறது. நதியில் நனைந்த அந்த நெருப்பிலிருந்து சலந்தரன் எனும் அசுரன் பிறந்து வளர்கிறான். இந்த உலகில் அவனை யாரும் கொல்ல முடியாத வரத்தைப் பெறுகிறான். இந்த வலிமையை வைத்துக்கொண்டு தேவர்களையெல்லாம் கடுமையாகத்

துன்புறுத்தினான். ஒரு கட்டத்தில் சிவபெருமானிடமே சமரிடத் துணிகிறான். அப்பொழுது சிவன் தன் கால்விரலால் ஒரு வட்டம் வரைந்து அந்த வட்டத்தைப் பெயர்த்தெடுக்குமாறு சலந்தரனிடம் சவால் விடுகிறான். சலந்தரன் அந்த வட்டத்தைப் பெயர்த்தெடுக்கும்போது அந்த வட்டமே ஒரு வட்டாகி அவனைக் கொல்கிறது. இந்தத் தொன்மச் செய்தியை பின்வரும் திருமந்திரத் திருப்பாடல் சுட்டி நிற்கிறது.

**எங்கும் கலந்தும் என் உள்ளத்து எழுகின்ற**
**அங்க முதல்வன் அருமுறை ஓதிபால்**
**பொங்கும் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்**
**அங்கு விரல்குறித்து ஆழிசெய் தானே**

இப்பாடல் நெற்றிக்கண் தொடர்பான ஓர் அரிய தொன்மக் கதையை மேற்கண்டவாறு பதிவு செய்துள்ளது.

**தக்கன் எனும் தொன்மம்**

சிவனடியார்களுக்கும் திருமாலடியார்களுக்கும் இடையே காணப்படும் கருத்து வேறுபாடுகளையும் பூசல்களையும் உணர்த்தி நிற்கிற தொன்மக் கதை தக்கன் கதையாகும். தக்கன் தான் செய்த வேள்விக்கு தேவர்கள் அனைவரையும் அழைத்தான். சிவபெருமானை மட்டும் புறக்கணித்தான். இந்தச் செயல் சிவனுக்கு பெரும் சினத்தை மூட்டியது. இதனால் வேள்விக்குச் செல்ல விரும்பிய தாட்சாயிணிக்கு தடை விதிக்கிறான். ஆனால் தடையை மீறி தன் தந்தையாகிய தக்கன் நடத்தும் வேள்விக்கு விரைகிறாள் தாட்சாயிணி. அங்கே தன் தந்தை புறக்கணித்ததை எண்ணி அவமானம் தாங்காமல் வேள்வித்தீயில் வீழ்ந்து வேகிறாள். இதையறிந்த சிவன் சினம் கொண்டு தக்கனின் வேள்வியை அழித்து அவன் தலையை பறித்துத் தீயிடுகிறான். இந்தத் தொன்மம் பின்வரும் திருமந்திரப் பாடலில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

**கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்**
**தலையைத் தடிந்திட்டுத் தான் அங்கி இட்டு**
**நிலைஉல குக்குஇவன் வேண்டும்என்று எண்ணித்**
**தலையை அரிந்திட்டுச் சந்திசெய் தானே**

இப்பாடலில் தக்கன் வேள்வியை சிவன் அழித்த நிகழ்ச்சி சமயப் பூசலை மட்டுமல்லாமல் பிற கடவுளர்மீது சிவன் செலுத்திய மேலாண்மையையும் உணர்த்தி நிற்கிறது. மேலும் இந்தத் தொன்மம் வேள்விச் சமயத்தின் மீதான சைவ சமயப் பார்வையையும் குறிப்பால் புலப்படுத்துகிறது. புறத்தே செய்கிற பொருளற்ற வேள்விகளைக் கண்டித்தலும், வேள்விகள் அகத்தே நிகழ வேண்டியவை என்று அறிவுறுத்தலுமே தக்கன் வேள்வி அழித்தல் பற்றிய தொன்மத்தின் முக்கிய உள்ளீடுகளாகத் திருமூலரால் கொள்ளப்படுகின்றன எனலாம்.

**காமனை எரித்தல் தொன்மம்**

தக்கனுடைய வேள்வியில் வீழ்ந்து தன்னை அழித்துக்கொண்ட தாட்சாயிணி இமவான் மகளாகப் பிறந்து இறைவனை அடைய நேர்ந்து கொண்டாள். ஆனால் அந்த இறைவனாகிய சிவனோ யோகத்தில் ஆழ்ந் திருந்தார். இந்த நிலையில் தேவர்கள் தங்களைக் கொடுமை செய்கிற சூரன், சிங்கமுகன், தாரகன் போன்றோரை அழித்திட சிவனுக்கு ஒரு மகன் பிறக்கவேண்டும் எனக் காத்திருந்தனர். சிவன் செய்யும் யோகத்தால் தேவர்களுடைய விருப்பம் நிறைவேறாமல் தாமதம் ஏற்பட்டது. இந்தக் காலத்தாழ்வை நீக்க தேவர்கள் ஒரு வழி கண்டறிந்தனர். தேவர்கள் அனைவரும் காமனை ஏவி சிவனுடைய யோகநிலையை கலைக்க முயன்றனர். இதனால் சினங்கொண்ட சிவன் காமனை தன்னுடைய நெற்றிக்கண்ணால் எரித்து முடிக்கிறார் இந்தக் காமன் எரிந்த கதையை பின்வரும் பாடலில் பதிவு செய்கிறார் திருமூலர்.

இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்தி கலிங்க வழிஅது போக்கித்
திருந்திய காமன் செயல்அழித்து அங்கண்
அருந்தவ யோகம் கொறுக்கை அமர்ந்ததே

மேற்கண்ட பாடலில் மோன நிலையைக் குலைத்து மோக நிலையை உருவாக்க முயன்ற காமனை எரித்த சிவனின் வல்லமை பேசப்படுகிறது.

தேவார திருவாசகங்களில் சுட்டப்படுவதைப் போலவே திருமந்திரத் திலும் சிவபெருமான் தொடர்பான பல்வேறு புராணச்செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு சிவபெருமானின் திருவிளையாடல்களைத் தொன்மங்களாகத் தொகுத்துத் தருகிற திருமூலர் அவற்றின் வழி யாகப் பல்வேறு சைவ நெறிகளையும் உள்ளீடாக உணர்த்தி நிற்கிறார். இந்தச் சிவ கதைகளை உற்று நோக்க நோக்க சைவ அடியார்கள் ஒவ்வொருவரும் அவரவர் பட்டறிவிற்கேற்ப பல்வேறு தத்துவ தரிசனங் களைப் பெற்றுக்கொள்ள முடியும்.

# 37. திருவிசைப்பாவின் அமைப்பும் அழகும்

முனைவர் கு. சுந்தரமூர்த்தி, தருமபுரம்.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்திலிருந்தே தோன்றி வளர்ந்து வந்த சமயம் நம் சைவ சமயமாகும். இவ்வருமைச் சமயத்திற்கு உரிய கடவுள் சிவபெருமானே யாவர். இப்பெருமானைச் சிவலிங்க வடிவில் வழிபட்டு வந்தமையும், மிகப் பழங்காலத்திலிருந்தே அமைந்ததாகும். இப்பெருமானை, "ஆலமர் கடவுள், ஆனேற்றுக் கொடியோன், மழுவாள் நெடியோன், நுதல் விழி நாட்டத்து இறையோன்" எனப் பல்வேறு பெயர்களாலும், வாழ்த்தி வந்த மரபு, நம் தமிழ் மரபு ஆகும்.

இப்பெருமானை உளங்கொள வாழ்த்தி வந்த மந்திரங்கள் 'சிவாய நம' 'நம சிவாய' என்பனவாகும். இவ்வரிய சைவ சமயத்திற்கு அமைந்த, அரிய நூல்கள் பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங்களுள், கந்தபுராணம், திருவிளையாடல் புராணம், தருமையாதினம், திருப்பனந்தாள் காசித்திருமடம் ஆகிய திருமடங்களின் குரு முதல்வர்கள் அருளிய அருள் நூல்கள் ஆகியனவாகும்.

இந்நன்னாளில் திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் அதிபராக எழுந்தருளியிருக்கும், திருப்பெருந்திரு காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்களின் சீரிய தலைமையில், பேராசிரியர் த.கோ. பரமசிவனார் நினைவு அறக்கட்டளை இணைந்து நடத்தும் ஒன்பது, பத்து ஆகிய திருமுறை களின் மாநாடு நிகழ்வது பெரும் புண்ணியப் பயன் ஆகும். அருள் நலம் சான்ற திருப்பெருந்திரு எஜமான் சுவாமிகள் அவர்களின் திருவடி மலர்களை வணங்கி உரிய தலைப்பில் பேச விரும்புகின்றேன்.

### திருவிசைப்பா

திரு+இசை+பா என்னும் அரிய தொடர் 'வ்'கர உடம்படுமெய் பெற்று திருவிசைப்பா என்றாயிற்று. திருசென்று அடையாத திருவுடையான் ஆய சிவபெருமானே யாவர். அப்பெருமானின், பொருள்சேர் புகழைக் கூறுதலின் திருவிசைப்பா என அழைக்கப் பெறுவதாயிற்று. இவ்விசையை இசையோடு இயைத்துப் பாடப் பெறுதலின் திருவிசைப்பா என அழைக்கப் பெறுவது ஆயிற்று என்றும் எண்ணி மகிழலாம்.

இவ்வமைப்பில் அமைந்த திருவிசைப்பாவை அருளியவர்கள் ஒன்பதின்மர் ஆவர். அவர்கள் திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்

தேவர், பூந்துருத்தி நம்பி காட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமூதனார், புருடோத்தம நம்பி, சேதிராயர், என்பவர்கள் ஆவர். இவர்களுள் 'சேந்தனார்' அருளிய 'திருப்பல்லாண்டும்' இத் திருமுறையில் இணைந்ததாகும்.

## 1. திருமாளிகைத் தேவர்

இவர் சைவ வேளாண்மரபினர், இவர்தம் முன்னோர்கள் வாழ்ந்த மடம் 'மாளிகை மடம்' என்று அழைக்கப்பெற்றது. திருவாவடுதுறையில் அமைந்த திருக்கோவிலின் அருகே ஒரு திருமடத்தை அமைத்துக் கொண்டு இறைவழிபாடு ஆற்றிவந்தார். அங்கு வாழ்ந்திருந்த போக நாதராய சித்தரிடம் ஞான உபதேசம் பெற்றார். இவர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு எனலாம். இவரருளிய பதிகங்கள் நான்கும் தில்லையைப் பற்றியனவாகும். இத்திருவாக்கில் ஒரு பாடலை எண்ணி மகிழலாம்.

"ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவளர் உள்ளத்துஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே"

இத்திருப்பாடலில் பெருமானை 'ஆறு' வகையில் அழைத்து மகிழ்கின்றார். 1. ஒளிவளர் விளக்கே, நாம் எண்ணெய்யும், திரியும் கொண்டு ஏற்றும் 'விளக்கு', ஒன்று குன்றினும் ஒளி மங்கும். அன்றியும் கல்விக்குப் புற இருளை மட்டுமே நீக்குவதாகும். பெருமானாகிய அருள் விளக்கோ வளர்ந்து வளர்ந்து அனைத்து உலகில் உள்ள உயிர்களுக்கும் அருளை என்றென்றும் குன்றாது வழங்குவிடுவதாகும், 2. உலப்பிலா ஒன்றே உலகியல் வயப்பட்ட எப்பொருளும் நிலையற்றனவாகும். ஆனால் பெருமானோ என்றும் அழிதல் இல்லாத ஒப்பற்ற பொருளாவன், 3. உணர்வு சூழ் கடந்தோர் உணர்வே உயிரது அறிவு உலகியல் வயப்பட்டதாகும். அறிந்தோறும் அறியாமை உடையதுமாகும். ஆனால் இறைவனோ அவ் வறிவைக் கடந்தவனாக இருப்பன், 4. தெளிவளர் பளிங்கின் திரள் மணிக்குன்றே; உலகில் உள்ள மலைகளெல்லாம் கரிய நிறமுடையன. ஆனால் அருள் மலையாகிய பெருமான் மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த திருமேனியை உடையவராய் இருத்தலின் பளிங்கின் குன்றே என்றார், 5. சித்தத்துள் தித்திக்கும் தேனே. உலகியல் வயப்பட்ட தேன் நாவில் தித்திக்கும். பெருமானோ அடியவருடைய சித்தத்துள் தித்திப்பன். "தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்"

என்பர் மணிவாசகரும், 6. அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே; உலகியலில் கனியாக விளங்குவன எல்லாம் வாயில் மட்டுமே தித்திக்கும் ஆனால் பெருமானோ உள்ளத்தில் நினைதொறும் ஆனந்தக் கனியாக விளங்குபவன் ஆவன். ஆதலின் ‘அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே’ என்றார்.

அம்பலம் ஆடுஅரங்காக அடியவர்களின் காட்சிக்குப் புலனாகுமாறு அருள் நடனத்தைச் செய்து வருபவன் இறைவன். அவ்வாறு ஆடுவதும் வெறும் காட்சிக்கு மட்டுமன்று. உயிர்களைப் படைத்தும், காத்தும், ஒரு கால எல்லையில் அழித்தும் வினை வழிப்பட்ட நிலையில் மறைத்தும், இவ்வகையாலெல்லாம் உயிர்க்கு உற்ற மலத்தை நீக்கி வீடு, பேற்றையும் வழங்கியருளும் பான்மையுடையவன் இறைவன். இவ்வரிய கருத்துக்களை

**தோற்றம் துடியதனில்; தோயும் திதி அமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு**

எனவும்

**மாயை தனைஉதறி, வல்வினையைச் சுட்டுமலம்**
**சாய அமுக்கி அருள் தானெடுத்து - நேயத்தால்**
**ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்**
**தான்எந்தை யார்பரதந் தான்**

எனவும் வரும் ‘உண்மை விளக்கத்தால்’ நன்கறியலாம்.

விளம்புதல் - வழிபடுதல். இவ்வழிபாடு இவ்வகையில் அன்றி மனத்தால் நினைந்தும், உடலால் வணங்கியும், செய்யத்தக்கதுமாகும். இப்பதிகத்தில் இம்மூவகை வழிப்பாட்டையும் ‘பணியுமா பணியே’ ‘கருதுமா கருதே’ ‘விளம்புமா விளம்பே’ என வரும் மூவகைத் தொடர் களாலும் விளக்கியுள்ள அருமை அறிதற்குரியதாகும்.

இதுவன்றி ‘உயர்கொடியாடை’ என வரும் பதிகத்தில் பெருமானின் திருவுருவை, திருமுடியிலிருந்து திருவடியீறாக நினைந்து நினைந்து மகிழ்கின்றார். இவ்வருமை எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

**2. சேந்தனார்**

இவ்வருட் செல்வர் திருவீழிமிழலை, திருவிடைக்கழி ஆகிய இரு திருப்பதிகங்களிலும் பெருமானைக் கண்டு மகிழ்ந்து போற்றியுள்ளார். ‘ஏக நாயகனை’ எனத் தொடங்கும் பாடலில், பெருமானை ஏக நாயகன், போக நாயகன், மேக நாயகன், யோக நாயகன் எனக் குறித்து மகிழ்ந் திருப்பது நினையத் தக்கதாகும்.

"போகியாய் இருந்து உயிர்க்குப்
போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியாய் யோக முத்தி
உதவுதல் அதுவும் ஓரார்
வேகியா னால்போல் செய்த
வினையினை வீட்டல் ஓரார்
ஊகியா மூடர் எல்லாம்
உம்பரில் ஒருவன் என்பர்"

என வரும் 'சிவஞான சித்தியார்' ஈண்டு நினைவு கூரத்தகும்.

### 3. கருவூர்த்தேவர்

இவரருளிய பதிகங்கள் தில்லை, திருக்களந்தை, திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கைகொண்ட சோளேச்சரம், திருப்பூவணம், திருச்சாட்டிய குடி, தஞ்சை இராசராசேச்சுரம், திருவிடைமருதூர் ஆகிய பத்துப்பதிகளுக்கு உரியன ஆகும்.

"அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே
அன்பொடு தன்னைஅஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளம்அள் ளூறும்
தொண்டருக்கு எண்திசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாங் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே"

"இம்மையே தரும் சோறும், கூறையும்
ஏத்தலாம் இடர்கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே".

எனவரும் சுந்தரர் திருவாக்கை நினைவுகூர வைக்கிறது.

### 4. பூந்துருத்தி நம்பி காட நம்பி

இவர் அருளிய பதிகம் திருவாரூர், தில்லை ஆகிய இருப்பதிகளுக்கும் உரியதாகும். திருவாரூர்ப் பதிகத்தில் இருபாடல்களே கிடைத்துள்ளன.

"பத்தியாய் உணர்வோர் அருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா இருக்கும் தேவர்காள் இவர்தம்
திருவுரு இருந்தவா பாரீர்

**சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த**
**தனிமுழு முதலுமாய் அதற்கோர்**
**வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி**
**விடங்கராய் நடங்குலா வினரே''**

எனவரும் திருப்பாடல் பலரும் பெரிதும் போற்றி வருவதாகும். தாம் பெற்று மகிழ்ந்து வரும் பேற்றைப் பிறரும் பெற வேண்டும் என அழைத்தருளியிருக்கும்பான்மை பெரிதும் போற்றதற்குரியதாகும்.

**5. கண்டராதித்தர்**

இவர் அருளிய பதிகம் ஒன்றுள்ளது. அது தில்லையைப் பற்றிய தாகும். பாடல்தொறும் பெருமானே! நின்னைக் காண்பது என்று கொலோ? என ஏக்கறுகின்ற பாங்கு, பொறுப்பேற்றிட கீழ்தற்குரியதாகும்.

**6. வேணாட்டு அடிகள்**

இவர் அருளிய பதிகமும் ஒன்றேயுள்ளது. அப்பதிகம்

**துச்சான செய்திடினும் பொறுப்பரன்றே**
**ஆள் உகப்பார்**
**கைச்சாலும் சிறுகதலி இலைவேம்புங்**
**கறிகொள்வார்**
**எச்சார்வும் இல்லாமைநீ அறிந்தும்**
**எனுதுபணி**
**நச்சாய்காண் திருத்தில்லை நடம்பயிலும்**
**நம்பானே**

கைச்சாலும் கறிகொள்ளும் நம்மனோந்தட் உலகியல் இயல்பைக்காட்டி, அருளியலுக்கு அழைத்துச் செல்லும் அருமை எண்ணி மகிழ்தற்குரிய தாகும்.

**7. திருவாலியமுதனார்**

''பெருமானின் செய்யபாதம் வந்து என் சிந்தையுள் இடம் கொண்டனவே'' எனத் திருவடியை உளப்படுத்தி மகிழ்வாய் பெருமாளின் திருமுடிவரை ஒவ்வொரு உறுப்புக்களையும், கூறி திருக்கடைக்காப்பும் கூறியுள்ளார். இவர் தில்லையைப் பற்றியே பாடியுள்ளார்.

**8. புருடோத்தம நம்பி**

இவர் தில்லையைப் பற்றி மூன்று பதிகங்கள் பாடியுள்ளார். தில்லைப் பெருமானைக் காதலித்த தலைவியும், அவளை வளர்த்த செவிலித்தாயும், அப்பெருமானை நினைந்து அரற்றியவற்றை அருளியுள்ள பாங்கு அறிந்து இன்புறத்தக்கதாகும்.

"அருள்பெறின் அகலிடத் திருக்க லாமென்று
அமரர்கள் தலைவனும் அயனும் மாலும்
இருவரும் அறிவுடை யாரின் மிக்கார்
ஏத்துகின் றார்இன்னம் எங்கள் கூத்தை
மருள்படு மழலைமென் மொழியு மையாள்
கணவனை வல்வினை யாட்டி யேன்நான்
அருள்பெற அலமரும் நெஞ்சம் ஆவா
ஆசையை அளவறுத் தார்இங் காரே
அவா என்ப எல்லா வுயிர்க்கும் எந்நான்றும்
தவாப் பிறப்பு ஈனும் வித்து"

எனத் திருவள்ளுவர் அருளியிப்பது உலகியல் வழிப்பட்ட அவாவாகும். ஈண்டுக் கூறும் அவா, அருளியல் வழிப்பட்ட காதலின், நம்மனோர் அனைவரும் இவ்வவாவினை விரும்பவும் வேண்டும். வேண்டுதலும் வேண்டும்.

**9. சேதிராயர்**

இவர் தில்லையைப் பற்றி அருளிய பதிகம் ஒன்று உள்ளது. இப் பதிகத்தில் வரும் பத்தாவது பாடலில் பதிகப் பயன் கூறியருளுகின்றார்.

"ஏயு மாறெழிற் சேதிபர் கோன்தில்லை
நாய னாரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் கத்திடை
ஆய இன்பம் எய்தி யிருப்பரே"

தூயவாறுரைத்தப் - பொருள் உணர்ந்தும், இசையொடு கூட்டியும், பேராவக் கொண்டும் உரைத்தல் ஆகும். இத்தகைய புண்ணியப் பேறின்றேல், 'ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே செல்லும் வாகயல்லாம் செயல்' என்பதற் கேற்ப, இத்தகைய திருமுறைகளை எடுத்தோதுவதும் தக்கதாம்.

# 38. திருமந்திரத்தில் துரியம்

திரு. பொன். சுந்தரேசன், வளப்பக்குடி.

சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் பழமையானவை. தமிழருக்கு உரியவை. இந்த நெறி அறிவுக்கு ஏற்ப காரண காரியங்களை விளக்கி முடிவினைத் தெரிவிக்கும் உயர்ந்த வாழ்வியல் நெறி. ஆழங்கான முடியாத ஒப்பற்ற தத்துவநெறியாக விளங்கும் சைவ சித்தாந்தத்தை மிக நுட்பமாக விளக்கி நிற்கிற பெருநூலாக விளங்குவது திருமந்திரம். இத்திருமந்திரத்தின் வழிநின்று துரியம் என்னும் தூய நிலையைப் புரிந்து கொள்ள முயற்சிப்பதே இக்கட்டுரையின் அடிப்படை இலக்காக அமைகிறது.

**துரியம் - சொல்லாய்வு**

பொது நிலையில் துரியம் என்னும் சொல் ஒரு பொருளின் கலப்பட மற்ற தூய நிலையை உணர்த்தி நிற்பதாகும். ஆன்மீக நிலையில் துரியம் என்னும் சொல் அனைத்தையும் கடந்த தூய அறிவுப் பொருளாகிய ஆன்மாவை உணர்த்தி நிற்கிறது. பொன்னிலிருந்து பிற உலோகங்களை நீக்கினால் தூய தங்கம் கிடைப்பதுபோல உடல், பொறி, அந்தக் கரணம், பிராணவாயு ஆகியவற்றால் ஆன ஆன்மாவில் கலந்திருக்கிற மாயையை நீக்கிவிட்டு ஆன்மாவை உணரும்போது துரியநிலை புலப்பட்டு நிற்கும். துரியம் எனும் வடமொழி சொல்லிற்கு பேருறக்கநிலை, நான்காம் அவத்தை தன்வய மேனிலை, சுமக்கை, பொதியெருது எனப் பல்வேறு பொருள்கள் வழக்கில் உள்ளன. ஆனால் இக்கட்டுரையில் ஆன்மாவாகிய ஒன்றைப் பலவற்றிலிருந்து நீக்கி உணர்ந்து கொள்ளும் தூயநிலை எனும் பொருளிலேயே துரியம் பயன்படுத்தப் பெறுகிறது.

**துரியநிலை**

உயிர் என்பது மூச்சுக்காற்றாகிய பிராணவாயு ஆகும். உயிராகிய ஆன்மா உடம்பு முதலான பல பொருளோடு கூடி வாழ்கிறது. இவை யனைத்தையும் ஆன்மா என்று பிழைபட கருதும்போக்கு காணப்படுகிறது. மிக துறுகி ஆராய்ந்து தத்துவார்த்த நிலையில் உடம்பு முதலானவற்றை யெல்லாம் நீக்கிவிட்டு ஆன்மாவை உணரும் துரிய நிலையைப் பின்வரும் பாடல் வழியாக திருமூலர் உணர்த்தி நிற்கிறார்.

"எல்லாம்தன் னுட்புக யாவுளும் தானாலி
நல்லாம் துரியம் புரிந்ததக்கால் நல்லுயிர்

பொல்லாத ஆறாறுள் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றாய்தும் அன்றே'' (திருமந்திரம் 2308)

திருமூலர் மேற்கண்ட பாடலில் பின்வரும் கருத்தை முன் வைக்கிறார்.

மாயேயமாகிய எல்லாத் தத்துவங்களும் சீவ ஒளியில் அடங்க தத்துவங்களில் உள்ளும் புறம்புமாகிய சீவ ஒளி தானாய் அது நன்மையைத் தரும் துரிய நிலை புரிந்தால் சுத்தான்மாவாகும். அப்போது அது தீமையைத் தரும் முப்பத்தாறு தத்துவங்களுடன் கூடாது தனித்துவிடும் ஆன்மா ஞானமே வடிவாய்ச் சென்று அடைவதற்கு அருமையான சிவகதியைச் சென்றடையும்.

இதன் மூலம் ஆன்மாவில் கலந்து நிற்கிற அனைத்தையும் அப்புறப் படுத்திவிட்டு துரிய நிலையை அடைந்தால் மட்டுமே சிவகதி கிடைக்கும் என்னும் மெய்மை பேசப்படுகிறது.

**மும்மலங்களும் மறைப்பாற்றலும்**

கவிதைக்கும் தத்துவத்திற்கும் மிக நெருங்கியத் தொடர்புண்டு. இலக்கியங்களின் பிழிவும் சாரமுமாக உருவாகும். அறிவு அனுபவங் களே தத்துவங்களாக மலர்கின்றன. இந்தத் தத்துவ அடர்த்தியைத் திருமூலரிடம் பெரிதும் காண முடிகிறது. உயிர்களை ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்கள் பற்றியுள்ளன. ஆணவமலம் உயிர்களுக்கு அறியாமையை விளைவித்து நிற்கும். மாயை உயிர்களுக்குரிய தனு, கரண, புவன போகங்களைத் தோற்றுவிக்கும். கன்மமலம் உயிர்களின் இன்ப துன்ப நிகழ்ச்சிக்கு காரணமாக அமையும். இம்மும்மலங்களும் தத்தம் தொழில்களைச் செய்யுமாறு ஏவி இயங்குவது திரோதான சக்தி. இவ்வாறாக மலங்களை ஏவி இயக்கி உயிர்களுக்கு மறைப்பினை விளை விக்கும். திரோதரன சக்தியே உயிர்களுக்கு மலபரிபாகம் வந்த பின்னர் அனுக்கரக சக்தியாக மாறி நின்று எல்லா நலன்களையும் விளைவிக்கும். படைத்தல், காத்தல், துடைத்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்யும் இறைவன் அவற்றோடு மறைத்தல், அருளல் எனும் இரண்டு தொழில்களையும் செய்கிறான் எனப் பேசுகிறது திருமந்திரம். இவ்வாறு இறைவனுடைய திருவருள் முதற்கண் மறை!'|பாற்றலாக இருந்துபின்னர் அருளாற்றலாக மாறி அருள்பாலித்தலை பின்வரும் திருமந்திரத் திருப்பாடல் அழுத்தமாகப் பதிவு செய்கிறது.

''தானே படைத்திடும் தானே அளித்திடும்
தானே துடைத்திடும் தானே மறைத்திடும்
தானே இவைசெய்து தான்முத்தி தந்திடும்
தானே வியாமுத் தலைவனும் ஆமே'' (திருமந்திரம் 1809)

என்ற திருமந்திரம் இறைவன் ஐந்தொழில்கள் செய்து நிற்பதை எடுத்துரைக் கிறது. இவற்றில் படைப்பாவது முதற்காரணத்திலிருந்து அதன் விளைவை வெளிப்படுத்துதல் அளிப்பாவது வெப்பட்ட விளைவைக் காத்து நிறுத்துதல் துடைப்பாவது விளைவினை அதன் முதற்காரணத்துக்குள் ஒடுக்குதல் மறைப்பாவது நிலையில்லாத உலகியலை உயிர்கள் நிலை என்று கருதுமாறு உண்மையை மறைத்தல் அருளாவது, உயிர்கள் மலநீக்கம் பெற உதவுதல்.

இந்தத் தொழில்களை இறைவன் செய்வதற்குக் காரணம் மலத்தில் கிடந்து அல்லல்படும் உயிர்களை அதிலிருந்து கைத்தூக்கிவிட வேண்டும் என்பதே ஆகும்.

**உயிரின் இயல்பு**

உயிர் எப்போதும் தனித்து நிற்பதில்லை அது எப்போதும் ஏதேனும் ஒன்றைச் சார்ந்தே நிற்கும் கட்டுண்ட நிலையில் பாசத்தைச் சார்ந்து நிற்கும், கட்டற்ற நிலையில் இறைவனைச் சார்ந்து நிற்கும். உயிரின் இன்னொரு இயல்பு அது எதைச் சார்கிறதோ அதன் தன்மையை அடையும். இதைச் சைவ சித்தாந்தம் சார்ந்தத்தன் வண்ணமாதல் எனக் குறிக்கும். இந்தச் சார்பு நிலைகள் அவத்தைகள் எனப்படுகின்றன. ஆணவமலத்தை மட்டும் சார்ந்த நிலை கேவல அவத்தை எனப்படும். ஆணவ மலத்தோடு கன்ம மாயை ஆகிய மலங்களையும் சார்ந்து நிற்கும் நிலை சகல அவத்தை இம்மலக் கட்டுகளிலிருந்து நீங்கி இறைவனைச் சார்ந்து நிற்கும் நிலை சுத்த அவத்தை எனப்படும். இந்த மூன்று நிலைகளிலும் உயிரின் அறிவு நிலைப்பற்றி பின்வரும் பாடலில் திருமூலர் விளக்குகிறார்.

**தன்னை அறிசுத்தன் தற்கேவ லன்தானும்**
**பின்னம் உறநின்ற பேத சகலனும்**
**மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்**
**துன்னுவர் தத்தம் தொழில்கள வாகவே** (திருமந்திரம் 2227)

இப்பாடலில் திருமூலர், தன்னை அறிந்தவன் சுத்தன், தான் ஒன்றையும் அறியாது கிடப்பவன் கேவலன். முழுமையற்ற அறிவு உடையவன் சகலன் என விளக்குகிறார். இவ்வாறு தன் உண்மை இயல்பை அறியாமல் மயங்கி கிடக்கும் உயிரை மறுபடியும் அதன் நிலைக்கு மீட்பது இறைவனின் திருவருள் அனைத்து தளைகளிலிருந்தும் விடுபட்டு இறைவனை அணைந்து நிற்கும் நிலையே துரிய நிலை ஆகும்.

**மெய்ப்பொருள் தெளிவு**

இறைவன் எளியவன், ஆனாலும் அறிதற்கு அரியன். மாயை தான் இறைமையை மறைத்து விடுகிறது. மறைந்து நிற்கும் மாயை மறைந்துவிட்டால் இறைமை என்ற மெய்ப்பொருள் வெளிப்படுகிறது என்ற உண்மையை வெளிச்சப்படுத்தியவர் திருமூலர்.

''மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லைக் கருத்தில்லை தானே'' (திருமந்திரம் 2548)

இப்பாடலில் மாயை என்னும் திரை மறைக்க மறைந்து காணப்படும் இறைவன் அம்மாயையாகிய திரை அகலும்போது வெளிப்பட்டு நிற்பான். அப்பொழுது எங்கும் இறைமை எதிலும் இறைமை எனும் மெய்யுணர்வு. உள்ளத்தில் உதித்து ஒரு தெளிவு தோன்றும் அந்தத் தூய நிலையைத்தான் துரிய நிலை எனக் குறிப்பிடுகிறார். மாமுனிவர் திருமூலர். உயிர்கள் ஆராய்ச்சி அறிவால் அடைய முடியாத இந்த நிலையை அனுபவ அறிவால் அடைய முடியும் என்பதே திருமந்திரம் காட்டும் துரியக் கோட்பாடு எனலாம்.

# 39. திருமந்திரத்தில் கரு உருவாகும் அறிவியல்

திருமதி க. சுப்புலட்சுமி, தூத்துக்குடி.

சிவபெருமான் திருவருளால் திருவாவடுதுறைக்கண் திருவரசின் கீழ், சிவயோகத்து அமர்ந்து மனிதனின் வாழ்வியல் முறைகளை, அட்டாங்க யோகங்களை, தியான நிலைகளை, சரியை கிரியைகளை, ஞானமார்க்கத்தை, சக்கரங்களின் வலிமையை திருமந்திரமாக எடுத்துரைத்தார் திருமூலர். இவையெல்லாம் எதற்காக? மனிதன் தனது பிறவியின் பயனை முழுவதும் அடைவதற்காக, பிறந்தது எப்படி? கருவாக உருவாகி, இந்தப் புவியோடு உறவாட, மனிதன் உதித்த நிலையினை அறிவியலாளர்களை விட ஒரு படி மேலாக, மெய்யறிவின் துணை கொண்டு திருமூலர் எடுத்துரைக்கும் பாங்கு வியக்க வைக்கிறது.

**பேறுகால மருத்துவம்**

மருத்துவக் கலையின் மிகத் தொன்மையான ஒன்று பேறுகால மருத்துவமாகும். பெண்களின் கர்ப்பம், பிரசவம், குழந்தை பிறப்பு ஆகியவற்றின் போது நிகழும் உடலியங்கியல் பற்றி விளக்கும் அறிவியலையே பேறுகால இயல் என்கிறோம்.

**அங்கியும், அப்பும்; லாக்டிக் அமிலமும், அம்னியாடிக் திரவமும்**

''அறிகின்ற மூலத்தின் மேல் அங்கி அப்புச்
செறிகின்ற ஞானத்து செந்தாள் கொளுவிப்
பொறை நின்ற இன்னுயிர் போந்துற நாடிப்
பறிகின்ற பத்தென்னும் பாரஞ்செய்தானே'' (பாடல் எண். 437)

மூலத்தின் மேல் உதராக்கினியும் (அங்கி) நீரும் (அப்பு) நிறைந்துள்ள கருப்பை உள்ளது என்பது திருமூலர் வாக்கு.

கர்ப்பப்பைக்கு இரத்தத்திலிருந்தும், நிண நீரிலிருந்தும், திரவப் பகுதி கிடைக்கிறது. இத்திரவத்தில் 'லாக்டிக் அமிலம்' இருப்பதால் கிருமிகளை உள்ளே நுழைய விடாமல் தடுக்கிறது என்கிறது அறிவியல். இங்கு 'அமிலம்' என்பது அக்கினித் திராவகம் தான் என்பது அறிந்ததே.

''நீர் நிறைந்துள்ள கருப்பை'' என்கிறார் திருமூலர். ''கர்ப்பப்பையில் உள்ள குழிவில் திரவம் நிறைந்து காணப்படுகின்றது. கர்ப்பத்தின் இறுதியில் இதன் அளவு 1-1.5 லிட்டராகும். அம்னியான் எப்தீலியத்திலிருந்து

சுரப்பு மூலம் இத்திரவம் உருவாகிறது. தாயின் இரத்த நாளங்களிலிருந்து கசியும் இரத்தத்திலிருந்தும், சிசுவின் நீரகங்கள் பணியாற்றுவதன் விளைவாலும் இந்தத் திரவத்தின் ஒரு பகுதி உருவாகிறது'' என்கிறது அறிவியல்.

**குதம் செய்யும் அங்கி தணிக்கும் அம்னியாடிக் திரவம்**

இந்த அம்னியாடிக் திரவத்தின் தன்மையினை

**''பதம் செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோன்**
**இதம் செய்யும் ஒத்துடல் எங்கும் புகுந்து**
**குதம் செய்யும் அங்கியின் கோபம் தணிப்பான்**
**விதம் செய்யுமாறே விதித்தொழிந்தானே''** (பா.எண். - 446)

மூலத்தை இடமாகக் கொண்டு தோன்றும் வெப்பத்தைத் தணிப்பதற்காக, இறைவன் உடலுக்கு உறுதி தரும் (பதம் செய்யும்) பால் போன்ற வெண்மை நிறம் பொருந்திய நெற்றியமிழ்தினை (அம்னியாடிக் திரவம் - வெண்மை நிறமானது) கருப்பை முழுவதும் புகுந்து நிறையச் செய்தார் என்கிறார் திருமூலர்.

**பதம் செய்யும் அம்னியாடிக் திரவம்**

இந்த அம்னியாடிக் திரவத்தில் புரதம் உப்பு, கொழுப்பு, சர்க்கரை, ஹார்மோன், நுண்பொருட்கள் முதலியன காணப்படுகின்றன. சிசு வளர்வதற்கான மற்றும் கர்ப்பப்பையின் அதன் அசைவுகளுக்கான சூழலை இத்திரவம் உருவாக்குகிறது. பாதகமான வெளிவிளைவுகளிலிருந்து சிசுவைப் பாதுகாக்கிறது என்கிறது அறிவியல்.

**கருக்குழியும், அம்னியான் குழியும்**

**''திருவின் கருக்குழி தேடிப்புகுந்து**
**உருவம் இரண்டாக ஓடி விழுந்தது''** (பா.எண். - 439)

திருமகளனைய வாழ்க்கைத் துணைவியின் கருக்குழியில் துணைவனது வெண்ணீர் ஓடி விழுந்து இரண்டறக் கலந்தது என்கிறார் திருமூலர். இங்கு கருக்குழி என்பது அம்னியா குழியையே வெண்ணீர் என்பது விந்தணுக்களை இதனை மற்றொரு இடத்தில்

**''சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்''** (பா.எண். - 448)

என்கிறார். 5.8 மி.லி. விந்து நீரில் 200 முதல் 500 மில்லியன் விந்தணுக்கள் காணப்படுகின்றன. ஒரு நிமிடத்திற்கு 3 முதல் 3.5 மி.மீ. வேகத்தில் விந்தணு பிரயாணம் செய்கிறது. 60 முதல் 90 நிமிடங்களில் விந்தணுக்கள் கர்ப்பப்பைக் குழியினில் காணப்படுகின்றன. பல மில்லியன் விந்தணுக்களில் ஒன்றுதான் முட்டையைப் பொலிவடையச் செய்கின்றது.

அதன் உட்கரு, முட்டையின் உட்கருவை நோக்கிச் சென்று இரண்டறக் கலக்கிறது இதுதான் பொலிவுருதலாகும். கர்ப்பத்தின் துவக்கமாகும்.

**மோகத்துள் அங்கோர் முட்டை**

பெண்ணின் கருப்பையிலுள்ள முட்டையின் மகத்துவத்தை

**''மோகத்துள் ஆங்கோர் முட்டை செய்தானே''** (பா.எண். - 449)

என்கிறார். கிராஃபியன் ஃபார்லிக்கிள் உடைபட்டு பொலிவுறாத முட்டை வெளிப்படுகிறது. ஆர வளைவு கொண்ட மகுடத்தால் சூழப்பட்ட முட்டை, குமிழ் திரவத்துடன் பெரிடோனிக் குழிவினுள் சென்று கருவகக் குழிவினுள் நுழைகிறது. 28 நாட்கள் வட்டத்தில் 14-15 வது நாளில் முட்டை வெளிப்படுகிறது. (மாதவிடாய் துவங்கிய முதல் நாளிலிருந்து கணக்கெடுக்க வேண்டும்.) கரு உருவாக (பொலிவடைய) இதுதான் மிகவும் பொருத்தமான நேரமாகும் என்கிறது அறிவியல்.

**செந்தாள் கொளுவிய சிசு**

''செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப் பொறை நின்ற இன்னுயிர்'' என்பதற்கு அறிவோடு கூடிய உயிர் தங்கிய கருவுடல் வெவ்விய இளங்காலை முடக்கித் தலையுடன் ஓம் வடிவுடன் அமைகின்றது என்பது பொருள்.

சிசுவின் உடல் பொதுவாக மடங்கியே உள்ளது. மோவாய் மார்புக்கு எதிராக அமுங்கியுள்ளது. கால்கள் தொடைகளின் மீது மடங்கியுள்ளன. கைகள் மார்பின் குறுக்காக உள்ளன. சகஜ நிலையில் இருக்கும் போது சிசு நீள்வட்ட வடிவில் உள்ளது. முழுமையான நிலையில் அதன் சராசரி நீளம் 25 செ.மீ. என்ற அறிவியல் கருத்து திருமூலரின் வாக்கிற்கு உத்தரவாதம் நல்குகிறது.

**மனநிலையும், கரு உருவாதலும்**

ஐ.பி. லாசரவிச், என்.எப்.டோலே சினோவ் ஐ.எம். செசனோவ் ஆகியோர்தான், பெண்ணின் இனப்பெருக்க மண்டலத்தின் பணிகள் பெண்களின் மன நிலையைப் பொருத்து இருக்கிறது. சக்தி வாய்ந்த மன உளைச்சல் கருச்சிதைவைத் தூண்ட முடியும். சாதகமான மனப்பாங்கு பிரசவத்தை எளிதாக்க முடியும். கருவை ஆரோக்கியமானதாக ஆக்க முடியும் என முதன் முதலாக எடுத்துரைத்தவர் என்கிறது அறிவியல் உலகம்.

**''இன்புறு காலத்து இருவர் முன்பூறிய**
**துன்புறு பாசத்து உயர்மனை வானுளன்**
**பண்புறு காலமும் பார்பிசை வாழ்க்கையும்**
**அன்புறு காலத்து அமைத்தொழிந்தானே''** (பா.எண். - 438)

கணவனும், மனைவியும் ஒருவர் மீது ஒருவர் அன்பு கொண்டு, அகமும், புறமும் ஒத்து இறைவனைக் கை தொழுது கூடினால், சிவபெருமான், ஆருயிர் கருவில் புகுமாறு திரு உள்ளம் கொள்வார் என்கிறார் திருமூலர். மாயங் கலந்த அன்புடன் கூடி மனோலயத்தில்தான் அறிவறிந்த கரு உருவாகும்.

**கருவிற்கான உணவுச் சாரம்**

கரு உருவாக, வளர்ச்சி பெற, தாயினுடைய உணவுச் சாரமும் வேண்டும். அவள் உண்ணும் உணவின் சாரம் மருத்தனைய பல மசாலை எனப்படும் காயம் கலந்ததனால் ஆகும். அவ் உணவே சிசுவின் உடலாக மாறும்

**''ஏயங்கலந்த இருவர்தம் தம் சாயத்துப்**
**பாயும் கருவும் உருவாமெனப் பல**
**காயம் கலந்தது காணப் பதிந்தபின்**
**மாயங் கலந்த மனோலயமானதே''** (பா.எண். - 443)

என்கிறார் திருமூலர். தாயிலிருந்து நச்சுக்கொடி வழியாகச் சிசுவுக்குப் போஷாக்குப் பொருட்கள் வழங்கப்படுகின்றன. தாய் உண்ணும் உணவிலுள்ள வைட்டமின் 'சி' சிசுவின் படலங்களின் வளர்ச்சிக்குத் தேவைப்படுகின்றது. வைட்டமின் 'ஏ', 'பி', 'டி', 'ஈ' கால்சியம் எலும்பு உருவாக்கவும், பாஸ்பரஸ் நரம்பு மண்டலத்திற்கும், அயம் கல்லீரலுக்கும், மண்ணீரலுக்கும் தேவைப்படுகிறது என்று அறிவியலாளர் கூறுகின்றனர்.

**மூச்சு மண்டலம் - ஆக்சிஜன்**

குழந்தை பிறக்கும் வரை, மூச்சு உறுப்புகள் பணிபுரிவதில்லை. பிறந்த பின்தான் குழந்தை முதல் மூச்சை எடுக்கிறது. கருப்பை உள் சிசுவில், மேலெழுந்த வாரியான மூச்சு அசைவுகள் நிகழ்கின்றன என்பது சென்ற நூற்றாண்டில் நிர்ணயிக்கப்பட்டது.

நச்சுக் கொடியின் வாயிலாகத் தாயின் இரத்தத்திலுள்ள ஆக்சிஜன் சிசுவுக்கு வழங்கப்படுகிறது. எபிதீலியம் மற்றும் விரலிகளின் உட்பிழம்பு, சிசு தந்துகிகளின் எண்டோதீலியம் ஆகியவற்றின் மூலம் பரவல் முறையில் தாய்க்கும், சிசுவுக்கும் இடையில் வாயுப் பரிமாற்றம் நிகழ்கிறது என்ற அறிவியல் உண்மையை

**''மேவிய சீவனில் மெல்ல நீள் வாயுவும்**
**கூவி அவிழும் குறிக்கொண்ட போதே''** (பா. எண். - 441)

என்கிறார் திருமூலர்.

**பத்துத்திங்களும். பிறப்பும்**

**''பொறைநின்ற இன்னுயிர்ப் போந்துற நாடிப்**
**பறிகின்ற பத்தெனும் பாரம் செய்தானே''**

கருப்பையில் சுமையாக நின்ற உயிர் இறையருளால் முந்நூறு நாளாகிய பத்துத் திங்களில் இம் மண்ணுலகில் பிறக்கும் என்ற திருமூலர் கூற்றையே அறிவியலார்கள் பொதுவாக 280 நாட்கள் (10 மாதங்கள் அல்லது 40 வாரங்கள்) கர்ப்ப காலத்திற்குப் பின்னர், பிரசவம் துவங்குகிறது. இதற்குள் சிசுவும் முதிர்ச்சியடைந்து கருப்பைக்கு வெளியே வாழ முடியும் என்கின்றனர்.

**மலமும், சிறுநீரும் கருவிற்கு எதிரி**

விந்தணு பெண்ணின் கருப்பையைச் சென்றடையும் கால கட்டத்தில் அறிவின் மயக்கத்தினால், பெண், நீர், மலம் முதலியவற்றை அடக்கினால் அயர்ந்திருக்கின்ற குண்டலினி வட்டத்திற்குள் விஷவாயுவானது சென்று அதிக உஷ்ணத்தைச் சேர்த்துக் கூட்டிக் கருகச் செய்யும் என்கிறது அறிவியல். இதனால் ஏற்படும் விளைவைத் திருமூலர்.

**''மாதா உதரம் மலம்மிகில் மந்தனாம்**
**மாதா உதரம் சலம்மிகில் மூங்கையாம்**
**மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை**
**மாதா உதரத்தில் வந்த குழவிக்கே''** (பா.எண். - 465)

கணவனும், மனைவியும் மருவும் காலத்தில் தாய் வயிற்றில் மலம் துப்புரவாகக் கழியாமல் இருந்தால் பிறக்கும் குழந்தை மந்தனாகும். சிறுநீர் இருந்தால் ஊமையாகும். இரண்டும் இருந்தால் குருடாகும் என்கிறார்.

இச்செய்தி குழந்தைப் பேறு உருவாவதற்கான, ஊனமற்ற குழந்தை உருவாதற்கான உன்னத, அதி முக்கியமான செய்தியாகும்.

**நிறைவல்ல............ தொடர்ச்சி**

கரு உருவாவதிலிருந்து குழந்தை பிறக்கும் வரை நடைபெறும் உடலியல் சார் நிகழ்வுகளை, எந்த வித அறிவியல் கருவிகளின் துணையு மின்றி, தன் சித்தத்தால், மெய்யறிவினால் திருமூலர் என்ற தமிழர் கண்டறிந்து உலகிற்கு உணர்த்தினார் என்பது வியக்க வைக்கிறது. கரு உருவாகும் வேளை கணவன், மனைவியின் சுவாச நிலைகள் குழந்தையை எவ்வாறு பாதிக்கும்? குழந்தையின் பால் வேறுபாட்டை (ஆணா? பெண்ணா?) எவ்வாறு நிர்ணயிக்கும் என்பதைக் குறித்துத் திருமூலர் சொன்ன கருத்துக்கள் அறிவியலாளர்கள் இன்று வரை கண்டு பிடிக்காத ஆழமான சிந்தனைகளாகும். திருமூலர் விஞ்ஞானி மட்டுமல்ல விஞ்ஞானி களுக்கும் வழிகாட்டும் மெய்ஞானி என்றால் அது மிகையாகாது.

# 40. திருமூலரின் ஈகைக் கோட்பாடு

முனைவர் சுப்புலெட்சுமி இரவீந்திரன், குற்றாலம்.

பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறை எனப் போற்றப் படுவது திருமூலரின் திருமந்திரமாகும். சாத்திர நூலாகவும், தோத்திர நூலாகவும் விளங்குகின்ற திருமந்திரம் தமிழ் வேதம் என்ற சிறப்பினையும் பெறுகின்றது. இறைத் தத்துவங்களையும் வழிபாட்டு நெறிமுறைகளையும் வாழ்வியல் அறங்களையும் உள்ளடக்கிய இந்நூலை திருமூலர் மூவாயிரம் ஆண்டு யோகமிருந்து ஆண்டிற்கு ஒரு மந்திரமாக மூவாயிரம் மந்திரம் அருளிச்செய்தார். உலகமக்கள் தம் வாழ்க்கையை சரியான முறையில் அறநெறிவழி நின்று வாழ வேண்டுமென்று கருதியே வாழ்வியல் அறங் களை மிக விரிவாக உணர்த்துகின்றார். இவ்வறங்களுள் ஈகையறம் குறித்த திருமூலரின் கோட்பாட்டை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**ஈகையறம் – விளக்கம்**

பொருளற்றவர்க்கு அன்புணர்வோடு பயன் கருதாமல் கொடுத்தலே ஈகையாகும்.

வறியார்க்கொன்று ஈவதே ஈகை மற்றெல்லாம் குறியெதிர்ப்பை நீரதுடைத்து (குறள் 24) என்று திருக்குறள் ஈகைக்கு இலக்கணம் கூறுகின்றது. ஈதல் என்றும் சொல்லுக்கு அகராதி கொடுத்தல், அருளல், இடுதல், உதவல், படிப்பித்தல் என்னும் பல பொருளைத் தருகின்றது. இந்திரலோகத்து அமிழ்தம் கிடைத்தாலும் சான்றோர் தாமாக தனித்து உண்ணமாட்டார் என்று பகிர்ந்துண்ணும் சான்றாண்மைப் பண்பினை சங்கப்பாடல் போற்று கின்றது. உண்டி கொடுத்தார் உயிர்கொடுத்தோரே என்ற ஈகைத் தத்துவத்தை மணிமேகலையின் அமுதசுரபி ஆழமாக உணர்த்துகின்றது.

**இல்லாதவிடத்தும் இயைந்தஅளவினால்**
**உள்ள இடம்போல் பெரிது உவந்து** **(நாலடி)**

அவரவர்தம் திறனுக்கு ஏற்றவாறு கொடுக்க வேண்டுமென ஈகை யறத்தை நாலடி உணர்த்துகின்றார். எனவே சமுதாயத்தில் வாழ்கின்ற ஒவ்வொரு மனிதனும் தம்மால் இயன்ற அளவு பொருளின்றி வருந்து வோரின் துன்பம்கண்டு கைம்மாறு கருதாது கொடுக்க வேண்டுமென்பதையே 'ஈகை' என்ற சொல் உணர்த்துகின்றது. ஈகையறம் பற்றித் திருமூலர் மிக விரிவாகப் பேசுகின்றார்.

**ஈகை செய்யும் முறை**

'ஈகை' அறம் மேற்கொள்வது மனிதனின் தலையாய கடமை என்று திருமூலர் உணர்த்துகின்றார். நம்மோடு வாழ்கின்ற சகமனிதர்களின் துன்பம் கண்டும் வாளாவிடுப்பது மனிதனின் இயல்பல்ல என்று குறிப்பிடுகின்றார். இவ்வகையில் திருமூலர் 'தானப்பிரபாவம்' என்னும் தலைப்பில் ஈகை செய்யும் முறையைக் கூறுகின்றார் யாராக் இருப்பினும் அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுங்கள். அவர் இவர் என்ற வேற்றுமை கருதாமல் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பாகுபாடு பாராட்டாமல் கொடுங்கள் யாராவது உணவருந்த வரமாட்டார்களா என்று எதிர்பார்த்து உண்ணுங்கள். காக்கைகள் கூட தம்மினத்தைக் கூவியழைத்து உண்கின்றன என்று பின்வரும் பாடல்மூலம் எடுத்துரைக்கின்றார்.

**ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந்து உண்மின் பழம் பொருள் போற்றல் மின்
வேட்கையுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே** (பாடல் 250)

பொருள்வளம் பெற்றவர்களால் மட்டும்தான் ஈத்துவக்கும் இன்பம் பெறமுடியும் என்பதில்லை. அவரவர் தகுதிக்கேறப அறச்செயலைச் செய்யமுடியும் என்றும் ஈதலின் எளிமையை திருமூலர் எடுத்துரைக்கிறார் ஒரு பசுவுக்கும் கைப்பிடியளவு புல்லைக் கொடுக்கலாம். தாம் உண்ணும் உணவில் ஒரு கைப்பிடியளவு பிறருக்குக் கொடுத்தல் எல்லோருக்கும் இயன்ற செயலாகும். இதனால் கொடுப்பவர்களுக்கு இழப்பும் ஏற்படு வதில்லை. பிறர் மனம் புண்படும்படி பேசாமல் இனிய சொற்களைக் கூறுவதும் ஒரு விதத்தில் ஈகையாகும். உண்மையான அன்போடு இறைவனுக்கு ஒரு பச்சிலை இட்டு வணங்கினாலும் இறையருளைப் பெறலாம். இதனை,

**யாவர்க்குமாம் இறைவற்கொருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தாமே!** (பாடல் 251)

என்ற பாடல் வழி விளக்குவார் இப்பாடலில் எல்லோராலும் ஈகையறத்தைச் செய்ய இயலும் என்பதையே 'யாவர்க்கும்' என்ற சொல்லால் திருமூலர் குறிப்பிடுகின்றார். மேலும் திருமூலர் ஈகைக்குரியவர் மனிதர்கள் மட்டுமல்ல. விலங்குகளுக்கும் கொடுப்பது ஈகையாகும் என வரையறைப்படுத்து கின்றார். தம்மால் இயன்ற அளவு பொருள் கொடுத்தாலே அது பேரற மாகுமென்ற சிந்தனையை முன்வைக்கின்றார் திருமூலர்.

இவண்,

**ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே**
**செல்லும் வாயெல்லாம் செயல்**

என்ற குறட்கருத்தும்

**'இம்மி அரிசித்துணையானும் வைகலும்**
**நும்மில் இயைவ கொடுத்து உண்மின்'** (நாலடி 94)

என்று நாலடியார் கருத்தும் ஒப்பு நோக்கத்தக்கவை.

**சிவஞானியர்க்கு இடுதல்**

அவர் இவர் என்ற வேற்றுமையின்றி எல்லோருக்கும் கொடுக்க வேண்டுமென்று உணர்த்திய திருமூலர் சிவஞானியர்க்கு உணவளிப்பதைச் சிறப்பான ஈகை அறமாக கூறுகிறார். சிவஞானியர் என்போர் மன வொடுக்கத்தோடு வாழ்பவர். இவர்கள் வாழ்க்கையில் செந்நெறியினைப் பின்பற்றுவோர். ஒவ்வாத நெறிகளை வெறுத்தொதுக்கியவர். திருவடி யுணர்வு கைவரப் பெற்ற தெளிவுடையவர்களே சிவஞானியர்.

**அங்கார் பசியும் அவாவும் வெகுளியும்**
**தங்கார் சிவனடியார் சரீரத்திடை** (பாடல் 1853)

என்ற பாடலில் திருமூலர் தீயான பசி, அவா, வெகுளி, போன்ற குற்றங் களில் சிவஞானியர் உள்ளம் செல்லாது என்றும் அவர்தம் இயல்புகளை உணர்த்துகின்றார். எனவே உலகப்பற்றுக் கோடுகளை யெல்லாம் முற்றிலுமாக நீக்கிய ஞானியர்தம் பண்பறிந்து இல்லறத்தார் அவர்களுக்கு உணவிடல் வேண்டும். சிவஞானியர்களாகிய இவர்கள் கிணறு குளக்கரைகளில் நின்றாலும் அவர்களை அழைத்து உண்பித்தல் உயர்ந்த அறமாகும் என்பதனை,

**அற்று நின்றாருண்ணும் ஊணே அறனென்றும்**
**கற்றன போதங்கமழ் பவர் மானிடர்**
**உற்று நின்றாங்கொரு கூவற் குளத்தினிற்**
**பற்றி வந்துண்ணும் பயன் அறியாரே** (பாடல் 253)

என்ற பாடல் கூறுகின்றது. சிவஞானியர்க்கு பொருள் வழங்குவதால் ஏற்படும் பயன்களையும் திருமூலர் பல பாடல்களில் எடுத்துரைக்கின்றார். இவர்தம் தேவைகளுக்கேற்றவாறு கொடுத்தால் உயர்கதி அடைவர் என்றும் நரகத்தைச் சென்று சேரார் என்றும் கீழ்க்கண்ட பாடலில் குறிப்பிடுகின்றார்.

**'திலமத்தனை பொன் சிவஞானிக்கீத்தால்**
**பல முத்தி சித்தி பரபோகமுந்திரும்'** (பாடல் 501)

**'தோமாறு ஈசற்குந் தூய குரவற்குங்**
**காமாதி தூட்டோர்க்குத்தரல் தந்து கற்பிப்போன்**
**போமா நரகில் புகான் போதங்கற்கவே'** (பாடல் 507)

எனவே திருமூலர் சிவஞானியர்க்கு உணவிட்டுப் பயன்பெறுங்கள் என்று கூறுவது குறிப்பிடத்தக்கது. இல்லறத்தான் ஞானியரைத் தேடிச்சென்று உணவிடுதல் என்பது ஈகைப்பயனை அளிக்கக்கூடிய அறம் என்பது இதனால் புலனாகின்றது.

**இதனை, இடுவதும், ஈசதும் எண்ணுமின் இன்பம்** (பாடல் 268)

என்கிறார். ஈகைப்பயன் கிடைக்கும் என்பது நம்பிக்கை வயப்பட்டது. இவ்வாறு செய்கின்ற அறத்தைக் காலன் வருமுன்னே இவ்வுலகில் நம் உடல் நிலைத்திருக்கின்றபோதே செய்துவிட வேண்டுமென்பதை,

**'தன்னை அறியாது தானல என்னாதிங்**
**கின்மை அறியாதினை யரென்றோராது**
**வன்னையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னர்**
**தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே'** (பாடல் 255)

என்ற பாடலில் உணர்த்துகின்றார்.

**துறவோர்க்கு ஒன்று ஈகலான்**
**வைத்துக்கழியும் மடவோனை** (நாலடி 273)

என்று துறவு நெறிகொண்டவர்க்குக் கொடுக்காதவனை அறிவற்றவன் என்று பழிக்கும் நாலடியார் பாடலும் இல்லறத்தானின் கடமையைச் சுட்டிக்காட்டுகின்றது.

## தகுதியற்றோர்க்கு ஈதல் குற்றம்

'பாத்திரம் அறிந்து பிச்சை இடுக' என்று கூறுவர். திருமூலர் 'அப் பாத்திரம்'' என்னும் தலைப்பின்கீழ் ஐந்துபாடல்களில் தகுதியற்ற மனிதர் களுக்குக் கொடுப்பது அறத்திற்கு மாறுபட்டதென்றும் அதனால் பயனில்லை யென்றும் கூறுகிறார். வெளிப்பார்வைக்கு எவ்வளவு அழகாகத் தோன்றி னாலும் மலட்டுத்தன்மையுடைய பசுவுக்குக் குனிந்தும் நிமிர்ந்தும் இலை தழை இட்டு வளர்த்தாலும் அதனிடமிருந்து பாலைப் பெற்றுப்பருக இயலாது. அதுபோல உயர்த்த ஒழுக்கநெறியும் நோன்புகளும் கொள்ளாத வர்களுக்குக் கொடுப்பதென்பது பருவம் தவறவிட்டுப் பயிர் செய்தமை போன்று பயனற்றதாகிவிடும். எனவே அன்புள்ளம் கொண்டவர்க்கே மனமகிழ்ந்து ஈதல் வேண்டும். பொய், களவு, கொலை, காமம், பொருள் நசை ஆகிய பஞ்சமாபாதகங்களைச் செய்கின்ற மூடர்களுக்குக் கொடுத்தால் ஈகையின் தன்மையை ஒருபோதும் உணரமாட்டான். தகுதியற்றவனுக்குக் கொடுத்தல் பெரும்பிழையாகும். திருமூலர் இக்கருத்துக்களை,

'கோல வறட்டைக் குனிந்து குளமிட்டுப்
பாலைக்கறந்து பருகுவதே யொக்கும்
சீலமும் நோன்பும் இலாதவர்ககீந்த்து
காலம் கழிந்த பயிரது ஆகுமே' (பாடல் 505)

'ஆவதறிந்து அன்புதங்களாதவர்களுக்கு
கீவ பெரும்பிழையென்று கொள்ளீரே' (பாடல் 506)

'ஆமாற்றியான் பஞ்சபாதகன்' (பாடல் 490)

'நிலமத்தனை பொன்னை நின் மூடக்கீந்தங்
பலமு மற்றே பரபோகமுங் குன்றுமே' (பாடல் 501)

என்ற பாடல்களில் விளக்குகின்றார். ஆர்க்கும் இடுமின் என்று கூறிய திருமூலர் இங்கே ஈசையறத்திற்கு ஒரு கட்டுப்பாட்டை விதிக்கின்றார். கெட்டவனுக்கு இட்டவனும் கெடுவான் என்பது ஒரு பழமொழி. உணர்வால், பண்பால், மனதால் செயல்பாடுகளால் கெட்டவர்களுக்கு நாம்கொடுக்கும் பொருள் வீணாகும். கெட்டவன் ஒருபோதும் வளர மாட்டான். அவனுக்குக் கொடுப்பது விழலுக்கு இரைத்த நீராகப் போய் விடும். தகுதியாறாய்ந்து கொடுப்பதே ஈகை என்று திருமூலர் கூறுவது ஈகையறத்தின் நல்லிலக்கணமாகும். அதனால்தான் மண்ணும் மலையும் போல் பெருஞ்செல்வம் கொடுத்தவனை இறையென்று கருதும் உள்ளம் வேண்டும். இவ்வுள்ளம் இலாதவனுக்குக் கொடுக்கின்ற கொடையாளனும் ஈந்ததை வாங்கிக்கொண்ட இரவலனும் நரகக்குழிக்கே செல்வர் என மிகக்கண்டிப்போடு எச்சரிப்பது திருமூலரின் ஈதலறக் கோட்பாடாகும்.

**ஈகையறம் பேணாதார் நிலை**

ஈகையை உயர்ந்த அறமாகப் போற்றுகின்ற திருமூலர் அவ் வறத்தைப் பேணாதார் நிலைகுறித்து ஆழமாகப் பேசுகிறார். கொடுக்காத மனிதர்கள் கீழானவர்களென்றும் அவர்கள் வாழ்க்கை பொருளற்றதென்றும் உணர்த்துகின்ற திருமூலர் அவர் அடையும் துன்பம் மிகக்கொடியதென அச்சுறுத்துகின்றார்.

ஈகை குறித்து சிந்திக்காதவர்கள் இறைவனின் திருவடிகளை உணராதவர்கள் இவ்வுலக இன்பம் மட்டுமே நிலைத்ததெனக்கருதும் அவர்கள் தீவினைக்கு ஆளாவர். பிறப்பு இறப்பு ஆகிய காலச் சக்கரங்களில் சிக்கித்தவிப்பர். (பாடல் 262) இருமல், சோகை, கபம், காய்ச்சல் போன்ற பிணிகளும் அவர்களைத் தாக்குவதோடு நரகத்தில் சென்று சேர்வர். இக்கருத்துக்களை,

'இருமலும் சோகையும் ஈகையும் வெப்புந்
தருமஞ் செய்யாதவர் தம் பாலதாகும்' (பாடல் 266)

'நரகத்தில் நிற்றீரோ நல்நெஞ்சினீ ரே' (பாடல் 264)

'மலிந்தவர்மாளும் துணையுமொன்றின்று
மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந்தாரே' (பாடல் 266)

என்ற பாடலடிகளில் எடுத்துரைக்கின்றார்.

ஈகையினால் கிடைக்கும் மனம் இன்பமடையும் இவ்வின்பம் உணராதவர்களை 'ஈகிலாப் பேதைகள்' என அழைக்கிறார். செல்வத்துப் பயன் ஈதல் என்பர், பிறருக்குக் கொடுக்காமல் பாதுகாத்து வைப்போர்தம் செல்வம் கொட்டிக்கிடக்கின்ற எட்டிப்பழத்திற்கு சமமாகும். எனவே பொருள் ஈயாத வஞ்சகர்களை,

'எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தனன்
ஒட்டி நல்லறஞ் செய்யாதவர் செல்வம்' (பாடல் 260)

என்ற பாடலில் பழிக்கின்றார்.

திருமூலர் ஈகையறத்தை இறையுணர்வோடு ஒற்றிணைத்து வலியுறுத்துகின்றார். பொருள் மட்டும் ஈகைக்கு உரியதல்ல. ஒரு பிடி பச்சிலையும், புல்லும், உணவும் இனிய பேச்சும் கூட ஈகைக்குரிய பொருளாவன என்பது திருமூலரின் ஈகைத் தத்துவமாகும். எனவே பொருள் நிறைந்தோர், பொருளற்றோர் ஆகிய இரு சாராருக்குமே ஈகையறத்தை மேற்கொள்ள முடியும் என்பது திருமூலரின் கோட்பாடு. தகுதியில்லாதவர்களுக்குக் கொடுத்தலும் ஞானியர்க்குக் கொடுக்காமலிருப்பதும் பெருங்குற்றமென்பதும் திருமூலர் வகுத்த ஈகைக் கோட்பாடாகும்.

# 41. திருமந்திரத்தில் பழமையும் புதுமையும்

முனைவர் ச. சுபாஷ் சந்திரபோஸ், திருவையாறு.

மொழி என்பது மானுட வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைகின்றது. மாற்றம் இல்லையேல் உலக இயக்கமே இல்லை. மொழியும் இதற்கு விதிவிலக்கன்று. உலகில் எத்தனையோ மொழிகள் தோன்றி வளர்ச்சி அடைந்துள்ளன. அவற்றில் கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பெற்ற மொழிகளும் உண்டு. மக்கள் கடைப்பிடித்த சில கோட்பாடு களால் சுருங்கிப் போய் ஏட்டளவிலேயே உலாவிக் கொண்டிருக்கும் மொழிகளும் இருக்கின்றன.

இந்திய மொழிகளில் செம்மொழி என்று தகுதி பெற்ற தமிழும் தொன்மையானதாகும். காலச் சூழலுக்கேற்ப இம்மொழியில் இலக்கியங் களும் இலக்கணங்களும் தோன்றியுள்ளன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இடையறாமல் வாழ்ந்து வளர்ந்து வரலாறு படைத்து வரும் மொழி இது. என அறிஞர்களும் போற்றும் சிறப்பினை உடையது. மேலை நாட்டு அறிஞர்களும் வியந்து போற்றும் வகையில் தமிழரின் வாழ்வியல் கோட்பாடுகளும் மொழிக் கோட்பாடுகளும் அமைந்துள்ளன. ஒரு மொழியின் பெருமைக்கு இலக்கியங்கள் இன்றியமையாதவை என்பதில் ஐயமில்லை. அவற்றின் மொழியமைப்பை ஆராயும் போது நூலாசிரியரின் நுண்மாண் நுழைபுலத்தை அறிந்து கொள்ளலாம்.

இக்கட்டுரையில் திருமூலர் பயன்படுத்தும் பழந்தமிழ்க் கருத்துக்கள் மொழியாட்சிகள், பிற்காலத்து எழுந்த புதிய இலக்கணக் கூறுகள், பேச்சு மொழி என்ற நான்கு நிலையில் ஆராயலாம்.

**1. பழந்தமிழ்க் கருத்துக்கள்**

ஆழமான சிந்தனைக்குரிய கருத்துக்கள், உண்மைகள் காலம், மொழி, இனம் கடந்தும் போற்றப்பெறுகின்றன என்பதை ஒரு மொழி இலக்கியங்களையும் பிறமொழி இலக்கியங்களையும் ஒப்பிட்டு ஆராயும் போது அறிந்து கொள்ளலாம்.

முடியாட்சிக் காலத்தில் போர் என்பது பல்வேறு காரணங்களுக்காக நிகழ்ந்து கொண்டே இருக்கும். அப்போது சிலரைக் காக்க வேண்டியது மன்னனின் கடமையாக இருந்தது. அவர்களைப் புறநானூற்றுப் புலவர் பட்டியலிடுகின்றார்.

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறா தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின் (புறம்: 9:1-5)

போர்க்காலத்தில் பொதுக் கோட்பாடாகக் கொள்ளப் பெற்ற இதனைச் சமயக் கொள்கையோடு தொடர்புபடுத்துவதைக் கீழ்க்காணும் பாடலில் காணலாம்.

ஆவையும் பாவையும் மற்றற வோரையும்
தேவர்கள் போற்றும் திருவேடத் தாரையும்
காவலன் காப்பவன் காவாது ஒழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நகரமே (243)

புறநானூற்றில் மனிதநேயத்திற்காகச் சொல்லப் பெற்ற கருத்து திருமந்திரத்தில் சமய ஆற்றலோடு சேர்த்து அழுத்தம் கொடுக்கப் பெறுகின்றது. மேற்சொன்னவர்களைக் காக்காவிட்டால் காவலனுக்கு நரகமே கிடைக்கும் என அழுத்திச் சொல்வதால் இக்கொள்கைக்கு இன்னும் அழுத்தம் கொடுக்கப் பெறுகின்றது. ஒரு கருத்தைப் புலப்படுத்தும் முறையும் உணர்த்தும் முறையும் இலக்கிய வகைக்கு ஏற்ப மாறுபடும் என்ற கருத்து இங்கு நோக்கத்தக்கது.

உயிரினங்களில் மானுடத்தின் கோட்பாடு மாறிக்கொண்டே போகின்றது. மாற்றம் என்பது வளர்ச்சியாக இருந்தாலும் பிறருக்கு உதவுதல், வழி காட்டுதல் போன்றவை அடிப்படைக் கோட்பாடாகும். தீனியைக் கண்டதும் காகம் தன்னினத்தைக் கரைந்து அழைக்கும். கூடியபிறகு அவை சண்டை யிட்டுக் கொண்டாலும் கிடைத்ததைத் தின்ன ஒன்று கூட்டுவதற்கு வழிவகுப்பது உயர்ந்த செயலாகும். இதனையே திருவள்ளுவர் இவ்வாறு கூறுகின்றார்.

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள (திருக். 527)

பகுத்துண்டு பல்லுயிரைக் காத்தல் பழந்தமிழரின் உயர்ந்த கோட்பாடு களுள் ஒன்றாகும். அற இலக்கியங்கள் அனைத்தும் ஈதலின் பெருமையைப் பறைசாற்றுகின்றன. கிடைத்ததை அனைவருக்கும் அளித்து உண்ண வேண்டும் எனக் கூறும்போது திருமூலர் திருவள்ளுவரை மறக்கவில்லை.

காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே (250:4)

இவ்வாறு முன்னோர் மொழியைப் பொன்னைப் போல் போற்றித் திருமந்திரத்தில் பல இடங்களில் எடுத்துரைத்துள்ளார். அவற்றை எல்லாம் திரட்டி ஆராயும் போது தமிழரின் உயரிய கோட்பாடுகள் வெளிப்படும்.

## 2. மொழியாட்சிகள்

தொல்காப்பியம், சங்க இலக்கியம் போன்றவற்றுக்க முற்பட்டவை நமக்குக் கிடைக்காவிட்டாலும் அவற்றின் எச்சங்கள் பல இந்நூல்களில் ஊடாடி இருப்பதைப் படிக்கும்போது அறிந்து கொள்ளலாம். தொல்காப்பியர் குறிப்பிடும் மொழிக்கோட்பாடுகளைத் திருமூலர் பயன்படுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.

தொல்காப்பியர் தன்மை ஒருமைக்கு யான் (தொல். சொல். 159) என்னும் இடப்பெயரைக் குறிப்பிடுகின்றார். யாம் என்ற தன்மைப் பன்மைப் பெயருக்கு இணையானது யான் என்றும் ஒருமை வடிவம். நாம் என்ற தன்மைப் பன்மைப் பெயருக்கு இணையாக ஓர் ஒருமை வடிவம் நான் (பரி.6.:87) எனப் பின் பழந்தமிழில் காணப்பெறுகின்றது. இவ்வடிவம் தோன்றிய பிறகு பிற்கால இலக்கியங்களில் இதன் பயன்பாடே அதிகமாக இருக்கின்றது. ஆனால் திருமூலர் பழைய சொல் யான் என்பதையும் விட்டு விடாமல் நான் புதியது என்பதால் அதனைத் தள்ளி விடாமல் இரண்டையும் பயன்படுத்துகின்றார்.

யான்

எண்ணிநின்ற இப்பொருள் ஏத்துவன் யானே (58:40)

மாலாங்கனே இங்கு யான் வந்த காரணம் (77:1)

நான்

நானும் அழிந்தமை நான் அறியேனே (2951:4)

தொல்காப்பியர் - மின் (தொல். சொல். 219) என்பதை முன்னிலைப் பன்மை விகுதிகள் ஒன்றாக்க் குறிப்பிடுகின்றார். பவணந்தி முனிவர் (நன். 337) இதனை ஏவல் உணர்த்தும் எனக் குறிப்பிடுகின்றார். திருமூலர் சைவ சமயக் கோட்பாடுகளை மக்கள் பின்பற்ற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு மின் ஈற்று முன்னிலைப் பன்மை வினைமுற்றுக்களை ஏவற் பொருண்மையிலேயே நூற்றுக்கணக்கான இடங்களில் பயன்படுத்துகின்றார்.

மின்

செழுந்தண் நியமங்கள் செய்மின் (72:2)

கூறுமின் நீர்முன் பிறந்திங்கு இறந்தமை (1822 : 1)

பழந்தமிழில் கால இடைநிலை ஏற்ற வினை வடிவங்கள் மீண்டும் கால இடைநிலை, பால் காட்டும் விகுதிகள் போன்றவற்றை ஏற்பதற்கு நிறையச் சான்றுகள் காணப்பெறுகின்றன.

அறிகல்லாய் (கலித். 95 : 26).

அறிகிலர் (குறுந். 152:1)

அறிகுவது (ஐங் .248:3)

மேற்குறிக்கப் பெற்ற சான்றுகளில் அறி என்னும் வினையடி இறப்பல்லாக் கால இடைநிலை ககரத்தை ஏற்றுப் பின்னர் அடிச் சொல்லாகி வேறு உருபுகளை ஏற்பதைக் காணலாம். இதே அமைப்பு வடிவங்கள் திருமந்திரத்திலும் காணப்பெறுகின்றன.

கழிந்த பெருமையைக் காட்டுகில்லானே (71:4)

அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார் (270:2)

தமிழ் மற்றுள்ள திராவிட மொழிகளில் அஃறிணைப் பெயர்கள் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாகவே இருக்கும் அவை ஒருமையை உணர்த்து கின்றனவா பன்மை உணர்த்துகின்றனவா என்பதை ஏற்று வரும் வினை முற்றைக் கொண்டு அறிந்து கொள்ளலாம். தொல்காப்பியரும் இதனைக் குறிப்பிடுகின்றார்.

தெரிந்லை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே
(தொல்.சொல். 168)

ஆ என்பது ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவான பெயர். ஆ வந்தது என்னும் தொடரில் ஒருமையையும் ஆ வந்தன என்னும் தொடரில் பன்மையையும் அ உணர்த்துகின்றது. திருமூலரும் இந்த விதி அடிப்படையில் பல தொடர்களை உருவாக்கியுள்ளார்.

எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன (260:1)

கழிந்தன கற்பனை (261:2)

அஃறிணைப் பெயர்களோடு கள் விகுதியைச் சேர்ப்பது கட்டாய மில்லை; சேர்த்தும் பயன்படுத்தலாம். சேர்த்துப் பயன்படுத்தும் சான்றும் திருமூலர் மொழியில் காணப்பெறுகின்றது.

ஒழிந்தன காலங்கள் (261:1)

**3. பிற்காலப் புதிய வடிவங்கள்**

பழமையைப் போற்றுவதைப் போன்று திருமூலர் புதிய வடிவங் களையும் ஆரத்தழுவித் தம்மொழியில் பயன்படுத்துகின்றார். இவ்வாறு தேவையான புதுமையை ஏற்றுக் கொள்ளும் மொழியே வாழும்; வளரும்.

**கள்**

பழந்தமிழில் யாம் என்னும் எழுவாய் உளப்படுத்தாத் தன்மைப் பன்மைக்கு வேற்றுமை வடிவம் எம் என்பதாகும். இதனோடு கள் விகுதி சேர்த்துப் பயன்படுத்துவது பிற்கால வளர்ச்சியாகும். இவ்வடிவத்தைத் திருமூலர் திருமந்திரத்தில் பல இடங்களில் பயன்படுத்துகிறார்.

நற்பதமும் அளித்தான் எங்கள் நந்தியே (89:4)

ஆரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை (95:1)

பழந்தமிழ் கள் விகுதி அஃறிணைப் பெயர்களோடு மட்டும் பன்மையை உணர்த்தப் பயன்பட்டுள்ளது. பிறகு உயர்திணைப் பெயர்களோடும் வருகின்றது. திருமந்திரத்தில் பல இடங்களில் உயர்திணைப் பெயர்களோடு மட்டுமல்லாமல் உயர்திணை வினை முற்றுக்களோடும் வருவது குறிப்பிடத்தக்கது.

**பெயர்** -

நின்றுணரார் இந்நிலத்தின் மனிதர்கள் (191:3)

அமரர்கள் அர்ச்சிக்கும் நந்தி (61:3)

ஓதியும் ஏதும் அறியாத ஊமர்கள் (870:2)

வினைமுற்று

நீரினில் மூழ்கி நினைப்பு ஒழிந்தார்களே (145:4)

அஞ்சலியோகும் கலந்து அர்ச்சித்தார்களே (1827:4)

**நீர்**

தொல்காப்பியர் (தொல். சொல். 185) முன்னிலைப் பன்மைக்கு நீயிர் என்ற இடப்பெயரைக் குறிப்பிடுகின்றார். நீர் என்ற வடிவமே திருமந்திரத்தில் காணப்பெறுகின்றது.

நல்ல தவஞ்செய்யும் நீரே (255:4)

கூறுமின் நீரே (1331:4)

**உம்**

பிற்காலத்தில் உம் என்றொரு முன்னிலைப் பன்மை விகுதி பரவலாகக் காணப்பெறுகின்றது. தொல்காப்பிய உரையாசிரியர்களும் இதனைக் குறிப்பிடுகின்றார்கள். திருமூலரும் இவ்விகுதியைப் பயன்படுத்துகின்றார்.

ஓரநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே (54:4)

கூவி அருளிய கோனாக் கருதுமே (2384:4)

**நிகழ்காலம்**

திராவிட மொழியியல் அறிஞர்கள் மூல திராவிட மொழிக்கு இறந்த காலம் இறப்பல்லாக் காலம் என்ற இரண்டையே மீட்டுருவாக்கம் செய்கின்றார்கள். இறப்பில்லாக் காலம் என்பது நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் உணர்த்தும், நிகழ்காலத்தை உணர்த்த தனி இடைநிலை பரிபாடலில் (சேர்கின்ற பரி .22:35) முதன் முதலாகக் காணப்பெறுகின்றது.

ஒரு வடிவம் தோன்றி விட்டால் மட்டும்போதாது; அதனைப் பயன் படுத்தும் போதுதான் பரவலாகப் பெறும். முதன்முதலாகக் கிடைக்கும் நிகழ்கால வடிவம் பெயரெச்சமாகக் காணப்பெறுகின்றது. ஆனால் திருமூலர் நிகழ்காலப் பெயரெச்சம், வினைமுற்று வடிவங்களைத் திருமந்திரத்தில் நிறையப் பயன்படுத்துகின்றார்.

**பெயரெச்சம்**

**ஊன் தெய்வமாக உயிர்க்கின்ற பல்லுயிர்** (257:3)

**பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை** (1785:3)

**வினைமுற்று**

**தேம்புகின்றார் சிவம் சிந்தை செய்யாதவர்** (2352:3)

**நாவனும் ஆகி நவிற்றுகின்றானே** (3032:4)

பவணந்தி முனிவர் (நன்.143) குறிப்பிடும் மூன்று நிகழ்கால இடைநிலைகளில் கின்று, கிறு என்பவையும் அடங்கும். திருமூலர் மொழியில் கின்று என்ற வடிவமே அதிகமாகக் காணப்பெறுகின்றது.

இவையல்லாமல் இன்னும் பல பிற்காலப் புதிய வடிவங்களைத் திருமூலர் தம்முடைய திருமந்திரத்தில் பயன்படுத்துகின்றார்.

**4.பேச்சுமொழி**

பேச்சுமொழியைப் பயன்படுத்திக் கொண்டே கொச்சை வழக்கு, இழி வழக்கு எனத் தவறாகக் கருதுகின்றார்கள். பேச்சு மொழியும் எழுத்து மொழியும் ஒரு மொழிக்கு இரண்டு கண்கள். பழந்தமிழில் (ஆனது கலித். 147:3 < ஆகியது; என்பர் புறம் 27:9 < என்பர்) பரவலாகக் காணப்பெறுவதைப் போன்று திருமூலரும் நிறையப் பேச்சுத் தமிழ் வடிவங்களைப் பயன்படுத்துகின்றார்.

மொழி முதலில் வரும் யகரமெய் இழப்பு (ஆண்டு 178 < யாண்டு (புறம். 357:4) ஆறு (133:3) < யாறு நெடு.30) பழந் தமிழிலேயே நிறையக் காணப்பெறுகின்றது. இவ்வகை வடிவங்கள் திருமந்திரத்திலுல் நிறையக் காணப்பெறுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| ஆண்டு | < | யாண்டு | (178:1) |
| ஆமை | < | யாமை | (1206:1) |

முன்னுயிர்கள் இ, ஈ யகரமெய், ஐகாரம் போன்றவற்றை அடுத்து வரும் மெய்கள் கீழ்க்காணுமாறு மாற்றம் பெறும். இதனை அண்ணாவிமாதல் எனக் குறிப்பர்.

[த்த் / ந்த்] [ச்ச் / ஞ்ச்] / { முன்னுயிர் / ய் / ஐ }

இவ்விதி உலக மொழிகள் எல்லாவற்றுக்கும் பொதுவானதாகும். இம்மாற்றம் பெற்ற பேச்சுவழக்குச் சொற்கள் பல திருமந்திரத்தில் காணப் பெறுகின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| த்த் > ச்ச் | பிச்சன் | < | பித்தன் | (2171:3) |
| | வைச்ச | < | வைத்த | (3090:2) |
| ந்த் > ஞ்ச் | படிஞ்சு | < | படிந்து | (164:4) |
| | முடிஞ்சது | < | முடிந்தது | (164:2) |
| | அஞ்சு | < | ஐஞ்சு < ஐந்து | (1736:1) |

தமிழில் சங்க இலக்கியங்கள், சங்கம் மருவிய இலக்கியங்கள், காப்பியங்கள் போன்றவற்றின் மொழியமைப்பை ஆராய்ந்த அளவிற்குப் பக்தி இலக்கியங்களின் மொழி ஆராயப் பெறவில்லை. பன்னிரு திருமுறைகள், நாலாயிரத் திவ்ய பிரபந்தம் போன்றவை சமயக் கோட்பாடுகள் அடிப்படையிலேயே ஆராயப் பெறுகின்றன. மொழியமைப்பையும் ஆராய வேண்டும். அப்போதுதான் நூலை இயற்றியோரின் இலக்கியப் புலமையும் மொழிப் புலமையும் வெளிப்படும்.

# 42. மந்திரத்தில் சொக்குதே மனம்

முனைவர் சு. சுஜாதா, குன்னூர்.

"தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடும்
சூழ்கலை வாணர்களும் இவள்
என்று பிறந்தவள் என்றறியாத இயல்பினளாம் எங்கள் தாய்"

என்ற பாரதியின் வாக்கிற்கிணங்க முன்னைப் பழமைக்கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் போர்த்தும் அப்பெற்றிய தாய் விளங்கும் செந்தமிழ் சிறக்கச் சித்தர்கள் ஆற்றிய பணி எண்ணற்கரியது. அவர்தம் முள்ளும் முந்தியவரும், முதன்மையானவருமாய் வைத்துப் போற்றத்தக்கவரும், அறுபான் மும்மை நாயன்மாருள் அரிய ஒருவராய் ஏற்றம் பெறுபவருமான திருமூலரின் பங்களிப்பாய் உலகம் கற்றுணர வேண்டிய, கடைப்பிடித்தற் குரிய நெறி பலவும் பின்னிக்கிடக்கும் திருமந்திரமாம் தமிழ் மந்திரம் திகழ்கிறது.

**தனிச்சிறப்பு**

பொதுவாக பக்தி இலக்கியங்களில் நெஞ்சை உருக்கும் பாடல்களும், போற்றித் துதிக்கும் பாடல்களும், தத்துவச் சாரம் ததும்பும் பாடல்களும் நிரம்பியிருப்பதைத் தான் திருமுறைகளிலும், பிற நூல்களிலும் பார்க்கிறோம். இதர இறை நூல்களிலிருந்து மாறுபட்ட முறையில் பலதரப்புச் செய்தி களையும் தன்பாற் செறிந்துத் திகழும் திருமந்திரத்தில் அறிவியல் ஒரு பக்கம் கொட்டிக் கிடக்கிறது. ஞானம் ஒருபுறம் ததும்பி வழிகிறது! நெக்குருகும் பக்தி ஒரு பக்கம் பொங்கினாலும் பக்குக வாழ்வியலும் மறுபக்கம் நிறைகிறது! இந்த நூற்றாண்டின் மருத்துவச் சிக்கலுக்கு நுணுக்கமாய் விடைகாணும் மதிநுட்பம் ஒரு சார்! விஞ்ஞானிகளை வியக்கவைக்கும் வானியல் ஆக்கும் கணக்குகள் ஒருசார்! மந்திர தந்திரம் மலையென ஒருசார்! சித்திகள் - முத்துச் செய்திகள் கடல்போல் சக்கர சோதிடச் சங்கதி ஒருசார்! ஒப்புயர் வில்லாத் தத்துவ கூத்தன் விளக்கமும் ஒருசார்! கூத்தின் விளக்கமும், பிறப்பின் அருமையும், இறப்பின் தன்மையும், நில்லா உலகின் நீர்க்குமிழ் வாழ்வையும் பலபடச் சாற்றும் பாடல்கள் ஆயிரம்! 'எல்லாப் பொருளும் இதன் பால் உள' என்று எத்திறத்தாரும் தூய்த்துணரும் வண்ணம் வேறெந்த நூலிலும் காணமுடியாத அரும்பெரும் செய்திகளின் பெட்டகமாய் விளங்குவது திருமந்திரத்தின் திருவருள் நூல்களில் தொன்மை வாய்ந்த

செந்தமிழ் தனிச்சிறப்பு வேதமாகச் செழுந்தமிழ் நூலென இதனை இராமநாதன் போற்றுவது குறிப்பிடத்தக்கது. ப. 45, நூன்முகம், திருமந்திரம் - I

**இலக்கியச் சுவை**

தத்துவச் சாரம் மிக்க பத்தி நூலொன்றில் இலக்கியச் சுவை இதயத்தை அள்ளும் வண்ணம் நிறைந்திருப்பது இந்நூற்கு மெருகேற்றும் இன்னோர் அம்சம்! சரளமான உவமைகளும் எண்ணிறைந்த உருவகங்களும் அரிய பல செய்திகளை எளிதில் உணர்த்தி மந்திர நூலிற்கு மதிப்பைக் கூட்டுகின்றன.

உடலில் பஞ்சவேதம் என்ற தலைப்பில் அமைந்த பாடல் ஒன்றில் உடலைப் பையாக, உயிரைக் கள்வனாக உருவகிக்கிறார்.

**''காயப்பை ஒன்று சரக்குப் பலவுள**
**மாயப்பை யொன்றுண்டு மற்றுமோர் பையுண்டு**
**காயப்பைக்குள் நின்ற கள்வன் புறப்பட்டால்**
**மாயப்பை மண்ணா மயங்கிய வாறே''**

இதில் மெய்ப்பைக்குள் பல சரக்கை அடக்குவதும் உயிரையும், மனத்தையும் மற்றிரண்டு பைகளாகக் கூறுவதும் உயிர்போனால் - பிடிமண்ணாகும் மாயத்தை உறைப்பதும் வாழ்வின் சாரத்தையே நம்முன் கொண்டு நிறுத்துவதை உணரலாம்.

மற்றுமோரிடத்தில் உடம்பைத் தேராகக் கூறி மனதைப் பாகனாக உருவகிப்பதிலும் மந்திர மகிமையைக் காணலாம். உடம்பாகியத் தேரிலேறி - மாயையின் சூழ்ச்சியால் மெய்யுணர்வு வாய்க்கப்பெறாமல் மனம்போன போக்கில் அலையும் உயிர்கள் அன்பு நெறியால் இறையருளைப் பெற்றால் - சிவனுக்கு ஈடான சிறப்பை அடையும் செய்தியை யுணரவில்லையே என்ற அங்கலாய்ப்பும் பாடலில் வெளிபடக் காணலாம்.

**''காயத்தேர் ஏறி மனப்பாகன் கைகூட்ட**
**மாயத்தேர் ஏறி மயங்கும் அவையுணர**
**நேயத்தேர் ஏறி நிமலன் அருள் பெற்றால்**
**ஆயத்தேர் ஏறி அவன் இவனாமே''**

**மடைப்பெருக்கு**

திருமூலரே நம்மிடம் எதிர்நின்று பேசுவதைப் போன்ற சரளமான மடைப்பெருக்காய் பயின்றுவரும் பாடல்கள் ஈராயிரத்திற்குமேல் இடம் பெறுகின்றன. ''அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்'' - பாடல் யாவரும் அறிந்த ஒன்று. ஞானப் பரவசப் பேரானந்தத்திற்குத் துணையாகும் திருவடிதீக்கையைப் பற்றிப் பேசுமிடத்தில் நம்மையும் ஆனந்தத்தில் ஆழ்த்தும் வண்ணம் பாடல் மடைப்பெருக்காய்ப் பொங்குகிறது.

"கால்கொண்டேன் சென்னியில் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கில் துயக்கற
பால்கொண்ட என்னைப் பரன்கொள்ள நாடினான்
மால்கொண்டேன் செம்மை விளம்ப வொண்ணாதே"

சொல்லற்கரிய பரமானந்தம் படிப்பாரைச் சொக்கவைக்கிறது!

**தெளிவும் செறிவும்**

அவத்தை பேதத்தைப் பற்றிப் பாடும்போது யாருமே சற்று அவதிப் படுவார்கள்; படுத்துவார்கள்! அதைக்கூடத் தெளிவாகச் செறிவாக மந்திரத்தில் பயிலும்போது ஞானநெறிகூட எளிதாகத் துவங்குகிறது.

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்"

மாயாவினோத லீலையாக அமைந்த இவ்வுலக வாழ்வை மரயானை எவ்வளவு அற்புதமாக விளக்கிவிடுகிறது. 'கல்லைக் கண்டால் நாயைக் காணோம்' என்ற வழக்கைப்போல் தோன்றினாலும் ஞானநோக்கின் நுட்பத்தை நுனித்துணரும்போது தான் பாடலின் மேன்மை துல்லியமாகப் புலப்படும்.

"பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
...........................................................
தன்னை மறைத்தது தன் கரணங்கலாம்"

என்ற பாடலையும் சேர்த்துக் காணும்போது உயிர்களைப் பிடித்திருக்கும் மாலை நோயின் தாக்கத்தால் - பரஞானப் புலப்படாமலிருப்பதும், பரனருள் வாய்க்க ஞானவொளி ஊறுவதும் எத்துணை எளிமையாக உணர்த்தப்படுகின்றன? கரணவழிச் செல்லும் புலனின்ப வேட்கையில் தென்பமாத தான். தன்னை உணரும் சித்தாந்தத்தால் யார்க்கும் தெளிவாவதையும் அழகாகக் குறிப்பிடுவது போற்றற்குரியது.

**உலகியல் நடை**

சராசரி மனிதர்களும் உணர்ந்து கொள்ளும் நடையில் - இயல்பாகச் செய்திகளைச் சொல்லிக் கருத்துக்களை யாவரும் அறியுமாறு செய்யும் சிறப்பைத் திருமந்திரத்தில் காணமுடியும். கரு உற்பத்தியைப்பற்றி வியந்துநின்று பாடுகிறார் திருமூலர்.

"இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்
தட்டான் அறிந்தும் ஒருவர்க்கும் உரைத்திலன்

பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன்இம் மாயையின் கீழ்மை எவ்வாறே''

இப்பாடலில் பிறப்பின் ரகசியம் பொதிந்து கிடக்கிறது.

பிராணயாமக் கலையைப்பற்றிக் குறிப்பிடுகையிலும் எளிமையும், இனிமையும் குலவி வருவதைக் காணமுடியும்.

"ஆரியன் நல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறிவாரில்லை
கூரிய நாதன் குருவருள் பெற்றான்
வாரிப் பிடிக்க வசப்படும் தானே''

என்ற பாடலில் இடகலை, பிங்கலை (குதிரை), நாடிகளை வசப்படுத்தும் உயிர்ப்புப்பயிற்சி அழகிய உவமையால் அறிவுறுத்தப்படுகிறது.

**நிலையாமை**

அருளியல் வாழ்வை மட்டுமன்றி இவ்வுலக வாழ்வின் இயற்கையையும் கருத்தில் கொண்டு நில்லா உலகை நிலையாகக்காணும் மாந்தர்க்காய் இரங்குகிறார். ஒவ்வொரு நாளும் எழுவதும் விழுவதுமாகிய கதிரவனைக் கண்டும் உணராத மனிதர்களுக்கு உணர்த்தும் வகையில்,

"கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேரார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெருதாய்ச் சிலநாளில்
விழக்கண்டும் தேரார் வியனுலகோரே''

எனப்பாடுகிறார்.

மெய்ப்பொருளாகிய இறையருளுக்கு முயலாமல் பொய்ப்பொருள் மோகத்தில் வாழ்க்கையைத் தொலைக்கும் உயிர்களுக்கு அம்பலக் கூத்தனின் அருள் ஞானப் பெருக்கை மறைபொருள் கூத்தில் விளக்குகிறார்.

"கொட்டியும் ஆம்பலும் கூத்தகுளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையும்
கட்டியும் தேனும் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக்கு இளைக்கின்ற வாறே!''

மருத்துவக் குறிப்புபோல் ஒருபுறம் தோன்ற மெய்ஞானச் செய்தியை உள்ளே செறித்துப் பாடப்பட்ட பாடல்களையும் தமிழ் மந்திரத்தில் பார்க்கலாம்.

"மூங்கில் முளையில் எழுந்ததோர் வேப்புண்டு
வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்
பாம்புண்டு பாம்பினைத் தூரத்தித்தின்பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறன்றே''

அலைக்கழிக்கும் ஆசையை அடக்க முடியாமல் மாயா லீலையை வெல்ல முடியாமல் பாழில்; கிடந்து சீரழியும் மக்களை ஞானநெறிப்படுத்தும் கருத்தினது இப்பாடல்.

இப்படி தமிழ்மறையாம் திருமந்திரத்தைத் தொட்டவிடமெல்லாம் சுவையும், நயமும் கொட்டிவழிகிறது. ஒரு சில பாடல்களில் புதிர்ப் போக்குக்கூடத் தட்டுப்படுகிறது.

"இலையில்லை பூவுண்டு இனவண்டிங்கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை கொய்யும் மலருண்டு சூடும்
தலையில்லை தாழ்ந்த கிளை புலராதே"

இப்பாடலில் இறைவனின் ஞானானுபவம் தான் உணர்த்தப்படுகிறது. ஆனந்தப் பெருங்கூத்தாடும் அம்பலவனின் அடியார் கூட்டத்தில் சேர்ந்து விட்டால் ஆதி, அந்தமில்லாத அவனது அருட்பெருக்கில் நாளும் திளைக்கலாம். இதை எவ்வளவு அருமையாக ஒரு விடுகதைபோல் விளக்குகிறது பாடல்.

ஆரியம்போல் வேதம் தமிழில் இல்லையே என்ற குறையைப் போக்கும் வண்ணம் அருமறையாய் வாய்த்தது திருமந்திரம். அணி நயத்தால் இலக்கியமாய் தத்துவத்தால் ஆகமமாய் - அறிவியலால் நுண்ணூலாய் அன்புணர்வாள் அருள்நூலாய் திகழ்வது திருமந்திரம். இன்றைய உலகின் அல்லல்களுக்கிடையில் - உலகமயச்சிக்கலின் புதுமை களுக்கிடையில் மனிதப் பயிர்களுக்கு அரியதொரு கலைக்கொல்லியாயும், பயிர் செழிக்க உதவும் இயற்கை உரமாகவும், வாடிய பயிர்களுக்கு உரமாக உதவும் வானமுத மழையாகவும் விளங்குவது திருமந்திரம் என்றால் மிகையாகாது.

# 43. திருமந்திரம் - பருந்துப் பார்வை

முனைவர் பி. செந்தமிழ்ச்செல்வி, திருச்சிராப்பள்ளி.

இவ்வுலகிலுள்ள கோடிக்கணக்கான உயிர்களில் மிகச் சிறந்த பிறவி மனிதப்பிறவி. கலை பற்றிய சிந்தனையைத் தந்தவர்கள் தமிழகத்தில் வாழ்ந்த சித்தர்கள். அவர்களில் திருமூலர் முக்கியமானவராவர். அவரது திருமந்திரம் என்னும் நூல் பல்வேறு வகையான சிந்தனைகளைத் தூண்டும் கருத்துப் பெட்டகம்.

திருமந்திரப் பாடலை மேல் நோக்காகப் பார்க்கும் போது எளிமை யாகத் தோன்றுகிறது. பாடலில் அமைந்துள்ள அருமையான, ஆழமான கருத்துக்களைக் கொண்டு சிந்திக்க சிந்திக்க நம் எல்லோருடைய அறிவிற்கும் பெருவிருந்தாக அமைவதை அறியலாம்.

**சோதிடக்கலை**

சோதிடக் கலையின் நுட்பங்களை தெளிய உணர்ந்து இறைவனுடைய திருவருளுடன் பதிகத்தினை மனம் ஒன்றி தன்னம்பிக்கையோடு படனம் செய்வதால் எளிதில் துயர் நீங்கும் என்பது, எண் அடிப்படையில் விடம் நீக்கும் பதிகத்தை திருநாவுக்கரசர் பாடியருளியுள்ளார். எண் அடிப்படையில் இறைவனைப் போற்றுகிறார் திருமூலர்,

**''ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந்தான் ஐந்து''**

என்று எண் அடிப்படையில் இறைவனை வாழ்த்துகின்றார்.

**அன்பே சிவம்**

இந்த உலகில் பிறந்த ஒவ்வொரு உயிரினங்களும் அன்பை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றன. அன்பினால் நாம் நினைத்ததை எல்லாம் பெற முடியும். அன்புடன் வாழும் இல்லறமே உலகில் மேல் ஓங்கி இருக்கும் என்பதனை உணர்ந்த வள்ளுவர் அன்புடைமை என்னும் அதிகாரத்தைப் படைத்துள்ளார்.

**''அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ் ஆர்வலர்
புன்கண்ணீர் பூசல் தரும்''**

**(குறள் 71)**

**''அன்பு அகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந் தளிர்த்தற்று''**

**(குறள் 78)**

"அன்பின் வழியது உயிர்நிலை அது இலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு" (குறள் 80)

இக் கருத்தினை அரண் செய்யும் வகையில் திருமூலர்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலர்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே" (திருமந்திரம். 270)

என்று கூறும் சமயம் சைவம் ஒன்று மட்டுமே. ஆனால் அன்பு செய்தால் இறைவனை அடையலாம் என்று கூறும் சமயங்கள் உண்டு.

அன்பின் முக்கியத்துவத்தை வலியுறுத்தும் திருமூலர்,

"உள்ளத் தொருவனை உள்ளூறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருந்தும்
உள்ளம் அவனை உருவறியாதே"

என்றுரைக்கின்றார்.

அன்பால் மனம் குழைந்து அகம் உருக இறைவனை துதியுங்கள். உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூன்றும் கடந்த முழுமுதற் பொருள் எம்பெருமான். இப்படிப்பட்ட சிவனை, ஒரு காலத்தில் அவன் தானாக தோன்றியவன் என்று போற்றி வணங்கினாலும், வானுலகில் இருந்து வழிபடுபவருக்கு ஒரு சமயம் துணை நின்று அருள்புரிவான். தேன் போன்ற உமையவள் ஒரு பக்கத்தில் இருக்க கொன்றை மாலை சூடிய இறைவன் எனக்கு அன்புருவாகி கலந்து நின்றான். இத்தகைய இறைவன் மீது அன்பு செலுத்துபவர் பெறும் இன்ப நிலையை,

"என் அன்(பு) உருக்கி இறைவனை ஏத்துமின்
முன் அன்(பு) உருக்கி முதல்வனை நாடுமின்
பின் அன்(பு) உருக்கி பெருந்தகை நந்நியுந்
தன் அன்(பு) எனக்கே தலை நின்றவாரே" - (திருமந். 274)

என்கிறார்.

ஆனந்த கூத்தாடும் பரம்பொருள் எம்பெருமான். அப்பெருமானிடம் தன் உடல் எலும்புகளையே விறகாகக் கொண்டு உடல் தசைகளை யெல்லாம் அறுத்துப் போட்டும் நெருப்பில் நன்றாக வறுத்து வதக்கினாலும் அன்போடு மனம் கசிந்து உருகி உள்ளம் நெகிழ வணங்குபவர்களுக்கே அல்லாமல், மற்றவர்களுக்கு தன்னைப் போல் இறையருள் பெற முடியாது என்று திருமூலர் கருத்தாகும்.

இதனைத் தொடர்ந்து மேலும்,

"ஆர்வம் உடையவர் காண்பார் அரண் தன்னை
ஈரம் உடையவர் காண்பார் இணையடி
பாரம் உடையவர் காண்பார் பவந் தன்னைக்
கோர நெருக்கொடு கோங்கு புந்தவ" (திருமந். 273)

என்கின்றார்.

**நிலையான இன்பம்**

மனித வாழ்க்கை நிலையற்றது. நிலையற்ற வாழ்க்கையில் நிலையான பேரின்பத்தைப் பெற வேண்டும். ஆறறிவு கொண்ட மனிதன் வாழும் வாழ்க்கைக்கு ஓர் அர்த்தம் வேண்டும் என்பதனை

"ஒழிந்தன கர்லங்கள் ஊழியம் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடம் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம் அறியாரே"

என்கின்றார் திருமூலர்.

இறைவனைக் கண்குளிரக் கண்டதாகவும், மணம் வீசும் கொன்றை மலர் மாலை சூடிய எம் பெருமான் திருவடிகளை கண்கலால் கண்டு களித்ததாகவும், தன் உள்ளமாகிய தாமரை மலரில் வாழ்கின்ற உண்மைப் பொருளை தன் மனக் கண்கொண்டு கண்டதாகவும் இத்தகைய அருட் காட்சிகளை தான் தன் உள்ளத்தில் - மனதில் அவன் மீது கொண்ட அன்பாலே அடைந்ததாகவும், அவன் திருவடித் துணை பெற்றமையையும்,

"கண்டேன் கமழ்தரு கொன்றையினான் அடி
கண்டேன் கரியுரி யான்தன் கழல் இணை
கண்டேன் கமல மலர் உரை வாழ் அடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே" (திருமந். 285)

இப்பாடலில் கூறுகின்றார்.

**இறைவன் அருளும் தன்மை**

இறைவன் அன்பர் மனக்கோவிலில் சோதிச் சுடரொளியாய்த் திகழ்கின்றான். அவனை மனதார நினைத்தும் நெஞ்சில் இருத்தியும், போற்றித் துதித்தும் உள்ளன்போடு யார் வேண்டினாலும் அவர்களுக்கு அருள் தருபவன் என்பதை,

"கருத்தூறு செம்பொன் செய் காய்கதிர்ச் சோதி
இருத்தியும் வைத்தும் இறைவ என்று ஏத்தியும்

அருத்தியுன் ஈசனை யாரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே" - (திருமந். 277)

என வெளிப்படுத்தும் இப்பாடல்.

அவரவர் நெஞ்சத்தாமரையில் எம் பெருமானாகிய சிவனிருந்தும் அவனை நினையாதவர்க்குப் பனையின் கண் இருக்கும். பருந்தை உவமையாகக் கூறுகின்றார். பருந்து மனம் பழத்தை நினையாமல் வேறு கீழேயுள்ள இருந்த பொருட்களை விரும்புவதை,

"பனையுள் இருந்த பருந்தது போல
நினையா தவர்க்கில்லை நின் இன்பந்தானே" (திருமந். 47)

என்று உவமையாகக் கூறிவிளக்குகின்றார்.

**யாக்கை நிலையாமை**

இறைவன் உயிர்களைத் தந்தையிடத்தும், தாயிடத்தும், புகுத்தலை குயிற்குஞ்சு தன் முட்டையைக் காக்கைக்கூட்டில் இடும் செயலோடு சுட்டுகின்றார். இவ்வுவமை உயிர்களெல்லாம் இறைவன் மக்களே என்பதை,

"குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றது போல்"
(திருமந். 47.107)

என்று இவ்வுவமையை ஒப்பிடுகின்றார் திருமூலர்.

உலக இலக்கியங்களில் 'இழப்பு' என்ற பொருளைப் பாடாத இலக்கியங்களே இல்லை எனலாம். எனவே இழப்பைக் குறிக்கும் கையறு நிலைப் பாடல்கள் இலக்கியங்களில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ள; பெரும்பாலான சித்தர்களின் பாடல்கள் யாக்கை நிலை யாமையை மையமாகக் கொண்டிருக்கின்றன.

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்
றுடம் பினை யானிருந் தோம்புகின்றேன்"

என்று கூறுகிறார் திருமூலர்.

கள்ளப் புலன்களாகிய ஐந்தும் அடக்கினால் உடல் சவமாகும். இப்படி ஐந்தும் அடக்கல் அமரராலும் இயலாது என்பதை,

"அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதன மாமென்றிட்
டஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே"

என்கிறது திருமந்திரம்.

ஐம்புலன்களின் வழியே பேரின்பம் காண வேண்டும், இதனை,

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்" (திருமந். 2944)

என்று எடுத்துக்காட்டாக, கண்ணின் செயல்பாட்டை எடுத்துரைக்கின்றார் திருமூலர்.

பெரும்பாலும் நீர்க்குமிழி நிலையாமைக்கே உவமையாகக் கூறப் படுகின்றது. திருமூலர் மட்டும் நீரில் தோன்றி நீரில் மறையும் தன்மையை, உடல் நுண்மயமாய்ப் பிரிந்து நுண்மெய்க்கண் அடங்குதலை இவ் வுவமையோடு ஒப்பிட்டுக் காட்டுகின்றார்.

"அழிகின்ற சாய புருடனைப் போலக்
கழிகின்ற நீரில் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே" (திருமந். 2542)

என்பது அப்பாடல்.

மனித வாழ்க்கைக்குத் தேவையான வழிமுறைகளை செவ்வனே எளிய வழியில் எடுத்துச் சொல்லி, சமூக முன்னேற்றப் பாதைகளை விளக்கி, கருத்துக்களைத் தெள்ளத் தெளிவுடனும், உறுதியுடனும், விளக்கமுடனும் சாதி, மத, இன, மொழி போன்ற வேறுபாடு இன்றி எடுத்துரைப்பது தான் சித்தர்களின் தலையாய நோக்கமாகும். பக்தி நெறியைக் காட்டிலும் சித்தர் நெறியில் இவர்களின் நோக்கம், எண்ணம், முழுவதும் சமுதாய முன்னேற்றம் கருதியே அமைகின்றது என்பதை நாம் உணரலாம்.

# 44. திருமந்திரத்தில் ஒளி பற்றிய செய்திகள்

முனைவர் அர. செயச்சந்திரன், சென்னை.

ஒளி என்பது உலக இயக்கத்தின் அடிப்படையாக அமைகிறது. காலையில் ஞாயிற்று ஒளியும் மாலையில் நிலவின் ஒளியும் இடையில் சமைத்தல் முதலியவற்றிக்கு நெருப்பை உருவாக்கும்போது உண்டாகும் நெருப்பின் ஒளியும் மனிதன் நீண்டகாலமாகக் கண்டுவரும் ஒளி வடிவங்களாகும். இதனை முன்னோர் முச்சுடர் என்கின்றனர். சங்க நூல்களில் சொல்லப்படும் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்பனவற்றை ஒளியின் வடிவங்களே என்பர். மக்கள் விளக்கொளி ஏற்றி வீட்டில் வாழ்தலும் இறைவனை வழிபடுதலும் தொடர்ச்சியான மரபுகள்.

மனித உடலில் ஒளி நிறைந்துள்ளது. அது கண்வழி வெளிப்படு வதால் பொருள்களைக் காணமுடிகிறது. யோகநிலையில் உள்ளவர்கள் கண்ணை மூடிய நிலையில் கற்பனைத் திறனால் எண்ணக் கருவியின் மூலம் இயற்கைப் பேரொளியைக் காண்கின்றனர். இந்தப் பேரொளி யினையே தொல்காப்பியர் சேயோன் என்றார்.

சைவச்சான்றோர் இந்தப் பேரொளிப் பிழம்பினையே சிவபெருமான் என்றனர். வள்ளலார் அன் விகுதியைப் பயன்படுத்தி மனிதனாக கூறாமல் அருள் பெரும் ஜோதி என்று கூறினார். இந்த அடிப்படையில் ஒளி, ஜோதி, விளக்கு, எனும் பொருண்மைகளில் திருமூலர் பாடிய பாடல் களின் கருத்துக்களைத் தொகுத்து நோக்கலாம்.

**ஒளியும் நினைவும்**

திருவருள் என்னும் தெளிந்த ஞானம் இல்லாதவர்க்கு நினைவு மறதி எனும் இரண்டு நிலைகளும் மாறி மாறி அமையும். அல்லவற்றை நினைத்தலும் நல்லவற்றை மறத்தலுமாகியநிலை நீடிக்கும். பிறவித் துன்பத்துக்குக் கூட நினைப்பும் மறப்புமே காரணமென்று வள்ளலார் கூறுகிறார். ஞானம் என்னும் ஒளியாகிய நினைவு மட்டுமே மனதில் இருந்தால் மனிதன் தன் கற்பனைத் திறத்தால் இறை என்னும் ஒளி நிலையுடன் இணையலாம். இதன் அடிப்படையிலேயே

"ஒளியும் இருளும் ஒருகாலுந் தீரா"

எனக் கூறி ஞானநிலையை அடைந்தவர் ஒளி, இருள் என்னும் இருமை நிலைகளைக் கடந்து செல்வர். சிவ நினைவு மேலிட பிற நினைவுகள் அறிவுக்கும் தெரியாமல் தாமாகவே நீங்கிவிடும்.

## ஒளியே எல்லாம் ஆனது

ஒளி நிறையப் பெற்ற உள்ளம் வேண்டிய நெறிகளை இயல்பாகப் பற்றி மேற்செல்லும். முடிவாக அந்தக் கரணங்கள் எனப்படும் மனம், சித்தம், புத்தி, அகங்காரம், முதலிய அனைத்தையும் ஆன்மாவில் கட்டி சிவனை நினைக்கும் நிலை உருவாகும். ஒளி நெறியில் தொடர்ந்து நிலைத்திட, பின்வருவனவற்றைப் பின்பற்ற வேண்டுமெனத் திருமூலர் கூறுகிறார்.

அவை, அறம், பொருள், இன்பம், வீடு, சீலம்; நோன்பு, செறிவு, அறிவு என்பன. இக்கருத்துக்களை இமயம், நியமம் எனும் தலைப்புகளில் விரிவாகக் கூறுகிறார். இந்த ஒளி அனுபவம் பெற்றவர்க்கு அறுபத்து நான்கு கலைகளும் எளிதாகக் கைகூடும். ஒளியின்முன் ஆண் பெண் வேறுபாடு கிடையாது. இருபாலரும் ஞான ஒளியினை உணரவே திருமூலர் ஒளியினை ஒளிக்கும் பராசக்தி எனக் குறிப்பிடுகின்றார். இந்த ஆற்றலின் மூலம் எல்லாப் பொருள்களின் தன்மையினையும் உணரலாம். முடிவாக சிவப்பரம்பொருளுடன் இணைக்கவல்ல ஆற்றல் இந்த ஒளிக்கு உண்டு.

## ஒளியும் அருள் அறிவும்

'ஒளியாம் புரமும் உளதாம் பரமும்' எனத் தொடங்கும் பாட்டில் இறைவன் அறிவுப் பேரொளியாய் நின்று அருள்பவன் எனத் திருமூலர் குறிப்பிடுகின்றார். திருவள்ளுவரும் இறைவனைத் தூய ஒளிவடிவான அறிவினன் என்று குறிப்பிடுகின்றார்.

வள்ளலார் இறைவனை 13-வகைப்பட்ட அறிவு வடிவாக விளங்கு பவன் என்கிறார். அவை இந்திரிய அறிவு, கரண அறிவு, சீவ அறிவு, ஆன்ம அறிவு, சுவையறிவு, ஒளியறிவு, ஒலியறிவு, உற்றறிவு, காட்சியறிவு, அருள் அறிவு, கலையறிவு, பகுத்தறிவு, பேரறிவு இவற்றில் அருள் அறிவு அருட்பெரும் ஜோதி அனுபவத்தின் முடிவான நிலையை உணர உதவும். பேரரறிவு என்பதே அருட்பெரும் ஜோதி அனுபவத்தின் வடிவமாக அறிய உதவும் இதனைப் பேருபதேசத்தில் வள்ளலார் தெரிவிக்கின்றார்.

## ஒளியும் பயிற்சியும்

ஒளி நெறியை அடைந்திடப் பயிற்சி தேவை. திருமூலர் கூறும் பயிற்சி முறை மூச்சுப் பயிற்சி முறை சார்ந்தது. இதற்குப் பிராணாயாமம் என்று பெயர். இவ்வாறு கூறியமையால் அட்டாங்க யோகத்தில் முன்னும் பின்னும் கூறப் பட்டுள்ள யோகநெறியின் படிநிலைகளை முறைப்படி கடந்து செல்ல வேண்டும். முடிவான நிலையில் சிவானுபவம் என்னும் ஒளிநெறி கைகூடும்.

மூலாதாரம் முதல் ஆயிரத்து எட்டிதழ்க் கமலம்வரை ஓம் என்னும் மந்திரத்தால் திருவருள் நினைவுடன் உள்ளொளியை எழுப்பி முன் சொன்ன நிலையை அடைய வேண்டும்.

**ஒளி விளங்கும் இடம்**

மனிதனின் உடலெங்கும் ஒளி பரவி உள்ளது. இதனை ஒளிவட்டம் என்பர். ஒருவரது முகத்தில் வெளிப்படும் ஒளியைக் கொண்டே அவரது பண்பை அறிலாம். "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" எனும் பழமொழியும்,

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்"

எனும் குறளும் இங்கு கருதத்தக்கன.

ஒளியானது உடலெங்கும் இருப்பினும் புருவமத்தியில் தான் அதனைக் காண இயலும். இதனைத் திருமூலர் முதல் வள்ளலார் வரை அனைத்து ஞானிகளும் கூறியுள்ளனர்.

"நெற்றிக்கு நேரே புருவத்து இடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம்பலம் என்று சேர்ந்து கொண்டேனே"

என்கிறார் திருமூலர். இப்பாடல் மூலம் ஒளியானது புருவத்து இடை வெளியில் உள்ளது என்றும் அது உற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரமாய் உள்ளது என்றும் அதுவே சிற்றம்பலம் என்றும் அறிய முடிகிறது.

வள்ளலாரும் புருவமத்தியைச் சிற்சபை என்கிறார். அதனுள் விளங்கும் உள்ளொளியை நடராசர் என்றும் அதன் அசைவை நடனம் என்றும் கூறுகிறார்.

"மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப் பொன் மன்றில் ஆடும் திருக்கூத்தை
பேணித்தொழுது இன்பப் பேறு பெற்றாரே"

என்பார் திருமூலர்.

இப்பாடலில் மரகத மாடம் புருவ மத்தியையும், மரகதச் சோதி உள்ளொளியையும் ஆணிப்பொன் ஒன்றில் ஆடும் திருக்கூத்து உள்ளொயின் அசைவையும் குறிக்கிறது.

இதுவரை திருமூலர் கூறியுள்ள ஒளிநெறிச் செய்திகள் சிலவற்றைத் தொகுத்து நோக்கினோம். ஒளியின் இயக்கம், பயன், நிறைவு மற்றும் இன்பம் முதலியவை பற்றிய செய்திகளைக் கண்டோம். திருமூலரின் ஒளிநெறிச் செய்திகள் தனி ஆய்விற்கும் விரிவான ஒப்பீட்டு ஆய்விற்கும் உரியன.

# 45. திருமூலர் பார்வையில் சிவலிங்க வழிபாடு

முனைவர் ப. ஞானம், சிதம்பரம்.

சிவலிங்க வழிபாடு உலகம் தழுவிய நிலையில் மிகவும் தொன்மையான வழிபாடாகக் கருதப்படுகிறது. ஞாயிறு, திங்கள், வின்மீன்கள் போன்ற ஒளியுடைய இயற்கை ஆற்றல்களை வழிபட்டநிலை தோற்றுவாய் என்றால் அதன் முதிர்ந்தநிலை சிவலிங்க வழிபாடு எனலாம். தமிழகத்தில் தோன்றிய சமய அருட்செல்வர் எல்லாம் சோதி வழிபாடு என்ற நிலையில் இதனைப் போற்றி வந்துள்ளனர்.

சிவலிங்கம் சிவஜோதி அதைச் சூழ்ந்துள்ள ஆவுடையார் அருட் சோதி; அதனைத்தாங்கும் பீடம் ஆன்மசோதி; எனவே, உடம்பில் உள்ள உயிர் சிவலிங்கம் என்று உணர்க. சிவலிங்க வழிபாட்டின் சூட்சமம் சோதி வழிபாடு ஆகும் என்று திருமுருக கிருபானந்த வாரியார் கூறும் கருத்தும் மனங்கொள்ளத் தக்கதாகும். (திருக்கோயில், மார்ச், 1977)

இத்தகைய சோதி வழிபாட்டினை ஆன்மாக்களின் பக்குவ நிலை களுக்கு ஏற்பவே அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆத்ம லிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் என ஆறு இலிங்க வழிபாடாகக் பகுத்துக் காட்டியுள்ளார் திருமூலர்.

**அண்டலிங்கம்**

உலகமும் அதைச் சூழ்ந்துள்ள விளங்கும் அண்டசராசரங்கள் அனைத்தையும் சிவ வடிவமாகக் கொண்டு வழிபடுவது ஒரு முறையாகும். இறைவனது திருவடிகளைக் கீழுலகமாகவும் திருமுடியை ஆகாயத்துக்கும் அப்பாற்பட்டதாகவும் திருமேனியை ஆகாயமாகவும் கொள்ளுதல் சைவ மரபு. இத்தொன்று தொட்ட நம்பிக்கைகளின் அடிப்படையிலேயே சிவபெருமானின் திருக்கோலம் உலகமே உருவமாகக் கொண்டதாகும் என்பார் திருமூலர்.

''உலகி லெடுத்தது சத்தி முதலா
வுலகி லெடுத்தது சத்தி வடிவா
யுலகி லெடுத்தது சத்தி குணமா
யூலக மெடுத்த சதாசிவன் னானே'' (திருமந்திரம். 1713)

சத்தியே பிரபஞ்சமாக விரிதலால் அது சிவத்திற்கு வடிவமாயிற்று என்பார். நிலம் - ஆவுடையார்; மேகம் - கங்கை நீர்; ஆகாயம் - இலிங்கம்;

நட்சத்திரங்கள் - ஆகாய இலிங்கத்தின் விளங்கும் மாலை; கடல் - திருமஞ்சனச்சாலை; எட்டுத்திக்கள் - திரு ஆடை,

ஆகிய இவைகள் அண்ட லிங்கத்தின் அடையாளமாகும் என்ற கருத்தும் எண்ணத் தக்கதாகும். (திருமந்திரம் 1725)

**பிண்ட லிங்கம்**

"உடம்பினை முன்னம் இழுக்(கு) என்(று) இருந்தேன்
உடம்பினுக்(கு) உள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பு (உள்)ளே உத்தமன் கோயில் கொண்டா(ன்) என்று
உடம்பின் யான் இருந்(து) ஓம்புகிறேனே" (திருமந்திரம் - 725)

என்று திருமூலர் உடலை இறைவன் கோயில் கொண்டுறையும் ஆலயமாகவே எண்ணுதல் நோக்கத்தக்கதாகும். திருமந்திரத்தில் பல இடங்களிலும் இக்கருத்தையே முன் வைக்கிறார் திருமூலர்.

மக்களின் சரீர அமைப்பானது சிவலிங்கமாகவே அமைந்துள்ளது. உடல் இயக்கம் இறைவனின் திருக்கூத்தாகவே உள்ளது. மானிடயாக்கை ஐம் பூதச் சேர்க்கையால் ஆனதாகும். இறந்தவர்கள் வினைப்பயனுக்கு ஏற்பவே மீண்டும் மீண்டும் பிறக்கின்றனர். உடலை வழியாகக் கொண்ட இறைவன் உள்ளிருந்து அருள் புரிகின்றான். கன்றினை யூட்டக் கருதி தாய் வீடு தேடி வந்தது போல, அன்பினை வாயிலாகக் கொண்டே சிவமாக்கி ஆண்டருளுகின்றான்.

நாடிகள் பத்தினையும் தூய்மை செய்து கொண்டு புலன்வழி சேராமல் இறைவனை வழிபட்டால் அந்நாடிகளை இடமாகக் கொண்டே அருள் புரிவான் என்பார் திருமூலர். (திருமந்திரம். 1726 - 1729)

**சதாசிவ லிங்கம்**

"தத்துவ மெல்லாஞ் சகலமு மாய்நிற்குந்
தத்துவ மாகும் சதாசிவன் றானே" (திருமந்திரம். 18733)

என்பார் திருமூலர்.

இலிங்கத்தின் அடிப்பீடம் பிரணவ உருவமாகும். இலிங்கத்தின் கண்டப் பகுதி அதோமுகம்; பிரணவ எழுத்துக்களின் மகாரத்தைக் குறிக்கும் இலிங்கத்தின் நடுவட்டம் உகாரத்தைக் குறிக்கும்; மேல் இலிங்க பாகம் அகாரத்தைக் குறிக்கும். இவையே சதாசிவ லிங்கம் என்று கூறுகிறது திருமந்திரம். (திருமந்திரம். 1730 - 1752)

எல்லாத் தத்துவங்களும் சதாசிவத்தின் கலப்பால் இயங்குகின்றன. ஆதலால் தத்துவங்கள் அனைத்துமே சதாசிவம் என்று அறிந்து கொண்டு

வணங்கித் துதித்தல் வேண்டும். இவ்வாறு வழிபடும் போதும் மனதின் மயக்கம் அகன்று திருவடி ஞானத் தெளிவு பிறக்கும் என்று மனித சமுதாயத்திற்கு வழிகாட்டுகிறார் திருமூலர்.

**ஆத்மலிங்கம்**

உயிர்களின் நெஞ்சத்தில் இறைவன் குடிகொண்டு வாழும்போது அவ்வின்பப் பெருவாழ்வில் உயிரானது சிவனையே நாடிநிற்கும். உயிர்களின் நலனுக்காகவே இறைவன் தன் திருவருளால் கட்புலனாகும் படி தோன்றியருள்கின்றான். (திருமந்திரம் - 1760). இறைவனின் கருணை உள்ளத்தின் வெளிப்பாடே ஆத்மலிங்கம் எனலாம்.

''பராபர னெந்தை பனிமதி சூடி
தராபரன் றன்னடி யார்மனக் கோயிற்
சிராபரன் றேவர்கள் சென்னியில் தன்னு
பராமரன் மன்னி மனத்துறைந்த தானே''

என்பார் திருமூலர்.

**ஞானலிங்கம்**

சிவத்தின் உண்மை நிலையை மாதொருபாகனாகக் கண்ட அடியார் களது இருதயத்தே சிவன் எழுந்தருளியிருப்பான். சிவமும் சத்தியும் ஒன்றாகக் கலந்து கூடிய சேர்க்கையே ஞானமுண்டாகும் இடமாகும். அவ்விருவரும் கூடியிருக்கும் சிறப்பான இடம் கொப்புழாகிய சுவாதிட்டான மாகும். பரமன் பராசக்தியை உடன் வைத்து மகிழ்ந்திருக்கும் இடமே நெஞ்சமாகிய அநாகதத் தானமாகும். சக்தியும் சிவமும் இன்றி எப் பொருளும் தோன்றாது. சக்தியே எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாகும். இதுவே ஞானலிங்கம் என்பார். சிவம், சக்தி இவற்றில் எதனை ஆராதித்தாலும் அது சிவ வணக்கமே ஆகும் என்பார்.

''சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமாஞ் சிவஞ்சத்தி யுமாகும்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்தி தானெற்றுஞ் சமைந்துரு வாகுமே'' (திருமந்திரம் - 1772)

**சிவலிங்கம்**

''வரைத்து வலஞ்செயு மாறிங்கொன் றுண்டு
நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி
யுரைத்தவ னாம முணரவல் லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே'' (திருமந்திரம். 1774)

இறைவனுக்கு திருமஞ்சன நீராட்டி, மலர்களால் அருட்சித்து, அவனது நாமங்களைப் போற்றி வழிபட்டு, திருவடியை உள்ளன்போடு உணர்ந்து

வழிபட வேண்டும். இத்தகைய ஒரு குறியின் கண்வைத்து வழிபடும் சிவலிங்க வரிபாட்டிற்கு இறைவன் மகிழ்ந்து அருள் புரிவான் என்பார் திருமூலர்.

திருமந்திரத்தில் கூறப்பட்ட அண்டலிங்கம். பிண்டலிங்கம், சதாசிவ லிங்கம், ஆத்மலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் ஆகிய இலிங்க வழிபாடுகள் ஆன்மாக்களின் பரிபக்குவ நிலைகளுக்கு ஏற்பவே கொள்ளப் படும் வழிபாட்டு முறைகளாகும் எனக்கருதலாம். சரியை கிரியை பற்றியவர்க்கு அண்டலிங்கம், சதா சிவலிங்கம் விளக்கப்பட்டுள்ளன. பிண்டலிங்கம் யோகிகளுக்கு கூறப்பட்டுள்ளது. ஆத்மலிங்கம், ஞானலிங்கம் சிவலிங்கம் ஞானயோகத்தினருக்கு கூறப்பட்டுள்ளதாகவும் கூறுவதுண்டு (சிவபோகி மா. இரத்தினசபாபதி, திருக்கோயில் நவம்பர், 1972, பக். 675.)

இக்கருத்துக்களால் சிவமே ஆன்மாக்களின் பரிபக்குவ நிலைகளுக் கேற்ப தியானத்திற்கும் பூசனைக்கும் காரணமாக விளங்குவதை அறிய முடிகின்றது. ஆன்மாக்களை உய்விக்க வந்த இறைக்குறியீடு சிவபரம் பொருள் எனத் தெளிலாம்.

# 46. பல்லாண்டு தரும் புராணக் கருத்துக்கள்

முனைவர் பி. தர்மராஜ், திருவையாறு.

உலகில் இறைவனை அடைய மூன்று வழிகள் உள்ளன என்பதை,




என்ற வரைபடம் சுட்டியுள்ளது

எல்லாச் செயல்களையும் தெய்வத்திற்கு அர்ப்பணமாகச் செய்வதால் செய்பவருக்கு ஞானம் ஏற்படுகின்றது. செயல்களுக்கான பலன்களை எதிர்நோக்கும் விருப்பத்தைத் துறந்துவிடுவதால் மன அமைதி கிட்டு கின்றது. தியானம் உள்ளத்தின் வலிமையைப் பெருக்குவதோடு அமைதியை யும் தருகின்றது. திருமுறை அடியவர்களின் வாழ்க்கை முறைகள் மனத் தூய்மையை அடியொற்றி அமைந்துள்ளன.

ஆனந்தம் எங்கும் நிறைந்துள்ளது. இறைவனை 'ஆனந்தன்' என்ற சொல்லால் அடியவர்கள் குறிப்பிடுவது மரபு. பற்றாலும், அகங்காரத்தாலும் ஆனந்தத்தை அனுபவிக்க முடியாமல் போய்விடுகின்றது. மனத்தூய்மை யினால் அன்பைப் பெருக்கமுடியும். உண்மை அன்பினால் ஆனந்த வடிவான இறைவனை அடையமுடியும் என்பது திருமுறை அடியார் களின் உட்கிடக்கையாகும்.

மனிதனாகப் பிறந்தவன், தன்னைச் சார்ந்தவருக்கு வழிகாட்டி, தன்னூருக்கு வழிகாட்டி, உலகிற்கு வழிகாட்டும் நிலையை அடைதல் வேண்டும்.

Begin the lamp
Develop the street light
Growth the polestar

என்று வாழ்வின் நிலைகளைக் கூறுதல் சிறப்புடைத்து.

இறைவன் திருவடியை உடலும், உயிரும் ஓம்பி வாழ்வதற்கு வழிபாட்டு நூல்கள் அமைகின்றன. வழிபாட்டு முறைகளை இலக்கண வகையால் உணர்த்த வழிபாட்டு இலக்கண நூல்கள் தோன்றின. வழி

பாட்டால் பெறப்படும் மெய்யுணர்வுகள் நூல்வடிவாயின. வழிபாட்டு முறைகளை விளக்க திருமுறைகள் எழுந்தன.

இன்றைய நாகரிக உலகில் செல்வம் பெருகி இருந்தபோதிலும் அமைதியைக் காணமுடிவதில்லை. இதற்குக்காரணம் மன ஓட்டத்தைச் சரிசெய்யாததேயாகும். மன ஓட்டத்தைச் சரிசெய்யும் வழிமுறைகளை இயற்கையோடு இயைத்துத் திருமுறைகள் சொல்லுகின்றன.

இறைவன் புகழை, பெருமையை, அன்பால், சிந்தனை செய்து துதிபாடி இறைவனுடைய நாமத்தைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதன் மூலம் இறையருளைப் பெறமுடியும் என்பது திருமுறை அருளாளர் களின் முடிபாகும்.

ஆற்றல் பொருந்திய இறைவனின் கருணையைப் பாடுவதால் மனம் ஆணவத்தின் பிடியிலிருந்து நழுவுகிறது. கன்ம வினையின் வலிமை குறைகின்றது. மாயையின் செயற்பாடு குறைகின்றது. மும்மலச் சேட்டைகள் ஒடுங்குகின்றபோது பேரானந்தம் கிட்டுகின்றது.

மொழிக்கும் மனிதரின் மனத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. மக்களின் கருத்துக்கள் விரைந்து மாறுங்காலத்தில் மொழியும் அதற்கேற்ப மாறுகின்றது.

மொழியின் முதிர்ந்த நிலையில் இலக்கியங்கள் தோன்றுகின்றன. தன்னனுபவத்தைக் கூறல், மனிதனின் பொது அனுபவத்தைக் கூறுவது, தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பைக் கூறுவது, இயற்கையோடு மனிதன் கொண்ட உணர்வினைக் கூறுவது, உலகில் இல்லாப் புதுமைகளைக் கற்பனையால் கண்ட அனுபவத்தைக் கூறுவது என்று இலக்கியத் தோற்றத்தை வகைப்படுத்துவர்.

தமிழ் இலக்கிய வரலாற்றினை,

கி.மு. 500 முதல் கி.பி.100 வரை சங்க காலம்

கி.பி.100 முதல் கி.பி. 600 வரை நீதி இலக்கியக் காலம்

கி.பி. 600 முதல் கி.பி. 900 வரை பக்தி இலக்கியக் காலம்

கி.பி. 900 முதல் கி.பி.1200 வரை காப்பியக் காலம்

கி.பி.1200 முதல் கி.பி. 1300 வரை உரைநடை இலக்கிய காலம்

கி.பி. 1500 முதல் கி.பி. 1800 வரை புராண இலக்கிய காலம்

என்ற வரைபடம் சுட்டியுள்ளது.

கி.பி. 600 முதல் கி.பி. 900 வரை வளர்ந்த பக்தி இலக்கிய வரலாற்றின் தொடர்ச்சியைத் திருமுறைப்பாடல்களாகக் கருத இடமுண்டு.

தமிழ் இலக்கிய அமைவுகளை, இயற்கை நெறிக்காலம், சமய நெறிக்காலம், தத்துவ நெறிக்காலம், அறிவியல் நெறிக்காலம் என்றும் பிரிப்பது குறிப்பிடத்தக்கது.

சங்க காலத்தை இயற்கை நெறிக் காலமென்றும், சமயச் செல்வாக்குக் காலத்தை அறிநெறி காலமென்றும் சைவ வைணவ எழுச்சிக் காலத்தைச் சமயநெறிக் காலமென்றும், சைவசித்தாந்த தோற்ற காலத்தைத் தத்துவக் காலமென்றும், தற்காலத்தை அறிவியல் நெறிக்காலம் என்றும் கூறும் மரபு நினைக்கத்தக்கது.

ஆய்வு நோக்கில், திருமுறைகளை மிறைக்கவி என்னும் பக்தி இலக்கிய வகையில் அடக்கிக் கூறுதல் சிறப்புடைத்து. பன்னிரண்டு திருமுறைகளில் நாற்பத்து மூன்று புதிய இலக்கிய வகைகள் அமைந்துள்ளன.

பக்தி இலக்கிய காலத்தில் தமிழர் மொழியோடு சமயத்தையும் காக்கப் போராடினர். பிற சமயத்தோடு போராடிய தமிழ் அருளாளர்கள், கவியாற்றலாலும், இசைப் புலமையாலும், அருட்திறத்தாலும் புறச்சமயங் களின் முனைப்பை அடக்கினர்.

அறநெறிக்காலத்தைத் தொடர்ந்து தோத்திரப் பாடல்கள் தோன்றின.

திருமுறைப்பாடல்கள் காரைக்காலம்மையார் காலத்திலிருந்து தொடங்கின. கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை உள்ள மக்களின் வாழ்வியல் குறிப்புக்கள் பன்னிரு திருமுறைகளில் அமைந்துள்ளன.

திருஞானசம்பந்தர் முதல் சேக்கிழார் வரையுள்ள இருபத்தேழு அருளாளர்களின் எண்ண வெளிப்பாட்டுக் குவியல்கள் திருமுறைகளாகும்.

திருமுறை என்னும் சொல் பழங்கால வழக்கு, திருமூலரின் 213-ஆம் பாடலில் திருமுறை என்னும் சொல்லாட்சி அமைந்துள்ளது.

திருமுறைகள் சைவ சமயத்திற்கு முறையான செல்வமாகும்.

திருமுறைகளின் எண்ணிக்கை பன்னிரண்டாகும். திருமுறைகளின் வரிசைகள் ஞானத்தில் தொடங்கி தொண்டில் முடிகின்றது.

திருமுறை 1-7 திருமாமறை

திருமுறை 8 - மறைமுடிவு, திருவடிப்பேறு

திருமுறை 10 - தனித்தமிழ் ஆகமம்

திருமுறை 9 - 11 தனித்தமிழ் மறைமுறை

பன்னிரு திருமுறைகளில் ஒன்பதும், பதினொன்றும் தொகுப்பு நூல்களாக அமைந்துள்ளன.

சங்க இலக்கியங்கள் எல்லா இடங்களிலும் பரவவில்லை. திருமுறைகள் மக்கள் இலக்கியமாக விளங்கி எல்லா இடங்களிலும் பரவின.

சைவ சமயத்தின் பெருமையினை விளக்க திருமுற்றைகள் தோற்றம் கண்டன.

ஆரியர் வருகைக்கு முன்பே சிவலிங்க வழிபாடு ஏற்பட்டது. இந்திய சமயங்களில் தலைசிறந்தது சைவ சமயம்.

சிந்துவெளி ஆராய்ச்சியாளர் ஜானமார்ஷல் சைவ சமயம் கற்காலத்திற்கும் முற்பட்டது என்று குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.

சிவ என்ற சொல் எல்லா மந்திரங்களையும் விட சிறந்தது.

ஒன்பதாம் திருமுறை திருமாளிகைத் தேவர் முதல் சேதிராயர் ஈறாக உள்ள அருளாளர்களின் தொகுப்பில் அமைந்த இருபத்தெட்டுத் திருப்பதிகங்களைத் திருவிசைப்பா என்றும், சேந்தனார் பாடிய பல்லாண்டிசையினைத் திருப்பல்லாண்டு என்று கூறுதல் மரபு. திருவிசைப்பாமாலை என்றும் கூறுவர்.

இத்திருமுறையுள் 29 திருப்பதிகங்களும் 301 பாடல்களும் உள்ளன.

திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காட நம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள் திருவாலியமுதா, புருடோத்தமர், சேதிராயர் ஆகிய அருளாளர்களின் பாடல் தொகுப்பு ஒன்பதாம் திருமுறையாகத் தொகுக்கப்பட்டுள்ளது.

புராணம் என்ற சொல்லிற்குப் பழமை என்று பொருள். சிவனைப் புகழ்வதற்காக சிவபுராணம், லிங்கபுராணம், கந்தபுராணம், மார்க்கண்டேய புராணம், அக்னிபுராணம், கர்மபுராணம் ஆகியவை அமைந்துள்ளன.

திருவெண்காட்டிற்கு அருகில் உள்ள நாங்கூரில் சேந்தனார் தோன்றினார். பட்டினத்தடிகளின் தலைமைக்கணக்கர். தில்லையம்பதியில் உள்ள ஓடாத தேரைப் பல்லாண்டு பாடி இயங்கச் செய்தவர். திருவிடைக் கழியில் மடம் அமைத்து தைப்பூச நன்னாளில் இறையடி சேர்ந்தவர். கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதியும் 10-ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் இவர் காலம். திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி ஆகிய மூத்தலங்களுக்கும் திருவிசைப்பா பதிகங்களையும், தில்லையம்பதிக்குத் திருப்பல்லாண்டும் பாடியவர். இவர் பாடிய திருப்பல்லாண்டு பாடல் களின் எண்ணிக்கை பதின்மூன்று.

ஒன்பதாம் திருமுறையுள் இறைவனுக்குப் பல்லாண்டு பாடி புதுமைப்புரட்சி செய்தவர் சேந்தனார். திருப்பல்லாண்டு உணர்த்தும் புராணச் செய்திகளை இனிக்காணலாகும்.

**மாலயன் அறியாச்சிவன்**

மாலும், அயனும் சிவபெருமானின் அழல் உருவில் அடிமுடி தேடி கண்டுபிடிக்க முடியாது திகைத்தனர். இருவரின் ஆணவம் அழிக்க இறைவன் நடத்திய திருவிளையாடல்.

**மாலுக்குச் சக்கரம் அருளியது**

பூசையின்போது ஏற்பட்ட இடையூறைச் சரிசெய்ய திருமால் தன் கண்ணைத் தியாகம் செய்தபோது இறைவன் சுதர்சன சக்கரத்தை நல்கினார் என்பதை,

மாலுக்குச் சக்கரம் அன்றருள்
செய்தவர் (சேந்தனார் பா.9)

என்ற பாடலடிகள் குறிப்பிட்டுள்ளது.

**பாற்கடலைத் தந்தது**

வியாக்கிரபாத முனிவரின் மகன் உபமன்யு முனிவரின் பசி நீக்க பாற்கடலையே இறைவன் நல்கியதை,

பாலுகன் பாலகன் வேண்டி
அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான் (சேந்தனார், பா.9)

என்ற பாடலடிகள் விளக்கியுள்ளன.

**சண்டீசபதம் அளித்தல்**

சிவபூசைக்கு இடையூறு செய்த தந்தையின் கால்களைச் சிதைத்த சண்டேசுவரருக்கு இறைவன் சண்டேசபதம் வழங்கியதை.

தாதையைத் தாளற வீசிய
சண்டிக்கு இவ்வண்டத்தோடும் உடனே
பூதலத்தோரும் வணங்கப் பொற்
கோயிலும் போனகமும் அருளி (சேந்தனார், பா.10)

என்ற பாடலடிகள் விளக்கியுள்ளது.

சைவ அடியார்கள் சிவபெருமானின் பெருமைகளைச் சுட்ட, புராணக் கருத்துக்களைத் துணையாகக் கொண்டு பாடல்கள் புனைந்துள்ளனர். இறைவனின் வலிமையைக் குறிப்பிடும் புராணங்கள், இறைவனின் கருணைத் திறத்தையும் சுட்டத் தவறவில்லை. ஒன்பதாம் திருமுறை ஆசிரியர்கள் புராணக் கருத்துக்களை இணைத்துள்ள திறம் நினைக்கத்தக்கது.

# 47. திருமூலர் காட்டும் திருக்காட்சி

திரு. ஆர். தனமணி, புதுவை.

இறை அருளாளர்கள் நமக்கு வழங்கிச் சென்றுள்ள இணை இல்லாச் செல்வங்கள் பன்னிரு திருமுறைகள். இவைகள் நாளும் ஓதி நற்பயன் அடைவதோடு வீடுபேற்றிற்கும் வழித் துணையாய் அமைவன - வழி பாட்டிற்கு உரியன. இந்த பன்னிரு திருமுறைகளில் உபதேசங்களாக - அருள் மொழிகளாக பரம்பொருளின் பேராற்றலை பரப்புவதாக - உலகியலை உணர்த்துவதாக - இம்மை மறுமையின் இலக்கணத்தை இயம்புவதாக - சித்தாந்தத் தெளிவினை சிந்திக்க வைப்பதாக ஆடல் வல்லானின் அற்புதங்கள் ஆய்வுக்கு அப்பாற்பட்டது என உணர்த்துவதாக அமைந்துள்ளதும் மந்திரம் என மேலோர்களால் ஏற்கப்பட்டதுமாகிய 'திருமந்திரம்' என்னும் 10-ம் திருமுறை நூலாகும்.

காவியங்களிலும், காப்பியங்களில், வர்ணனை இலக்கியங்களில் ஆயிரக்கணக்கான பாடல்கள் இடம் பெறுவதில் ஆச்சரியமேதுமில்லை. அவைகள் அப்படி இருந்தால்தான் பெருங்காப்பியங்களாகும். ஆனால் முழுக்க முழுக்க மேலே கூறப்பட்ட உலகியல், இறையியல் இவற்றை மட்டுமே உபதேச மொழிகளாகக் கூறுவதற்கு ஆயிரக்கணக்கான பாக்கள் தேவையா? தேவைதான். நன்கு தேர்ந்தெடுக்கப்பட்ட முத்துக்களைக் கோர்த்தார் போல 3047 பாமலர்களால் தொடுக்கப்பட்டுள்ளது திருமந்திரம். இவற்றை நன்கு புரிந்தவர்கள் - உணர்ந்தவர்கள் - அனுபவித்தவர்கள் இருவர் மட்டுமே என்பர் சான்றோர். ஒருவர் திருமூலர் மற்றொருவர் அவரை இயக்கிய அம்பலக் கூத்தன்.

பன்னிரு திருமுறைகளிலேயே 9, மற்றும் 10-ஆம் திருமுறையில் உள்ள அனைத்துப்பாடல்களும் ஏகாரத்திலேயே முடிவடையும் - 9-ம் திருமுறையில் "செங்கணா போற்றி...." என்னும் பாடல் தவிர, 9-ம் திருமுறையில் இடம்பெற்றுள்ள ஒன்பது ஆசிரியப் பெருமக்களும் பரம்பொருளாகிய சிவனை - தில்லை ஆடியை மட்டுமே குறிப்பிட்டு போற்றி இசைத்துள்ளனர். ஆனால் திருமந்திரத்தில் திருமூலர் உலகியல் மற்றும் அருளியலை விளக்கிக் கூறியுள்ளார். அவ்வாறு முதல் தந்திரம் தொடங்கி ஒன்பதாம் தந்திரம் முடிய மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழ்ப் பாமலர்களில் உலகியல் மற்றும் அருளியலுக்கு சுட்டிக்காட்டப் படாத செய்திகளே இல்லை எனலாம்.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்.....' என சமத்துவத்தை முதன் முதலில் உலகிற்கு உணர்த்தியவர் திருமூலரே. அன்பும் சிவமும் இரண்டில்லை எனத் தெளிந்தவர்கள் அன்பே சிவமாய் அமர்ந்திருப்பர் என்றும் உண்மையை நமக்குத் தெளிவுபடுத்துகிறார். ஒன்பதாம் தந்திரத்தில் சிவபெருமானைக் காணும் காட்சியினை நமக்கு விளக்கி வர்ணனையாக கூறும் பாங்கு மிகவும் போற்றுதலுக்கு உரியதாகும். அக்காட்சியினை நாம் காண்பதற்கு முன் வேறு இரு திருக்காட்சிகளை இங்கே காண்போம்.

பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமாள் நாவுக்கரசுப் பெருந்தகையின் வரலாற்றைக் கூறுங்கால் அமைந்துள்ளது முதல் நிகழ்வு. அப்பர் பெருமால் அகவை என்பதைக் கடந்த நிலையில் கயிலையில் நடம் புரியும் நம்பிரானைத் தரிசிக்க விழைவு பூண்டு அத்திசைநோக்கிச் செல்கிறார். கண்கள் இருண்டு உடல் தளர்வுற்று நடக்கவும் இயலாத நிலையில் உடலால் உளர்ந்து செல்ல இவ்வேதனையைத் தாளமாட்டாத தாயுள்ளம் கொண்ட அரனார் "அடியவரே இந்நிலையில் நீங்கள் கயிலை சென்று சிலம்பணியும் சேவடியாரின் திருநடனம் காண்பது அரிது" என இயம்புகிறார். அப்பரும் 'அரனாரின் திருக்காட்சியினைக் காணாது திரும்பேன்' என, அவரின் மன உறுதியினை உணர்ந்த இறையனார் அங்கிருந்த பொய்கையில் மூழ்கி ஐயாற்றில் வெளிப்படுவீராக அங்கே யாம் உமக்கு கயிலைக் காட்சியினை நல்குகிறோம்" என விளம்புகிறார். அவ்வாறே ஐயாறு திருத்தலத்தில் கயிலைக் காட்சியினை ஆளுடை அரசு பார்த்து அனுபவித்து மகிழ்கிறார். பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர் பொற்றாளினை இனிது கண்டு மகிழ்ந்து இன்புறுகின்றார்.

இன்னொரு நிகழ்வு சுந்தரர் பெருமானுக்காக நள்ளிரவில் பரவையாரிடம் ஆரூர் வீதியில் தூது சென்றது. இரண்டாவது முறை தூது செல்லுங்கால் பெருமான், தன் திருக்கோலமாகிய, கொன்றை வேணி விமலராக, அளவற்ற பூதகணங்கள் புடைசூழ, தேவர்களும், யோகியர்களும் உடன் செல்ல, முனிவர்கள் சூழ, பரவையார் இல்லம் நோக்கிச் சென்றார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

**"பாரிடத்தலைவர் முன்னம் பலகணநாதர் தேவர்**
**நேர்வுறு முனிவர் சித்தர் இயக்கர்கள் நிறைதலாலே**
**பேரருளாளர் எய்தப் பெற்ற மாளிகைதாம் தென்பால்**
**சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்றதன்றே"**

என வியந்து விளம்புகிறார். பரவை நாச்சியாரின் இல்லம் கயிலை போல் காட்சியளித்தது எனக் குறிப்பிடுகிறார். ஆயினும் இக்காட்சியினை சுந்தரர் பெருமான் கண்டதாகக் குறிப்பிடப்படவில்லை.

அப்பர் பெருமான், தன் விருப்பத்திற்கிணங்க கயிலாயக் காட்சியினை திருவையாற்றில் ஆதியும் அந்தமும் இல்லா அரனார் அருளால் கண்டு மகிழ்கிறார்.

ஆனால் திருவாரூரில் தோன்றிய கயிலைக் காட்சியினை சுந்தரர் பெருமான் பார்க்கவில்லை.

சரி, இப்போது திருமூலர் காட்டும் திருக்காட்சியினைக் காண்போம். இவர் சிந்தையில் ஞானக்கண் கொண்டு பார்த்து அதை நாமும் அனுபவிக்க வேண்டும் என்கின்ற பரந்த மனப்பான்மையுடன் நமக்கும் படம்பிடித்து நேர்முக வர்ணனையாகக் காட்டுகின்றார்.

சிந்தையது என்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையின் உள்ளே சிவனும் வெளிப்படும்
சிந்தை தெளிய தெளியவல்லார் கட்குச்
சிந்தையின் உள்ளே சிவனிருந்தானே (2853)

நம் சிந்தையிலேயே சிவனைக் காணலாம். சிந்தை சிவனையே துஞ்சலும் துஞ்சல் இலாதபோதுமாக எப்போதும் நினைந்திருந்தால் சிந்தை வேறு சிவன் வேறு என்றில்லாமல் சிந்தையே சிவமாகி விடும். சித்தம் சிவமயமாய் விளங்கும். அப்படியானால் சிவம் எப்படி இருக்கும்?

உருவன்றியே நின்று உருவம் புணர்க்கும்
கருவன்றியே நின்று தான் கருவாகும்
அருவன்றியே நின்ற மாயப்பிரானைக்
குருவன்றி யாவர்க்கும் கூட ஒண்ணாதே (2840)

சிவன் அருவமாக இருந்து கொண்டு, சகல பொருட்களிலும் இரண்டறக் கலந்து நின்று, தான் அனைத்திற்கும் மூல காரணமாக இருந்து கொண்டு குருவாகவும் தோன்றி விளங்கும் இந்த நிலையினை அடைவதற்கு நம் சிந்தை தெளிந்து ஞான நிலை அடைதல் வேண்டும். அந்நிலையில் ஆன்மா ஒளிமயமானது என குருநாதர் உணர்த்த சிவஞானம் தூண்டப் பெறும்.

விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி
விளக்கினுக்குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு
விளக்குடையான் கழல் மேவலும் ஆமே (2816)

மேற்கண்ட தெளிவினைப் பெற்ற பின் ஆன்மா எவ்வாறு இறைக் காட்சியினைக் காண்பது? அக்காட்சியில் என்ன தெரியும்? இதையும் திருமூலரே குறிப்பிடுகிறார்.

தன் கூத்தின் திறத்தால் இந்த அண்டங்களை எல்லாம் இயக்கிக் கொண்டிருக்கும் இறைவன் என்னென்ன கூத்துக்களை நிகழ்த்துகிறான்; எப்படி நிகழ்த்துகிறான் என்பதைக் காண்போம்.

எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்

எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவனருள் தன்விளை யாட்டதே (2722)

சிற்பரஞ்சோதி சிவானந்தக் கூத்தனைச்
சொற்பதமாம் அந்த சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனை பொன்தில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யார் அறிவாரே (2723)

சிவம் எங்கெல்லாம் பரவி உள்ளதோ அங்கெல்லாம் சக்தியும் நிறைந் திருக்கிறது. அவை ஆகாயம் முழுமையும் திருநட்டம் பயில்வன. அதனாலேயே ஐந்தொழில்கள் நிகழ்கின்றது. அவ்வாறு அமையும் கூத்துக்கள் சிவாநந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொன் தில்லைக் கூத்து, அற்புதக் கூத்து என சிவநடனம் ஐந்தாக அமையும்.

சிவானந்தத் தேனை பிலிற்றும் சீர்மிகு மந்திரப் பாக்களை இப்போது காண்போம்.

ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்தம் வாச்சியம்
ஆனந்தமாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந்தானுக்கே (2725)

பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட
மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட
தாகாண்ட ஐங்கரு மாத்தாண்ட தற்பரத்து
ஏகாந்த மாம்பிரமாண்டத்த என்பவே (2728)

வேதங்கள் ஆட மிகு ஆகமம் ஆடக்
கீதங்கள் ஆடக் கிளர் அண்டம் ஏழாடப்
பூதங்கள் ஆடப் புவனம் முழுதாட
நாதம் கொண்டாடினான் ஞானானந்தக் கூத்தே (2729)

ஆனந்தக் கூத்தினை இறைவன் நிகழ்த்தும் பொழுது வேதங்கள், ஆகமம், கீதங்கள், ஏழ் அண்டங்கள், பூதங்கள் மற்றும் முழு புவணமும் உடன் ஆடுவதாகக் குறிப்பிட்டு மகிழ்கிறார் திருமூல நாயனார்,

சக்திகள் ஐந்தும் சிவபேதம் தான் ஐந்தும்
முத்திகள் எட்டும் முதலாம் பதம் எட்டும்
சித்திகள் எட்டும் சிவபதம் தான் எட்டும்
சுத்திகள் எட்டு ஈசன் தொல்நடம் ஆடுமே (2737)

அண்டங்களுக்கு அப்பால் சதாசிவத்தில் உச்சியின் மேல் சக்தியின் இடத்தில் அட்டமூர்த்தியாம் இறைவன் கருணையே வடிவாக உமையம்மை காணும்படி திருக்கூத்தை நிகழ்த்துகிறார். இது அந்தரக் கூத்தாகும்.

காளியோடாடி கனகா சலத்தாடிக்
கூளியோடு ஆடி குவலயத்தே ஆடி
நீடிய நீர் தீ கால் நீள்வான் இடைஆடி
நாளுற் அம்பலத்தே ஆடும் நாதனே (2746)

சிரசின்மேல் பொன் ஒளியில் இறைவன் நடம்புரிவது - பொற்பதிக் கூத்து அல்லது பொன் அம்பலக் கூத்து எனப்படும். குவலயத்தில் ஐம் பூதங்களுடனும் கனகாசலத்தில் (பெற்பதியில்) காளியுடனும் இறைவன் ஆடும் இனிய கூத்தாகும். இக்கூத்தினை கண்ணுறும் மெய்யடியார் களின் நிலையாது எனில்...

விம்மும் வெருவும் விழும்எழும் மெய்சோரும்
தம்மையும் தாம் அறியார்கள் சதுர்கெடும்
செம்மை சிறந்த திரு அம்பலக் கூத்துள்
அம்மலர்ப் பொற்பாதத்து அன்பு வைப்பார்கட்கே (2744)

நான்காவதாக பொன்தில்லைக்கூத்து - நெற்றிக்கு நேரே விளங்கும் பொன் ஒளியில் ஆடும் கூத்து ஆகும்.

ஆதிபரன்ஆட அங்கைக் கனலாட
ஓதும் சடையாட உன்மத்த முற்றாடப்
பாதி மதியாடப் பாரண்ட மீதாட
நாதமோடாடினான் நாதாந்த நட்டமே (2751)

ஐந்தாவதாக வருவது அற்புதக் கூத்தாகும். சொல்ல இயலாத விவரிக்க முடியாத அளவிலா பரவசத்தை தோற்றுவிக்கக் கூடிய இறை அனுபவமே அற்புதக் கூத்தாகும். இதில் வரும் சில பாமலர்களை நுகர்வோம்.

கூத்தன் கலந்திடும் கோல்வளையாளொடும்
கூத்தன் கலந்திடும் கோதிலா ஆனந்தம்
கூத்தன் கலந்திடும் கோதிலா ஞானத்துக்
கூத்தனும் கூத்தியும் கூத்ததின் மேலே (2767)

புளிகண்டவர்க்குப் புனலூற மாபோல்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க்கு எல்லாம்
துளிக்கும் அருள்கண்ணீர் சோர் நெஞ்சுருக்கும்
ஒளிக்கும் ஆனந்தத்து அமுதூறும் உள்ளத்தே (2778)

புளியம் பழத்தை நினைத்த மாத்திரத்தில் நம் நாவில் நீர் சுரப்பதைப் போல இறைவன் அற்புதத் திருக் கூத்தை கண்டவர்கட்கு அருள் கண்ணீர் துளிக்கும், நெஞ்சு உருகும், உள்ளத்தின்கண் சிவானந்தப் பேரொளி பெருகி நிற்கும்.

ஒன்பதும்ஆட ஒருபதினாறு ஆட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட
இன்புறும் ஏழினும் ஏழு ஐம்பத்தாறு ஆட
அன்பதும் ஆடினார் ஆனந்தக் கூத்தே (2782)

தத்துவம் ஆடச் சதாசிவம் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசக்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தே (2789)

அரன் துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரன் உற்று அணைப்பில் அமரும் திரோதாயி
அரனடி என்றும் அனுக்கிரகம் தானே (2799)

தில்லை அம்பலவனின் தோற்றத் தத்துவம் விளக்கப்படுகிறது. ஆக்கல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்கள் தன் நடனத்தின் மூலம் நடராசப் பெருமான் நிகழ்த்துவதாக சொல்லப்படுகிறது.

அப்பர்பெருமான் கண்ட காட்சியும், சுந்தர் பெருமான் காணாத திருவாரூர்க் காட்சியும் தோன்றி மறைந்து விட்டன. ஆனால் திருமூலர் காட்டும் திருக்காட்சி என்றைக்கும் காணத்தக்கது காணலாம். அக் காட்சியினைக் காண நம்முடைய தகுதியினை அதற்கு ஏற்புடையதாக உயர்த்திக் கொள்வோம். திருமூலர்காட்டும் திருக்காட்சியினை கண்டு களிப்போம்.

# 48. சேதிராயர் திருவிசைப்பாவில் அகமரபுகள்

செல்வி கு. தனலெட்சுமி, மதுரை.

திருமுறைகள் தமிழர்க்குத் திருமறைகளாக விளங்குகின்றன. நம்பியாண்டார் நம்பி பன்னிரு திருமுறைகளாகத் தொகுத்தருளினார். இத்திருமுறைகளுள் ஒன்பதாம் திருமுறையான திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் ஒன்பதின்மரால் அருளப்பட்டது. அவற்றுள் சேதி நாட்டை ஆண்ட குறுநில மன்னரான சேதிராயர் பாடிய திருவிசைப்பாவில் அமைந்துள்ள அக மரபுகளை இக்கட்டுரை காண முற்படுகிறது.

## 1. சேதிராயரின் திருவிசைப்பா

சேதிராயர் சேதிநாட்டை ஆண்ட குறுநில மன்னர். இவர் மலையமான் களின் பரம்பரையினராக இருக்கக்கூடும் என்பர். அறுபத்து மூவரில் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் சேதிநாட்டரசரென்பது ''ஏயுமா றெழிற் சேதிபர் கோன் தில்லை; நாயனாரை நயந்துரை செய்தன'' (9-ஆம் திருமுறை) எனும் பாடல் அடிகளில் புலப்படுகின்றது.

இவர் ஒன்பதாம் திருமுறையில் ஒன்பதாமவராக அமைந்து 'கோயில்' எனும் தலைப்பில் ஒரு பதிகம் பாடியுள்ளார். இத்திருப்பதிகம் தில்லைப் பெருமான் மீது கொண்ட காதலால் மெலிகின்ற தலைவியின் ஆற்றாமையைச் செவிலி அப்பெருமானிடத்து விண்ணப்பிப்பதாக அமைந்துள்ளது. இப் பாடல்கள், தலைவி, செவிலி என்ற அகமாந்தர்களால் பின்னப்பட்டுள்ளன. ஆகையால் சேதிராயர் திருவிசைப்பாவில் அகமரபுகள் குறித்து இக் கட்டுரை ஆராய்கிறது.

## 2. அக மரபுகள்

ஒரு நாணயத்திற்கு இருபக்கங்கள் இருப்பதுபோல மனித வாழ்வும் அகம் புறம் ஆகிய இருநிலைகளில் அமைகின்றன. தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் இவ்விரு நிலைகளுக்கும் இலக்கணம் வகுத்துள்ளார். அக வாழ்வை அகத்திணையியல், களவியல், கற்பியல் ஆகிய மூன்று இயல்கள் எடுத்தியம்புகின்றன. இவை திணை, துறை, கூற்று என்ற முப்பிரிவின் அடிப்படையில் அமைகின்றன. சேதிராயர் பதிகத்துள் அகமரபாக 'கூற்று' இடம் பெறுகிறது. சிவபெருமான் மீது காமம் கொண்ட தலைவியின் களவொழுக்க நிகழ்வை செவிலி கூற்று வழி வெளிப்படுத்துகின்றார்.

**கூற்று**

"அகப்பாடல்கள் அகமாந்தர்கள் மொழிவதாக அமையும்; இக்கிளத்தல் முறை கூற்று எனப்படும்." (த. வசந்தாள், 'தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள்', ப.16) களவினில் அமையும் கிளவிக் குரியவராக, "பார்ப்பார், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி" (தொல்.பொருள். 490) ஆகியோர் அமைகின்றனர். சேதிராயர் பதிகத்தில் செவிலிக் கூற்று இடம்பெறுகிறது.

"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப் படுவாள் செவிலியாகும்" (தொல்.பொருள். 122)

என செவிலியின் இயல்புக்கு இலக்கணம் வகுக்கிறார் தொல்காப்பியர். எனவே தலைவியின் வளர்ப்புத்தாயாக உள்ள செவிலியானவள் தலைவியின் உணர்வுகளை ஆராய்ந்து, குறிப்பால் உணரும் தன்மை உடையவளாக உள்ளாள்.

தலைவியின் களவு நிலையை உணர்ந்த செவிலியின் கூற்றானது பல இடங்களில் (தொல்.பொருள்.113) வெளிப்படுகிறது. அவைகளுள் களவொழுக்கம் தலைவியின் மெய்யின் வழி வெளியானதை அறிந்த இடத்து செவிலியின் கூற்றானது இப்பதிகத்துள் இடம் பெறுகிறது.

"அச்சம், நாணம், மடம் ஆகியன நிரம்பப் பெற்ற தலைவி" (தொல்.பொருள். 96) "தனது வேட்கையைத் தலைவன் முன் சொல்லுதல் இல்லை. பிற மாந்தர்களின் வாயிலாகவே வெளிப்படும்"(தொல். பொருள். 116) இதன் வழி தலைவியின் களவொழுக்க உணர்வுகள் செவிலியின் கூற்றாக வெளிப்படுகிறது.

**3. களவொழுக்க உணர்வுகள்**

தலைவனின் மீது காமம் கொண்ட தலைவியின் களவொழுக்க உணர்வுகள் ஒன்பதாக அமைகின்றன என்பதனை,

"வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றுஅச்
சிறப்புடை மரபின் அவை களவு என மொழிய!"

(தொல்.பொருள். 97)

எனும் நூற்பா விளக்குகிறது.

இந்நிகழ்வுகளுள் சில சேதிராயர் பதிகத்துளும் பதிவாகி உள்ளன.

ஆன்மா இறையைப் பற்ற முயலும் போது குருவின் நெறியால் அப்பற்று முழுமையடையும் என்ற பக்திக் கொள்கையின் வழி சேதிராயரின் பதிகம் அமைகிறது. இவர் இதனுள்,

**இறைவன் → தில்லையம் பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவன் (சிவபெருமான்) தலைவன்.**

**ஆன்மா → தலைவி**

**குரு → செவிலி**

என்ற அகமரபின் படி உருவகப்படுத்தியுள்ளார். இதனுள் தலைவியின் காம உணர்வுகள் செவிலியின் புலப்பாட்டுத் திறன் வழி வெளிப்படுகிறது.

**காம வேட்கை**

அகம் ஒத்த தலைவன், தலைவி ஆகிய இருவரும் ஒருவர் மீது மற்றொருவர் காம வேட்கை கொள்ளுதல் இயல்பு. அத்தன்மையில் தலைவி, தலைவனோடு நீண்ட நாள் பொருந்தியிருந்தாள். தேவர்களைக் காப்பதற்காக விடத்தை உண்டு மகிழ்ந்த தலைவனின் மேன்மையை அறிந்து காம வேட்கை கொண்ட தன்மையை (9:279) அதற்குக் காரணமான தலைவனிடத்து செவிலி எடுத்துரைக்கிறார்.

**நாணத்தை இழத்தல், மெலிதல்**

தலைவனின் மீது காமம் கொண்ட தலைவி பெண்மைக்கே உரிய நாணத்தை இழந்து விட்டாள் என்பதனை, "வாணுதற் கொடி மாலது வாய்மிக நாண மற்றனள்" (9:280) எனும் அடி எடுத்துரைக்கின்றது. அங்ஙனம் நாணமற்ற அவர் தலைவனைக் காணாமல் மெலிவுத் தன்மையுடன் இருப்பதை "உமைக் காணில் எய்ப்பிலள் காரிகையே" (9:280) எனும் வரி சுட்டுகிறது.

இவற்றின் வழி அகமரபாகிய நாணத்தை இழத்தல், மெலிதல் ஆகிய காம செயல்பாடுகள் புலப்படுகின்றன.

**நா-குழறுதல்**

தலைவனை அடைய எண்ணும் தலைவியானவள், கரிய பெரிய யானையின் தோலைக் கிழித்து உரித்து அதனை மேற்போர்வையாக அணிந்தவரே; மேம்பட்ட சிறப்பினை உடைய தில்லை நகரில் உள்ளவனே! சிவபெருமானே என்று தலைவனது புகழையே கூறி நாகுழறிப் பேசும் நிலையை (9:281) எனும் பாடல் விளக்குகிறது.

**மறத்தல், மயக்கம்**

தலைவன் மீது காமம் கொண்டு நாணத்தை இழந்து, மெலிந்து, நா-குழறி பேசிய தலைவி, மேலும் தன் நிலை மறந்து அவனை

அடைய பெரிதும் நினைத்தவளாய் உள்ளாள். அவள் 'தம்மை ஆண்டு கொள்வாயாக' என்று தலைவனிடத்து மயங்கும் நிலையை,

''விம்மி விம்மியே வெய்துயிர்த் தாளெனா
உம்மை யேநினைந் தேத்தும்.........
.............அயர்வுறுமே'' (9:282)

என்ற அடிகள் மூலம் உணர முடிகிறது. திருநாவுக்கரசரும்

''தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைபட்டாள் நங்கை தலைவன் தாளே''
(6-ஆம் திருமுறை, திருவாரூர் பதிகம், 7)

என்று தலைவி நிலையில் இறையை நாடும் தன்மையை அறிய முடிகிறது.

**சாக்காடு**

சாக்காடு என்பது காம மிகுதியால் இறக்கும் தருவாயில் உள்ள நிலையாகும். தலைவனை அடைய நினைக்கும் தலைவி காம மிகுதி மேம்பாட்டால் சாக்காடு நிலைக்குத் தள்ளப்படுகிறாள். இத்தன்மையில் உள்ள தலைவியின் நிலை இங்கு வெளிப்படுகிறது.

**மாலையை வேண்டல்**

மிகு காம நிலையில் உள்ள தலைவி சோர்ந்த நிலையில் தமது கைகளைக் கூப்பி தான் வாழ வேண்டுமெனில் உமது மாலையைத் தந்தருளுக என்று தலைவனிடத்து வேண்டுகிறாள். அந்நிலையை,

''அயர்வுற் றஞ்சலி கூப்பி அந்தோ எனை
உயஉன் கொன்றையந்தார் அருளாய்'' (9:283)

எனும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

**கிள்ளையிடம் கிளத்தல்**

காம மிகுதியால் தன்னிலை மறந்த தலைவியானவள் கிளியிடம் நீ தலைவனைப் பற்றிப் பேசினால் பிழைப்பேன் இல்லாவிட்டால் உய்ய மாட்டேன் என்று வேண்டும் தன்மையை

''மாதொர் கூறன் வண்டார் கொன்றை மார்பனென்
றோதில் உய்வேன் பைங்கிளியே'' (9:284)

எனும் வரிகள் பகருகின்றன. தலைவி கிள்ளையிடம் இளக்கும் இம் மரபு பிற்காலத்தில் 'அழகர் கிள்ளை விடுதூது' என்ற சிற்றிலக்கிய வகைமையானமை இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

தலைவி தலைவனை நினைத்து சிறிது சிறிதாக இறக்கும் நிலையை "எனை வாதை செய்யேல்" (9:286) என்ற அடியும், "இவள் ஒன்று மாகிலள் உம்பொருட்டே" (9:287) என்ற அடியும் விளக்குகின்றன.

## 4. செவிலியின் புலப்பாட்டுத் திறன்

மாந்தர்கள் தமது உள்ளக்கருத்தைப் பிறர் மனம் ஏற்குமாறு எடுத்துரைப்பது புலப்பாட்டுத்திறனின் சிறப்பம்சமாகிறது. அவ்வகையில் செவிலி தனது தலைவியின் உள்ளக் கருத்தை தலைவனிடத்து எடுத்துக் கூறுகிறாள். அக் கூற்றில் தலைவனின் அருட்பண்பை, வீரச் செயலை நற்குணத்தை அவனது மன இசைவிற்கேற்ப எடுத்துக்கூறி அவனது அன்பாகிய அருளைப் பெற விழைகிறாள்.

தலைவனது பண்பை அவனிடத்துப் பகரும் செவிலி, விடத்தை உண்டு தேவர்களைக் காத்தவர் நீர் (9:279), கரிய பெரிய யானையின் தோலைக் கிழித்து உரித்து அதனைப் போர்வையாக அணிந்தவன் நீர் (9:281), பகைவருடைய மும்மதில்களும் அழியுமாறு மேருமலையை இருகால்களும் அணுக வருமாறு வளைத்தவர் நீர் (9:285) இத்தகைய அரும் பெரும் செயல்களைச் செய்த வலிமை உடையவர் நீர். இத் தலைவியோ மிகவும் மென்மைத் தன்மை உடையவள். இவளுக்கு அருள் புரிவது உமக்கு கடினமோ? என்று நயம்பட வினவும் வகையில் செவிலியின் கூற்று அமைகிறது. இதிலிருந்து தலைவனின் பெருமை கூறி தமது கருத்தைப் புலப்படுத்தும் செவிலியின் பாங்கு வெளிப்படுகிறது.

மேலும் தலைவனிடத்து "முன்பு ஒருகால் பன்றியின் பின்னே அதனை வேட்டையாடச் சென்ற வேடனே:" (9:286) அடியவர்களின் இடுக்கண் களை நீக்கிக் காக்கும் தன்மை உடையவன் நீர். உம்மையே நினைத்து காமம் கொண்டு வருந்தும் தலைவியின் இடுக்கணைக் களைதல் உமக்கு அரிதோ! என்று கூறி தலைவிக்காக இறைவனிடம் அருளை வேண்டும் செவிலியின் குறிப்பறிந்து உணர்த்தும் திறன் புலப்படுகிறது.

சேதிராயர் திருவிசைப்பாவில் 'கூற்று' என்ற அகமரபு இடம்பெறுகிறது. தலைவியின் களவொழுக்க உணர்வுகள் செவிலி கூற்று வழி வெளிப்படுகிறது.

இறையைப் பற்ற முயலும் ஆன்மாவின் குரலாக தலைவியும், அதனை இறையிடத்து வழிநடத்தும் குருவாக செவிலியும் இடம்பெறுகின்றனர்.

தலைவியின் காமவேட்கை, நாணத்தை இழத்தல், மெலிதல், நா குழறுதல், மறத்தல் மயங்குதல், சாக்காடு போன்ற களவொழுக்க உணர்வுகள் தொல்காப்பிய அகமரபின் வழி உணர்த்தப்படுகிறது.

அக் களவொழுக்க உணர்வுகளை இறைவனிடத்து நயம்பட குறிப்பறிந்து, உளப்பாங்கறிந்து உரைக்கும் செவிலியின் புலப்பாட்டுத் திறன் சிறப்புற அமைகிறது.

# 49. திருமூலர் புலப்படுத்தும் இறையுணர்வு

முனைவர் செ. திருஞானசம்பந்தம், திருநெல்வேலி.

திருமூலர் அருளிச்செய்த திருமந்திரம் சைவத்திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாவதாக திகழ்கின்றது. இது சாத்திரமாகவும், தோத்திர மாகவும் போற்றப்படுகிறது. இந்நூல் வேத நெறியாகிய உலகியல் ஒழுக்கத்தையும் மிகு சைவத்துறையாகிய சில ஆகமங்களின் உண்மை களையும் செந்தமிழில் எடுத்து விளக்குகிறது. எனவே இந்நூல் செந்தமிழ்ச் சிவாகமம் எனச் சிறப்பிக்கப்படுகிறது. தமிழ் உணர்த்தும் பக்தியை நமக்கு தெள்ளத்தெளிவாகவும், ஆழமாகவும் உணர்த்தக்கூடிய நூல் திருமந்திரம் என்றால் அது மிகையாகாது.

**'திருமந்திரம்' அமைப்பும் சிறப்பும்**

திருமூலரின் திருமந்திரம் பெயருக்கு ஏற்றபடி மந்திரம் போல் சுருங்கிய சொற்களில் ஆழ்ந்த பொருள் திட்பமாக அமைந்த பாடல்களுமாக, தத்துவக்கருத்துக்கள் முதல் யோக நெறி, சித்த வைத்தியக் கருத்துக்கள் வரையில் பலவும் செறிந்த நூல். இது ஒரு யோக நூல் மட்டும் அல்லாமல் அனுபவ நூலாகும். இறைவன், சிவாகமங்களை தமிழால் வகுத்தருளிச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில், திருமூலரைத் திருவாவடுதுறையில் சிவயோகத்தில் இருக்கும்படிச் செய்தருளுகின்றான். இத்திருவருட் குறிப்பை உணர்ந்த திருமூலர்,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாக தமிழ்ச்செய்யுமாறே"

என்று அருளிச்செய்தார். இறைவனது திருவருளால் தான் திருமூலர் திருமந்திரத்தை அருளிச் செய்தார் என்பதை,

"நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளால தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நான் இருந்தேனே"

என்ற திருமந்திரப்பாடலால் அறியலாம்.

திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ள மூவாயிரம் பாடல்களும் சிறப்பு வாய்ந்தவை. அவை ஒன்பது தந்திரங்களாகவும், 232 அதிகாரங்களாகவும்

அமைந்துள்ளன. ஒன்பது தந்திரங்களும், ஒன்பது ஆகமங்களின் செய்தி களைப் பிரித்து வழங்குகின்றது. அவை,

| | | |
|---|---|---|
| முதல் தந்திரம் | - | (பா.எண். 224-காரண ஆகமம்) வாழ்க்கைக்கு வேண்டிய அறங்களை உபதேசம் செய்கிறது. |
| இரண்டாம் தந்திரம் | - | (பா.எண். 212-காமிக ஆகமம்) இறைவனது இயல்பினையும் பெருமை யினையும் பற்றி பேசுகிறது. |
| மூன்றாம் தந்திரம் | - | (பா.எண். 335-வீர ஆகமம்) இறைவனை அடைவதற்குரிய யோக நெறி களைக் கூறுகிறது. |
| நான்காம் தந்திரம் | - | (பா.எண். 535-சிந்தியாகமம்) கிரியை முறையில் சக்கரங்களை வைத்து வழிபடும் முறைகளைச் சுட்டுகிறது. |
| ஐந்தாம் தந்திரம் | - | (பா.எண். 154-வாதுள ஆகமம்) சமய பேதங்களைக் கூறி குரு நெறியே சிறந்த நெறியென உறுதிப்படுத்துகிறது. |
| ஆறாம் தந்திரம் | - | (பா.எண். 131-வியாமள ஆகமம்) குருநெறி என்பதையும், இறுதியில் சிவனே குருவாக வருபவன் என்பதனையும் தொகுத்துக் கூறுகிறது. |
| ஏழாம் தந்திரம் | - | (பா.எண். 418- காலோத்தர ஆகமம்) சீவர்களது உடலில் சூக்குமமாகவுள்ள மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரங்களைக் கூறி இவ்வாதாரங்களில் இறைவனை தியானித்து இறையருளை பெற வேண்டுதல் பற்றி கூறுகிறது. |
| எட்டாம் தந்திரம் | - | (பா.எண். 527-சுப்பிரபேத ஆகமம்) அவத்தை பக்தி, முக்தி முதலியன பற்றி பேசுகிறது. |
| ஒன்பதாம் தந்திரம் | - | (பா.எண். 399-மகுட ஆகமம்) பஞ்சாட்சரம், சிவதரிசனம் முதலியன பற்றி கூறுகிறது. |

இக்கருத்துக்கள் தவமுனிவர்களும், யோகிகளும் அறிந்து பிறவிப் பிணியை நீக்கிக் கொள்ள ஏற்ற வழியாக அமைந்துள்ளன.

**இறையுணர்வு**

அன்பு, அறம், கல்வி ஆகியவற்றின் முக்கியத்துவத்தை திருமூலர் தந்திரங்களில் எடுத்தாளாத இடமே இல்லை. இறைவனை அடைவதற்கு அன்பு நெறியும், கல்வியுமே மிகவும் அவசியம் என்பதை பல இடங்களில் சுட்டிக்காட்டியுள்ளார். எலும்பை விறகாக்கி உடம்பின் தசையை அறுத்து நெருப்பிலிட்டுப் பொன்னைப் போல வறுத்தாலும், இறைவனை என்போல் காணமுடியாது. அன்போடு உருகி மனம் நெகிழ்பவர்தான் இறைவனை அடையமுடியும் என்பதை,

**என்பே விறகாகி இறைச்சி அறுத்திட்டுப்**
**பொன்போற் கனவிற் பொரிய வறுப்பினும்**
**அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி**
**என்போல் மணியினை எய்த வொண்யாதே**

என்று கூறுகின்றார். இறையை உணர அன்பு அடிப்படை ஆதாரமாகிறது. கடவுள்மேல் அன்பு செலுத்துவதே பக்தி என்பதற்குக் கீழ்க்காணும் அவரது பாடல் அடிகள் அறிவுறுத்துகின்றன.

**''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமானது ஆரும் அறிகிலார்!**
**அன்பே சிவமானது ஆகும்! அறிந்த பின்**
**அன்பே சிவமாகி அமர்ந்திருப்பாரே''**

மேலும், திருமூலர் இறைவனுக்கு ஒரு பொருளைக் கொடுப்பதை விட, அவர் அடியார்க்கு ஒரு பொருளை கொடுப்பதே மிகவும் சிறந்தது என்று கூறுகிறார். அத்தகைய தொண்டு மகேசனுக்கு செய்யும் தொண்டு என்கிறார். இதனை திருமூலர்.

**''படமாடக் கோயிற் பகவற்கொன்றீயில்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கங்காகா**
**நடமாடக் கோயில் நம்பர்கொன்றீயில்**
**படமாடக் கோயிற் பகவற்க தாமே''**

என்று திருமந்திரத்தில் உரைக்கின்றார். இறைவனை ஒவ்வொருவரும் தத்தம் மனத்துள்ளேயே காணலாம் என்பதை,

**''எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்**
**கண்ணார் அமுதனைக் கண்டறிவார் இல்லை**
**உண்ணாடி உள்ளே ஒளிபெற நோக்கின்**
**கண்ணாடி போலக் கலந்து நின்றானே!''**

என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். இறைவனிடம் நமது எண்ணங்களைப் பதித்து உறவை ஏற்படுத்திக் கொண்டால், இறைவனிடம் மனிதன் ஒன்றாகி விடுகின்றான் என்பதற்கு பின்வரும் திருமூலரின் பாடல் சான்றாகும்.

"சீவனென்ன சிவனென்ன வேறில்லை
சீவனார் சிவனாரை அறிகிலார்
சீவனார் சிவனாரை அறிந்தபின்
சீவனார் சிவனாயிட் டிருப்பாரே"

சிவநெறியைப் பக்தி மூலம் திருவருளால் உணர்வது போல், 'சக்தி' என்று யாவரும் போற்றப்படுகின்ற தேவியை வீடு பேற்றைத் தரும் முதல்வி என்பதையும் திருமூலர் உணர்த்துகின்றார். தேவியை நம் உடலில் சிரம் முதலிய இடங்களில் வைத்து பின்பு இதயம் முதலிய உறுப்புகளிலும் நமது உருவத்திலும் பின்னர் மூலம் முதலிய ஆதாரங்களில் வைத்தும் வழிபட்டு அவளோடு ஒன்றி தியானம் செய்தால் தேவியின் காட்சியை நாளடைவில் நாம் காணக்கூடும் என்பதனைத் திருமூலர்

"சிந்தையில் வைத்துச் சிராதியிலே வைத்து
முந்தையில் வைத்துத்தம் மூலத்திலே வைத்து
நிந்தையில் வையா நினைவதிலே வைத்துச்
சந்தையில் வைத்துச் சமாதி செய்வீரே"

என்ற பாடலால் விளக்குகின்றார்.

திருமூலர் அருளிய திருமந்திரம் பக்திக்கு வித்தாக இலங்குகின்றது. திருமந்திரத்தில் சொல்லப்பட்டுள்ள ஒன்பது தந்திரங்களும், பக்தி, யோகம், தியானம், ஞானம், அன்பு, மருத்துவம் எனும் கருத்துக்களை எடுத்தியம்புகின்றன. இம்மந்திரங்களைத் தினமும் ஓதி இறையன்பைப் பெற்று உய்வோமாக.

# 50. திருமூலர் காட்டும் திருக்கோயில் நெறி

முனைவர் வெ. திருநாவுக்கரசு, திருநாகேச்சரம்.

உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கு அரியவன் இறைவன். மானிடர் களுக்காக எனிவந்த தன்மையாளன் திருக்கோயில்கள் வழி வழிபடவும் போற்றிவணங்கவும் ஏற்றருளும் கருணையாளன் எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் திருக்கோயில் வழியே சிறப்பாகக் கருணை பொழிகிறான். எனவேதான் நாடாண்ட அரசர்கள் விண்ணை முட்டும் திருக்கோயில் களை எடுப்பித்தார்கள். அரண்மனையை விட அரண்மனையே உயர்ந்தது என ஒவ்வொரு ஊர்களையும் மையப்படுத்தி அரண்மனை கட்டி அழகு செய்தனர். திருக்கோயில்களைப் பராமரிக்கவும், நாள், மாத, ஆண்டு வழிபாடுகளும், விழாக்களும் நிகழ்வுற்றிட நிலங்களும் பொருளாதாரமும் நிலையாக அமைத்துச் செயல்பட வழிவகுத்தனர். திருக்கோயில்களைக் கட்டி, வணங்கி வாழவும் செல்வங்களைக் கொட்டி குவித்தனர், அக்கால மன்னர்களும் மக்களும். ஆனால் திருக்கோயில்களின் நிலை காலம் மாற மாற மாற்றங்கள் நிகழ்ந்தன.

பொது மக்களும், நாட்டை ஆள்வோராலும் பல்வேறு நோக்கங் களுக்காக மாற்றி அமைத்துக் கொண்டனர். இதனைக் கண்ட அருளாளர்கள் அவ்வப்போது தோன்றி நெறி காட்டியருளியுள்ளார்கள் அவ்வாறு தோன்றி நெறி காட்டிய அருளாளர்களில் ஒருவர் திருமூலர். திருக்கோயில்கள் நன்கு பராமரிக்கப்படாவிடின் ஏற்படும் தீமைகளைத் திருமூலர் திருவாக்கு வழியே ஆய்வது இக்கட்டுரை நோக்கமாகும்.

திருக்கோயில்கள் சமுதாய நிலையங்கள் மக்கள்.[1] வாழ்வியலுக்குத் தேவையான கல்வி, மருத்துவம், நாட்டியம், இசை முதலிய பண்பாட்டுக் கூறுகளை வளர்க்கும் கருவூலமாகத் திகழ்ந்தன. மக்கள் மனம் பண்பட்டு நன்னெறியில் செலுத்தும் மனவளக் கலைப்பயிற்சிக் கூடமாகத் திருக்கோயில்கள் விளங்கின. மக்கள் அகவாழ்க்கையிலும் புறவாழ்க்கை யிலும் அறநெறியை வலியுறுத்தும் வாழ்க்கைப் பயிற்சி நிறுவனங்களாகத் திருக்கோயில்கள் விளங்கின. இவ்வாறு பொதுவுடைமையாக விளங்கிய மக்கள் உடைமையான திருக்கோயில்கள் சுயநலப் பேய்கள் குடியேறி தனியுடைமையாக ஆக்கிடும் நிலையையும், சைவ மரபுகள் மீறலும், ஒழுக்கநெறி நில்லா மாந்தர் பூசை முறையும் நாட்டிற்கும், நாடாள்

தலைவர்களுக்கும், மக்களுக்கும் விளையும் தீமைகளைத் திருமந்திர வாயிலாக விளக்குகிறார் திருமூலர்.

## இலிங்க வழிபாடு

இறைவன் இலிங்கவடிவாக வழிபடுவது சைவந் தோன்றிய காலம் முதல் தொன்று தொட்டு வருவது. திருக்கோயில்களில் விண்ணை முட்டும் உயர்ந்த கோபுரங்கள் தொடக்கத்திலே காணப்பெறும். இவை கருவறையில் எழுந்தருளியுள்ள இலிங்கத்தை நினைவுப்படுத்தும். கருவறையில் எழுந்தருளியுள்ள இலிங்கம் சூக்குமலிங்கம். ராசகோபுரம் சூக்கும இலிங்கத்தை நினைவுப்படுத்தும் "தூலலிங்கம்". எனவே தூலலிங்கம் கண்ணுக்குத் தெரியத் தொடங்கும் இடமே திருவீதி எல்லை. அங்கேயே விழுந்து வணங்குதல் வேண்டும். இவ்வாறு திருக்கோயிலே இலிங்க வடிவினதாகக் கண்டு வணங்குவது சைவமரபு.

இலிங்கம் இறைவன் வடிவு. இறைவன் எங்கு எழுந்தருளி அருளாட்சி செய்ய விரும்புகின்றானோ அங்கிருந்து அவன் திருவுருவை மானிடர் தம் விருப்பம் போல் மாற்றக் கூடாது. இலிங்க வடிவத்தை ஓர் இடத் திலிருந்து பறித்து வேறு இடத்திற்கு மாற்றினால் ஏற்படும் தீமைகளைத் திருமூலர் இருவகையாகக் குறிக்கிறார். இலிங்கத்தைப் பறித்து மாற்று வதைப் பார்த்துக் கொண்டிருந்த ஆட்சி கெடும். காரணம் வலியவன் செய்யும் தீமையைத் தடுத்துத் தண்டிக்காத அரசாட்சிகெடும் காலத்தில் பொது சொத்துக்களைப் பாதுகாக்காத அரசு பயனில்லாதது. எனவேதான் இறையச்சம் இல்லாத அரசு நிலைகெடும் என்பது முதல் கருத்து. இரண்டாவதாக இலிங்கத்தைப் பறித்தவன் நிலையைப் பற்றியது. இறையச்சம் இன்றி பறித்தவன் சாவதற்குள் பெருநோய் வந்து துன்புறுவான் என்பது திருமூலர் வாக்கு.

## மதில் பாதுகாப்பு

கோயில் என்று குறிப்பது இறைவன் எழுந்தருளியுள்ள கருவறையே. இக்கருவறைச் சுற்றிலும் பல அடுக்காகச் சுற்றுச் சுவர்கள் காணப்படும். திருச்சுற்றுகளை உள்ளடக்கிய பெருஞ்சுவர் திருமதில் எனப்படும். இன்றைய சூழல், மதில் பெருபான்மையோரால் கையகப்படுத்தப் பட்டுள்ள நிலையே காணப்படுகிறது.

மதில், பொது இடத்தைக் காப்பாற்றிடும் பொருட்டு மன்னர்களால் கட்டப்பெற்றது. அதனை அழிப்பார் அடையும் நிலையைத் திருமூலர் வாக்கு ஆணையிட்டுக் கூறுகிறது. மதில் முழுவதும் அழிப்பார் பற்றிக் கூறவில்லை. ஆனால் மதிற்சுவரின் ஒரு கல்லைப் பெயர்ப்பவர் முனிவரா யினும், வேதியராயினும் அவர் நிலை மாறும் என்பதையும், அரசர் நிலையும் அழியும் என்பதையும் ஆணையிட்டுரைக்கிறார்.

**பூசைகள் - பாதுகாப்பு**

இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களில் நாள், மாத ஆண்டு, சிறப்பு, பொது வழிபாட்டுப் பூசைகள் பிழையின்றி நன்கு நடத்திடல் வேண்டும். பூசைகள் செம்மையுடன் நடைபெற்றிட, ஆள்வோர் திருக்கோயில்கள் கட்டியதும் நிலங்களும் அளித்துள்ளனர். எனவே பூசைகள் முட்டுப்பாடு அடையாமல் தொடர்ந்து நடைபெற்றிட நாடாள் வோர் நன்கு கவனத்தில் கொள்ள வேண்டும்.

பொது சொத்துக்களாகிய திருக்கோயில்களைச் சார்ந்த உடைமைகள் எல்லோராலும் பாதுகாத்தற்குரியது. அவற்றைப் பற்றி தனிமனிதர்களும், ஆட்சிப் பொறுப்பில் உள்ளோர்களும் கண்டு கொள்ளாமல் தம் கடமை மறப்பார்களானால் அந்நாட்டுத் தலைமைப் பொறுப்பில் உள்ளவர்கள் வலிமை குன்றுவார்கள். ஆட்சிப் பொறுப்பில் உள்ளோர்கள் தீங்கு அடைவர். மழை வளங்குறையும். இயற்கை வளங்குன்றும். திருடர் மிகுவர், மக்கள் துன்புறுவர் எல்லாவற்றிற்கும் மேலாக மருந்தே இல்லாத எய்ட்சு போன்ற நோய்கள் அந்நாட்டில் பரவும். இதனால் மக்கள் வாழ்வில் மரணம் நிகழும் இதனை திருமூலர்,

''ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றி
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளெல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில்தானே''

என்றும்,

''முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குன வாரி வளங்குன்னும்
கன்னங் களவு மிகுந்திடுங் காசினி
என்னருள் நந்தி எடுத்துரைத்தானே''

என்றும் கூறுவார்.

எனவே திருக்கோயில் பூசைகள் முட்டுப்படாமல் நிகழ நாடாள் வோரும், பொதுமக்களும் பொறுப்பேற்று நடத்தல் வேண்டும்.

**அர்ச்சனை செய்பவர்**

இறைவனை அர்ச்சனை செய்பவர் தவ ஒழுக்கங்களில் சிறந்தவராக இருத்தல் வேண்டும். வேத, ஆகம நூல் வல்லாராகவும், சைவ மரபு வழியும், வள்ளுவர் வாய்மொழிக்கு வாழ்வுரையாகவும் வாழ்பவரே தவமுடைய சிவத்தை அர்ச்சிக்கும் பெருவாழ்வு பெற்றவராவார். சேக்கிழார் முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணத்தில் கூறும் நல்லியல்பு கொண்டோரே சிவபெருமானை அர்ச்சிக்கும் பெருவாழ்வு பெற்றவர்கள்.

உணர்வில் சிவத்தைப் போற்றாமல் பிறப்பால் இறைவனை அர்ச்சனை செய்யும் தொழில் செய்பவர் "பேர்கொண்ட பார்ப்பான்" என்பார் திருமூலர். இவர்கள் அர்ச்சனை செய்தால் நாட்டை ஆள்வோர் தீர்க்க முடியா நோய் ஏற்படும் நாடு பஞ்ச நிலையை அடையும். எனவே தகுதியுடையோரை நியமிக்கும் பொறுப்பை ஆள்வோர் மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு செயல்படாவிடில் தீமை வேரூன்றூன்றுவது போன்று தீரா நோய் அரசாங்கத்தை ஆள்வோரைப் பற்றும்.

இதுவரை ஆய்ந்த செய்திகளால் திருக்கோயில்கள் நன்கு பராமரிக்கப் பட வேண்டும் என்றும், எங்கு இறைவன் எழுந்தருள்கிறானோ அந்த இடத்தை மாற்றக் கூடாது என்றும், திருக்கோயில் பூசை முறைகள் நின்று முட்டுப்படாமல் நிகழ வேண்டும் என்றும், பிறப்பால் இறைவனை அர்ச்சிப்பதைவிட உணர்வால் அர்ச்சிப்பது வேண்டும் என்றும் உணரலாம். திருக்கோயில்களைப் பாதுகாத்து, பராமரித்து, வணங்குவதோடு நம்முடைய அடுத்து வரும் தலைமுறையினருக்கு அளிப்பதும் திருக்கோயில் வழிபாட்டு நெறி என்பது திருமூலர் கருத்து எனலாம்.

# 51. திருமந்திரத்தில் சிவன்

செல்வி ம. தேவகி, திண்டுக்கல்.

யாதுமாகி நின்றவன் பூதமைந்தும் ஆனவன். பொறிகள் ஐந்தும் ஆனவன். ஆதியும், அந்தமும் இல்லாதவன். மூவர்க்கும் முதல்வன். இத்தகைய சிறப்புடைய பரம்பொருளை, அவருடைய திருவிளையாடல் களை சைவ அடியவர்கள் அழகாக நிரல்படுத்தியுள்ளனர். அச்சைவ அடியவர்களின் சிறப்பானவர் திருமூலர். அவர் பெற்ற இறை அனுபவத்தை ஒன்பது தந்திரங்களாக, எடுத்துரைத்துள்ளார்.

''நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்று மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்று உணர்வுறும் மந்திரம்
தான் பற்றப் பற்றத் தலைப்படும் தானே''

இவ்வொன்பது தந்திரங்களில் அவர் எடுத்துரைத்துள்ள சிவனின் பெருமைகளை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**சிவன்**

''சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை''

தனக்கு உவமை இல்லாத தகைமையாளன். காலம், எல்லை, இடம், பொருள் எல்லாம் கடந்து இருப்பவன். வான், மண், சுட்டெரிக்கும் அக்கினியாக (சூரியன், சந்திரன்) தண் கடல், வாழ்க்கைக்கு மூலமாக உள்ள காற்றாகவும் உள்ளான். இச்சிறப்புடைய சிவபெருமானைப் பணிவோர், அவன் அருளைப் பெறுவோர் அமராவதி அரசர் ஆவர்.

''அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
அதுபதி ஆதரித்து ஆக்கமது ஆக்கின்
இதுபதி கொள் என்ற எம்பெருமானே''

**அன்பறிவின் வடிவம்**

சிவபெருமானை அன்பின், வடிவமானவன் பின்வரும் பாடலின் கருத்தின் வழி விளக்கியுள்ளார் திருமூலர்.

அன்பு வேறு, சிவம் வேறு என்று சொல்லுபவர்கள் அறிவில்லாத மூடர்கள். அன்பே சிவம் என்பதைப் பலரும் அறியாதிருக்கிறார்கள். அன்பு தான் சிவம் என்பதை எல்லாரும் அறிந்து விட்டால் பிறகு அவர்களே அன்புருவான சிவமாய் வாழ்ந்திருப்பார்கள்.

அறிவே கடவுள் என்பது வேதங்கள் கண்ட முடிவு என்பதைத் திருமூலர் தெளிவுபடுத்துகிறார்.

"அறிவுக்கு அழிவு இல்லை ஆக்கமும் இல்லை
அறிவுக்கு அறிவு அல்லது ஆதாரம் இல்லை
அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு
அறைகின்றன மறை ஈறுகள் தாமே"

## உறைகின்ற இடங்கள்

உலகினைத் தோற்றுவிக்க எண்ணிய சிவப்பரம்பொருள், தன்னுடலில் ஒரு கூறாக இடங்கொண்டிருக்கிற சக்தியின் துணையுடன் இவ்வுலகைப் படைத்தருளினான். திக்கெட்டும் பரவி நிற்பதும், ஆய கலைகள் அறுபத்து நான்கும் சிவலிங்கமே. உலக முழுவதும் இச்சிவலிங்கமே உலகமாகும். முத்து, மாணிக்கம், அழகிய பவளம். சீவிச் செதுக்கி அழகாக்கப்பட்ட மரம், கல், திருநீறு படிகம் போன்ற வெண்மையான கற்கள், பச்சை மரகதம், சிவகாமங்கள் சோறு, அரிசி, மலர், மணல் ஆகிய எல்லாமே ஆருயிர் தலைவனான பரம்பொருளின் திருமேனியான சிவலிங்கம் செய்வதற்கு ஏற்ற கருவிகளாகும். இவைத்தவிர

"துன்றும் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்
கன்றிய செம்பு கனல் இரகம் சலம்
வன்திறல் செங்கல் வடிவுடைய வில்வம்பொன்
தென்றியங்கு ஒன்றைத் தெளி சிவலிங்கமே"

என்ற பொருட்களும் சிவலிங்கம் செய்ய ஏற்றவையாகும்.

## லிங்கங்களின் வகைபாடு

புனிதமான வணங்கத்தக்கதான, கருவறைக்கு மேலாகக் கட்டப்பட்டுள்ள விமானம் தூலவடிவான இலிங்கமாகும். அந்த விமானத்தின் கீழாக உள்ள, கருவறையில் எழுந்தருளியிருக்கின்ற சதாசிவம் சூக்கும இலிங்கமாம். சிவனுக்கு முன்பாக உள்ள நந்திக்கும். கொடிமரத்துக்கும் இடையிலே உள்ள பலி பீடத் பத்திர லிங்கமாகும்.

மறை ஓதும் அந்தணர்கள், வணங்கி வழிபட்டு அருச்சித்துப் பூசை செய்யத்தக்கது வெண்யான தூய படிக இலிங்கமாகும். நாடாளும் மன்னர்கள் அருச்சித்துப் பூசிக்கத் தக்கது. பொன்னாலான சிவலிங்கம் குறைவில்லாத வருவாய் உடைய தனவணிகர்கள் வைத்து வழிபடத்

தக்கது. மரகத இலிங்கம் வேளாண்மை தொழில் செய்யும் உழவர் பெரு மக்களுக்கு உவப்பான, பூசைக்கு உரியது கல்இலிங்கமாகும். எங்கும் நிறைந்திருக்கின்ற பரம்பொருளான சிவபெருமானை தம் மெய்யறிவால் ஆராய்ந்த திருமூலர், அவர் எட்டு உலகங்களிலும் (விண், மண், நீர், நெருப்பு, காற்று, சூரியன், சந்திரன், ஆன்மா) இடம் கொண்டு விளங்குகிறான். அதற்கு சான்று அண்ட இலிங்கமாகும்.

அறிவும், ஆற்றலும் பெறுகிற உடம்பு சக்தியும், சிவனும் சேர்ந்த சதாசிவம் மனிதர்கள் உடம்பு கோயிலாகும். அதாவது சிவலிங்க வடிவமாகும் என்பதை திருமூலர், பிண்டஇலிங்கம் என்கிறார்.

''மானுடன் ஆக்கை வடிவு சிவலிங்கம்
மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்
மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்
மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே''

பிரணவ சொரூபம், சிவலிங்க வடிவமாகும். சிவலிங்கத்தின் நல்ல கீழ்பகுதி பீடம் பொருத்தமான் ஓங்காரம், பிரணவ வடிவம் ஆகும். அப்பீடத்தினுள் மறைந்திருக்கும் சிவலிங்கத்தின் நடுப்பகுதி நிறைவான மகாரம் ஆகும். சிவலிங்கத்தின் உட்புறமான வட்டமான பகுதி உகாரம் ஆகும். வெளித்தெரியும் தூண் போன்ற இலிங்கம் அகாரமும் விந்து நாதம் நிறைந்ததாகும்.

**நிறைந்தவன்**

ஆன்மாவையே, இலிங்கமாகக் கொள்வது ஆத்மலிங்கமாகும்.

''அகார முதலாய் அனைத்துமாய் நிற்கும்
உகார முதலாய் உயிர்ப்பெய்து நிற்கும்
அகார உகாரம் இரண்டும் அறியில்
அகார உகாரம் இலிங்கம் அதாமே''

கண்ணுக்குப் புலப்படும் உருவத்தோற்றமாகவும், கண்ணுக்குத் தெரியாத அருவமும், உருவமா அருவமா என்று நிச்சயிக்க இயலாதபடி அருஉருவ மாகவும் கலந்து விளங்கும் பரம்பொருள். ஆருயிர்கள் அனைத்துக்கும் ஞானகுருவாக, நல்லாசிரியனாக நின்று வழிகாட்டும் இயல்புடையவன் ஆவான். வேண்புனவர் விரும்பி வேண்டியதை கற்பகத்தரு போல தந்தருள்பவன் ஆதலால் அவன் உறையும் இடத்தை ஞானலிங்கம் என்பர்.

எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளை ஒரு வரையறைக்குள் அடையாளத்துக்குள் வைத்து வழிபடுவது எப்படி என்பது தெரியவில்லை விண்ணும், மண்ணும் அளக்க எங்கும் விரிந்து பரந்து நிறைந்திருக்கிற பரம்பொருளை, ஒன்றில் எழுந்தருளச் செய்து வழிபாடு செய்கின்ற

முறை ஒன்று இங்கு உள்ளது. அந்த வழிபாட்டு முறை என்ன என்றால் பொங்கிப் பெருகிவரும் கங்கை நீரையும், வாசமலர்களையும் கைகளில் ஏந்தி ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதி வழிபாடு செய்கிற முறையே அது. இப்படிப் பரம்பொருளை உள்ளத்தால் உணர்ந்து வழிபடுவார் உள்ளத்தை விட்டு வள்ளல் பெருமான் வெளிப்போகான்.

**நால்வகைப் பூசை**

உயிர்க்குள் உயிராய், உற்ற துணையாய் இருப்பவன் இறைவன். அந்த நினைவிலே ஒன்றியிருப்பது உயர்ந்ததான சிறந்த பூசையாகும். திருமூலர் அதனை

1. சரியை
2. கிரியை
3. யோகம்
4. ஞானம்

**சரியை**

பூவுலகில் உண்மை உணர்ந்திடும் சுத்தசைவருக்கு உயிர் போன்று இச்சரியை நெறி. சரியை நெறி என்பது புறபூசை, ஆலய வழிபாடு. கல் அல்லது செப்புச் சிலைகளுக்கு உயிர்ப்பை ஊட்டி ஆவாகனம் செய்யப் படும் ஆலய மூர்த்தங்களை வழிபடுவது புறப்பூசை ஆகம். ஆலய வழிபாடே ஆனந்த வழிபாடு என்றும் அவ்வாறு வழிபடுபவர்களின் உள்ளத்தில் இறைவனாகிய பரம்பொருள் எழுந்தருளுவான் என்பதை

''நாடும் நகரமும் நல் திருக்கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வவே''

இவ்வடிகளின் மூலம் விளக்குகிறார் திருமூலர்.

**கிரியை**

கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, தென் மேற்கு, தென்கிழக்கு, வடமேற்கு, மேல், கீழ் எனப் பத்துத் திசைகளிலும் பரவியிருப்பவன், நீக்கமற நிறைந்திருப்பவன் பரம்பொருள். எனவே பூங்கொத்துக்களைக் கொண்டு அவர் தம் திருவடியைச் சரணடைந்தால், இப்பிறவியாகிய பெருங்கடலில் விழாமல் தப்பலாம். மலரிட்டு செய்யும் வழிபாடே கிரியை ஆகும். மணமுடைய சந்தனத்தையும், மலர்களையும் கொண்டு பூசை செய்தால் மட்டும் போதாது. அவ்வாறு வழிபடுபவன் தூய உணவை உண்பவனாக இருக்க வேண்டும்.

''கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உண்பவர்க்கல்லது
தேனமலர் பூங்கழல் சேர வெண்ணாதே''

என்று கிரியைபின் முக்கியப் பகுதி இன்னாது என்பதனை விளக்குகிறார் திருமூலர்.

**யோகம்**

புலனடக்கம் முதலான புனிதமான அட்டாங்க யோகப்பயிற்சி மேற்கொண்டிருப்பவர்கள் மேலான யோகநிலை பெற்றவராவர். நெற்றிக்கு நேர் புருவ மத்தியில் மனதை ஒன்றி நிற்கச் செய்து சிவ சிந்தனையினால் மனம் ஒன்றி தியானிப்பவர்களுக்கு, இறையருள் கிட்டும். 'பிறவித்துயர் போக வழி யோகம்' என்பதனையும் 'யோகம் - உயிருக்கு யோகம்' என்பதனையும் பின்வரும் பாடலின் மூலம் விளக்குகிறார் திருமூலர்.

''விரும்பி நின்றேசெயின் மெய்த்தவ ராகும்
விரும்பி நின்றேசெயின் மெய்வரை ஆகும்
விரும்பி நின்றேசெயின் மெய்த் தவமாகும்
விரும்பி நின்றேசெயின் விண்ணவன் ஆகுமே''

மண்ணுலகிலேயே வானவர் போல மேலான நிலை பெற உதவும் மேலான யோகத்தை மேற்கொள்ளத் தயங்கினால் அத்தயக்கம் நரகத்துக்கே இழுத்துச் செல்லும் வழி ஆகி விடும்.

யோக முறையில் பல வகைகள் (21) உள்ளன. இவ்யோக வகைகளுள் அட்டாங்க யோகமே சிறந்தது.

1. **இமயம் :** புலனடக்கம் (கொல்லான், பொய், ஹான், களவிலான், எண்குணன், நல்லான், அடக்கமுடையான் பதுத்துண்பான், மாசிலான், கட்காமம் இல்லாண் ஆகிய புலனடக்கம் உடையோரே சிவநெறியில் சிறந்தவர்கள்)
2. **நியமம் :** சமய வாழ்க்கையின் அடிப்படையாக அமைய வேண்டிய ஒழுக்கங்களை எடுத்துரைக்கிறார். (தூய்மை, அருள், ஊண் சுருக்கம், பொறை, செவ்வை, நேர்மை, காமம், களவு, கொலை நீக்கியவன் ஆகிய நற்பண்புகளைக் கொண்டு வழிபடுபவன் நியமத்தன் ஆவான்.)
3. **ஆதனம் :** யோகப் பயிற்சியினை மேற்கொள்ள விரும்புவோர், பின்பற்றும் ஒரு முறை ஆசனமாகும். திருமூலர் 126 ஆசனங்களை விளக்கியுள்ளார்.

4. பிராணாயமம் : புறத்தே செல்வதும், உள்ளே புகுவதுமாகிய வாயுவைத் தன்வயத்தினால் "உறுப்புச்சிவக்கும், உரோமம் கறுக்கும் புறப்பட்டுப் போகான் புரிசடையானே" என்கிறார்.

5. பிரத்தியாகாரம் : ஒருவன் உலகிலிருந்து விலகி இறைவனுடன் சேர்ந்து தன்னை கரைத்துக் கொள்ளும் உணர்விற்கு புரத்தியாசாரம் என்று பெயர்.

6. தாரணை : தடுமாற்றம் இல்லாது, உறுதியாக ஒன்றில் நிற்கும் மனத்தினால் அழிவைத் தடுக்க இயலும். "மேலை நிலத்தினாள் வேதகப் பெண்பிள்ளை மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தியை ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப் பாலனும் ஆவான் பார்நந்தி ஆணையே"

7. தியானம் : பார்வையை மூக்கு நுனியில் வைத்துப் பிராணனை உள்ளே அடக்கி அசையாமலிருந்து தியானிக்க வேண்டும். அப்பொழுது ஆன்மா இறைவனோடு ஒன்றி நிற்கும். இதனை பின்வரும் பாடல் மூலம் சிறப்பாக விளக்குகிறார்.

"உதிக்கின்ற ஆறினும் உள்அங்கி ஐந்தும்
துதிக்கின்ற தேசுடைத் தூங்கிருள் நீங்கி
அதிக்கின்ற ஐவருள் நாதம் ஒடுங்கக்
கதிக் கொன்றை நாதன் கழல் சேர லாமே"

8. சமாதி : உணர்வும் நினைவும் அற்று உடம்பை மறந்து இறைப் பற்றில் ஆழ்ந்திருக்கிற யோகநிலை சமாதி எனப்படும். இதனால் சிவயோக சித்திகிட்டும்.

"மண்டலம் ஐந்து வரைகளும் ஈராறு
கொண்டிட நிற்கும் குடிகளும் ஆறெண்மர்
கண்டிட நிற்கும் கருத்து நடுவாக
உண்டு நிலாவிடும் ஓடும் பதத்தையே"

9. ஞானம் : ஞானத்தின் மிக்கவர்களே நரரின் மிக்கார் என்று கூறுவதோடு ஞானத்தால் அடையும் பேற்றை

"இருக்குஞ் சேம இடம் பிராமமாகம்
வருக்கம் சராசரம் ஆகும் உலகம்
தருக்கிய ஆசாரமெல்லாம் தருமே
திருக்கிலா ஞானத்தைத் தேர்ந்துணர்ந்தோர்க்கே"

தன்னிடமிருந்து உருவான பிரமனைப் படைப்புத்தொழில் புரிய கட்டளையிட்டார் என்பதனை இப்பாடலின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார் திருமூலர்.

"ஊழி வலஞ்செய்தங்(கு) ஓடும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்

வீழ்இத் தலைநீர் விதித்திது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியைவென் றானே''

**நற்பண்புகளே இறைவனை அடையும் வழி**

சித்தத்துள்ளே சிவனைக் காண்பதே பிறவிப்பயன் என்று இருந்த சித்தர் பெருமக்கள் பார்க்கும் இடங்களையும், காணும் மனிதர்களையும் சிவனாகக் கண்டனர். நடப்பவையெல்லாம் அவன் செயல் என்றிருந்தனர். முக்காலங்களின் இயல்பை அறிந்து 'நான்' 'எனது' என்னும் செருக் கொழிந்து செயலற்றிருந்தனர். அழகிய சிவந்த அருள் சுடரான சிவபெருமான், அவரவர் பக்திக்கும், பக்குவத்துக்கும் ஏற்ப அருள் பாலிப்பான். சித்தமாகிய ஆன்மாவுக்குச் சித்தாகிய பரம்பொருளை இரண்டறக் கலக்கச் செய்ய வேண்டும் என்கின்றனர் சித்தர்கள்.

''அப்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உம்பெனப் பேர்பெற்று உருச்செய்த அவ்வுரு
அப்பினில் கூடியது ஒன்றாகு மாறுபோல்
செப்பினில் சீவன் சிவத்துள் அடங்குமே''

உப்பினில் உருவம் செய்து நீரினில் விட்டால், உப்பு வேறு நீர் வேறாகத் தோன்றாதபடி தண்ணீரோடு இரண்டறக் கலந்து விடும். இதைப் போலவே சீவன் சிவத்தோடு கலந்து சிவனுள் அடங்கும் என்ற கருத்தினை மேற்கூறிய பாடலின் வழி சிறப்பாக விளக்குகிறார்.

**நிலையாமை**

பிறந்த குழந்தை, உடல் அமைப்பு எதுவும் நாம் விரும்பியபடி அமைந்ததல்ல. இவ்வுல வாழ்க்கை நாம் விரும்பியபடி வாய்ப்பதில்லை. பாராளும் மன்னராக சுற்றம் புடை சூழ வந்தாலும், போகும் உயிரைப் போகாது தடுக்க இயலாது.

''அத்திப் பழமும் அரைக்கீரை நல்வித்தும்
கொத்தி வலைப்பெய்து கூழ்அட்டு வைத்தனர்
அத்திப் பழத்தை அரைக்கீரை வித்துண்ணக்
கத்தி எடுத்தவர் காடு புக்காரே''

**ஒழுக்கம்**

ஒருவனை மேன்மையடையச் செய்வது ஒழுக்கம். நல்ல நடத்தை யினால் உடனே நன்மைகள் கிடைக்காவிட்டாலும் பின்னால் நன்மைகள் முளைப்பதற்கு அது விதைத் தெளிப்பதாகும். அவ்வொழுக்கத்தினால் மேன்மையை எய்துவார்கள் என்ற திருவள்ளுவரின் 'ஒழுக்கமுடைமை' என்ற அதிகார கருத்துக்களை பின்வரும் பாடலின்வழி எடுத்துரைக்கிறார் திருமூலர்.

"விழுப்பமும் கேள்வியும் மெய்கின்ற ஞானத்(து)
ஒழுக்கமும் சிந்தை உணர்கின்ற போது
வழுக்கி விழாவில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம் தாமே"

**நடுவு நிலைமை**

துலாக்கோல் போல நேர்மை கோணாமல் வழக்கைச் சீர்தூக்கிப் பார்த்து ஒரு பக்கத்திலும் சாய்ந்து விடாமல் இருப்பது தான் மேலான குணமுள்ளவர்களின் சிறப்பு. நடுவு நிலைமை தவறாமல் நடந்து கொள்ளும் ஒருவன் ஏழையாக இருப்பினும் அதை ஒரு குறையாக எண்ணாமல் உலகம் அவனைச் சிறப்புள்ளவனாகவே மதிக்கும். நடுவு நிலைமை பிறழாதிருப்பதே மிகப்பெரிய பேறு என்கிறார் திருவள்ளுவர்.

திருமூலரோ நடுவுநிலைமை தவறாதிருப்பது 'உயர்ந்த ஞான மார்க்கம்' என்பதனை பின்வரும் பாடலின் வழி தெளிவு படுத்தியுள்ளார்.

"நடுவு நின்றார்க்கு அன்றி ஞானமும் இல்லை
நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை
நடுவு நின்றார் நல்ல தேவரும் ஆவர்
நடுவு நின்றார்வழி நானும் நின்றேனே"

முக்தியை, ஞானத்தை, முத்தமிழ் ஓசையை அனுதினமும் ஏத்த வேண்டும் என்பதையும், பிறவா யாக்கை பெரியோன் வறைகின்ற இடங்களையும், அடியவர்க்கும் அடியவராகி அவர் தொண்டு செய்த விதத்தினையும், அடியவர்கள் பின்பற்றும் நெறிமுறைகளையும், அந்நெறி முறைகளின் வழி ஆண்டவனை அடையும் வழிமுறைகளையும் செம்மையாக எடுத்துரைக்கிறார்.

# 52. நிலையாமையில் நிலைபெறல்

திருமதி ப. நல்லநாயகி, தஞ்சாவூர்.

“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்” என்றுணர்ந்து உணர்த்தியவர் திருமூலர். உள்ளிருந்து நம்மை இயக்கிவரும் உயிரை (ஆன்மாவை) காண்பது இயலாது. காணமுடியாத ஒன்றே காணமுடிந்த உடல் உறுப்புகளை இயக்கி வருவது யாவரும் அறிந்ததே. உடலையே உறைவிடமாகக் கொண்ட இறைவனை உறுதிப் பொருளாய் உணர்ந்து இறுதிவரை நிலைபெறுமாறு நிற்றலே திருமூலர் மட்டுமல்ல வழி வழியாய் நம்மோடு வாழ்ந்து ஆன்ம ஒளியாய் இன்றும் வழிகாட்டி நிற்கும் ஞானிகளின் தெளிந்த கருத்தாகும். அதனை திருமூலரின் பாடல்கள் மூலம் விளக்க முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**நித்திரையிலும் விழித்திரு**

தன்னிலை மறந்து, சூழலின் தாக்கமும் உணராமல் ஆழ்ந்துறங்குவது மானிடப் பிறவியின் சாபம் என்றே கூறலாம். தூக்கத்திலும் விழித்திருப்பது எவ்வாறு என்பதையும் அதன் பயன்பாடு குறித்தும் மிகத் தெளிவாக விளக்குகிறார் திருமூலர். வெளி நடப்புகளோ, ஒலியலைகளோ துளியும் பாதிக்காவண்ணம் துயில் கொள்வது ஆனந்தமே.

“தூங்கிக் கண்டார்சில லோகமும் தம் உள்ளே
தூங்கிக் கண்டார்சில யோகமும் தம் உள்ளே
தூங்கிக் கண்டார்சில போகமும் தம் உள்ளே
தூங்கிக் கண்டார்நிலை சொல்லதெவ்வாறே”

இங்கு தூங்குவது என்பது தன்னைச் சார்ந்த உடல், உலகம் என்பவற்றை விலக்கி நிற்றலையும், தம்மைச் சார்ந்த பாசங்களை மறந்திருத்தலையும் காட்டுகிறது. விழித்திருத்தல் என்பது சிவத்தை உள்ளினுள் உணர்ந்து தூங்காமல் தூங்குவதை உணர்த்துகிறார்.

சிவலோகம் முதலிய உலகங்களையும், சிவனோடு, சிவபோகமாய்தான் ஒன்றிவிட்டதையும் அதனால் அடைந்த சிவானந்தத்தை உணர்த்தி நிற்றலை இப்பாடல் மிக அழகாக, எளிமையாகத் தெளிவாக விளக்குகிறது. எந்தவித இயக்கமோ, செயலோ இன்றி இறைவனை சொந்தமாய் உணர முடிதல் என்பது சற்றே கடினம்தான். சும்மா இருத்தலே இயலாத ஒன்று அதனினும் தூங்கும்போது எல்லாவற்றையும் விட்டுவிடுதல் இயல்பு. ஆனால் விடாமல்

இறையைப் பற்றியிருத்தல் என்பது சாத்தியமில்லாத ஒன்று. எனவே தான் நிலைபெறுமாறு இறைவனை எளிதாக பற்றியிருப்பது பற்றிப் பல பாடல்களில் குறிப்பிடுகிறார் திருமூலர்.

**யாக்கையாற்பயன் என்?**

யாக்கை நிலையாமை பற்றி மிகத் தெளிவாகக் குறிப்பிடுகிறார் திருமூலர்.

மானுடப் பிறவியெடுத்த யாவருக்கும் யாக்கையால் வரும் துன்பம் கோடானு கோடியாகும். நோய் வரும். இளமைபோகும், மனம் பேதலிக்கும், இயக்கங்கள் நின்றுபோகும், ஒருநாள் யாக்கையே இல்லாமல் போகும்.

**பண்டம்பெய் கூரைபழகி விழுந்தக்கால்**
**உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செல்லார்**
**கொண்ட விரதமும் ஞானமும் அல்லது**
**மண்டி அவருடன் வழிநடவாதே**

பொருட்கள் நிரம்பி வழியும் மேற்கூரையுடைய வாழும் இல்லம் போல உடம்பு. அவ்வுடல் உழைத்து உழைத்து தேய்ந்தழிந்தபின் பயன் என்ன விளையும்? உழைப்பால் பயனடைந்த மனைவியும், மக்களும், சுற்றமும் இறுதியில் துணைவரமாட்டார்கள். அவன் மேற்கொண்ட விரதமும், ஞானமும் மட்டுமே ஆன்மாவின் துணையாய் வரும் என்பதை விளக்கி நிற்கிறது இப்பாடல். எனவே பிறப்பெறுத்த மனிதன் எவ்வாறிருக்க வேண்டும் என்பதனையும் தெளிவுபடுத்துகிறார்.

**"மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரம்**
**திண்ணென்றிருந்தது தீவினை சேர்ந்தது**
**விண்ணின்று நீர்விழின் மீண்டும்மண் ணானாற்போல்**
**எண்ணின்றி மாந்தர் இறக்கின்றவாறே"**

இரண்டு பாண்டங்கள் ஒரேவகை மண்ணாலே செய்யப்பட்டனவாயினும் அவற்றுள் ஒன்று தீயிலிட்டுச் சுட்டப்பெற்றது. மற்றது சுடப்படாதது. இவ் விரண்டையும் வெட்டவெளியில் வைத்தால் வானத்து மழை சுடப்படாத பாண்டத்தைக் கரைத்து மீண்டும் மண்ணாகவே ஆக்கிவிடுவதைக் காணலாம். ஆனால் சுடப்பெற்ற பாண்டமோ மழையினால் எந்தக் கேடுமின்றி நல்ல நிலையில் உள்ளதைக் காணமுடியும். அது போலத்தான் மனிதப் பிறவியும்.

மெய்யுணர்வு என்னும் இறை உணர்வைக் குறிக்கோளாகக் கொண்டு நெறிதவறாமல் வாழ்ந்தால் நெடுங்காலம் வாழ்வதோடு உடல் வீழும் காலத்தும் இறைத்துணையோடு ஆன்மா கேடின்றி செல்லும் என்கிறார் திருமூலர்.

ஊருக்கே தலைவன் ஆனாலும், நாட்டுக்கே நாயகன் ஆனாலும், "நாட்டார்கள் பின் செல்ல முன்னே பறைகொட்ட நாட்டுக்கு நம்பி கடைவழியே சென்று சுடுகாடு அடைந்தே தீர வேண்டும் என்பதே விதி

**வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்**
**அச்சகலாதென நாடும் அரும் பொருள்**
**பிச்சது வாய்ப்பின் தொடர்வுறும் மற்றவர்**
**எய்ச்சகலாநின் றிளைக்கின்ற வாறே**

இறந்தவனது உடம்மை ஊரார் கொண்டு போய்ப் புறங்காட்டில் வைத்துத் தீயிலிட்டதைக் காணும்போது என்றும் அச்சுப் போல் உடன் இருந்து துணைபுரியும் அரிய பொருளாகிய இறைவன் ஒருவனே அவரைப் பின்தொடர்ந்து செல்வான் என்பதை அறிந்த யாவரும் ஒன்றும் செய்ய இயலாது வருந்தி நிற்பதைக் காணலாம் என்பதை மிகத் தெளிவாகத் தெளிவுபடுத்துகிறார் திருமூலர்.

"மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக்காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்பே"

என்று சிவஞான சித்தியும் (சூ2. 92) அறுதியிட்டுக் கூறுகின்றது.

எனவேதான் யாக்கை நிலையாமையை உணர்ந்தோர் அஃது உள்ளபோதே அதனால் உண்டாகும் பயனைப் பெற முயலவேண்டும். இல்லாவிடில் துன்பமே நேரும் என்கிறார். அந்தப் பயன் என்ன என்பதையும் தெளிவுபடுத்தி விடுகிறார்.

**செல்வம் நிலையாமை**

"பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை" என்பது வள்ளுவன் வாக்கு. ஆனால் அருளைப் பெற இவ்வுலகத்திலேயேதான் உடலோடு உயிர் இருக்கும் பொழுதேதான் செய்லாற்ற முடியும் என்பதனை மிக அழகாகக் கூறுகிறார் திருமூலர்.

**தன்னது சாயை தனக்குத வாதுகண்**
**டென்னது மாடென்றிருப்பார்கள் ஏழைகள்**
**உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது**
**கண்ணது காணொளி கண்டு கொளீரே**

தம்முடைய நிழலே வெய்யிலின் வெப்பத்தைத் தணிக்க தமக்குதவாது. அதேபோல் தமது உடலுடன் கூடிய உயிரே ஒருநாள் தமக்குத் துணை யாக்க காலாது நில்லாமல் பிரிந்தோடும். அங்ஙனமிருக்க புறமே சேர்த்த செல்வம் எவ்வாறு நிலைபெற்று உதவும் என்கிறார். இதையே கந்தலங்காரமும் இம்மி பிசகாது வலியுறுத்துவதைக் காணலாம்.

"வெய்யிற் கொதுங்க உதவாஉடம்பின் வெறுநிழல் போல்
கையிற்பொருளும் உதவாது காணுங் கடைவழிக்கே"

என்கிறது. பட்டினத்தாரும் இதையே,

"காதற்ற ஊசியும் வாராது காண்நும்
கடை வழிக்கே"

என்று பாடுகின்றார். திருமூலர் மற்றோரிடத்து

"மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம் போல
அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடு பேறாகச்
சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறியாரே"

மகிழ்ச்சிக்குக் காரணமாகிய செல்வம் எந்த நேரத்திலும் நீரின் மேல் செல்லும் மரக்கலம் திடீரென கவிழ்ந்து விடுவதுபோல உடலைவிட்டுப் பிரிந்துவிடும். அப்படியிருக்க அதனையே உடம்பிற்கு ஒரு பேரின்பப் பேறுபோல நினைத்து வாழ்வது தகுமோ? என்று கூறும் அவர் கலக்க மடையாது செல்வத்தின் நிலையாமையில் நிலைபெறும் வழியையும் உணர்த்துகிறார்.

"தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே"

செல்வத்தைத் துணைக்கொண்டு கூற்றுவனை வெல்லுதல் இயலுமோ? இயலவே இயலாது என்பதனைத் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள்.

செல்வத்தைக் கொண்டு நல்லறம் செய்து இறைப்பணிக்கேத் தம்மைச் சமர்ப்பித்தல் அறத்தினால் ஏற்பட்ட நல்வினையும், இறை பக்தியும் தோன்றாத் துணையாய் இறுதிவரை நிலைபெற்றிக்கும் என்பதனை உணர்த்துகிறார் திருமூலர்.

**இளமை நிலையாமை**

முதுமையில் யாக்கையும் செல்வமும் இருந்து பயன் என்ன? இளமை நிலையில்லாதது என்றறிந்திருந்தும் காலத்தே ஆற்ற வேண்டிய அறப்பணிகளை ஆற்றாவிடின் காலம் கடந்துதான் ஆற்ற இயலுமோ? நாவுக்கரசர் இதனையே,

"முன்பெலாம் இளைய காலம் மூர்த்தியை நினையாதோடி
கண்கண் இருமி நாளும் கருத்தமிந் தருத்தமின்றிப்
பின்பகல் உணங்கல் அட்டும் பேதைமார் போன்ற துள்ளம்"

என்றும்,

"புள்ளிருக்கு வேளூரானைப்போற்றாதே ஆற்றநாள்
போக்கினேனே"

என்றும் வேதனையோடுப் பாடிப் பரவுகிறார். முதுமையில் நிலை தடுமாறி, நினைவிழந்து, சொல்லிழந்து போவதே இயல்பு. எனவே இளமையிலேயே "நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே என்றே கட்டளையிடுகிறார் நாவுக்கரசர். இதையே திருமூலரும் நிலையில்லாத இளமையைக் கொண்டு நிலைக்கக்கூடிய ஈசனருளை வேண்டிப் பெற்றுப் பயனடையுமாறு கூறுகிறார்.

"தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை
ஆய்ந்தற்ற பிள்ளை அரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ளபோதே"

மெல்ல மெல்லத் தேய்ந்து முடிகின்ற இளமைப் பருவம் இறுதியில் செய லாற்றலே முடியாத நிலையை இந்த யாக்கை எய்திவிடும். ஆதலால் நன்கு இயங்கத்தக்க இளமை உள்ளபோதே இன்றப் பெருமையை உணர்ந்து உள்ளத்தில் நிலைப்பெறுமாறு பதிய வைத்துவிடுங்கள் என்கிறார்.

செய்யும் அறமாயினும், ஆற்றும் தொண்டாயினும், ஆயுட்காலம் இன்னும்தான் உளதே என்றே மெத்தனமாகவே இருந்திடுவர். முதுமையில் ஆற அமர அமைதியாக இறைவனை தொழுதேத்துவோம் என்றே எண்ணி இளமையில் வீணே திரிந்து நாள் போக்குவர். அவர்களைப் பார்த்துணர்ந்த திருமூலர்,

எய்திய நாளில் இளமை கழியாமை
எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்
எய்திய நாளில் எறிலறியாமல்
எய்திய நாளில் இருந்து கண்டேனே

என்கிறார். மக்களுக்கு வகுக்கப்பட்ட ஆயுள் நூறாண்டு எல்லை என்றே நினைந்து செயலாற்றுகின்றனர். ஆனால் சொல்லாமல் கொள்ளாமல் இடை யிலேயே கூற்றுவன் வந்து இளமை முடியுமுன்னே அவனை முடித்து விடுகிறான். இதனை நன்குணர்ந்து அல்லும் பகலும் அவனை நினைந்து நினைந்து ஏத்தி வழிபட வேண்டும் என்றே வலியுறுத்துகிறார்.

**உயிர் நிலையாமை**

யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை போன்றவற்றைக் கூறி நிலைபெறும் வழியைக் கூறிய திருமூலர் இறுதியில் யாக்கையையே இயக்கும் உயிர் அதனையே இருப்பிடமாகச் கொண்டிருந்த போதினும் ஒருநாள் பிரிந்து யாக்கையையே ஒன்றுமில்லாது ஆக்கிவிடும்.

அப்படிப்பட்ட உயிரின் தன்மையோ அழியாத பேறு கொண்டது. ஆனால் நிலையில்லாத உடலினுள் இருப்பதன் காரணத்தால் உயிரும் நிலையாமை தன்மையை எய்திவிடுகிறது. அவ்வுயிர் இருக்கும் நாளும், போகும் நாளும் யாரும் அறிந்திலர் அறிந்திட்ட ஞானிகளே உயிரின் தன்மை குறித்து விளக்கித் தெளிவுப்படுத்தியுள்ளனர்.

"உடம்பொடுயிரிடை விட்டோடும் போது
அடும்பரி சொன்றில்லை அண்ணலை எண்ணும்
விடும்பரி சாய்நின்ற மெய்நமன் தூதரி
சுடும்பரி சத்தையுஞ் சுழகி லாரே"

என்று திருமூலர் உயிரின் தன்மைப் பற்றிப் பாடுகிறார். உடம்பொடு கூடிநின்ற உயிர், பிரியும்போது, அதனோடு செல்லும் பொருள் யாதும் இல்லை. எனவே அண்ணலை நினைந்து போற்றித் தொழுதேத்தினால் உயிர் இறைத்துணையோடு செல்லும் என்பதுறுதி.

இம்மண்ணுலகில் நொடிக்கு நொடி எல்லாவற்றிலும் மாற்றங்கள் நிலையாமை என்னும் மறைபொருளால் நிகழ்ந்தவண்ணமே உள்ளன. காலைபோய் மாலை வருவதும் இளமைபோய் முதுமை வருவதும் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றது. இதனிடையில்தான் நிலையாமை உள்ளது என்பதை உணரவேண்டும். காலனும் காலமும் யாருக்காகவும், எதற்காகவும் காத்திருக்காதென்பதே திருமூலர் காட்டும் உண்மை.

எனவே நிலையற்ற மானுடப்பிறவி என்னும் அருமையான பிறவியைக் கொண்டு நிலைப்பெறச் செய்யும் இறைத் தன்மையை உள்வாங்கி வாழக் கற்றுக்கொள்வதே மனிதப் பிறவியின் பயன்பாடாகும். வழி வழியாய் வரும் சித்தர்களும், ஞானிகளும், துறவிகளும் இதனையே வலியுறுத்தி வருகின்றனர் என்பதற்குச் சிகரம் வைத்தது போல் திருமூலரின் திருமந்திரப் பாடல்களே அற்புதச் சான்றுகளாகும் என்பதில் ஐயமில்லை.

# 53. திருமந்திரத்தில் சிவன்

திரு. வயி. நாராயணசாமி, புதுவை.

சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கு முன்னோடியாக விளங்குவது திருமந்திரமே ஆகும். இத் திருமந்திரத்தில் சாத்திரங்களின் சாரத்தை மிக எளிமையாகவும் முழுமையாகவும் சொன்னவர் திருமூலர் பெருமான். இவர் ஒன்பது தந்திரங்களாக இருபத்தெட்டு தமிழாகமத்தை மூவாயிரம் பாடல்களாக அருளிச் சென்றுள்ளார். அறுபத்து மூன்று நாயன்மார்களில் காலத்தால் மற்றும் சிந்தனையால் முதிர்ந்தவராகச் சேக்கிழார் பெருமாள் தனது பெரியபுராணத்தில் திருமூலரின் வரலாற்றைச் சித்தரிக்கின்றார். பனிரெண்டு திருமுறைகளில் பத்தாந் திருமுறையாக விளங்குவது திருமூலர் இயற்றியத் திருமந்திரம் ஆகும். தம்மை இறைவன் படைத்ததன் நோக்கமே இறைவனுடையத் தன்மைகளைத் தமிழில் இயம்புவதற்கே என்பதனை,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

என்று திருமூலர் கூறுகின்றார்.

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தொன்மை உடையது சைவம். 'சைவம்' என்ற சொல் சிவம் என்னும் செந்தமிழ்ச் சொல்லின் அடியாகப் பிறந்தது. பழமைக்குப் பழமையாகவும் இன்றைக்குப் புதுமைக்குப் புதுமை யாகவும் விளங்குவது சைவ சமயம் ஆகும். ஐரோப்பா கண்டங்களிலும் சிவன் ஆலயங்கள் பிறந்து வருவது இதற்கு ஒரு சான்றாகும். சைவ சமயம் எந்த ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லை. ஆனால் சமணம் (கி.மு. 599) பௌத்தம் (கி.மு. 560) கான்பூஷியஸ் (கி.மு. 551) கிருத்தவம் (கி.பி.4) இசுலாமியம் (கி.பி. 57) சீக்கியம் (கி.பி. 1469) ஆகிய சமயங்களுக்கு முற்பட்ட சைவ சமயம் என நாம் இறுதியிட்டுக் கூறலாம். தொல்காப்பியம் என்று நாம் கூறும் இலக்கண நூல் சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன் தோன்றி யிருக்கவேண்டும் என ஆய்வறிஞர்கள் கூறுகின்றனர். அதில் 'கடவுள்' என்ற சொல் இடம்பெற்றிருக்கிறது. தொல்காப்பியம் பொருளதிகாரம் 31-ஆம் நூற்பாவில் "காமப்பகுதி கடவுளும் வரையார்" என்ற செய்தி உள்ளது. அதைப்போலவே திருமந்திரத்தில் 'கடவுள் என்ற சொல்லையும்

சிவன் என்ற சொல்லையும் திருமூலர் பயன்படுத்தியுள்ளார். அத்திருமந்திரம் வருமாறு

"ஒழிந்தேன் பிறவி; உறவு என்னும் பாசம்
கழிந்தேன்; கடவுளும் நானும் ஒன்றானேன்
அழிந்தாங்கு இனிவரும் யாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார்பு உடைய சிவனைக் கண்டேனே....."

திருமந்திரம் அருளிய் திருமூலர் வாழ்ந்த காலம் கி.மு. 6000-க்கு கி.மு. 3100-க்கும் இடைப்பட்ட காலம் என்று பன்னிருதிருமுறை வரலாறு என்னும் நூலின் இரண்டாம் பகுதி பக்கம் 539-ல் பேராசிரியர் க. வெள்ளைவாரணர் அவர்கள் குறிப்பிடுகிறார்கள் இதிலிருந்து கடவுள் என்ற சொல்லும் அது 'சிவபெருமானே' என்பதும் சுமார் 6000 ஆண்டு களுக்கு முன்பிருந்தே தமிழர் வாழ்வில் இனிதே வழங்கி வந்திருக்கிறது என்பதனையும், சைவசமயம்தான் எல்லா சமயத்திற்கும் முற்பட்டது என்பதனையும் நாம் உணரமுடிகிறது.

திருமந்திரம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை நெறிகளையும் பற்றி விளக்குகின்றது. திருக்கோயில் சென்று சிவபூசை செய்தல், இறைவனது புகழை உளமுருகப்பாடுதல், வலம் வருதல், சிவஞானிகளுக்கு உணவளித்து மகிழ்தல், அவர்களுக்குப் பணிவிடை செய்தல் முதலியவை சரியை நெறி. சிவலிங்கமூர்த்தியை எழுந்தருளப் பண்ணி, அவ்வுருவத் திருமேனியை மந்திரம், கிரியை, பாவனை என்ற மூன்றினாலும் அகத்திலும், புறத்திலும் வைத்து முறைப்படி வழிபாடு செய்தல் கிரியை என்பதாகும். அகந்தையை விட்டொழித்து மமதை கொள்ளாமல் வாழ்வதும் கிரியை எனக் கூறலாம். உடல்பற்றை விட்டுத் தியானித்தல் இறைவனின் திருவடியைச் சேர வழி வகுக்கும் யோகமாகும். எவ்விதப்பற்றுமில்லாமல் இறைவனிடம் ஒன்றறக் கலப்பது ஞானமாகும். இவைகளைத் திருமந்திரம்,

'பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசுஅற்ற யோகத்தில்
உய்த்தநெறி உற்று உணர்கின்ற ஞானத்தால்
சித்தம் குரு அருளால் சிவம் ஆகுமே" - (திருமந்திரம் 1455)

என்று கூறுகின்றது. அன்பினால் உருகி, நாளும் இடையறாது, அன்பினால் பணி செய்து செம்பொன் போன்ற சிவந்த மேனியின் கமலத்திருவடி முன்பு நின்று வழிபடுவோருக்கு உடலுக்குள் சோதியாய் விளங்கி அருள்வான் என்பதனைத் திருமூலர்

'அன்பின் உருகுவன் நாளும் பணிசெய்வன்
செம்பொன் செய்மேனிக் கமலத்திருவடி

முன்புநின்று ஆங்கே மொழிவது எனக்கு அருள்
என்பினுள் சோதி இலங்குகின்றானே' (திருமந்திரம் 1456)

என்று விளக்குகின்றார்.

அன்பின் வழியது உயிர்நிலை என்று கூறியுள்ளார் திருவள்ளுவர். அன்பு, சிவம் இரண்டும் வெவ்வெறானவை அல்ல என்பது திருமூலர் கொள்கை.

'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆகும் அறிந்தபின்
அன்பே சிவமாகி அமர்ந்திருப்பாரே'

என்பது திருமூலர் வாக்கு. சுருங்கக் கூறின், அன்பின் பல்வேறு பரிணாம வளர்ச்சியே காதல், பக்தி என்பதாகும். அறிமுகம் கொண்ட இருவர்பால் தோன்றுவது அன்பு. கணவர் மனைவியரிடையே முகிழ்ப்பது காதல். அடியார் ஆண்டவனிடம் ஏற்படுவது பக்தி. ஆதலால் மனிதர் ஒவ்வொருவரும் சிவமயமாக அன்புகொண்டு ஒழுகினாலே அது பக்தி யின் சிறப்பு என்பது திருமூலரின் கருத்து. அனைத்து உயிர்களுக்கும் இறைவன் சிவன் என்பதனால், இறைச் சிந்தனையோடு வாழ்பவர்கள் வீடுபேறு அடைவர். ஆதலால் திருமந்திரம் இம்மை வாழ்விற்கு இன்பத்தையும் மறுமை வாழ்விற்கு முக்தியையும் தரவல்லது. அன்பே சிவம் என்ற கருத்தை வலியுறுத்துவதன் மூலம் இறைத் தன்மையை திருமூலர் விளக்குகின்றார்.

மேலும் திருமூலர் நாம் இறைவனிடம் தொடர்புகொள்ள மன ஓர்மை இன்றியமையாதது என்பதனை விளக்குகின்றார். மன ஓர்மை இன்றி எண்ணத்தில் வலிமையின்றி எத்தனை ஆண்டுகாலம் தவம் இருந்தாலும் இறை ஒளியைக் காண இயலாது என்பதனை,

'எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதனைக் கண்டறிவார் இல்லை
உண்ணாடி உள்ளே ஒளிபெற நோக்கின்
கண்ணாடி போலக் கலந்து நின்றானே!'

என்றும்

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிராணார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே'

என்றும் திருமூலம் விளக்குவதிலிருந்து நாம் அறிந்துகொள்ளலாம்.

எண்ணத்திட்பத்திற்கும் மன ஒருமைக்கும் தவம் வேண்டும். தவம் என்றால் ஏதோ சடைமுடி வளர்த்துக் காட்டுக்குச் சென்று கடும் முயற்சி செய்வது அன்று.

'உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு'

என்பார் வள்ளுவ பெருமான்.

உயிர் இறக்கம் தவத்தின் இயல்பு. தவத்தின் மற்றோர் இயல்பு தியானம். இத்தியானத்தை செய்யும்போது இரண்டு புருவத்தின் மத்தியில் நாட்டத்தை வைக்கவேண்டும், அப்படிச் செய்கையில் ஏனைய செயல்கள் எல்லாம் ஒடுங்கி இறை எண்ணமே ஓங்கி நிற்கும். இதனை,

'நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டம் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டம் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவன் அவன் ஆமே'

என்று திருமூலர் விளக்குகின்றார்.

இதனையே வடலூர் வள்ளற்பிரான் ஆத்ம அனுபவத்தின் விளைவாக

"சித்தம் சிவமாக்கும் ஜோதி - நான்
செய்தவத்தால் தெரிந்த உட்ஜோதி!
புத்தமுதாகிய ஜோதி - சுக
பூரணமாய் ஒளிர் காரண ஜோதி!"

என இறைவனை ஜோதி வடிவத்தில் கண்டு பேரின்பம் பெறலாம் என்று கூறுவதனை நாம் நினைவில் கொள்ளலாம்.

'ஈதல்' என்ற சொல்லை மனிதர் வாழ்வில் கொள்கையாகக் கொள்ளல் வேண்டும் என்பதனை திருமூலர் கூறும்போது, கோயிலில் சென்று உணவுப் படைப்பதைவிட, நடமாடும் மனிதருக்கு உணவைப் பறிமாறுங்கள் என்று கூறுகின்றார்.

"படமாடக் கோயில் பகவற் கொன்றீயின்
நடமாடக் கோயில் நம்பற்கங் காகா
நடமாடக் கோயில் நம்பற் கொன்றீயின்
படமாடக் கோயிற் பகவற்க தாமே"

என்பது அவரது வாக்கு மேலும் அவர்

"யாவர்க்கு மாம் இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை

யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம் பிறர்க்கு கின்னுரை தானே"

என்றும் எளிமையாகவும் இக்கருத்தினைக் கூறுகின்றார்.

திருமந்திரத்தை நமக்கு அளித்து பேறுபெற்ற திருமூலரை தேவர்களும் வாழ்த்தினார்கள் என்பதனை

"இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிடிகோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே!"

என்ற திருமந்திரத்தால் நாம் உணரமுடிகின்றது.

# 54. திருமூலரின் சிவானுபவம்

முனைவர் தா. நீலகண்டபிள்ளை, நாகர்கோவில்.

பன்னிரு திருமுறை வைப்பில் பத்தாம் திருமுறையாக விளங்குவது திருமூலரின் திருமந்திரம். தமிழ் மந்திரம் என அழைக்கப்பெறுவதும் இதுவே ஆகும். திருமூலர் சைவ சமய தத்துவங்களை எல்லாம் ஒருங்கு திரட்டி ஆண்டிற்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல்களை எழுதியுள்ளார் என்பது வரலாறு. திருமூலரை ஆதிசித்தர், முதல்சித்தர், சிவநாதசித்தர், சிவயோகர் என்றும் குறிப்பிடுவர். திருமூலரின் திருமந்திரம் சிவநெறி சார்ந்த மெய்ப்பொருளாகும். நூலினுள் மந்திரம், தந்திரம், யந்திரம் இவற்றுடன் மருத்துவம், சோதிடம், அறம் எனப் பல செய்திகள் காணப் படுகின்றன. தோத்திரத்திற்குத் திருவாசகம், சாத்திரத்திற்குத் திருமந்திரம் எனும் கூற்றும் உண்டு. திருமந்திரத்தில் சிவானுபவ தத்துவங்கள் பல வாறாகப் பேசப்படுகின்றன. அவற்றின் நுட்பங்களைக் காண்போம்.

**சதாசிவம்**

ஆணும் பெண்ணும் இணைந்ததே வாழ்க்கை. உலகம் முழுவதும் ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் வாழ்வையே வாழ்க்கை என்கின்றனர். இவ்வுண்மையை உணர்த்தும் வகையில் அம்மையப்பனாகக் காட்சியளிக்கும் இறைவனின் திருவுருவம் சதாசிவம் என்றழைக்கப்படும். சக்தியும் சிவனும் ஒன்றே. இவ்விரண்டும் இல்லாமல் எப்பொருளும் தோன்றாது என்பதனை 'சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை' என்று (திரு. 1741) திருமந்திரம் கூறுகின்றது. சத்தி அல்லது சிவம் எதனை வழிபட்டாலும் அது சதாசிவ வழிபாடாகும். 'சிவபெருமானுக்கு ஐந்து திருமுகங்கள் உண்டு. ஐந்தும், ஐந்து திசைகளை நோக்கியுள்ளன. ஐந்து முகங்களும் ஐவகை வண்ணங்களை உடையன இவையாவும் அடியவர் களின் நலன்களுக்காக இறைவன் கொண்ட கோலமாகும். இக்கோலமே 'சிவாயநம' என்று திருமந்திரம் உரைக்கின்றது. இறைவன் உருவமாக, அருவமாக, அருவுருவமாகத் திகழ்கின்றான். ஆண்டான் அரன் அரி அயன் என்பன உருவமாகும். அறிவு, ஆற்றல், ஒலி, ஒளி என்பன அருவ மாகும். சதாசிவத்தின் தன்மை அருவுருவமாகும் என்பதை திருமூலர்,

**'உருவும் அருவும் உருவோ டருவோ**
**மருவு பரமசிவன் மன் பல்லுயிர்க்குங்**
**குருவு மென நிற்கிங் கொள்கையனாகும்'**

என்று உரைப்பர்.

**சிவலிங்க வழிபாடு**

சிவலிங்கம் அருவுருவத்தின் காட்சி. ஆண் பெண் இணைநிலை என்றுமுரைப்பர். இறையன்பர்கள் இறைவனைக் கட்புலனாகக் கொண்டு வழிபடுவதற்கு அடையாளமாக விளங்குவது சிவலிங்கமாகும். சிவன் தானே உலகைப் படைத்துத் தானே உலகைத் தன்னுள் ஒடுக்குகின்றான். என்பதைத்

**'தானே படைத்திடுந் தானே அளித்திடும்**
**தானே துடைத்திடும் தானே மறைத்திடும்**
**தானே யிவைசெய்து தான் முந்தி தந்திடும்**
**தானே வியாபித் தலைவனுமாமே'**

என்று திருமூலர் வெளிப்படையாக உரைக்கின்றார்.

சிவனைத் தேவரும், எண் திசைக் காவல் தெய்வமும் பிற நால்வகைத் தெய்வங்களும் தொழுது போற்றுகின்றனர் என்பது,

**'தேவர் பிரானைத் திசைமுகநாதனை**
**நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை**
**ஏவர் பிரானென் றிறைஞ்சுவர்'**

என்ற திருமந்திர வரிகளால் புலப்படும்.

சிவபெருமான் தன்மீது அன்புடையவர்களுக்கு எளிதில் புலப்படுவான். சிவனடிகளைச் சிந்தையில் இடையறாது எண்ணுபவர்களாலேயே அவனைக் காண இயலும் என்பதைத் திருமந்திரம்,

**'நினைவதும் வாய்மை மொழிவதுவ மல்லாற்**
**கனை கழல் ஈசனைக் காணலரிதாம்'**

என்கிறது.

தமிழ்மீது ஆர்வம் உடையவன் சிவபெருமான் தமிழ் ஆகமப்படி சிவனை வழிபட்டால் இறைவன் மகிழ்வான். அவ்வழிபாட்டிற்குரிய வருக்கு பூவும், புனலும் முட்டில்லாமல் கிட்டும். திருமறைப் பதிகம் பாடி வழிபடுபவரின் உள்ளத்தின்கண் சிவன் கலந்து உறைவான் எனும் உண்மையை,

'உழைக் கொண்ட பூநிர் ஒருங்குடன் ஏந்தி
மழைக் கொண்ட மாமுகில் மேற்சென்று வானோர்
தழைக் கொண்ட பாசந் தயங்கி நின்றேத்தப்
பிழைப்பின்றி எம்பெருமான ருளாமே'

எனும் பாடல் வழி தெளிவுறுத்துகின்றார்.

**சிவத்தொண்டு**

அன்பே சிவம். அன்பிருக்கும் இடத்தில் சிவன் ஜீவனாய் இருப்பார். அன்பில் சிறந்த பக்தர்களின் மனதினைக் கருவறையாகக் கொண்டு சிவபெருமான் எழுந்தருள்வான் என்பதைச் சேக்கிழார் பெருமான் பூசலார் நாயனார் கதைவழி காட்டுகின்றார். திருமூலரும்

'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே'

என்னும் பாடல்வழி உணர்த்துகின்றார். எல்லாம் சிவமயம். அனைத்தும் சிவவடிவம். எல்லா உயிர்களும் சிவனின் அம்சம். எனவே எல்லோரையும் சிவனாக வழிபட வேண்டும். சிவனடியார்களும் சிவபெருமானுக்கு சமம் என்கிறார்.

'படமாடக் கோவில் பகவற் கொன்றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங்காகா
நடமாடக் கோவில் நம்பர்க்கொன்றீயில்
படமாடக் கோவிற் பகவற் கதாமே'

என்னும் பாடலில் சிவனடியார்க்குச் செய்யும் தொண்டு சிவனுக்குச் செய்யும் தொண்டிற்கு சமமானது என்கிறார்.

**தாயுமானவன்**

சிவசக்தியின் ஆற்றலாலே பிரபஞ்சங்களும் ஐம்பூதங்களும் தோன்றின. பிரம்மனின் படைப்பிலும் திருமாலின் காத்தற் தொழிலிலும், உருத்திரனின் அழித்தற் தொழிலிலும் உள்ளிருந்து செயலாற்றும் அந்தர்யாமியாக உள்ளவன் சிவனே என்பதை

'புகுந்து அறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்து அறி வான்புரி சக்கரத்து அண்ணல்
புகுந்து அறி வான்மலர் மேல்உறை புத்தேள்
புகுந்து அறி யும்முடிக்கு ஆகிநின் றாரே'

என்னும் திருமந்திரம் வழி அறியலாம்.

சிவசக்தியின் கூட்டணியினால் ஏழு உலகங்களிலும் படைத்தல் காத்தல் அழித்தல் நிகழுகின்றன என்னும் கருத்தை

'ஓர் ஆயமே உலகேழும் படைப்பதும்
ஓர் ஆயமே உலகேழும் அளிப்பதும்
ஓர் ஆயமே உலகேழும் துடைப்பதும்
ஓர் ஆயமே உலகோடு உயிர்தானே'

என்னும் பாடலில் தெளிவுபடுத்துகிறார்.

சிவபெருமான் தாயைப் போல் காக்கும் தாயுமானவன். ஜீவாத்மாக்களை பரமாத்மாவாக மாற்ற அழிக்கும் தொழிலை மேற்கொள்கிறான். ஆன்மா தன்னைப் பற்றி அறிய மறைத்தல் தொழிலைப் புரிகின்றான். இறைவயப்படும் போது உயிர்களுக்கு இறையருள் கிடைக்கும் என்று தெளிவிக்கின்றார். உயிர்களைத் தாயும் தந்தையுமாகக் கவனித்து வருகின்றார்.

**சன்மார்க்க நெறி**

திருமந்திரம் முழுமையும் சைவ சித்தாந்தச் செம்பொருளாகிய பதி பசு பாசம் பற்றி எடுத்து உரைப்பதுடன் யோகப்பயிற்சியின் நுட்பங்களையும் விளக்கிக் கூறுகின்றது. அன்பு செய்வதுதான் சிவவழிபாடு. மனிதர்களே இறைவன் என்று உரைக்கின்றது. வள்ளலார் கூறும் சன்மார்க்கம் என்பது எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு அவ்வுயிர் அடையும் துன்பத்தை விலக்கி இறைவனுடன் ஒன்றுவதே சன்மார்க்கத்தின் நோக்கம். இதனையே திருமூலரும் மனிதன் சன்மார்க்க நிலை அடைய உடம்பின் பயனை அறியவேண்டும். பிற உயிர்களையும் தம்முயிர்போல பேணும் பக்குவம் பெறவேண்டும். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்ற நிலைபெற்றால் அந்நிலை அடையலாம்.

சன்மார்க்கத்திற்கு மனத்தெளிவும் அமைதியும் வேண்டும். அன்பும் அறிவும் இரண்டறக்கலந்து இறைவன் திருவடியையே எண்ணுதல் வேண்டும். எம்மார்க்கத்திலும் சன்மார்க்கமே நன்மார்க்கமாகும். சன்மார்க்கத்தில்தான் இறைவனும் நாமும் உயிரும் உடம்புமாய் ஒன்றி பேறு பெறமுடியும். அன்பினால் ஆண்டவனை அருகிருந்தும் இணைந்திருந்தும் ஏற்றுதல் முடியும் என்பதனைக் 'கண்டேன் கழல் அதன் அன்பினுள் யானே' (272) என்கிறது திருமந்திரம். வாழ்க்கையின் தலையாய இன்பமே அன்பு கொள்வதும் அன்பு பெறுவதுமாகும். சன்மார்க்கத்தில் அன்புதானே கொடுக்கும். தன்னையே தொடுக்கும். தன்னையே இரண்டறக் கலக்கச் செய்யும் என்கிறார்.

**'இன்பனை இன்பத்து இடைநின்று இரக்கும்**
**அன்பனை யாரும் அறியகிலாரே'**

என்னும் அடிகளால் அன்புறவான சன்மார்க்கத்தின் சால்புகளை விளக்குகின்றார். அன்பினால் ஆன்மநேய ஒருமைப்பாட்டோடு ஆண்டவனை அணுகிச் செய்யும் காரியம் எல்லாம் இன்ப துன்பங்களைக் கடந்து நிற்பதாகும். இதுவே பேரின்ப நிலை இதனைத் திருமூலர்,

**'புணர்ச்சியுள் ஆயிழை மேல் அன்பு போல**
**உணர்ச்சியுள் ஆங்கே ஒருங்க வல்லார்க்கு**

உணர்ச்சியில்லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அது இது ஆமே'

என்கிறார். மேலும்,

'அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி
இன்புறு கண்ணியொடு ஏற்க இசைந்தன
துன்புறு கண்ணி ஐந்தாடும் துடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமின் நீரே'

என்று சன்மார்க்க நெறியைச் சாரும் வகையைத் திருமூலர் காட்டுகின்றார்.

கடவுளிடம் நாம் அன்பு காட்டவில்லை என்றாலும், கடவுள் நம் மீது அன்பு செலுத்தவில்லை என்றாலும் நாம் இல்லை. மனித அன்பு திகட்டும் இறையன்பே கடவுள் நிலை. இறைவனை நெருங்கியவரே அவரை நெருங்கியவரே அருள் பெறுவர். ஆன்மநேயக்காதலில் அற உணர்வுக்கே முதலிடம். அது மறுக்கப்படும் போது அன்பு அறமற்றதாகி விடும்.

உலக உயிர்களிடத்தில் அன்பு செய்ய முற்பட்டால் அது இறைவன் மீது செலுத்திய அன்புக்குச் சமமே. இதனையே 'இறையடியவர்க்குச் செய்யும் தொண்டு இறைவனுக்கே செய்தது போன்றது என்ற கருத்து புலப்படுத்தும்.

**சிவனும் உடலும்**

செல்வத்தின் பயன் ஈதல் என்பது போல உடம்பு பெற்றதின் பயன் பிறர்க்கு உதவுதலாகும். நமக்கு மெய்ஞ்ஞானம் சேர உடம்பு உதவும் போது அவ்வுடம்பை வளர்த்திடல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார்.

'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன்'

என்பார்.

'உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே'

என்கிறார் திருமூலர்.

இறைவனை வெளியில் தேடுவது பயனில்லை. நம்முள்ளே இருக்கின்றான். 'உடலிடம் கொண்டாய்' என்பது மணிவாசகம். உடம்பின் அடிவயிற்றுப் பகுதியிலுள்ள சூடு மூலாக்கினி என்றும் குண்டலினி

என்றும் சொல்லப்படுகின்றது. இதனை புருவ மத்தியில் நிலைநிறுத்தி உணர்ந்தால் காயம் தேனில் ஊறிய கனிபோல் நிலைபெற்றிருக்கும். இது கடுமையான சாதகத்தால் கிட்டும்.

மனித உடம்பினை இழுக்கு குற்றம் என்பாரும் உண்டு அதனை மாற்றி திருமூலர் உடம்பு இறைவன் குடிகொள்ளும் கோவில் என்பதால் அதனை வளர்க்கவேண்டும் என்கிறார்.

'உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'

'உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டதான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே'

என்ற பாடல்களால் உடம்பின் சிறப்பினை விளக்குகின்றார்.

ஆன்மாவாகிய உயிர் அனுபவம் பெற்று இறையடி சேர மறுபடி மறுபடி பிறப்பதுண்டு.

'அன்பினில் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர் பெற்றுருச் செய்த அவ்வுரு
அப்பினில் கூடிய தொன்றாகும் மாறு போற்
செப்பினில் சீவன் சிவத்துள் அடங்குமே'

என்பன போன்ற திருமூலரின் சிவானுபவக் கருத்துக்கள் உணர்ந்து இன்புறத்தக்கனவாகும். நாமும் அந்த அனுபவத்தில் மூழ்கித் திளைப்போம்.

# 55. திருமூலரும் சிவலிங்க வழிபாடும்

முனைவர் பி. பார்வதி, மேலகரம்.

சைவ சமயத்தினர் சிவனை முழுமுதற் தெய்வமாகக் கொண்டு வழிபடுகின்றனர். இவர்களின் வழிபாட்டில் சிவன் இலிங்க வடிவில் வைத்து வணங்கப்படுகிறான். இமயம் முதல் குமரி வரை உள்ள சிவன் கோவில்களில் சிவனின் திருவுருவ மேனியைக் காணமுடியாது. இலிங்க வடிவில்தான் சிவன் வழிபடப்படுகிறான். இமயமலைச் சாரலில் பனி லிங்கமாகத்தான் இறைவன் காட்சியளிக்கிறான். இந்த இலிங்க வழிபாடு பற்றிய செய்திகளைத் திருமூலர் தம் திருமந்திரத்தில் எடுத்துரைத்துள்ளார். அதனை இக்கட்டுரை விளக்குகிறது.

சிவலிங்க வழிபாடு என்று தோன்றியது என்பதை அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. சிந்துச்சமவெளி நாகரீக காலத்தில் சிவ்லிங்க வழிபாடு இருந்ததை மொகஞ்சதாரோ, ஹராப்பா, அகழாய்வுகள் எடுத்துரைக்கின்றன. மேலும் இந்த இலிங்க வழிபாடு இந்தியாவில் மட்டுமல்லாமல் எகிப்து, சிரியா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா முதலிய நாடுகளிலும் பரவியிருந்தது என்கிறார் பேரறிஞர் எச்.எம்.வெஸ்ட்ராப் (கோயிற் களஞ்சியம், ப.22)

சிவலிங்க வழிபாடு இரண்டு வகைப்படும். ஒன்று திருக்கோவிலுக்குச் சென்று தாவரலிங்கத்தை வழிபடுவது. மற்றொன்று மந்திரங்களை உச்சரித்தும் இலிங்க வடிவை அணிந்தும், இலிங்க வடிவை வைத்து பூசித்தும் வணங்கும் வழக்கமாகும். தாவரலிங்கத்தை அசல லிங்கம் என்றும் மற்றவற்றை சல லிங்கம் என்றும் அழைப்பர்.

**தாவரலிங்கம்**

தாவரலிங்கம் என்பது நினைவுக்கு நிலைக்களமாய் அமைக்கப்பட்ட பூர்வலிங்கமாகும். இதனை ஓரிடத்திலிருந்து எடுத்து வேறிடத்தில் அமைக்கக் கூடாது. வேத ஆகமங்களில் கூறப்பட்டுள்ள விதிகளின்படி நித்திய நைமித்திக வழிபாடுகள் நடத்தப்பட வேண்டும். பூசைகள் நடைபெறுவது தடைபட்டால் நாட்டில் குற்றங்கள் பெருநோய்கள் அதிகமாகும், மழை பெய்யாது என்பதை,

**"தாவர லிங்கம் பறித்தொன்றில் தாபித்தால்**
**ஆவதன் முன்னே அரசு நிலை கெடுஞ்**

சாவதன் முன்னே பெருநோய் அடுத்திருங்
காவலன் பேர் நந்தி கட்டுரைத்தானே'' (பா. 515)

என்ற பாடலின் வழி எடுத்துரைக்கிறார் திருமூலர். இத்தாவரலிங்கம் சக்தி சிவமாய் விளங்கும் என்றும் கூறுகிறார். தாவரலிங்கமும் சுயம்பு, தெய்வீகம், காணபத்தியம், மானுடம், ஆர்சிகம், அசுரம், சுரர், பாணம் எனும் எட்டு வகைப்படும். தானே தோன்றுவது சுயம்பு லிங்கமாகும். இதனைத் திருமுல்லைவாயில் சிவன்கோயிலில் காணலாம். திருமால் பிரமன் போன்ற தெய்வங்களால் உருவாக்கப்பட்டு வணங்கப்பட்ட இலிங்கங்கள் 'தெய்வீகம்' என அழைக்கப்படுகிறது. சீர்காழியில் உள்ள இலிங்கம் பிரமன் அமைத்து வழிபட்ட இலிங்கம் என்பர்.

நந்தி முதலிய கணங்களால் வழிபடப்பட்ட இலிங்கம் "காணபத்தியம்" என அழைக்கப்படுகிறது. திருத்தணிகையில் குமரேசர் சிவபெருமானை இலிங்க வடிவில் வழிபட்டார் என்றும் அங்கு இருக்கும் இலிங்கம் காணபத்திய லிங்கத்திற்குச் சான்றாகும் என்றும் கூறுவர்.

பல்லவ மன்னன் இராஜசிம்மன் அமைத்த காஞ்சி கைலாசநாதர் கோயில் இலிங்கம் மானுடர் அமைத்து வழிபட்ட இலிங்கத்திற்குச் சான்றாகும். காஞ்சிபுரத்தில் உள்ள இலிங்கம் மதங்க முனிவர் வழிபட்ட இலிங்கமாகும். இது "ஆர்சிகம்" என்பதற்குச் சான்றாகும். தக்கன் அமைத்து வழிபட்டதாகக் கூறும் தக்கீசர் கோயில் இலிங்கம் "அசுரம்" என்பதற்கு எடுத்துக்காட்டாகும், காஞ்சியில் உள் சுரசுரேஸ்வரர் கோயில் லிங்கம் தேவர்கள் உருவாக்கி பூசை செய்த "சுரர்" என்பதற்குச் சான்றாகும். ஸ்ரீ சைலத்தில் காணப்படும் இலிங்கம் பாணாசுரன் வழிபட்ட "பாணம்" என்ற இலிங்கத்திற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

**சல லிங்கம் / சங்கமலிங்கம்**

மண்ணாலும், கல்லாலும், உலோகங்களாலும், மரங்களாலும், மரகதம் போன்ற மணிகளாலும் செய்யப்படும் இலிங்கங்கள் சலலிங்கம் அல்லது சங்கம லிங்கம் என்று அழைக்கப்படுகின்றன. இத்தகு இலிங்கங்களைச் செல்லுகின்ற இடத்திற்கெல்லாம் எடுத்துச் செல்லத்தக்க வகையில் சிறிய இலிங்கமாகச் செய்து வணங்குவர், திருமூலர் காலத்திலும் இத்தகு இலிங்கங்கள் அமைத்து வழிபட்டனர் என்பதை,

"முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமுங்
கொத்துமக் கொம்பு சிலை நீறு கோமளம்
அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்
உய்த்ததின் சாதனம் பூமண லிங்கமே'' (பா. 1690)

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. மேலும் இறுகிய தயிர், தூயநெய், பால், மெழுகுவதற்குப் பயன்படும் பசுஞ்சாணம், துரிசகன்ற செம்பு, தழல்,

பாதரசம், புனலின் கண் உண்டாகும் சங்கு, சுடப்பட்ட செங்கல், அழகிய வில்வம், பொன் முதலிய பதினாறு பொருள்களுள் ஏதேனும் ஒன்றினால் இலிங்கம் செய்து வழிபடலாம் என்றும் கூறுகிறார். (பா. 1691)

## இலிங்க வடிவு

தாவரலிங்கம், சிவலிங்கம் பற்றி பேசிய திருமூலர் இலிங்க வடிவு எவ்வாறு இருக்கும் என்பதையும் அது எதனுடைய அடையாளம் என்பதையும் மிக விளக்கமாக எடுத்துரைத்துள்ளார். இலிங்கத்தின் பீடம் ஓங்காரமாகும். அதன் நடுப்பகுதி கண்டம் என அழைக்கப்படுகிறது. இதனையே 'ம'கரம் என்கின்றனர். உள்வட்டம் 'உ'கரம் எனவும் மேற்பகுதி 'அ'கரம் என்றும் கூறப்படுகிறது. இதனைத் திருமூலர்,

"இலிங்க நற்பீடம் இசையும் ஓங்காரம்
இலிங்க நற் கண்ட நிறையு மகாரம்
இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்
இலிங்க மகார நிறை விந்து நாதமே" (பா. 1722)

என்ற பாடல்வழி எடுத்துரைப்பதோடு சிவலிங்கத்தின் மேற்பகுதி கீழிருந்து அகரம், விந்து, நாதம் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டதாகவும் கடைசி வரி வழி விளக்குகிறார்.

நாதத்திலிருந்து விந்து தோன்றும் ஓசை செவிக்குப் புலனாகும். ஒளி கண்ணுக்குப் புலனாகும். நாத விந்துக்களிலிருந்து சிவசக்திப் பிரிவுகள் தோன்றும். சிவனிடத்திலிருந்து அறிவும் சக்தியிலிருந்து பேராற்றலும் வெளிப்படும். இதனை விளக்கும் வகையிலேயே இலிங்க வடிவு அமைந்துள்ளது என்கிறார் திருமூலர்.

இலிங்க வடிவைப் பற்றி கூறிய திருமூலர் இலிங்கங்களின் வகை களையும் எடுத்துரைக்கிறார். அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவ லிங்கம், ஆன்மலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் என்ற ஆறுவகைகளைக் கூறி ஒவ்வொன்றின் வடிவு, அதன் சிறப்புத் தன்மைகள், அதற்குரிய சிறப்பு மந்திரங்கள், அந்த இலிங்கங்களை வழிபடும் முறை போன்ற வற்றையும் திருமூலர் எடுத்துரைத்துள்ளார்.

## அண்டலிங்கம்

இந்த அண்டமே சிவனது அடையாளம். எட்டுத் திக்குகளிலும் வியாபித்திருக்கும் அம்மையப்பரின் அடையாளமாகிய சிவலிங்கம் அண்டலிங்கம் என்று அழைக்கப்படுகிறது. இதனைப் பிரணவலிங்கம் என்றும் கூறுவர். சதாசிவனாகிய முழுமுதல் தன்னைவிட்டு நீங்காத சக்தியை வினைமுதற் காரணமாக்க் கொண்டு உலகினைப் படைத்து அருள்கிறான். இச்சிவலிங்கம் ஆலயத்தின் கருவறைக்குள் இருக்கும்

போது அது சூக்கும் லிங்கமாகவும், கருவறையின் மேலுள்ள விமானம் தூயலிங்கமாகவும், கருவறையின் முன்னுள்ள பலிபீடம் பத்திரலிங்கமாகவும் விளங்கும் என்பதை,

**''தூய விமானமுற் றூலம தாகுமால்**
**ஆய சதாசிவ மாகுறற் ஆக்குமம்**
**பாய பலிபீடம் பத்திர லிங்கமாம்**
**ஆய அணியை ஆய்ந்து கொள்வார்கட்கே''** (பா. 1689)

என்ற பாடல்வழி திருமூலர் எடுத்துரைக்கிறார்.

அண்டலிங்கத்தின் வடிவை திருமூலர் ஒரு பாடல்வழி எடுத்துரைக் கிறார். நிலத்தின் கண் அமைந்த ஆவுடையார் சக்தி ஆகும். விண் இலிங்க மாகும். அலைகடல் திருமஞ்சனச் சாலையாகும். இறைவனைத் திருமுழுக் காட்டும் தீர்த்த நீர் மலையில் தவழும் மேகங்களாகும். விண்ணில் உள்ள விண்மீன்கள் உடுக்குகளாகும். தத்துவம் கடந்த எல்லை இல்லாத அண்ட லிங்கத்திற்கு எட்டு திக்குகளும் ஆடையாகும் என்ற கருத்தில் அண்ட லிங்கத்தின் வடிவை,

**''தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாற்**
**திரைபொரு நீரது மஞ்சன சாலை**
**வரை தவழ் மஞ்சு நீர் வாவிடு மாலை**
**கரையற்ற நந்தி கலை நந்திக்காமே''** (பா. 1695)

என விவரிக்கின்றார். இத்தகைய அண்டலிங்கம் தனக்கு அருள் செய்த தாகவும் தனது உடம்பைக் கோயிலாகக் கொண்டு அருள்செய்தபோது அவன் கொண்ட வியாபகத்தை உணர்ந்ததாகவும் திருமூலர் கூறுகிறார்.

**பிண்டலிங்கம்**

அண்டத்தின் பெரும்பரப்பில் உள்ளன எல்லாம் பிண்டமாகிய மானிட உடலிலும் உள்ளன. எனவே மானிட உடம்பின் வடிவமே சிவலிங்கமாகும். திருமூலரும்,

**''மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்**
**மானுட ராக்கை வடிவு சிதம்பரம்**
**மானுட ராக்கை வடிவு சதாசிவம்**
**மானுட ராக்கை வடிவு திருக்கூத்து''** (பா. 1696)

என்கிறார். மக்களின் உடலையே திருக்கோயிலாகக் கொண்டு எழுந் தருளியுள்ள சிவன் மறை நூல்களைக் கற்றுத் தன்னை அடையவேண்டும் என மக்களுக்கு வழிகாட்டினான். இறைவனை அடையவேண்டும் என்ற எண்ணமுடைய உயிர்கள் உள்ளத்தையே கோயிலாகக் கொண்டு இடங்கலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, அலம்பிடை,

சிங்குவை, பூடை, சங்கினி, குகு எனும் பத்து நாடிகளையும் தூய்மை செய்து சிவன் அருளைப் பெறவேண்டும் எனும் நோக்கத்துடன் வழிபட வேண்டும். அப்பொழுது தாய்ப்பசு கன்றினை எண்ணி அதைத்தேடி வருவதுபோல் சிவனும் தன்னை வணங்கும் உயிர்களுக்கு அருள் செய்வான் என்கிறார் திருமூலர். இதனை,

"கோயில் கொண் டானடி கொல்லைப் பெருமறை
வாயில் கொண் டானடி நாடிகள் பத்துள
பூசை கொண் டான்புல னைந்தும் பிறகிட்டு
வாயில் கொண் டானெங்கள் மாநந்தி தானே" (பா. 1699)

என்ற பாடலில் விவரிக்கின்றார். புலன் ஐந்தும் தன் பின்வரச் சிவனை வழிபட்டால் சிவன் பத்து நாடிகளையும் இடமாகக் கொண்டு அருள் புரிவான் என்று திருமூலர் கூறுவதிலிருந்து அகவழிபாடே பிண்டலிங்க வழிபாடு என்பதை அறியமுடிகிறது.

**சதாசிவலிங்கம்**

தத்துவன் என்பது அருவம். அருவமாகிய தத்துவம் உலகங்களாய் விரிந்து நிற்கின்றபோது அது உருவமாகிறது. உருவமாய் விரிந்தபோது அது இன்பமாகிறது. இங்கே தத்துவம் என்பது சக்தி சிவத்தின் கலப்பாகும். நிலமண்டிலம் சக்தியாகவும் வான்மண்டிலம் சதாசிவனாகவும் விளங்கு கின்றன. இதனை,

"சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சத்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்
சத்தி சிவதத் துவமுப்பத் தாறே" (பா. 1707)

என்ற திருமந்திர பாடல் எடுத்துரைக்கிறது.

சதாசிவலிங்கத்தின் வடிவினைத் திருமூலர் மூன்று பாடல்கள் வழி எடுத்துரைக்கிறார். திருவருளோடு கூடிய இரண்டு திருவடிகளையும், ஐந்து திருமுகங்களையும், பத்து திருக்கரங்களையும், பதினைந்து சிவந்த கண்களையும், முத்து போன்ற நிறத்தையும் கொண்டவர். நஞ்சினைக் கண்டத்தில் நிறுத்தியதால் இருள்பொருந்திய கழுத்தும், வலக்கை ஏந்திய தீயாகிய மழுவும், சுருண்ட செஞ்சடையில் ஒளிவிடுகின்ற பிறைச் சந்திரனும், அருள்பொழியும் சிந்தையும் உடையவரான சதாசிவ மூர்த்தி சிவம் சக்தி என இரண்டும் ஒப்ப நிற்கும் நிலையாகும். இது கற்பனைக் கடந்த ஜோதி வடிவமாகும். ஐம்பூதங்களையும் நடத்தும் சக்தியை இந்த லிங்கம் கொண்டுள்ளது.

சதாசிவமூர்த்தியின் ஐந்து முகங்களில் உச்சிமுகம் வெண்பளிங்கு நிறத்தைக் கொண்டது. கிழக்கு முகம் நல்ல குங்கும நிறம் போன்றது.

தெற்கு முகம் மை போன்றும் வடக்கு முகம் செவ்வரத்தம் பூப்போன்றும், மேற்கு முகம் பால்போன்றும் தோற்றமளிக்கும் என்கிறார். இவ்வைந்து முகங்களும் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் எனும் பெயர்களைப் பெறுகின்றன. இவை முறையே அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல் எனும் ஐந்து தொழில்களையும் செய்கின்றன.

இறைத்தோற்றத்தைக் கூறிய திருமூலர் சதாசிவலிங்கத்தை எத்தகைய மந்திரங்கள் கூறி வழிபடவேண்டும் என்பதையும் எடுத்துரைக்கிறார். ஈசானனை சிரசின் நடுவில் வைத்து "ஈசான மூர்த்தியாய நம" என்றும் இருதயத்தை "அகோர இருதயாய நம" என்றும் முகத்தை "தற்புடை வக்த்ராய நம" என்றும், "வாமதேவரு ஷ்யாய நம" எனும் மந்திரத்தைக் குறியிலும், "சத்யோசாத மூர்த்தியே நம" என்ற மந்திரத்தைப் பாதங்களைத் தொட்டும் கூறவேண்டும் என்கிறார் திருமூலர். இம்மந்திரங்களை "பஞ்சபிரம" மந்திரங்கள் என்றும் கூறுவர்.

சதாசிவலிங்கத்திருமேனி ஐம்பெரும் மந்திரங்களைக் கொண்டு வழிபடப்படுவதால் அவை உருவமற்றவையாய் சதாசிவ உருவத் திருமேனியில் பதிவுறுகின்றன. இவ்வாறு வழிபாடு செய்வதால் சதாசிவலிங்கம் அருவுருவமாகிறது. இச்சதாசிவலிங்கம் நாதவடிவில் திருமூலருக்குக் காட்சி தந்ததை,

"உணர்ந்தேன் உலகினில் ஒண் பொருளானைக்
கொணர்ந்தேன் குவலயங் கோயிலென் நெஞ்சம்
புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே
பணிந்தேன் பகலவன் பாட்டுமொலியே" (பா. 1718)

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. இதனை "உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்" என்றும் கூறுகிறார். சதாசிவலிங்கத்தை ஆருயிர்கள் வழிபட்டால் அவ்வுயிர்களின் உடம்புகள் சிவலிங்கமாகவே நின்றிடும். எனவே உடம்பே தனிமுதற் சிவனாகவும், திருவடிப் பேரின்பமாகவும், சிவமெய்யாகவும் திகழும். எனவே மானிட உடலே சதாசிவ உருவமான சிவலிங்க உருவமாகும் என்கிறார் திருமூலர்.

**ஆன்மலிங்கம்**

ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களிலிருந்து முற்றிலும் விடுபட்ட ஆன்மாவிடம் பொருந்திய ஒளி, ஒலி ஆகிய விந்து நாதமே ஆன்மலிங்கமாகும். விந்து, நாதம் என்ற இரண்டை ஆதாரமாகக் கொண்டே பிரமன் முதலான ஐந்து தேவர்கள் படைத்தல் முதலாகிய ஐந்து தொழில் களையும் செய்கின்றனர். விந்துவே பீடமாய் நாதமே பாணமாய் ஆன்மலிங்கம் அமைந்துள்ளது. ஆன்ம தத்துவமே சக்திக்குப் பீடமாகும். வித்யா தத்துவம் சக்திக்குக் கண்டமாகும். சிவதத்துவம் சக்திக்கு நல்ல இலிங்கமாக அமையும்.

அண்டம், பிண்டம், சதாசிவம் ஆகிய் மூன்றும் சிவபெருமான் திருமேனிகளாகும். அதைப்போன்ற மும்மலங்களில். இருந்து விடுபட்டு தூயதாய் நிற்கும் உயிரும் சிவபெருமானது திருமேனியாகும். இதுவே ஆன்மலிங்கம் ஆகும். அகப்பூசையில் இந்தலிங்கம் இதயத்தாமரையில் இருப்பதாகக் கருதி வணங்கப்படுகிறது. சிவயோகியார் இவ்வழிபாட்டினைச் செய்வர்.

உலகில் உள்ள உயிர்கட்கு நிலைக்களனாக நிற்பவன் சிவன். அந்த அடையாளம் அகரத்தால் குறிக்கப்படுகிறது. அவன் உயிர்களை இயக்குகிறான். இதனை உகரம் என்பர்.

அகர உகரமாகிய இவ்விரண்டும் சக்தியும் சிவமுமாய் தன்மையில் உயிர்ப்பெய்தும். எனவே அகர உகரமே சிவலிங்கமாகும் என்ற கருத்துடன்,

"அகார முதலா யனைத்துமாய் நிற்கும்
உகார முதலா யுயிர்ப்பெய்து நிற்கும்
அகார உகார இரண்டு மறியில்
அகார உகாரம் இலிங்கம தாமே" (பா. 1723)

என்ற பாடலை இயற்றியுள்ளார் திருமூலர்.

ஆன்மலிங்கம் எவ்வாறு தோன்றுகிறது. அதன் வடிவு எத்தகையது என்பதையும் திருமூலர் எடுத்துரைக்கிறார். ஆதார விந்து சிறந்த பீடமாகும். நாதமே சிவலிங்கமாகும். இவ்விரண்டின் புணர்ச்சியே மனமணி இலிங்கமாகிய ஆருயிர் இலிங்கமாகும். பீடத்தின் குழி திருவடியுணர் வாகிய சிவஞானமாகும். அதன்மேல் தோன்றும் இலிங்கம் சிவமெய்யாகும். எல்லாவற்றுக்கும் உயிருக்கு உயிராய் நிற்கும் பேராவியாகிய பரமான்மா சதாசிவமாகும். இதனை,

"சத்தி நற் பீடற் தகுநல்ல ஆன்மா
சத்தி நற் கண்டந் தகுவித்தை தானாகுஞ்
சத்தி நற் லிங்கற் தகுஞ்சிவ தத்துவஞ்
சத்தி நல்லான்மாச் சதாசிவந் தானே" (பா. 1728)

என்ற பாடல்வழி எடுத்துரைக்கிறார் திருமூலர். அகவழிபாட்டின் வழி ஆன்ம லிங்கத்தை பூசித்ததாக,

"என்றும் நின்றேத்துவன் எம்பெருமான் தன்னை
ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிநந்தானே" (பா. 1762)

எனக் கூறுகிறார் திருமூலர். உலகங்களுக்கெல்லாம் இறைவனாகிய சிவன் தன்னடியார்களின் முழு அன்பு மனத்தினைத் திருக்கோவிலாகக் கொண்டு எழுந்தருளுவான் என்பதை பூசலார் நாயனார் புராணம் வழியும் அறியமுடிகிறது.

**ஞானலிங்கம்**

ஞானமே வடிவாக உள்ளவர் சிவசக்தியாகும். ஞானமே உருவான சத்தியும் சிவபெருமானும் ஒன்றித்து ஒருவரை விட்டு மற்றவர் என்றும் பிரியாது நின்று உயிர்களுக்கு சிவஞானத்தை நல்கும் நிலையை ஞானலிங்கம் உணர்த்துகிறது. எல்லாம் கடந்த இன்பநிலையாகிய சிவமும் ஆற்றலாகிய சக்தியும் இயைந்த சோதி வடிவமாக ஞானலிங்கம் காட்சி யளிக்கும் என்பதை,

"எந்தை பரமனும் என்னம்மை கூடமும்
முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம்பெருங் கண்ணியை
உந்தியின் மேல்வைத் துகந்திருந் தானே" (பா. 1740)

என்ற திருமந்திரப்பாடல் உணர்த்துகிறது. ஆதியாகிய அம்மையோடு கூடிய எல்லா அண்டங்களுக்கும் நன்மையருளும் சிவன் சிவனடியார் களின் ஆரா காதலுக்கு ஆட்பட்டு அவர்களின் எண்ணமாகிய சிந்தையுள் எழுந்தருளுவான் அந்த போரொளியே ஞானலிங்கமாகும்.

**சிவலிங்கம்**

சிவன், சக்தி, பரநாதம், பரவிந்து, சதாசிவன், மகேசன், உருத்திரன், மால், அயன் ஆகிய ஒன்பது வடிவங்களைத் தன்னுள் கொண்ட வடிவே சிவலிங்கமாகும். இது ஞானலிங்கமாகிய சதாசிவத்திற்கு மேலாகிய இலிங்கமாகும். மூலத்திடமிருந்து நடுநாடி வழியாகச் செல்லும் மூல அனலை எழுப்பி அது உச்சத்துளையின் வழி வெளியேறும் வரை (இறக்கும் வரை) ஆவி உடலோடு உறையும். அக்காலங்களில் சிவபெமானை "நமசிவாய" எனும் ஐந்தெழுத்து மந்திரத்தைக் கூறி வழிபடுதல் வேண்டும். இவ்வாறு சிவன் நாமத்தைக் கூறுபவரை இறைவன் விட்டு நீங்கு வதில்லை. அவர்கள் உள்ளத்திலேயே இறைவன் உறைவான். இறைவனிடம் அதீத பக்தி உள்ளவர்களுக்கு, சிவஞானிகளுக்கு அவன் காட்சியளிப்பான். நாயன்மார்கள் நால்வரும், இச்சிவலிங்கத்தில் பரசிவத்தைக் கண்டு பேரானந்தம் பெற்றனர். திருமூலரும் இத்தகைய அருளைப் பெற்றதை,

"ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியினை றானவ னைத்தொழ
வென்றைம் புலனு மிகக் கிடந் தின்புற
அன்றென் றருள் செய்யும் ஆதிபிரானே" (பா. 1744)

என்ற பாடல் வழி திருமூலர் கூறுகிறார்.

1. சிவலிங்க வழிபாடு தொன்மையானது.
2. திருக்கோவிலில் இருக்கும் இலிங்கத்தை தாவரலிங்கம் அல்லது அசல லிங்கம் என்று கூறுவர்.

3. சல லிங்கம் அல்லது சங்கம லிங்கம் என்பது தனிமனிதர் வழிபடும் இலிங்கமாகும்.
4. சல லிங்கம் உலோகம், மண், மரம், மணிகள் போன்றவற்றால் சிறிய வடிவில் செய்யப்படும்.
5. ஒலியும் நாதமும் இலிங்கமாகும். நாதவிந்துக்களே இலிங்க வடிவின் தோற்றத்திற்குக் காரணமாகும்.
6. இந்த அண்டமும், அண்டத்தில் இருக்கின்ற பிண்டமும், அப் பிண்டத்தில் இருக்கின்ற நாத விந்துக்களும், இலிங்கங்களாகக் கருதப்படுகின்றன.
7. உடலின் ஆன்மா ஆன்மலிங்கமாகவும், அதன் சிவ அறிவு ஞான லிங்கமாகவும், எல்லாவற்றிற்கும் காரணமாக விளங்குகின்ற அனைத்தையும் தன்னுள்ளே அடக்கியுள்ள சத்தியும் சிவமுமே சிவலிங்கமாகவும் திகழ்கிறது என்கிறார் திருமூலர்.

# 56. திருமந்திரத்தில் ஆகமம்

முனைவர் சி. பாலு, சிதம்பரம்.

சிவனை முழுமுதற் பரம்பொருளாக கொண்ட சிறப்பினை உடையது சைவம். வேதம், ஆகமம், திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள் இவற்றிற்கு ஆதாரமான நூல்கள் பன்னிரு திருமுறையில் 10-ம் திருமுறையாக வைத்துப் போற்றப்படுவது திருமந்திரம். இது 3000 மந்திரங்களை உடையது. இந்த திருமந்திரம் 9 தந்திரங்களை உடையது. 9 தந்திரங்களும் 9 ஆகமங்களின் சாரமாக எண்ணி போற்றி வழிபடும் நூலாக விளங்குகிறது. திருமந்திரத்தில் ஆகமத்தின் சிறப்பினை காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**ஆகமம்**

ஆகமம் என்ற சொல்லை ஆ+கமம் எனப் பிரிக்கலாம். ஆ = ஆன்மாக்களின், கமம் = பாசங்களை நீக்கஞ் செய்து, முத்துப்பேற்றை அருளுவது. இறைவனது ஐந்து முகங்களிலிருந்து இருபத்தெட்டு ஆகமங்கள் தோன்றினவென்று காரணாகமத்தால் அறிகிறோம். சத்யோஜாத முகத்திலிருந்து காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம் என்ற ஆகமங்கள் தோன்றின. வாமதேவ முகத்திலிருந்து தீப்தம், சூட்சுமம், ஸஹஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம் என்ற ஆகமங்கள் தோன்றின. ஆகோர முகத்திலிருந்து விஜயம், நிச்வாசம், சுவாயம்புவம் அநிலம், வீரம் என்ற ஆகமங்கள் தோன்றின. தத்புருஷ முகத்திலிருந்து ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், பிம்பம் என்ற ஆகமங்கள் தோன்றின. ஈசான முகத்திலிருந்து ப்ரோத்கீதம், லளிதம், சிந்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேச்வரம், கிரணம், வாதுளம் என்ற ஆகமங்கள் தோன்றின என்று அறிய முடிகிறது.

**இறைவன் ஆகம வடிவினன்**

காமிகம் இரண்டு திருவடிகளாகவும், யோகஜம் இரண்டு கணைக்கால் களாகவும், சிந்தியம் திருவடிகளின் விரல்களாகவும், காரணம் தண்டைக் கால்களாகவும், அஜிதம் முழந்தாள்களாகவும், தீப்தம் தொடைகளாகவும், சூக்ஷமம் குய்யமாகவும், சகஸ்ரம் இடுப்பாகவும், அம்சுமான் முதுகாகவும், சுப்ரபேதம் கொப்பூழாகவும், விஜயம் வயிராகவும், நிஸ்வாசம் மூக்காகவும், சுவாயம்புவம் தனங்களாகவும், அனலம் கண்களாவும், வீரம் கழுத்தாகவும்,

ரௌரவம் செவிகளாகவும், மகுடம் திருமுடியாகவும், விமலம் கைகளாகவும், சந்திரஞானம் மார்பாகவும், பிம்பம் திருமுகமாகவும், புரோக்கீதம் நாக்காகவும், லளிதம் கன்னங்களாகவும், சித்தம் நெற்றியாகவும், சந்தானம் குண்டலங் களாகவும், சர்வோக்தம் பூணூலாகவும், பாரமேசுரம் முத்துமாலையாகவும், கிரணம் திருவாபரணமாகவும், வாதுளம் பரிவட்டமாகவும் ஏனைய உபாகமங்கள். திருமேனிப்பூச்சு பரிமளத் திரவியங்கள் புஷ்பங்கள் இவை களாகவும், எல்லா ஆகமங்களின் ஞான பாதமாகிய சைவ சித்தாந்தம் நைவேத்தியமாகவும் இறைவற்கு அமைந்திருத்தலை மகுடாகமம் சிறப்பித்துக் கூறுகின்றது.

"பரனாய்ப் பராபரம் காட்டி உலகில்
தரனாய்ச் பிவதன்மம் தானே சொல் காலத்(து)
அரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கி நின்றானே" (திருமந்திரம் - 61)

"ஆகமமாகி நின்று அண்ணிப்பான் தாள்வாழ்க" (திருவாசகம்)

எனவே இறைவன் ஆகம விடிவினன் என்பதை மேற்கூறிய வாசகத் தினாலும், மகுடாகமத்தினாலும் நன்கு அறிய முடிகின்றது.

இருபத்தெட்டு ஆகமங்களும் அவை கேட்ட அறுபத்து அறுவர் பெயரும், கேட்ட முறையும் :

1. காமிகம் - பிரணவர்-திரிகலர்-ஹரர்
2. யோகம் - சுதா-பஸ்பர்-விபு
3. சிந்திபம் - சுதீப்தர்-கோபதி-அம்பிகை
4. காரணம் - காரணர்-சர்வருத்ரர்-பிரஜாபதி
5. அஜிதம் - சுசிவர்-சிவர்-அச்சுதர்
6. தீப்தம் - ஈசர்-ஈசானர்-ஹுதாசனர்
7. சூட்சுமம் - சூட்சுமர்-வைஸ்சிரவணர்-பிரபஞ்சனர்
8. சகஸ்ரம் - காலர்-பீமர்-தருமர்
9. அம்சுமான் - அம்புசம்யாமர்-அர்க்கர்-ரவி
10. சுப்ரபேதம் - தசேசர்-விக்னேசர்-சசி
11. விஜயம் - அனாதிருத்தர்-பரமேசுவரர்
12. நிஸ்வாசம் - தசாரணர்-சைலசர்
13. சுவாயம்புவம் - நிதனேசர்-பிரமர்
14. அனலம் - வியோமர்-அக்கினி
15. வீரம் - தேஜஸ்-பிரஜாபதி
16. ரௌவம் - பிரம்மேசர்-நந்திகேசர்
17. மகுடம் - சிவர்-மகாதேவர்

18. விமலம் - சர்வாத்மகர் வீரபத்திரர்
19. சந்திரஞானம் - அனந்தர்-கிரஹஸ்பதி
20. பிம்பம் - பிரசாந்தர்-ததீசி
21. புரோத்கீதம் - சூலி-கவசர்
22. லளிதம் - லயர்-ஆலயர்
23. சித்தம் - பிந்து-சண்டேசுவரர்
24. சந்தானம் - சிவநிஷ்டர்-வாயு
25. சர்வோக்தம் - சோமதேவர்-நிருசிம்மர்
26. பாரமேசுரம் - ஸ்ரீதேவி-உசனஸ்
27. கிரணம் - தேவவிபவர்-சம்வர்த்தகர்
28. வாதுளம் - சிவர்-மகாகாளர்

''அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொடிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலி கூப்பி அறுபத்தறுவரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே''

என்று இதனை திருமூலர் முதல் தந்திரத்தில் சிறப்பாக குறிப்பிடுகின்றார்.

**ஆகம சுலோகங்களின் எண்ணிக்கைகள்**

ஆகமத்தில் கோடிக்கு மேல் உள்ள எண்களை குறிப்பிட பல்வேறு வார்த்தைகள் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன.

**''பத்து கோடி சேர்ந்தது ஒரு அற்புதம்**
**பத்து அற்புதம் ஒரு கர்வம்**
**பத்து கர்வம் ஒரு நிகர்வம்**
**பத்து நிகர்வம் ஒரு பிருந்தம்**
**பத்து பிருந்தம் ஒரு மகாபதுமம்**
**பத்து மகாபதுமம் ஒரு சங்கம்**
**பத்து சங்கம் ஒரு மாகசங்கம்**
**பத்து மாகசங்கம் ஒரு சமுத்திரம்**
**பத்து மாகசமுத்திரம் ஒரு மத்திமம்**
**பத்து மத்திமம் ஒரு பரார்த்தம்''**

பரார்த்தற்கு மேற்பட்ட எண் கிடையாது. கணக்கிட்டுப் பார்த்தால் ஒன்றுக்குப் பக்கத்தில் 20 ஸ்தான பூஜ்யம் இட்டால் ஒரு பரார்த்தம் என்பது புலனாகும். ஒவ்வொரு ஆகம நூல்களிலும் எவ்வளவு கிரந்தங்கள் உள்ளன என்பதை இங்கு காண்போம்.

1. காமிகம் - பரார்த்தக்கிரந்தம்
2. யோகஜம் - இரண்டு லட்சங்கிரந்தம்

3. சிந்தியம் - லட்சங்கிரந்தம்
4. காரணம் - நாலுகோடி கிரந்தம்
5. அஜிதம் - பதினாயிரங்கிரந்தம்
6. தீப்தம் - லட்சம் கிரந்தம்
7. சூட்சுமம் - பதுமக்கிரந்தம் (பதுமமாவது நூறு கோடி)
8. சகஸ்ரம் - சங்கக் கிரந்தம்
9. அம்சுமான் - ஐந்து லட்சங்கிரந்தம்
10. சுப்ரபேதம் - மூன்று கோடி கிரந்தம்
11. விஜயம் - மூன்று கோடி கிரந்தம்
12. நிசுவாசம் - ஒரு கோடி கிரந்தம்
13. சுவாயம்புவம் - மூன்றரைக் கோடி கிரந்தம்
14. ஆக்நேயம் - முப்பதினாயிரங்கிரந்தம்
15. வீரம் - பத்துலட்சங்கிரந்தம்
16. ரௌரவம் - எட்டுகோடி கிரந்தம்
17. மகுடம் - லட்சங்கிரந்தம்
18. விமலம் - மூன்று லட்சங்கிரந்தம்
19. சந்திரஞானம் - மூன்றுகோடி கிரந்தம்
20. முகபிம்பம் - மகாபத்மக்கிரந்தம்
21. புரோக்கீதம் - மூன்று லட்சங்கிரந்தம்
22. லளிதம் - எண்ணாயிரங்கிரந்தன்
23. சிந்தம் - ஒன்றரைக்கோடி கிரந்தம்
24. சந்தானம் - ஆறாயிரங்கிரந்தம்
25. சர்வோக்கம் - இரண்டுலட்சம் கிரந்தம்
26. பாரமேஸ்வரன் - பன்னிரெண்டு லட்சங்கிரந்தம்
27. கிரணம் - ஐந்துகோடி கிரந்தம்
28. வாகனம் - லட்சங்கிரந்தம்

இந்த 28ல் முதற்கூறிய 10 (காரணம் முதல் சுப்ரபேதம் வரை) சிவபேதம் என்றும், (விஜயம் முதல் வாதுளம்) வரை உள்ள 18 ஆகமங்கள் ருத்ரபேதம் என்றும் வழங்கப்படுகிறது.

இவ்வாகமங்களில் சிவபேதத்தைக் கேட்டவர்கள் ஒவ்வொன்றிற்கும் மூன்று பேராகவும், ருத்ரபேதத்தை கேட்டவர்கள் ஒவ்வொன்றிற்கும் இரண்டு பேராகவும் கூறப்பட்டுள்ளன.

இவ்வாறு சிவபேதம் மற்றும் ருத்ரபேதங்களைக் கேட்டவர்களின் எண்ணிக்கை 66. இதனையே திருமூலர் திருமந்திரத்தில் குறிப்பிட்டுச்

சொல்கின்றார். காமிக ஆகமம் பூர்வபாகம் தந்திரவிதார படலத்தில் சிறப்பாக இது சொல்லப்பட்டு இருக்கிறது.

இருபத்தெட்டு ஆகமங்களுக்கும் ஒருசேர கிரந்தஎண் கூறுமிடத்து, பரார்த்தத்தின் மேல் பதினொரு லெக்ஷங்கோடியே, முப்பதுகோடி ஐம்பத்தொரு லெக்ஷத்து ஐம்பத்தி நாலாயிரம் கிரந்தமென்றறிந்து கொள்க.

இவை அல்லாமல் மேற்கூறிய 28 ஆகமங்களுக்கும் 207 உபாகமங்கள் இருக்கின்றன. 28 ஆகமங்களும், சரியை, கிரியை, யோனம், ஞானம் எண்ணும் 4 பாதங்களை உடையது.

ஆலய அமைப்பிற்கு இடத்தை தேர்ந்தெடுத்தல், தோண்டுதல், கடக்கால் அமைத்தல், உழுதல், அஸ்திவாரம் அமைத்தல் இவை சரியா பாதத்தோடு தொடர்புடையன ஆலயம் கட்டுதல், சித்திரவர்ண, சிற்பக் கலை நுணுக்கம் கொண்ட ஆலயம் அமைத்தல், அதாவது தூண்களில் மண்டபத்தில் கீழ்த்தளம் வரை உள்ள பகுதிகளில் அவர் அவரின் கற்பனை கிரியா சக்திக்கு ஏற்ப அழகுபடுத்தி அமைப்பது கிரியா பாதமாகும். ஆலய மண்டபத்தின் விளிம்பில் மேல்பகுதி நோக்கி அமைக்கப்படும் கருவறையில் அல்லது ஒவ்வொரு சன்னிதான ஆலயம் நுழைவு வாயிலில் அமைக்கப்படும் கோபுரம் மற்றும் விமானம் யோகபாதத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன. கோபுர விமானத்தின் மேல் வைக்கப்படும் மணிமகுடமாக இறைவனின் சிரசாக விளங்கும் கோபுர மற்றும் விமான கலசங்கள் ஞானத்தை குறிக்கும் ஞானபாதம். இவ்வாறு ஆலயமும், ஆகமும் இரண்டறக் கலந்து விளங்குகின்றன.

**சிவகாம சம்மந்தம் ஆறுவிதம்**

சதாசிவ சுவாமிக்கும் அனந்தேசுவரருக்கும் பரசம்பந்தம், அனந்தேக வரருக்கும் ஸ்ரீகண்டருக்கும், மகத்சம்பந்தம், ஸ்ரீகண்டருக்கும் தேவேந்திரனுக்கும், அந்தராளசம்பந்தம், தேவேந்திரனுக்கும் ரிஷிகளுக்கும் திவ்யசம்பந்தம், ரிஷிகளுக்கும் மனிதருக்கும் திவ்யாதிவ்யசம்பந்தம், மனிதருக்கும் அதிதிவ்ய சம்பந்தம் இவ்வாற சிவாகமங்கள் வருமுறை யிலுள்ள சம்பந்தம் ஆறுவகையாய் இருக்கிறது,

**நந்தி பெற்ற 9 ஆகமங்கள்**

28 ஆகமங்களில் நந்தி பெற்றது 9 ஆகமங்கள். திருமூலர் திருமந்திரத்தில் இதனை சிறப்பாக எடுத்துக்காட்டுகிறார்.

**"பெற்ற நல் ஆகமம் காரணங்காமிகம்**
**உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்**
**மற்றவ் வியாமள மாகுங்காலோத்தரந்**
**துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே"** **(திருமந்திரம்)**

1. காரணம், 2. காமிகம், 3. வீரம், 4. சிந்தம், 5. வாதுளம், 6. வியாமளம், 7. காலோத்தரம், 8. சுப்பிரம், 9. மகுடம் என்பன திருநந்தி தேவர் பெற்ற ஆகமங்களாகும். திருமந்திரம் 9 ஆகமங்களின் சாரமாக விளங்குகின்றன.

| | | |
|---|---|---|
| முதல் தந்திரம் | - | காரணாகமம் |
| இரண்டாம் தந்திரம் | - | காமிகாகமம் |
| மூன்றாம் தந்திரம் | - | வீராகமம் |
| நான்காம் தந்திரம் | - | சிந்தாகமம் |
| ஐந்தாம் தந்திரம் | - | வாதுளாகமம் |
| ஆறாம் தந்திரம் | - | வியாமளாகமம் |
| ஏழாம் தந்திரம் | - | காலோத்தராகமம் |
| எட்டாம் தந்திரம் | - | சுப்பிராகமம் |
| ஒன்பதாம் தந்திரம் | - | மகுடாகமம் |

"தண்ணிலவார் சடையார் தாம் தந்த ஆகமப் பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்ப"

என்று சேக்கிழார் சுவாமிகள் இதனை அருளிச் செய்திருக்கிறார்.

**தந்திரங்களும் செய்திகளும்**

முதல் தந்திரம் : அனைவருக்கும் வேண்டப்படுவனவாகிய கொல்லாமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை முதலிய பொது அறங்களை வலி யுறுத்துகிறது. வேதச்சிறப்பு 6 மந்திரங்களாலும், ஆகமச் சிறப்பு 10 மந்திரங்களாலும் சிறப்பிக்கப் படுகின்றன.

**இரண்டாம் தந்திரம்** : சிவபுராண வரலாற்று உண்மைகள், பஞ்ச கிருத்தியங்கள் முதலிய சைவ சமயப் பொதுக் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.

**மூன்றாம் தந்திரம்** : யோகமுறைகளும், அதன் பயனாக உள்ள அட்டமா சித்தி, காயசித்தி முதலியவைகளும் கூறப் பட்டுள்ளன.

**நான்காம் தந்திரம்** : அசபை முதலிய மந்திரங்கள், திருவம்பலச் சக்கரம், திரிபுரைச் சக்கரம், ஏரொளிச்சக்கரம், வயிரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதிச் சக்கரம், நவாக்கரிச் சக்கரம் போன்ற மந்திர சக்கரப் பேற்றினை அருளியுள்ளார். திருமந்திரம் எனும் நூல் பெயருக்கு இந்த நான்காம் தந்திரமே அடிப்படை கருவாக விளங்குகின்றது.

ஐந்தாம் தந்திரம் : சரியை, கிரியை முதலிய சிவநெறித்தவங்கள், அவற்றின் பயனாகிய சாலோகம், சாமீபம் முதலிய பதமுத்திகள் சொல்லப்படுகின்றன.

ஆறாம் தந்திரம் : சற்குருநிலை, சிவநெறித் துறவு, சிவவேடம், மாணவரது பக்குவம், அபக்குவம் முதலிய சம்பிரதாயங்களைக் கூறுகின்றது.

ஏழாம் தந்திரம் : அண்டலிங்கம், பிண்டலிங்கம், முதலிய இலிங்க வகைகள், சிவபூஜை, மாகேசுவர பூஜை, ஆதித்த நிலை, சற்குரு நெறி, அசற்குருநெறி முதலியன இனிது விளக்கப்பட்டுள்ளன.

எட்டாம் தந்திரம் : உடலிற் பஞ்சபேதம், அவத்தைபேதங்கள், ஆறந்தம், முத்துரியம், தத்துவமசி மகாவாக்கியம் போன்றவைகள் விளக்கப்பட்டுள்ளன.

ஒன்பதாம் தந்திரம் : குருடமட தரிசனம், பிரணவசமாதி, தூலபஞ்சாக்கரம், சூட்சும பஞ்சாக்கரம், அதிசூட்சும பஞ்சாக்கரம், திருக்கூத்து தரிசனம், அஃதாவது இறைவன் செய்யும் பலவகை நடனங்கள் முதலியவைகள் இதில் காணப்படுகின்றன.

சிவஆகமங்கள் 28. இதனை அருளிச் செய்தவர் சிவபெருமான். இதனை கேட்டு அறிந்தவர் 66 பேர். இவற்றில் நந்திபெற்றது நவ ஆகமங்கள். நவ ஆகமங்களின் சாரங்களே 9 தந்திரங்கள் என்று அறியமுடிகிறது. ஆகமங்கள் கோயிலுக்கும், வழிபாட்டிற்கும், மற்ற சடங்குகளுக்கும் வேண்டிய மந்திரங்களைப் பற்றிக் கூறுபவையே சிவாகமங்கள் என்பது பொருந்தாது. மேலும் இது தனிமனித மேம்பாட்டிற்கும், சமுதாய மேம்பாட்டிற்கும், கிராமம், நாடு இவைகளுக்கு எவைஎவை அவசியமோ, அவை அனைத்தையும் குறித்து சிவாகமங்கள் மிகவும் விரிவாக எடுத்துரைக்கின்றன. சிற்பக்கலை, கட்டிடக்கலை, ஓவியக்கலை, ஜோதிடக் கலை, மருத்துவம் முதலிய பல்வகை செய்திகள் பற்றியும் மேலான யோகத்தைப் பற்றியும் சிறப்பாக எடுத்துரைக்கின்றன. தொலைக்காட்சி யில் ஆகமம் பற்றி விவாதம் செய்கின்ற விதத்தில் இன்றைய சூழலில் ஆகமங்கள் இருக்கின்றன. பயிருக்கு துணை செய்வது மழை, இசைக்கு துணை செய்வது தாளம், மொழிக்கு துணை செய்வது இலக்கணம், மனித வாழ்வின் மேம்பாட்டிற்கு துணை செய்வன இந்த ஆகமங்கள். எனவே இறைவன் அருளிச் செய்த இந்த ஆகம வழி நின்று உய்வு பெறுவோமாக.

# 57. திருவிசைப்பா குறிப்பிடும் இறைவனின் தன்மைகள்

திருமதி புனிதா கணேசன், தஞ்சாவூர்.

**திருவிசைப்பா**

சைவத்திருமுறைகள் பன்னிரெண்டில் ஒன்பதாம் திருமுறை என்றுப் போற்றப்படுவது திருவிசைப்பா. திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்த நம்பி, சேதிராயர் என்று ஒன்பது ஆசிரியர்களால் பாடப்பட்ட திருவிசைப்பாவில் உள்ள இறைவனின் புகழை கலைநயத்துடனும் இசைநயத்துடனும் விளக்க முற்பட்டதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இறைவனை கடவுள் என்றோ பரம்பொருள் என்றோ முப்பெரும் கடவுளின் பெயராலோ அல்லது அதற்குரிய தனிப்பெயரால் மட்டுமே அழைப்பது மக்களின் வழக்கு. ஆனால் திருவிசைப்பாவில் இறைவனை எல்லாமுமாக அழைத்திருப்பது தனிச்சிறப்பாகும். 'திரு' என்றாலே தெய்வத்தன்மை வாய்ந்த மரியாதைக்குரிய என்று பொருளாகும். 'இசை' என்றால் அழகு, இனிமை என்று பொருளாகும். 'பா' என்பது பாமாலை, பாடல் என்று பொருளாகும். மொத்தத்தில் திருவிசைப்பா என்பது தெய்வத்தன்மை வாய்ந்த அழகுள்ள பாடல்கள் கொண்ட நூல் என்பது இதன் தனிச்சிறப்பாகும். இறைவனை எவ்வாறெல்லாம் அழைக்கிறார்கள் என்று முதலில் காணலாம்.

**ஒளியாகிய பொருளில் அழைத்தல்**

ஒளிவளர் விளக்கே! பருத்த பேரொளியே! எழில்கொள் சோதியே! நெருப்பே! மூன்றெரித்த நாயகனே! அனலா! இரவி! செஞ்சுடரே! பரிதியே! எழுபரஞ்ஜோதியே! ஒளிவான் சுடரே!

**அமுதாக அழைத்தல்**

தித்திக்கும் தேனே! உள்ளத்தானந்தக் கனியே! வெள்ளமே! கரும்பே! கனியே! அமுதே! மருந்தே! ஆரமுதே! தெளிவாரமுதே! தேனே!

**பஞ்சபூதமாக**

புவனபோகமே - நிலம், நெருப்பே (அனலம்) - நெருப்பு, அனிலமே - காற்று, அம்பரம் - ஆகாயம், கங்கை நங்கை காதலனே! - நீர்.

**அம்பலம் என்றழைக்கும் பொருள்**

அம்பலத்தமுதே! அம்பலத்தமரரசே! அம்பலவா! சிற்றம்பலக் கூத்தா! செல்வச் சிற்றம்பலமே! அம்பலத்தமிர்தே! அம்பரா! அணி அம்பலவா!

**உறவாக நட்பாக அழைத்தல்**

அப்பனே! நற்றோழா! குணக்குன்றே! வேடா! சேமத்துணையே! உற்றாய்! தமியனேன் துணைவா! எளியரே! மாலுலா மனமே! மறவா! குறவா! ஐயா! அரசுக்கரசே வளர்நாயகா! ஒருவான இருவா! அதிபனே! அத்தனே! நம்பனே! குலம் கலந்தவனே! நெறிவகுத்த சேவகனே! நடம் பயிலும் நம்பானே!

**அணிகலனாக அழைத்தல்**

நீறணி பவளக் குன்றமே! நீலகண்டனே கோமளக் கொழுந்தே! வெள்ளிக் குன்றமே! செம்பொன்னே! நிகரிலா மணியே! சிவலோக நாயக செல்வமே!

**இறைவனை இறைவனாகவே அழைக்கும் பெயர்கள்**

சங்கரா! சிவனே! சொக்கனே! கோடா! தேவா! உமாபதியே! ஆனே! சுப்பிரமண்ணியனே! முக்கண் நாயகனே! அண்டநாயகனே! அமரனே!

**இறைவனின் தோற்றப் பொழில்**

இறைவன் எல்லாவற்றையும்விட தோற்றத்தில் பெரியவனாகத்தான் இருக்கமுடியும் என்பது நம் நம்பிக்கையாகும். ஏனென்றால் இந்த உலகில் எத்தனையோ பேரழிவுகள் பேரிழப்புகள் நடந்துக்கொண்டேயிருக்கின்றது. அத்தனையையும் தாண்டி நம் போன்ற உயிரினங்களை இறைவன் காத்துக் கொண்டுதான் இருக்கின்றான். அத்தகைய வல்லமை பொருந்தியவன் வலிமையானவனாக, யாரோடும் ஒப்பிட முடியாதவனாகத்தான் இருக்க முடியும் என்பதை ஞானிகள் உணர்ந்தே எழுதிவைத்துள்ளனர், என்பதற்கு 'திருவிசைப்பா' சான்றாகும். அதனால்தான் இறைவனை

**''நீறணி பவளக் குன்றமே''**

என்றும்

**''குன்றேற்றி கோகனதத்(து) அயன்<br>அறியாநெறி என்னைக் கூட்டினாய்<br>என்றேங்கி ஏங்கி அழைக்கின்றார்''**

என்றும் இறைவனைப் பாடியுள்ளனர். இறைவன், திருநீறுமலைமேலே செம்பொன்னையணிந்து, மேருமலையை குடையாய் பிடித்து, புலித்தோலை கையிலேயுடுத்தி, அரவன் என்னும் பாம்பைக் கழுத்திலே அணிந்திருக்கும் வலிமையான தோற்றம் கொண்டவன் என்று பாடப்பட்டிருக்கிறது. கோபமான

நேரத்தில் கண்கள் மூன்றும் தீக்கனலால் மூட்டப்பட்டு கொழுந்து விட்டெரிவது போல் பிரகாசித்திருக்கும் என்றும், அதே இறைவன் சாந்தமானபோது, தாமரை முகத்தில் செம்பவளவாய் பொருந்திய சாந்த சொரூபனாக இருப்பான் என்றும் குறிப்பிட்டுள்ளது. இதனைப் பார்க்கும்போது நாம் எவ்வாறு இறைவனை காண்கின்றோமோ அல்லது எவ்வாறு இறைவனை நினைக்கின்றோமோ அவ்வாறாகவே இறைவன் காட்சியளிப்பான் என்பதற்கு திருவிசைப்பா பாடல்கள் நற்சான்றாகும்.

## இறைவன் அமைந்திருக்கும் இடம்

இறைவன் எங்கெல்லாம் இருப்பானென்று கேட்டால் இறைவன் எங்கும் "நீக்கமற நிறைந்திருப்பான்" என்று இலக்கியங்களும் புராணங் களும் கூறக்கேட்டிருக்கின்றோம். உண்மை தான். எங்கு முழுமையாக இருப்பானென்றால் எங்கே தூய்மையிருக்கின்றதோ, எங்கே உண்மை யிருக்கின்றதோ எங்கெல்லாம் நற்குணங்கள் உள்ளதோ அங்கிருப்பான் இறைவன். அப்படியென்றால் அந்தச்சூழல் எப்படியிருக்குமென்று திருவிசைப்பா நம்கண்முன்னே காட்சிதரும் வகையில் தெளிவாக கூறியுள்ளது.

நிறைதழை வாழை நிழற்கொழ நெடுந்தெங்(கு)
இளங்கமு(கு) உளங்கொள்நீள் பலமாப்

என்று தொடங்கும் பாடலைப் படிக்கும்போதே அதன் தன்மையை உணர முடிகின்றது. இதில் சொல்லியுள்ள செய்தி என்னவெனில் நிறைந்த வாழை மரங்களும் நிழல்தருகின்ற பூங்கொடிகளும் சூழ்ந்திருக்க அதன் நடுவே மா, பலா, வாழை மரங்களும் அதனருகே பாக்கு பனை தென்னை மரமும் இருக்க அங்கே பிறைச்சந்திரன் பூத்திருப்பதுபோல் தோட்ட மெல்லாம் காட்சியளிக்க முத்து, பவளம், மணிகள் பொதித்த அரங்கத்தில் செம்பவள வாய்பொருந்தி காட்சியளிக்கின்றான் என்று பாடல் அமையப் பட்டிருக்கின்றது. அதே இறைவன் திருப்பூவனம் என்ற ஊரில் எங்கு அமர்ந்து காட்சிய தருகிறான் என்றால், அழகிய பூஞ்சோலைகள் களத்தை சுற்றி சூழ்ந்திருக்க குளத்தில் உள்ள மீன்கள் அந்நீரை ருசித்து பருக, சோலையில் தேன்சொரிந்து குளத்தினிடையே ஊடுருவி சென்று பாய்ந்து, குளத்திற்கு உயிரினத்துக்கும் அழகு சேர்க்க இத்தகைய அழகிய சூழலில் அங்கே திருக்கோயில் கொண்டு எழுந்தருளி காட்சியளிக்கின்றார் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாறு செய்திகளைப் பார்க்கும்போது இறைவன் நீர் நிலை சூழ்ந்த பகுதியிலேயே காட்சியளிக்கின்றான் என்பது நமக்கு புலப்படுகிறது காரணம் இறைவன் எப்படித் தோன்றுகின்றான்? அவன் பிறப்பென்ன? என்பதையாவரும் அறிந்திருக்க முடியாது. அதுபோல் நதிகளின்

பிறப்பிடமும் யாரும் அறிந்திருக்கமாட்டார் இறைவன் பாரபட்சம் பார்ப்பவனில்லை நதியும் அவ்வாறே! இறைவன் ஆக்கல், அழித்தல், காத்தல் குணம் கொண்டவன் நதியும் அவ்வாறே! எனவேதான் நதியிருக்கு மிடத்தில் இறைவனும் இறைவனிருக்குமிடத்தில் நதியும் அமைந்திருப்பது பொருத்தமான ஒன்றாகும்.

**இசையும் இறைவனும்**

உயிரினங்கள் அனைத்தும் விரும்புவது இசையையே. இசைக்கு இறைவனே மயங்கும்பொழுது இறைவனால் படைக்கப்பட்ட உயிரினங்கள் மயங்குவதில் வியப்பில்லை. இறைவனை அடைய இறைநிலையை உணர ஞானிகள் பெரிதும் நாடுவது இசையையே! இசையின் வடிவமாக இறைவனைக் காண்பவர்கள் ஞானிகள். அத்தகைய இசைக்கு இறைவனே மயங்கி தாண்டவம் ஆடுவதாக பல பாடல்கள் புனையப்பட்டுள்ளன.

தேர்மலி விழவிற் குழலொலி தெருவில்
கூத்தொலி ஏத்தொலி ஓடாழனட
பேரொலி பரந்து கடலொலி மலியப்
பொலிதரு பெரும்பற்றப் புலியூர்ச்
சீர்நில(வு) இலயத் திருநடத் தியல்பில்
திகழ்ந்தசிற் றம்பலக் கூத்தா!
வார்மலி முலையாள் வருடிய திரள்மா
மணிக்குறங்(கு) அடைந்ததென் மதியே

என்ற வரிகளில், திருவிழா கூட்டங்களில் இசைகள் ஒளிப்பது இயற்கை. ஆனால் புல்லாங்குழல் ஓசையும், மக்கள் கூட்டம் எழுப்பும் சின்ன சின்ன ஓசையும், வேதியர்கள் ஓதும் மங்கள ஓசையும்மாகிய எல்லாம் சேர்ந்து ஒருங்கே ஒலிக்க அந்த இசையிலே இறைவன் ஆனந்த தாண்டவம் ஆடுவதாக குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் மற்றொரு பாடலில்,

கரைகடல் ஒலியில் தமருகத்(து) அரையில்
கையினிற் கட்டிய கயிற்றால்
இருதலை ஒருநா இயங்கவந்(து) ஒருநாள்
இருந்திடாய் எங்கள்கண் முகப்பே

என்கின்ற வரிகளில் மிகவும் பிரமாண்டமான பரந்து விரிந்த கடற்கரையில் தேவாரப் பாடல்கள் பாடிக்கொண்டுச் செல்லும்பொழுது அந்த பாடலிலே மயங்கி இறைவன் பின்செல்வாராம். அந்த சமயத்தில் தாருக வனத்தது முனிவர் வேள்வியால் செய்த உடுக்கையை சிவபெருமான் தலையை நோக்கி வீச, அதனை எதிர்கொண்டு கையிலேந்திய இறைவன் உடுக்கையை ஒலிக்கச் செய்து அந்த இசையில் மகிழ்ந்ததாக திருவிசைப்பா பாடல் வரிகள் குறிப்பிடுகின்றது. மேலும்,

தந்திரி வீணை கீதமும் பாடச்
சாதிகின் னரங்கலந்(து) ஒலிப்ப
மந்திர கீதந் தீங்குழல் எங்கும்
மருவிடம் திருவிடை மருதே

என்ற வரிகளின் மூலம் தேவலோகத்தில் உள்ள தேவர்களின் வேண்டுதலை ஏற்று ஐந்துதலை நாகத்தை இடுப்பிலே சுற்றிக்கொண்டு சிவபெருமான் பிச்சைக்காக அலைந்து திரிந்து பொழுது, நரம்புகளையே சுருதியாகக் கொண்ட வீணையின் இசை ஒலிக்க, வேத அந்தணர்கள் துதிபாட, இனிய குழல் ஓசையும் கொண்ட திருவிடைமருதூரிலே இறைவன் காட்சி அளிக்கின்றார் என்று குறிப்பிடப்படுகின்றது. இதனைப் பார்க்கும் பொழுது வீணை, உடுக்கை, சாதிக்கின்னரம், என்கின்ற ஓசையும் வேத ஓசையும், குழலோசையும், யாழோசையும் இறைவனுக்கு மிகவும் பிடித்தமான ஒன்று என்பதை அறியமுடிகின்றது. மேலும் இசையோடு இறைவனும், இறைவனோடு இசையும் இரண்டறக் கலந்திருப்பதை அறிவதோடு இசையிருக்கும் இடமெல்லாம் இறைவன் இருப்பான் என்பதையும் அறிகின்றோம்.

அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பது உலகறிந்த உண்மை. இறைவனால் படைக்கப்பட்ட இசை, இயற்கை, பக்தர்கள் போன்றவற்றில் இறைவனே தன்னை ஈடுபடுத்திக்கொண்டு தன்னை அடிமையாக்கிக் கொள்வதும் இங்கு அறியப்படுகின்றது. உலகை கடந்து அண்ட சாராசங்கள் முழுவதிலும் நிறைந்திருப்பவன் இறைவன். ஒப்பில்லாத அறிவும், ஆற்றலும் நிறைந்தவன் இறைவன். அத்தகைய இறைவனைப் பாடுவதற்கும் அந்த பாடலை நாம் தெரிந்துக்கொள்வதற்கும் ஓர் உணர்வுப் பாலமாக அமைந்திருப்பது திருவிசைப்பா என்பது அனைவரும் உணரக்கூடிய ஒன்று.

# 58. திருமந்திர நூல்கள்

முனைவர் ப. பெருமாள், தஞ்சாவூர்.

உலக நாடுகளில் தமிழ்நாட்டிற்கென்று தனிச் சிறப்பு உண்டு. சமய ஆன்மீகத் துறையில் சிறந்து விளங்குவதே அதன் சிறப்பாகும். திருவருள் பெற்ற முனிவர்கள், உயர்ந்த தெய்வச் சான்றோர்கள், யோகம் பயின்று அறிவு நிரம்பிய சித்தர்கள் போன்ற மிகப்பலர் தமிழ்நாட்டில் தோன்றியது போன்று வேறு எந்த நாட்டிலும் தோன்றியதில்லை. தொல்காப்பியம், திருவள்ளுவர், மாணிக்கவாசகர், மெய்கண்டார், சேக்கிழார், திருமூலர் போன்ற சான்றோர்கள் தோன்றி தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களும், திருக்குறள் போன்ற நீதி நூல்களும் திருவாசகம் போன்ற பக்தி நூல்களும் சிவஞான போகம் போன்ற தத்துவ நூல்களும், பெரிய புராணம் போன்ற சமய வரலாற்று நூல்களைக் கொண்ட நாடு தமிழ்நாடு ஆகும். அதுபோன்று திருமூலர் போன்ற சிறந்த சான்றோரும், அவர் இயற்றிய திருமந்திரம் போன்ற யோக ஞான அனுபவ நுண்பொருள் கூறும் நூல்கள் உலகில் வேறு எங்கும் காண்பது அரிது. திருமந்திரம் சைவத்திருமுறைகள் பன்னிரெண்டில் பத்தாம் திருமுறையாக உள்ளது. இந்நூல் சைவ சமய நூலாக கருதப்பட்ட போதிலும் அது புகட்டும் சமுதாய நீதிகளும், ஒழுக்க நெறிகளும் ஈடு இணையற்றவை. திருமந்திரப் பாடல்களில் நயம், சொல், ஒழுங்குடன் அரிய கருத்துக்களையும், தெளிந்த அறிவுரைகளையும் காணலாம். உதாரணமாக,

''தேனுக்குள் இன்பம் சிவப்போ? கறுப்போ?
வானுக்குள் ஈசனைத் தேடும் மதியிலர்
தேனுக்குள் இன்பம் செறித்திருந்தாற் போல
உனுக்குள் ஈசன் ஒளித்திருந்தானே''

என நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் ஈசன் இயல்பைத் திருமூலர் எளிய முறையில் விளக்குகிறார்.

திருவாவடுதுறையில் மறைவில் வைக்கப்பெற்றிருந்த திருமந்திர நூலை சைவ சமயக் குரவர்களுள் ஒருவராகிய திருஞான சம்பந்தரால் கண்டுபிடிக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டதாக கூறப்படுகிறது. திருமந்திரத்தை செந்தமிழ் ஆகமம் என்று போற்றுவர். திருமூலர் வடமொழியும் தென் தமிழும், மறை நான்கும் தெளிந்துணர்ந்த சிவஞானச் செல்வராவர் தாம்

சித்தித்துணர்ந்த சிவாகம உண்மைகளை இமயம் முதற் குமரி வரையுள்ள இந்நாட்டார் பலரும் ஓதியுணர்ந்து உய்தல் வேண்டும் என்ற நோக்கில் திருமந்திர மாலையை அருளிச் செய்தார். இத்திருமந்திரம், தந்திரம், மந்திரம், உபதேசம் என்ற மூவகை உரையளவைகளையும் உறுப்பாகக் கொண்டுள்ளது. திருமந்திரம் ஒன்பது தந்திரங்களையும், பாயிரமுட்பட 235 அதிகாரங் களையும் 3000 பாடல்களைக் கொண்டதாகும். திருமூலர் தம்முடைய அரிய நூலான திருமந்திரத்தில் மனிதனுடைய வாழ்க்கைக்கு அடிப்படையான பல நல்லியல்புகளைக் கூறுகிறார். இறைவனுடைய திருவருளைப் பெற்று வாழும் பாடிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன வற்றைப் பற்றியும், ஐம்புலன்களை அடக்கினால் அவன் எத்தகைய ஆற்றலையும் அடையமுடியும் என்பதை உணர்த்துகிறார்.

திருமந்திரத்தில் உள்ள 3000 பாடல்களையும் பாயிரம் நீங்கலாக ஒன்பது தந்திரங்களாக பால பொருண்மையில் பிறக்கப்பட்டுள்ளது. பாயிரத்தில் கடவுள் வாழ்த்து, வேதாகமச்சிறப்பு திருமூலர் வரலாறு பற்றியும், முதலாம் தந்திரத்தில் மெய்யுணர்ச்சிக்குச் சாதனமாக அமையும் நன் நடத்தைகளை வற்புறுத்தும் பாடல்களைக் கொண்டும், இரண்டாம் தந்திரத்தில் சைவ புராணங்களிலும் திவ்யாகமங்களிலும் பண்டைய புராணங்களிலும் வழங்கும் இன்றியமையாத சிற்சில திவ்ய சரிதங்களின் மெய்ப்பொருளை உணர்த்தி, அவற்றினின்று விரியும் கடவுளின் ஐந் தொழிலையும் ஆன்மாக்களின் கூறுகளையும், கடவுளை வழிபட்டு உய்யும் வழியினை விளக்குகிறது.

மூன்றாம் தந்திரம் யோகத்தின் வழியையும் பேறுகளையும், சாதனங் களையும், சித்திகளையும் கூறுகிறது. நான்காம் தந்திரத்தில் பேரறிவிற்குத் தலைமைச் சாதனமாகிய மந்திர யோகத்தின் பிரிவுகளையும் அப்பிரிவுகளைக் கடைபிடிக்கும் வழிகளையும் கூறுகிறது. ஐந்தாம் தந்திரம் சைவசமயத்தின் பகுதிகளையும், பாதங்களாகிய படிகளையும், மார்க்கங்களாகிய வழிகளையும், அவ்வழிகளின் இறுதி நிலைகளையும் கடவுளை அடையும் வழியையும், ஆறாம் தந்திரம் குரு தரிசனம், குருபூசை, திருநீறு, துறவு, தவவேடம், ஞானவேடம் முதலியவற்றை விளக்குகிறது. ஏழாம் தந்திரம் உள்ளுணர்வு மூலம் யோகப் பயிற்சியின் ஆன்மாவை நிலை நிறுத்தலையும், பசு பாச இலக்கணத்தைப் பற்றியும் கூறுகிறது. எட்டாம் தந்திரம் ஆகமத்தின் நுண்ணிய அகவுணர்ச்சி வழிக்கருவிகளாகிய பதினெட்டு அவத்தைகள், ஆறு அத்துவாக்கள் அவற்றின் இலக்கணங்களைப் பற்றியும், ஒன்பதாம் தந்திரமாகிய இறுதித் தந்திரம் பஞ்சாட்சரம், சிவதரிசனம், சூன்ய சம்பாஷனை, தோத்திரம் முதலியவற்றை கூறப்பட்டுள்ளன.

சுவடிகளில் எழுதி வைத்திருந்த திருமந்திரத்தை மக்கள் அனைவரும் அறியும் வண்ணம் நூல்களாக திருவாவடுதுறை ஆதினம் முதற்கொண்டு

பல்வேறு நிறுவனங்களும், அறிஞர்களும் வெளியிட்டுள்ளனர். அவற்றுள் சில

1. திருமந்திரம் மூவாயிரம், கொ. சண்முகசுந்தர முதலியார், 1887
2. திருமந்திரம் - திருவாவடுதுறைச் சுப்பிரமணியத் தம்பிரான் பதிப்பு, 1897
3. திருமந்திரம் - திரு.வி. கலியாணசுந்தரனார் (பார்வை), 1909
4. திருமந்திரம் - மாவை. வே. விசுவநாதபிள்ளை பதிப்பு, 1912
5. திருமூலநாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருமந்திரம், வி. உலகநாத முதலியார், விவேக போதினி, மைலாப்பூர், சென்னை.
6. திருமூலர் அருளிய திருமந்திரம், எஸ். சங்கரலிங்க முதலியார் (பார்வை) இரத்தின நாயக்கர் சன்ஸ், சென்னை, 1934
7. திருமூலநாயனார் அருளிய திருமந்திரமாலையென்ப பெயரிட்ட திருமந்திரம், சைவசித்தாந்த மகா சமாஜம், எஸ். வையாபுரிபிள்ளை பதிப்பு, 1940
8. திருமந்திரம் மூவாயிரம், துடிசைகிழார் அ. சிதம்பரனார், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1942
9. திருமூலர் திருமந்திரம் ஸ்ரீ பஞ்சாட்சர தீபம் என்ற உரையுடன் திருவாவடுதுறை ஆதினம், 1957.
10. திருமந்திரமாலை எனப் பெயர் பெற்ற திருமந்திரம், ஸ்ரீ காசிமடம் டி.எம். குமரகுருபரன் பிள்ளை, 1956.
11. திருமந்திரம் மூன்று தொகுதிகள், ஜி. வரதராஜன் உரையுடன், திருச்சிராப்பள்ளி, 1971 - 1985.
12. திருமந்திர மாநாட்டு மலர், கன்னடியத் திருமேனி கம்பளிச்சட்டை கைலாயச்சித்தர் உரை, திருவாவடுதுறை ஆதினம், 1954.
13. திருமந்திர சிந்தனை, நவாக்கிரி சக்கரம், திருவாவடுதுறை ஆதினம், 1952
14. திருமூலநாயனார் அருளிய திருமந்திரமாலை எனப் பெயர் பெற்ற திருமந்திரம், டிஎம். குமரகுருபரன் பிள்ளை, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம், ஸ்ரீ வைகுண்டம், 1960.
15. திருமூலர் திருமந்திரம், பாயிரம் பொழிப்புரையுடன், திருவாவடுதுறை ஆதினம், 1973.
16. திருமூலநாயனார் அருளிய திருமந்திர அருள்முறைத்திரட்டு உரையுடன், தில்லைத் தமிழ் மன்றத்தார், சிதம்பரம் 1973.
17. திருமந்திரக் கருத்து, திருவாவடுதுறை ஆதினம், 1973.

18. திருமந்திர நூறுபாடல்கள், திருவாவடுதுறை ஆதினம், 1979
19. திருமூலர் திருமந்திரம் பாயிரம் ஸ்ரீ பஞ்சாட்சரதீபம் என்னும் உரையுடன் திருவாவடுதுறை ஆதினம், 1987-1990
20. திருமூலநாயனார் அருளிய திருமந்திரம், திருவாவடுதுறை ஆதினம், 1990.
21. திருமூலர் யோகம், யோகாசார்யா ஜனார்தனன், மீனா புத்தகப் பண்ணை, விழுப்புரம், 1990.
22. திருமூலநாதர் அருளிய திருமந்திரம் என வழங்கும் சதாசிவ ஆகமம், மூலப்பாட ஆய்வுப் பதிப்பு, மூன்று பகுதி - டாக்டர் சுப. அண்ணாமலை, இந்தியப் பண்பாடு ஆராய்ச்சி நிறுவனம், சென்னை. 1997.
23. திருமந்திரக் கருத்து, திருவாவடுதுறை ஆதினம், 1973. போன்ற பல பதிப்புகள் வெளிவந்துள்ளன. அவற்றுள் இரண்டு பதிப்புகள் பற்றிய குறிப்புகள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது. திருவாவடுதுறை ஆதினத்துப் புலவர் மகாவித்துவ சிரோமணி யாழ்ப்பாணத்து வடகோவை ஸ்ரீலஸ்ரீ சபாபதி நாவலர்கள் முன்னிலையில் பல ஏட்டுப் பிரிதிகளைக் கொண்டு வெளியிட முயற்சிக்கையில் மதுரைப் பகுதியில் உள்ள முக்கிய அன்பர்கள் திருமந்திர உரை வெளிவர பல வகையில் உதவி புரிந்ததாக நூலாசிரியர் மாவை. வே. விசுவநாதபிள்ளை அவர்கள் குறிப்பிடுகிறார். அவர் சுவடி தேடி இராமநாதபுர சமஸ்தானத்திற்கு சென்றபோது ஸ்ரீமான் முத்து விஜயரகுநாத பாஸ்கர சேதுபதி அவர்கள் திருமந்திரம் சூத்திரத்துடன் மட்டுமின்றி விரிவுரையோடு வெளியிட்டால் பலருக்கு பயன் கொடுக்கும் என்று கூறியுள்ளார். அதே கருத்தை பல ஆர்வலர் களும், இரு கயிலாய பரம்பரை திருவாவடுதுறை, திருவண்ணாமலை, திருவாலவாய் முதலிய இடங்களில் உள்ள வைதீக சைவ மடத்தின் மடாதிபதிகளும் கொடுத்த பதினோறு சுவடிகளை ஒப்பு நோக்கி பாட பேதம் நீக்கி சீர்படுத்தி எழுதிய உரையை கானமுகாத்தான் வித்துவ சிரோமணி ஸ்ரீமான் சின்னையச் செட்டியார் திருத்தி கொடுத்தது மட்டுமின்றி வெளியிட பண உதவியும் செய்துள்ளார்கள். அதுபோன்ற ஒரு நூல் வெளிவர உள்ளதை மக்கள் அறியும் வண்ணம் சுதேசமித்திரன் பத்திரிகையில் கீழ்க்கண்டவாறு விளம்பரம் வெளியிட்டுள்ளார்கள்.

அதில் "திருமந்திர உரை" சுதேசமித்திரன் 1902-ஆம் வருடம் ஜூன் மாதம் 30-ம் தேதி வேதாகமங்களின் சாராம்சங்களைக் கொண்ட பன்னிரு திருமுறைகளில் பத்தாவதாகிய திருமூலர் திருமந்திரமென்னும் அரிய

சாஸ்திரத்துக்கு வடகோவை மகாவித்துவான் ஸ்ரீமத் சபாபதி நாவலர்களின் மாணாக்கர் ஸ்ரீ வே. விசுவநாத பிள்ளையவர்கள் உரை எழுதி முடித்து, அதனை ஸ்ரீமத் பாஸ்கர சேதுபதி அவர்களிடம் வெளியிட வேண்டும் என கேட்டும் கொண்டதற்கிணங்க அதனை தமது சமஸ்தானத்திலாவது அல்லது சிதம்பரம் நடராஜப் பெருமான் சந்நிதியிலாவது வைத்து அரங்கேற்றம் பொறுப்பை தாமே வகித்திருப்பதாய்த் தெரிவித்து விசுவநாத பிள்ளை அவர்களுக்கு பல பொருளுதவி வழங்கியதாக கூறப்பட்டுள்ளது. இவ்வாறு மிகுந்த முயற்சியுடன் பல சுவடிகளைப் பார்த்து திருமந்திரம் பாடல்கள் மட்டும் 1911-ம் வருடத்திலும், பின்னர் உரையுடனும் வெளியிடப்பட்டுள்ளது.

அதே போன்று சமீப காலத்தில் முனைவர் சுப. அண்ணாமலை அவர்களால் பதிப்பித்து மூன்று தொகுதிகளாக இந்தியப் பண்பாடு ஆராய்ச்சி நிறுவனம். சென்னை வெளியிட்ட நூல் தமிழகத்தில் உள்ள சுவடி நூலகங்கள் உள்ள 15 சுவடிகளைப் பார்வையிட்டு ஒப்பு நோக்கி, பாடபேதம் பார்த்து உரையுடன் வெளியிடப்பட்டுள்ளது. இவ்விரு நூல்களை போன்று திருவாவடுதுறை ஆதினத்து நூல்கள் சீர்செய்து ஆதினத்து சுவடிகளைக் கொண்டு வெளியிடப்பட்டுள்ளன திருவாவடுதுறை ஆதினம் திருமந்திர நூல்கள் வெளியிடவும், கருத்துக்களை மக்களிடம் கொண்டு செல்ல 1960 ஆண்டு முதல் ஆண்டுதோறும் மாநாடு நடத்தி ஒவ்வொரு தந்திரத்தின் முற்பகுதி பிற்பகுதி என ஒன்பது தந்திரங்களுள் தனித்தனியாக நூல்கள் வெளியிடப்பட்டுள்ளார்கள். திருமந்திரம் மக்களின் மனதைச் செம்மையடைச் செய்யும் அரும் மருந்து என்னும் கருத்தில் திருமந்திர தந்திரங்களை தேர்வுசெய்து வெவ்வேறு தலைப்புகளிலும், திருமந்திரத்தை மற்ற இலக்கியங்களுடன் ஒப்பிட்டும் நூல்கள் வெளியிடப்படுகின்றன. திருக்குறள் போன்ற எளிய கருத்துகளை கொண்டு மக்களை உண்மை உணர்த்த வைக்கும் நூல் திருமந்திரம் ஆகும்.

# 59. திருமந்திரத்தில் அறக்கருத்துக்கள்

முனைவர் சொ. பொன்னுசாமி, திருவைகுண்டம்.

எத்திசையும் புகழ்மணக்க இருக்கிற தமிழணங்கின் பெருமை 'சொல்லும் சைவத்திருமுறைகள் பன்னிரண்டில் பத்தாம் திருமுறையாகத் திகழ்கிறது திருமந்திரம்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

என்று கூறியவர் திருமூலர். மூலன் என்னும் இடையனின் இறப்பினால் கண்ணீர் சிந்திக் கதறிய பசுக் கூட்டங்களின் துயர்துடைக்க மூலனின் உடம்புக்குள் கூடுவிட்டு கூடுபாய்ந்தவர் சுந்தரநாதன். பின்னர் அவருடைய உடலானது மறைக்கப்பட்டுவிட்டதால் மூலன் உடலிலேயே தங்கித் திருமூலர் என்ற பெயரோடு விளங்கியவர் திருமூலர் அருளிச்செய்தது திருமந்திரம் ஒன்பது தந்திரங்களும்,.232 அதிகாரங்களும் உடைய இந் நூலில் 3000 பாடல்கள் அமைந்திருக்கின்றன என்கிறது இந்நூலின் பாயிரம்.

சிவாகமத்தைப் போலச் சைவத்துறையின் சிறப்பு அறங்களைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் முறைப்படுத்தி உரைப்பது திருமூலர் அருளிய திருமந்திரம்.

"பெற்ற நல்லாகமம் காரணம் கமிகம்
உற்ற நல்வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ்வியாமளம் ஆகும் காலோத்திரம்
துற்ற நன் சுப்பிரம் சொல்லும் மகுடமே"

என்று கூறும் ஒன்பது ஆகமங்களின் பிழிவாகத் திருமந்திரம் விளங்குகிறது. **"திருமந்திரம் கூறும் அறக்கருத்துக்கள்"** பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கு.

**அறம் - ஒரு விளக்கம்**

மக்கள் - நன்னெறியில் உய்யச் சான்றோர்கள் பற்பல அறங்களை உபதேசித்து அவர்களுக்கு வழிகாட்டிய நிலையை நாம் காணமுடிகிறது. **"அறம் செய விரும்பு"** என்று ஔவையார் சின்னக் குழந்தைகட்கு தம்முடைய ஆத்திச்சூடி மூலம் சின்னஞ்சிறு பிள்ளைகளின் சிந்தனை யிலே அற உணர்வை ஊட்டியவர். "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை" என்பது வள்ளுவப் பெருந்தகையின் வாக்கு.

**திருமந்திரம் காட்டும் அறக்கருத்துக்கள்**

திருமந்திரத்திலே எளிய அறங்களைத் திருமூலர் எடுத்தியம்பும் நிலையினைக் காணமுடிகிறது.

''யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே''

என்கிறார் திருமூலர்.

திருவள்ளுவரும், அறம் செய்வது பற்றிப் பலப்பலக் கூறினாலும், அதிலும் எளிய அறம் இதுதான் என்று உரைப்பதைக் காணமுடிகிறது.

''அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல''

என்றும்

''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது''

என்றும்,

'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று''

என்றும் எத்தனை எத்தனையோ அறங்களைச் சுட்டிக்காட்டிய போதிலும், எதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், சிறிய எளிய அறம் ஒன்று இருக்கிறதே அதைச் செய் என்கிற வள்ளுவர்,

''மனத்துக்கண் மாசிலனாதல்
அனைத்து அறன்''

என்று கூறுகிறார். இதன் மூம்மலம் மனத்துக்கண் மாசில்லாத தன்மையே அறம் என்று வள்ளுவர் வலியுறுத்திக் காட்டுவதை நாம் அறியமுடிகிறது.

**உயிர்போகும் காலத்து உற்ற துணையாவது அறம்**

மனிதர்களுக்கு ஆறிலும் சாவு நூறிலும் சாவு என்பது நியதி. அந்தகன் வரும்போது அவனியில் அந்த இறைவனன்றி வேறு யார் துணை? கூற்றுவன் வந்து உயில் கொண்டு போகுங்காலத்து நமக்கு உற்ற துணையாக அமைவது அறமே... எனவே கூற்றம் வருமுன் அறம் செய்க என்கிறார் திருமூலர்.

''வன்மையில் வந்திடுநம் கூற்றம் வருமுன்னைந்
தன்மையில் நல்லதவஞ் செய்யும் நீரே''

என்கிற திருமந்திரப்பாடம் பாடல் அறம் செய்யுமாறு வலியுறுத்திக் கூறுவதைக் காணமுடிகிறது. இதனையே வள்ளுவரும்,

"அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை"

என்று எடுத்தியம்புகின்றார்.

கூற்றன் வருங்கால் செல்வம் மீதுள்ள பற்றை விட்டு நீங்கினால் மேனிலை எய்துதல் கூடும் என்கிறார் திருமூலர் - கூற்றம் வந்து.

கூடுவிட்டு ஆவி போனால் எதுவும் கூடவே வருவதில்லை; "ஆவி நீங்கிய உடலுக்கு இயற்பெயர் சிறப்புப் பெயர் ஒழித்தும் பிணமென்று பெயரிட்டு சுடுகாட்டில் எரியூட்டி விட்டு நினைப் பொழிந்திருப்பார்" என்கிறார் திருமூலர். ஆவி உடம்பை விட்டுக் கடந்து கழிவதன் முன் ஐம்புலன்கள் வழிச்செல்லாது மாறுபட்டு திருவடியுணர் வாகிய திருவிளக்கை ஏற்றினால் மனமாகும் பிறப்பும் அறம் என்கிறார் திருமூலர்.

**பிறவித்துன்பங்களைப் போக்குதற்குத் தவமும் அறமுமே துணை**

"திளைக்கம் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இடுவழியுண்டு
கிளைக்கும் தனக்குமாக் கேடில் புகழோன்
விளைக்குந்தவம் அறமேற்றுணை யாமே"

என்கிற திருமந்திரப் பாடல் இதனையே வள்ளுவரும்,

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றிப்
போஒய்ப் பெறுவதெவன்"

என்று சுட்டிக்காட்டியுள்ளார்.

**பிறவி வேறரக் குருவின் அருளால் திருவடிப்பேறு எய்தினமை**

பிறவிப் பெருங்கடலை நீந்த இறைவனடியைத் தெப்பமாகக் கொள்ளவேண்டும் என்பர். ஆனால் பிறவியை வேறருக்கக் குருவின் அருளால் கிட்டுகிற திருவடிப்பேறு எய்தினமை பற்றிக் கூறுகிறது திருமந்திரம்.

"திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கில்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடி விற்கண்ட கோனையெங்கோவைக்
கருவழி மாற்றிடக் கண்டு கொண்டேனே"

என்கிறது திருமந்திரப்பாடல்.

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே"

என்கிற திருமந்திரச் செய்யுளை எங்களின் எஜமான் சுவாமிகள் - அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகளின் பிறந்தநாளாகிய நிறுவனர் தின நாளை ஆவணி மூல நன்னாளில் கொண்டாடி மகிழ்கையில் வாழ்த்துச் செய்தி யாகக் குறிப்பிட்ட செய்யுளாகும்.

குருவின் திருமேனி காண்டல் - சரியை மார்க்கம்
குருவின் நாமம் செப்பல் - கிரியை மார்க்கம்
வார்த்தை கேட்டல் - ஞானத்தில் யோக மார்க்கம்
குருவுருச் சிந்தித்தல் - ஞானத்தில் ஞான மார்க்கம்

என்பது இப்பாடல் தரும் சிந்தனை. இவ்வுலக அறநெறியில் ஞானத்தை விடச் சிறந்தது வேறில்லை.

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்க நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே?"

என்கிற பாடல் ஞானநெறியின் சிறப்பை உணர்த்துகிறது.

**தலைவனே சற்குரு**

திருமூலர் அவர்கள் 'தாடலை' என்ற சொல்லை எடுத்துக்காட்டித் தான் தந்து அளிக்கும் தலைவனே சற்குரு என்று கூறி அவனும் தானும் சத்தும் பொருளால் ஒன்று என்று குறிப்பிடுகிறார்.

"தாடந்து அளிக்கும் தலைவனே சற்குரு
தாடந்து தன்னையறியத் தரவல்லோன்
தாடந்து தத்துவாதீ தத்துச் சார் சிவன்
தாடந்து பாசந் தணிக்கும் அவன் சத்தே"

குருவின் சிறப்பை இன்னும் விளக்கமாகத் தருகிறார் திருமூலர்.

திருக்களிற்றுப் பாடியாரில்,

"ஆகமங்கள் எங்கே ஆறுசமயம் தானெங்கே
போகங்கள் எங்கே உணர்வெங்கே பாசத்து
அருள்வடிவு தானுமாய் ஆண்டிலனேல்அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு" - (5 - வது பாடல்)

என்கிற பாடல் எடுத்துக்காட்டுவதை அறியலாம்.

**"மனித குலத்திற்கே வழிகாட்டியாக அமைந்துள்ள சாத்திரங்களும் சம்பிரதாயங்களும் அவற்றின் உண்மைகளை விளக்கி உயிரினங் களை நல்வழிப்படுத்தும் குரு என்பன யாவுமே இறையருட் செயலே என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளதாம்"**

என்கிறார் டாக்டர் முத்துராமன், "சைவ சித்தாந்தம்" ப.139.

**அன்பு இல்லாதவர்கள் அறத்தினை அறியமாட்டார்கள்**

நல்லோர் பிறர்க்கு வாரி வழங்கும் இயல்புடையராகத் திகழ்கிறார்கள். அவ்வாறு அவர்கள் வாரி வழங்குவதையுடன் அதனால் அவர்கள் மகிழ்தலைக் கண்டும் தம்பாலுள்ள செல்வத்தை வறியோர்க்கு ஈயமாட்டாத அறிவிலிகள் உயிர்ப்பண்பாகிய அன்பு இல்லாதவர், அறத்தினையும் அறிய மாட்டார்கள் என்பது திருமூலரின் சிந்தனை. அவர்கள் ஈத்துவக்கும் இன்பத்தை அறியாதவர்கள் என்கிறார் திருமூலர். இதே கருத்தினை வள்ளுவரும்,

**"ஈத்துவக்கும் இன்பம் அறியால்கொல் தாமுடைமை**
**வைத்திழக்கும் வன்கணார் இல்"** - (228)

என்கிற திருக்குறளின் வழி உணர்த்திக் காட்டியுள்ளார்.

அன்பையும் சிவத்தையும் ஒன்றாகவே காண்கின்றார் திருமூலர். அன்பெனும் வித்தே சிவமாய் விளைந்து இன்பமாய்க் கனிந்து பயன்தரும் என்பது திருமூலரின் எண்ணம்.

**"திருமூலர் காலத்தில் அன்பு வேறு, சிவம் வேறு என்ற கொள்கையுடையவர் இருந்தனர் என்பது தெளிவு. இரண்டும் ஒன்றெனை இணைத்துக் காட்டுவதே திருமூலரின் பணி"**

என்கிறார் வை. இரத்தினசபாபதி - "வீரசைவம்", ப.21.

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே"**

என்கிறார் திருமூலர்.

**"முன்பும் பிறப்பும் இறப்பும் அறியாதார்**
**அன்பில் இறைவனை யாம் அறிவோம் என்பர்**
**இன்பம் பிறப்பும் இறப்பும் இலான் - நந்தி**
**அன்பிலவனை அறிய கிலாரே"** (274)

என்கிறது திருமந்திரப் பாடல்.

**"அறவாழ்வும் சமயவாழ்வும் இரு வகைப்படுவன அல்ல என்பதை பண்டைத் தமிழ் மக்களின் கொள்கையாம் என்பதற்குச் சங்க**

இலக்கியங்கள் சான்று தருகின்றன. பண்டைக்கால மரபுகள் எவ்வாறு பயன்படுத்தப்படுத்தப்பட்டன என்பதையே திருவள்ளுவரும் எடுத்துக்கூறியுள்ளார். இல்லறத்திற்கு மட்டு மல்லாமல் துறவறத்திற்கும் அறமே அடிப்படை என்பது சொல்லாமலே விளங்கும். அறநெறியில் அமைந்து இல்லற வாழ்வு நடத்துபவன் எல்லாப் பேறுகளையும் பெறமுடியும் என்பதே திருவள்ளுவரின் துணிபாகும்''

என்கிறார் டாக்டர் முத்துராமன், சைவ சித்தாந்தம், ப.113.

''உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தினாருங் கலந்தறிவார் இல்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பந்தருள்ளானே'' (494)

தீ நெறிக்கண் செல்வார் யாரும் கலந்து நிற்கும் சிவனை அறியமாட்டார்கள் என்கிறார் திருமூலர். இவைபோன்ற எண்ணற்ற அறக்கருத்துக்களை அள்ளி அள்ளித் தரும் கருவூலமாகத் திகழ்கிறது திருமந்திரம். ஆதிப்பிரானை உலகேழும் அளந்தவனை உலகில் பல்வேறு உயில்களாகத் திகழ்பவனை ஆதி அந்தமும் ஆக இருப்பவனை எந்நாளும் வணங்குவோமாக என்கிறார் திருமூலர்.

# 60. திருமந்திரத்தில் பல்வேறு செய்திகள்

திரு. என். மாசித்துரை, சத்திரப்பட்டி.

திருமூலர் இயற்றிய 'திருமந்திர மாலை' என்ற தலைப்புகளில் வெளிவந்த நூல்களையெல்லாம் படித்துப் பார்த்ததில் எல்லா நூல்களும் திருமந்திரம் 3000 என்ற நூலையே விளக்கி நின்றன. அப்படியென்றால் திருமந்திரமாலை என்ற ஒரு நூல் இல்லவே இல்லையோ? எழுந்த வினாவுக்கு இம்மூன்றுமே "திருமந்திரம்" நூலை மட்டுமே குறிப்பிடுவன என்ற விடைதான் கிடைத்தது. ஆனால் திருமூலர் 30,300,3000 என்ற மூன்று நூல்களைச் செய்ததாக குறிப்பு இருக்க 3000 திருமந்திரமாகவும் 30 உபதேசமாகவும் வெளிவந்து இருக்கிறது. ஆனால் திருமந்திரம் 300 மட்டும் இலக்கிய உலகிற்கு கிடைக்கவேயில்லை.

திருமந்திரத்தின் சூத்திர பொருள் உண்மையான ஞானிக்கு, அவனுக்கு தேவைப்படும் பொழுது மட்டுமே சித்தர்களால் உணர்த்தப்படும். ஏனை யோர்க்கு இதன் உண்மை புலப்படாது. நூலின் உண்மை உணராது செயல்முறைப்படுத்தி பார்ப்பவர்க்கு வித்தை பலிதமாகாத துடம் மற்றவர்க்குத் தீங்கு செய்ய இதனை ஒரு கருவியாகப் பயன்படுத்த நினைத்த இந்த சிந்தனைக்காக அவர்க்கேயன்றி அவர்களின் குடும்பத் தாருக்கும் தீராத பழியே ஏற்படும் என்பது சித்தர்களின் சாபம்.

நல்லதை நினைப்போம், நல்லதையே செய்வோம், வீண் விமர்சனங் களைத் தவிர்த்து, அன்புச் சிந்தனையில் அனைத்து பகைதனையும் முறி யடிப்போம்; அன்பே சிவமாகக் கொண்டு அச்சமின்றி வாழ்வோம் அனைத்து சித்தர்களின் ஆசியையும் பெறுவோம்.

**திருமூலர் வரலாறு**

**"குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல**
**மேய்ப்போன் குரம்பை புக்கு**
**முடிமன்னு கூனற் பிறையாளன்**
**தன்னை முழத்தமிழன்**
**படிமன்னு வேதத்தின் சொற்படி**
**யேபர விட்டேன் உச்சி**
**அடிமன்ன வைத்தபி ரான்மூல**
**னாகினற் அங்கணனே"**

திருக்கயிலாய மலையில் இருந்த எண்வகைச் சித்திகளையும் பெற்ற தவமுனிவர் ஒருவர் குறுமுனியாம் அகத்தியரின் மேல்கொண்ட நட்பினால் அவரைக் காண பொதிகை மலையை நோக்கிப் புறப்பட்டார். அம் முனிவர் நந்தியயெம்பெருமானின் நல்லருள் பெற்றவர் சுந்தரநாதர் என்பது அவரது இயற்பெயர்.

பொதிகை மலையை நோக்கி வரும் வழியில் இடையேயுள்ள திருக்கேதாரம், பசுபதிநாதம், நேபாளம், காசி, காளத்தி, காஞ்சி முதலான தளங்களில் உள்ள இறைவனைத் தரிசித்து வருங்கால் காஞ்சியில் சித்தர் சிலரைக் கண்டு உரையாடினார். பின்னர் தில்லையில் இறைவனின் திருநடனங்கண்டு ஆனந்தித்து அங்கு சிலநாள் தங்கினார்.

பின்னர் காவிரியைக் கடந்து திருவாவடுதுறை அடைந்து சிவதரிசனம் செய்து பின்னர் அதற்கு அடுத்துள்ள சாத்தனூர் செல்கையில் அங்கு ஓரிடத்தில் பசுக்கள் கூட்டமாகக்கூடி அழுது நிற்றலைக் கண்டார். சாத்தனூர் அந்தணர்கள் நிறைந்த ஊர் அவ்வூரில் ஆயர்குலத்து மூலன் பசுக்களை மேய்க்கும் பொழுது அவன் வாழ்நாள் முடியவெய்திட நிலத்திடை வீழ்ந்து இறந்தான்.

மூலனால் மேய்க்கப்பட்டு பசுக்கள் அவன் பிரிவுக்கு ஆற்றாது அவனைச் சுற்றி சுற்றிக் கதறி அழுதன பசுக்களின் அழுகையைக் கண்ட சிவயோகியர் இந்த மேய்ப்பவன் உயிர் பெற்று எழுந்தாலொழிய அப் பசுக்களின் துயரம் நிங்காதென உணர்ந்தார் இறைவனின் திருவருளால் அப்பசுக்களின் துயரை நீக்கத் துணிந்தார். தமது உடலைத் தகுந்த பாதுகாப்பு செய்து இறந்து கிடந்த மூலன் என்னும் பெயரிய அந்த இடையன் உடலின் தமதுயிரைப் புகுத்தினார்.

மூலன் உயிர் பெற்றழுந்ததைக் கண்ட பசுக்கள் அவனை நாத்தழும்ப நக்கி, மோந்து அணைந்து, கனைப்பொடு நயந்து, களிப்பினால் வாலெடுத்துத் துள்ளித் துயரம் நீங்கின. மாலைப்பொழுது வந்தவுடன் வழக்கம்போல் தத்தம் கன்றுகளை எண்ணித்தாமே இல்லங்களை அடைந்தன. திருமூலர் எவ்வீட்டிலும் நுழையாமல் வெளியே தனித்து நிற்கலானார். மூலன் காலந்தாழ்ந்து வீதியிலேயே நிற்பதைக் கண்ட அவன் மனைவி அவரைத் தடூது கணவரென்று எண்ணித்தொட்டு அழைக்க நெருங்கி வந்தாள். ஆனால் மூலரோ அதற்கு இடங்கொடுக்காமல் ''எனக்கு உன்னுடன் யாதொரு தொடர்பும் இல்லை'' என்று சொல்லிப் பொதுமடம் ஒன்றில் சென்று, அங்கு சிவயோகத் தமர்ந்தார்.

திருமூலர் திருவாவடுதுறையையடைந்து அங்கு ஓர் அரசமரத்தின் கீழ்ச்சிவயோகத்தில் அமர்ந்து ஆண்டுக்கு ஒரு பாடலாகச் சைவாகமங்

களில் உணர்த்தப்பட்ட ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நிலைகளை விளக்கும் மூவாயிரம் பாடல்களைத் தமிழில் உலகோர் உய்யும்படிப் பாடி மூவாயிரம் ஆண்டுகள் இப்புவியிலிருந்து கயிலையில் சிவனடிப் போந்தார். அவர் பாடிய அப்பாடல்களே திருமந்திரம் மூவாயிரம் என்று பெயர் பெற்றன.

### "திருமந்திரமாலை" அறிமுகவுரை

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப

இஃது தொல்காப்பியம் மந்திரத்திற்கு தரும் விளக்கமாகும். மந்திரம் என்பது பிறரறியாமல் தம் முன்னர் அறிய மறைத்துக் கூறும் சொல்லாகும். பண்டைக் காலத்தில் மந்திரம் எழுதாக் கிளவியாக வழிவழியாக குரு சீடன் முறையில் கற்பிக்கப்பட்டது.

தொல்காப்பியத்துக்கு முன்பிருந்தே வாய்மொழியாக குரு சீடனுக்கும் போதித்த எழுதாதக் கிளவியாக இருந்த தமிழ் மந்திரத்தை முதன்முதலில் கலிவிருத்தத்தால் எழுதித் தமிழுலகுக்கு நிலைத்த வடிவமாக வழங்கியவர் திருமூலராவார்.

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே

என்ற திருமந்திரத்தின் மூலம் திருமூலர் மந்திர வகைகளைத் தமிழால் பாடியமை உணரப்படும்.

தமிழில் இன்று நமக்குக் கிடைக்கும் சமய தோத்திர நூல்கள் யாவும் அவர் வழியைப் பின்பற்றி எழுந்தன என்றால் மிகையாகாது. அதனால் தான் இலக்கிய வரலாறுகள் திருமூலரை "சமய இலக்கியத் தந்தை" என்று குறிப்பிடுகின்றன.

மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றாமே

என்ற திருமந்திரச் செய்யுளால் திருமூலர் மூவாயிரம், முந்நூறு, முப்பது ஆகிய எண்ணிக்கையில் மூன்று நூல்கள் செய்துண்மைப் புலனாகிறது. அவை எண்ணிக்கையில் மூன்றாயினும் பொருளில் ஒன்று எனவும் அறிகின்றோம். திருமூலர் செய்த மூவாயிரம் பாடல் முப்பது பாடல் திருமந்திரம் என்ற பெயரில் நமக்கு அறிமுகமானது. முப்பது பாடல் திருமூலர் உபதேசம் என்ற பெயரில் சித்தர் பாடல் தொகுப்பில் காணப் படுகிறது. இடைப்பட்ட இந்த "முந்நூறு" "வடிவம்" "திருமந்திரமாலை" என்ற பெயரில் முடங்கிப் போய்விட்டது.

**மந்திர இயந்திர இயல்**

இது மந்திரம், இயந்திரம் ஆகியவற்றின் தன்மைகளைப் பற்றிக் கூறும் பிரிவு. இதில் மந்திரம் என்பது நினைப்பவனைக் காப்பது எனப் பொருள்படும் மந்+திரம் அதாவது நினைத்தல், காத்தல், என்பது பொருள்.

மந்திரம் என்பது இறைவனின் திருவடிவமாக இந்நூலுள் இவ்வியலில் சுட்டப்படுகின்றது. இறைவனின் வடிவம் தூலம், சூக்குமம், அதிசூக்குமம் என மூன்று நிலைகளாகும். இம்மூன்றினுள் தூலம் என்பது மந்திர வடிவமாகும். "சூக்கும வடிவம்" என்பது உயிர்க்குயிராயிருத்தல், "அதிசூக்குமவடிவம்" என்பது சிற்சித்தி வடிவமாகும். இம்மூன்றினுள் "தூலமும்" "சூக்குமமும்" இறைவனுக்குரிய தடத்த இலக்கணமாகும். "அதிசூக்குமம்" என்பது சொரூப இலக்கணமாகும்.

இயந்திரம் என்பது வழிபாடியற்றும் சக்கரமாகும். இதன்கண் இறைவனது அருட்சக்தி பதிந்து விளங்கி நின்று சாதகம் புரிவோன். விரும்பிய பொருளையும் வினையையும் இயக்குதற்கு நிலைக்களனாய் இருத்தலினால் இது இப்பெயர் பெற்றது. மந்திரம் என்பது உயிரைப் போன்றது. உயிர் என்னும் ஆற்றல் இயங்குவதற்கு உடல் தேவைப்படுவதை போல் மந்திரம் இயங்கி செயல்படுவதற்கு யந்திரம் தேவைப்படுகின்றது.

**அஷ்டயோனி, ஒன்பான் கோள்கள்**

**கொடிபுகை சிங்கம் நாய் கொண்டஎருது**
**மடிகழுதை யானை மாபெருங் காகம்**
**சுடர்சோமன் செவ்வாய் துலங்கும் புதனும்**
**வெடிகுரு வெள்ளி சனி ராகு கேதுவே.**

இச்செய்யுள் எண்டிசை யோனிகள் மற்றும் ஒன்பான் கோள்களின் பீசங்களை உணர்த்தி நின்றன. எண்டிசை யோனிகளாவன.

| | |
|---|---|
| 1. கொடி | 5. எருது |
| 2. புகை | 6. கழுதை |
| 3. சிங்கம் | 7. யானை |
| 4. நாய் | 8. காகம் |

ஆகிய யோனிகள் கிழக்கு முதலான எண்டிசைகளிலும் இருக்கும். இந்திரன் முதலிய உலகமர் எண்மரின் குறிகளான இடி, புகை, சீயம், ஞாளி, இடபம், கழுதை, யானை, காகம் என்பனவும்; ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது முதலான ஒன்பது கோள்களும் காணப்படும். கொடி, புகை, சிங்கம், நாய், இடபங் கழுதை, யானை, காகமில்லை எண்டிசை யோனி என்று பிங்கல நினண்டு தெரிவிக்கின்றது.

**இறைவனும் இறைவியும் யந்திரத்தில் எழுத்துருவாய் இருக்கும் நிலை**

அடுத்த வியந்திரத் தக்கரமாகி
உடுத்த வுருவுற் றொளிபெற்ற சக்தி
எடுத்த வுருவுற் றிறைவனும் நிற்பன்
அடுத்த கன்மமாதிகள் ஆவதந் கெட்டே

இஃது இறைவனும் இறைவியும் யந்திர நிலையில் அட்சரவுருவா யிருக்கும் நிலையை உணர்த்துகிறது.

இந்தப் புவ்னாதிபதி சக்கரத்தில் அமைந்துள்ள ஐம்பத்தொரு அட்சரங் களும் அங்கமாக அமைந்து நிற்க. இறைவி மேற்கொண்டுள்ள உருவிற் கேற்ற வடிவத்தை இறைவனும் மேற்கொண்டு நிற்பான். இப்படி இருவரும் கலந்த நிலையில் இச்சக்கரத்தில் இருப்பதனால் கன்மசித்தி முதலான எல்லா சித்திகளும் விளையும் என்றவாறு.

"சிவமென்னும் பொருள் ஆதி சக்தியோடு சேரின் எத்தொழிலும் செய்யவல்லதாம்" என்ற சௌந்தர்யலகிரி இங்கு நினைத்தற்பாலது.

**உலக பேதன கன்மத்தின் வகைதொகை**
**ஆக்க வினைப்பேதன கன்ம வகை - 29**

1. சபையில் வார்த்தை சொல்லல்
2. பெரும்பட்டம் கட்டுதல்
3. நற்குணம் உண்டாதல்
4. மைந்தரும் மாதரும் கூடுதல்
5. உறவு உண்டாதல்
6. சிறப்பு உண்டாதல்
7. சுகம் உண்டாதல்
8. செட்டு உண்டாதல்
9. முடி உண்டாதல்
10. கெட்டது கூடுதல்
11. தாரமுண்டாதல்
12. வித்து விளைதல்
13. நாட்டு நலம் பயத்தல்
14. மனையுண்டாதல்
15. பெண் வாழ்தல்
16. ஞானமுண்டாதல்
17. கவிதையுண்டாதல்
18. தனமுண்டாதல்
19. நாண முண்டாதல்
20. தானிய முண்டாதல்
21. தன்வயமாதல்
22. பெண்ணான் விடுதல்
23. சேய்மைக் காட்சி
24. திரிகால ஞானம்
25. காய சித்தி
26. பரகாயப் பிரவேசம்
27. உடம்பு பரத்தல்
28. வாழ்நாள் வளருதல்
29. ஆரோக்கிய முண்டாதல்

**அழிவினைப் பேதன கன்மத்தின் தொகை - 29**

1. சொல் தெளிவின்றி மாறுதல்
2. பட்டமழித்தல்
3. குணங்கெடுதல்
4. மாதர் மைந்தர் மனம்பிரிதல்
5. சுகம் கெடுதல்
6. வித்தை கெடுதல்
7. நன்மை கெடுதல்
8. சிறப்பு அழிதல்
9. செட்டு இலையாதல்
10. தலைகெட்டல்
11. கெட்டது கூடாமை
12. கவித்துவம் கெடுதல்
13. மனைகெடுதல்
14. பெண் வாழாமை
15. மாதர் உறவு கெடுதல்
16. ஞானங்கெடுதல்
17. தானியங் கெடுதல்
18. நாணம் அழிதல்
19. தனதானியம் அழிதல்
20. தூரதரிசனங் கெடுதல்
21. பெண்ணான் கெடுதல்
22. தன்வயமாகாமை
23. கண் தெரியாமை
24. முக்காணவுணர்வு அழிதல்
25. காய சித்தி கெடுதல்
26. சீர்சிறப்புக் கெடுதல்
27. உடலிளைத்தல்
28. ஆரோக்கியங் கெடுதல்
29. ஆயுள் கெடுதல்

**எண் வினையேவல்கள்**

| தொகை 8 | வகை | விரி |
|---|---|---|
| 1. வசியம் | 6 | 6 |
| 2. மோகனம் | 5 | 5 |
| 3. தம்பனம் | 7 | 47 |
| 4. உச்சாடணம் | 8 | 73 |
| 5. ஆகர்ஷணம் | 7 | 31 |
| 6. வித்வேஷணம் | 3 | 21 |
| 7. பேதனம் | 7 | 126 |
| 8. மாரணம் | 2 | 14 |
| 8 | 45 | 323 |

**அஷ்ட சக்திகள்**

1. அனங்க குசுமை
2. அனங்க மேகலை
3. அனங்க மதனை
4. அனங்க மதனாதுரை
5. அனங்க காங்குகை
6. அனங்க ரேகை
7. அனங்க வேகினி
8. அனங்க மாலினி

இந்த எண்வகை சத்தியரையும் "குப்தயோகினியர்" என்பர்.

**புவனாபதி மந்திரமும் அதன் பயனும்**

**வைத்தார் புவனை திரிபுரை மந்திரம்**
**ஒத்த பனிரெண்டுடன் மூன்றெழுத் தாகும்**
**முத்தி முதலும் முடிவிலா வானந்தம்**
**பத்தித் தலையிற் பன்னிரண்டார் தியே**

இந்த மூல மந்திரமானது முதல் திருமந்திரத்திலேயே சொல்லப்பட்டது ஆனாலும் அதன் கண்ணுள்ள மூன்று கண்டங்களின் முடிவிலும் புவனையின் பீசம் அமைந்திருத்தல் ஆண்டுப் பெறப்படாமையின் அதனைப் புலப்படுத்த வேண்டி ''மடிந்தது முடித்தல்' என்னும் தந்திர உத்திபற்றி இங்கு இம் மந்திர வடிவில் கூறியருளினார்.

இந்தப் புவனாபதியின் மூலமந்திரமானது 15 பீசங்களை உடையது. இது இதுவரையில் விரித்துச் சொல்லப்பட்ட கன்ம சித்திகளைத் தருவதுடன் யோக சித்திகளைத் தரவல்லதுடன், ஞான சித்தியாகிய பரமுத்தியையும் அளிக்கவல்லது என்று விளக்கம் பெறுகின்றது.

இந்த செய்யுளின் முடிவில் நிற்கும் ''ஆதி" என்னும் சொல்லானது "ககராதி" என்னும் அடைமொழி பெற்று நின்ற இந்நூல் முதற் செய்யுளின் முதற் சொல்லோடு அந்தாதியாய் மண்டலித்துச் சொல்லாலும் பொருளாலும் ஒன்றி முடிந்து நிற்கும் முறைமையினை உணர்ந்துகொண்டு இறையருள் பெற்று நீடு வாழ்வோமாக.

# 61. தேவார அடிச்சுவட்டில் கருவூர்த் தேவர் திருவிசைப்பா

முனைவர் சிவ. மாதவன், புதுவை.

பன்னிரு திருமுறைகளுள் ஒன்பதாம் திருமுறை ஒரு தொகை நூல். கவிஞர் ஒன்பதின்மர் பாடிய பாடல்களின் தொகுப்பாக இத் திருமுறை வகுக்கப்பட்டுள்ளது. இதன்கண் 29 பதிகங்கள் உள்ளன. இத் தொகுப்பில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பங்குக்கும் கூடுதலான பதிகங்களைப் பாடியவர் கருவூர்த்தேவர். இவர் பத்துத் தலங்களை - தலத்திற்கு ஒரு பதிகம் என்னும் கணக்கில் - பத்துப் பதிகங்களில் பாடியுள்ளார். ஒன்பதாம் திருமுறையில் உள்ள மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 301. இவற்றுள் கருவூர்த் தேவரின் பாடல்கள் 103. ஆக மூன்றில் ஒரு பங்கு பாடல்களைப் பாடியவர் என்னும் சிறப்பு - ஒன்பதாம் திருமுறையைப் பொருத்தவரை - கருவூர்த் தேவர்க்கே உரியது.

ஒன்பதாம் திருமுறையில் உள்ள பிற கவிஞர்கள் பல தலங்களுக்கும் சென்றிருக்கலாம்; பண்சுமந்த பாடல்களைப் பாடியிருக்கலாம். எனினும் தொகுப்பின்போது அவை கிடைக்காமல் போயிருக்க வேண்டும் எனக் கருத இடமுண்டு. ஆயினும் கிடைத்திருக்கிற பாடல்களை வைத்து எண்ணுகின்றபோது பதிகப்பெருவழி என்னும் பண்பினைப் போற்றியவர் கருவூர்த்தேவர் என்பது உறுதியாகின்றது. மூவர் முதலிகளைப் போன்று தமிழகத்தின் பல தலங்களுக்கும் சென்று வழிபாடாற்றிச் சைவ சமயத்தின் எழுச்சியை நிலைநாட்டிய சிறப்பு கருவூர்த் தேவருக்குண்டு.

**வரலாற்றிற்கான அகச்சான்று**

கருவூர்த்தேவரின் இயற்பெயர் யாதென அறிய இயலவில்லை. ''அவர் பிறப்பால் அந்தணர்; வேதாகமம் பயின்றவர்; மிகப்பெரிய யோக சித்தர்; போக முனிவரிடம் உபதேசம் பெற்றவர்; சிவயோகத்தில் திளைத்தவர்; காயகல்பம் உண்டு நீண்ட நாள் வாழ்ந்தவர்; பல சித்திகள் கைவரப் பெற்றவர்; உலக வாழ்வில் பற்றில்லாதவர்; அற்புதங்கள் பல புரிந்தவர்'' என்றிவ்வாறு கருவூர்த் தேவர் பற்றிய செய்திகளைச் சில தலபுராணங் களின்வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

மூவர் முதலிகளின் வரலாற்றை அறிந்துகொள்ள அவர்தம் பாடல் களில் அகச்சான்றுகள் கிடைப்பதுபோல், கருவூர்த் தேவர் குறித்து கொள்ளவும் சில அகச்சான்றுகள் கிடைத்துள்ளன. கருவூர்த்தேவர் இம்

மண்ணில் நெடுநாள் வாழ்ந்தவர்; அதற்கு அவர் காயகல்பம் உண்டதே காரணம் என்னும் கருத்து நிலவுகிறது. இக்கருத்து உண்மையே என எண்ணும்படியாக ஓர் அகச்சான்று கிடைத்துள்ளது.

............ இஞ்சிசூழ் தஞ்சை
இராசராசேச் சரத்திவரை
அருமருந் தருந்தி அல்லல்தீர் கருவூர்
அறைந்த சொன்மாலை ஈரைந்தின்
பொருள் மருந்துடையோர் சிவபதமென்னும்
பொன்னெடுங் குன்றுடை யோரே 9-ஆம் திருமுறை பாடல் : 72

இப்பாடலில் இடம் பெற்றுள்ள "அருமருந்து அருந்தி அல்லல்தீர் கருவூர்" என்னும் தொடர், காயகல்பத்தை உண்டு சிறப்பைத் தவிர்த்தவர் என்னும் கருத்தினைச் சுட்டக்கூடிய அகச்சான்றாக அமைகின்றது. இதேபோன்று திரைலோக்கிய சுந்தரம் திருக்கோயில்மீது பாடிய பதிகத்தின் திருக்கடைக் காப்பில்,

"ஆரணத்தேன் பருகி அருந்தமிழ் மாலை கமழவரும்
காரணத்தின் நிலைபெற்ற கருவூரன் தமிழ்மாலை"

9-ஆம் திருமுறை - பாடல் : 132

எனவரும் பாடலடிகளில் கருவூர்த்தேவர் தம்மை "நிலைபெற்ற கருவூரன்" என்று சுட்டியுள்ளமை நோக்கத்தக்கது. காயகல்பம் உண்டு பன்னாள் வாழ்ந்தார் என்னும் பொருளில் 'நிலைபெற்ற' என்னும் சொல் கையாளப் பட்டிருப்பதை அகச்சான்றாகக் கொள்ள முடியும். இவ்வாறு, மூவர் முதலிகளைப் போன்று தம்மைப் பற்றிய குறிப்பைத் தாமே வெளிப்படுத்தும் பாங்கு கருவூர்த் தேவரிடம் காணப்படுவதால், அவர் மூவரை அடியொட்டிச் செயலாற்றினார் எனலாம்.

## கருவூர்த் தேவர் பாடிய புதிய கோயில்கள் அல்லது தலங்கள்

ஒன்பதாம் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ள 29 பதிகங்களும் 14 தலங்கள் குறித்துப் பாடப்பட்டவை. இப்பதிநான்கனுள் ஆறு தலங்கள் தேவாரப் பாடல்கள் பெற்ற தலங்களாகும். அவை; தில்லை, (கோயில்) திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், திருப்பூவணம், திருவாரூர் என்பன. மீதமுள்ள எட்டுத் தலங்கள் புதிதாகப் பாடப் பெற்றவை. அவை; கங்கை கொண்ட சோளேச்சுரம், தஞ்சை இராசராசேச்சரம், களந்தை ஆதித்தேச்சரம், சாட்டியக்குடி, திரைலோக்கிய சுந்தரம், முகத்தலை, திருவிடைக்கழி, திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம் என்பன. இந்தப் புதிய தலங்கள் எட்டில் ஏழு தலங்களைப் பற்றிப் பாடியவர் கருவூர்த் தேவர். திருவிடைக்கழி தவிர்த்த பிற தலங்கள் குறித்துப் பாடப்பெற்ற கருவூர்த்தேவரின் பாடல்கள் கிடைத்துள்ளன; அவையே தொகுக்கப்

பட்டுள்ளன. திருவிடைக்கழித் தலம் குறித்துச் சேந்தனார் பாடியுள்ளார். ஆகவே ஒன்பதாம் திருமுறையில் ஒன்பதின்மரின் பாடல்கள் இடம் பெற்றிருப்பினும் புதிய தலங்கள் குறித்துப் பாடியவர் கருவூர்த்தேவர் ஒருவரே ஆவார்.

## புதிய தலங்கள் குறித்துப் பாட வேண்டியதன் காரணம்

தேவார மூவரால் பாடப்பெற்ற 276 தலங்கள் இருக்கப் புதிய தலங்களைத் திருவிசைப்பா ஆசிரியர் ஏன் பாடினார்? என்னும் வினா எழுதல் இயல்பு. இதற்கு இரண்டு இன்றியமையாக் காரணங்களைச் சுட்ட முடியும். முதலாவது, பக்தி இயக்க மறுமலர்ச்சியின் வேகம் தமிழகமெங்கும் பெருந்தாக்கத்தை ஏற்படுத்தியது. அதன் விளைவாகப் புதிய கோயில்கள் உருவாயின; அவற்றைக் குறித்த ஒரு பதிவு இலக்கியத்தில் இடம் பெற வேண்டும் என்னும் சுயவரலாற்றுணர்ச்சி கவிஞர்களிடையே தழைத்துச் செழித்தது. அதன் காரணமாகப் புதிய தலங்கள் குறித்துப் பாடல் புனைந்தார். இது ஒரு வகையில் பக்தி இலக்கியத்தின் நீட்சியாகத் தொடர்ந்தது எனலாம்.

இரண்டாவது, திருவிசைப்பாவில் குறிப்பிடப் பெறும் எட்டுத் தலங்களில் நான்கு தலங்கள் சோழ மன்னர்களோடு அல்லது அவர்களது பெயர்களோடு தொடர்புடையனவாக விளங்குகின்றன. களந்தை ஆதித் தேச்சரம், இராசராசேச்சரம், கங்கை கொண்ட சோளேச்சரம், திரைலோக்கிய சுந்தரம் என்னும் இவை நான்கும் சோழ மன்னர்களால் உருவாக்கப் பட்ட கோயில்கள் ஆகும். சைவ சமயம் தேவார மூவராலும் பிற நாயன்மார் களாலும் எழுச்சிமிக்க சமயமாக வளர்ந்து மக்களின் பேராதரவைப் பெற்றுத் திகழ்ந்தது. மாபெரும் மக்கள் சமயமாகவும் வளர்ந்து மக்களின் பேராதரவைப் பெற்றுத் திகழ்ந்தது. மாபெரும் மக்கள் சமயமாகவும் மக்கள் முன்னின்று நடத்திய பக்தி இயக்கமாகவும் வேரூன்றிய சைவத்தைப் போற்றிப் புரக்க வேண்டிய கட்டாயம் சோழப் பேரரசுக்கு ஏற்பட்டது. மக்களின் ஆதரவைப் பெற்ற சமயம், கடவுள், கோயில், கலைகள் அனைத்தையும் சோழமன்னர்கள் ஏற்றுக்கொண்டதன் அடையாளமாக அவர்கள் புதிய கோயில்களைக் கட்டினர். மேலும், சோழப்பேரரசின் காலத்தில் சைவம் மிகப்பெரும் சமய நிறுவனமாக (an institutionalized religion) வளர்ந்து விட்டிருந்தது. அதனை மேலும் மேலும் நிறுவனமாக்கிட அக்காலச் சோழமன்னர்களும் முன்வந்ததன் அடையாளமாகப் புதிய கோயில்கள் முகிழ்த்தன எனலாம்.

இனி, மற்றக் கவிஞர்கள் பழைய தலங்களைப் பாடியிருக்கக் கருவூர்த்தேவர் மட்டும் ஏழு புதிய தலங்களைப் பாடியதற்கு அவரது சமய வரலாற்றுணர்ச்சி அடிப்படையாக அமைந்தது எனக் காரணம் கூறலாம். தம்மைப் பக்தி இயக்கத்தவரோடு ஒப்ப வைத்து எண்ணியவர்

கருவூர்த்தேவர்; அவ்வியக்கத்தவர் சென்ற வழியைப் பின்பற்றிச் சென்றவர் அவர்; கொங்கு நாட்டில் பிறந்த அவர் தேவார மூவரைப் போன்று சோழநாடு, நடுநாடு, தொண்மைநாடு, தென்பாண்டிநாடு ஆகிய பகுதி களுக்குச் சென்று மக்களின் பக்தியுணர்வை நேரில் கண்டுகொண்டார். எனவே கருவூர்த் தேவரின் சைவ சமயவுணர்வு கூர்மை பெற்றது. அதன் விளைவாகப் புதிய தலங்கள் குறித்து அவர் பாடல்கள் புனைந்தார் என ஐயமின்றி உரைக்கலாம்.

## பதிகப்பலன் கூறும் மரபு

பதிகப்பலன் கூறும் மரபைப் தோற்றுவித்தவர் காரைக்காலம்மையார் ஆவார். அம்மரபைத் தம் பதிகங்கள் அனைத்திலும் பின்பற்றியவர் திருஞானசம்பந்தர். எனவே அவரது தேவாரத்திற்கு "திருக்கடைக்காப்பு" என்னும் சிறப்பு பெயர் அமைந்தது. சம்பந்தரையடுத்துப் பதிகப்பலன் கூறியவர் சுந்தரர். இம்மரபைக் கருவூர்த்தேவரும் பின்பற்றியுள்ளார். தம் பாடல்களைப் பாடி இறைவனைப் பரவுவோர், 'இருள் கிழிந்தெழுந்த சிந்தையராய்' விளங்குவர் என்கிறார் கருவூர்த்தேவர். மேலும், தம் பாடல்கள் 'இம்மை மறுமைப்பயன் விளைக்கும்' என்றும், 'சிவபதம் நல்கும்' என்றும், 'பூரணமளிக்கும்' என்றும், 'அரசயோகம் முதலிய இம்மைப் பயனும், சிவப்பேறு என்னும் மறுமைப் பயனும் அளிக்க வல்லன' என்றும், 'பரமனது உருவை வழங்குவன' என்றும், 'வானுலகு வாய்ந்திட வழிகாட்டுவன' என்றும் குறிப்பிடுகின்றார்.

இவையாவும் தேவார ஆசிரியர்களை அடியொற்றி நடைமேற் கொண்டதால் அமைந்தவை என உறுதிபட உரைக்கலாம். அத்துடன் கருவூர்த்தேவர் தம் பாடல்களைத் 'தீந்தமிழ் மாலை', 'அமுதம் ஊறிய தமிழ்மாலை', 'மணிநெடுமாலை', அமுதுறழ் தீந்தமிழ்மாலை', கருவூரன் தமிழ்மாலை', 'பாவணத் தமிழ்கள்', கருவூரன் கழறுசொன்மாலை', கரும்பனைய தீந்தமிழ்மாலை' என்று தமிழ் மொழியோடு இணைத்துப் பெருமைக்குரியனவாகச் சுட்டியுள்ளார். தமிழ் பரப்பிய ஞானசம்பந்தரின் தாக்கம் கருவூர்த்தேவரிடத்திலும் எதிரொலிக்கிறது எனலாம்.

## அகப்பொருள் மரபு

தமிழ்மொழியின் தனிப்பெரும் சிறப்பிற்குக் காரணமாய் விளங்குவது பொருள் இலக்கணம். உலகமொழிகள் அனைத்திலும் காதல், வீரம் என்னும் இரு பாடுபொருள்களைக் கொண்ட பாடல்கள் உள. ஆனால், அவை எப்படிப் பாடப்பெற வேண்டும் என்பதற்கான இலக்கியக் கொள்கை அல்லது இலக்கணமரபு அம்மொழிகளில் இல்லை. தமிழில் மட்டுமே அக, புற இலக்கண மரபுகள் உள்ளன. சங்க இலக்கியக் காலத்தில் பெருவழக்காக இருந்த அக இலக்கிய மரபுகள் அடுத்தடுத்து வந்த

காலங்களில் தோன்றிய இலக்கியங்களிலும் தம் செல்வாக்கைப் பதித்தன். அதன் விளைவாக, பக்தி இலக்கியத்தில் அகப்பொருள் மரபு பின்பற்றப் பட்டது. சைவத் திருமுறைகளிலும் ஆழ்வாரது பாசுரங்களிலும் 'தமிழ்' எனச் சிறப்பிக்கப் பெறும் அகமரபு பின்பற்றப்பட்டுள்ளது.

சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரின் திருமுறைப் பாடல்களில் இம்மரபைப் பரக்கக் காண முடிகிறது. அகமரபுள் ஒன்றாகிய தூதுவிடுதல் மூவர் தேவாரத்திலும் இடம்பெற்றுள்ளமை ஈண்டு எண்ணிப் பார்க்கத்தக்கது. தலைவி, வண்டு, கிளி, பறவை முதலான வற்றைத் தூதுவிடுவதாகப் பாடுதல் என்பது ஒரு பொதுப்பண்பாக அனைத்து அக இலக்கியங்களிலும் இடம்பெற்றிருக்கின்றது. பக்தியை முன் வைத்துப் பாடப்பெறும் பனுவல்களிலும் இம்மரபு கையாளப்படுவது பழைய மரபின் தொடர்ச்சி என்றுதான் கருத வேண்டியுள்ளது. சிற்றுயிர், 'தன்னை ஏற்றுக்கொண்டு புரந்து காத்தருள வேண்டும்' என வேண்டிப் பரம்பொருளிடத்து ஒன்றிவிட விழையும் விருப்பம் பக்திப் பாடல்களின் அடிநாதமாக ஒலிக்கின்றமை உணர்தற்குரியது.

திருஞானசம்பந்தரின் முதல் திருமுறையின் 60-ஆம் பதிகம் அளிஅரசு, இளங்குருகு, வாரணம், நாரை, புறா, அன்னம், அன்றில், இளங்குயில், மடக்கிளி முதலானவற்றைத் தலைவி தூது விடுவதாக அமைந்துள்ளது. இத்தகு தூதுப்பாடல்கள், 1. தன்னுடைய துன்பத்தைத் தலைவனிடத்துத் தெரிவிக்குமாறும், 2. தன்னுடைய உடல்வேறுபாட்டைத் தலைவனிடம் உணர்த்துமாறும், 3. தலைவனைத் தன்னிடத்தே வந்து போகுமாறு கேட்பதாகவும், 4. தலைவனின் பெயரைச் சொல்லுமாறு கூறுவதாகவுமான பொருள்களைக் கொண்டுள்ளன.

"சிறையாரும் மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத்தொடு தரளம்
துறையாரும் கடல்தோணி புரத்தீசன் துளங்கும் இளம
பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே"

என்னும் சம்பந்தரின் பாடல் இறைவனின் திருநாமத்தைப் பேசுமாறு கிளியிடம் வேண்டுவதாக அமைந்துள்ளது. அப்பர் பெருமானின் திருப்பழனத் தலப்பதிகம் அகத்துறைப் பொருள் சார்ந்தது. அதன்கண், சொன்மாலை பயில்கிற குயிலினங்களும், இளங்குருகுகளும் தூதாகின்ற பாங்கினைக் காணலாம். சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருவாரூர்ப் பதிகத்தில் (பதிகம்-37) பறக்கும் எம் கிள்ளைகாள், பாடும் எம்பூவைகாள், வெண்நாரைகாள், சக்கரவாளத்து இளம்பேடைகாள் என ஒவ்வொன்றாக விளித்து, தமது ஏக்கத்தை-விருப்பத்தை ஆரூர் இறைவரிடம் சென்று கூறுமாறு தலைவி, வேண்டுகின்ற தன்மையைக் காணமுடிகிறது. இம்மரபின் தொடர்ச்சியைக் கருவூர்த்தேவரிடத்திலும் பார்க்கலாம். இவர் பாடிய திரைலோக்கியசுந்தரம்,

திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம் ஆகிய இரு தலப்பதிகங்கள் முழுவதும் அகத்துறைப் பொருண்மையுடையவை. இப்பதிகங்கள் இறைவனைக் காதலித்த பெண்ணொருத்தியின் கூற்றாகவும் அவள் நலம் நாடும் செவிலியின் கூற்றாகவும் அமைந்துள்ளன. இவற்றுள், கீழ்க்கோட்டூர்ப் பதிகப்பாடலொன்று தலைவி தும்பியினைத் தூதாக விடுகின்ற செய்தியைச் சுட்டுகிறது. இறைவனின் திருச்சடையை அலங்கரிக்கின்ற அழகிய மலரில் உள்ள மகரந்தத்தைச் சேகரிக்கும்பொருட்டு ரீங்காரமிடுகின்ற தும்பிகளே! அவ்விறைவனிடத்தில் என் மனத்தையும் கொண்டு சென்று சேருங்கள் எனத் தலைவி பேசும் பாங்கு மிகவும் நேர்த்தியானது.

"திருநுதல்விழியும் பவளவாய் இதழும்
திலகமும் உடையவன் சடைமேற்
புரிதரு மலரின் தாதுநின்று ஊதப்
போய்வரும் தும்பிகாள், இங்கே
கிரிதவழ் முகிலின் கீழ்த்தவழ் மாடங்
கெழுவுகம்பலை செய்கீழ்க்கோட்டூர்
வருதிறல் மணியம்பல வனைக் கண்டென்
மனத்தையும் கொண்டு போதுமினே" (9-10-3)

என்னும் இப்பாடல் தேவாரமூவரின் அடிச்சுவட்டில், பக்தி இலக்கிய மரபைப் பின்பற்றிச் செல்லும் திறன் படைத்தவர் கருவூர்த்தேவர் என்பதற்குச் சீரிய எடுத்துக்காட்டாய்த் திகழ்கின்றது.

## நிறைவுரை

பக்தி இலக்கியத்தின் நீட்சிக்கும் தொடர்ச்சிக்கும் வழிவகுத்த திருமுறை ஆசிரியர்களுள் கருவூர்த் தேவர் குறிப்பிடத்தக்கவர்; அவரது வாழ்க்கை வரலாற்றிற்கான அகச்சான்றுகள் சில கிடைத்துள்ளன. புதிய தலங்களைப் பாடும் போக்கினைத் தொடர்ந்தவர் கருவூர்த்தேவர்; சைவ சமய வரலாற்றுணர்ச்சி அவரிடத்தில் சிறந்து காணப்பட்டமையை அவரது பாடல்கள் புலப்படுத்துகின்றன. அவர் தமக்கு முற்பட்ட திருமுறை அருளாளர்களைப் பெரிதும் அடியொற்றிச் செயல்பட்டுள்ளார். அவரது பாடலமைப்பும், இறையனுபவ வெளிப்பாட்டுத் திறமும் தேவார மூவரையும் நினைவுபடுத்துவதாக உள்ளன. சுருங்கக் கூறினால் கருவூர்த் தேவர் கி.பி.5-ஆம் நூற்றாண்டில் தோற்றம் கொண்ட சைவ சமய மறுமலர்ச்சியின் எழுச்சியைக் கி.பி.10-ஆம் நூற்றாண்டில் - தாம் வாழ்ந்த காலத்தில் - மேலும் எழுச்சியும் வன்மையும் அடையுமாறு போற்றிக் காத்தார் என உரைக்கலாம்.

# 62. திருமூலர் வரலாறும், திருமந்திரமும்

முனைவர் பா. மாலினி, சிதம்பரம்.

**திருமந்திரம் - பொதுநோக்கு**

திருமூலர் எழுதிய 'திருமந்திர நூல்' பொதுவாகவும் சிறப்பாகவும் அமைந்து ஓதுவாருக்கு இன்பமும் நன்மையும் பயப்பது. இம்மை இன்பமே அன்றி முத்திப் பேரின்பத்தையும் நல்கும் பெருமையும் வாய்ந்தது இந்நூல்.

சைவத்திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகக் கருதப்படுவது 'திருமந்திரம்'. இதற்கு 'மந்திரமாலை என்னும் திருப்பெயரும் உண்டு. இந்நூல் சைவ சமய நெறியின் அடிப்படை நூலாக விளங்குகின்றது.

**நூலின் தோற்றம்**

திருமந்திரத்தில் திருமூலரின் வாயிலாக நூலின் தோற்றம் குறித்து அறிய முடிகிறது. கயிலையிலிருந்து தெற்கு நோக்கி வந்த திருமூலர் "சிவபெருமான் சீவர்களைப் பக்குவம் செய்யும் பொருட்டு எழுந்தருளியிருக்கும் வீணாத்தண்டில் பொருந்தியிருப்பவள் சக்தி. அவள் திருவடியில் சேர்நதிருந்தேன்" என்று கூறுகின்றார். இதனை,

**சேர்ந்திருந்தேன் சிவமங்கை தன் பங்கனைச்**
**சேர்ந்திருந்தேன் சிவன் ஆவடு தண்துறை**

என்ற குறிப்பால் அறியலாம். ஆவடு தண்துறை என்பது திருமந்திரம் தோன்றிய திருவாவடுதுறை என்னும் திருத்தலம். திருவாவடுதுறையில் 'சிவபோதியின் நீழலில்' திருமூலர் யோகத்தில் அமர்ந்திருப்பவர் எனத்தெரிகிறது.

**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்**

என்று கருதி, நந்தியெம் பெருமான் திருவருளினால் தான் பெற்ற சிவானந்த இன்பத்தை மூவாயிரம் தமிழ்ப்பாக்களாகப் பாடியருளினார்.

**நூலமைப்பு**

சைவ சித்தாந்தச் சாத்திரங்கள் தோன்றுவதற்கு ஊற்றுக்கண்ணாக விளங்குவது திருமந்திர நூலாகும். திருமூலர் திருக்கயிலாய பரம்பரையைச் சார்ந்தவர். பன்னிரு திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம் தனித்தன்மை வாய்ந்தது. திருமந்திரம் ஒன்பது தந்திரங்களைக் கொண்டது. 232 அதிகாரங்களால் அமைந்தது. இடைச் செருகல்களோடு மொத்தம் 3071 பாடல்களைத் தன்னகத்தே பெற்றது.

## நூலின் சிறப்பு

சிவபெருமான் தன்னை உணர்ந்தவர்கட்கு மந்திரம், தந்திரம், உபதேசம் முதலியவற்றை அருளுவான். இம்மூன்றும் அடங்கிய ஆகமம் திருமூலரின் திருமந்திர ஆகமம் ஆகும். இதனை,

ஆகும் அனாதி கலை ஆகம வேதம்
ஆகும் அத்தந்திரம் அந்நூல் வழிநிற்றல்
ஆகும் அனாதி உடல் அல்லா மந்திரம்
ஆகும் சிவபோதகம் உபதேசமே

என்று திருமூலர் கூறுகின்றார்.

திருமூலர் தம் நூலில் ஒன்பது ஆகமங்களை உள்ளடக்குகிறார். அவை சிவன் அருளிய இருபத் தெட்டு ஆகமங்களின் கருத்துக்களை உட்கொண்டனவாகும். திருமந்திரம் என்னும் பெயரில் உள்ள 'திரு' என்ற அடைச்சொல் தெய்வத்தன்மை வாய்ந்த நூல் என்பதைத் தெரிவிக்கின்றது. 'மந்திரம்' என்னும் சொல் பல பொருள்களை உடையது. இங்கு மந்திரம் என்பதற்கு 'மறைபொருள்' அல்லது 'மறைமொழி' என்றும் பொருள் கொள்ளலாம். இங்கு தொல்காப்பியர்,

"நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரமென்ப"

என்று கூறுவது ஒப்புநோக்கத் தக்கது.

சமுதாயச் சிந்தனையாளரான திருமூலர் மனித இனத்திற்கு வகுத்து வைத்த வழக்கங்கள், வழிமுறைகள், விதிமுறைகள் மிகப்பல. அவை மனிதன் தன்னை ஒத்த பிறிதொரு மனிதனின் இன்பத்திலும் துன்பத்திலும் பங்குகொண்டு ஒழுக்க நெறியில் நின்று, பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி, ஆரவாரமும் வேறுபாடும் நிறைந்த சாதிகள், மதங்கள், சடங்குகள், மூடநம்பிக்கைகள் முதலானவற்றைக் கண்டித்து அன்பு, அறிவு, அருள் மிக்கவனாக வாழவேண்டும் என்பனவாகும்.

## இறையன்பு

மனிதனுக்குப் பயிற்சியினாலும், உள்ளுணர்வினாலும் இறைவன்பால் உருவாவது 'இறையன்பு' எனப்படும். திருமூலர் அன்பும், சிவமும் ஒன்றே, இரண்டல்ல என்னும் கருத்தினை வலியுறுத்தும் வகையில்,

அன்பு சிவமிரண் டென்ப ரறிவிலாதார்
அன்பே சிவமாயமர்ந் திருந்தாரே

என்று கூறுகின்றார். அன்புதான் சிவம், சிவந்தான் அன்பு என்றும், அன்பைக் கண்ணால் காண இயலாது. உள்ளத்தால் உணரமுடியும். அதுபோன்றே எளிய மானிடர் சிவத்தைக் கண்ணால் காணமுடியாது. ஆனால் உணர்வினால் பெறமுடியும், உணரமுடியும் என்பதை ஆணித்தரமாக வலியுறுத்துகிறார்.

**அன்பினால் வன்முறை குறையும்**

மனிதனுக்கும் இறைவனுக்கும் அன்பினால் ஏற்படும் பிணைப்பினையும் அதன் சிறப்பினையும் திருமந்திரப் பாடல்கள் பல சுட்டிக்காட்டுகின்றன. இப்பிணைப்பால் மனிதரிடையே பொருளால் ஏற்படும் உயர்வு தாழ்வு நீங்கும். பண்புக்கு முதன்மை கிடைக்கும். அனைவரையும் இறைவனாகப் பார்க்கும் பக்குவத்தை இன்றைய சமுதாயம் பெற்று விட்டால் வன்முறைகளுக்கு இடம் இராது. ஒற்றுமையும் ஒருமைப் பாட்டுணர்வும் மறைமுறைமாக அன்புவழியினால் உருவாகும் என்பதைத் திருமந்திரம் உணர்த்துகின்றது.

**போற்றி என்பார் அமரர் புனிதன் அடி**
**போற்றி என்பார் அசுரர் புனிதன் அடி**
**போற்றி என்பார் மனிதர் புனிதன் அடி**
**போற்றி என் அன்புள் விளங்கவைத்தேனே**

'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்ற வள்ளுவரின் கருத்தை அரண்செய்வதுபோல் திருமந்திரச் சிந்தனைகள் அமைந்துள்ளன.

**ஈகை**

ஈதல் இன்பம் நல்குவது. இதனை வள்ளுவர் 'ஈத்துவக்கும் இன்பம்' என்பார். முடிந்த அளவிற்குப் பொருள்களைப் பிறருக்குக் கொடுக்கலாம். கொடுப்பதால் இன்பம் ஏற்படும், இதனை அறிந்தும் பிறருக்குக் கொடுக்காதவர்கள் உளர். அவர்கள் தமக்கு மட்டும் தம்பொருள் சொந்தம் என்று சேமிப்பர். ஒருநாள் அவர் செல்வத்தைக் கள்வர் கொள்ளை இடுவர். அவர்களுக்குத் துன்பமும் இழைப்பர். ஈகையின் இன்றியமையாச் சிறப்பினை,

**யாவர்க்கும் ஆம் இறைவற்கு ஒரு பச்சிலை**
**யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை**
**யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி**
**யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே**

என்று திருமந்திரப்பாடல் உணர்த்துகிறது. எந்த வழியில் எல்லாம் ஈகை செய்ய வேண்டும் என்று இப்பாடல் விளக்குகின்றது.

**ஈயாமையின் இழிவு**

பிறருக்குக் கொடுப்பதால் இன்பம் ஏற்படும் என்று அறிந்தும் கொடுக்காமல் வாழும் மக்களைத் திருமந்திரம் சாடுகிறது.

**எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன**
**பட்டிப் பதகர் பயன் அறியாரே**

என்பது அப்பாடல்.

**தானச் சிறப்பு**

கொடுத்தலின் பெருமைகளைத் திருமந்திரப் பாடல்கள் செவ்வனே எடுத்துரைக்கின்றன. உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்று எண்ணாது யாவருக்கும் கொடுத்து உண்ணவேண்டும் என்ற அரிய கருத்தினை எடுத்துரைக்கும் வகையில்,

**ஆர்க்கும் இடுமின் அவர் இவர் என்னன்மின்**
**காக்கை கரைந்து உண்ணும் காலம் அறிமினே**

என்ற பாடல் அமைகின்றது.

இறைவனைச் சாராதவருக்குக் கொடுப்பது பெரும்பிழையாகக் கருதப்பட்டது. இறைவனை எண்ணாது கொடுப்பவரும் ஏற்பவரும் நரகில் இடப்படுவர். எனவே சிவச்சிந்தனையோடு எல்லாம் அவன் செயல் என்ற எண்ணத்தோடு சீடன், சிவகுரு ஆகிய இருவரும் செயல் படுதல் வேண்டும்.

படமாடக் கோயில் பரமற்கு ஒன்று ஈயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்
படமாடக் கோயில் பரமற்கு அதுஆமே

என்னும் பாடல் இக்கருத்துடையது.

**மதம்**

மதம் என்பது இறைவன், உலகம், மனிதன் ஆகிய மூவரின் அடிப்படைத் தத்துவங்களின் உறவாகும். உலக வாழ்க்கையின் மறைபொருளை விளக்குவது மதம். அழியாத பேரின்ப வாழ்விற்கும், வீடு பேற்றிற்கும் வழிகோலுவது மதம் ஆகும். இந்து மதம் சைவம், வைணவம் என்று இருபெரும் பிரிவுகளாகக் காட்சியளிக்கிறது. இவற்றுள் சைவத்தின் விளக்கமாகவும், ஆகமங்களின் சாரமாகவும் திகழ்வது திருமந்திரம். திருமந்திரத்தின் அடிப்படைக் கொள்கையினை,

**ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின் நமனில்லை நாணமே**
**சென்றே புகும் கதியில்லை நுஞ் சித்தத்து**
**நின்றே நிலைபெற நீர் நினைந் துய்மினே**

என்னும் பாடலால் அறியலாம்.

**யாக்கை**

திருமூலர் முதலில் உடம்பினை இழுக்கு என்று நினைத்து இருந் தமையையும், பின் உயிர் வளர்ச்சிக்கான உடல் வளர்த்தமையையும் பாடுகிறார். உலகில் மனிதன பிறத்தலைக் குறிப்பிடுகிறார்.

ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடச் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்ந்தனர்

என்பது அப்பாடல்.

**செல்வம் நிலையாமை**

பொருட்செல்வம் நிலையற்றது; அது சக்கரம் போன்று உருண்டு செல்லக்கூடியது. திருமந்திரம் பொருட்செல்வத்தின் நிலையாமையை விரிவாக விளக்குகின்றது. சான்றாக,

மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச்செல்லும் கலம்போல்
அவிழ்கின்ற ஆக்கைக்கு ஓர் வீடுபேறு அகச்
சிமிழி ஒன்று வைத்தமை தேர்ந்து அறியாரே

என்று வலியுறுத்திக் கூறுகிறது. திருமந்திரச் சிந்தனைகள், அன்பு, அறம், ஈகை, முதலியவற்றைப் பெரிதும் வலியுறுத்துகின்றன. அன்பினால் உலகில் வன்முறையற்ற சமுதாயத்தை மலரச் செய்யலாம். ஈகை தன்னலமற்றதாக இருத்தல் வேண்டும். இறைவன்-உலகம்-மனிதனை-இணைக்கும் பாலமாக மதம் செயல்படுகிறது. சைவ சமயத்தின் ஏற்றத்தை விளக்குகிறது. யாக்கை, செல்வம், நிலையாமையை உணர்த்துகிறது. உலக அரங்கில் தமிழ்ச் சமுதாயமும் இந்திய நாடும் சிறந்த ஓர் இடத்தைப் பெறுவதற்கான சிந்தனைக் கருவூலமாகத் திருமந்திரம் திகழ்கிறது.

வாழ்வின் பல்வேறு நிலைகளையும் கண்டு, தெளிந்து சிவயோகத்தில் அமர்ந்த யோகியாகக் கருதப்படுபவர் திருமூலர்.

''அன்பே சிவம்'' என்ற கொள்கை கொண்ட இவர், சைவ சமயக் கருத்துக்களை விளக்கும் முதல் நூலாகத் திருமந்திரத்தைப் படைத்தார். சோழ நாட்டில் சைவப் பெருந்தலங்களுள் ஒன்றாகத் திகழ்வது திருவாவடு துறை. இவ்வூரில் தாம் திருமந்திரம் இயற்றப்பட்டதாகச் சைவச் சான்றோர்கள் கூறுகின்றனர். சைவத் திருமுறைகளில், பத்தாம் திருமுறையாகச் சேர்க்கப் பட்ட திருமந்திரம் 3000 பாடல்களைத் தன்னகத்தே கொண்டது.

சித்தர்களில் குறிப்பிடத்தக்க பல சிறப்புகளைப் பெற்றவர் திருமூலர்.

''தோத்திரத்திற்குத் திருவாசகம்
சாத்திரத்திரத்திற்குத் திருமந்திரம்''

என்பார் திருமூலர், சித்தருட் சித்தராய் திகழ்ந்து போற்றபடுபவர்.

மூலனுரை செய்த மூவாயிரத் தமிழ்
மூலனுரை செய்த முற்றூறு மந்திரம்
மூலனுரை செய்த முப்பது உபதேசம்
மூலனுரை செய்த மூன்று ஒன்றாமே''

திருமூலர் இயற்றிய திருமந்திரம், வேதம், ஆகமம் ஆகிய இரண்டுக்கும் அரிய விளக்கமாய் விளங்குகிறது. இந்நூல் "சைவ ஆகமம்" என்று போற்றப்படும் பெருமையுடையது. தமிழ் ஞாலம் அறியவே நந்தியருளியது" - என்னும் திருமூலர் வாக்காலேயே அறியலாம்.

"யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" (85)

"யாவர்க்குமாம் உண்ணும் போது ஒரு கைப்பிடி" (252)

"உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" (724)

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" (2104)

"அன்பே சிவம்; இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது அறிகிலார் ஆரும்"

சித்தர்களில் தலைமையானவர் திருமூலர் ஆகும். இவர் திருக்கயிலாய பரம்பரையைச் சேர்ந்தவர். சிவ பெருமானிடமும் நந்தீசரிடமும் உபதேசம் பெற்றவர். இவருடைய வரலாற்றை சதுரகிரித்தலபுராணம், பெரியபுராணம் போன்றவற்றிலிருந்து அறியலாம்.

'நந்தி அருளாலே நாதனாம் பேர் பெற்றார்' என்ற குறிப்பு வருவதால் இவருக்கு நாதன் என்ற பெயரும் சேர்ந்து திருமூலநாதன் அல்லது சுந்தரநாதன் என நின்றது என்பது திருமந்திரத்தால் பெறப்படுகிறது. சித்தர் என்னும் சொல் தொல்காப்பியம், சங்க இலக்கிய நூல்களில் காணப் பெறவில்லை என்றாலும், சித்தர் பற்றிய செய்திகள் சில இலை மறை காய் போல அவற்றில் காணப்பெறுகின்றன.

மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன்

எனவரும் தொல்காப்பிய நூற்பாவின் அடிகள் சித்தரைக் குறிக்கும் எனச் சிலர் கருதுகின்றனர்.

## திருமூலர் வரலாறு

திருமூலர் வரலாற்றைச் சிறப்பான நிலையில் அறிய வேண்டுமென்றால் சேக்கிழார் பெருமான் இயற்றிய திருத்தொண்டர் புராணம் மூலம் அறியலாம்.

திருக்கயிலையில் சிவபெருமானுக்கு முதல் பெரும் காவலராய் விளங்கிய இந்திரன், திருமால் பிரமன் முதலிய தேவர்களுக்குச் சிவ நெறியை அருளிச் செய்யும் பணிபூண்ட திருநந்தித் தேவரின் சிவ உபதேசத்தினைப் பெற்ற நான்மறையோகியார் ஒருவர் குறுமுனிவரான அகத்தியரைக் காணும் பொருட்டுப் பொதியமலை நோக்கிச் சென்றார். அவ்வாறு செல்லும் வழியில் திருக்கேதாரத்தை வழிபட்டு, பசுபதி நேபாளத்தை வழிபட்டார். பின்னர் கங்கைக் கரையை அடைந்தார். அங்கிருந்து காசி, ஸ்ரீசைலம், காளத்தி, திருவாலங்காடு சென்று நடனமிடும் இறைவனைப் பணிந்து காஞ்சி சென்று ஏகாம்பர நாதனை வணங்கினார். திருவதிகை

வீரட்டம் சென்று பின் சிதம்பரம் சேர்ந்தார். காவிரியின் தென்கரையேறி திருவாவடுதுறை வந்தார்.

அவ்வமயம், காவிரிக்கரையில் உள்ள சாத்தனூர் என்னும் ஊரில் ஆடு மேய்ப்பான் மூலன் என்பானைப் பாம்பு தீண்டிவிட, அவ்விடத் திலேயே மூலன் இறக்கிறான். அதனால் ஆக்குலங்கள் துயருற்றன. அத்துயரைத் தீர்க்க நினைத்த ஞானி தம்முடலை ஓரிடத்தில் பாதுகாத்து, தம்துயிரை மூலனுடம்பில் புகுத்தி, திருமூலராய் எழுந்தார். அவர் அவற்றை மேய்த்துப் பின் மாலை ஆனதும் சாத்தனூர் ஓட்டிச் சென்றார். பசுக்கள் தம் வீடு போக, அவர் தனித்து இருந்தார். மூலன் மனைவியும் பொழுது கழிந்ததும் வரத் தாழ்ந்தனர் ஏன் என அஞ்சித் தேடிச் சென்று அவர் நின்ற நிலை கண்டாள். இவருக்கு யாதோ தீங்கு நேர்ந்ததென மெய் தீண்ட அதற்கு அவர் இசையவில்லை. ''இங்கு உனக்கு என்னுடன் தொடர்பில்லை'', என மறுத்துப் பொதுமடம் புகுந்தார்.

தம் கணவனது இயல்பு வேறானது கண்டு இரவு துன்பம் அடைந்து அவரிடம் அணையாமல் மறுநாள் அவ்வூரில் உள்ளோர் முன்னிலையில் அத்தன்மையை எடுத்துரைத்தாள். அவர்கள் ஆராய்ந்து இது பித்து அன்று சித்து என்றும் விகர்ப்பமில்லாச் சிவயோக நிலையில் விளங்கு கின்றார் என உரைத்தனர். இருவகைப் பற்றும் அறுத்துச் சிவன் முக்தராய் விளங்குவதால் முன்னைப் போல் கூடார் என்றும் அவர்கள் கூற, அவள் பெரிதும் துன்பமுற்று அகன்றாள்.

அவர் ஆநிரை வந்த வழியே ஏகித் தாம் முன்பு பாதுகாப்பில் வைத்த உடலைத் தேடினார். அது காணாமையால் யோகத்தில் அமர்ந்து சிவனைச் சிந்தனை செய்தார். சிவன் தந்த ஆகமப் பொருளைத் திருமூலர் வாக்கினால் ''தமிழ் வகுப்பத் திருவுளம் கொண்டு தம் உடலை மறைப்பித்தான்'' என உணர்ந்தார். தம்மைச் சுற்றமெனக் கருதி வந்த இடையர்களுக்கு, தொடர்பின்மையை விளக்கி அவர்கள் அகன்றபின் திருவாவடுதுறை சேர்ந்தார். அங்கு இறைவனை வணங்கித் திருக்கோவிலின் மேற்குப் புறத்தில் உயர்ந்த அரசமரத்தடியில் யோகத்தில் ஆழ்ந்து இதயத்துள்ள பொருளை உணர்ந்தார்.

பிறவியாகிய தொடர்பினின்று உய்யும் பொருட்டுச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளையும் காட்டும் திருமந்திரமாலை யினை ஓர் ஆண்டுக்கு ஒரு பாடலாகப் பரம்பொருளான சிவனைப் போற்றி 'ஒன்றவன் தானே' என்று எடுத்துப்பாடினார். அப்பொருள் மாலை தமிழ் மூவாயிரம் சார்த்தி மூவாயிரம் ஆண்டிருந்து சென்னிமதி அணிந்து சிவனது திருவருளால் கயிலை அடைந்து பிரியாத் தாளடைந்தார் எனத் திருத்தொண்டர் புராணத்தில் இருபத்தெட்டுப் பாடல்களில் இவரது வாழ்க்கை குறிக்கப்பெறுகின்றது.

மேலும் மூவாயிரம் பாடல்களில் சுமார் நூற்றி அறுபத்திரண்டு பாடல்கள் திருமூலர் தம்மை உளப்படுத்தியனவாகக் காணப்படுகின்றன. தற்சிறப்புப் பாயிரத்தில் உள்ள குரு பரம்பரை, திருமூலர் தம் வரலாறு கூறல் என வரும் இருபகுதிகள் தான் இவர் தம் வாழ்க்கையைச் சற்று விரிவாகக் கூறும்போக்கில் உள்ளன. மூன்றாவதாகப் புலவர் புராணம் என்னும் நூலும் இருபத்தியொரு பாடல்களில் திருமூலர் வரலாற்றைக் கூறுகின்றது.

திருமூலர் வரலாறு எங்ஙனம் தெளிவின்றிக் காணப்படுகிறதோ, அது போன்றே காலமும் கணிப்பதற்கு அரிதாக உள்ளது. திருமந்திரத்தில் உள்ள தனிச் சிறப்புப் பாயிரத்தின் மூலமே அவர் காலத்தை அறியலாம்.

நந்தி அருள் பெற்ற நாதரை
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே

என்ற பாடல் மூலம் நந்தி அருள் பெற்றவர்கள் சனகர், சனந்தனர், சானதனர், சற்குமரர், மன்று தொழுத பதஞ்சலி, வியாக்கிரமர், சிவயோகமுனி என என்னோடு எட்டுப்பேர்' என்ற திருமூலர் வாக்கால் அறியலாம்.

இதன் மூலம் திருமூலர், பதஞ்சலி, வியாக்கிரமர் முதலியவர் காலத்தவர் என்பதும் அறியப்படுகிறது. வியாக்கிரமருக்கு, வசிட்டருடைய தங்கையை மணம் செய்வித்திருப்பதும், அவருக்கு உபமன்யு பிறந்ததும் உபமன்யுவுக்காகத் தில்லையில் நடராசர் திருபாற்கடலை வரவழைத்ததும், உமாபதி சிவாச்சாரியார் செய்த கோயிற் புராணத்தாலும், புலியூர்ப் புராணத்தாலும் அறியலாம்.

வசிட்டர், இராமநாதர், தசரதர் ஆகியோருக்கு குலகுரு ஆவார். இவர்களுடைய காலமே இராமாயணகாலம். இராமாயண காலம் என்பது கி.மு. ஆறாயிரம் எனக் கொள்ள வேண்டும். ஆதலின் இதுவே திருமூலர் காலமாகவும் இருக்கலாம் என்று கூறப்படுகிறது.

பாலூர் கண்ணப்ப முதலியார் சங்க காலப் புலவர்களைப் போலவே திருமூலரும் கலிப்பாவின் உறுப்புகளில் ஒரு பிரிவினையே மேற்கொண்டு அப்பாவின் மூலம் தம் நூல் முழுமையையும் பாடி முடித்துள்ளார். இதனைக் கலிவிருத்தம் என்பர். ஆனால் இது சங்ககாலத்தில் கலித்தாழிசை யாகக் கருதப்பட்டது. ஆகவே திருமூலர் "சங்க காலத்தைச் சார்ந்தவராகவும் இருக்கலாம்" என்றும் கூறுகிறார்.

அறிஞர் டி.வி.சதாசிவ பண்டாரத்தார், தம்முடைய இலக்கிய வரலாற்றில் "திருமூலர் தில்லையும் அம்பலத்தையும் மூன்று பாடல்களில் குறிக்கின்றார். தில்லையில் அம்பலம் அமைத்துப் பொன் வேய்ந்தான் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவ மன்னன் சிம்மவர்மன் ஆவான். ஆகவே

திருமூலர் ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலாவது, "கிபி. ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியிலாவது வாழ்ந்திருத்தல் கூடும்" என்கிறார்.

அடுத்ததாகத் "திருஞானசம்பந்தர் திருவாவடுதுறை சென்றபோது அவ்வூர்க் கோயில் கொடி மரத்தின் அருகில் புனிதமணம் வீசியதென்றும், அதன்கீழ்த் தோண்டியபோது திருமந்திரப் பாடல்கள் அடங்கிய ஏடுகள் காணப்பட்டன என்றும், அதன் அருமை பெருமை அறிந்து வெளிக் கொணர்ந்தார் என்றும் ஒரு செவிவழி வரலாறு உண்டு. இவ்வுண்மை வரலாற்றைக் கொண்டு மூலரின் காலத்தைக் கணக்கிட்டால் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இடைக்காலமாகும்" என்று மறை மலையடிகள் கருதுகின்றார்.

இவ்வாறாகத் திருமூலரது காலத்தைக் கணிக்க முயன்ற அறிஞரில் பெரும்பான்மையோர் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கும் கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தையே கணிக்கின்றனர். எனவே திருமூலர் காலம் இக்காலத்திற்கு இடைப்பட்ட ஏதோ ஒரு நூற்றாண்டாக இருந்திருக்கலாம் என்று அறியப்படுகிறது.

சேக்கிழாருக்கு முன் நம்பியாண்டார் நம்பிகள் தம்முடைய திருத்தொண்டர் திருவந்தாதியில் திருமூலரது குறிப்பு வருகிறது. நம்பி இராசராசன் காலத்தவன் என்று திருமுறை கண்ட புராணமும் திருத்தொண்டர் புராணமும் கூறுகின்றன. அதற்கேற்றாற்போல நம்பியும் தம் காலத்தரசன் இராசராசனே என்பதை அவனது சிங்கள நாட்டு வெற்றியைக் குறிப்பிடும் போது புலப்படுத்துவதால் இக்கருத்து உறுதிப் படுகின்றது. ஆகவே நம்பிகள் கி.பி. 985 - 1014 இல் இருந்து இராசராசன் காலத்தவர் என்பது தெளிவாகின்றது. எனவே திருமூலர் நம்பிகள் காலத்திற்கும் முற்பட்டவர் என்று தெரிகிறது.

மேலும் திருமூலர் கூறும் மந்திரப் பகுதிகளை ஆராய்ந்தால் சக்தி வழிபாட்டின் முறைகளும், சைவ சமயக் கருத்துக்களும் நிறைந்து காணப்படுவதோடு வேதாந்தக் கருத்துக்களின் இடையீட்டையும் காணலாம். ஞானசம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் உரிய காலங்களில் சிவ வழிபாடு இருந்ததே அன்றிச் சக்தி வழிபாடு காணப்படவில்லை. இவர் களுக்கு முற்பட்ட தொல்காப்பியர் திருமுருகாற்றுப்படை, குறுந்தொகை முதலிய பழைய நூல்களில் சக்தி வழிபாடு குறிக்கப்படுகின்றது. சக்தி வழிபாடு மிகப் பழமையான ஒன்று என்று ஜான்மார்ஷல் கூறுவதன் மூலம் திருமூலர் காலம் சங்க காலத்துக்குச் சற்று பிற்பட்டதாக இருக்கலாம் என்று தெரிகிறது.

திருமூலர் பெயர்க் காரணம் காலம், வரலாறு ஆகியவை திருமந்திரம் முதலான இலக்கியங்கள் மூலமும், திறனாய்வாளர்கள் பலரின் கருத்துக் களையொட்டியும் விளக்கப்பட்டன. மேலும் திருமூலர் வரலாறு சேக்கிழார் பாடிய பெரியபுராணத்திலிருந்து தொகுத்துக் கூறப்பட்டுள்ளது.

# 63. ஒளிவார்தில்லை ஒன்பதின்மர் சிந்தையில்....

முனைவர் முத்துஇலக்குமி, மதுரை.

நினையுந்தோறும் காணுந்தோறும் பேசுந்தோறும் உள்நெக நின்று இருந்து ஆனந்தத் தேன் சொரியும் இறைவன் மீது இடையறவு இல்லா அன்பு கொண்டு இன்னிசையால் பாடிப்போற்றி வணங்கிய சைவ அருளாளர்களின் அடியவர்களின் திருமுறைப் பாசுரங்கள் 'திருமுறை' என்று வழங்கப்பெறும். இவ்வரிசையில் இடம்பெறும் ஒன்பதாம் திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்று குறிப்பிடப்படுகின்றது.

மூவர் முதலிகளின் திருப்பதிகங்கள் 'தேவாரம்' என்று கூறப்பெறுதலும் மணிவாசகரின் திருப்பாடல்கள் 'திருவாசகம்' 'திருக்கோவையார்' என் வழங்கப் பெறுதலும் ஒன்பதின்மர் பாடியவை. 'திருவிசைப்பா' 'திருப்பல்லாண்டு' என்று ஓதப்பெறுதலும் சைவ அடியார்கள் வழங்கி வரும் வழக்காறு ஆகும். மூவர் முதலிகளின் தேவாரம் போன்று இசையால் இறைவனைப் போற்றும் தகைமையன ஒன்பதின்மர் பாடல்கள் என்பது குறிப்பிடத்தக்கக் கருத்தாகும். இவர்தம் திருப்பதிகங்கள் அனைத்திற்கும் பண் குறிப்பிடப் பெற்றுள்ளன.

திருவிசைப்பா ஆசிரியர்கள்,

| | | |
|---|---|---|
| திருமாளிகைத் தேவர் | பூந்துருத்திநம்பி காடவநம்பி | திருவாலிய முதனார் |
| சேந்தனார் | கண்டராதித்தர் | புருடோத்தம நம்பி |
| கருவூர்த்தேவர் | வேணாட்டடிகள் | சேதிராயர் |

என்போர் ஆவர். இவர்கள் பாடிய திருப்பதிகங்கள் 28 திருப்பல்லாண்டு! திருத்தலங்கள் 14 இதில் இடம் பெற்றுள்ளப்பண்கள் 6. தேவாரத்தில் காணப்பெறாதச் 'சாளரபாணிப் பண்' இதில் பூந்துருத்திநம்பி காடவ நம்பியால் இசைக்கப் பெற்றுள்ளது. நினைக்க முக்தி தரும் தலமாம் திலலையினைக் குறித்து ஒன்பதின்மரும் மூவர் முதலிகளை போன்று பதினைந்து திருப்பதிகங்களில் நினைந்து நினைந்து பாடிப் பரவசம் அடைந்துள்ளனர். இவர்களின் திருப்பாடல்கள் உணர்த்தும்

இறை வடிவம் -

இறையருள் -

இயற்க்கை இன்பம் -
இறைக் காதல் -
இறைத்தலச் சிறப்பு -

ஆகியன அணுக்காமகப் பயின்று நுணுக்கமாகச் சிந்திக்கும் பொழுது கிடைக்கும் இறையின்பம் என்னும் அனுபவம் உணர்ந்தவர்கள் மட்டுமே அறிதர்க்கு உரியது என்றால் ஏற்புடைத்து.

திருத்தில்லையில் திரு அவதாரஞ் செய்தவர் திருநாவுக்கரசுப் பெருமான். தில்லை அடியவர்களுக்காகத் திருநடனம் செய்த பொன்னம்பலம் தில்லை. இறைவன் அருவமாகக் காட்சிதரும் ஆகாயத்தலம் தில்லையாகும். இவ்வூர்,

புண்டரீகபுரம்
சிதம்பரம்
பெரும்பந்தப்புலியூர்
கோயில்

என்று இலக்கியங்களில் இயம்பப்பட்டுள்ளன. தில்லைக்காளியை வழிபாடு செய்த பின்பு தில்லையம்பலக் கூத்தனை வழிபடுதலே இறையருள் பெறுதற்குரிய வழிபாடு ஏன்பதே இன்றும் தில்லை வாழ் மக்கள் கடைப் பிடிக்கும் நெறியாகும். சோழ மன்னர்களின் சைவப் பற்றிற்குத் தலை நிமிர்ந்து நின்று வரலாற்றுப் பதிவாகி எடுத்துரைக்கும் எழில்மிகு திருக்கோயிலே திருத்தில்லைக் கோயிலாகும்.

ஒன்பதின்மரும் திருத்தில்லையினைத் தங்களது உள்ளமாம் சிந்தையில் உணர்ந்து உணர்த்தி உள்ளனர்.

| எண் | அடியவர் | எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | திருமானித் தேவர் | 4 திருப்பதிகங்கள் (1-4) |
| 2. | சேந்தனார் | 1 திருப்பல்லாண்டு |
| 3. | கருவூத்தேவர் | 1 திருப்பதிகம் |
| 4. | பூந்துருத்திநம்பி காடவநம்பி | 1 திருப்பதிகம் |
| 5. | கண்டராதித்தர் | 1திருப்பதிகம் |
| 6. | வேணாட்டடிகள் | 1 திருப்பதிகம் |
| 7. | திருவாலியமுதனார் | 4 திருப்பதிகங்கள் |
| 8. | புருடோத்தமநம்பி | 2 திருப்பதிகங்கள் |
| 9. | சேதிராயர் | 1 திருப்பதிகம் |
| | | 15+1 திருப்பல்லாண்டு |

ஒன்பதின்மர் பாடிய 28 திருப்பதிகங்களில் 15 திருப்பதிகங்கள் தில்லையினைக் குறித்தவை. திருப்பல்லாண்டும் தில்லையினைக் குறித்தது ஆகும்.

இதில் தில்லையம்பலத்தாடுவனைக் காதல் கொண்டு அவனைக் காணவிரையும் ஒருத்திக் கூற்றாக எனவும் அவளது இறைக் காதலைக் கண்டு புலம்பும் செவிலித் தாயின் கூற்றாகவும் என அகமரபு போற்றப்பட்டுப் பதிவாகியுள்ளத் திருப்பதிகங்கள் 6 ஆகும்.

| எண் | அடியார் | திருப் பதிகங்கள் | தலைப்பு | கூற்று |
|---|---|---|---|---|
| 1. | திருமாளிகைத் தேவர் | 1 | உறவாகிய யோகம் | செவிலி |
| 2. | திருவாலியமுதனார் | 2 | பவளமால் வரை | காதலி |
| | | | கோலமலர் நெடுங்கண் | காதலி |
| 3. | புருடோத்தமநம்பி | 2 | வாரணி நறுமலர் | செவிலித் தாய் |
| | | | வானவர்கள் வேண்ட | செவிலித் தாய் |
| 4. | சேதிராயர் | 1 | கோயில் | செவிலித் தாய் |

இவ்வாறு திருத்தில்லை இறைவனைப் போற்றிய அடியவர்கள் இறைவன் மீது காதல் கொண்டு கலங்கிய இறைக்காதலில் மருகிய மங்கையரையும் அவர் பொருட்டாகப் பரிதவித்தச் செவிலித் தாயரையும் இத்திருப்பதிகங்களின் வழி காட்டுகின்றனர்

## மூவர் வழிபட்ட திருத்தில்லை

"*சீலத்தார் தொழுது ஏத்தும் சிற்றம்பலம்*"

என்று பணியும் காழியர் கோன் மற்றும்

"**அத்தா உன் ஆடல் காண்பான் அடியனே வந்தவாறே**"

என்று தில்லைக்கு வந்தமைக்கானக் காரணத்தை அன்பொழுகக் கூறும் அப்பர் பெருமானையும் காணமுடிகிறது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் வழிபட்டு நின்ற பாங்கினைப் பன்னிரு திருமுறை விளக்கம் என்ற நூல் கீழ்க்கண்டவாறு எடுத்துரைக்கின்றது. "சுந்தரமூர்த்தி சுவாமிகள் தில்லை இறைவனை வழிபட்டதைச் சேக்கிழார்

''ஐந்துபேர் அறிவையும் கண்களே கொள்ளும்படியாகவும், அளப்பெரும் காரணங்கள் நான்கையும் சிந்தையே பெற்றதாகவும், குணம் ஒரு மூன்றும் சாத்துவிகமேயானதாகவும் அமைய அவர் வழிபட்டார் என்கிறார்'' (ப.34)

இவ்வாறு இம்மூவரும் தில்லையில் வழிபாடு செய்து எல்லையில்லா இறையனுபவ உணர்வில் இறை உயிருடன் ஒன்றிய நிலையில் கலந்து நின்றனர்.

திருநாவுக்கரசப் பெருமானின் தில்லைப்பதிகத்தில்

''அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கும் மேலும் இப்பூமிசை
என் அன்பு ஆலிக்கும் ஆறுகண்டு இன்புற
இன்னம் பாலிக்கோ இப்பிறவியே''

என்று பாடுங்காலத்து 'அன்னம்' என்பது சோற்றை மட்டுமல்லாது 'வீடு பேறு' என்னும் மறுமைப் பயனையும் அளிக்கவல்லது. திருத்தில்லை என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது உணரத்தக்கது. அடியவர்கள் பெரும்பற்றப் புலியூரானைப் பாடாத நாள் எல்லாம் பிறவா நாளே என்றும் எடுத்தியம்பு கின்றனர். இம்மூவர் முதலிகளின் தேவாரப் பாடல்களை ஓதி உணர்ந்த சிறப்பிற்குரிய ஒன்பதின்மர் என்று போற்றப்பெறுபவர்களும் இவர்களது வழியில் தில்லைக்கூத்தின் மீது மிகுந்த பக்தி கொண்டு நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து உணர்த்துகின்றனர்.

**இறைவடிவம்**

ஒவ்வொரு திருத்தலமும் 'மூர்த்தி தலம் தீர்த்தம்' என்ற முக்கூறு களால் சிறப்பினைப் பெறும் என்பர். ஞான வடிவாக உள்ள இறைவனது மூர்த்தம் - மூர்த்தி வடிவம் திருமாளிகைத் தேவர், திருவாலி அமுதனாரால் பாதாதி கேசமாகப் பாடப்பெற்றுள்ளதைத் திருப்பதிகங்களைப் பயிலுந் தோறும் அறியமுடிகிறது. இறைவனது

திருவுரு - திருவுந்தி - திருவடி - திருவயிறு - திருகணைக்கால் - திருக்கரம், திருவாய் - திருத்துடை திரு்முகம் - திருப்புடை - திருமுடி

என இறைவனைக் கண்ணாரக் கண்டு பாடியுள்ளனர்.

''திருவளர் தெய்வப் பதிவிதி நிதியந்
திரண்ட சிற்றம்பலக் கூத்தா!
உருவளர் இன்பச் சிலம்பொலி அலம்பும்
உன் அடிக் கீழது என் உயிரே'' (பாடல் 13)

என்கிறார் திருமாளிகைத் தேவர்.

மேலும் திருமாளிகைத்தேவர்

"…. கருவடி குழைக்காத அமலச் செங்கமல
மலர் முகம் கலந்த தென் கருத்தே" (பாடல் 20)

என்று பாடிப் பரவசம் எய்துகிறார்.

திருவாலிஅமுதனார் தனது திருக்கடைக்காப்புத் திருப்பாடலின் வாயிலாகப் பரவும் பான்மையினை,

"தூவி நீரொடு பூஅவை தூவி
ஏத்து கையினராகி மிக்கதோர்
ஆவியுள் நிறுத்தி அமர்ந்து
ஊறிய அன்பினராய்த்
தேவர் தாந் தொழ ஆடிய தில்லைக்
கூத்தனைத் திருவாலி சொல்லிவை
மேவ வல்லவர்கள் விடை
யான் அடி மேவுவரே" (பாடல் 225)

என்ற வரிகளால் அறியமுடிகின்றது. எனவே இத்திருப்பாடல்களைப் பாடிப் பணியும் காலத்து விடையான் திருவடியைச் சென்று சேருதற்கு இயலும் என்று எடுத்துரைப்பது திருவாலி அமுதனாரின் இறைச் சிந்தனையின் உறுதிப்பாட்டை விளக்குவதாக உள்ளது. இவ்வாறு இறைவடிவத்தை எடுத்துக்கூறும்பொழுது அவனது தோற்றப் பொலிவிற்குக் காரணமானத் திருநீறு - அக்கனி - (எலும்பு மாலை) - அரவணி - (பாம்பு மாலை) - பிறை நிலவு - புலித்தோல் - மறி - இடல்விடை - துடி என்று இறைவனோடு உள்ள திருப்பொருட்களையும், இறைவனோடு ஒருபுறத்தில் இலங்கும் உமையம்மையின் திருக்கோலத்தையும் அடியார்கள் திருப்பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

### இறையருள்

இறையருள் இருந்தால் தான் இறைவனைச் 'சிக்கெனப் பிடித்து அருளைப் பெறமுடியும்'. 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி', என்பதுதானே சைவ அடியார்களின் அருள்வாக்கு. மேலும் 'ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதாரே' என்பதும் திருவாக்கேயாம்.

திருமாளிகைத் தேவர், இறையருளைப் பெற தன்னை இறைவன் அந்நெறிப்படுத்த வேண்டும் என்று பத்துத் திருப்பாடல்களில் வேண்டுவதோடு இறுதி 'இரு சீர்களில்' அழுத்தமிகு சொற்களால் பதிவு செய்துள்ளார்.

"ஒளிவளர் விளக்கே! உவப்பிலா ஒன்றே!
உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வே!
தெளி வளர் பளிங்கின் திரள் மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்குந் தேனே!

அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே!
அம்பலம் ஆடவரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்து உந்தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே" (பாடல் 1)

இதே போன்று

'பணியுமா பணியே' - (பாடல் 2)
'கருதுமாகருதே' - (பாடல் 3)
'உரைக்குமா உரையே' - (பாடல் 4)
'விரும்புமா விரும்பே' - (பாடல் 10)

என்று ஒவ்வொரு சொல்லிலும் 'தனதுரைக்குக்' காரணம் இறை உரையே என்று அருள் வேண்டி நிற்கின்றார்.

**கருவூர்த் தேவர்**

"தாயின் னேர் இரக்குந் தலைவரோ என்றும்
தமியேன் துணைவவோ என்றும்
நாயினேன் இருந்து புலம்பினால் இரங்கி
நலம்புரி பரமர் தங் கோயில்" (பாடல் 82)

என்று இறையருளை வேண்டுகின்றார்.

கண்டராதித்தர்,

"ஒளிவான் சுடரே உன்னை நாயேன்
உறுவதும் என்று கொலோ!" (பாடல் 199)

என்று ஏங்கிப் பரவுகின்றார்.

ஒன்பதின்மரும் குலாத்தில்லை அம்பலவானரின் இறையருள் வேண்டுங்காலத்து, அடிமுடி காணா மாலயன் செயலினை-செற்றவன் புரந் தீயெகுந்த திறத்தினை - சிலந்தியை அரசாள்களை அருள் பாலிக்கவும் - இலங்கை வேந்தன் இருபதுதோளும் - மார்க்கண்டனுக்காகக் காலனை உதை கொண்டதும் - திருவிளையாட்டின் - தச்சன், எச்சன் வென்றதை - அர்ச்சுனனுக்கு அருள் செய்த நிகழ்வு - பதஞ்சலி, வியாக்கிரபாத முனிவர் வேண்ட திருநடனம் புரிந்த திறத்தினை - என்று பல்வேறு தொன்மக் கதைகளையும் ஊடும் பாவுமாகத் தொடுத்துப் பாடியிருக்குந் திறம் குறிப்பிடத்தக்கது.

**இயற்கை இன்பம்**

அடியார்கள் திருத்தில்லையின் சிறப்பினைப் பாடுங்காலத்து தில்லையின் இயற்கை எழில் திறத்தை நாட்டு வளத்தை நயம்படத் திருப்பதிகங்களில் குறிப்பிட்டுள்ளனர்.

கருவூர்த்தேவர் திருவளர் திருச்சிற்றம்பலப் பெருமானைப் பாடுங் காலத்து முதலிரு வரிகளில் இறை வடிவத்தையும் பன்னிரு வரிகளில் தில்லையின் இயற்கை அழகையும் பாடியுள்ளார்.

"மணம் விரி தருதேமாம்பொழில் மொழுப்பின் (உச்சி)
மறைதவழ் வளர் இளங் கமுகந்
திணர்நிறை அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம்பலமே" (பாடல் 80)

என்கிறார்.

"குரவம் கோங்கம் குளிர்புன்னை கைதை
குவிந்த கரைகள் மேல்
திரைவந்து உலவும் தில்லை.." (பாடல் 241)

என்று திருவாலி அமுதனாரும் பாடியுள்ளார்.

வேணாட்டடிகள், நடப்பியலில் காணலாகும் உவமைகள் வழி இறை யருளை வேண்டி நிற்கும் இயற்கை இன்பப்பாங்கு குறிப்பிடத்தக்கது.

"தம்பானை சாய்ப்பந்தார்..." (பாடல் 206)

"கன்றுபிரி கற்றாப் போல கதறுவித்தி..." (பாடல் 209)

என்று தன்நிலைப்பாட்டினை வேணாட்டடிகள் புலப்படுத்துகின்றார்.

**இறைக்காதல்**

கோயில் என்ற திருப்பதிகங்களில்

திருமாளிகைத் தேவர் - புருடோத்தமநம்பி - சேதிராயர்

பாடியுள்ளத் திருப்பாடல்கள் செவிலி கூற்றாக அமைந்துள்ளன. திருநடம் பயிலும் திருக்கடத்தன் மீது காதல் கொண்ட தன் மகளின் நிலை கண்டு வருந்திச் செவிலித் தாய் புலம்புவதாக உள்ளன.

திருவாலி அமுதனாரின் திருப்பதிகங்களில் இறைக்காதல் கொண்ட காதலி தனது காதலை

"திவள மாளிகை சூழ்தரு தில்லையும்
திருநடம் புரிகின்ற
தவள வண்ணனை நினைதொறும் என்மனம்
தழல் மெழுகு ஒக்கின்றதே" (பாடல் 226)

என்றும்

"....மன்மதன் மலர்க்கணை
படுந்தோறும் அலந்தேனே" (பாடல் 227)

"...எம் இறையை
என்று கொல் காண்பதுவே" (பாடல் 247)

"தேசமிகு புகழோர் தில்லை
மாநகர்ச் சிற்றம்பலத்து
ஈசனை எவ்வுயிர்க்கும் எம்
இறைவனை என்று ஏத்துவனே" (பாடல் 255)

என்றும் தன் இறைவனைக் காண்கிறாள்.

தன் மகளின் நிலை கண்டு வருந்திப் புலம்பும் செவிலித்தாய், 'குலாத் தில்லை அம்பலக் கூத்தன்' துன்புறுத்துவதாகக் (திருமாளிகைத் தேவர்) கூறியுள்ளார். மேலும், இறைவனின் நல்லியல்புகளைக் கூறி இத்தகு இயல்பினை தன் மகளுக்கு அருளும்படி வேண்டுகின்றார்.

புருடோத்தமநம்பி செவிலித்தாய் தன் மகள் மெலிவுக்குக் காரணம் தில்லையம்பலத்து ஈசன் என்றும், இறைவனது திருவடியைத் தன்மகள் விரும்பியுள்ளாள் என்றும் எடுத்துரைக்கிறார்.

சேதிராயர்,

"விம்மி விம்மியே வெய்துயிர்த்து ஆள்எனா
உம்மையே நினைந்து ஏத்தும் ஒன்றாகிலர்
செம்மலோர் பயில் தில்லையுளீர் எங்கள்
அம்மல் ஓதி அயர்வுறுமே"

என்று செவிலித்தாய் தன் மகளின் அயர்வுறு நிலை கண்டு அரற்றுவதாகப் புலப்படுத்தியுள்ளார்.

இவ்வாறு 'மானுடர்க்கு என்று பேச்சுப்படின் வாழ்கிலேன்' என்றுரைத்த மால் அடியாள் போன்று இச்சைவ அடியார்களும் இறைக்காதலில் தன்னிலை மறந்தவர்களாக இறையின்பத்தைத் தேடும் ஆன்மாக்களாக உள்ளனர். இறைக்காதல் நெறி 'விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்' தன்மையது என்று குறிப்பிடவேண்டும்.

## இறைத்தலச் சிறப்பு

ஒன்பதின்மரும் தில்லையின் திருத்தலச் சிறப்பினை 15 பதிகங்களில் பாடியுள்ளனர். இதில் சேந்தனார் பாடியுள்ளத் திருப்பல்லாண்டின் திருத்தலச் சிறப்பு விதந்து கவனித்தற்குரியது. வானவர்கள் வாழ்த்துவதும் தான் வாழ்வான் வேண்டி என்பர். இவண் இறை வாழ்த்தும், இறைத்தலப் போற்றுதலும் அடியார்கள் வாழ்த்தப் பெறுதல் என்பதற்காகவே என்பதை உரையாசிரியர்களின் உரைவழி விளக்கத்தால் உய்த்து உணர முடிகின்றது.

"கதிரவன் முன்னர்த் தாமரை மலர்தலும்
ஆம்பல் குவித்தலும் அதனதன் இயல்பாலே
ஆயவாறு போல, வாழ்த்தலும் வைதலும்
செய்வார் அதுவதற் கேற்று பயனைத்
தம்மியல்பால் தாம் பெறுவார் என அறிக" (ப.188)

என்ற விளக்கத்தால் அறியலாம்.

"மன்னுக தில்லை வளர்க நம் பக்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின் செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க
அன்ன நடை மடவாள் உமைகோன் அடி
யோமுக்கருள் புரிந்து
பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே" (பாடல் 289)

என்று சேந்தனார் வாழ்த்துகிறார். மேலும்,

"பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள் என்றே
பல்லாண்டு கூறுதுமே" (பாடல் 290)

என்றும்,

"ஆடும் பெறாத அறிவு பெற்றேன் பெற்ற
தார் பெறுவார் உலகில்" (பாடல் 295)

என்றும்,

"எந்தை எந் தாய் சுற்றம் முற்றும் எமக்கு
அமுதாம் எம்பிரான் என்றென்று
சிந்தை செய்யும் சிவன் சீரடியார்
அகுநாய் செப்புரை
அந்தமில் ஆனந்தச் சேந்தன் எனைப் புகுந்து
ஆண்டு கொண்டு ஆருயிர் மேற்
பந்தம் பிரியப் பரிந்தவனே என்று
பல்லாண்டு கூறுதுமே"

என்று தில்லையம்பத்தானின் திருவருட் சிறப்பினைப் பல்லாண்டு போற்றிப் பரவி நெகிழ்ந்து வழிபடுகிறார்.

மானுட உயிர்கள் பிறக்க முக்தி தரும் தலம் "திருவாரூர்" என்றும், நினைக்க முக்தி தரும் தலம் "தில்லை" "திருவண்ணாமலை" என்றும் இறக்க முக்தி தரும் தலம் 'காசி' என்றும், எடுத்துரைப்பர். நினைக்க முக்தி தரும் இத்தில்லைத் திருத்தலத்தை ஒன்பதின்மரும் ஓயாது உள்ளமாம்

சிந்தையில் பதிவு செய்து ஒளிவளர் செந்தமிழால் பாடிப் பரவிப் பணிந்துள்ளனர்.

பூந்துருத்திநம்பி காடவநம்பி கோயில் திருப்பதிகத்தைச் 'சாளரபாணி' என்ற பண்ணில் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது. திருவிசைப்பாவில் தேவாரப் பண்ணில் இடம்பெறாத இப்பண் தனித்தன்மை மிக்கது என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இவர்தம் திருப்பாசுரங்களைப் பாட வல்லவர் "பற்றுநிலை பற்றுவரே" என்றும் எடுத்துரைக்கிறார். (பாடல் 194)

திருஞான சம்பந்தப் பெருமானைப் போன்று ஒன்பதின்மரும் 'திருக்கடைக் காப்புப் பாடல்' ஒன்றினைத் திருப்பதிகந்தோறும் பாடியுள்ளனர்.

திருமுறைப் பாசுரங்களை ஓதுதலும், கேட்டலும் 'எழில் ஞான பூசை' என்று அருந்நந்தி சிவாச்சாரியார் குறிக்கின்றார்.

"ஞானநூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்றா
ஈனமிலாப் பொருள்தனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில் ஞானபூசை"

என்ற வரிகளால் திருப்பாடல்களைப் பாடிப் பரவுதல் என்பதில் 'பயின்று எழுதுதல்' என்பதையும் இணைத்துப் பார்க்குங் காலத்து 'இறைவனடி அடைவிக்கும்' ஞான பூசைப் பணியாக இப்பணி அமைந்துள்ளது. இதற்குக் காரணமான இறையருள் - இறைத்திருப்பாசுரங்கள் - இறையடியார்கள் - இறைத் திருத்தலங்கள் - ஆகியவற்றைப் போற்றி வணங்குதல் கடமையாம்!

திருச்சிற்றம்பலம்

# 64. திருமந்திரம் கூறும் அறக்கருத்துக்கள்

திரு. ச. முத்துச்சாமி, புத்தூர்.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

உள்ளம் உயர்ந்தால்தான் மனிதன் உயர்கிறான். மனிதனை தன் நிலையில் நிறுத்துவதற்கு உதவுவது மனம். நம்முடைய மனம் பக்குவம் அடைய வேண்டுமானால் இறைவனுக்கும் நமக்கும் ஓர் இணைப்பு இருக்க வேண்டும். அந்த இணைப்பே மந்திரம் என அழைக்கப்படுகிறது. மந்திரம் என்றால் நினைத்தல். இறைவனை அடைய அவன் திருவருளைப் பெற அவனாலேயே அருளப்பட்டவையே மந்திரம். மனத்தைச் செம்மைப்படுத்தி அறவழியிலும் அன்பு வழியிலும் வாழ நல்ல கருத்துக்களை உபதேச மொழிகள் நமக்கு வழங்குகிறார் திருமூலர்.

## திருமூலர்

திருமூலரின் மோனத்திலிருந்து எழுந்துவந்த தவமொழிகள் தான் திருமந்திரம். பல ஆண்டுக்காலம் தவம் இருந்து மூவாயிரம் பாடல்களை ஒன்பதாம் திருமுறையாக இறைவன் திருவருளால் நமக்கு அளித்துள்ளார். சிவபெருமானே இவருக்கு தவப்பெருமான் என்ற பட்டத்தை அருளியுள்ளதை

"சிவபெருமான் என்று நான் அழைத்தஏத்தத்
தவப்பெருமான் என்றுதான் வந்துநின்றான்"

என்னும் திருவாக்கால் அறியலாம். திருமந்திரம் அனுபவ ஞானத்திருநூல். தோத்திரத்தில் திருவாசகம் என்றால் சாத்திரத்திற்குத் திருமந்திரம் என்பர். வேதம் ஆகமம் இரண்டிற்கும் திருமந்திரம் அரிய விளக்கமாக உள்ளது.

## உபதேசம் மூன்றுவகை

மக்கள் நல்வழியிலிருந்து தவறாமல் செல்வதற்காகப் பல அறவுரைகளை அமுதத்தமிழில் அள்ளி வழங்குகிறார் திருமூலர். இந்த அறவுரைகள் மூன்று வகைப்படும். பாவம் செய்யாதீர்கள் என்று சொல்வது மனித தருமத்துக்கு அடிப்படையான உபதேசம். பாவங்களைச் செய்யாமல்

இருப்பதோடு புண்ணியச் செயல்களைச் செய்யுங்கள் என்பது இரண்டாவது வகை. இந்த இரண்டும் கலந்ததே வாழ்க்கையின் ஒழுக்க நெறி. இந்த இரண்டோடு மூன்றாவது உபதேசம் என்னவென்றால் இறைவனுடைய பேரின்பத்தை இந்த உடம்போடு இருக்கும்போதே பெற்று அனுபவிக்க வேண்டும் என்பது. திருமூலரின் உபதேசத்தின் இந்த மூன்று பாகுபாடுகளும் திருமந்திர நூல் முழுவதும் பரந்து விளங்கக் காணலாம். திருமூலரின் திருமந்திரம் காட்டும் ஒன்பது தந்திரங்களும் ஒன்பது ஆகமங்கள் ஆகும்.

இதனை,

"தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தரன் ஆகமச் சொன்மொழிந்தானே"

என்பதனால் அறியலாம். திருமந்திரம் வாழ்வியல் நெறிகளான நிலையாமை, கல்வி, இல்வாழ்வு, இல்வாழ்வின் தவநிலை, வழிபாடு, வழிபாட்டின் பயன், சைவசித்தாந்தம் போன்ற பல கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது.

**திருநீற்றின் திறம்**

சித்தாந்த சைவ செந்நெறியினரின் அடையாளமாகத் திகழ்வது திருநீறு. சிவன் அணியும் இத்திருநீற்றை நாம் அணிந்து மகிழ்வதால் வினை தங்காது என்பதோடு சிவகதியையும் சாரலாம் என்னும் திருப்பாடல்,

"கங்காளம் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரேயாமாகில்
தங்கா வினைகளும் சாருஞ்சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே"

வினை நீக்கத்திற்கும் சிவகதிக்கும் உதவுவது திருநீறு.

**அன்பே சிவம்**

அன்புதான் கனிந்து பூரணம் பெற்றுச் சிவமாகிறது. அறிவு நிலையில் நிற்பவர்கள் அன்பு நிலை எய்வது அருமையாகும். அன்பும் சிவமும் வெவ்வேறு என்று எண்ணாமல் அன்பு என்ற பண்புதான் சிவமாக முதிர்கிறது என்பதை அறிந்துவிட்டால் அன்பிலே சிவத்தைக் கண்டு அந்தப் பேரின்பத்திலே பகிர்ந்து நிற்பார்கள். அன்பினால் உள்ளம் உருகி வழிபட்டாலன்றி எத்தனை தவங்கள் இருந்தும் பயனில்லை. அன்புதான் அவனை அடையும் மார்க்கம்

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்**

**அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே"**

இதைத்தான் அன்பின் வழியது உயர்நிலை என்றார் வள்ளுவர். "அன்பே சிவமான சிவபரம்பொருளுக்குத் தொண்டர் கூடித்தொழுது அழுது ஆடிப்பாடும் அன்பலால் பொருளும் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே" என்பது அப்பரின் அருள்வாக்கு.

**"அன்பே உருவான அருள் வடிவினை அன்பால் நினைந்து பக்தி செய்து உய்யவேண்டி"**

**"வம்மின்அடியீர் நாண்மலர் இட்டுத்தொழுதுய்யஉம் அன்பினோடு எம் அன்பு செய்து"**

என்று அடியார்களை அழைக்கிறார் ஞானசம்பந்தப்பெருமான். மணிவாசகரும் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு" என்கிறார்.

**சமுதாயத்தொண்டு**

மனிதனை வாழ்வாங்கு வாழச்செய்து வாழும் நிலையை உயர்த்தத் தான் சமயம், தொண்டு நெறியின் உறைவிடமாக மாறவேண்டும். சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று சமுதாயத் தொண்டு.

**"நடமாடக் கோயில் நம்பற்கொன்றீயிற்**
**படமாடக்கோயில் பகவற்கதுஆமே"**

என்ற மந்திரநெறியில் நடமாடும் மனிதர் சமூகத்திற்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதை விளக்குகிறார். இதையே எளிய வழிபாட்டு முறையில் சொல்லும்பொழுது நாம் உண்ணும்போதெல்லாம் ஒரு கைப்பிடி உணவைப் பிறருக்குத் தந்துவிட்டு நாம் உண்பது கடினமல்ல. நம்முடைய உள்ளத்து அன்பை பிறருக்குச் சொல்லலாம் அன்புகலந்த சொற்கள் பகைவரையும் நண்பர்களாக்கிவிடும் அல்லவா!

**"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை**
**யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை**
**யாவர்க்குமாம் உண்ணும் போதொருகைப்பிடி**
**யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரைதானே"** – திருமந்திரம் 252

உண்ணுவதற்கு முன் இறைவன் மேல் ஒருவில் இதழ் கொண்டு பூசித்தல். அவ்வாறே பசுவுக்கு ஒரு வாயுறை புல்கொடுத்தல். உண்பதற்கு முன் சிறிதளவு உணவை பிறருக்குக் கொடுத்தல், பிறர் மனம் நோகாதவாறு இனிமையாகப் பேசுதல். இதுவே திருமூலர் கூறும் எளிய வழிபாட்டு முறை.

"எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணி இரங்கும் நின் தெய்வ
அருட்கருணை செய்யாய் பராபரமே"

என்பது தாயுமானவர் வாக்கு.

"வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்"

என்கிறார் இராமலிங்க சுவாமிகள். நாயன்மார்களிலும் இத்தகைய சமுதாயத் தொண்டுகளை நாம் காணலாம்.

"பக்தியடியவர் பச்சிலையிடினும்
முக்திகொடுத்து முன்னின்றி அருளித்
திகழ்ந்துளதொ குயில்திருவடி"

என்று பட்டினத்தடிகள் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் திருவடி சேருவதற்கு வழி பச்சிலை மலர் இட்டு வழிபடுதல் என்பதை தெளிவாகக் கூறுகிறார்.

**கல்வி**

நமது ஆன்மீக வளர்ச்சிக்கு அடிகோலும் கல்வியே பயனுள்ள கல்வி யாகும். பரம்பொருளைப் பற்றி சிந்திக்கவும் தெளிவடைவதற்கும் வாழ்க்கையை நெறிப்படுத்துவதற்கும் நாம் பெறும் கல்வியே பயனுள்ள கல்வியாகும். அத்தகைய கல்வி நமது வினைகளைக் கழிப்பதற்கும் உதவ வேண்டும். அந்தக் கல்வி இறைவனை தொழும் விதங்களைத் தெரிந்து கொள்வதற்கும் உதவவேண்டும். உயிர் உடலைவிட்டுப் பிரியும் நேரத்தை நம்மால் கணிக்க இயலவில்லை. காலம் இருக்கின்றபோதே இறைவனைத் தொழுவதே சாலச்சிறந்தது.

"நிற்கின்ற போதே நிலையுடையான்கழல்
கற்கின்ற செய்மின் கழிந்தலும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித்தொழுமின் தொழுதபின்
மற்றொன்றில்லாத மணிவிளக்காகமே" - திருமந்திரம். 292

**பகுத்துண்ணல்**

நாம் உண்பதையும் பிறருடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். காக்கை தனித்து உண்பது இல்லை. சோறு இட்டவுடன் ஒரு காக்கை பிற காக்கை களையெல்லாம் கூவி அழைத்து கூட்டமாக உண்ணும் காட்சி நமக்கு ஒரு பாடமாக அமைய வேண்டும். இதை உணர்த்தும் மந்திரப்பாடல்

"ஆர்க்கும் இடுமின் அவரிவர்என்னன்மின்
பார்த்திருந்துண்மின் பழம்பொருள்போற்றன்மின்

**வேட்கையுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்**
**காக்கை இரந்துண்ணுங் காலம் அறிமினே" - திருமந்திரம் 250**

இதையே வள்ளுவரும்

**"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத்தவர்க்கு"**

என்று கூறுகிறார்.

**நற்பண்புகள்**

நமக்கு வரும் தீவினைகளையெல்லாம் போக்கும் தீர்த்தங்களாய் விளங்கும் நற்பண்புகளை இயமப்பண்புகள், நியமப்பண்புகுள் என்ற தலைப்பிலே கூறுகிறார். கொல்லாமை, பொய்சொல்லாமை, விருப்பு வெறுப்புகள் இல்லாமை, உள்ளதை மறைக்காமல் உரைத்தல், வஞ்சனை இல்லாத மனம், கள்ளுண்ணாமை, பேராசைபடாமை, பகுத்துண்ணல் போன்ற பண்புகளை நாம் வாழ்வில் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்பதை

**"கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்கமுடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுத்துண்பான் மாசிலான்கட்காமம்**
**இல்லான் இயமத்திடையில் நின்றானே" (திருமந்திரம் - 554)**

என்ற பதிகத்தின் வாயிலாக நாம் அறியலாம். மேலும்,

**"கொலையே களவுகள் காமம் பொய்கூறல்**
**மலைவான பாதகமாம் அவைநீக்கித்**
**தலையாம் சிவனடிசார்ந்து இன்பம் சார்ந்தோர்க்கு**
**இலையாம் இவை ஞானஆனந்தத்து இருத்தலே"**
**திருமந்திரம் - 250**

இந்த மந்திரம் கடைப்பிடிக்க வேண்டிய அறங்களையும் அவ்வாறு கடைப்பிடிப்பதால் உண்டாகும் ஊதியத்தையும் விளக்குகிறது.

**ஐம்புலன்அடக்கம்**

பசுக்கள் அதே பசுக்கள் அடங்காத நிலையில் அவை ஆன்மாவுக்கு கேடு தரக்கூடிய விதத்தில் வெறியோடு ஆசைகளில் ஈடுபட்டு திரிகின்றன. இதே பசுக்களுக்கு காவல் ஏற்பட்டுவிட்டால் இந்தப் பசுக்களே ஞானப் பாலைச் சொரிகின்றன.

"பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறுத்துத் திரிவன

மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே!''

புலன்களாகிய பசுக்களை அடக்கி ஆளவேண்டும். அப்படி அடக்கினால் அதே புலன்கள் பேரின்பம் தரும். இதையே வள்ளுவரும்,

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப்புடைத்து''

என்கிறார்.

**நான் எனும் தன்முனைப்பு அடங்கல்**

இறைவனுடைய பேரின்பத்தை நாடும் முயற்சியில் ஈடுபட்டால் படிப்படியாக 'நான்' எனும் நினைப்பு நீங்கி எல்லாம் அவனே என்ற தெளிவு உண்டாகிறது. இந்த உணர்வு ஏற்பட்டால் உடம்பு என்ற தசை உணர்ச்சியும் தனிப்பட்ட உயிர் என்ற அகங்கார உணர்ச்சியும் நினைப்பு மறதி என்ற மனஉணர்ச்சியும் அகன்று தெய்வ ஆனந்த நிலையிலே எல்லாம் ஒன்றுபட்டு விடுகின்றன. இதுவே அநுபூதி நிலை என்பது. பரம்பொருளோடு ஆன்மா கலந்து போய் நான் என்கிற தனிநிலை தானாகவே அழிந்து போகும். இதைத்தான்

''தான்வரை வற்றபின் ஆரை வரைவது
தானவன் ஆனபின் ஆரை நினைவது
காமனை வென்றகண் ஆரைஉகப்பது
தூமொழிவாசகம் சொல்லுமின் நீரே''

நான் என்பது அற்றபின் இப்படிச் சொல்வதில் அர்த்தமில்லை என்பதோடு ஐம்புலனும் மனமும் இறைவனோடு ஒன்றிவிடுகிறது.

**வாழ்க்கை நிலையாமை**

வாழ்க்கையின் நிலையாமையை மறந்து சுகங்களிலே ஈடுபட்டுக் காலத்தை வீணாக்குகிற அறியா மக்களுக்கு கண்ணைத் திறந்து காட்டுகிறார் நாயனார்,

''அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடியாரோடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே இறை நொந்ததே என்றார்
கிடக்கப்படுத்தார் கிடந்தொழிந்தாரே''

மனிதனுடைய ஆடம்பர வாழ்க்கை எப்படி முடிகிறது என்பதை உள்ளத்தில் உரைக்கும்படி பாடுகிறார். யாக்கை நிலையாமையை உணர்த்தும் அற்புதப்பதிகம் இது.

## இன்பமும் துன்பமும்

நமக்கு வரும் துன்பத்திற்கும் இன்பத்திற்கும் நாம்தான் காரணம். இப்பிறவியில் நாம் அனுபவிக்கும் இன்பம் துன்பம் இரண்டிற்கும் நாம் முற்பிறவிகளில் செய்த நல்வினை தீவினைகளே ஆகும். இதற்கெல்லாம் காரணம் நல்ல அறநூல்களைக் கல்லாமல் இருப்பதே அதனால் இறைவனையும் உணர முடிவதில்லை என்பதை,

> "இன்பம் இடர் என்று இரண்டுறவைத்தது
> முன்பவர் செய்கையினாலே முடிந்தது
> இன்பம் அதுகண்டும் ஈகிலாப்பேதைகள்
> அன்பிலார் சிந்தை அறம் அறியாரே" - திருமந்திரம் - 267

என்ற பாடல் வழியாக அறிவுறுத்துகிறார்.

## சமூக நலநோக்கு

ஒருவன் உண்மையாகவே இறைவனை நேசிக்கிறவன் என்றால் அந்த நேசத்தை இந்த உலகத்தின் ஒவ்வொரு பொருளின்மீதும் அவன் காட்டக் கடமைப்பட்டவன். சமூகத்திற்கு ஆற்றவேண்டிய கடமைகள் மனிதர்களுக்கு உண்டு ஆசையைத் துறப்பதுதான் துறவேயன்றி ஆட்களைத் துறப்பதன்று என்பது திருமந்திரக்கருத்து.

> "யான்பெற்ற இனுபம் பெறுக இவ்வையகம்
> வான் பற்றிநின்ற மறைப்பொருள் சொல்லிடின்
> ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
> தான்பற்றப் பற்றத் தலைப்படும்தானே" - திருமந்திரம், 85

துறவிகள் உலகின் மீதுள்ள பற்றினைத் துறந்தவர்களே அன்றி உலகையே துறந்தவர்கள் அல்லர். வள்ளுவரும்

> "யான்எனது என்னும் செருக்கு றுப்பான் வானோர்க்கு
> உயர்ந்த உலகம் புகும்"

என்றார்.

இறைவனுக்கு எல்லா உயிர்களும் ஆட்பட்டவை. ஆகவே சமயங்கள் பேதம் பாராட்டக் கூடாது. இறை அன்பு தனது உயிர்களின்மீது காட்டும் அன்பால் அடையத்தக்கது. அடியார்கள் எல்லோரும் சாதி வேறுபாடுகளைக் கடந்து ஒரேகுலம் என்ற உணர்வுடன் வாழவேண்டும். இதுதான் சமயங்கள் எல்லாவற்றின் குறிக்கோளாகும். இதைத்தான் திருமந்திரம்

> "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
> நன்றே நினைமின் நமனில்லை நாணாமே

சென்றே புகுங்கதிஇல்லை நும்சித்தத்து
நின்றே நிலைபெறநீர் நினைந்து உய்மினே திருமந்திரம் - 2154

என்ற பாடலால் உணர்த்துகிறது. அப்பர்பெருமானும்

"அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுஉழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பர்ஆகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"

என்று பாடுகிறார். பெரியபுராணம் கூறும் அடியார்களின் வரலாறும் இதே கருத்தையே வலியுறுத்துகிறது.

இவ்வுலகில் இறைவனின் திருவடிகளை வணங்குதலே திருமந்திரச் செய்தி வீடுபேற்றை அடைய அறம் சொல்கிறார். அறத்தைச் செய்து மெய்ஞானத்தை அடைய உடலை ஓம்பும் வழியையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார். அறம் செய்யாவிடில் ஆக்கை அழியும். ஆகையால் ஆக்கை அழிவதைக் கண்டேனும் அறத்தை ஓம்புக என்கிறார் நாயனார். மூலன் உரைசெய்த முத்தான மூவாயிரந் தமிழ் மந்திரங்களையும் வாழ்வில் ஒரு முறையாவது ஓதி அன்புசெய்து அறவழிகளைக் கடைப்பிடித்து பேரின்பநிலையை எய்துவோமாக.

# 65. திருமந்திரத்தில் இயற்கை

முனைவர் க. முத்துவேல், மதுரை.

சங்கப்புலவர்கள் இயற்கை கற்றுத்தரும் பாடல்களைப் பயின்று அசைவ உணர்த்தும் உண்மைகளை மக்களுக்கு உணர்த்தினர். சங்கப்புலவர் களின் மரபினைத் தாங்கி திருமுறை ஆசிரியர்கள், பரந்தது விரிந்து விளங்கும் இயற்கைப் படைப்பினைப் பார்க்கும் பொழுதெல்லாம் வரம்பற்ற முழுமுதலின் காட்சியினையும், கைபுனைந்து இயற்றாக் கவின்பெரு வனப்பினையும் கண்டுஉருகி உளங்கனிந்துப் பாடியவர்கள் இயற்கையுடன் ஒன்றிய மனத்தினை உடையவர்கள். எனவே திருமுறைக் கவிஞர்கள் கடவுளைக் கசிந்துருகிப் பாடுவதற்குப் பல்வகை இயற்கை காட்சிகள் பின்புலமாக அமைந்துள்ளன. அவ்வகையில் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தில் இயற்கை இடம்பெறும் சிறப்பினை இக்கட்டுரை ஆய்கிறது.

## இயற்கையின் மாட்சி

மனிதனின் கைபடாது, ஐம்புலன்களில் ஏதேனும் ஒன்றால் அல்லது சிலவால் அறியப்படும் பொருள் இயற்கையாகிறது. இறைவனின் அருட் கொடைக்கு இவ்வியற்கை சான்றாக அமைகிறது. நிலவியல் அமைப்பினை ஐந்திணைகளாகப் பகுத்து அவற்றில் கருக்கொண்டு வளரும் செடி, கொடி, மரம் முதலிய தாவரங்கள், பறவைகள், விலங்குகள் முதலிய இயற்கைப் பொருட்கள் பலவும் கவிஞர்களின் கற்பனைக்கு விருந்தாக அமைவன. இயற்கைப் பொருட்களான இவை இட, இன, மொழி, பருவ, பால் வேறு பாடின்றி அனைவரையும் எக்காலத்தும் தன்னுள் ஈர்த்துக் கொண்டிருப்பன. எனவே மானிடர் மட்டுமன்றி அனைத்து உயிரினங்களின் வாழ்வும் இயற்கையைச் சார்ந்ததாகவே உள்ளது.

## திருமூலரின் இயற்கை ஈடுபாடு

தவயோகியராகிய திருமூலர் தமிழாகமமாகிய திருமந்திரம் தந்தவர். எல்லாமாய், எங்குமாய், யாவுமாய்த் துலங்கும் இறைவனைப் பரவியும், பாடியும், உருகியும் வழிபட்டவர். இறைவனால் படைக்கப்பட்ட இயற்கையின் கண்ணே இடையறாது நடைபெற்றுக் கொண்டிருக்கும் அழகின்ப அன்புக் காட்சிகளை உளமாரப் பாடி மகிழ்ந்தார். இயற்கையை வருணித்துக் கூறும் பாடல்களில் இறைவழிபாட்டின் இன்றியமையாமையையும், பக்தியின் சிறப்பினையும், பறவைகள், விலங்குகள் இவற்றைப் பாடுவதன் வாயிலாக

வெளிப்படுத்தினர். மேலும் காணும் பொருளில் எல்லாம் இறைவனைக் கண்டு வணங்கினார். சங்கப் புலவர்கள் இயற்கையைத் தாம் படைத்த கதை மாந்தர்களின் நிகழ்ச்சிகளுக்குப் பின்புலமாக அமைத்ததுபோல, திருமூலர் இறைவன் உறையும் கோயில்களையும் ஊர்களையும் பாடும்போது இயற்கையை அவற்றின் பின்புலமாகவே அமைத்தார். சங்கப்புலவர்கள் காதலையும் வீரத்தையும் இயற்கைப் பின்னணியில் பாடினர். திருமூலரோ திருத்தலங்களில் அமைந்து கிடக்கும் இயற்கை எழில் காட்சிகளைப் பின்னணியாக்கிப் பக்தியையும் இறையருள் மேன்மையினையும் பாடினர். இவரின் சிந்தையெல்லாம் இறைவனுடைய திருக்காட்சியே இருந்தது. இறைவன் மாண்பினை உண்மையாக விளக்குவதற்கு இவர் இயற்கையைப் பின்புலமாக்கிக் கொண்டார்.

**இயற்கையில் இறைக்காட்சி**

இயற்கை மனித வாழ்விற்கு சிறந்த விளக்கமாய் அமைகிறது. இது தனித்து அமையாது உலகின் உயிர்த்தொகுதிகளோடு உறவாடி நிற்கிறது. இயற்கை மனிதனை மகிழ்விக்கவும் வாழ்விக்கவும் செய்கிறது. இயற்கைக்குக் காலங்கள் பருவங்கள் உண்டு. இது பருவங்களுக்கு ஏற்ப மாற்றம் கொள்வது. எனவே இலக்கியங்கள் இயற்கைக் காட்சிகளின் வழியாக மனித வாழ்வினைப் பேசின. இங்ஙனம் திருமூலர் இயற்கை எழிலோவியங் களான மலைகள், ஆறுகள், பொழில், சோலை முதலியவற்றையும், உயிரினங்கள், பூவினங்கள் முதலியவற்றையும் பின்புலமாக்கிக் கொண்டார். இதன் மூலம் இறை அருளின் பெருமை பேசுவதை அடிப்படை நோக்க மாகக் கொண்டார். இயற்கையை இறைவனுடைய படைப்புப் பொருளாகக் கொண்டார். இயற்கைப் பொருளில் இறைவடிவத்தைக் கண்டு இன்ப முற்றார். இறைவன் பூவில் வாசமாகவும், புனலில் பொறப்பாகவும், புதுமணம் உடைய சாந்தில் விரையாகவும் கலந்து இருப்பதாகக் கூறினார். மேலும் இறைவனை இருளை அகற்றும் சோதியாகக் கருதினார்.

தானே இருநிலம் தாங்கிவிண் ணாய்நிற்கும்
தானே சுடும்அங்கி ஞாயிறும் திங்களும்
தானே மழைபொழி தையலு மாய்நிற்கும்
தானே தடவரை தண்கடல் ஆமே (பா. எண். : 1165)

என இயற்கையைத் தனது திருமேனியாகக் கொண்டு உள்ளிருந்து இயக்கும் பேராற்றல் உடையவனாக இறைவனைக் குறிப்பிடுகிறார். எனவே இறைவனுக்கு உரிய அட்டமூர்த்தங்களில் ஐம்பூதம், ஞாயிறு, திங்கள் என்பன இயற்கையின் வடிவங்கள் ஆகும். இதனால் திருமூலர் இயற்கைப் பொருளில் இறையினைக் கண்டு பரவுகிறார்.

மேலும் இறைவனே சக்தியாக இயற்கைப் பொருள்களுக்கு ஆதாரமாய் நின்று அருள்பாலிக்கும் பாங்கினை இப்பாடல் சுட்டுகிறது. இவ்வுலகத்தின்

கீழ்ப்பகுதி நிலமாகவும், மேல்பகுதி விண்ணாகவும் காட்சியளிக்கிறது. நிலம், விண் என்ற இரண்டிற்கும் இடைப்பட்ட எவ்வகை இயற்கையும் இதனுள்ளே அடங்கும் பான்மையது. எனவே உலகத்து உயிர்களெல்லாம் தன்னிடத்து ஒடுங்கத் தானேயாய் நிற்கும் இறைவன் நிலம், நீர், தீ, காற்று, வான் என்ற ஐம்பூதங்களோடும் ஒன்றி நின்று எட்டுத்திசைகளாகவும் விளங்கி, இயற்கை வடிவமாக விளங்குகிறான் என்பதைப் புலப்படுத்தி, இறைவனை இயற்கையின் தோற்றமாகவும் இயக்கும் ஆற்றலாகவும் கண்டார்.

**பறவையினங்களைச் சுட்டல்**

திருமூலர் பறக்கும் இயல்பினை உடைய பறவையினங்களைச் சுட்டுகிறார். உயிர் வாழும் இனங்களுள் பறவையினங்கள் தொன்றுதொட்டே மக்களைப் பெரிதும் கவர்ந்திருக்கின்றன. இவர் பறவைகளின் இயற்புகளைக் கூர்ந்து நோக்கி மாந்தருக்கு அறிவுரை பகரும் வகையில் பாடிய பகுதிகள் சிந்தையினைக் கவருவனவாக உள்ளன. பறவைகளில் சிறப்பாகச் சுட்டப்பெறுவது அன்னம். இது மருதநிலத்துப் பறவை.

வளைக்கும் மெயற்றின் ரைக்கன் வரைக்குக்கீழ்
இளைக்கும் படிதா னிருந்தேழை யன்னம்
திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்
விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே (1:134:8)

எனச் சம்பந்தப் பெருமான் வயலின்மிசை காட்சி தரும் அன்னத்தைச் சிறப்பிக்கின்றார்.

ஆமேவு பால்நீர் பிரிக்கின்ற அன்னம்போல் (பா. எண் : 120)

எனத் திருமூலர் அன்னத்தின் கூர்ந்த செயலொன்றினைச் சுட்டுகிறார். பசும்பாலில் கலந்துள்ள நீரினைப் பிரித்துப் பாலை மட்டும் பருகும் அன்னப்பறவையின் இயல்பினை இப்பாடலில் சுட்டுகிறார். அதாவது இறைவன் திருவருள் அடியார்களின் உடற்கருவிகளுடன் ஒட்டிக் கிடக்கும் தீவினைகளைப் பிரித்துவிடும் திறத்திற்குப் பாலினின்றும் நீரைப் பிரிக்கும் அன்னப்பறவையின் செயல் உவமையாகத் திருமூலரால் சுட்டப்படுகிறது.

பீகம், கோகிலம் முதலிய பெயர்களை உடைய குயிலுக்குப் பரப்பிருதம் என்ற ஒரு பெயரும் உண்டு. அதாவது மற்றதனால் வளர்க்கப்பட்டது என்பது பரப்பிருதம் என்பதற்குப் பொருளாகச் சான்றோர்களால் குறிப்பிடப் படுகிறது. இச்செய்தியைத் திருமூலர் குறிப்பிடும் வகையில் குயிலைக் குறித்த சில பாடல்களை எழுதியுள்ளார்.

குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட்டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின்றதுபோல் (பா. எண் : 488)

எனக் காக்கையின் கூட்டில் குயில் தன்னுடைய முட்டையை இடுதலும் அதனைத் தன் முட்டையாகக் கருதி அடைகாத்தலும் பற்றிக் கூறுகிறார்.

**விலங்கினங்களை மொழிதல்**

நீரில் வாழும் உயிர்களாகிய ஆமை, முதலை பற்றிய செய்திகளையும் திருமூலர் காட்டுகிறார்.

**ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந் தடக்கி** (பா.எண். 133)

என ஆமையினை உவமையாக எடுத்து மொழிகிறார். அதாவது நான்கு கால்கள் ஒருதலை ஆகிய ஐந்து உறுப்புக்களையும், தீமை புகாதாபடி உள்ளிழுத்துக் கொள்ளும் ஆமையினைப் போல் யோகிநிலை பயிலும் ஒருவன் ஐம்பொறிகளையும் பொருள்களின் போக்கில் போகவிடாமல் தீமை புகாதபடி தனக்குள் இழுத்து நிறுத்தல் வேண்டும் என்கிறார்.

ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக்கு எதிர்ப்பட்ட வாறொக்கும் (பா. எண் : 1642)

என முதலையின் இயல்பினைக் காட்சிப்படுத்துகிறார். அதாவது ஆற்றின் ஒரு துறையில் திரிந்து கொண்டிருக்கும் முதலைக்கு அஞ்சிய ஒருவன், அதனை விடுத்து மற்றொரு துறைக்கு நீராடச் சென்று அங்கு கரடிக்கு இரையாதல் போன்றது, இல்லறத்தைவிட்டுப் போலித்துறவு சார்ந்தவன் நிலை என்கிறார்.

**மலர்களைக் கூறுதல்**

இயற்கையின் படைப்பில் எழில் தரும் மலர்வகைகள் பல உள்ளன. இம்மலர் இனங்களையும் திருமூலர் எடுத்தாள்கிறார். இவர் கண்ணைக் கவரும் பலவகை மலர்கள் பொலிவுடன் காட்சி தரும் பாங்கினைச் சுட்டுகிறார். தெய்வத்தன்மை பொருந்தியதும் கண்டாரால் வெகுவாக விரும்பப்படுவது மாகிய செந்தாமரை மலர்கள், எழில்மிகும் செங்கழுநீர்ப் பூக்கள், அழகு மிக்க நெய்தல் பூக்கள், ஒளிவளரும் கோங்கம்பூக்கள், குரவம் பூக்கள், மகிழம்பூக்கள், சண்பகப் பூக்கள், வன்னிப் பூக்கள் முதலியவற்றின் காட்சிகள் திருமூலநாயனாரின் உள்ளத்தில் தெய்வீக உணர்வை மிகுவித்தன.

அம்புயம் நீலம் கழுநீர் அணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரம்
தும்பை வகுளம் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே (பா. எண். 1003)

என இறைவனுக்கு உகந்த மலர்வகைகளாக இம்மலர்களையும் குறிப்பிடுகின்றார்.

இயற்கையில் இறைவனைக் கண்ட திருமூலர் இயற்கையின் எழிலையும், வளத்தையும் வருணித்துப் பாடி மகிழ்ச்சி அடைந்து தமிழ்மொழிக்குச் சிறப்புச் சேர்த்தார்.

# 66. திருமந்திரத்தில் உடற்கூற்று அறிவியல்

முனைவர் க. முருகேசன், கோவை.

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானாற்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே''

**உடலும் திருமந்திரமும்**

உலக வாழ்வில் தன்னை அறிந்து, தனக்காக, உலகைப்படைத்த இறைவனை அறிந்து, பரிணமித்துள்ள பிற உயிர்களையும் அறிந்து, அகண்டாகார சிவபோகமாய் எங்கும் பரந்து விரிந்து பூரணமாய் நிறைந் திருக்கும் இறையருளில் திளைப்பதே மானுடப் பிறப்பின் மகத்தான நோக்கம் எனலாம். இறையருளை அடையும் இலக்கை நோக்கி மனிதனைச் செலுத்தும் திருமுறை இலக்கியங்களில் அறிவுக் கருவூலமாகவும், ஞான நூலாகவும், வாழ்வியற் களஞ்சியமாகவும், நல்வாழ்வியல் மருத்துவக் களஞ்சியமாகவும் திகழ்வது திருமூலரின் திருமந்திரம். மண்ணில் நல்ல வண்ணம் வாழும் வழிகளைச் சுட்டும் இந்த அறநூலில் மருத்துவம், உடல்நலம், மனநலம் பற்றிய பல்வேறு ஆக்கக்கூறுகள் பரவலாகக் காணக் கிடக்கின்றன. மனித வாழ்வின் பன்முக ஒளிவீச்சில் வைரத்தின் பட்டை களாகச் சுடர்விடும் மருத்துவக்கூறுகளில் உடற்கூற்று இயக்கம் தொடர்பான திருமூலரின் சிந்தனைகளை வெளிப்படுத்திக் காட்டுவதை இக்கட்டுரை நோக்கமாகக் கொண்டமைகின்றது.

''புல்லாகிப் பூடாகிப் புழுவாகி மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லா மனிதராய் பேயாக் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய் தேவராய்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்''

என்று மணிவாசகப் பெருந்தகையின் கூற்றின்படி இம்மண்ணில் பிறப்பெடுத் துள்ள ஒவ்வொரு உயிரும் பரிணாம வளர்ச்சியடைந்து இறுதியில் மனித வடிவத்தை அடைகின்றது. மற்ற உயிரினங்களிலேயே மிகச் சிறந்ததாகக்

கருதப்படும் மனித இனத்திற்கு வாய்க்கப்பெற்ற புலனறிவுகளாகிய ஐந்தறிவுடன் அக அறிவாகிய ஆறாவதான பகுத்தறிவே மகத்தானதாகும். மானுடப் பிறப்பில் மாண்புறப் பேணவேண்டிய பூதஉடல் பஞ்சபூதங் களின் சேர்க்கைதான் என்பதை,

''மண்டினிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்கு
ஐம்பெரும் பூதத்தியற்கை போல''

என்னும் புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. இதனைத் தொல்காப்பியம் ''நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும் கலந்த மயக்கம் உலகம்'' என்றுரைக் கின்றது. இந்த பஞ்சபூதச் சேர்க்கை ஒன்றிலிருந்து ஒன்று தோற்றம் கண்ட தன்மையில், ஒன்றினை நீக்கி இன்னொன்று இயங்க முடியாத அடிப்படையில் இயங்கிக் கொண்டிருக்கின்றன.

''மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்
கானின்கண் நீரும் கலந்து கடினமாய்த்
தேனின்கண் ஐந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே''

(திருமந்திரம், பா.எண் : 385)

என்னும் திருமந்திரப் பாடல் மேற்கண்ட கூற்றினை மெய்ப்பிக்கின்றது. மேலும் இந்த உலகில் உள்ள எல்லாப் பொருட்களும் பஞ்சபூதங்களி லிருந்து தோன்றியவையே.

''எட்டுத் திசையும் அடிக்கின்ற காறற்றவன்
வட்டத் திரையனல் மாநிலம் ஆகாசம்
ஒட்டி உயிர்நிலை என்னும்இக் காயப்பை
கட்டி அவிழ்க்கின்ற கண்ணுதல் காணுமே''

(திருமந்திரம், பா.எண் : 725)

என்கின்றது திருமந்திரம். மனித உடலில் நிலம் - 1¼, நீர் 1½, நெருப்பு 1, காற்று ¾, ஆகாயம் ½ என்ற விகிதத்தில் கலந்துள்ள கூட்டுச்சேர்க்கை என்பது மருத்துவர்களின் கருத்தாகத் திகழ்கின்றது. மேலும்,

''உரஅடி மேதினி உந்தியில் அப்புஆம்
விரவிய தன்முலை மேவிக்கீ ழங்கி
கருமுலை மீமிசை கைக்கீழிற் காலாம்
விரவிய கந்தர மேல்வெளி யாமே'' (திருமந்திரம், பா.எ. 1964)

என்று உடலினைத் தாங்கும் பாதத்தினை நிலமாகவும், பாதத்தில் இருந்து கொப்பூழ் வரை நீராகவும், கொப்பூழிலிருந்து மார்பு வரை தீயாகவும், கழுத்துக்கு மேலே வானவெளியாகவும், திகழ்கின்றது என்கின்றார் திருமூலர். இதனையே யூகிமுனி என்னும் சித்தர், மண்ணின் கூறாக மனித உடலில் விளங்குபவை எலும்பு, தோல், தசை, நரம்பு, உயிர்; நீரின் கூற்றாக மனித உடலில் இருப்பவை இரத்தம், சீழ், மூளை, மச்சை; நெருப்பின் கூறாக ஆதாரம், தூக்கம், போகம், பயம், சோம்பல்; வாயுவின் கூறாக காமக்குரோத லோப மோக மத மாச்சரியம்; ஆகியவை திகழ்வதாகக் கூறுகின்றார் (யூகி தத்துவ ஞானம், சித்தர் உடல் தத்துவம், ப. 60).

சீவனின் பருவுடல் பஞ்சபூதக் கூட்டான அணுத்திரள்கள் என்னும் செல்களால் கட்டப்பட்டது என்கின்றார் வேதாத்திரி மகரிசி. இதனையே இன்றைய அறிவியலார், நிலம் (Protein Matric) நீர் (Water in cell), காற்று (Oxygen, Nitrogen, Nitric Oxide), அக்னி (Calories from Glucose), ஆகாயம் (Vaculoes in Cytoplasum) எனப் பிரித்துக்காட்டி, இவ்வையனைத்தும் சரியான விகிதத்தில் இணைந்தே இருத்தலே செல் உயிருடன் இருக்க உதவுகின்றது என்கின்றனர்.

விண்களின் கூட்டே மற்ற நான்கு பௌதிகப் பொருள்களின் தோற்றத்திற்குக் காரணமாக அமைகின்றது. நமது உடலில் உள்ள,

- கோடிக்கணக்கான செல்களால் அடுக்கப்பட்ட பருஉடல் **நிலமாகவும்**
- அதற்கு ஊடே ஓடிக்கொண்டிருக்கும் இரத்தஓட்டம் **நீராகவும்**
- நரம்புகளின் மூலமாக நமது உடலில் மின்சக்தி வெப்பமாகி அது உடலுக்குத் தேவையான 98.4 டிகிரி பாரன்கீட் என்ற அளவில் இயங்கி வரும் வெப்ப ஓட்டம் **தீயாகவும்**
- உடலிலே உருவாகும் கரியமில வாயுவை வெளியேற்றி உயிர் வளியைப் பிராணவாயு கொண்டு சேர்க்கும் காற்று ஓட்டம் **காற்றாகவும்**
- உயிராக இயங்குகின்ற விண்துகள்களின் சுற்று ஓட்டம் **விண்ணாகவும்**

விளங்குகின்றது என்பது வேதாத்திரி மகரிசியின் கருத்து. இந்த ஐந்தும் சரியாக இயங்கும்போது உடல் நலமுடன் சீராக இயங்கும். இவற்றினில் ஏதேனும் ஒன்று குறைந்தாலோ, அல்லது மிகுதியானாலோ பல நோய்கள் தோன்றும்.

**பெறற்கரிய சீருடல்**

**"ஊற்றைச் சரீரம், ஆபாசக்கெட்டில்**
**ஊன்பொதிந்த பீற்றந்துருத்தி, சோறிடும் தோல்பை"**

"நீர்மேற் குமிழியிக் காயம்"

"ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி"

என்றெல்லாம் உடலை இழிவுப் பொருளாகக் கருதிய காலக்கட்டத்தில், இக்கூற்றுக்களுக்கு எல்லாம் மறுப்பாக திருமூலரின் பாடல் அமைந்துள்ளது.

"உடம்பினை முன்னம் இழுக் கென்றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

(திருமந்திரம், பா.எ. 725)

என்று உடலின் மகத்துவத்தை உணர்த்துகின்றார். உடல் அழியாமல் நலத்துடன் இருந்தால்தான், அதனுள் இருக்கும் சீவனாகிய ஆன்மாவைப் போற்றிப் பாதுகாக்க முடியும். எனவே,

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திறம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"

(திருமந்திரம், பா.எ. 724)

என்று பாடுகின்றார் திருமூலர். "மனித உடம்பும் இந்த மனித வாழ்வுமே தெய்வத்தைக் காண்பதீற்கு ஒப்பற்ற சாதனங்கள்" என்பர். உடலைப் பாதுகாப்பதன் மூலமே உயிரைக் காப்பாற்ற முடியும். ஓம்பப்படும் உயிர் தான் சிவத்தோடு கலந்து ஆன்ம ஈடேற்றம் காணமுடியும். எனவே,

"உடம்பினார் பெற்ற பயனாவது எல்லாம்
திறம்பட ஈசனைத் தேடு"

"உடம்பினைப் பெற்ற பயனாவது எல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்"

என்ற பாடல்கள் உணர்த்தும் உணர்ந்து உண்மையை உடம்பினைப் பேணவேண்டியது அவசியமாகின்றது.

**உயிர்ச்சத்தும் உயிர்களின் தோற்றமும்**

"வீயம்அது ஆகிய விந்துவின் சத்தியால்
ஆய அகண்டமும் அண்டமும் பாரிப்ப
காயஐம் பூதமும் காரிய மாயையில்
ஆயிட விந்து அகம் புறம் ஆகுமே" (திருமந்திரம், பா.எ. 1928)

என்பது திருமந்திரப்பாடல். விதையான விந்துவின் ஆற்றலால் அகண்டமும், அண்டமும் தோன்றி விளங்க, ஐம்பூதங்களும் தோன்றி, விந்து அவற்றின் உள்ளும் புறமும் அதுவேயாக விளங்குகின்றது என்று

கூறுவதன்மூலம் விந்துவே அண்டமும், உயிர்களும் தோன்றக் காரணமா யுள்ளது என்பதை அறியமுடிகின்றது.

நம் உடல் தோன்ற மூலகாரணமாக உள்ள விந்து, உண்ட உணவின் சாரத்தால் தாதுவாக மாறி, அதிலிருந்து விந்துவாக உருப்பெறுகின்றது. இது ஆண் உடலில் இருப்தொரு நாட்கள் வளர்கின்றது. அவ்வாறு வளர்ச்சி யடைந்த விந்து 3 நாட்கள் உடலில் இருக்கும். பின் அவரவர் நிலைக் கேற்ப மனவிந்தாகவோ அல்லது நீங்கவோ செய்யும். இவ்வாறாகக் கரு என்பது முதலில் ஆணின் உடலில் 21 நாட்கள் இருந்து வளர்ந்து 3 நாட்களுக்குள் பெண்ணோடு இணையும் தருணத்தில் கருப்பையைத் தேடிச் சென்றடைகின்றது. இதனை,

''கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்
புருடன் உடலில் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுத்த
உருவம் இரண்டாக ஓடி விழுந்ததே'' (திருமந்திரம், பா.எ. 1964)

என்று திருமந்திரம் புலப்படுத்துகின்றது.

**கருவின் விதியமைப்பு**

திருமூலரின் மேற்கண்ட கருத்தினை ஒட்டிய, ''நல்லதும் கெட்டதும் ஒவ்வொரு மனிதனின் DNA அளவிலேயே அதாவது தாயின் கர்ப்பத்தில் சிசுவிற்கு மூளை உருவாகின்றபோதே தீர்மானிக்கப்பட்டு விடுகின்றன'' என்று மருத்துவம் பேசுகின்றது. இதனையே,

''நாதன் ஒருவனும் நல்ல இருவரும்
கோது குணத்தொடும் கூட்டிக் குழைத்தனர்''
(திருமந்திரம், பா.எ. 408)

என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். ''வினைப்பயனே ஒரு தேகம் கண்டாய்'' என்று பட்டினத்தடிகள் சொல்வதும், தற்கால அறிவியலார் "Genetic Centre" என்று கூறுவதும் இதனையே என்கின்றார் வேதாத்திரி மகரிசி.

**கரு உருவாதல்**

ஆணும் பெண்ணும் அகமும் புறமும் ஒத்து இன்புற்ற சேரும்போது கருவின் (சீவனின்) பண்பு, அது வாழவேண்டிய காலம், வாழ்க்கை ஆகியவை கருவில் அமைத்து விடுகின்றன. இதனை,

''இன்புறு காலத்து இருவர் முன்பூறிய
துன்புற பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்
அன்புறு காலத் தமைத் தொழிந்தானே'' (திருமந்திரம், பா.எ. 453)

என்ற பாடலில் திருமூலர் காட்டுகின்றார். இவ்வாறு அமைந்த கருவில், பூவின் மனத்தைப் பொருந்திய காற்று உலகெங்கும் சஞ்சரிப்பது போல சீவனில் மூச்சுக்காற்றும் சென்று அமைந்து முழுமையாக ஒரு சிசுவாக வளரத் தொடங்குகின்றது.

"சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிரமத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்ட நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே" (திருமந்திரம், பா.எ. 464)

என்ற பாடலில் ஆணின் சுக்கிலமும் கருப்பையில் தோன்றும் சுரோணிதமும் கலந்து எட்டு விரற்கிடை அளவில் இருந்து நான்கு விரற்கிடை அளவு உள்ளே புகும்போது, எண்சாண் அளவு உடம்பு உருக்கொள்ளும் என்று விளக்கம் அளிக்கின்றார் திருமூலர்.

## ஊனுடம்பின் ஆக்கம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இயற்றப்பட்டதாகக் கருதப் படும் திருமூலரின் திருமந்திரத்தில் இடம்பெற்றுள்ள உடம்பின் ஆக்கம், கரு உற்பத்தி, அமுரிதாரணை, ஆயுள்பரிட்சை, காயசித்தி உபாயம், தியானம், பரியங்கயோகம், விந்துஉற்பவம், போக சரவோட்டம், பிராணயாமம் போன்ற பகுதிகளில் உடல் இயங்கியல் பற்றிய மந்திரங்கள் மனதை மயக்குகின்றன. அறிவியல் வளர்ச்சியோ அறிவியலின் பயன்பாடோ இல்லாத அக்காலகட்டத்தில் உடலியங்கியலின் நுணுக்கங்களை உணர்ந்து, அவற்றைத் தன் பாடல்களில் பதிவாக்கியுள்ள ஆசிரியரின் அறிவுத்திறம் எண்ணி இன்புறத்தக்கது. எலும்புகளாகிய கழிகளைக் கொண்டு நரம்பு களாகிய கயிறுகளால் பிணைத்து செம்மை நிறமாகிய தசையினால் கட்டப் பட்டதே இவ்வுடல் (பா.எ. 461) என்ற கருத்தும், நாம் உண்ணும் உணவு மூன்று கூறுகளாகப் பிரிந்து உடலைப் பேணுகின்றது. ஒன்று பருவுடலை வளர்ப்பதற்கும், மற்றொன்று நுண்ணுடலில் மனதை வளர்ப்பதற்கும், பிறிதொன்று சக்கையாகிய கழிவினைக் கழியச் செவதற்கும் பயன்படு வதாகக் குறிப்பிடும் (பா.எ. 1933) கருத்தும் அறிவியல் நோக்கில் சிந்திக்கத்தக்கது.

## கருத்தோற்றமும் பரிணாம வளர்ச்சியும்

எப்போதும் நீங்காது மீக்குறும் எழில் இன்பம் மக்கட்பேறு ஒன்றால் மட்டும் உண்டாகும். அதனை அடைதற்கு மனையறம் பேணும் இயல் புடையிருவராகிய கணவனும் மனைவியும் விரும்பிக் கடவுளைக் கைதொழுது முயலுதல் வேண்டும். அவ்வாற வணங்கி முயலும்போது இருவரிடம் பேரன்பு உண்டாகும். அவ்வன்பின் பெருக்கால் இருவரும் அகம், புறம் ஒத்துக்கூடுவதால் அக்கூட்டத்து உறுபயனால் கருவுறும்.

வானத்துள் இறைவனது ஆருயிர் கருவிற்புகுமாறு திருவுள்ளங் கொள்வான். அவ்விறைவனே உயிர்களின் வினைக்கீடாகப் பொருந்தும் பண்பும், வாழ்நாளும் பார்மிசை வாழ்க்கையும் கருவினுள் பதித்தருளுவான் என்பது திருமந்திரவாக்கு. இல்வாழ்க்கையில் மக்கட்பேறு அமையும் தன்மையை அறிவியல் கண்ணோட்டத்துடன் நோக்குகின்றது திருமந்திரம்.

மரம் முளைக்க விதை, பறவை பிறக்க முட்டை, மனிதன் பிறக்க விந்து. இதனை யோக சாதனை வழியாக சுழுமுனை வழியாக சகஸ்ர தளத்திற்கு ஏற்றி வெற்றி காண்போருக்கு சிவலோகம் கிட்டும் என்பதை "விந்து அடங்க விளையும் சிவலோகமே" (1969) என்ற மந்திரம் குறிப்பிடுகின்றது. உடலின்பம் கருதி இதனைக் கீழ்விடுவோர்க்கு சிற்றின்பம் மட்டும்தான் கிட்டும். அச்சிற்றின்பத்தின் பயனாகப் பெறுகின்ற மக்கட்பேறு மண்ணில் உறவுகளுக்கு மட்டும்தான் நிலைபேற்றுத் தன்மையைப் பெற்றுத் தரும்.

**கருவில் திருவுடையாராதல் : பால்வேறுபாட்டுத் தன்மை**

தாயின் வயிற்றில் குழந்தையாக உருத்தோன்றுவதற்கு இறைவனின் இன்னருள் காரணமாக அமைவதும், இறைவனே மனிதனாக வடிவெடுத்து இம்மண்ணில் பிறந்து அறத்தையும் தர்மத்தையும் நிலைநாட்டுவதற்காக அவதாரம் எடுத்துக் கருவில் தோன்றுவதாகவும் புராணங்கள் இயம்பு கின்றன. இத்தகைய சிறப்புக்கூறுகளை / அருட்பேராற்றலைக் கருவில் பெற்றவர்கள் கருவிலே திருவுடையோராகக் கருதப்பட்டனர்.

இப்பெருமையைப் பெற்ற சித்தராகிய திருமூலர், கரு உற்பத்தி என்னும் பகுதியில் எடுத்துரைத்துள்ள உடல் (கரு) உருவாதல் பற்றிய கருத்துக்கள் இன்றைய அறிவியலோடு ஒப்பிட்டுக் காணும் நிலையில் திருமூலரின் அறிவியல் அறிவை உய்த்துணர முடிகின்றது. மருத்துவ உலகம், பிறக்கும் குழந்தை ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ அமைய ஆணின் உயர்ச்சத்தாகிய குரோமோசோம்களே காரணம் என்பதைத் தெளிவாக்குகின்றது. ஆண் குழந்தைக்கு XY என்ற குரோமோசோம் அமைப்பும், பெண் குழந்தைக்கு XX என்ற குரோமோசோம் அமைப்பும் கொண்டுள்ளன. ஆணின் குரோமோசோமாகிய XY குரோமோசோமில் X குரோமோசோம் பெண்ணில் X குரோமோசோமுடன் இணைந்தால் பிறக்கும் குழந்தை பெண்ணாகவும், Y குரோமோசோம் பெண்ணின் X உடன் இணைந்தால் ஆணாகவும் பிறக்கும் என்பது நிரூபிக்கப்பட்ட மருத்துவ உண்மை.

திருமூலர், ஆணும் பெண்ணும் சேரும் கூட்டுறவின்போது ஆண் பண்பு மிகுந்தால் பிறக்கும் குழந்தை ஆணாகும். பெண் பண்பு பொருந்தினால் பிறக்கும் குழந்தை பெண்ணாகும். இரண்டும் ஒத்துப் பொருந்தினால் அலியாகும் என்னும் சிந்தனையைக் குறிப்பிடுகின்றார்.

ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகில் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும் (பா.எ. 478)

என்ற பாடல் கருத்தினை அடிப்படையாக வைத்துக் கொண்டு, இன்றைய் மருத்துவத்துறை விளக்கத்தின் அடிப்படையில் நோக்குகையில், பெண் தன்மையை உடைய குரோமோசோம் X என்பதையும், ஆண் தன்மையை உடைய குரோமோசோம் Y என்பதையும் உணர்ந்து கொள்ளலாம். இவ்விரு குரோமோசோம்களின் இணைப்பினால் தோன்றும் குழந்தைப் பிறப்பின் பால்வேறுபாட்டுத் தன்மையை கலவியின்போது பிராணவாயு வலநாசியில் இயங்கினால் பிறப்பது ஆணாகும். இடநாசியில் இயங்கினால் பிறப்பது பெண்ணாகும். அக்காலத்தும் பிராணவாயுவை அபான வாயு எதிர்த்துவரின் இரட்டைக் குழந்தை பிறக்கும். பிராண வாயு இரு மூக்கிலும் இயங்கினால் பிறப்பது அலியாகும் (பா.எ. 482) என்ற திருமூலரின் மந்திரவாக்கு புலப்படுத்துகின்றது.

மருத்துவ உலகமானது Gene for cell death என்பது பற்றியும் Gene for Production என்பது பற்றியும் அவற்றினால் கர்ப்ப காலத்தில் ஏற்படும் மாறுதல்களைப் பற்றியும் பல்வேறு கருத்தாக்கங்களை முன் வைக்கின்றது. ஆக்கத்தில் தோன்றும் முதல் ஐந்து மரபணுக்கள் சரியாக உற்பத்தியாகிக் கருப்பையில் இணையும் நிலையில் கரு உற்பத்தியாகும் வாய்ப்பேற்படுகின்றது. அக்கரு வளர்ந்து பத்து மாதங்களின் பிறந்த பின்பு அக்குழந்தையின் ஆயுளை இன்றுவரை மருத்துவத்துறையால்கூட நிர்ண யித்துக் கூறமுடியவில்லை. ஆனால் பன்னெடுங்காலத்திற்கு முன்பே திருமூலர் குழந்தையின் ஆயுள் பற்றிய ஆழ்ந்த உளக்கருத்தினைப் பதிவு செய்திருக்கின்றார். அப்பாடல்,

பாய்ந்தபின் அஞ்சோடில் ஆயுளும்நூறாகும்
பாய்ந்தபின் நாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடம் வாயு பகுத்தறிந் திவ்வகை
பாய்ந்திடும் யோகிக்கு பாச்சலு மாமே (திருமந்திரம், பா.எ. 479)

என்பதாகும். இதில் அஞ்சோடில் ஆயுசு நூறாகும் என்று ஆசிரியர் சுட்டுவதை ஆராகையில் ஆக்கும் மரபணுக்களில் முதல் ஐந்து மரபணுக்கள் சரியாக அமைந்திருப்பின் அவர்களின் ஆயுள் குறையாது நூறு வயது தான் என்ற விளக்கம் கிடைக்கின்றது. இதைப்போன்றே நாலோடில் பாரினில் எண்பதாம் என்ற வரியின் மூலம் ஐந்து மரபணுக்களும் முழுமையாக இல்லாவிடில் நான்கைவிடக் கூடுதல் (4 Plus) என்ற நிலையிருப்பின் ஆயுட்காலம் எண்பது வயது என்ற விளக்கமும் பெறப்படுகின்றது. இவ்வைந்து மரபணுக்களையும் கர்ப்பக் காலம் தொடங்கித் தொடர்ந்து கண்காணிக்கும் வாய்ப்புக் கிடைப்பின் மனிதன் வாழும் வயதினை மிகத் துல்லியமாகக் குறிப்பிட்டுச் சொல்ல இயலும்.

**தொகுப்புரை**

இவ்வுலகமே பஞ்சபூதங்களின் சேர்க்கை என்னும் நிலையில் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றி ஒன்றாக இயங்கிக் கொண்டிருக்கின்றது. மனித உடல் பஞ்சபூதங்களின் சேர்க்கை என்பதற்குச் சித்தர் பாடல்களும், திருமூலரின் திருமந்திரப் பாடல்களும் சான்றாகின்றன. அண்டத்திலிருந்து பிண்டம் (மனித உடல்) வரை அனைத்தும் பஞ்சபூதக் கூட்டான அணுத் திரள்கள் என்னும் செல்களால் கட்டப்பட்டவை. மனித உடலும் மனித வாழ்வே ஆன்மா ஈடேற்றம் பெற உதவும் ஒப்பற்ற சாதனங்களாக விளங்குகின்றன. உடலைக் கொண்டே உயிர் ஓம்பி முக்தி அடைய முடியும். எனவே உடலைப் பேணி வளர்க்க வேண்டியது அவசியம் ஏன்பதைத் திருமூலர் அறிவுறுத்துகின்றார். உயிர்கள் இம்மண்ணில் தோன்றுவதற்கு மிக முக்கியமான முதல் காரணம் விந்துநாத திரவமே என்பது திருமூலரின் பாடல்களில் தெளிவாகின்றது. கரு உருவாதல், கரு வளர்ச்சி, உருவ மாற்றம் தொடர்பான திருமூலரின் சிந்தனைகள் இன்றைய அறிவியல் ஆராய்ச்சிகளுடன் ஒப்பிட்டுக் காணத்தக்கவை. கரு உருவாகும்போதே குழந்தையின் உடலமைப்பு, ஆரோக்கியம், ஆயுட்காலம் முதலியன தீர்மானிக்கப்பட்டு விடுகின்றன. எதையும் அறிவியல் கண்ணோட்டத்துடன் நோக்கும் அணுகுமுறை திருமூலரிடம் இயல்பாகவே நிலைபெற்றிருந்தமையால் உடலும், அவ்வுடல் தொடர்பான அதன் இயக்கத்திலும் ஆழ்ந்த சிந்தனை வெளிப்பாடு அவருக்கு இருந்தது என்பது புலனாகின்றது. எதையும் அறிவியல் கண்ணோட்டத்துடன் நோக்கும் அணுகுமுறை திருமூலரிடம் இயல்பாகவே நிலைபெற்றி ருந்தமையால் உடலும், அவ்வுடல் தொடர்பான அதன் இயக்கத்திலும் ஆழ்ந்த சிந்தனை வெளிப்பாடு அவருக்கு இருந்தது என்பது புலனாகின்றது.

# 67. திருமந்திரம் - சமூக வழிகாட்டி

முனைவர் ந. முருகேசன், திருப்பனந்தாள்.

சித்தர்களுள் ஒருவராகக் கருதப்படும் திருமூலர் பாடிய திருமந்திரம் சைவத் திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாக உள்ளது. தமிழர்களின் ஞானக் கருவூலம் இந்நூல். சைவ ஆகமங்களின் சாரம் என்று இதனைப் போற்றுவர். மனிதன் மன அமைதியுடனும் சிறப்புடனும் வாழ அறக் கருத்துக்களைக் கூறும் சமூக வழிகாட்டியாகத் திகழ்வது இந்நூலாகும். மக்களை நன்னெறிப்படுத்தி வாழ வைக்கும் குறிக்கோளை மனத்தில் கொண்டு சமூகப் பணியாற்றிய சித்தர்களின் பொதுவியல்புக்கு ஏற்பத் திருமூலரும், தம் நூலைப் படைத்திருப்பதில் வியப்பில்லை.

**மனித நேயம்**

மனித நேயத்தை இன்றியமையாத ஒன்றாகக் கூறும் ஒப்பற்ற நூல் இது. இந்நாளில், மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று முழங்குவதை அந்நாளிலே முழங்கியது திருமந்திரம்.

"படமாடும் கோயில் பகவற்கொன் றீயில்
நடமாடும் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடும் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடும் கோயில் பகவற்க தாமே"

என்னும் அற்புதச் செந்தமிழ்ப் பாடலை எவர்தாம் மறக்க முடியும்.

'மகேசுவர பூசை' என்ற பகுதியில் இப்பாடல் அமைந்துள்ளது. திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு அளிப்பவை அடியார் கட்குப் போய்ச் சேரா; அடியார்கட்கு அளிப்பவையோ ஆண்டவனைப் போய்ச் சேரும் எனத் திருமந்திரம் புதிய ஞானத்தைத் தருகின்றது. அடியார்கட்கு அளிப்பவை ஆண்டவனுக்குப் போய்ச் சேரும் என்று உறுதிபடக் கூறி, மக்களுக்குப் பணிபுரிய வேண்டும் - தொண்டுபுரிய வேண்டும் என்று தெளிவாக அறிவுறுத்துகின்றார் திருமூலர். ஆன்மிக வாதிகளின் பொதுவான சிந்தனையிலிருந்து, சற்று மாறுபட்ட வித்தியாசமான சிந்தனை இது. இச் சிந்தனைக்கு அடிப்படை அசைக்க முடியாத மனித நேயம்தான். அபிஷேகம், அர்ச்சனை முதலியவற்றைவிட மக்கள் தொண்டே மேலானது என்கின்றார் திருமூலர்.

## ஆர்க்கும் இடுமின்

மனித நேயத்தின் முக்கியமான அம்சம் பிறர் துயர் போக்குவது. பொருள் இருப்பவர்கள், இல்லாதவர்கட்குத் தந்து நன்மை புரிவது மனித நேயமாகும். பசிப் பிணியைப் போக்குவது உயர்வானது. அருட்பாப்பாடிய வள்ளலார்.

"... ... பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்"

என்று பாடி, வருந்தி, வடலூரில் சத்திய தருமசாலையை நிறுவி, அன்னதானம் செய்தமை மனித நேயத்தால் அல்லவா! திருமூலரும், சமூகப் பணி யாற்றுவதைக் குறிக்கோளாகக் கொண்ட சித்தர்களின் பண்புக்கேற்ப,

"ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை உடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே"

என்று பாடிக் கட்டளையிட்டார். வேண்டியவர் வேண்டாதவர் என்று பேதம் பார்க்காமல் - இன்னார் இனியார் என்று வேறுபாடு காணாமல் - பிறர்க்கு உணவளித்த பின்னரே உண்ண வேண்டும் என்று கூறுவது கூர்ந்து நோக்கத் தக்கது. சைவர்கள் சிவனடியார்கட்கு மட்டும் உணவளிப்பது; வைணவர்கள் வைணவர்கட்கு மட்டும் உணவளிப்பது, இஸ்லாமியர் இஸ்லாமியர்கட்கு மட்டும் உணவளிப்பது என்ற பேத நிலைகளையெல்லாம் கடந்து நின்று உரத்த குரலில் "ஆர்க்கும் இடுமின்; அவரிவர் என்னன்மின்!" என்று கூறுவது மிகவும் சிறப்பு மிக்கதாகும். இதுவே மிக உயர்ந்த மனித நேயமாகும்.

## அன்பே சிவம்

மனித நேயத்தை வற்புறுத்தும் திருமூலர்; மானிடர்பால் அன்பு காட்டாமல் இறைவனிடம் மட்டும் அன்பு காட்டுவோர்க்குக் கூறும் அறிவுரை நோக்கத்தக்கது. சமயச் சின்னங்களினை அணிந்து, கோயிலுக்குச் சென்று அர்ச்சனை செய்து, வழிபாடு செய்து, இறையடியாராய்க் காட்சிதரும் சிலர் பிறமனிதர்கள்பால் அன்புகாட்டாது இரக்கமொன்றிலா அரக்கராய் இருப்பதைப் பார்க்கிறோம். வஞ்சனை எண்ணம் கொண்டு, வேதனைகளைப் பிறருக்குக் கொடுப்பதே வாடிக்கையாகக் கொண்டு, கடவுள் வேறு அன்பு வேறு என்று திரிகின்றார்கள். அவர்களின் அறிவுக்கண் திறக்க எண்ணிய திருமூலர்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்

அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே''

என்று பாடினார். அன்பு வேறு; சிவமாகிய இறை வேறு என்று எண்ண வேண்டாம் மானிடரே! அன்பே சிவம்! அன்பே சிவம்! என்று பக்குவமாகத் திருமூலர் அறிவுறுத்துகின்றார். எல்லோரையும் நேசி; எல்லோரிடமும் அன்பு காட்டும் என்று இனிய வழி காட்டுகின்றார், சித்தர் திருமூலர். ''எவ்வுயிரும் நீங்காது உறையும் இறை சிவமென்று எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு'' என்ற சான்றோர் வாக்கும் ஈண்டு நினைக்கத் தக்கது.

## ஒன்றே குலம்; ஒருவனே தேவன்

மனிதன் குலத்தில் உயர்வு தாழ்வு சொல்லிச் சண்டை போடுகிறான்; என் தெய்வம் உயர்ந்தது உன் தெய்வம் தாழ்ந்தது! என்று கூறிச் சச்சரவு இடுகிறான். இதனால் மன நிம்மதி போகின்றது. இந்நாளில் உயிர்ப் பலியே ஏற்படுகின்றது. நட்பும்கூட இதனால் சிதைந்துவிடுகின்றது. சித்தர் திருமூலர் நம்மனோர் அறிவுபெற,

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின்!''

என்று பாடி ஞானதீபம் ஏற்றுகின்றார். பிறப்பால் குலமும் ஒன்றே; வழிபடுவதற்குரிய தெய்வமாகிய பரம்பொருளும் ஒன்றே! நன்றே நினைமின்கள்! என்று தெளிவுறுத்தி, நாம் திருந்திட வழிவகுக்கின்றார். ஆன்மிகவாதியின் அடிப்படை உணர்வு எப்படி இருக்க வேண்டும் என்பதை அழகாகக் கூறியுள்ளார் அவர்.

## உடல் நலம் பேணுக

பொதுவாக, சித்தர்கள் பாடல்களில் உடல் நிலையாமை, இளமை நிலையாமை பற்றிய பாடல்கள் மிகுதி.

''நீர்மேற் குமிழிஇக் காயம் - இது
நில்லாது போய்விடும் நீயறி மாயம்''

என்று யாக்கை நிலையாமையைக் கடுவெளிச் சித்தர் பாடுகின்றார். ''காயமே இது பொய்யடா - வெறும் காற்றடைத்த பையடா'' என்ற பாடலைப் பலரும் கேட்டிருப்போம். யோக நெறியில் நின்று சுந்தரர்கூட 'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்' என்று பாடிச் சென்றார். ஆனால் ஆன்மாவின் குறிக்கோள் நிறைவேற, உடல் அவசியம், என்பதால் உடல் நலம் பேண வேண்டும் என்றுணர்ந்து திருமூலர் பாடுகின்றார்.

''உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்

உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே.."

என்பது திருமூலரின் திருமந்திரப் பாடல். "உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்று பாடி நமக்கும் உடம்பைப் பேண வேண்டும் என்பதை உய்த்துணரவைக்கின்றார் கவிஞர். நிலையாமை பற்றித் திருமூலரும் பாடியுள்ளாரே என்றால் "நிலையாமை பற்றிய் குறிப்புடைய பாடல்கள் யாவும் மாந்தரை விழிப்படையச் செய்து, இருப்பதற்குள் எய்துதற்குரிய இலக்கினைப் பெறுதற்குரிய முயற்சிகளை மேற்கொள்ளுதற்கு இடித்துரைத்து நெறிப்படுத்துவன என்று கருதுதல் வேண்டும்" என்ற முனைவர் சோ. ந. கந்தசாமி அவர்களின் கூற்றே பதிலாகும்.

## ஒழுக்க வேண்டும்

தனி மனித வாழ்வில் ஒழுக்கம் அவசியம் ஆகும். இதனை வற்புறுத்தாத கவிஞர் இலர். திருவள்ளுவர் ஒழுக்கமுடைமை என்று ஓர் அதிகாரமே அமைத்துப் பாடியுள்ளார். ஒழுக்கத்தை உயிரைவிட மேலானதாய்க் கருத வேண்டும் என்ற கருத்தில்,

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"

என்று பாடினார். சித்தர் திருமூலரும் ஒழுக்கத்தைப் பற்றிப் பாடி அறிவு வெளிச்சம் தருகின்றார். ஒழுக்கக் கேடுகளில் ஒன்றாகிய பிறன்மனை நயத்தலை,

"பூத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறும் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக்(கு) இடருற்ற வாறே"

என்று சாடிப் பாடியுள்ளார். உவமை மூலம் தம் கருத்தை நம்முன் வைக்கிறார். தம் மனைவியை விடுத்துப் பிறன் மனைவியை விரும்புவது, பலாக்கனியை விட்டுவிட்டு, அயலான் புழைக்கடையில் உள்ள ஈச்சம் பழத்திற்கு ஆசைப்பட்டுத் துயர் உறுவது போலும் என்று இடித்துரைத்து ஒழுக்கம் வேண்டும் என்று அறிவுரை கூறுகின்றார் திருமூலர்.

## மொழிப்பற்று

தமிழ்ச் சமூகத்திற்கு மொழிப்பற்று வேண்டும் என்பதையும் திருமந்திரம் உணர்த்துகின்றது. "ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள், ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" என்று பாடினும், தமிழ்ப்பற்று மிக்கவராகவே திருமூலர் விளங்குகின்றார். தம் பிறவியின் நோக்கத்தை,

"என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே"

என்று பாடுவது நோக்கத்தக்கது. தம் பிறவியின் குறிக்கோளைத் தமிழொடு தொடர்புபடுத்திப் பாடும் திருமூலர் தமிழால் வழிபாடு செய்வதை நந்தி உரைத்ததாக,

> "செந்தமிழ் ஆதி தெளிந்து வழிபடு
> நந்தி இதனை நவம்உரைத் தானே"

என்று பாடியருளினார். இப்பாடல் அடிகளை விளக்கும் தமிழறிஞர் சோ. ந. கந்தசாமி அவர்கள் "இறைவனைத் தமிழால் வழிபடுவதைப் பெரிதும் விரும்பியுள்ளார் திருமூலர்" என்று எழுதுவார். தமிழைச் செந்தமிழ் என்றும் முத்தமிழ் என்றும் அடைமொழி கொடுத்துப் பாடுவதும் திருமந்திர ஆசிரியரின் மொழிப்பற்றைச் சுட்டுவது ஆகும். இப்படிப் பாடுவதன் மூலம் நமக்கும் மொழிப்பற்று வேண்டும் என்பதை உய்த்துணர வைக்கின்றார் ஆசிரியர்.

திருமந்திரமே தமிழ் மணம் கமழ்வது என்ற குறிப்பும் உண்டு. 'நற்றதமிழ்', 'நலங்கொள் தமிழ்', 'ஞானத்தமிழ்', 'ஒண்தமிழ்', 'முத்தமிழ்', 'செந்தமிழ்' என்றெல்லாம் தமிழைப் போற்றும் ஞானசம்பந்தர் திருவாவடு துறைக்கு இறைவழிபாட்டிற்கு வந்தபோது, கோயில் பலிபீடத்தருகே வணங்கி "இங்குத் தமிழ்மணம் கமழுகின்றது" தோண்டிப் பாருங்கள் என்று பணித்ததாகவும், தோண்டியபோது திருமந்திரம் கிடைத்ததாகவும் செவிவழிச் செய்தி ஒன்று உள்ளது. இச் செய்தியும் எண்ணத்தக்கது.

இப்படி, திருமூலரின் திருமந்திரம் மிகச் சிறந்த சமூக வழிகாட்டி யாகத் திகழ்கின்றது. ஆன்மிகவாதியாயினும், ஆன்மிக நாட்டம் இல்லாத சராசரி மனிதன் ஆயினும், அவனுக்குச் சிறந்த வழிகாட்டியாக உள்ளது திருமந்திரம். ஒரு சமுதாயம் திருமூலரின் திருமந்திரத்தைப் பின்பற்றினால், அச்சமுதாயம், பிரச்சனையற்றதாக, அமைதி மிக்கதாக விளங்கும்.

# 68. அகக்கோயிலும் புறக்கோயிலும்

திரு. க. மோகன்ராஜ் ஸ்தபதி, சுவாமிமலை.

இறைவன் ஒவ்வொரு உயிரிலும் குடிக்கொண்டுள்ளான். உயிர்கள் அனைத்துக்கும் ஈசனே தலைவன். காணும் உயிர்கள் யாவும் ஈசனின் அம்சமே. உயிரின் பெருமை உணர்ந்தவர்கள் ஆன்மாவின் அருமை அறிந்தவர்கள், ஈசனை உணர்ந்தவர்கள் ஆவார்கள். எறும்பு முதல் யானை வரை உயிர்கள் ஒன்றே! உருவத்தை பொறுத்தே பலம் பெறுகின்றன.

மனித வர்க்கத்தை பொறுத்தவரை உள்ளமே இறைவன் குடிகொண்டுள்ள இடமாகும் என முதிர்ந்த ஞானிகள் சித்தர்கள் இறை அனுபவத்தினை உணர்ந்து மகிழ்ந்தனர். அதனால் அவர்களது உள்ளமே கோயிலானது, அவர்களது இதய கமலமே ஈசன் அமரும் ஆசனமானது.

இதனை திருமூலர் கூறுகிறார்

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலனைந்தும் காளா மணிவிளக்கே"

மேற்கண்ட பதிகத்தில் பெருங்கோயில், ஆலயம், கோபுர வாசல், சீவன், சிவன் என திருக்கோயில் கட்டுமான பாகங்களை தனிதனியாக தெளிவுபடுத்தியுள்ளார். ஒரு கோவில் என்றால் என்னென்ன இருக்க வேண்டும் என்பதனை நான்கு வரிகளிலே ஒரு சிற்பியை போல வார்த்தைகளினாலேயே கோவிலை கட்டிவிட்டார்.

உள்ளத்திலே எழுப்பப்படும் கோயிலுக்கு அளவு விதிமுறை கிடையாது. பக்தியின் அளவும், பிற உயிர்கள் மேல் கொண்ட அன்புமே அளவாகும். திருமூலர் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தார் என்றும் ஆண்டுக்கு ஒரு மந்திரம் வீதம் இயற்றினார் என்பது அறியப்படுகிறது. தமிழகத்திலே திருக்கோவில்கள் அமைக்கும் முறை பல்லவர்கள் காலத்தினால் தான் முதன்முதலில் குடவரைக் கோவில்கள் அமைக்கப்பட்டன. அதற்கு முன்னரும் தமிழகத்தில் கோயில்கள் இருந்தன என்பதற்கு தக்க ஆதாரமும் உள்ளன.

கோயில் பண்பாட்டையும் நாகரீகத்தையும் உணர்த்தும் சின்னம். எனவேதான் இந்திய நாட்டை உலகமே திரும்பி பார்க்கின்றது. அறிவியலும்,

கலையும், வானசாஸ்த்திரமும், பொறியியலும் ஒருங்கே அமையபெற்ற களஞ்சியமே ஆலயங்களாகும். உலகில் முதலில் கோயில் குகைகளிலே தான் இருந்தன. குகையில் உள்ளவன் குகன் ஆவான். பெரும்பாலும் குகைகள் மலைகளில் தான் காணப்பட்டன.

அப்படி உள்ள குகை கோயில்களில் கடல் கடந்த மலேசிய நாட்டில் இன்றும் உலகலாவிய அளவில் பத்துமலை குகை கோயிலில் குகனது வழிபாடு சிறப்பாக நடைபெறுகிறது. சங்க இலக்கியத்தில் ஐவகை நிலங் களுக்கும் ஐவகை வழிபாடு இருந்தது. குகை, மரநிழல், குடில், மண்தளி, சுடும்மண்தளி, மரபலகை தடுப்பு என இருந்து பின்னர் குடவரையாகவும் ஒற்றைகற்றளி, கருங்கல் கோயில் என தற்சமயம் சிமெண்டு கட்டுமானம் மார்பிள் வரை முன்னேற்றம் கண்டுள்ளது.

அக்காலத்தில் மலை உச்சி, மலையடிவாரம், ஆற்றங்கரை, ஏரிக்கரை, கடற்கரை, ஆற்றிடைத்திட்டு, ஆறுகூடுமிடம், தெருக்கள்கூடுமிடம், ஊரின் மையப்பகுதி என மக்கள் வாழும் இடத்திற்க்கு ஏற்ப கோயில்கள் கட்டப் பட்டன.

''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்''

என்பது மூதுரை. இவ்வாறு கட்டப்பட்ட கோயில்களை ஏழு வகையாக திருநாவுக்கரசர் தனது திருஅடைவு திருத்தாண்டகத்தில் சுட்டிகாட்டுகிறார்.

''பெருக்காறு கடைக்கணிந்த பெருமான் சேறும்
பெருங்கோயில் எழபதினொ டெட்டு மற்றும்
கரக்கோயில் கடிபொழில் சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
குளங் கோயில் மணிக்கோயில் ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சித் தீவினைகள் தீரு மன்றே''

இத்தனை கோயிலிலும் சிவன் உறைந்துள்ளான் என்றும் அவனை இறைஞ்ச நம் தீவினைகள் தீரும் என நாவுக்கரசர் கூறுகின்றார். உள்ளத்தில் உள்ள ஈசனை வெளியே அமர்த்தி அனைவரும் கண்டு தொழுது ஆராதித்து மகிழ உண்டானதே கோயில்களும் சிற்பங்களும் ஆகும். சிறிய எறும்புகள் பல ஒன்றாக சேர்ந்து ஒரு தானியத்தை தன் புற்றுக்குள் எடுத்துச் சென்று உண்டு மகிழ்வதுபோல மாபெரும் இறைசக்தியை கடவுள் படிமமாக் செய்து திருக்கோயில்களிலிருந்து எழச்செய்து அலங்கரித்து அடியார் பெருமக்கள் ஊர்வலமாக, தேரோட்டமாக வடம் பிடித்து அவனை கொண்டாடி மகிழ்வதை ஒப்பு நோக்க வேண்டும்.

அவ்வாறு இறைவன் உறையும் ஆலயங்களை விதவிதமாக அமைத்து அங்கே ஈசனை அமைத்து மனித சமுதாயம் பேரின்ப அனுபவம் கண்டது.

"கரக்கோயில்" என்பது வட்ட விமானம் கோயில்
ஞாழற்கோயில் என்பது குங்கும மர கோயில்
கொடி கோயில் என்பது கொகுடி மரக்கோயில்
மணிக்கோயில் என்பது ஆறு, அல்லது எட்டுபட்டை கோயில்
இளங்கோயில் என்பது நான்கு பட்டை கோயில் அல்லது பாலாலயம்
ஆலக்கோயில் என்பது யானை பின்புறம் போன்ற கோயில்
மாடக்கோயில் என்பது அடுக்குகளைக் கொண்ட கோயில்

எங்கும் பரந்த இறைவனை நான்கு சுவர் எழுப்பி அதற்கு மத்தியிலே அவனுக்கு கருவறை எனும் இருண்டபாகத்தை நிறுவி அங்கே இறைவன் உள்ளான் என்று கூறுவதும் தாயின் இருண்ட கருவறையில் உயிர் உண்டாவதையும் நுட்பமாக நோக்க வேண்டும்.

ஆலயத்தின் கருவறை இறைவன் அருள் நிரம்பப் பெற்ற இடம். அங்கிருந்தேதான் அருட் சக்தி வெளிப்படும் என்பதனை ஆன்மாக்கள் உணரவேண்டும் என்ற எண்ணத்தை மக்கள் உணர்ந்து வருகின்றனர்.

மனித வர்க்கம் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், ஆனாகதம், விசுத்தி, ஆக்ஞை என ஆறு ஆதாரங்களை கொண்டுள்ளது. இதன் செயல் பாடுகளை திருமூலர் திருமந்திரத்தில் 567, 568, 569, 570, 571, 572 ஆகிய தந்திரத்தில் கூறி உள்ளார்.

இதனையே கோயில்களில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், நீராழிமண்டபம், அலங்கார மண்டபம், சபாமண்டபம் என அமைத்து ஒவ்வொரு இடத்திலும் விழாக் காலங்களில் இறைவனை எழச்செய்து வணங்கி மகிழ்கின்றனர்.

திருக்கோயிலில் கொடிமரம், பலிபீடம் அமைக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டு வருவதை திருமூலர் (561) மூன்றாம் தந்திரத்தில் கூறியுள்ளார்.

சிவன் கோயில்களில் கருவறையைச் சுற்றியுள்ள திருச்சுற்றுக்கள் ஒன்று முதல் ஐந்து வரை உள்ளன. ஒவ்வொரு திருச்சுற்றையும்

1. அன்னமய கோசம்
2. பிராணமய கோசம்
3. மனோமய கோசம்
4. விஞ்ஞானமய கோசம்
5. ஆனந்தமய கோசம்

என வழங்குவர்.

வைஷ்ணவ கோயில்களில் பூ, புவ, சுவ, மகா, ஜனா, தப, சத்திய என ஏழு சுற்றுக்குள் உள்ளன. இந்த ஏழு சுற்றுக்கள் உள்ள கோவில் ஸ்ரீரங்கம் கோவிலாகும்.

கொடி மரத்திலே அடியில் பிரம்ம பாகம் நடுவில் விஷ்ணு பாகம் மேலே ருத்ரபாகம் என உள்ளது.

திருமந்திரத்திலே முதல் தந்திரத்தில் (49) ''பதியும், பிரம்மனும், திருமாலும் ஓரோர் எல்லையளவிலும் இருந்தாலும் சிவபெருமான் மேம்பட்ட நிலையில் உள்ளான் என கூறுகிறது.

**கடந்து நின் றான் கமலம்மல ராதி;**
**கடந்து நின் ருன் கடல் வண்ணன்வும் மாயன்;**
**கடந்து நின் ருன்அவர் கப்புறம் ஈசன்;**
**கடந்து நின் ருன் எங்கும் கண்டுநின் ருனே**

இது சிவனின் ஐந்து உடம்பாகும். இதனை திருமந்திரத்தில் முதல் தந்திரம் (193)ல்

1. சோற்றுடம்பு
2. காற்றுடம்பு
3. உளத்துடம்பு
4. உணர்உடம்பு
5. களிப்புடம்பு

என கூறியுள்ளார்.

**திருக்கோவில் அமைப்பில்**

| | | |
|---|---|---|
| கோவிலின் கருவறை | - | தலை |
| அர்த்தமண்டபம் | - | கழுத்து |
| மகாமண்டபம் | - | மார்பு |
| நிறுத்த மண்டபம் | - | தொடை |
| யாகசாலை | - | நாபி |
| கொடிமரம், வாகனம், பலிபீடம் | - | ஆண்குறி |

என மனிதன் கிடந்த கோலம் கோபுர லட்சணத்திற்கு ஒப்பு நோக்க வேண்டும்.

மேலும்

| | | |
|---|---|---|
| கருவறை | - | ஆக்ஞை (புருவ நடுவிடம்) |
| அர்த்தமண்டபம் | - | விசுத்தி (கழுத்து) |

மகாமண்டபம் - அநாதகம் (இதயம்)

ஸ்தாபன மண்டபம் - மணிபூரகம்

அலங்கார மண்டம் - சுவாதிட்டாணம்

சபாமண்டபம் - மூலாதாரம்

எனவும் அறிந்து கொள்ள வேண்டும்.

மனித வர்க்கம் அவரவர்கள் கைகளால் எண் சாண் உயரமே இருக்க வேண்டும் என்பதனை,

''எண் சாண் உடம்புக்கு சிரசே பிரதானம்''

என்பர்.

திருமூலர் தனது திருமந்திரத்தில் இரண்டாம் தந்திரத்தில் (458)

''சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடும் எண்விரல் பிறப்பட்டு நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே''

என்று கருவில் வளரும் சிசுகூட தனது கையில் எண்சாண் அளவில் தான் வளரும் என்று கூறியுள்ளார்.

இவ்வாறாக சிசு சிறுகோயில். சிசுவை தாங்கும் உடல் பெருங் கோயில். சிசு ''குடி இருந்த கோயில்'' கருவறை ஆகும். இதனை அககோயிலென்றும் கூறலாம்.

புறக்கோயில் மனிதன் மனிதனுக்காக இறைவன் உருவம் படைத்து கட்டப்பட்ட கோயிலாகும். இப்படிப்பட்ட திருக்கோயில்களில் ஏற்படும் குற்றம் பற்றி திருமூலர் திருமந்திரத்தில் (507)ல் உணர்த்துகிறார்.

தாவர லிங்கம் பறித்தொன்றில்தாபித்தால்
ஆவதன் முன்னே அரசு நிலைகெடுஞ்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடுங்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே (507)

கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விய்யவன் ஆணையே (508)

ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றதைத் தான் திருக் கோயில்க் ளெல்லாஞ்

சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே (509)

முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே (510)

பேர்கொண்ட பார்ப்பான் பிரான் தன்னை அர்ச்சித்தாற்
போர்கொண்ட நாட்டுக்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாம்என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே (511)

எனவே இதிலிருந்து திருக்கோவிலில் குற்றம் புரிபவர்கள் அக்காலத் திலேயே (3000 ஆண்டுக்கு முன்னரே) இருந்துள்ளனர் என்றும் அதனை நிலைப்படுத்த இந்த 5 மந்திரங்கள் அளித்துள்ளார் என்பதும் அறியப்பட வேண்டிய ஒன்றாகும்.



# 69. திருமந்திர யாப்பமைதி

முனைவர் நா. லோகநாதன், வளவனூர்.

திருமூலர், சித்தர் மரபைச் சார்ந்தவர் இவர்தம் இயற்பெயர் சுந்தரநாதன்.

''சுந்தரநாதன் சொல்லிய மந்திரம்
நந்தி யெந்நாதன் நாவார ஓரினன்''

என்ற பாடல் மூலம் பெயரையும், இவர் நந்தியின் மாணவர் என்பதையு மறியலாம். இவர் ஆண்டிற்கொரு முறை ஒரு மந்திரம் பாடுவதாகக் கூறுகின்றனர். இது செவிவழிச் செய்தியாகும். நம்பியாரூரர், திருமூல முனிவரை நினைந்து ''நம்பிரான் திருமூலன் அடியார்க்கு அடியேன்'' என்று திருத்தொண்டத் தொகையில் புகழ்ந்துள்ளார்.

**திருமூலர் வரலாறு**

திருமூலர் மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்ததாகக் கூறுகின்றனர். அக்கருத்திற்குத் தக்க சான்றுகள் இல்லை. நீண்ட நெடுங் காலம் வாழ்ந்திருக்கக் கூடும்.

''வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியினு மாமே'' (திரு. 551)

என்ற பாடல் மூலம் வாழின், நீண்ட காலம் வாழலாம் என்று திருமூலரே கூறுவதால், அவ்வழியைப் பின்பற்றி அவர் வாழ்ந்திருக்கக்கூடும்.

திருமூலர், பதஞ்சலி வியாக்கிரமருடன் தென்னாட்டிற்கு வருகையில் அவருக்குத் திருமூலர் என்ற பெயரில்லை. இரண்டாம் தடவை பொதிய மலையை நோக்கி வரும் போது சாத்தனூரில் ஆடுகளை மேய்க்கும் மூலன் இறந்து கிடந்ததைக் கண்டார். ஆக்கள் மேய்க்கும் மூலன் பிரிவால் மீளாத்துயரம் கொண்டிருந்தலைக் கண்டார். அவைகளுக்காக மூலன் உடம்பில் தன் உயிரைச் செலுத்தி மூலனாக எழுந்ததால் திருமூலன் என்ற பெயர் உண்டா யிற்று. அன்று முதல் வாணாள்வரை திருமூலர் என்ற பெயரால் அழைக்கப்பட்டார்.

**காலம்**

திருமூலர் தம் நூலுக்குப் பயன்படுத்திய பா. பாவினமாகும். அப் பா கலிவிருத்தம் ஆகும். சிலப்பதிகாரத்தில் முதன் முதலில் விருத்தம் கால் கொள்கிறது. அதற்கு முன் வாழ்ந்திருப்பாரேயானால் இயற்பாவைப் பின்பற்றியிருப்பார். இயற்பாவில் ஒரு பாடல் கூட இவர் பாடவில்லை. மேலும் இவர்தம் நூலில் ''விநாயகர் காப்பு'' என்கிற காப்புச் செய்யுள் உள்ளத்தால் இரண்டாம் புலிகேசியை வென்ற பரஞ்சோதியார் காலத் திற்குப் பின்னரே பிள்ளையார் வணக்கம் தமிழகத்தில் மெல்ல மெல்ல கால் கொண்டது. ஆதலால் இவர் தம் காலம் கி.பி. 6 அல்லது 7 நூற்றாண்டாக இருக்கக் கூடும்.

**நூலமைப்பு**

திருமூலர்தம் நூலாகிய திருமந்திரத்தைத், ''தென் தமிழ்ப்பயன்'', என்று சேக்கிழார் பாராட்டுகிறார். இவர், ''உபதேசம் முப்பது'', ''மந்திரம் முந்நூறு'', என்ற இரு நூல்களை யாத்துள்ளார்.

**''மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்**
**மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்**
**மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழ்**
**மூலன் உரைசெய்த மூன்றும்ஒன் றாமே''**

என்ற பாடல் மூலம் நன்கறிய நேர்கிறது. திருமந்திரப் பாடல்களின் எண்ணிக்கையில் கருத்து வேறுபாடுள்ளது. பொதுப்பாயிரம், தற்சிறப்புப் பாயிரத்தோடு முதல் தந்திரம் முதலாக ஒன்பதாம் திருமந்திரம் வரை பகுப்பமைப்புக்களைக் கொண்டு திருமந்திரம் இலக்காக நிற்கும்.

**பாடுபொருள் மாற்றம்**

சங்க காலத்தில் அகம், புறம் பாடுபொருள்களாக இருந்தன. சங்க மருவிய காலத்தில் ''அறம்'' பாடுபொருளாக இலங்கியது. அதன்பின் அரசர்கள் குறுநில மன்னர்கள் ஆகியோரைப் பற்றிப் பாடினர் காப்பிய காலத்தில் மதக்கருத்துக்களுக்கிடையே மன்னர்களைப் புகழ்ந்து நெடும் பாடலைப் பாடினார். சமயநெறிக்காலத்தில் சைவம் வைணவம் ஆகிய வற்றினைப் புலவர்கள் பாடுபொருள்களாகக் கொண்டு பாடினார். இக்காலச் சூழலிடையே சித்தர்கள் தோன்றினர். இவர்கள் மன்னர்களையோ குறுகிய மன்னர்களையோ செல்வந்தர்களையோ பொருட்படுத்தாமல் வாழ்க்கையின் உயர்ந்த பேருண்மைகளைப் பாடல்களாகப் பாடினர், எளிய் இனிய ஓசை நலம் வாய்ந்த சொற்களால், கவிதை வளம் குன்றாத நிலையில் பாவியலைத் தொடர்ந்துள்ளனர். திருமந்திரப் பாவியலமைப்பின் அமைதியைக் காண்போம்.

**யாப்பமைதி**

சித்தர்கள், தத்துவம் என்றும் பாடுபொருண்மையைத் தம் பாடல்கள் மூலம் விளக்குகின்றனர். இக்காலம், பாவியல் பரிணாம வளர்ச்சிக்காலம் ஆகும். சித்தர்கள் தமிழிலக்கண மரபுகளைப் போற்றியுள்ளதோடு, புதியதோர் பாவியல் தோற்றத்தை உருவாக்கியுள்ளனர். எளிய மக்கள் உணரவேண்டுமென்ற நோக்கால் நாட்டுப்புறப் பாடல்களை யாத்தனர். இப்பாடல்கள் இசை நலம் மிகுந்தவை. நேரடிப்பொருள் மறைமுகப் பொருள் ஆகிய இருவகை நிலைகளில் கருத்துக்கள் அமைத்திருக்கும்.

திருமூலர் விருத்த வகையைச் சார்ந்த கலிவிருத்ததில் திருமந்திரம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

தொல்காப்பியர் விருத்தவகைகளைப் பற்றித் தம் நூலில் யாண்டும் இயம்பவில்லை. அக்காலத்தில் வேறுபட்ட பாவடிங்கள் பொருண்மைக் கூறுகள் வழக்காற்றிலிருந்தன. அக்கருத்தினைத் தொல்காப்பியர்,

**''யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது''**

**(தொல். செ.நூ.148)**

கூறித் தெளிவுபடுத்தியுள்ளார்.

பாவின அமைப்பைத் தோற்றுவித்தவர்கள் காக்கைபாடினியார் அவிநயனார், கலத்தார், காரிகையார் போன்றோர் ஆவர்.

**''வெண்பா விருத்தத் துறையோடு தாழிசை**
**என்றிம் முறையில் எண்ணிய மும்மையும்**
**தத்தம் பெயரால் தழுவும் பெயரே''** **(கா.பா.53)**

என்பர் காக்கைபாடினியார். இம்மூன்றில் விருத்தத்தையே புலவர்கள் மிகுதியாகப் பாடினர். கம்பர் கலிவிருத்தத்தை மிகுதியாகக் கையாண்டுள்ளார்.

**விருத்த வரலாறு**

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை அகவற்பாவில் இயற்றியதோடு நாட்டுப்புற வாய்மொழி இலக்கியக் கூறுகளை, உற்று நோக்கிய அவர் அவ்வமைப்பைக் காப்பியத்தில் பதித்தார். அதன் மாற்றுருவே வரிப்பாடல்கள் குரவைப் பாடல்கள் ஆகும். இஃதே விருத்தப்பா விற்குத் தோற்றுவாயாக இலங்கியது; சிலப்பதிகாரத்தில் அமைந்துள்ள பாடல்.

**திங்கள் மாலை வெண்குடையான் - சென்னி செங்கோ**
**லதுவோச்சி**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலலாய் வாழிகாவேரி**

கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவா தொழில்தல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்றறிந்தேன் வாழி காவேரி
(சிலப். - கானல்வரி:157)

என்ற பாடலாகும் இஃது அறுசீர் விருத்தப்பாடல் ஆகும். விருத்தப்பா புலவர்களுக்கு எண்ணிய எண்ணியாங்கு பாடல்களை எழுதுகின்ற அமைப்பினைத் தந்தது.

**விருத்த இலக்கணம்**

விருத்தப்பாவின் இலக்கணத்தை வீரமாமுனிவர் தாமியற்றிய தொன்னூல் விலாகத்தில் விளக்கமாக விளம்பியுள்ளார்.

விருத்தம் என்ப விரவிய எல்லாச்
சீரும் அடியும் சிதையாக் கொளினும்
அவை ஒத் தனவாய் அடிநான்கு அணையுமே
மாவிளங் காயே வஞ்சிச்சீர் இடையும்
பொதுச்சீர் இடையும் புணர்மா விளமிவை
ஒப்ப வரின்சீர் ஒப்புமை யாகும் (தொ.வி.247)

என்றும், மேலும்

விருத்தம் விகற்ப விளக்கிய காலை
............................................
அகவல் கழிநெடில் அடிகொள் விருத்தமே (தொ.வி.248)

என்பர் வீரமா முனிவர்.

விருத்தத்தில் தளை கட்டுப்பாடில்லை விருத்தத்தின் நெகிழ்வு பல்வகை மாற்றங்களை உருவாக்குவதோடு பல்வகை ஓசை நயங்களை உருவாக்குகின்றன. இஃது யாப்பியல் வகைகளில் எண்மையானவை. படைப்பாளர் தம் உள்ளங்களில் புதிய புதிய வடிவத்தை உருவாக்கு வதற்கேற்ற தன்மையுடையது.

**கலிவிருத்தத்தின் பொது விலக்கணம்**

அடிதோறும் நாற்சீரினைப் பெற்று நான்கடிகளைக் கொண்டிலங்குவது கலிவிருத்தம். நிலை மண்டிய ஆசிரியப்பாவைப்போல் இருக்கும். இப் பாவில் எல்லாத் தளைகள் வரும். ஆனால் கலிவிருத்தத்தில் கலித்தளைகள் வாராது. இஃது இரண்டிற்கும் வேறுபாடாகும்.

நாலொரு சீரானன் நடந்த அடித்தொகை
ஈரிரண்டு ஆகி இயன்றவை யரவும்
காரிகை சான்ற கலிவிருத் தம்மே (கா.பா.நூ. 79)

மேலும் நாற்சீர் நாலடி வருவது ஆயின்
ஒலியின் இயைந்த கலிவிருத் தம்மே (அவிநயம் நூ. 99)

''அளவடி நான்கின் கலிவிருத் தம்மே'' (யா.க. நூ. 87)

மேற்குறித்த நூற்பாக்கள் அடிதோறும் நாற்சீரினைப் பெற்று நான்கடிகளைக் கொண்டிலங்குவது கலிவிருத்தம் என்ற கருத்தினை உறுதிப் படுத்துகின்றன.

கலித்தளைத் தவிர, பிற தளைகளைப் பெற்று வருவதோடு நான்கடிகளைப் பெற்று முதலடியில் அமைந்த சீர்களினமைப்பையே மற்ற அடிகளில் அமைந்து; எல்லா வடிவங்களிலும் ஒத்த எதுகை அமைந்து வருவதோடு சீர்மோனைகள் அமைந்து இருக்கம். நேரசையில் தொடங்கின் பதினோர் எழுத்தும் நிரையகுசையில் தொடங்கின் பன்னிரு எழுத்துப் பெற்றும், எழுத்தெண்ணிக்கைப் பெறாமலும் துள்ளல் ஓசையின்றி வருதலே கலிவிருத்தமாகும். கலிவிருத்தத்திற்கும் இன்னிசை வெண்பாவிற்கும் சிறிய வேறுபாடு உண்டு. வெண்பாவிற்கு ஈற்றடி முச்சீர். வெண்டளைகள் தவிர பிறதளைகள் வாரா. கலிவிருத்தத்தில் ஈற்றடி நாற்சீர் பெற்று வரும். கலித்தளைத் தவிர பிறதளைகள் வரும். தரவு கொச்சகத்திற்கும் கலிவிருத்தத்திற்கும் வேறுபாடு யாதென்றால் தரவு கொச்சகத்தில் கலித்தளை வருவதோடு துள்ளல் ஓசை பெற்று வரும். கலிவிருத்தத்தில் கலித்தளையைத் தவிர பிற தளைகள் வரும். துள்ளலோசையின்றி பிற ஓசைகளைப் பெற்று வரும்.

**திருமந்திர யாப்பமைதி**

திருமந்திரம் கலிவிருத்தத்தில் ஆனது. இக்கலிவிருத்தத்தை இரு வகையாக வகுக்கலாம். அவை கலிவிருத்தம், கட்டளைக் கலிவிருத்தம் ஆகும்.

**கட்டளைக் கலிவிருத்தம்**

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே (திரு. 704)

இப்பாடல் நிரையசையில் தொடங்குவதால் அடிதோறும் பன்னிரண்டு எழுத்துக்கள் வருகின்றன. மூன்று நான்கடிகளில் அமைந்துள்ள முதற்சீர்கள் தலையாகெதுகைகளைப் பெற்றுள்ளன. ஒவ்வொரு அடிகளிலும் சீர் மோனைகள் அமைந்துள்ளன. ஈற்றுச் சீர் ஏகாரத்திலமைகிறது. இப்பாடலில் பதினான்கு இயற்சீர் வெண்டளைகளும் ஒரு வெண்சீர் வெண்டளைகளும் அமைந்து காணப்படுகின்றன. செப்பலோசை அமைந்துள்ளது. துள்ளல் ஓசை காண இயலவில்லை.

**கட்டளைக் கலிவிருத்தம்**

அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்று ஆகமம்
எஞ்சலில் விஞ்ஞகர் இருபத் தெண்மரும்
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே (திரு. 68)

இப்பாடல் நேரசையில் தொடங்குகிறது. அடிதோறும் பதினோர் எழுத்து அமைய வேண்டும். ஆனால் பன்னிரண்டு எழுத்துக்கள் மூன்றடிகளில் உள்ளன. ஈற்றடி மட்டும் பதினோர் எழுத்துக்கள் உள்ளன. ஒத்தமைப்பு இல்லை, இஃதோர் பிறழ்வு ஆகும். பதின்மூன்று இயற்சீர் வெண்டளை களும் இரண்டு வெண்சீர் வெண்டளைகளும் அமைந்துள்ளன. ஓசையை நோக்குகையில் செப்பலோசை அமைப்பைக் கொண்டுள்ளது. அடிகள் தோறும் சீர்மோனைகள் காணப்படுகின்றன. இவ்வகை யாப்பில் பல் பாடல்கள் உள்ளன.

திருமூலர் பாடல்களில் அடிகளில் அமைந்துள்ள எதுகை மோனை யமைப்பைக் காணலாம். கிராம மக்கள் எதுகை மோனை இல்லாமல் பேசுகின்றவரை எகனை மொகனை இல்லாமல் பேசுகிறார் என்று சொல்கின்றனர். இதன் மூலம் எதுகை மோனைக்கு எவ்வளவு சிறப்பினை நம் மக்கள் தருகின்றார்களென்பதையறியக்கூடும். ஒட்டக்கூத்தர் எதுகை மோனையின் சிறப்பிற்கு யானையின் மதநீரோடு ஒப்பிடுகின்றார். எதுகை மோனை நம் மக்களின் உயிரோடு கலந்த சொல்லாற்றலாகும். பீடுமிக்க எதுகை மோனைகளை நோக்குவோம்.

**தலையாகெதுகை**

நாள்தோறும் மன்னவள் நாட்டில் தவநெறி
நாள்தோறும் நாடி யவன்நெறி நாடானேல்
நாள்தோறும் நாடு கெடுமூட நண்ணுமால்
நாள்தோறும் செல்வம் நரபதி குன்றுமே (திரு. 996)

இப்பாடலில் அடிதோறும் தலையாகெதுகைகள் அமைந்துள்ளன. (நாள் தோறும்) என்ற முதற்சீர் அடிதோறும் வந்து ஓசையின்பத்தை நல்குகின்றது. இவர் தம் பாடல்களில் தலையாகெதுகைகள் மிகுதியாகவே உள்ளன. தலையாகெதுகைகள் இவர்தம் பாடல்களில் ஆளுமைப் பெற்று விளங்குகின்றன.

**இடையாகெதுகை**

பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடுஞ்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே (திரு. 515)

இப்பாடலில் அடிதோறும் முதற்சீரின் இரண்டாம் எழுத்து, தகரம் ஒன்றி வந்துள்ளதால் இடையாகெதுகையாயிற்று.

**பிறழ்வு**

செய்தான் அறியும் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகழும் மனிதர்கள்
மெய்யே யுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே (திரு. 503)

மூன்றடிகளில் முதற்சீரில் யகரம் எதுகையாக் வந்துள்ளது. அடிதோறும் முதற்சீரில் உயிர்மெய்க் குற்றெழுத்தே மோனையாக வந்துள்ளது. ஆனால் ஈற்றடியில் முதற்சீரில் முதலெழுத்து நெட்டெழுத்தாக வந்துள்ளது. அவ்வாறு வருவதால் சிறப்பன்று குற்றெழுத்திற்குக் குற்றெழுத்தும் நெட்டெழுத் திற்கும் நெட்டெழுத்து மோனையாக வருதலே சிறப்புடைத்து. இஃதோர் பிறழ்வாகும். இனி அடிகளில் அமைந்த சீர் மோனைகளைக் காணல்.

**மோனை**

**இணை மோனை**

''இடிஞ்சில் இருக்கவி எக்கெரி கொண்டான்'' திரு. 208

முதலடியில் முதற்சீரிலும் இரண்டாஞ்சீரிலும் ''இகரம்'' முதலெழுத்தாக வந்துள்ளதால் இஃது இணை மோனையாயிற்று.

**பொழிப்பு மோனை**

கல்லா தவருங் கருத்தறி காட்சியை (திரு. 297)

முதல்டியில் முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் ''ககரம்'' முதலெழுத்தாக வந்துள்ளதால் இது பொழிப்பு மோனையாயிற்று.

**ஒரூஉ, மோனை**

கற்றுஞ் சிவஞானம் இல்லாக் கலதிகள்: (திரு. 305)
முதலடியில் முதற்சீரிலும் நான்காம் சீரிலும் ''ககரம்''
வந்துற்ற தால் இஃது ஒரூஉ மோனையாயிற்று

**கூழைமோனை**

உடலாய் உயிராய் உலகம தாகி (திரு. 400)

முதலடியில் முதற்சீரிலும் இரண்டாம் சீரிலும் மூன்றாம் சீரிலும் ''உகரம்'' வந்துள்ளதால், இது கூழை மோனையாயிற்று.

**கீழ்க்கதுவாய் மோனை**

கண்டேன் கமழ்தரு கொன்றையி னான்அடி
கண்டேன் கரியுரி யான்தன் கழலினை (திரு. 272)

இரண்டாமடியில் முதல் சீரிலும் இரண்டாம் சீரிலும் நான்காம் சீரிலும் (ககரம்) மோனையாக வந்துள்ளதால் இது கீழ்க்கதுவாய் மோனையாயிற்று.

**மேற்கதுவாய் மோனை**

மத்தளி ஒன்றுள தானமி ரண்டுள
அடித்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள்ள (திரு. 231)

இரண்டாமடியில் முதல்சீரிலும் மூன்றாம் சீரிலும் நான்காம் சீரிலும் அகரம் மோனையாக வந்துள்ளதால் மேற்கது வாய் மோனையாயிற்று.

**முற்றுமோனை**

பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்

முதலடியில் உள்ள எல்லாச் சீர்களிலும் முதலெழுத்தாக (பகரம்) வந்துள்ளதால் முற்று மோனை யாயிற்று

இவர் தம் பாடல்கள் அனைத்தும் ஒலியின் இயைந்த கலிவிருத்தம்மே என்ற அவிநயனார் கூற்றிற்கிணங்கப் பல்வகை ஓசை நயத்தோடு பாடல்கள் மிளிர்கனிறன.

**பாட வேறுபாடு**

வெள்ளை வாரணர்தம் பன்னிரு திருமுறை வரலாறு என்ற நூலில் திருமந்திரப் பாடல் ஒன்றினைப் பக்கம் (536) கட்டுகின்றார். அப்பாடல்

"இலைநல வாயினும் எட்டி பழுத்தால்
குணநல வாங்கனி கொண்டுணலாகா – விலையான்
முலைநலம் கொண்டு முறுவலிக் கின்ற
வினையுடை நெஞ்சினை வேது கொளிரே"

இப்பாடலில் இருவித வெண்டளைகள் வந்துள்ளன. இரண்டாமடியில் மூன்றாம்சீர் நாற்சீராக வந்துள்ளது. அவ்வாறு வருதல் சிறப்பன்று. மேலும் மூன்றாம் சீரும் நான்காம் சீரும் புணர்கின்ற போது கலித்தளை வருகிறது. இத்தளை கலி விருத்தத்தில் வராது. இரண்டாமடியில் ஈற்றுச்சீர் தனிச்சொல் வந்துள்ளது. கலிவிருத்தத்தில் தனிச்சொல் வருவதில்லை. அவ்வாறு வருதல் பிறழ்வாகும். இவைபோன்ற செய்யுட்களை ஆரிடர்செய்யுள் என்பர். (மேலும் மூன்றடிகளில் லை என்ற எழுத்து எதுகையாக வந்துள்ளது) ஈற்றடியில் னை எதுகையாக வந்துள்ளது.

இந்நிலையில் பல பாடல்கள் உள்ளன. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கடிதம் பதிப்பித்த திருமந்திரம் என்னும் நூலில் உள்ள பாடலைக் காணல்.

இலைநல வாயினும் எட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே (திரு. 247)

இப்பாடலில் கலிவிருத்தத்திற்குரிய இலக்கணம் சிறப்பாக அமைந்துள்ளது. இரு பாடல்களை நோக்கும்போது வேறுபாடுகளைக் காண்கிறோம். இவ் வமைப்பில் பல பாடல்கள் பாடவேறுபாடுகள் அமைந்து காண்கின்றன.

திருமூலர் பாடல்களில் பாடபேதங்கள், வடமொழிக் கருத்துக்கள், வடசொற்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்"

தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யு மாறே" என்ற திருமூல நாயனார் மொழிப்படி அவர் தாமியற்றிய நூலைச் நெஞ்சையள்ளும் நிலையில் அமைத்துள்ளார்.

# 70. ஒன்பதாம் திருமுறையில் இறைவன் அருட் குணங்கள்

முனைவர் மு. வள்ளியம்மை, சிதம்பரம்.

எல்லா அண்டங்களிலும் அகத்திலும் அவற்றைக் கடந்து அப்பாற் பட்டுப் புறத்திலும், மன்னுயிர்களின் உள்ளத்திலும் ஒளி உருவாய் நின்று அக இருளையும், புற இருளையும் நீக்கும். இறைவன் சமயங்கடந்த தனிமுதற்பொருளாய் எல்லாக் கொள்கையினர்க்கும் பொதுவாய், பொது மன்றில் நடம்புரிகின்றான் என்பது அருளாளர் பலரது கொள்கை. ஒரு தெய்வக் கொள்கை உடையாரும், அக்கொள்கையை உடன்படாதாருமாகிய எல்லாச் சமயத்தார்களும் செய்யும் வழிபாடுகள் முழுமுதற் பொருளான இறைவனையே சென்று சேரும் என்பதும் அவர்களது கருத்தாகும். உயிர்களை உய்விக்கவே இறைவனின் அவதாரங்களும் ஐந்தொழில்களும் நிகழ்கின்றன. உயிர்ப்பொருட்டே குணமாய் நிற்கின்றான் இறைவன்.

**பதி என்றும் உள்ள நித்தியப் பொருள்**

அறிவாதார ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்ட சாத்திர நூல்கள் இறைவன் பிறப்பு இல்லாதவன் என்று கூறப்படுதற்குரிய காரணத்தை ஆராய்ந்து கூறுகின்றன. உலகம் தோற்றம் நிலை, அழிவு என முத்தொழில் படுதலால், அவற்றைத் தொழிற்படுத்துகின்ற இறைவன் தோற்றமும் நாசமும் இல்லாதவனாய் இருத்தல் வேண்டும்.

திருஞானசம்பந்தர் இறைவன் என்றும் நிற்றலையுடைய நித்தியப் பொருள் என்ற பொருளில்,

**நிலையார் தருநிம்லன்** (1:17-2)

**நினைக்கும் நிரந்தரன்** (சேந்தனார் 2:3)

என்பார் சேந்தனார்

**"பண்டு மின்றும் என்றும் உள்ள பொருள்"** (1:2)

என்ற திருவிசைப்பா, திருப்பல்லாண்டுத் தொடர்கள் இறைவன் என்றுமுள்ள நித்தியப் பொருள் என்பதை உணர்த்தும்.

திருமாளிகைத் தேவர் சேடா (3:2) என்று இறைவனை அழைக்கிறார். சேடா என்பதற்கு எல்லாப் பொருள்களும் அழிந்த காலத்தும் அழியாது எஞ்சி நிற்பவன் இவன் எனப் பொருளுரைப்பர். இஃது இறைவனின்

அழியாத தன்மையை உணர்த்துகிறது. எனவே இறைவன் என்றுமுள்ள நித்தியப் பொருளாவான்.

எங்கும் நிறைந்து என்றும் அழியாது நித்தியப் பொருளாய் விளங்கும் இறைவன் பல உருவங்களில் தோன்றும் வல்லமை உடையவன். இறைவன் தன்னை நினைப்பவர் மனதில் அவர் நினைத்த வடிவில் தோன்றி நிற்பவன் என்பதைக் கருவூர்த்தேவர்,

"கருதுவார் கருதும் உருவமாம்" (6:5)

என்று குறிப்பிடுகின்றார்.

'கோடியா மூர்த்தியும்' (2:8)

என்று சேந்தனார் இறை உருவம் எண்ணில்லாதது என்று குறிப்பிட்டுள்ளார்.

"எக்காலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே ஆம்"

(காரைக்-அற்புதத்திருவந்தாதி 33)

என்பர் காரைக்காலம்மையார்.

### பதியின் எண் குணங்கள்

நித்தியப் பொருளாய், எங்கும் நிறைந்து, பல வடிவில் தோன்றும் இறைவன் அழியாக் குணங்களையும் கொண்டவனாய் ஆன்றோரால் போற்றப்படுகின்றான்.

வினைவயத்தால் மாறி மாறி உடலெடுக்கும் உயிர்களுக்கு முக் குணங்கள் உண்டு. அவை தாமதம், இராட்சசம், சாத்விகம் என்பன. உயிர் களுக்கு இம்முக்குணங்களும் அவ்வச் சூழலுக்கு ஏற்ப மாறி மாறி வரும். இறைவனுக்கும் சில தனித்தன்மைகள் உண்டு. அவை குணங் களாகக் கூறப்படுகின்றன.

சத்தும், சித்தும் ஆகிய இவ்விரண்டோடு ஆனந்தம் என்பதையும் சேர்த்து இறைமைக் குணங்கள் மூன்று என உபநிடதங்கள் கூறுகின்றன. இவற்றை எட்டாக விரித்துக் கூறுவது சிவநெறி வழக்காகும். திருவள்ளுவர் தம் கடவுள் வாழ்த்துப் பாடலில்,

"கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை" (குறள்-9)

எனக் கூறுகின்றார். இதில் இறைவனை 'எண் குணத்தான்' என்னும் சொல்லால் குறிப்பிடுகின்றார் அவை 1. தன்வயத்தனாதல், 2. தூய உடம்பினனாதல், 3. இயற்கை உணர்வினன் ஆதல், 4. முற்றும் உணர்தல், 5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், 6. பேரருளுடைமை, 7. முடிவிலா

ஆற்றலுடைமை, 8. வரம்பிலா இன்பமுடைமை என்பனவாகும். ஒன்பதாம் திருமுறையில் இவ்வெண் குணங்கள் பற்றிய செய்திகள் வெளிப் படையாக இதே சொல்லில் கூறப்படவில்லை. ஆனால் அதற்கான குறிப்புகள் அமைந்துள்ளன.

**தன் வயத்தனாதல்**

எல்லாப் பொருள்களும் தன்னிடம் ஒடுங்கக் காரணமாய் இருப்பதோடு; அவைகளைத் தன்னுள்ளே ஒடுக்கிக் கொண்டு அவைகளுக்கு ஆதார மாகியும், அவ்வாறே தான் வேறு பொருளில் ஒடுங்குவதோ, துணை பெற்றுச் செயற்படுவதோ இல்லாமல் நிராதாரனாக நிற்கும் தன்மை யுடைமையே 'தன் வயமாதல்' ஆகும். 'தற்சுதந்திரம்' எனவும் இதனைக் கூறுவர். (ப.கங்கை, பெரிய புராணத்தில் முப்பொருள், ப.4) இது வடமொழியில் 'சுதந்திரத்துவம்' எனப்படும். திருநாவுக்கரசர்

'தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரன்'

– (தேவாரம் 6:98:1)

என்று சுட்டுவர்.

இறைவன் விடம் உண்டது, எமனை உதைத்தது ஆகியவை பற்றிக் கூறப்படும் திருவிசைப்பாத் தொடர்கள் இறைவனின் தன் வயமுடைமையை விளக்கும்.

"காமனைக் காலன் தக்கன்மிக் கெச்சன்
படக்கடைக் கணித்தவன் அல்லா" – 2:11

என்ற திருமாளிகைத் தேவரின் திருவிசைப்பாவும்

"வேலை யார் விடம் உண்டுகந் தீர்" – 1:3

என்று சேதிராயரும் இந்நிகழ்ச்சிகளைக் கூறுவர்.

சிவபெருமானின் அற்புதச் செயல்கள் பலவும் இத்தலைமைத் தன்மையைக் குறிப்பனவாகும். காமனை எரித்தது, நஞ்சை உண்டது; தாருகாவனத்து முனிவர்களின் கொடுஞ்செயலால் தாக்காது நின்றது போன்ற வரலாறுகள் பலவும் அவன் பிறர் வயப்படாமையை எடுத்துக் காட்டும். காலனைக் காய்ந்தது, நான்முகனின் சிரம் கொய்தது, சிவபெருமானை விடுத்து அமுதம் பெறச் சென்ற தேவர்கட்கு ஆலகால விடம் கிடைத்தது போன்ற வரலாறுகள் பலவும் அவனது இச்சைப்படி யாவும் நிகழ்தலாகிய தன்வயம் உடைமையை எடுத்துக் காட்டுவனவாகும்.

**தூய உடம்பினன்**

தூய உடம்பினன் என்பது மாயை என்று சொல்லப்பெறும் அழுக்குக் கலந்த அல்லது அழுக்கினால் ஆக்கப் பெற்ற உடம்பு இல்லாதவன். திருவருளையே வடிவமாக உடையவன். தூய்மையையே கடவுள் தன்மை

எனக் கொண்டு தூய்மையையே தன்னுடைய உருவமாகக் கொண்டவன். இது வடமொழியில் 'விசுத்த தேகம்' எனப்படும். தூய்மையுடையவை புனிதப்படுத்தப்பட்டவையாகக் கருதுவது வழக்கம். அது புண்ணியம் செய்த வடிவாகும். இதன் அடிப்படையில் கருவூர்த்தேவரும், சேந்தனாரும் தம் திருவிசைப்பாவில்,

"புனிதர்பொற் கழலர் புரிசடா மகுடர்
புண்ணியர்" (9:10)

'புனிதன்' (சேந்தனார் 1:6) என்றும் கூறுவர்.

இது இறைவனின் தூய உடம்பினைக் குறிப்பதாகும்.

**இயற்கை உணர்வினன்**

இயற்கை உணர்வினன் என்பது பிறரோடு பொருந்திப் பழகுதலாலும், ஆன்றோர் நூல் கற்றலாலும் ஆசிரியன் அறிவுறுத்தலாலும் அறிவுடையோராய் விளங்குகின்ற ஆன்மாக்கள் போலல்லாது அறிவே உருவாய்த் தன்னியல்பிற் பிரகாசித்தலாகும். இதனை வடமொழியில் 'அநாதி போதம்' என்பர். கண்டராதித்தர் இறைவனை 'ஞானக் கொழுந்து' (1:4) என்று போற்றுவது அவன் இயற்கை உணர்வினன் என்பதை உணர்த்துகிறது.

**முற்றும் உணர்தல்**

ஞானமாகி நிற்கும் இறைவன் உயிர்கள் பொருட்டு அறியும் நிலையை மேற்கொள்ளுகிறான்.

"நன்றெலாம் ஞான சக்தியான்
நயந்து அறிவன் நாதன்" - சிவஞான சித்தியார் 83

இறைவன் அனைத்தையும் ஏககாலத்தில் தானாகவே உணர்பவன். நூல்களாலும் உணரப்படாத உணர்வுடையவன். இதனை வடமொழியில் சர்வஞ்ஞதை என்பர்.

**இயல்பாகவே பாசங்கள் இன்மை**

இயற்கையாக விளங்குவதும், எல்லாவற்றையும் ஒருங்கே உணர்வதுமான இறைவனது அறிவு, பாசத்திற்கு மறுதலையான நுண்ணிய தன்மை உடையது. இறைவனது அறிவைப் பாசம் எவ்வாற்றானும் மறைக்க இயலாது.

பாசமாம் பற்றறுக்கும் பரமனிடம் பாசம் பொருந்துதல் இல்லை. இது வடமொழியில் 'நிராமயம்' எனப்படும்.

'நிமலத்திரள்' (திருவாலி 4:6) 'முத்தர்' (புருடோத்தம நம்பி 2:8) என்று திருவிசைப்பாவில் இறைவனைக் குறிப்பிடுவது அவன் இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கியவன் என்பதை உணர்த்துகிறது.

**பேரருளுடைமை**

குறைவில்லாத ஆற்றல் என்பதே இதன் பொருளாகும். இங்கு ஆற்றல் என்பது அருளைக் குறிக்கும். இறைவன் பேரருளுடைமையால் எல்லா உயிர்களிடத்திலும் எப்பொழுதும் குறையாத கைமாறற்ற பெரும் கருணை புரிவான் என்பர். இதனை வடமொழியில் 'அலுப்த சக்தி' என்பர்.

"கருணாலயா" (2:7)

"கரையிலாக் கருணை மாகடல்" (1:2)

"உயிர்மேல் அருள்சொரிதரும் உமாபதி" (சேந் 1:11)

"தாயின் நேர் இரங்குந் தலைவ" (கருவூரர் 1:3)

என்பன போன்ற திருவிசைப்பாத் தொடர்கள் இறைவனுடைய பேரருளுடைமையை உணர்த்துகின்றன.

**முடிவிலா ஆற்றலுடைமை**

முடிவிலா ஆற்றலுடைமை என்பது அறிவித்தாலன்றித் தாமே அறிய மாட்டாத சீவர்களையும், அசைவித்தாலன்றித் தாமே அசைய மாட்டாத பிரபஞ்சங்களையும் ஒரு காலத் தொருங்கே அறிவித்தற் பொருட்டும், வேண்டப்படுவதாகிய ஒரு பேராற்றல் உடையனாதல் என்பர் (மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி ப.10) இது இறைவனது ஆற்றல் அளவற்றது, எல்லையற்றது என்பதைக் குறிக்கும். இதனை வடமொழியில் 'அநந்த சக்தி' என்பர்.

"பல்லாண் டென்னும் பதங்கடந்தான்" (1:4)

"அண்டங் கடந்த பொருள்" (1:2)

எனவரும் திருப்பல்லாண்டுப் பாடலடிகள் இறைவனின் முடிவிலா ஆற்றலைப் புலப்படுத்துவனவாகும்.

**'எண்ணிறந் தெல்லை யிலாதானே'** **- சிவபுராணம்**

**'இன்னுழை கதிரில் துன்அணுப் புரையச்**
**சிறிய வாகப் பெரியோன்'**

**(மாணிக்கவாசகர் திருவாசகம் 1:24, 3:5-6)**

என்று மாணிக்கவாசகர் அருளிச்செய்தமை ஒப்பு நோக்கத் தகும்.

**வரம்பிலா இன்பம் உடைமை**

உயிர்களிடத்துத் தோன்றி அழியும் சிற்றின்பம் போலல்லாமல் நிறைந்த பேரின்பமே தன் தன்மையாம் உடைமை. இறைவன் எல்லாவற்றானும் யாதொரு குறையுமில்லாதவன் என்பதைக் குறிக்கும். இது வடமொழியில் 'திருப்தி' எனப்படும்.

இறைவன், உயிர் ஆகிய இரண்டனுள் உயிர் இயல்பாக்வே பாசங் களிலிருந்து பிற துணையில்லாமல் விடுபடும் ஆற்றல் இல்லாத சத்துப் பொருளாக அமைகின்றது.

சித்து-அறிவு; இறைவன் தானே அறிவான் அது மட்டுமேயன்றி முற்றும் உணர்தலையுடையவன். அறிவிக்க அறியும் காலத்தும் முழுமையாக அறியும் ஆற்றல் இல்லாதவை.

ஆனந்தம் என்ற தன்மையிலும் வேறுபாடு உண்டு. இறைவன் இன்ப வடிவினன். ஆனந்தமே அவன்.

''தேறலின் தெளிவே சிவபெருமானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே என்னுடைய அன்பே'' - திருவாசகம் 386

என்பர் மாணிக்கவாசகர். அவன் அளிக்க இன்பத்தை அனுபவிப்பவை களே உயிர்கள். இவ்வின்ப விழைவை,

''அளவில்லாதோர் ஆனந்த வெள்ளப் பொருள்'' (1:2)

''பாலும் அமுதமும் தேனுமாய்
ஆனந்தம் தந்துள்ளே பாலிப்பான்'' (2:11)

என்று சேந்தனார் போற்றுவது அவனின் வரம்பிலா இன்பமுடைமைப் பண்பை உணர்த்தும்.

உயிர்க்குள் உயிராய், அறிவுக்குள் அறிவாய் விளங்கும் இறைவன் உலகத் தோற்றத்திற்கு நிமித்த காரணன்; உலகமாய் நிற்பவன், உலகைக் கடந்தும் நிற்பவன்; உலகத்திற்கு உயிராய் நிற்பவன்; இத்தகு இறைவன் குணங்களைக் கடந்தவன். மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய் (4:10) இருக்கும் இறைவன் உலகின் தோற்றமும், விரிவும், நிலைபேறும், அழிவும் கருதி எண் குணங்களையுடையவனாய் இருக்கிறான். எனவே மேலே கூறப்பட்ட எண்குணங்களும் உயிர்களாகிய நம்மை உய்விக்கவும், ஆன்மா வேறு இறைவன் வேறு எனக் காட்டுவதாகவும் அமைகின்றன.

# 71. திருமந்திரம் காட்டும் திருக்கூத்து

**முனைவர் வை. விநாயகம், அண்ணாமலைநகர்.**

உயிர்கள் பால் அமைந்த பேரருள் காரணமாக இறைவன் திருக் கூத்தினை அல்லும் பகலும் ஆடிக்கொண்டிருக்கிறான். ஆடற்கலைக்கு முதலாசிரியனாகக் கருதப்படுபவன் சிவனே; அவிநயமுத்திரைகளைக் கண்டசிவன், தன் சீடர்களுள் ஒருவராகிய தண்டு என்பவருக்கு ஆடற் கலை நுட்பத்தைக் கூறியதாகவும், தண்டு தாம் கற்ற கலைநுணுக்கத்தைப் பரதனுக்கு விளக்கியதாகவும், அந்தப் பரதனே நாட்டிய சாத்திரத்தை யுண்டாக்கியதாகவும் கூறுவர். தன் ஆசிரியர் (தண்டு) நினைவாக ஆடவர் ஆடும் ஆடற்கலையினைத் தாண்டவம் என்றே பரதன் பெயரிட்டிருக் கலாம். இத்தகைய தாண்டவம் 108 நிலைகள் ஆடப்பட்டதென்பர். தில்லையம்பலத்திலே ஆடலியற்றும் ஆடவல்லானுக்குத் தனிப்பெருஞ்சிறப்பு உண்டு.

ஆலகாலமுண்ட திருநீலகண்டன் செம்மேனியம்மானாக மாணிக்க வண்ணனாகத் திகழ்கிறான்.

> ''மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
> மாணிக்கத்துள்ளே மரகத மாடமாய்
> ஆணிப்பொன்மன்றில் ஆடுந்திருக்கூத்தைப்
> பேணித் தொழுதென்னபேறு பெற்றாரே'' (131)

மாணிக்கம் சிவந்த ஒளிச்சுடர் வீசும், மரகதம் பச்சை நிறமுடையது, சிவபெருமான் சிவந்த திருமேனி உடையவன் எனவே மாணிக்கம் என்றார். பசுமை நிறம் கொண்ட உமையை மரகதம் என்றார், சிவனுள் சக்தி ஒன்றி இருக்கிறது. சதாசிவம் சக்தியும் சிவமுமாகக் காட்சி தருகிறது. இதையே மாணிக்கத்துள் மரகதச் சோதியாய் என்றும் மாணிக்கத்துள்ளே மரகதமாடமாய் என்றும் கூறினார். சக்தியும் சிவனும் பொன்னம்பலத்தில் ஆடும் ஆனந்த நடனம் காணப்பெற்று, வணங்கித் தொழுதவர்கள், எத்தனையோ பேறு பெற்றவர்கள்; புண்ணியம் செய்தவர்கள் ஆவர்.

**திருக்கூத்து தரிசனம்**

சிவபெருமானுக்குத் திருமேனி, சிவசக்தி விண்ணும், மண்ணும் என எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது சிவசக்தி சொரூபமே. எனவே

காணும் இடமெல்லாம் சிவசக்தி தோற்றம். எங்கும் சிவசக்தி ஆனதால் எல்லா இடமும் சிதம்பரமே. எங்கும் இறைவன் திருநடனமே. இப்படி எங்கும் சிவசொருபமாக இருப்பதால் எங்கும் எல்லாவற்றிலும் பொருந்தி யிருக்கும் சிவபெருமான் அருள்விளையாட்டு திருநடனம் படைத்தல், காத்தல், அருளல், அழித்தல், மறைத்தல் என்னும் ஐந்தொழிலுமே அத் திருக்கூத்து. இறைவன் ஓயாது நடனமாடிக்கொண்டிருக்கும் இடம் இருதயஸ்தானம் என்றும் கூறுவர்.

"எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவன் அருள்தன் விளையாட்டதே" - 2722

என ஆடவல்லானது அழகிய திருநடனக் காட்சியை நம்முன் காட்டுகிறார்.

இறையருள் பெறும் வழிதேடித் திரிந்த நான்; அவன் நடனக் குறிப்பை, என் உள்ளத்துள்ளே கண்டு என் கவலை ஏக்கம் எல்லாம் நீங்கப் பெற்று இறையருள் உற்றேன் என்பார். ஆடற்காட்சியானது காண்போர் கண்வழியே புகுந்து நெஞ்சத்தில் நிலைகொண்டு, அதுவே தானாக அமைந்து விடுவது ஆடற்கலையின் நுட்பமாகும்.

உலகில் உயர்ந்து விளங்கும் மேருமலைபோல உடம்பில் நடுநாடி உள்ளது. மலையின் இருபக்கம் போல நடுநாடியின் இருபக்கமாக இடைகலை பிங்கலைநாடிகள் விளங்குகின்றன. வானின் கீழ் பூமியோடு தொடர் பற்றுத் தனியாகக் கடல்நீர் சூழ்ந்த இலங்கைத் தீவு இருப்பதைப்போல; இடகலை பிங்கலை இருநாடிகளும் இதயமாகிய தில்லை வனத்தை வளைத்து உச்சித்தலையில் சென்று சுழுமுனையில் கூடுவதால், இதயமும் தலையும் சிவபூமியாகும். இதயத்தில் இறைவனை நினைந்து வழிபடுவது கிரியை நெறி உச்சித்தலையில் வைத்துப் பரம்பொருளை வழிபடுவது ஞானமார்க்கம்.

நெற்றிக்கு நேராக இருபுருவங்களுக்கும் இடையே புருவமத்தியில், மனதை ஒருமுகப்படுத்திப் பொருந்தச் செய்து, அகக் கண்ணால், உற்றுப் பார்த்து தியானிக்கிறபோது, ஒளியாய் வெளிப்படும் சிவசிவ என்னும் சிவமந்திரம். இதுவே சீவன்கள் பற்றுக்கோடாகப் பற்றிக்கொண்டு நிற்க வேண்டிய பரமன் இருக்குமிடம் இதுவே சித்தம் விளங்கிச் சிவமாகும் சிற்றம்பலம் என்று உணர்ந்து நானதில் கலந்தேன் எனத் திருமூலர் தம் அனுபவ நிலையைக் கூறுவர்.

கூத்தபிரான் படைத்தல், காத்தல், அருளள், அழித்தல், மறைத்தல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்தல் போலவே ஐந்து வகைக் கூத்துக்களை

அருளுகின்றார். சிவானந்தக்கூத்து சுந்தரக்கூத்து, பொற்பதிக்கூத்து, பொற்றில்லைக்கூத்து, அற்புதக் கூத்து ஆகியன.

**1. சிவானந்தக் கூத்து**

உயிர்கட்குப் பேரின்பப்பெருவாழ்வை நல்க இறைவன் செய்தருளும் கூத்தாகும். அண்டசராசரங்களும் ஆட இயங்குதிணைப் பொருள், நிலைத் திணைப் பொருள் ஆகிய அனைத்தும் இறைவன் ஆட ஆடும்.

**2. சுந்தரக் கூத்து**

சதாசிவ தத்துவத்தின் உச்சியின்மேல் கண்டங் சூரியனாய் அருளே திருவுருவாய் உமையம்மையார் கண்டுகளிக்க ஆடும் கூத்து இது. இச்சுந்தரக்கூத்து இருப்பத்திரண்டு வகைப்படும்.

**3. பொற்பதிக்கூத்து**

சிவபெருமான் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, உச்சி ஆகிய ஐந்து திக்குகட்கும் ஐந்து முகங்கள் கொண்டு பேரின்ப வடிவாய் நடமாடுவதைப் பொற்புறு நடனம் என்பர். இக்கூத்து பொறிபுலனடங்கி நன்னெறிச் செல்லாதாரை சிவகுருவாய் எழுந்தருளி திருவடிசூட்டி அடங்கி ஒழுகச் செய்யும் இயல்பினது.

**4. பொற்றில்லைக்கூத்து**

சிவபிரான் ஆடுதலாய திருவுள்ளக்குறிப்பு நேர்பட, நாதாந்த நடனம் ஆடினான். மறைச்சிலம்பொலியும் சிலம்பொலியின் விரிவாகும். திருமுறைப் பாடல்களும், அப்பாடல்களின் மறைபொருளாய் விளங்கும் திருநடனங்களும் திருவருளால் நிகழ்வன. இவ்வருளிச் செயல்களால் இறைவன் குருவாகி நிற்கிறான்.

**5. அற்புதக் கூத்து**

ஆடும் கூத்தப்பிரானின் சிரசின்கண் உச்சிக்கும்மேல் பன்னிரண்டு விரற்கிடை உயிர்ப்பு எழுந்தாடும். நாதமுடிவாகப் பெம்மான் தில்லை மன்றிலாடுவான். சிவன் பேரறிவொளி வடிவானவன். மாயை மாமாயைக் கடந்து நின்ற மெய்யுணர்வினர் அறிவுக்கண் கொண்டு காணுமாறு தில்லையில் கூத்தாடுகின்றான். எண் திசைகளும் கைகளாகவும், ஞாயிறு திங்கள் தீ ஆகிய மூன்றும் முக்கண்களாகவும், நின்று நடனம் புரிவான். கூத்து நிகழும்போது குடமுழவு, குதுல் முதலியவற்றின் ஓசை முதலியன யாவும் ஓமென்று ஒலிக்கும்.

இன்னிசைக் கருவிகள் பல இயங்கவும், தாள இலயம் பொருந்தி நிற்கவும் நந்தி முழுவம் இயம்ப தமிழ் மறைகளைப் பண்ணோடு

அடியவர்கள் பாட பதஞ்சலி வியாக்கிர பாதர் இருவரும் காண இறைவன் ஐந்தொழில் நிகழ்த்தும ஆனந்தக் கூத்து ஆடியருள்கின்றான்.

**உடுக்கை ஒலி**

இறைவன் இடைவிடாது இதயத்தாளத்தில் ஆடிக்கொண்டே இருக்கிறான். அவன் ஆடலுக்கு ஏற்ப உடுக்கை ஒலி கேட்கிறது. இந்த உடுக்கை ஒலியோடு என் உள் நாடியில் செல்லும் உயிர் மூச்சும் கலக்க நான் என்னுள்ளே வேத ஆகமங்களின் விளக்கங்கள் எல்லாம் அறியலுற்றேன்

"ஆடிய காலில் அசைகின்ற வாயுவும்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி எழுகின்ற வேத ஆகமங்களும்
நாடின் உள்ளாக நான் கண்டவாறே" திரு. 2317

உடுக்கை ஒலி, ஒம், ஒம், ஒம் என்று ஒலி எழுப்பும் என்றும், உலகத் தோற்றமும், ஒடுக்கமும் அதனுள் அடங்கும் என்றும் கூறுவர்.

**சிவபரம்பொருள் தில்லைக்காளியுடன்**

திருநடனம் புரிந்தார், பொன்மலையான மேருமலையில் ஆடினார், பேய்களுடன் சுடலையில் ஆடினார், பூமியில் ஐந்து சபைகளிலும் ஆடினார். விரிந்து பரந்த நீரிலும், நெருப்பிலும், காற்றிலும், வானவெளி யிலும் ஆடினார். உலகில் ஆன்மாக்களின் இயக்கம் நாளும் நல்லபடி நடக்க தில்லைப்பொன்னம்பலத்தில் தேவாதிதேவன் ஆடல் புரிகின்றான்.

காளியோடு ஆடி கனகாசலத்து ஆடிக்
கூளியோடு ஆடி குவலயத்தே ஆடி
நீளிய தீகால் நீள்வான் இடைமுடி
நாள்உற அம்பலத்தே ஆடும் நாதனே - 2746

என ஆடவல்லான் நடனம் ஆடும் இடங்களைத் திருமூலர் கூறுகிறார்.

# 72. திருமந்திரத்தில் புராணச் செய்திகள்

முனைவர் கு. விஜி, திருநெல்வேலி.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் வைசத்திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகும். இந்த திருமந்திரம் பல்வேறு வகையான கருத்துக்களை தன்னகத்தே கொண்டுள்ளது. திருமந்திரத்தின் இண்டாம் தந்திரத்தில் ''பதிவலியில் வீரட்டம் எட்டு'' என்ற பகுதியில் உள்ள புராணச் செய்தி களை இக்கட்டுரையில் காண்போம்.

**புராணச் செய்திகள்**

நினைவிற்கு எட்டாத காலத்தில் கீழ் உலகத்திலும் மேல் உலகத்திலும் நடந்த உண்மை, புனிதம் என்று நம்பப்படும் தெய்வங்களைப் பற்றிய கதைகளையே புராணம் என்கிறோம். புராணம் என்பதற்கு கிரியாவின் தற்கால தமிழகராதி, ''கடவுளரை முக்கியப் பாத்திரங்களாகக் கொண்டு. ஒழுக்கத்தையும் நீதியையும் நிலைநாட்டும் விதத்தில் பழங்காலத்தில் நடந்ததாக விவரித்துக் கூறப்படுவது'' என்று விளக்கம் அளிக்கிறது. ஒவ்வொரு புராணச் செய்திகளும் மக்களை நல்வழிப்படுத்த நீதி கருத்துக் களை வலியுறுத்துவதாக அமைந்துள்ளன. இவை இறைவனின் புகழையும் பெருமையையும் எடுத்துரைப்பனவாக உள்ளன.

**திருமந்திரத்தில் புராணச் செய்திகள்**

சிவபெருமான் எட்டு இடங்களில் நடத்திய வீரச் செயல்களை திருமூலர் எடுத்துரைக்கிறார்.

**1. அந்தகாசுரனை அழித்தல்**

கொடிய எண்ணம் உடைய 'அந்தகன்' என்ற அரக்கனை இறைவன் சூலத்தால் அழித்தார் என்பதை திருமூலர்

**''கருத்து உறை அந்தகன் தன் போல் அசுரன்**
**..............................................................**
**குருத்து உயர் சூலம் கைக் கொண்டு கொன்றானே''**

என்கிறார்.

இந்தப் புராணச் செய்தி மூலம் 'அறியாமையான' அந்தகாசுரனை 'ஞானம்' என்ற சூலம் மூலம் அழித்துவிட்டார் என்ற மறைபொருளை விளக்குகின்றார்.

**2. பிரம்மனின் தலையைக் கொய்தல்**

பிரம்மனுக்கும் சிவனுக்கும் ஐந்து தலை உண்டு. எனவே பிரம்மன் தனக்கும் சிவனுக்கும் எந்த வேறுபாடும் கிடையாது இருவரும் சம அந்தஸ்து உடையவர்களே என்று பெருமைபாராட்டிக் கொண்டிருந்தார். இதை அறிந்த சிவன் பிரம்மனின் அகந்தையை அழிக்க எண்ணி ஒரு தலையை கிள்ளி எடுத்து விடுகின்றார். பிரம்மன் நான்கு தலையுடன் மயங்கி விழுந்து விடுகின்றனர். படைப்புத் தொழில் நின்றுவிடாமல் இருக்க வேண்டும் என்று சிவனே மீண்டும் உயிர் கொடுக்கின்றார்.

இதை திருமூலர்,

''..........................................பிரசாபதியைத்
தலையைக் கடிந்திட்டுத் தான் அங்கியிட்டு
நிலை உலகுக்கு இவன் வேண்டும் என்று எண்ணித்
தலையை அரிந்து இட்டுச் சந்தி செய்தானே''

என்கிறார்.

பிரம்மனின் தலையை கொய்ததன் மூலம் ஆணவத்தை அழிப்ப தாகவும் மீண்டும் பிரம்மனுக்கு உயிர் கொடுப்பதன் மூலம் வீடுபேறடைய அவரே உதவுவதாகவும் கூறியுள்ளார். இதன் மூலம் ஆணவத்தை அழித்தால் வீடுபேறு அடையலாம் என்று விளக்குகின்றார்.

**3. அச்சுதனை அழித்தல்**

மும்மூர்த்திகளுள் ஒருவரான விஷ்ணுவிற்கு இவ்வுலக இச்சையின் மீது உண்டான பற்றினை சிவபெருமான் நீக்கியருளினார். விஷ்ணு பிரானின் பத்து அவதாரங்களில் ஒருவரான கிருஷ்ணனின் சிற்றின்ப ஆசையினைப் போக்கி அவரை நல்வழிப்படுத்தியுள்ளார். இதை திருமூலர்,

''பொங்கும் சினத்துள் அயன்தலை முன்அற
அங்கு அச்சுதனை உதிரம் கொண்டானே''

என்கிறார்.

இறைவனை வழிபடுபவர்களுக்கு இறைவன் அவர்களிடம் உள்ள இவ்வுலக ஆசையை அழித்து நெறிப்படுத்துகின்றார். ஆசையை அழிப்பதன் மூலம் மனிதன் முக்தி அடையும் வழியினைக் காட்டுகின்றார்.

**4. சலந்தராசுரனை அழித்தல்**

சலந்தராசுரன் என்ற அரக்கனை அழித்த வரலாற்றை திருமூலர்

''....................................அருமறை ஓதிபால்
பொங்கும் சலந்தரன் போர் செய்ய நீர்மையின்
அங்கு விரல் குறித்து ஆழிசெய்தானே''

என்கிறார்.

நீரை முகமாக உடைய சலந்தராசுரன் வேதங்கள் ஓதி இறைவனிடம் வரத்தைப் பெற்றுக்கொண்டான். இறைவன் தன் தொண்டர்கள் என்ன வரம் கேட்டாலும் அவர்களுக்கு அருள் புரிந்து அவர்கள் வெற்றிபெறச் செய்வான். அவனே அவர்கள் தவறு செய்தாலும் தண்டிக்கத் தயங்குவதில்லை என்பதனை இதன் மூலம் விளக்குகின்றார்.

### 5. முப்புரத்தை அழித்தல்

தராகாட்சன், கமலாட்சன், வித்யுந்மாலி என்ற மூன்று அரக்கர்கள் கொண்டிருந்த முப்புரங்களை எரித்து அழித்தார். இதில் சிவபெருமான் தேவர்களின் துணையின்றி தன்னுடைய புன்னகையாலேயே அழித்து விட்டார். இதை திருமூலர்

"............செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்"

மும்மலங்களான ஆணவம், சன்மம், மாயை என்பனவற்றை குறிப்பிடுகின்றார். ஒரு மனிதனின் நல்வினை தீவினைகளுக்கு இவையே காரணமாக அமைகின்றது. இவற்றை அழிப்பதன் மூலம் மனிதன் முக்தி அடையும் வழியினைக் காட்டுகின்றார்.

### 6. கயமுகாசுரனைத் தோலுரித்தல்

இறைவன் சுயமுகாசுர சங்கரனின் தோலை உரித்த வரலாற்றை திருமூலர்.

"முத்தீக் கொளுவி முழங்கு எரி வேள்வியுள்
அத்தி உரிஅரன் ஆவது அறிகிலார்"

என்கிறார்.

யானையின் கரிய நிறமுடைய தோலை உரித்து அதை வெண்மை யாக்குவது மக்களின் அறியாமை இருளைப் போக்குவது ஆகும். இதன் மூலம் அவர்களுக்கு இறைவன் புற இருளை அகற்றி அக ஒளியைத் தரவல்லவன் என்கிறார்.

### 7. எமனை மிதித்தல்

மார்கண்டேயன் ஒரு சிவபக்தன். அவனது பதினாறாவது வயதில் எமன் அவனை அழிக்க வரும்போது சிவலிங்கத்தை இறுகக் கட்டி அணைத்துக் கொண்டான். இதனால் எமனால் மார்க்கண்டேயனின் உயிரை எடுக்க முடியவில்லை. எனவே எமன் தன்னுடைய பாச கயிற்றை வீசினான். இதனால் சிவன் கோபமடைந்து எமனை மிதித்து தன் பக்தனைக் காக்கிறார். இதை திருமூலர்

"கால் உற்று காலனைக் காய்ந்து அங்கியோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே"

என்கிறார்.

இறைவன் முழுமையாகத் தன்னைச் சரணடைந்தவர்களுக்கும் மெய்யன்பர்களுக்கும் காவலனாக இருப்பார் என்பதை வெளிப்படுத்தி யுள்ளார்.

**8. காமனை அழித்தல்**

சூரபத்மனின் அழிவிற்காகவும் முருகப்பெருமானின் பிறப்பிற்காகவும் தேவர்கள் சிவபெருமானை, வேண்டினார்கள் அப்போது அவர் தவத்தி லிருந்தார். அவர் தவத்தை கலைக்க வேண்டி தேவர்கள் காமனை ஏவினர். தவம் கலைந்த சிவபெருமான் தன் கோபக்கனலாகிய நெற்றிக்கண் பார்வையால் காமனை எரித்து அழித்துவிட்டார்.

இதை திருமூலர்

"திருந்திய காமன் செயல் அது அழித்து அங்கண்
அருந்தவ யோகம் கொறுக்கை அமர்ந்ததே"

என்கிறார்.

இறைவன் முன்பு வினைகள் இவ்வுலக இச்சைகள் பாசங்கள் எல்லாம் மறைந்து விடும் என்பதனை விளக்கியுள்ளார்.

சொல்லக்கூடிய கருத்துக்கள் எளிதில் மக்களைச் சென்று சேர வேண்டும் அனைவருக்கும் எளிதில் புரிய வேண்டும் என்பதை கருத்தில் கொண்டு நீதிகருத்துக்கள். புராணச் செய்திகள், புராணக் கதைகள் வாயிலாக விளக்கப்படுகின்றன. இதுபோலவே திருமூலரும் தன்னுடைய கருத்துக் களை மக்களிடையே பெரும்பாலும் புழக்கத்தில் உள்ள புராணக் கதைகளின் மூலமே எடுத்துரைக்கின்றார்.

# 73. மகாவாக்கிய ஆராய்ச்சி

முனைவர் ந. வெங்கடேசன், சிதம்பரம்.

தமிழில் உள்ள சித்தாந்த நூல்களில் ஆழமும், அழுத்தமான பொருளும், திட்ப நுட்பமும் வாய்ந்த்து திருமந்திரம். இது திருமூலரால் இயற்றப் பட்டது. 3047 பாடல்களைக் கொண்டது. சைவத்திருமுறைகளில் 10-ஆம் திருமுறையாக அமைந்தது. தமிழல் உள்ள முதல் ஆகமநூல் இதுவே எனலாம். இந்நூலினின்றே சைவ் சித்தாந்தத் தத்துவங்கள் தோன்றி யுள்ளன. தம் நூலை ஓர் ஆகமநூல் என்ற திருமூலரே கூறுகிறார்.

"தந்திமதிபுனை அரனடி நாடொறும்
சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேனே"

என்பது அவர் வாக்கு. எனவே தான் திரு.தி.வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள்.

"இந்நூல் சைவசித்தாந்தக் கொள்கைகளை உணர்த்தும் பழைய ஆகமநூல் என்பதும், இதற்கு வடமொழியில் முதல் நூல் இல்லை என்பதும் அறியற்பாலவாம்" என எழுதுவர்.

"சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் பிறக்குமுன்பே இந்நூலே சைவசமய முழு முதல் நூலாக ஆட்சி செலுத்தியது. தமிழன் கண்டயோக நெறியினை நவிலும் முறையான நூல் இஃதொன்றே என்பர் இலக்கிய ஆய்வாளர் மது ச. விமலானந்தம்."

திருமந்திரத்தில் பல ஆராய்ச்சிக் கருத்துக்கள் திருமூலரால் கூறப் பட்டுள்ளன. அவற்றுள் மகாவாக்கிய ஆராய்ச்சி என்பதைப் பற்றி இங்கு ஆராய்வோம்.

**திருமூலரும் பேருரையும்**

வடமொழியில் மகாவாக்கியம் என்பது வடமொழியில் வேதாந்தப் புகழ் பெற்ற நான்கு வாக்கியங்களைக் குறிக்கும். இவற்றுள் முதன்மை பெற்றது மகாவாக்கியம்.

வடமொழியில் ரிபுகீதை நான்கு மகாவாக்கியங்களைக் கூறுகிறது. அவை,

**"பெருமைமிகும் இருக்குமறை முடியில் உள்ள**
**பிரஞ்ஞானம் பிரமம் எனும் வாக்கியம் ஒன்றாம்;**

இருண்மருவா எசர்வேத முடியில் உள்ள
இலகும் அகம்பிரமாஸ்மி வாக்கியம் ஒன்றாம்;
மருள் மருவா சாமமறை முடியில் உள்ள
மகத்தான தத்துவமகி வாக்கியம் ஒன்றாம்
அரிய அதர் வணவேத முடியில் உள்ள
அயன் ஆன்மா பிரமம் எனும் வாக்கியம் ஒன்றாம்''

என்னும் பாடலால் உணர்த்தப்படுகின்றன.

இவற்றிற்கு ரிபு கீதை பின்வருமாறு விளக்கம் தருகின்றது.

இவற்றுள், பிரஞ்ஞானம், பிரமம் என்னும் மகாவாக்கியம், 'பிரஞ்ஞானம்' என்றும், 'பிரமம்' என்றும் இரண்டு பதமாக இருக்கும்.

'பிரஞ்ஞானம்' என்ற பதத்தின் பொருள் ஞானம் என்பதாகும்.

'பிரமம்' என்பது சத்தியஞான ஆனந்த வாஸ்து எனப் பொருள்படும்.

இரண்டாம் வாக்கியமாகிய 'அகம் பிரம்மாஸ்மி' என்பது அகம், பிரமம், அஸ்மி என்னும் மூன்று பதமாக இருக்கும்.

அகம்-என்றால் 'நான்' என்பது பொருள். அதாவது சீவனைக் குறிக்கும்.

'பிரமம்' என்பது கடந்தது எனப் பொருள்பட்டு, ஈசனைக் குறிக்கும்.

'அஸ்மி' என்பது சீவன் சிவன் இருவருடைய ஐக்கியத்தைக் குறிக்கும்.

மூன்றாம் வாக்கியமாகிய தத்துவமகி என்பது தத்-துவம்-அகி என மூன்றாகப் பிரிபடும். தத்-பதத்திற்கு வாக்கியப் பொருள் மாயை என்னும் உபாதியைப் பெற்ற ஈசன் என்பதாகும்.

தவம் என்ற பதத்திற்கு வாக்கியப் பொருள் 'அவித்தை' என்னும் உபாதியைப் பெற்ற ஈசன் என்பதாகும். இரண்டு இலட்சியார்த்தப் பொருள்களுக்கும் ஐக்கியம் செய்வது என்பது 'அசி' பதத்தின் பொருளாகும்.

'நீ அது ஆனாய்' என்பது இதன் திரண்ட பொருள்.

நான்காம் மகாவாக்கியம் அயம் ஆன்மா பிரமம் என்பது இது அயம் - ஆன்மா - பிரமம் என்னும் மூன்று பதங்களை உடையது.

'அயம்' என்பது உபாதியுடன் கூடிய சீவன் என்றும்,

'ஆன்மா' என்பது உபாதியுடன் கூடிய ஈசன் என்றும்,

'பிரமம்' என்பது உபயத்தின் இலட்சியார்த்த சீவ-பரசொருபத்தை ஐக்கியம் பண்ணுவது என்றும் பொருள் கூறப்படுகிறது. இந்த நான்கு மகா வாக்கியங்களில் 'தத்துவம் அசி' என்ற வாக்கியம் தொடக்கத்தில்

ஆசிரியன் மாணவனுக்கு உபதேசிக்கும் உபதேச வாக்கியமாக இருக்கு மென்றும், 'அகம்பிரமாஸ்மி' என்பது கற்றுத்தேர்ந்த மாணவனுடைய அனுபூதிவாக்கியமாய் இருக்குமென்றும்,

'பிரஞ்ஞானம் பிரமம்' என்பது மனைவாக்கியமாய் இருக்குமென்றும்,

''அயம் ஆன்மா பிரமம் - என்பது அவற்றை எல்லாம் ஒத்துக் கொள்ளும் சம்மத வாக்கியமாய் இருக்குமென்றும் விளக்கம் தருவர் தவத்திரு அடிகளாசிரியர்''.

**மகாவாக்கியம் - பேருரை**

வடமொழிச் சொற்களைத் தமிழ்ப்படுத்தித் திருமந்திரத்தில் பாடி அமைக்கின்றார் திருமூலர்.

**''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே''**

என அவர் தெளிவாகப் பாடியுள்ளதால் இதனை அறியலாம்.

இவ்வாறு தமிழ் முழக்கமிட்ட திருமூலர் மகாவாக்கியம் என்ற வடமொழிச் சொல்லைப் 'பேருரை' - என்ற தமிழ்ச் சொல்லால் குறிக்கின்றார். இதனை,

**''நீ அது ஆனாய் என நின்ற பேருரை''**

என்ற பாடலடி கூறுவதால் அறியலாம். இவ்வடியில் பேருரை என்பது 'தத்துவமசி' என்பதைக் குறிப்பதாகும்.

**சிவஞான முனிவர் கூற்று**

சிவஞான முனிவரால் இயற்றப்பட்டது. சிவஞானபோத மாபாடியம் என்னும் பேருரை அதன் பாயிர உரையில்; பெரும் பெயர்க்கடவுள் பாயிர அடிக்குப் பொருள் கூறுங்கால்;

'பெரும் பெயர்க்கடவுள்' என நேயம் ஒன்றே பெரும் பெயர்க்குப் பொருளாகக் கூறினார். ஏனையவற்றைத் தன்னுள் அடக்கி நிற்றலின் தலைமை பற்றிக் கூறினார் என உணர்க. பெரும் பெயர் எனினும், மகாவாக்கியம் எனினும், ஒரு வார்த்தை எனினும் ஒக்கும்.

பெரும் பெயர்ப் பொருளே ஐந்தெழுத்திற்கும் ஆதலின் பெரும் பெயரோடு ஐந்தெழுத்திடை வேற்றுமை இன்மை உணர்க என்று எழுதுவர். இக்கருத்தை பற்றித் திருமூலரும் தத்துவமாகிப் பொருளை ஐந்தெழுத்துள் சிவய என்பதில் அடக்கிக் காட்டுவர் ''மகாவாக்கிய ஆராய்ச்சியில் திருமூலர்'' ஈடுபட்டு சங்கரருடைய மகாவாக்கிய ஆராய்ச்சியை மறுக்கின்றார்.

**சங்கரருடைய மகாவாக்கிய ஆராய்ச்சி**

மகாவாக்கிய ஆராய்ச்சியை சங்கரர் மகாவாக்கிய ஆராய்ச்சி, திருமூலர் மகாவாக்கிய ஆராய்ச்சி என இரண்டாகப் பகுக்கலாம்.

சீவன், கூடத்தன், ஈசுவரன், பிரமம் என்னும் நான்கும் அறிவுப் பொருள் என்று வேதாந்த நூல்களால் ஆய்ந்து துணியப்படும். இவற்றுள், சீவன் - கூடத்தன் என்னும் இரண்டும் தத்துவமாகி மகாவாக்கியத்துள் துவம்பதத்தில் வைக்கப்படும்.

'ஈசன்' பிரம்மம் என்னும் இரண்டும் தத்பதத்தில் வைக்கப்படும். சீவன் கூடத்தனுடைய பிரதிபிம்பப் பொருளாகையால் சீவன், கூடத்தனில் அடங்கும்.

ஈசுவரன், பிரமத்தினுடைய பிரதிபிம்பப் பொருளாகையால் அது பிரமத்தில் அடங்கும் எனக் கூறுவர்.

**திருமூலர் - மகாவாக்கிய ஆராய்ச்சி**

திருமூலருடைய மகாவாக்கிய ஆராய்ச்சி சங்கரர் ஆராய்ச்சியினின்றும் வேறுபட்டது. திருமூலர், இயங்குகின்ற சீவனும் (ஆன்மா) அதை இயக்குகின்ற ஈசனாகிய சிவனும், இவ்விரண்டிற்கும் அடியாகிய பிரமமும் (சிவம்) என மூன்று அறிவுடைப் பொருள்களை வேதாந்த நூல்களிலிருந்து ஆராய்ந்து அமைத்துக் கொள்கின்றார். பின்னர், அவற்றுள்,

**சீவனைத் துவம்பதப் பொருளாகவும்,**
**பரனைத் தத்பதப் பொருளாகவும்,**
**சிவத்தை அசி பதப் பொருளாகவும்**
**அமைத்துக் கொள்ளுகின்றார்.**

இவ்வாறு அமைத்துக் கொண்டு, முன்னே துவம்பத ஆராய்ச்சி செய்து, சீவதுரியத்தை விட்ட இலக்கணையால் அறிந்தும், தத்பத ஆராய்ச்சி செய்து, பரதுரியத்தை அறிந்து, அப்பரதுரியத்துள் சீவன் அடங்கி யிருத்தலை விடாத இலக்கணையால் அறிந்தும்,

"பின் அசிபத ஆராய்ச்சி செய்து, சிவதுரியத்தை அறிந்து, அச்சிவ துரியத்துள் சீவதுரியத்துடன்கூடிய பரதுரியத்தை அடக்கி, இம்மூன்று துரியத்துள்ளும் உள்ள ஆதிசூக்குமப் பொருளாகிய சிவத்தை, விட்டும் விடாத இலக்கணையால் அறிந்து, அந்த ஒன்றாகிய சிவத்தையே சிவோகம் பாவனையால் பாவித்து மௌன சமாதியில் இருக்க வேண்டும் என்று கூறுவர். இவர் நெறி சீவதுரியமும் பரதுரியமும் அகண்ட சிவமும் ஒன்றாகியதாதலின், பாலானது சர்க்கரையுடன் சேர்ந்து, பின்னர் தேவாமிர்தத்துடன் கூடியது போன்றது" என்பர் அடிகளாசிரியர்.

# 74. திருவிசைப்பா தலங்கள்

திருமதி எஸ். வேண்மாள், சிதம்பரம்.

திருவிசைப்பாத் தலங்கள் மொத்தம் 14. அவையாவன:

1. கோயில்
2. திருவிழீமிழலை
3. திருவாவடுதுறை
4. திருவிடைக்கழி
5. திருக்களந்தை ஆதித்தேச்சுரம்
6. திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம்
7. திருமுகத்தலை
8. திரைலோக்கிய சுந்தரம்
9. கங்கைகொண்ட சோழேச்சுரம்
10. திருப்பூவணம்
11. திருச்சாட்டியக்குடி
12. தஞ்சை இராசராசேச்சுரம்
13. திருவிடைமருதூர் மற்றும்
14. திருவாரூர் ஆகும்.

**1. திருக்கோயில் - தில்லை - சிற்றம்பலம்**

**(அ) பாடல்கள்**

"தில்லை மாநகர் எல்லை காண்கினும்
என் பொழுதாகிலும் உளப்பட நினைக்கினும்
நேசமாகவே நாவினால் பேசினும்
சிதம்பரம் என்ற சொல் செவியினில் கேட்பினும்
இறையனைக் கொடுக்கும்
பிறவிச் சாகா கருவடி அறுத்து
திருவடித் தாமரை நிழலில் வாழ்வது நிச்சயமே"

என்றியம்புவது சிதம்பரம் விலாசம்.

ஆடலரசன் திருக்கோயில் கொண்டிருக்கும் இத்தலம் முழுதும் தில்லை எனப்படும். ஒரு வகை மரங்கள் மிகுதியாக வளர்ந்து அடர்ந்த காடாக இருந்தது. இதன் காரணமாக இத்தலம் தில்லைவனம், தில்லை, தில்லையம்பதி என்றெல்லாம் அழைக்கப் பெறுகின்றது. தில்லை மரம் இப்போது பிச்சாவரம் அருகே அமைந்துள்ள உப்பங்கழியின் கரையில் மிகுதியாக உள்ளது.

''அன்னம் பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமின்
என்னம் பாலிக்குமாறு கண்டின்புற
இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே''

என்கின்றார் நமது அப்பர் தமது திருக்குறுந்தொகையில்.

ஒன்பதாம் திருமுறையாசிரியர்களுள் ஒருவரான திருமாளிகைத்தேவர்

''ஒளிவளர் விளக்கே! உப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே''

என்றும்

**சேர்ந்தனார்**

''மன்னுக தில்லை! வளர்தநம்
பக்தர்கள்''

என்றும்

**கருவூர்த்தேவர்**

''பின்னுசெஞ் சிடையும் பிறைதவழ் மொழுப்பும்
பெரியதங் கருணையுங் காட்டி''

என்றும்

**பூந்துருத்தி காடநம்பி**

''சேடர் உறைதில்லைச் சிற்றம்பலத்தான்''

என்றும்

**கண்டராதித்தர்**

''பாரோர் முழுதும் வந்திறைஞ்சப்
பதஞ்சலிக்(கு) ஆட்டுகந்தான்''

என்றும்

**வேணாட்டடிகள்**

''மண்ணோடு விண்ணவளவும்
மனிதரொடு வானவர்க்கும்
கண்ணாவாய்''

என்றும்

**திருவாலியமுதனார்**

"செய்ய கோடுடன் கமலமலர் சூழ்தரு
தில்லை மாமறை யோர்கள் தாந்தொழ"

என்றும்

**புருடோத்தமநம்பி**

"தில்லையம் பலத்தெங்கள் தேவதேவை"

என்றும்

**சேதிராயர்**

"அறவனே! அன்று பன்றிப் பினேகிய
மறவனே"

என்றும் தில்லை நடராசரைப் புகழ்ந்து பரவியுள்ளனர்.

**(ஆ) தலச்சிறப்புகள்**

தில்லைத்தலம் ஒன்று மட்டுமே பஞ்சபூதத் தலங்களுள் ஒன்றாகவும் பஞ்ச சபைத்தலங்களுள் ஒன்றாகவும் விளங்குகிறது. ஐந்து புலியூர்களுள் ஒன்றாகவும் விளங்குகிறது. தரிசிக்க முக்தி தரும் தலமும் இதுவே யாகும். விராட புருடனுடைய இருதயத்தானமும் இதுவே. மும்மூர்த்தித் தலங்களுள் இதுவும் ஒன்று. பூலோக கைலாயங்கள் 3-ல் இதுவுமொன்று.

சிவாயலங்களில் வழக்கமாக நடைபெறும் ஆறுகால பூஜை களில் அர்த்தசாம பூஜையினைப் பார்க்க வேண்டிய தலம் தில்லையே.

சைவர்களுக்கு "கோயில்" எனும் சொல் தில்லையையே குறிப்பதாகும். இன்றும் சைவ அன்பர்கள் எதனை எழுதத் தொடங்கினாலும் "திருச்சிற்றம்பலம்" என்று எழுதியே தொடங்குவது கண்கூடாகும். சைவ சந்தானக் குரவர் இருவர் இங்கே முக்தி பெற்றனர். அறுபரின் மும்மை நாயன்மார்களுள் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் தில்லையெம்பெருமானை நினைத்த வண்ணமே முக்தி எய்தினார். இது தவிர இவ்வூரிலேயே ஐந்து நாயன்மார்கள் முக்தி பெற்றுள்ளனர். மணிவாசகப் பெருந்தகையும் இங்கேயே முக்தி அடைந்தனர்.

**(இ) தீர்த்தங்கள்**

சிவகங்கை, பரமானந்தகூபம், சிவானந்தகூபம், வியாக்ரபாத தீர்த்தம், ஆனந்த தீர்த்தம், நாகசேரி, புலிமடு, சிவபிரியை தீர்த்தம், திருப்பாற்கடல் தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், குய்யதீர்த்தம் (பாசமுறுத்தான் துறை) முதலியன.

**(ஈ) கோயில் கட்டப்பெற்ற காலம்**

கி.பி. 5-வது நூற்றாண்டு முதல் கி.பி. 11-ம் நூற்றாண்டு வரையில் கட்டப்பட்ட கட்டிடங்கள் இங்கு உள்ளன என்பார் ''ஈஸ்ட்விச'' என்னும் பேராசிரியர் பிற்காலத்து விஜயநகர சக்கரவர்த்திகள் மற்றும் நாயக்க மன்னர்களும் பல திருப்பணிகளைச் செய்துள்ளனர். சமீபத்தில் வள்ளல் பச்சையப்ப முதலியாரும் நகரத்தார்களும் பல அரும் பெரும் திருப்பணிகளை மேற்கொண்டுள்ளனர்.

**(உ) நடராச தத்துவம் (ஐந்தொழில் விளக்கம்)**

படைத்தலைத் துடியும் (உடுக்கையும்); காத்தலை அபயமும்; அழித்தலைத் தீச்சுடரும்; மறைத்தலை ஊன்றிய திருவடியும் அருளலைத் தூக்கிய திருவடியும் உணர்த்துகின்றன. இசையே நடராசப் பெருமானிடம் இருந்தே தோன்றியதாகும்.

**(ஊ) தில்லைக் கோயிலோடு தொடர்புடைய சான்றோர்கள்**

திருமூலர்; கல்லாடர்; திருமாளிகைத் தேவர்; கண்டாராதித்தர்; கருவூர்த்தேவர்; பூந்துருத்தி காடநம்பி; வேணாட்டடிகள்; திருவாலியமுதனார்; புருடோத்தம நம்பி; சேதிராயர்; ஐயடிகள் காடவர்கோன்; சேரமான் பெருமாள்; பட்டினத்தார்; அருணகிரியார்; இரட்டையர்; காளமேகப் புலவர்; குருஞான சம்பந்தர்; புராணத் திருமலைநாதர்; மறைஞான சம்பந்தர்; கூற்றவநாயனார்; கணம்புல்லநாயனார்; குமரகுருபரர்; படிக்காசுத் தம்பிரான்; மாரிமுத்துப் புலவர்; ஞானப்பிரகாசர்; கோபால கிருட்டிண பாரதி; மீனாட்சி சுந்தரம் பிள்ளை; இராமலிங்க சுவாமிகள் முதலியோர்.

**(எ) முக்கிய குறிப்புகள்**

**(மூவர் பாடல் பெற்ற தலம்)**

**இறைவன் : திருமூலநாதர்; நடராசர்**

**இறைவி : உமையபார்வதி; சிவகாமசுந்தரி**

**தலமரம் : தில்லை**

**2. திருவிழீமிழல்**

இத்தலம் வீழிச்செடிகள் நிறைந்து இருந்த காரணத்தால் இப் பெயர் பெற்றது.

**(அ) தலத்தின் வேறு பெயர்கள்**

கல்யாணபுரம்; பஞ்சாக்கரபுரம்; தக்ஷிணகாசி; ஷண்மங்கள ஸ்தலம்; பனசாரண்யம்; நேத்திரார்ப்பணபுரம்; பூகைலாசம் முதலியன.

**(ஆ) தல புராணம்**

திருமால் சக்கரம் வேண்டி இறைவனைப் பூசை செய்யும் போது ஒருநாள் ஒரு மலர் குறையத் தம் கண்ணையே இடந்து சாத்தி சக்கரத்தைப் பெற்றார். உற்சவமூர்த்தி கல்யாணசுந்தரரின் பாதத்தில் விஷ்ணு தம் கண்ணைப் பதித்து அருச்சித்த அடையாளம் உள்ளது. உற்சவரின் வலப் பாதத்தின் மேலே திருமாலின் கண்ணும் கீழே சக்கரமும் உள்ளன. ஞானசம்பந்தருக்கும், அப்பருக்கும் இறைவன் படிக்காசு தந்தருளி அவர்கள் மூலமாகத் தன் அடியார்களுக்கு சிவனார் அமுதூட்டிய தலம். அவ்வாறு வைத்தருளிய பலியீடங்கள் கோயிலின் கிழக்கிலும் மேற்கிலும் உள்ளன.

இறைவன், ஞானசம்பந்தருக்குத் தாம் சீர்காழியில் இருக்கும் திருக்கோலத்தை இங்குள்ள விண்ணிழி விமானத்தில் காட்டியருளினார். "தில்லை மூவாயிரவர்" என்பது போல இத்தலத்து வாழ்ந்த ஐந்நூறு அந்தணர்கள் (வீழி ஐநூற்று அந்தணர் போற்றப்பட்டனர்).

**(இ) கோயிலமைப்பு மற்றும் சிறப்புகள்**

வௌவால் நத்து (வௌவால் நெற்றி) மண்டபம் மிகப் பிரசித்தி பெற்றது. இக்கோயில் மாடக்கோயில் அமைப்புள்ளது.

சுவாமியின் கருவறை விண்ணிழி விமானம் என்று சொல்லப்படு கிறது. இவ்விமானம் விஷ்ணுவால் இத்தலத்திற்குக் கொண்டு வரப்பட்டது என்று ஞானசம்பந்தரே கூறியுள்ளார்.

மூலவரின் பின் இறைவன் இறைவி உள்ள திருமணக்கோலமுள்ளது. இறைவன் திருமணம் புரிந்த தலம் என்னும் நிலைக்கேற்ப, கர்ப்பக்கிருக வாயிலில் அரசாணிக்கால் என்னும் தூணும்; வெளியில் மகா மண்டபத்தில் பந்தக்கால் என்னும் தூணும் உள்ளன.

**(ஈ) திருவிசைப்பா**

சேந்தனார் "ஏகநாயகனை இமையவர்க்கு அரசை என்னுயிர்க்கு அமுதினை" என்று தொடங்கும் பாடல் முதலாகக் கொண்ட 12 பாடல் களைக் கொண்ட ஒரு பதிகத்தை இவ்வூருக்கு அருளியுள்ளார்.

**(உ) முக்கிய குறிப்புகள் (மூவர் பாடல் பெற்ற தலம்)**

| | | |
|---|---|---|
| **இறைவன்** | : | **நேத்திரார்ப்பனேஸ்வரர், விழியழகர்** |
| **இறைவி** | : | **சுந்தர குஜாம்பிகை** |
| **தல மரம்** | : | **வீழிச்செடி** |
| **தீர்த்தம்** | : | **விஷ்ணு தீர்த்தம்** |
| **தல விநாயகர்** | : | **படிக்காசு விநாயகர்** |

**3. திருவாவடுதுறை (திருவாவடுதுறை ஆதீனம்)**

இறைவி பசு வடிவில் வழிப்பட்டு பேறுபெற்ற தலமாதலின் இப்பெயர் பெற்றது.

**(அ) தலத்தின் வேறு பெயர்கள்**

கோமுக்தி நகர், அரசவனம்; முக்தி க்ஷேத்ரம்; கோகழி; சிவபுரம்; பிரமபுரம்; அகத்தியபுரம்; நவகோடி சித்திபுரம் முதலியன.

**(ஆ) தலபுராணம் (தலத்தில் நடந்த விசேஷங்கள்)**

ஞானசம்பந்தர் தன் தந்தையின் வேள்விக்காக இறைவனிடம் பொற்கிழி பெற்றது; திருமூலவர் தவமிருந்து தங்கியிருந்து திருமந்திரம் அருளியது; திருமாளிகைத் தேவர் பல அற்புதங்களை நிகழ்த்தியது; முசுகுந்தனுக்கு இறைவன் மகப்பேறு அருளி இத்தலத்தைத் திருவாரூவ ராகவும் தம்மைத் தியாகேசராக (புத்திரத் தியாகேசராக) காட்டியது; சித்தர்க்கு அட்டமா சித்திகளை அருளியது; தருமதேவதை இறைவனை வழிபட்டு அவருக்கு வாகனமாகும் பேறு பெற்றது முதலியன.

**(இ) கோயிலமைப்பு மற்றும் சிறப்புகள்**

பெரிய நந்தியின் பின்னால் உள்ள பலிபீடமே சம்பந்தருக்குப் பொற்கிழி அளித்த இடம். திருமாளிகைத்தேவர் நரசிங்கன் என்னும் மன்னனின் படைகள், கோயில் மதிலில் உள்ள நந்திகளை உயிர் பெற்றெழச் செய்து விரட்டியமையால் இன்றும் கோயில் மதில்களில் நந்திகளே இல்லை.

**(ஈ) திருவிசைப்பா**

சேந்தனார் ''பொய்யாத வேதியர்'' என்று தொடங்கும் பாடல் முதலாகக் கொண்ட 11 பாடல்களை உடைய ஒரு பதிகம் பாடியுள்ளார்.

**(உ) முக்கிய குறிப்புகள் (மூவர் பாடல் பெற்ற தலம்)**

| | | |
|---|---|---|
| இறைவன் | : | மாசிலாமணியீசுவரர், கோமுகதீசுவரர் |
| இறைவி | : | அதுல்ய குஜாம்பிகை |
| தலமரம் | : | படர் அரசு |
| தீர்த்தம் | : | கோமுக்தி தீர்த்தம் முதலியன |
| தல விநாயகர் | : | துணை வந்த விநாயகர் |
| நந்தி | : | தரும நந்தி |

**4. திருவிடைக்கழி**

செய்வான் இறைவனிடம் திருப்பரங்குன்றம் செல்ல விடை கேட்டதாலும், முருகனுக்கு இரணியாசுரனைக் கொன்ற பழிகழிந்ததாலும்

இத்தலம் இப்பெயர் பெற்றது. தற்போது முருகன் தலமாகப் பிரசித்தி பெற்றுள்ளது.

மூலத்தானத்தில் முருகன் பிரதான மூர்த்தியாக சுப்பிரமணியப் பெருமானும் பின்னால் உள்ளடங்கிச் சிவலிங்க மூர்த்தமாகக் காட்சி தருகின்றனர். தெய்வயானைக்குத் தனிச் சந்நிதி உள்ளது.

**(அ) கோயிலமைப்பு மற்றும் சிறப்புகள்**

பங்குனியில் பூப்பதாகக் கூறப்படும் தலமரமாகிய குராமரம் பிரகாரத்தில் உள்ளது. மலைகளில் மட்டுமே தோன்றக்கூடிய இம்மரம் இத்தலத்தில் நிலத்திலும் தோன்றியுள்ளது. முருகன் இம்மரத்தின் கீழ் யோக நிட்டையில் இருக்கின்றமையின், இங்கமர்ந்து தியானம் பலர் செய்கின்றனர். சேந்தனார் முக்தி பெற்ற தலமிதுவே.

**(ஆ) திருவிசைப்பா**

சேந்தனார் "மாலுலா மனம் தந்து" என்று தொடங்கும் பாடல் முதல் 11 பாடல்களைக் கொண்ட பதிகம் ஒன்றினை இயற்றியுள்ளார்.

**5. திருக்களந்தை ஆதிச்சேச்சுரம் (களப்பால்)**

களப்பாளர் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்த ஊராதலின் இப்பெயரினை இவ்வூர் பெற்றது. பெயர் மருவி களந்தை என்றாயிற்று என்பர். ஊர் : களப்பால்; கோயில் : ஆதிச்சேச்சுரம். விஜயாலயன் மகன் ஆதித்த சோழனால் கட்டப்பட்ட கோயிலாதலால் ஆதிச்சேச்சுரம் எனப்பட்டது.

கூற்றுவ நாயனார் அவதரித்த பதி.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் "அலைகள் தம் பொருளும்" எனத் தொடங்கும் பாடலை முதலாகக் கொண்ட 10 பாடல்கள் கொண்ட பதிகம் அருளியுள்ளார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள்**

இறைவன் : ஆதிச்சேச்சுரர்; அழகியநாதசாமி
இறைவி : பிரபா நாயகி, பண்ணேர்மொழியாளி

**6. திருகீழ்க்கோட்டூர் மணியம்பலம்**

மேலக்கோட்டூரில் உள்ள சிவாலயம் ஐராவதம் வழிபட்ட தேவாரத் தலமாகும். அந்த ஐராவதத்தின் மணி விழுந்ததால் கீழ்க்கோட்டூரிலுள்ள சிவாலயம் மணியம்பலம் என்று பெயர் பெற்றது. இதுவே திருவிசைப்பா தலமாகும்.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த் தேவர் ''தளிரொளி மணிப்பூம்பதம்'' எனத் தொடங்கும் பாடலை முதலாகக் கொண்ட 11 பாடல்களடங்கிய ஒரு பதிகம் இயற்றி யுள்ளார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள்**

இறைவன் : மணியம்பலநாதர், அமுதலிங்கேசுவரர்

இறைவி : மணியம்பலநாயகி, அமுதாம்பிகை, மதுரவசனாம்பிகை.

தல மரம் : வன்னி

தீர்த்தம் : இந்திர தீர்த்தம்; வழிபட்டோர் : பிரமன் ஐராவதம்.

**7. திருமுகத்தலை (பன்னத்தெரு)**
**(மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம்)**

பண்டைய நாளது ''முகத்தலை லிங்கம்'' என்ற பெயர் பின்னாளில் ''முகத்தலை'' என்றானது. (கோயிலின் முகலிங்கம் உள்ளது). பன்னாகாபரணேசுவரர் வீற்றிருக்கும் தலமாதலின் பன்னத்தெரு என்ற பெயர் வந்தது.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த் தேவர் ''புவன நாயகனே'' எனத் தொடங்கும் பாடல் முதலாகக் கொண்ட 10 பாடல்களை உடைய ஒரு பதிகம் இயற்றியுள்ளார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள்**

இறைவன் : பன்னாகாபரணேசுவரர் (மூலவர்)
திருமுகத்தலைநாதர் (முகத்தலை லிங்கம்)

இறைவி : சாந்தநாயகி

தல மரம் : புன்னை

**8. திரைலோக்கிய சுந்தரம் (திருலோக்கி)**
**(திருப்பனந்தாள் ஆதீனம்)**

திரைலோக்கிய மாதேவி என்பவர் முதலாம் ராஜராஜனின் மனைவி யரில் ஒருவர். சுவாமியின் பெயர் சுந்தரேசுவரர். இவையிரண்டும் சேர்ந்து இத்தலத்திற்கு இப்பெயரை வழங்கலாயின.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் ''நீரோங்கி வளர்'' எனத் தொடங்குகின்ற பாடலை முதலாகக் கொண்ட 11 பாடல்களை உடைய ஒரு பதிகம் அருளியுள்ளார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள்**

இறைவன் : சுந்தரேசுவரர்
இறைவி : அகிலாண்டேசுவரி
தல மரம் : சரக்கொன்றை
தீர்த்தம் : லட்சுமி தீர்த்தம்
வழிபட்டோர் : பிருகு, தேவகுரு

## 9. கங்கைகொண்ட சோழேச்சுரம்

முதலாம் ராசேந்திரன் சோழநாட்டின் மையப் பகுதியில் புதிய தலைநகரம் ஒன்றை நிர்மானித்து அதை கங்கை நீரால் புனிதப்படுத்த எண்ணித் தன் படையை கங்கை நீர் கொண்டு வர வடநாட்டிற்கு அனுப்பி, அப்படை கொணர்ந்த நீரால் (சோழகங்கம் என்ற ஏரியையும் கட்டுவித்து) தன் தந்தை தஞ்சையில் கட்டியது போலவே, கட்டியதே இக்கோயில். விமானம் 160 அடி உயரம்.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் ''அன்னமாய் விசும்பு பரந்து'' எனத் தொடங்கும் பாடலை முதலாகக் கொண்ட 11 பாடல்களடங்கிய ஒரு பதிகமி யற்றியருளினார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள்**

இறைவன் : பெருவுடையார்
இறைவி : பெரியநாயகி

## 10. திருப்பூவணம்

வைகை இங்கு உத்தரவாகினியாகப் பாய்கின்றமையின் இங்கு இறந்தோரின் எலும்புகள் புதைப்பதால் அவர்கள் மேலான நற்கதியைப் பெறுகிறார்கள் என்பது மரபு. இது காசிக்குத் தரத்தில் ஒத்த தலமாதலின் இதனை புஷ்பவனகாசி என்பர்.

**(அ) தலத்தின் வேறு பெயர்கள்**

பிதுர்மோஷபுரம், பாஸ்கரபுரம், லக்ஷுமிபுரம், பிரமபுரம், ரசவாதபுரம் முதலியன.

**(ஆ) தல புராணம்**

தேவார முதலிகள் மூவருக்கும் வைகை மணல் சிவலிங்கமாகத் தோன்றியமையால் மூவரும் மறுகரையிலிருந்தே - இத்தலத்தை மிதிக்க அஞ்சி - வணங்க இறைவன் அவர்கள் தம்மை நேரே கண்டு வணங்குவதற்கு

ஏதுவாக நந்தியை விலகச் செய்தருளினார். இதனால் நந்தி சாய்ந்துள்ளது. மறுகரையிலிருந்து அவர்கள் தொழுத இடம் மூவர் மண்டபம் என அழைக்கப்படுகிறது.

பொன்னையாள் என்னும் நாட்டிய நங்கைக்காக, பொன்னால் உருவம் அமைக்க அவளுக்கு உதவ வேண்டி, இறைவன் சித்தர் வடிவு கொண்டு அவளுடைய வீட்டிலுள்ள உலோகப் பொருட்களைக் கொண்டு ரசவாதஞ் செய்து பொன்னாக மாற்றி உதவினார். காண்பார் மகிழ அமைந்த அந்த உருவத்திடம் அன்பும் ஆசையும் மிகுதியானதால், அப்படிமத்தின் கன்னத்தை அள்ளி அப்பெண்மணி அள்ளி முத்தமிட்ட நகக்குறி அடையாளத்தை இன்றும் நாம் காணலாம்.

**(இ) கோயிலமைப்பு மற்றும் சிறப்புகள்**

சாய்ந்த நந்தியும், நகக்குறி அடையாளம் உள்ள படிமமும் இன்றும் காட்சி தருகின்றன.

ஆடல் வல்லான் மிகப் பிரமாண்டமான திருமேனியராக சிலாவிக்கிர வடிவில் உள்ளார். பெருமான் திருமேனியில் திரிசூலமும், சடை முடியும் காணப்படுகின்றன. கற்பூர தீப வணக்கத்தின் பொழுது சற்று உற்று நோக்க வேண்டும்.

**(ஈ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் ''திருவருள் புரிந்து ஆண்டு கொண்டு'' எனத் தொடங்கும் பாடலை முதலாகக் கொண்ட 10 பாடல்களைக் கொண்ட ஒரு பதிகம் பாடி அருளியுள்ளார் (இவற்றில் 8 பாடல்கள் மட்டும் உள).

**(உ) முக்கிய குறிப்புகள் : (மூவர் பாடல் பெற்ற தலம்)**

இறைவன் : புஷ்பவனேஸ்வரர், பூவணநாதர்

இறைவி : சௌந்தரநாயகி, மின்னனையாள்

தல மரம் : பலா

வழிபட்டோர் : பிரமன்

**11. திருச்சாட்டியக்குடி**

வெப்ப மிகுதியால் வரும் சுரநோய்க்குரிய தேவதை இறைவனை வழிபட்ட தலமாதலின் இப்பெயர் பெற்றது. (சாட்டியம் - வெப்பம்).

ஊர் : சாட்டியக்குடி கோயில் : ஏழிருக்கை

ஆறு ஆதாரங்களுக்கும் மேலாகிய ஏழாவது இடத்தை (துவாதசாந்த இருக்கையை) ஏழிருக்கை என்பர்.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் "பெரியவா கருணை" எனத் தொடங்கும் பாடல் முதல் 10 பாடல்களைக் கொண்ட ஒரு திருப்பதிகம் பாடியருளினார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள் (மேற்கு நோக்கிய தந்நிதி)**

இறைவன் : வேதநாதர்; வேதபுரீஸ்வரர், நிக்வேதநாதர்

இறைவி : வேதநாயகி

தீர்த்தம் : வேததீர்த்தம்

தல மரம் : வன்னி

## 12. தஞ்சை இராசராசேச்சுரம்

தஞ்சகனூர் (தஞ்சகன் ஆண்ட ஊர்) தஞ்சாவூர் என்றாயிற்று என்பது தல வரலாறு.

முதலாம் இராசராசனால் கட்டப்பட்ட கோயில் ஆதலின் இது இராசராசேச்சுரம் எனப்பட்டது. கலை சிறந்த சிற்பக் கலையழகு வாய்ந்த அற்புதமான திருக்கோயில். தஞ்சாவூர் அரண்மனை தேவஸ்தானத்திற்குச் சொந்தமான கோயில். கோயில் வழிபாடு நிர்வாகம் அரண்மனை தேவஸ்தானம் மூலம் நடைபெறுகிறது. கோயில் கலைப்பராமரிப்பு தொல்பொருள் துறையின் கட்டுப்பாட்டில் உள்ளது.

சுவாமி விமானம் 216 அடி உயரமுள்ளது. தக்ஷிணமேரு எனப்படும்.

அரசு சார்பில் ஆண்டுதோறும் இராசராசனின் சதயத் திருவிழா நடத்தப்படுகிறது.

**(அ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் "உலகெலாம் தொழ" எனத் துவங்கும் பாடல் முதல் 11 பாடல்களைக் கொண்ட ஒரு பதிகம் பாடியுள்ளார்.

**(ஆ) முக்கிய குறிப்புகள்**

இறைவன் : பெருவுடையார்

இறைவி : பெரிய நாயகி

தீர்த்தம் : சிவகங்கை

ஆகமம் : மதிடாகமம்

## 13. திருவிடைமருதூர் (திருவாவடுதுறை ஆதீனம்)

வடக்கே வடுக நாட்டிலுள்ள மல்லிகார்ச்சுனத்திற்கும் (ஸ்ரீசைலம்) தெற்கே திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள புடார்ச்சுனத்திற்கும் (திருப்புடை

மருதூர்) இடையில் இத்தலம் இருப்பதால் இதற்கு மத்யார்ச்சுனம் (இடைமருது) என்ற பெயர் வந்தது. அர்ச்சுனம் எனும் வடமொழிச் சொல்லுக்கு மருதமரம் என்று பொருள். இம்மூன்று சிவத்தலங்களிலும் தலமரம் மருதமருமே.

**(அ) தலத்தின் வேறு பெயர்கள்**

சண்பகாரண்யம், சக்திபுரம், வில்வவனம், தபோவனம், ஜோதிபுரம், சர்வதீர்த்தபுரம், செல்வவிருத்திபுரம், தரும விருத்திபுரம், முக்திபுரம், வீரசோழபுரம் முதலியன.

**(ஆ) தலபுராணம் (தலத்தில் நடந்த விசேஷங்கள்)**

இறைவன் தன்னைத்தானே பூசித்தது; உரோமசர் அருள் பெற்றது; சுகீர்த்தி மன்னன் புத்திரப்பேறு பெற்றது; கனக தீர்த்தத்தில் முழுகிய காகம் பொன் வடிவம் பெற்றது; சிவன் கண்ணாகக் காசியப்பருக்குக் காட்சி தந்தது; வீரசேன பாண்டியனுக்கு பிரமகத்தி விலகியது; சித்திரகீர்த்தி மன்னன் புத்திரப்பேறு பெற்றது; வரகுணபாண்டியனுக்கு பிரமகத்தி விலகியது; புழுவாய்ப் பிறந்த தேவவிரதன் தேவ வடிவு பெற்றது; அகத்தியர் திருமணக்கோலம் கண்டது மற்றும் பட்டினத்தார் அருள் பெற்றது.

**(இ) கோயிலமைப்பு மற்றும் சிறப்புகள்**

இத்திருக்கோயில் 7 கோபுரங்களை உடையது. அசுவமேதப்பிரதட்சிணப் பிரகாரம்; கொடுமுடிப் பிரகாரம்; பிரணவப் பிரகார்ம் என்ற 3 பிரகாரங் களை உடையது. நான்கு வீதிகளிலும் சிவாலயங்கள் தனித்தனியே விளங்குவதாலும் நடுவில் மகாலிங்கப் பெருமான் திருக்கோயில் உள்ளதாலும் இவ்வூர் பஞ்சலிங்கத் தலமென வழங்கப்படுகிறது.

இரண்டாம் பிரகாரத்திலுள்ள சொக்கநாதருக்கு சிறப்புப் பூசை செய்து மேகநாதக் குறிஞ்சிப் பண்ணுடைய திருமுறைப் பதிகங்களைப் பாராயணஞ் செய்ய மழை பொழிவது இன்றும் நடைமுறையில் உள்ளது.

இக்கோயிலில், கருவறை வடநாட்டுக் கட்டமைப்பில் அமைந்த "மூகாம்பிகை திருக்கோயில்" உள்ளது. இக்கோயிலில் "மகா மேரு" உள்ளது.

**(ஈ) தீர்த்தங்கள்**

காருணியாமிருத தீர்த்தம் முதல் கல்யாண தீர்த்தம் ஈறாக 32 தீர்த்தங்கள் உள்ளன.

**(உ) திருவிசைப்பா**

கருவூர்த்தேவர் "வெய்ய செஞ்சோதி" எனத் தொடங்கும் பாடலை முதன்மையாகக் கொண்ட 10 பாடல்களை உடைய ஒரு பதிகத்தை இயற்றியருளியுள்ளார்.

**(ஊ) முக்கிய குறிப்புகள் (மூவர் பாடல் பெற்ற தலம்)**

| | | |
|---|---|---|
| இறைவன் | : | மகாலிங்கேசுவரர், மரதவனேசுவரர், மருதவாணர். |
| இறைவி | : | பிருகத்சுந்தர குஜாம்பிகை, பெருநலமுலையம்மை |
| தல மரம் | : | காவிரி, காருண்ய அமிர்த தீர்த்தம் |
| தல விநாயகர் | : | ஆண்ட விநாயகர் |

**14. திருவாரூர்**

"ஆரூர் பிறக்க முக்தி" என்னும் "திருவாரூர்த் தேரழகு" என்றும் கேள்விப்படாதவர்கள் யாரே இருக்க இயலும்? மேலும் "கோயில் ஐந்து வேலி; குளம் ஐந்து வேலி; ஓடை ஐந்து வேலி" என்று வழங்கும் பழமொழியும் உலகு அறிந்ததே.

**(அ) பாடல்கள்**

மூவர் தேவராப்பதிகங்களுடன் திருவாசகப் பதிகமும் பெற்ற தலங்கள் நான்கினுள் இதுவும் ஒன்று. மற்றவை: தில்லை, திருக்கழுக்குன்றம் மற்றும் திருக்காழி (சீர்காழி).

சுந்தரர் பதிகங்களுள் (குறிப்பாகப்) பாடலகளுள்) "ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய்" எனத் தொடங்கும் பாடல் மிக மிகப் புகழ்பெற்றதாகும். சுந்தரரின் தோழரும் அறுபான் மும்மை நாயன்மார் களுள் ஒருவரான சேரமான் பெருமாள் "திருவாரூர் மும்மணிக்கோவை" என்னும் பிரபந்தத்தை அருளியுள்ளார்.

திருவிசைப்பாவில் பூந்துருத்தி காடநம்பி "கைக்குவான் முக்தின்" எனத் தொடங்கும் பாடல் மற்றும் "பத்தியாய் உணர்வோர்" எனத் தொடங்கும் பாடலையும் கொண்ட ஒரு பதிகம் தந்தருளியுள்ளார்.

சேந்தனார் தனது திருப்பல்லாண்டின் 11-வது பாடலில் "குழலொலி" எனத் தொடங்கும் பாடல்" "திருவாரூரின் மழவிடை யாற்கு" எனும் சொற்றொடரால் ஆரூரைச் சிறப்பிக்கின்றார்.

இவை தவிர மறைஞான சம்பந்தர் எழுதிய கமலாலய புராணம்; அளகை சம்பந்தர் எழுதிய திருவாரூர் புராணம்; ஸ்ரீ குமரகுருபரர் எழுதிய திருவாரூர் நான்மணிமால்; மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை எழுதிய தியாகராச லீலை; திருவாரூர் உலா (அந்தகக் கவி வீரராகவ முதலியார் எழுதியது). வித்துவான் தியாகராச செட்டியார் எழுதிய திருவாரூர் மருந்து வெண்பாமாலை; எல்லப்ப நாயினார் எழுதிய திருவாரூர்க் கோவை முதலிய பல நூல்களும் திருவாரூர புகழ்பாடும் இலக்கியங்கலாம்.

**(ஆ) தலச்சிறப்புகள்**

திருவாரூர் ஒன்று மட்டுமே பஞ்சபூதத் தலங்களுள் ஒன்றாகவும் சப்த விடங்கத் தலங்களுள் ஒன்றாகவு உள்ளது.

பிறக்க முக்தி தரும் தலம் இதுவேயாம். விராட புருடனுடைய மூலாதாரத் தலம்.

சிவாலயங்களில் வழக்கமாக நடைபெறும் ஆறுகால பூசைகளில் சாயரட்சை பூசையினைப் பார்க்க வேண்டிய தலம் ஆரூரே.

அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஐவர் இங்கு முக்தி பெற்றுள்ளனர்.

சங்கீத மும்மூர்த்திகளான தியாகராஜர்; சியாமா சாஸ்த்ரிகள் மற்றும் முத்துசாமி தீட்சிதர் அவதரித்த தலம் இதுவே.

**(இ) தீர்த்தங்கள்**

கமலாலயம்; சங்கு தீர்த்தம்; செங்கழுநீர் ஓடை முதலியவை.

**(ஈ) முக்கிய குறிப்புகள் (மூவர் பாடல் பெற்ற தலம்)**

1. மூலட்டானம் (ஆரூர்)

இறைவன் : வின்மீகநாதர், புற்றிடங்கொண்டார்
இறைவி : கமலாம்பிகை, அல்லியங்கோதை; நீலோத்பலாம்பாள்
தல மரம் : பாதிரி

2. ஆரூர் அரநெறி

இறைவன் : அசலேஸ்வரர், அரநெறிநாதர்
இறைவி : வண்டார்குழலி, புவனேஸ்வரி

3. ஆரூர்ப்பரவையுண்மண்டளி

இறைவன் : துவாயநாதர்
இறைவி : பஞ்சின் மெல்லடியம்மை

திருவாரூரில் தியாகராஜர் மற்றும் ஆரூர் மூலட்டானமாகிய வன்மீகநாதர் கோயில்கள் இணைந்து திருவாரூர்ப் பெரிய கோயில் மட்டுமின்றி ஆரூர் அரநெறி (இது பெரிய கோயிலின் உள்ளேயே உள்ளது) மற்றும் ஆரூர்ப் பரவையுண்மண்டளி (இது தனியே பெரிய கோயிலுக்குக் கிழக்கேயுள்ளது) ஆகிய இருவேறு தனித்தனியே தேவாரப் பாடல் பெற்ற சிவாலங்களும் உள என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

இதுகாறும் கண்ட தலங்களுள் 6 தலங்கள் தேவாரப் பதிகங்கள் பெற்ற தலங்களாக உள்ளன. இவையனைத்துமே (ஆறுமே) மூவர் தேவாரமும் பெற்றுத் திகழ்கின்றன. ஏனைய எட்டில் திருவிடைக்கழி முருகன் சிறப்புத் தலமாக விளங்குகிறது.

# 75. திருமந்திரத்தில் சைவ சித்தாந்தம்

முனைவர் பா. வேலம்மாள், குற்றாலம்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்மறைக் கருத்துக்களே, திருமுறைகளாக வெளிப்படுகின்றன. தமிழ் மொழிக்கு இவை இனிமை பயப்பன. திருமுறைகள் மக்களுக்கு மருந்தாகவும், மந்திரமாகவும் உள்ளன. திருமுறைகள் சிவபெருமானின் திருவாக்கு ஆகும்.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறை மொழி தானே மந்திரம்மென்ப''

என்ற தொல்காப்பியக் கூற்றுப்படி மந்திரங்களை உள்ளடக்கிய திருமந்திரத்தில் காணலாகும் சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் காண்பதே இவண் நோக்கம்.

சோழ நாட்டின் சைவப் பெருந்தலங்களுள் ஒன்றாகத் திகழவல்லது திருவாவடுதுறை, இவ்வூரில் தாம் திருமந்திரம் தோன்றியதென சைவச் சான்றோர்கள் கூறுகின்றனர்.

''ஊன் உடம்பில் பிறவிவிடம் தீர்ந்து உலகத்தோர் உய்ய ஞானம் முதல் நான்குமலர் நல் திருமந்திரமாலை பான்மை முறை ஓர் ஆண்டுக்கு ஒன்றாகப் பரம்பொருளாம் ஏன எயிறு அணிந்தாரை ''ஒன்று அவன் தான்'' என எடுத்து முன்னிய அப்பொருள் மாலைத் தமிழ் மூவாயிரம் சாத்தி மன்னிய மூவாயிரத்து ஆண்டு இப்புவிமேல் மகிழ்ந்து இருந்து''

என்று சேக்கிழார் அருளிச் செய்துள்ளமையிலிருந்தும்,

''சிவன் ஆவடு தண்துறை சேர்ந்திருந்தேன்
சிவபோதியில் நீழலில்'' (79)

''ஒப்பில் எழுகோடியுகம் இருந்தேன்'' (74)

திருமூலர் அருளிச் செய்தமையிலிருந்தும் இவ்வுண்மையை அறியலாம். மேலும் திருமூலர் தாம் நந்தி மரபில் வந்தவர் என்பதை,

''நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாலே தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நான் இருந்தேன்'' (68)

என்று கூறுகிறார்.

திருமூலர் திருமந்திரத்தை ஒன்பது தந்திரங்களாகச் செய்துள்ளார். இதற்குக் காரணம், சிவபெருமானிடமிருந்து நந்திபெருமான் பெற்ற ஆகமங்கள் ஒன்பது என்பதாகும். அந்த ஒன்பது ஆகமங்களுள் சிவாகமங்கள் இருபத்து எட்டும் அடங்கும். இதனை ''ஆகமம், ஒன்பான் அதிலானநூல் ஏழு'' (1426) என்னும் திருமந்திரப் பாடல் கூறுகின்றது. ''நந்தி பெற்ற ஒன்பது ஆகமங்கள் காரணம், சாமியம், வீரம், சிந்தம், வாதுளம், வியாமளம், உத்தரம், சுப்பிரம், மகுடம்'' என்பன ஆகும் என்பதைத் திருமந்திரப் பாடல் 63 விளக்குகின்றது.

திருமந்திரம், நாற்சீர் அடி நான்கு கொண்ட கலிவகையாப்பினால் அமைந்துள்ளன. இந்நூலுக்கு ஆசிரியர் திருமூலர் இட்ட பெயர் ''திருமந்திரமாலை'' என்பதாகும். சிவபெருமான் சிவாகமங்களை இந்த உலக மக்களுக்கு தமிழால் அருளிச் செய்ய வேண்டும் என்னும் பெரு நோக்கத்தோடு, திருமூலரைத் திருவாவடுதுறையில் பிறப்பித்தருளினார் என்பதை,

''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாக தமிழ்ச் செய்யுமாறே'' (18)

என்று திருமூலர் கூற்றிலிருந்து உணரலாம்.

திருமந்திரம் முதல் பாயிரத்தில் சிவபெருமானுக்கு இணையான தெய்வம் வேறு இல்லை என்கிறார். முதல் தந்திரத்தில் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையையும், இரண்டாம் தந்திரத்தில் புராண வரலாறுகளையும் அவற்றின் தத்துவங்களையும், மூன்றாம் தந்திரத்தில் மனத்தை ஒருமுகப்படுத்தி, இறைவனோடு உயிரை ஒன்றவைக்கும் யோகம் பற்றியும், நான்காம் தந்திரத்தில் திருவைந்தெழுத்து மந்திரத்தின் சிறப்பினையும் ஐந்தாம் தந்திரத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை சைவநெறிகளின் இயல்பு பற்றியும், ஆறாம் தந்திரத்தில் குருவருளும், திருவருளும் எவ்வாறு மனிதற்கு உதவுகின்றன என்பது பற்றியும், ஏழாம் தந்திரத்தில் சிவலிங்கத்தின் பல்வேறு நிலைகளும், சிவபூசை, குருபூசை மகேசுவரபூசை முதலியவற்றின் முறைகள் பற்றியும், எட்டாம் தந்திரத்தில் ஐந்து அவத்தைகளின் நிலை வேறுபாடுகள் பற்றியும், ஒன்பதாம் தந்திரத்தில் சிவபெருமானின் பல்வேறு கூத்துக்களின் சிறப்பு, தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதி சூக்கும பஞ்சாக்கரம் பற்றியும் காணப்படுகின்றன.

திருமந்திரத்தில் காணப்படும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை ''இறை இயல், உயிர் இயல், தளை இயல், சாதன இயல், குரு உபதேசம், அஞ்செழுத்துச் சிறப்பு, முக்தி இயல், அணைந்தோர் தன்மை, அட்டாங்க யோகம், திருவம்பலச் சக்கரம்'' என்னும் இயல்களில் காணலாம்.

**இறை இயல்**

சிவபெருமான் ஒருவனே கடவுள், அவனே அரன், அரி, அயனாக நின்று ஐம்பொறிகளையும் இயக்கி; ஆறு ஆதாரங்களுக்கு மேற்பட்ட நிலையில் மண், புனல், அனல், கால், வெளி, சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் அட்டமூர்த்தியாக உரைப்பெற்று அவற்றுள் கலந்து இருக்கிறான்.

**"ஒன்று அவன் தானே இரண்டு அவன் இன்னருள்**
**நின்றனன் மூன்றினுள்; நான்கு உணர்ந்தான்; ஐந்து**
**வென்றனன்; ஆறு விரிந்தனன்; ஏழு உம்பர்ச்**
**சென்றனன்; தான் இருந்தான் உணர்ந்து எட்டே"**

என்றும் சிவபெருமானுக்கு ஒப்பான தெய்வம் எதுவும் இல்லை எங்குத் தேடினும் அவனுக்கு இணையானவர் எவரும் இல்லை என்பதனை,

**"சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை**
**புவனம் கடந்து, அன்று வொன்னொளி மின்னும்**
**தவனச் சடைமுடித் தாமரை யானே"** (5)

சிவபெருமானை பரிந்து செய்யும் எந்த அரிய தவமும் தவம் ஆகாது. எல்லாவல்லமையும் உடையவன் சிவபெருமான் ஒருவனே, அவனை தொழுதால் எல்லா இன்பங்களையும் பெறலாம். மும் மூலங் களையும் இயக்குபவன் (49) எல்லா பொருள்களையும் கடந்து நிற்பவன் (36) உண்மை அன்பு செய்பவர்களுக்கு அருள் பொழிவான், என்ன தவறுகள் செய்தாலும் சிவபெருமானிடம் பேரன்பு பூண்டு இருந்தால் தவறுகளைப் பொருட்படுத்தாமல் அருள் செய்து முக்திக் கொடுப்பான் (திரு. 281)

சதா சிவமே எல்லாத் தத்துவமாய் விளங்குகிறது.

**"தத்துவம் ஆவது அருவம், சராசரம்**
**தத்துவம் ஆவது உருவம்"**

என்கிறது. இவ்வாறு திருமந்திரம் முழுக்க சிவபெருமான் ஞாயிறு, திங்கள், தீ என்னும் பேரொளிக்கு மேலான சோதியாய் விளங்குகிறான் என்பதைக் கூறுகிறது.

**உயிர் இயல்**

உயிர்களை உடம்பினுள் ஆக்கியவன் சிவபெருமானே ஆவன். உயிர், மாயா காரியம் ஆகிய துன்பங்களில் தோய்ந்து தானும் அசத்து ஆகும். ஞானமே வடிவாகிய குருவின் துணையால், திருவருள் தூண்டப் பட்டு செயல் ஒடுங்கி நிற்கும், உயிர்களை நாற்கால் பசுவோடு உவமாத்துத் திருமூலர்,

"கற்ற பசுக்கள் கதறித் திரியினும்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினும்
முற்ற பசுக்கள் ஒரு குடம் பால்போது
மற்றைப் பசுக்கள் வறள் பசுதானே" (2015)

யோகங்களைத் துய்த்து உலகியலில் உழலும் உயிர்களைக் "கொல்லையில் மேயும் பசுக்கள்" என்கிறார். உணர்வுகளைப் பொறிகள் வழிச் செல்லாமல் தடுக்க வேண்டும். அவ்வாறு தடுத்தால், உள்ளிருக்கும் சிவனைக் காணலாம். ஐம்பொறிகளையும் அடக்கி, அவற்றை இளைப்பாற்றல் இயங்கச் செய்ய வேண்டும். எல்லாக் கேடுகளுக்கும் உள்ளமே காரணம், உடலும், உலகமும் நீர்மேல் எழுதிய எழுத்தை ஒத்தது. எனவே புலனால் உறும் சிற்றின்பத்தை விட்டு விடச் சொல்கிறார் திருமூலர் உயிர் நிலை குறித்து பலவாறாகப் பேசும் திருமூலர், "உயிர்கள் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களைப் பொருந்தி உலகில் பிறக்கின்றன (40) என்னும் சைவசித்தாந்தக் கருத்தைக் கூறியுள்ளார்.

**தளை இயல்**

ஆணவம், கன்மம், மாயை என்னும் தளைகளால் கட்டப்பட்ட உயிர்கள் ஆணவ மலத்தினால் மறைக்கப்பட்டிருந்ததால், அம்மறைப்பை நீக்கும் பொருட்டே "தனுகரண புவன போகங்களைப் படைத்தான்" என்பது திருமூலர் (409) தெளிவுப்படுத்துகின்றார். தாயின் கருவினுள் பத்து மாதங்கள் கரு இருக்க வேண்டும் என்பதையும் இறைவனே வகுத்துள்ளான் (திரு. 452) அருமையாகப் பெற்ற உடம்பை பேணி காக்க வேண்டும், உடம்பு அழிந்தால் உயிர் உடலை விட்டு நீங்கி விடும். உறுதியாக ஞானத்தைச் சேரமாட்டார் எனவே உடம்பைப் பேணி அதிலுள்ள உயிரை வளர்க்க வேண்டும்.

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" (724)

உடம்பினுள்ளே சிவம் உறைகின்றான். எனவே உடம்பைப் பேண வேண்டுவது பெரிதும் இன்றியமையாதது ஆகும்.

சிவத்தை அறிந்தவன் நின்மலனாவன்; ஒன்றையும் அறியாது கிடப்பவன் கேவலன் என்று கூறி இறைவனை உணர்ந்தால் "கேவல நிலையில் இருக்கும் ஆன்மா சுத்தநிலை எய்தும் கருவி கரணங்களோடு கலக்கும் பொழுது, சகலநிலைப்பெறும், சகலத்தை விட்டுப் பிரியும் பொழுது ஆன்மா சுத்தநிலை எய்தும்.

**சாதன இயல்**

ஆணவம், கன்மம், மாயை என்னும் தளைகள் மூன்றனையும் விட்டு உயிர்கள் இறைவன் திருவடியை அடைவதே முத்தி ஆகும். முத்தி ஆகிய பேரின்பப் பெருநிலையை அடைவதற்குரிய வழிகளை கூறுவது சாதன இயல் ஆகும்.

எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொள்ள வேண்டும் என்பதை,

**யாவர்க்கும் ஆம், இறைவற்கு ஒரு பச்சிலை**
**யாவர்க்கும் ஆம், பசுவுக்கு ஒரு வாயுறை**
**யாவர்க்கும் ஆம், உண்ணும் போது ஒரு கைப்பிடி**
**யாவர்க்கும் ஆம், பிறர்க்கு இன்னுரை தானே** (252)

என்ற பாடல் உணர்த்துகிறது. சிவனடியார்களுக்கு உணவு கொடுத்தால் ஆணவமலம் நீங்கும் என்றும் (திரு. 254) கூறுகின்றார்.

அன்பு தான் சிவன், அதை தெரிந்து மக்கள் நடக்க வேண்டும் என்பதை,

**''அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவலர்**
**அன்பே சிவம் ஆவது ஆரும் அறிகிலார்**
**அன்பே சிவம் ஆவது ஆரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்து இருந்தாரே''** (270)

என்று கூறியுள்ளார்.

எல்லா நெறிகளிலும் சிறந்த நெறி ஆகிய குருநெறி ஞானநெறியே ஆகும் (1478) என்கிறார். சிவனடியார்களைச் சிவன் எனவே வணங்குக (திரு. 1857) சிவபெருமானை வழிபடுவதற்குக் காலவரை கிடையாது (திரு. 1858). ''நீறு இடு சுடியார் நிகழ்தேவர்கள்'' (1862) சிவனடியார்களைப் பேணும் நாட்டில் மழை பெய்யும் என்று இறைவனை அடையும் பல சாதனங்களைப் பற்றி பேசியுள்ளார்.

**குரு உபதேசம்**

ஞானதாகம் கொண்ட மாணவனுடன் இருந்து சிவனைக் காட்டும் உதவியே குரு உபதேசம் ஆகும். இறை, உயிர், தளை என்ற முப்பொருள் உண்மையையும், அவற்றின் இயல்பையும் அறியாதவர், தத்துவத்தை முழுமையாக அறிய முடியாது. உலகம் எல்லாம் சிவமயமாய் இருக்கிறது. தேவர்களும் அறிய முடியாத இன்ப உலகத்தை குருவே காட்ட முடியும்.

**குருவே சிவம் எனக்கூறினைறந்தி**
**குருவே சிவம் என்பது குறித்து ஓரார்**
**குருவே சிவனுமாய் கோனுமாய் நிற்கும்**
**குருவே உரை உணர்வு சற்றதோர் கோவே** - 1581

சிவபெருமானே மானிடச்சட்டை தாங்கி, எழுந்தருளிவந்து காட்சி தந்து, காட்டுவனகாட்டி, ஊட்டுவன ஊட்டி, உண்மையை உணர்த்துவதே சிவகுரு தரிசனம் ஆகும். 'நினைக்கின் நினைக்கும் நினைப்பவர் தம்மை' (திரு. 2666) சிவனை எப்போதும் நினைந்திருந்தால் அவன் எப்போதும் பாதுகாத்துக் கொண்டிருப்பான்.

### திருவைந்தெழுத்துச் சிறப்பு

வேதாகமங்கள் அனைத்தும் ஐம்பது எழுத்துக்களில் அடங்கும். அவ்ஐம்பது எழுத்தும் திருவைந்தெழுத்தில் அடங்கும். ''சிவாய நம'' என்னும் அஞ்செழுத்தை பொருள் உணர்ந்து ஓதினால் ஆன்மாவிலுள்ள ஆணவமல அழுக்கு நீங்கிவிடும். 'சிவசிவ என்றிடத் தீவினை மாறும்' (தி. 2715) ''சிவாய நம'' என்னும் குளிகை இட்டுப் பொன் ஆக்குவன் கூட்டையே (திரு. 2708) என்று திருவைந்தெழுத்தின் சிறப்பினைக் கூறுகின்றார்.

### முத்தி இயல்

குருவின் திருவடியைப் பெற்ற பேற்றினை நினைந்து, நன்றி உணர்வோடு வாழ்ந்துவரும் ஆன்மா, தக்க பக்குவம் அடைந்து, சிவனின் திருவடியை அடைவதே ''முத்தி'' எனப்படும். 'முத்தி' என்றால் 'பிறப்பை விடுதல்' 'வீடுபேறு' என்பதாகும்.

> **''சிவம் ஆகி மும்மல முக்குணம் செற்று**
> **தவம் ஆன மும்முத்தி தத்துவத்து ஆயிக்கியத்**
> **துவம்ஆ கிய நெறி சோகம் என்போர்க்குச்**
> **சிவமாம் அமலன் சிறந்தனன் தானே''** (2475)

என்று முக்தியை விரும்பி வாழ்பவரே சிறந்து விளங்குவர் என்கிறார் திருமூலர்.

### அணைந்தோர் தன்மை

இறைவன் திருவடி பெருமையை உணர்ந்து அதனை அடைந்தப் பெருமக்கள் ''சீவன் முத்தர்'' எனப்படுவர். இவர்கள் பற்றற்று எப்போதும் சிவ நினைவிலேயே இருந்து இறைபணி செய்பவர்கள். 'எல்லாம் சிவன் செயல்' என்னும் உணர்வில் மேம்பட்டு நிற்பவர்களாகிய இவர்களே சிவனடியார் ஆகும் தகுதியைப் பெற்றவர்கள்.

### அட்டாங்க யோகம்

ஞானம் எய்தி, வீடுபேறு அடைவதற்கு தேவையான எட்டு வகையான யோக சாதனங்களைக் கூறுவது ''அட்டாங்கயோகம்'' எனப்படும். இமயம், நியமம், ஆசனம், பிராணாயமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம்,

சமாதி என்னும் சுட்டாங்க யோகத்தின் பயன் அளவிடற்கரியது என்கிறார் திருமூலர்.

**திருவம்பலச் சக்கரம்.**

திருவம்பலச் சக்கரம் என்பது, அண்ட பெருவெளியில் ஆனந்தக் கூத்து ஆகும். சிவபெருமான் அருட்சத்தியோடு மந்திர வடிவாய் நின்று நிலவும் யந்திரம் ஆகும். இவ்யந்திரத்தைப் பற்றி திருமூலர் (திரு. 914, திரு. 915) பாடல்களில் கூறியுள்ளார்.

திருமந்திரத்தில் ஆயிரக்கணக்கான செய்திகள் உள்ளன. நூல் முழுவதும் சைவ சித்தாந்தக் கருத்துக்களே விரவி உள்ளன. திருமந்திரம் சைவ சித்தாந்தக் கருத்துக்களை மக்களோடு இணைக்கும் பொன்னாலான ஒரு பெறு போல இருந்து சிவனோடு எல்லோரையும் இணைக்கின்றது.

# 76. அகப்பொருள் நோக்கில் கருவூர்த் தேவர் பாடல்கள்

செல்வி மு.பா. ஜெயசித்ரா, மதுரை.

''மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது'' என்பதற்கேற்ப சைவ சமயத் திருமுறையுள் ஒன்பதாம் திருமுறை அமைந்துள்ளது. இத் திருமுறையுள் அமைந்த கருவூர்த்தேவர் பாடல்களை அகநோக்கில் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**ஒன்பதாம் திருமுறை**

சைவ சமயத்தவர் ஓதும் பஞ்சபுராணங்களில் இவ்வொன்பதாம் திருமுறையின் இருபிரிவுகளான திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் உள்ளமையே இத்திருமுறையின் சிறப்பிற்குச் சான்றாகும். இத் திருமுறையின் மையப்பொருள்,

- சிவபெருமான் முழுமுதற்கடவுள்
- அப்பெருமானின் திருவுருவச் சிறப்புகள்
- தேவர்களுக்காகவும் அடியவர்களுக்காகவும் அவர் செய்த அருஞ்செயல்கள்
- இலைமறைக் காயாகக் கூறும் தத்துவச் செய்திகள் ஆகியன ஆகும். இத்தகு சிறப்புடைய இத்திருமுறையை திருமாளிகைத் தேவர் முதலான ஒன்பதின்மர் பாடியுள்ளனர். அவர்களுள் ஒருவரான கருவூர்த்தேவர் பாடல்களில் அகப்பொருள் அமைந் துள்ள விதத்தை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**கருவூர்த் தேவர் - அறிமுகம்!**

கருவூர்த்தேவர் கொங்குநாட்டில் உள்ள கருவூரில் பிறந்தவர் ஆதலால் அப்பெயர் பெற்றார். அவரின் இயற்பெயர் இன்னதென அறிய இயலவில்லை. இனிய தமிழ்ப்பாடல் பாடும் ஆற்றல் மிக்கவர் இவர்.

**கருவூர்த் தேவர் பாடல்கள்**

ஒன்பதாம் திருமுறையில் மொத்தம் முந்நூற்றொரு பாடல்கள் உள்ளன. அவற்றுள் மூன்றில் ஒரு பகுதியாக நூற்றுமூன்று பாடல்களைப் (இருபத்தொன்பது பதிகங்களுள் பத்து பதிகங்களை) பாடியுள்ளார். இவர் பாடல்களில் கருத்துப்பொலிவு அதிகம்; ''கங்கை கொண்ட

சோழேச்சுரப் பதிகம் போல பக்திச்சிறப்பும் பொருள் விளக்கமும் வேறு எந்தப் பதிகங்களிலும் காணமுடியாது'' என்று மு. அருணாசலம் கூறுவது குறிப்பிடத்தக்கது. இவர் யோக நிலையில் நின்றவர் என்பது சிறப்புக்குரிய தாகும்.

## அகப்பொருள்

பழந்தமிழ் இலக்கியங்கள் அகப்பொருள், புறப்பொருள் என்ற இரண்டினைக் குறித்து இயம்பினாலும், அவை அகப்பொருளிற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளன என்பது பாடல்களின் எண்ணிக்கை கொண்டு அறியமுடிகிறது. அகப்பொருள் என்பது மனத்தளவில் உய்த்துணரக் கூடிய உணர்வு; உணர்ந்தவாறே கூற இயலாத தன்மை கொண்டதாகும். புறப்பொருள் என்பது வீரமும் கொடையும் ஆகும். அகப்பொருள் இலக்கணம்,

- தலைவன், தலைவியின் நிலை மற்றும் மெய்ம்மாற்றங்கள்
- அகமாந்தர்கள் பேசுவதற்குரிய இடங்கள் (சூழல்கள்) மற்றும் அவர்களின் கடமை

ஆகியன குறித்து விளக்குகின்றன.

## பக்தி நெறியில் அகப்பொருள்

தொல்காப்பியம்,

''ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே'' (தொல்.பொருள். 90)

என்று 'பாலது ஆணையால்' அதாவது, ஊழின் காரணமாகத் தலைவனும் தலைவியும் சந்திப்பதாகக் கூறுகிறது. ஆனால் பக்திநெறி இறையருள் காரணமாகத்தான் ஒருவர் இறையருளை உணரமுடியும் என்றுரைப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மானிடர்களில் ஒத்த உள்ளம் உடைய தலைவன் தலைவிக்கிடையே மலர்வது காதல். அதுவே ஒரு மானிடன் இறைவன்மீது கொள்ளும் காதல் பக்திநெறி ஆகும். அப்பக்தி நெறி கொண்ட அடியவர்கள், இறைவனைத் தலைவனாகவும் தம்மைப் பெருமானுடைய அருளுக்கு ஏங்கி நிற்கும் தலைவியாகவும் பாவித்து, காதல் பொருள் அமைய நாயக - நாயகி பாவத்தில் பா புனைவது மரபு. அதில் பரமாத்மா → தலைவன்; ஜீவாத்மா → தலைவி எனக் கொள்வது குறிப்பிடத்தக்கது. இறைவனிடம் உள்ளத்தைச் செலுத்துவதற்குக் காதல் அமைப்பு சிறந்தது. எனவே தான் ஒன்பதாம் திருமுறையில் மொத்தம் இருபத்தொன்பது பதிகங்களில் பத்து பதிகங்களும், அதனைப் பாடிய ஒன்பதின்மரில் அறுவரும் அகப்பொருள்

நெறியைக் கையாண்டுள்ளனர். இதன் மூலும் இந்நெறி பக்திநிலைக்குச் சிறப்புடையது என அறியமுடிகிறது.

அகப்பொருளில் களவுநிலை கற்புநிலையாக மாறும். அவ்வாறு மாறுவதுதான் சிறப்பு. ஆனால் பக்திநெறி அகப்பாடல்கள் களவுநிலையிலேயே உள்ளமை குறிப்பிடத்தக்கது. அப்பக்தி நெறியில் கற்பு நிலை என்பது இருவினை தீர்ந்த வீடுபேறாகிய முக்திநிலையைக் குறிக்கும். அப்பக்திப் பாமாலைகளைப் புனையும் பொழுது அவர்கள் முக்தி அடையாததால் கற்புநிலைப் பாடல்கள் இல்லை எனலாம். முக்தி அடைந்த நிலையில் பா பாட இயலாது என்பது கருத்தில் கொள்ளற்பாலது.

## கருவூர்த்தேவர் பாக்களில் அகப்பொருள்

கருவூர்த்தேவர் தம் பக்தி அகப்பாடல்களை நாயக நாயகி பாவத்தில் புனைந்துள்ளார். அவை களவு நிலையில் உள்ளன. மேலும் அவை கூற்று முறையில் அமைந்துள்ளன. பொதுவாக, ''அகப்பாடல்கள் அகமாந்தர் மொழிவதாக அமையும்; அக்கிளத்தல் முறை கூற்று எனப்படும்'' களவு வாழ்வில் தலைவன், தலைவி, தோழி, பாங்கன், செவிலி, பார்ப்பான் ஆகியோரின் கூற்றுகள் அமையும். அவ்வகையில் கருவூர்தேவரின் அகப்பொருள் பதிகங்களான,

- திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலப் பதிகம் தலைவி கூற்றாகவும்,
- திரைலோக்கிய சுந்தரப் பதிகம் தலைவி மற்றும் தோழி கூற்றுகளாகவும் அமைந்துள்ளதுடன் அவை நம் ஆய்வுப் பகுதியாகவும் உள்ளன.

''தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
கிழத்திக் கில்லை...'' (தொல்.பொருள். 116)

என்ற தொல்காப்பியர் கூற்றுப்படி தலைவி தனது வேட்கையைத் தலைவன் முன்பு குறிப்பாக உணர்த்தலாமே ஒழிய வெளிப்படையாகக் கூறுதல் மரபன்று. எனினும், பக்திநெறி தலைவி தலைவனிடம் வெளிப்படையாகக் கூறுவது நோக்கத்தக்கது. அகப்பொருள் இலக்கணம் கருவூரார் பாடல்களில் அமைந்துள்ள விதத்தை எடுத்துரைப்பதாக இக்கட்டுரையின் போக்கு உள்ளது.

## அருள் வேட்கை

தலைவன், தலைவி இருவரும் ஒருவரை ஒருவர், "பெறல் வேண்டும் என்னும் உள்ள நிகழ்ச்சி'' என்று வேட்கைக்கு இளம்பூரணர் உரை வகுத்துள்ளார். அதன்படி "உலகிலுள்ள எல்லா பொருள்களிலும் இறைவன் கலந்துள்ளான்.'' எனினும், தலைவியிடம் அவன் வரவில்லை. எனவே, அவள் தன்னிடம் குறையுள்ளதாக உள்ளம் வருந்துகிறாள். இருப்பினும்

அவன் நாமத்தையே இடைவிடாது ஒலிப்பதன் மூலம் 'அவனைப் பெற வேண்டும்' என்ற அவளின் வேட்கை தெரிகிறது. இது

"பயில்வதும்நின் ஒரு நாமம்" (9:106)

என்ற கூற்றுவழி புலனாகிறது. மேலும்,

"செய்யாயோ? அருள்வேட்கை" (9:127)

என்ற தலைவிக் கூற்றுவழி அவளது அருள்வேட்கை விழைவு பெறப் படுகிறது.

**ஒரு தலை உள்ளுதல்**

'இடைவிடாது நினைத்தல்' என்று ஒரு தலை உள்ளுதலுக்கு இளம்பூரணர் உரை வகுத்துள்ளார். இந்நிலையில் உள்ள தலைவியைக் கருவூரார் பாடல்களிலும் உள்ளதை,

"யாதுநீ நினைவ(து)? எவரையாம் உடைய(து)?
என் மனம்புகுந் தானே" (9"109)

என்ற அடிகள் வழி உணர முடிகின்றது.

**ஆக்கம் செப்புதல்**

ஆக்கஞ் செப்பலாவது உறங்காமையும் உறுவ ஓதலும் முதலாயின் கூறுதல் ஆகும்.

"துஞ்சா கண் இவளுடைய" (9:128)

என்ற சொற்றொடர் மூலம் தலைவியின் ஆக்கஞ் செப்பலாகிய உறங்காமை நிலை புலப்படுகின்றது.

**அகக் கலப்பு**

அகவாழ்க்கைக்குத் தலைவன் தலைவியின் உள்ளம் ஒத்திருப்பதுடன் அவை கலந்திருப்பது இன்றியமையாததாகும். அவ்வகையில் தலைவியின் உள்ளம் திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலத்து இறைவனின் உள்ளத்துடன் கலந்துள்ளது. இதனை,

"........மணியம் பலத்துள்நின் றாடும்
மைந்தன் என் மனங்கலந் தானே"

என்ற அடிவழி அறியமுடிகின்றது. சங்க இலக்கியங்கள் போன்ற அக இலக்கியங்கள் தலைவனின் மனவுணர்வை வெளிப்படுத்துகின்றன. ஆனால், பக்திநெறியில் தலைவன் இறைவனாவன். ஆகவே, அத்தலைவனின் மனவுணர்வை அருள்நெறியாளர்கள் சுட்டவில்லை. அதற்காக அப்பாடல் களைக் கைக்கிளைத் திணை என்பதும் பொருந்தாது. ஏனெனில் 'இறைவனை முழுமனத்தோடு தேடும் ஆன்மாவை இறைவன் ஏற்பது உறுதி; இறையருள்

